த்தருக்குமுன்பாக நிற்கவந்த ஒருநாளிலே, சாத்தானும் அவர்கள் நடுவிலே வந்தது.

எ கர்த்தர் சாத்தானுடனே, நீ எங்கேயிருந்துவந்தாயென்றார்; சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாக, தேசத்தைச் சுற்றி, அதிலே நடந்து திரிந்துவந்தேனென்றது.

அ கர்த்தர் சாத்தானுடனே, நம்முடைய ஊழியக்காரனாகிய யோபின்மேலே கவனம் வைத்தாயோ? ஏனென்றால் உத்தமமனுஷனும், செம்மைமார்க்கத்தானும், பராபரனுக்குப் பயந்து, பொல்லாப்பை விலக்குகிறவனுமாகிய அவனைப்போலத் தேசத்தில் ஒருவனும் இல்லை என்றார்.

கூ அப்போது சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: யோபு விருதாவாய்ப் பராபரனுக்குப் பயந்துநடக்கிறானோ?

ய தேவரீர் அவனையும் அவன் வீட்டையும் அவனுக்குண்டான எல்லாவற்றையும் சுற்றிலும் வேலி அடைக்கவில்லையோ? அவன் கைகளின் கிரியையை ஆசீர்வதித்தீர்; அவனுடைய மிருகஜீவன்கள் தேசத்திலே ஏராளமாயின.

யக ஆனால் தேவரீர் உம்முடைய கையை நீட்டி அவனுக்குண்டானவை எல்லாம் தொடுமேன்? அப்போது அவன் உம்முடைய முகத்துக்கு எதிரே உம்மை வெறுக்கானோவென்று பாருமென்றது.

யஉ அப்போது கர்த்தர் சாத்தானுடனே, இதோ அவனுக்குண்டானவை எல்லாம் உன் கையிலிருப்பதாக; அவன்மேல்மாத்திரம் உன் கையை நீட்டாதேயென்றார்; அப்போது சாத்தான் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப் புறப்பட்டுப்போயிற்று.

யங ¶ பிறகு அவன் குமாரரும், அவன் குமாரத்திகளும், தங்கள் மூத்தசகோதரன் வீட்டிலே புசித்து, திராட்சப்பழஇரசம் குடிக்கிற ஒரு நாளிலே சம்பவித்ததேதெனில்,

யச ஒரு ஆள் யோபண்டைக்குவந்து, எருதுகள் உழுது, கழுதைகள் அவைகளின் பக்கத்திலே மேய்ந்துகொண்டு இருக்கையில்,

யரு சபேயர் அவைகள்மேல் விழுந்து, அவைகளைப் பிடித்துக்கொண்டு, வேலையாள்களைப் பட்டயக் கருக்கினால் வெட்டிப்போட்டார்கள்; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

யசு இவன் இன்னம் பேசுகையில், வேறொருவன் வந்து, பராபரனுடைய அக்கினி வானத்திலிருந்து விழுந்து, ஆடுகளையும் வேலையாள்களையும் சுட்டழித்துப்போட்டது; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத்தப்பிவந்தேனென்றான்.

யஎ இவன் இன்னம் பேசுகையில் வேறொருவன் வந்து, கல்தேயர் மூன்று பவிஞ்சாய் வந்து, ஒட்டகங்களின்மேல் விழுந்து, அவைகளை ஓட்டிக்கொண்டு வேலையாள்களைப் பட்டையக்கருக்கினால் வெட்டிப்போட்டார்கள்; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

யஅ இவன் இன்னம் பேசுகையில் வேறொருவன் வந்து உம்முடைய குமாரரும், உம்முடைய குமாரத்திகளும், தங்கள் மூத்தசகோதரன் வீட்டிலே புசித்துத் திராட்சப்பழஇரசம் குடிக்கையில்,

யகூ இதோ பெருங்காற்று வனாந்தரவழியாய் வந்து, அந்த வீட்டினுடைய நாலு கோடியிலும் அடித்தது; அப்போது அது பிள்ளைகளின்மேல் விழுந்ததினால் அவர்கள் மடிந்துபோனார்கள்; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

உய ¶ அப்போது யோபு எழுந்திருந்து, தன் சால்வையைக் கிழித்துக்கொண்டு, தன் தலைமயிரை வாங்கித் தரையிலே விழுந்து பணிந்துகொண்டு,

உக நிருவாணமாய் என் தாயின் கெர்ப்பத்திலிருந்து புறப்பட்டேன்; நிருவாணமுமாய் அவ்விடத்துக்குத் திரும்புவேன்; கர்த்தர் கொடுத்தார்; கர்த்தர் எடுத்தார்;

கர்த்தருடைய நாமம் ஸ்தோத்திரிக்கப்படக்கடவதென்றான்.

௨௨ இவைகள் எல்லாவற்றிலும் யோபு பாவஞ்செய்யாமலும், பராபரனுக்கு ஏராத தொன்றும் நினைக்காமலுமிருந்தான்.

## ௨. அதிகாரம்.

பராபரனுடைய குமாரர்கள் கர்த்தருக்கு முன்பாக நிற்கவந்த பின்னொரு நாளிலேயென்றால், அவர்கள் நடுவிலே சாத்தானும் கர்த்தருக்குமுன்பாக நிற்கவந்தது.

௨ கர்த்தர் சாத்தானுடனே, நீ எங்கேயிருந்து வருகிறாயென்றார்; சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாகத் தேசத்தைச் சுற்றி, அதில் நடந்து திரிந்தேனென்றது.

௩ அப்போது கர்த்தர் சாத்தானுடனே, நீ நம்முடைய ஊழியக்காரனாகிய யோபின் மேலே கவனம்வைத்தாயோ? ஏனெனில் உத்தமனும், செம்மை மார்க்கத்தானும், பராபரனுக்குப் பயந்து பொல்லாப்பை விலக்குகிறவனுமான மனுஷனாகிய அவனைப் போல தேசத்திலே ஒருவனுமில்லை; முகாந்தரமில்லாமல் அவனை நிர்மூலம்பண்ண நீ நம்மை எடுத்துவிட்டிருந்தாலும், அவன் இன்னம் தன் உத்தமத்திலே உறுதியாய் நிற்கிறானென்றார்.

௪ ஆனால் சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாக, தோலுக்குப்பதிலாகத் தோலையும், தனக்கு உண்டான எல்லாவற்றையும், தன் சீவனுக்குப்பதிலாக மனுஷன் கொடுத்துவிடுவான்.

௫ ஆனால் தேவரீர் உம்முடைய கையை நீட்டி, அவன் எலும்பையும் அவன் மாம்சத்தையும் தொடும்; அப்போது அவன் உமது முகத்துக்கு எதிரே உம்மை வெறுக்கானோவென்று பாருமென்றது.

௬ அப்போது கர்த்தர் சாத்தானுடனே, இதோ அவன் உன் கையிலிருப்பானாக; ஆகிலும் அவன் பிராணனைக் காவென்றார்.

௭ ¶ அப்போது சாத்தான் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப் புறப்பட்டு, யோபின் உள்ளங்கால்துவக்கி அவன் உச்சந்தலைமட்டும் எழும்புகிற பொல்லாத பருக்களால் அவனை வாதித்தது.

௮ அப்போது அவன் ஒரு ஓட்டை எடுத்துக்கொண்டு, தன்னைச் சுறண்டிச் சாம்பலில் உளுக்காந்தான்.

௯ ¶ அவன் பெண்சாதி அவனைப்பார்த்து, இன்னம் உம்முடைய உத்தமத்தில் உறுதியாய் நிற்கிறீரோ? பராபரனை அரோசித்துச் செத்துப்போமென்றான்.

௰ அவனோவென்றால் அவளுடனே, நீ பயித்தியக்காரிகளில் ஒருத்தி பேசுகிறது போலப் பேசுகிறாய்; பராபரன் கையிலே நன்மையை வாங்கின நாம் தீமையையும் வாங்கவேண்டாமோவென்றான்; இவைகளிலெல்லாம் யோபு தன் உதடுகளினாலே பாவம் செய்யாதிருந்தான்.

௰௧ ¶ யோபுடைய மூன்று சிநேகிதராகிய தேமானியனான எலிப்பாசும், சூகியனான பில்தாதும், நாமாத்தியனான சோப்பாரும், யோபின்மேல் வந்த இந்தப் பொல்லாப்பெல்லாம் கேட்டபோது, அவரவர் தங்கள் ஸ்தலங்களில் இருந்துவந்து, அவனுக்காகப் பரதபிக்கவும், அவனுக்கு ஆறுதல் சொல்லவும், ஒருவர்க்கொருவர் யோசனை பண்ணிக்கொண்டார்கள்.

௰௨ அவர்கள் தூரத்திலிருக்கையில் தங்கள் கண்களை ஏறெடுத்தபோது, அவனை அறியமாட்டாதேபோய்ச் சத்தமிட்டழுது, அவரவர் தங்கள் சால்வையைக் கிழித்து, வானத்தைப் பார்த்து, தங்கள் தலைகளின் மேல் புழுதியைத் தூற்றிக்கொண்டு,

௰௩ வந்து, ஒருவரும் அவனோடு ஒருவார்த்தையையும் பேசாமல் இரவுபகல் ஏழுநாள் அவனோடேகூடத் தரையிலே உளுக்காந்திருந்தார்கள்; ஏனெனில் அந்த நோய் மகா கடினமென்று கண்டார்கள்.

## ௩. அதிகாரம்.

அதற்குப்பிற்பாடு யோபு தன்வாயைத்திறந்து,தான் பிறந்தநாளைச் சபித்துக்கொண்டு,

௨ வசனித்துச் சொன்னதாவது:

௩ ¶ நான் பிறந்தநாளும், ஒரு ஆண்பிள்ளை உற்பத்தியாயிற்றென்று சொல்லப்பட்ட இராத்திரியும் அழிவதாக.

௪ அந்த நாள் அந்தகாரமாவதாக; பராபரன் உயரஇருந்து அதை விசாரியாமலும், பிரகாசம் அதின்மேலே துலங்காமலும்,

௫ இருளும் மரணநிழலும் அதை அழுக்குப்படுத்தி, மப்பும் அதை மூடி, மந்தாரநாளின் பயங்கரங்கள் அதை அருக்களிப்பாக்குவதாக.

௬ ¶ அந்த இராத்திரியை அந்தகாரம்பிடிப்பதாக; அது வருஷத்தின் நாள்களில் சந்தோஷப்படுகிற நாளாயிராமலும், மாதங்களின் கணக்கிலே வராமலும் போவதாக.

௭ இதோ அந்த இராத்திரி தனிமையாகவும், அதிலே கெம்பீரசத்தமில்லாமலும் இருந்ததானால் தாவிளை.

௮ நாளைச் சபிக்கிறவர்களும், முதலைகளையும் எழும்பப்பண்ணத்தக்கவர்களும், அதைச் சபித்திருந்தால் தாவிளை.

௯ அஸ்தமித்தவுடனே அதில் உதித்த நட்சத்திரங்கள் இருண்டு, அது வரப்பார்த்த வெளிச்சம் உண்டாகாமலும், விடியுங்காலத்தின் வெளுப்பை அது காணாமலுமிருந்ததானால் தாவிளை.

௰ ஏனென்றால் நான் கிடந்த கெர்ப்பத்தின் வாசல்களை அது அடைக்காமலும், என் கண்கள் காண்கிற வருத்தத்தை மறைத்துவிடாமலும் இருந்ததே.

௰௧ நான் கெர்ப்பத்தில்தானே சாகாமலும், கெர்ப்பத்திலிருந்து புறப்படுகிறபோதே சிவித்துப்போகாமலும் போனதென்ன?

௰௨ முழங்கால்கள் என்னை ஏந்திக்கொண்டதென்ன? நான் முலையுண்ணக் கொங்கைகள் உண்டாயிருந்ததென்ன?

௰௩ ஏனென்றால் இப்போது கிடந்து அமர்ந்திருப்பேனே.

௰௪ பாழ்நிலங்களின் தங்களுக்கு மாளிகையைக் கட்டின பூமியிலுள்ள இராசாக்களோடும் ஆலோசனைக்காரரோடும்,

௰௫ அல்லவென்று பொன் ஆஸ்திக்காரரும் தங்கள் வீடுகளை வெள்ளியினால் நிரப்பினவர்களுமான பிரபுக்களோடும்கூட நான் இப்போது இளைப்பாறிக்கொண்டு தூங்குவேனே.

௰௬ அல்லவென்று கெர்ப்பம் விழுந்துபோன அடக்கமான பிண்டமும், வெளிச்சத்தைக் காணாத குழந்தைகளும், இல்லாமல் போகிறதுபோல ஆவேனே.

௰௭ அங்கே ஆகாதவர்கள் கலங்கடிக்குதலை விட்டு ஓய்ந்திருக்கிறார்கள்; அங்கே பெலனற்று விடாய்த்துப்போனவர்கள் இளைப்பாறுகிறார்கள்.

௰௮ கட்டுண்டிருந்தவர்கள் அங்கே ஏகமாக அமைதலாயிருந்து, ஒடுக்குகிறவனுடைய சத்தத்தைக் கேளாதிருக்கிறார்கள்.

௰௯ சிறியவனும் பெரியவனும் அங்கே ஏகம்; அங்கே அடிமை தன் எசமானை விட்டுத் தன்னீங்கலாயிருக்கிறான்.

௨௰ ¶ மரணத்துக்கு ஆசையாய்க் காத்திருந்து, புதையல்களைத் தோண்டித் தேடுகிறதைப்பார்க்கிலும் அதைத் தேடியும் அதை அடையாமல்போகிறவர்களுக்கும்,

௨௰௧ பிரேதக்குழியைக் கண்டுபிடித்ததினால் மிகவும் களிகூர்ந்து,

௨௰௨ அதற்காகச் சந்தோஷப்படுகிற நிர்ப்பந்தக்காரருக்கு வெளிச்சமும், மனச்சஞ்சலக்காரருக்குச் சீவனும் கொடுக்கப்படுகிறதென்ன?

௨௰௩ அது தன் வழியை அறியாதவனுக்கும், பராபரன் அதை மறைந்திருக்கிறவனுக்கும் கொடுக்கப்படுகிறதென்ன?

௨௰௪ ஏனென்றால் என்னுடைய சாப்பாட்டுக்கு முன்னே எனக்குப் பெருமூச்சு வரும்; என் அலறுதல்கள் தண்ணீரைப்போல ஊற்றுண்கின்றன.

௨௰௫ ஏனெனில் வருமென்று நான் அருக்களித்தது எனக்கு நேரிட்டது; நான் பயந்தது எனக்கு வந்தது.

௨௰௬ சுகிக்காமலும், அமராமலும், இளைப்

பாரமனும் இருக்கிற எனக்குத் தத்தளிப்பு வந்தது.

## ௪. அதிகாரம்.

அப்போது தேமானியனாகிய எலிப்பாஸ் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ நாங்கள் உம்முடனே பேச வகைபார்த்தால், ஆயாசப்படுவீரோ? ஆனால் வசனிக்காதபடிக்கு, அடக்கிக்கொள்ளத்தக்கவன் யார்?

௩ இதோ நீர் அநேகருக்குப் புத்திசொல்லி இளைத்த கைகளைத் திடப்படுத்தினீர்.

௪ விழுகிறவனை உம்முடைய வார்த்தைகள் நிற்கப்பண்ணி, தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்தினீர்.

௫ இப்போதோவென்றால் இது உம்முடையமேல் வந்தபடியினாலே ஆயாசப்படுகிறீர்; இது உம்மைத் தொட்டதினால் நீர் கலங்குகிறீர்.

௬ உம்முடைய தேவபத்தி உம்முடைய உறுதியும், உம்முடைய வழிகளின் உத்தமம் உம்முடைய நம்பிக்கையுமாய் இருக்கவேண்டியதல்லவோ?

௭ குற்றமில்லாமல் அழிந்தவன் யார்? செம்மைமார்க்கத்தார் அதம்பண்ணப்பட்டதெப்போதென்கிறதை நினைத்துக்கொள்ளுமே.

௮ நான் கண்டிருக்கிறபடி அநியாயத்தை உழுது, வருத்தத்தை விதைத்தவர்கள் அதைத்தான் அறுக்கிறார்கள்.

௯ பராபரனுடைய சுவாசத்தினாலே அவர்கள் அழிந்து, அவருடைய நாசியின் காற்றினாலே நிர்மூலமாகிறார்கள்.

௰ சிங்கத்தின் கெர்ச்சிப்பும், துஷ்டசிங்கத்தின் சத்தமும், இளம் சிங்கங்களின் பல்லுகளும் முறிந்துபோம்.

௰௧ கிழச்சிங்கம் இரையில்லாததினால் அழிந்து, சிங்கக்குட்டிகள் சிதறுண்டுபோகின்றன.

௰௨ ¶ இப்போதும் ஒரு வார்த்தை இரகசியமாய் என்னண்டைக்கு வந்தது; அதினுடைய சிறிய ஓசை என் செவியில் விழுந்தது.

௰௩ மனுஷர்மேல் அயர்ந்த நித்திரை இறங்குகிறபோது, இராத்தரிசனைகளான பலவித தோற்றல்கள் உண்டாயிருக்கையில்,

௰௪ திகிலும் நடுக்கமும் என்னைப் பிடித்து, என் எலும்புகளையெல்லாம் திடுக்கிடப்பண்ணின.

௰௫ அப்போது ஒரு ஆவி என் முகத்துக்குமுன்பாகக் கடந்தது; என் உடலின் மயிர் சிலிர்த்துக்கொண்டது.

௰௬ அது நின்று ஒரு உருப்போலே என் கண்களுக்கு எதிரேயிருந்தது; ஆனால் நான் அதின் உருவத்தை அறிந்ததில்லை; அமைதலுண்டானபின் நான் கேட்ட சத்தமாவது:

௰௭ மனுஷன் பராபரனைப்பார்க்கிலும் நீதிமானாயிருப்பானோ? ஒரு புருஷன் தன்னை உண்டாக்கினவனைப்பார்க்கிலும் சுத்தமாயிருப்பானோவென்றது.

௰௮ இதோ அவர் தம்முடைய வேலையாள்களை நம்பாமல், தம்முடைய தூதரின்மேலே புத்தியில்லாமையைச் சுமத்துவாரே.

௰௯ களிமண்வீடுகளில் வாசம்பண்ணி, மண்ணில் அஸ்திபாரப்பட்டுப் பொட்டால் அரிக்கப்படுகிறவர்கள்மேல் எத்தனை அதிகம்?

௨௰ அவர்கள் காலமே துவக்கிச் சாயங்காலமாகும்மட்டும் நொறுங்குண்டு, ஒருவரும் கவனியாமல் நித்திய அழிவடைகிறார்கள்.

௨௧ அவர்களிலிருக்கிற அவர்களுடைய மகிமை போய்விடுமல்லவோ? ஞானமில்லாமல் சாகிறார்கள்.

## ௫. அதிகாரம்.

இப்போதும் உமக்காக மறுவுத்தரவு சொல்வாருண்டோவென்று கூப்பிடுமே? பரிசுத்தவான்களில் எவனை நோக்கிப்பார்ப்பீர்?

௨ ஏனென்றால் நிர்மூடனையே மனமடிவு கொல்லும்; புத்தியில்லாதவனை எரிச்சல் மடிவிக்கும்.

௩ நிர்மூடன் ஒருவன் வேர்ப்பிடிக்கிறதை நான் கண்டு, உடனே அவன் வாசஸ்தலத்தைச் சபித்தேன்.

௪ அவன் பிள்ளைகள் இரட்சிப்புக்குத் தூரமாகி, தப்புவிப்பாரில்லாமல், வாசலில் நொறுக்கப்பட்டார்கள்.

௫ அவனுடைய அறுப்பைப் பசித்தவன் தின்று, முள்செடிகளுக்குள்ளும் இருந்து அதைப் பறித்தான்; பறிகாரன் அவன் ஆஸ்தியை விழுங்கினான்.

௬ ஏனெனில் அக்கிரமம் மண்ணிலிருந்து புறப்படாமலும், வருத்தம் பூமியிலிருந்து முளைக்காமலும்,

௭ அக்கினியின் பொறிகள் உயரப் பறக்கிறதுபோல, மனுஷன் கஸ்தி அநுபவிக்கிறதற்குப் பிறந்தான்.

௮ ¶ ஆனால் நான் பராபரனுடைய நியாயத்தை ஆராய்ந்து, என் வசனத்தைப் பராபரனுக்கு நேராகத் திருப்பினால் தாவிளை.

௯ அவர் ஆராய்ந்து முடியாத பெரிய காரியங்களையும், எண்ணிமுடியாத அதிசயங்களையும் செய்கிறார்.

௰ தாழ்ந்தவர்களை உயர்த்திவைக்கவும், இந்த அடைவாய்த் துக்கிக்கிறவர்கள் இரட்சிக்கப்பட்டு உயரவும்,

௰௧ அவர் பூமியின்மேல் மழையைக் கட்டளையிட்டு, வெளிகளின்மேலே தண்ணீர்களை வரவிடுகிறார்.

௰௨ தந்திரக்காரரின் கைகள் காரியத்தை முடியநடத்தக்கூடாதபடிக்கு, அவர் இவர்கள் நினைவுகளை அவத்தமாக்குகிறார்.

௰௩ அவர் ஞானிகளை அவர்கள் தந்திரத்திலே பிடிக்கிறார்; அதினால் திரியாவரக்காரரின் ஆலோசனை கவிழ்ந்துபோகிறது.

௰௪ பகல்காலத்தில் அந்தகாரத்துக்கு நேராகி, மத்தியானவேளையிலே இராவில் இருக்கிறதுபோலே தடவித்திரிகிறார்கள்.

௰௫ ஆனால் எளியவனை அவர்கள் வாயிலிருக்கிற பட்டயத்துக்கும், பெலவானின் கைக்கும், விலக்கி இரட்சிக்கிறார்.

௰௬ அப்படியே தரித்திரனுக்கு நம்பிக்கையுண்டு; ஆனால் அக்கிரமமானது தன் வாயை மூடும்.

௰௭ ¶ இதோ பராபரன் தண்டிக்கிற மனுஷன் பாக்கியவான்; ஆகையால் சர்வத்துக்கும் வல்லவருடைய கண்டனையை வெறுக்காதிரும்.

௰௮ ஏனெனில் அவர் நோவுண்டாக்கி, திரும்பக் காயம்கட்டுகிறார்; அவர் காயப்படுத்துகிறார்; அவருடைய கை திரும்ப ஆற்றுகிறது.

௰௯ ஆறு இக்கட்டுகளுக்கு உம்மை நீங்கலாக்குவார்; ஏழாவதிலும் பொல்லாப்பு உம்மைத் தொடாதிருக்கும்.

௨௰ பஞ்சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்கும் யுத்தத்திலே பட்டயத்தின் வெட்டுகளுக்கும் விலக்கி மீட்பார்.

௨௧ நாவின் சவுக்குக்கும் மறைக்கப்படுவீர்; பாழ்க்கடிப்பு வரும்போது, பயப்படாமலுமிருப்பீர்.

௨௨ பாழ்க்கடிப்பையும் பஞ்சத்தையும் நகைப்பீர்; பூமியின் மிருகங்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்.

௨௩ ஏனெனில் வெளியின் கல்லுகளோடும் உமக்கு உடம்படிக்கையிருக்கும்; வெளியின் மிருகசீவன்களும் உம்மோடே சமாதானமாயிருக்கும்.

௨௪ உம்முடைய கூடாரம் சமாதானத்தோடிருக்கும் என்பதை நீர் கண்டறிந்து, உம்முடைய வாசஸ்தலத்தைப் பழுது வராதபடிக்குப் பராமரிப்பீர்.

௨௫ உம்முடைய வித்தார் பெருகி, உம்முடைய சந்ததியார் பூமியின் பூண்டுகளைப் போல இருப்பார்களென்கிறதை அறிந்துகொள்வீர்.

௨௬ தானியம் ஏற்றகாலத்திலே அம்பாரமாய்க் கூட்டப்படுவதுபோல, முதிர்வயதிலே கல்லறையில் வந்துசேருவீர்.

௨௭ இதோ நாங்கள் ஆராய்ந்தறிந்தது இதுதான், இப்படியிருக்கிறது; இதை நீர் கேட்டு உமக்கு நன்மையாக அறிந்துகொள்ளுமென்றான்.

## ௬. அதிகாரம்.

யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ என்னுடைய சஞ்சலம் நிறுக்கவே நிறுக்கப்பட்டு, என்னுடைய நிர்ப்பந்தம் எல்லாம் தராசிலே வைக்கப்பட்டால் தாவிலை.

௩ ஏனெனில் அது இப்போது கடற்கரை மணலைப்பார்க்கிலும் பாரமாயிருக்கும்; ஆகையால் என்னுடைய வார்த்தைகள் உள்ளடங்கிப்போம்.

௪ ஏனென்றால் சர்வத்துக்கும் வல்லவரின் அம்புகள் எனக்குள் இறங்கி இருக்கின்றன; அவைகளின் எரிவை என்னுடைய ஆவி குடிக்கிறது; பராபரனுடைய பயங்கரங்கள் எனக்குமுன்பாக அணியணியாய் நிற்கின்றன.

௫ புல்லிருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கதறுமோ? தன்னுடைய தீனியிருக்கிற இடத்தில் எருது கூப்பிடுமோ?

௬ ருசியில்லாததை உப்பில்லாமல் சாப்பிடக்கூடுமோ? முட்டையின் வெள்ளைக்கருவில் ருசியுண்டோ?

௭ உங்கள் வார்த்தைகளை என் ஆத்துமா தொடமாட்டேனென்கிறது; அவைகள் குமட்டலெடுக்கிற என்னுடைய போசனத்துக்கு ஒத்தவைகள்.

௮ ¶ என்னுடைய மன்றாட்டு எனக்கு வந்து நான் வரப்பார்த்திருக்கிறதைப் பராபரன் எனக்குக் கொடுத்து,

௯ பராபரன் என்னை நொறுக்கச் சித்தமாயிருந்து, தம்முடைய கையை என்னைவிட்டெடுத்து என்னைத் துண்டித்தால் தாவிலை.

௰ அது இன்னம் எனக்கு ஆறுதலாயிருக்குமே, அப்பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்திருப்பேன்; ஏனெனில் பரிசுத்தமுள்ளவருடைய வார்த்தைகளை நான் மறைத்ததில்லை.

௰௧ நான் காத்துக்கொண்டிருக்க, என்னுடைய பெலன் எம்மாத்திரம்? என் சீவனை நீடித்திருக்கப்பண்ண என் முடிவேது.

௰௨ என்னுடைய பெலன் கல்லுகளின் பெலனோ? என் மாம்சம் வெண்கலமோ?

௰௩ எனக்கு உதவியான உத்தரவு எனக்குள் இல்லையோ? மெய்ஞ்ஞானம் என்னை விட்டு வாங்கிப்போயிற்றோ?

௰௪ ¶ உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய சிநேகிதனால் தயை காண்பிக்கப்படவேண்டும்; ஆனால் இவன் சர்வத்துக்கும் வல்லவருக்குப் பயப்படாதே போகிறான்.

௰௫ என்னுடைய சகோதரர் ஆற்றைப்போல மோசம்பண்ணுகிறார்கள்; ஆறுகளின் வெள்ளத்தைப்போலக் கடந்துபோகிறார்கள்.

௰௬ அவைகள் குளிர்காலப் பனியினாலும், உறைந்த மழை அவைகளில் உருகினதினாலும், அலைவிரிதலாய் வந்து கறுத்து,

௰௭ உஷ்ணமாகிற காலத்திலே வற்றி, அனல் பட்டபோது தங்கள் ஸ்தலத்தில் உருவழிந்துபோகின்றன.

௰௮ அவைகளுடைய வழிகளின் போக்குகள் இங்குமங்கும் பிரியும்; அவைகள் விருதாவிலே ஏற்றமானபின் ஒன்றும் இல்லாமல்போம்.

௰௯ தேமாவின் பயணக்காரர் பார்த்துத் தேடி, சேபாவின் பயணக்கூட்டங்கள் அவைகள்மேல் நம்பிக்கைவைத்து,

௨௰ தாங்கள் இப்படி நம்பினதினாலே வெட்கப்படுகிறார்கள்; அவ்விடம்மட்டும் வந்து கலங்கிப்போகிறார்கள்.

௨௰௧ அதென்னவென்றால் இப்போதும் நீங்கள் ஒன்றுக்கும் உதவாமல்போனீர்கள்; என் கலங்குதலைக் கண்டு ஐயப்படுகிறீர்கள்.

௨௰௨ எனக்கு ஏதாகிலும் கொண்டுவாருங்களென்றும், உங்கள் ஆஸ்தியில் எனக்குயாதொரு அதியாவைக் கொடுங்களென்றும்,

௨௰௩ அல்லது சத்துருவின் கைக்கு என்னைத் தப்புவியுங்கள்; வல்லடிக்காரரின் கைக்கு என்னை நீங்கலாக்கி மீட்டுக்கொள்ளுங்களென்றும் நான் சொன்னேனோ?

௨௰௪ என்னை உபதேசியுங்கள்; நான் மவுன

மாயிருப்பேன்; நான் எதிலே பிசகிப்போனேன் என்பதை எனக்கு அறியப்படுத்துங்கள்.

௨௫ செம்மையான வார்த்தைகளில் என்ன கடினமிருக்கிறது? உங்களில் யாராகிலும் கடிந்துகொள்ளத்தக்க காரியமென்ன?

௨௬ கடிந்துகொள்ள நீங்கள் வார்த்தைகளை யோசித்துத் திடனற்றவனுடைய வார்த்தைகளைக் காற்றிலே விட்டுவிடுகிறீர்களோ?

௨௭ இப்படிச்செய்து திக்கற்றவன்மேலே நீங்கள் விழுந்து உங்கள் சிநேகிதனுக்குப் படுகுழியை வெட்டுகிறீர்கள்.

௨௮ இப்போதும் உங்களுக்குச் சித்தமுண்டானால் என்னை நோக்குங்கள்; அப்போது நான் பொய்சொல்லுகிறேனோவென்று உங்கள் முகத்துக்குமுன்பாகத் தெரியவரும்.

௨௯ நீங்கள் இப்படித்திரும்பினாலும் அக்கிரமம் காணாதிருக்கும்; அப்படித் திரும்பினாலும் என்னுடைய நீதி அதிலே விளங்கும்.

௩௰ என்னுடைய நாவிலே அக்கிரமம் உண்டோ? என்னுடைய வாய் என் நிர்ப்பந்தங்களை அறிவிக்காதிருக்குமோ?

## ௭. அதிகாரம்.

மனுஷனுக்குப் பூமியின்மேல் போராட்டம் உண்டல்லவோ? அவன் நாள்கள் ஒரு கூலிக்காரன் நாள்களைப்போலிருக்கிறதல்லவோ?

௨ ஒரு வேலையாள் நிழலை வாஞ்சித்து, ஒரு கூலிக்காரன் தன் கூலியை வரப்பார்த்திருக்கிறதுபோல,

௩ மாயையான மாதங்கள் என்னுடைய சுதந்தரமாகி, பிரயாசமான இராத்திரிகள் எனக்குக் குறிக்கப்பட்டன.

௪ நான் படுத்துக்கொள்ளுகிறபோது நான் எழுந்திருப்பதெப்போது, இராத்திரிகாலம் சரியாவது எப்போதென்று சொல்லி, கிழக்குவெளுக்கிற நேரம்மட்டும் அரண்டு புரளுகிறதினால் எனக்குப் போதுமென்று போகிறது.

௫ என்னுடைய மாம்சம் பூச்சிகளினாலும் அடைபற்றின புழுதியினாலும் மூடப்பட்டிருக்கிறது; என்னுடைய தோல் வெடித்து அருவருப்பாயிற்று.

௬ என்னுடைய நாள்கள் நெய்கிறவன் எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடி, நம்பிக்கையில்லாமல் முடிந்துபோகும்.

௭ என்னுடைய பிராணன் காற்றைப்போலிருக்கிறதென்றும் என் கண்கள் திரும்ப நன்மையைக் காணப்போகிறதில்லையென்றும் நினைத்தருளும்.

௮ இப்போது என்னைக் காண்கிறவர்களின் கண்கள் இனி என்னைப் பார்ப்பதில்லை; உம்முடைய கண்கள் என்மேலிருக்கின்றன; ஆனால் நான் இல்லாதேபோகிறேன்.

௯ ஒரு மேகம் பறிந்துபோகிறதுபோல, குழியில் இறங்குகிறவன் இனி எழுந்திருப்பான்.

௰ இனி தன் வீட்டுக்குத் திரும்பான், அவன் ஸ்தலம் இனி அவனை அறியாது.

௰௧ ஆகையினாலே நானும் என் வாயை அடக்காமல், என் ஆவியின் இடுக்கத்திலே பேசி, என் ஆத்துமத்தின் கசப்பிலே அங்கலாய்ப்பேன்.

௰௨ ¶ தேவரீர் என்னைக் காவல்வைக்கிறதற்கு நான் ஒரு சமுத்திரமோ? நான் ஒரு திமிங்கலமோ?

௰௩ என்னுடைய கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்குமென்றும், என்னுடைய படுக்கை என்னுடைய தவிப்பைக் குறைக்குமென்றும், நான் சொன்னால்,

௰௪ நீர் சொப்பனங்களினால் என்னைக் கலங்கப்பண்ணி, தரிசனைகளால் எனக்குத் திகிலுண்டாக்குகிறீர்.

௰௫ அதினால் என் ஆத்துமம் நெருக்குண்டு சாகிறதையும், என் எலும்புகளோடே உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் மரணத்தையும் தெரிந்துகொள்ளும்.

௰௬ இப்படியிருக்கிறதை அரோசிக்கிறேன்; இப்படியென்றும் உயிரோடிருக்கமாட்டேன், என்னைப் போகவிடும்; ஏனெனில்

என் நாள்கள் மாயைதானே.

௰௭ மனுஷனை நீர் ஒருபொருட்டாய் எண்ணுகிறதற்கும், அவன்மேல் உம்முடைய இருதயத்தை வைக்கிறதற்கும்,

௰௮ அவனைக் காலையில் விசாரித்து, அடிக்கடி அவனைச் சோதிக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம்?

௰௯ நான் என் உமிழ்நீரை விழுங்கும்மட்டும் எத்தனைகாலம் என்னை நெகிழாமலும், என்னை விடாமலுமிருப்பீர்.

௨௰ மனுஷரைக் காப்பவரே, பாவம்செய்தேனுனால் உமக்கு நான் செய்யவேண்டியதென்ன? நான் எனக்குத்தானே பாரமாயிருக்கும்படிக்கு, நீர் என்னை உமக்கு இலக்காக வைத்ததென்ன?

௨௧ என் மீறுதலை நீர் மன்னிக்காமலும், என் அக்கிரமத்தை நீக்காமலும் இருப்பானேன்? ஏனென்றால் இப்போது மண்ணிலே படுத்துக்கொள்ளுவேன்; விடியற்காலத்திலே என்னைத் தேடினீரானால் இல்லாதிருப்பேனென்றான்.

## ௮. அதிகாரம்.

அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ நீர் எந்தமட்டும் இப்படிப்பட்டவைகளைப் பேசுகிறீர்? எந்தமட்டும் உம்முடைய வாயின் வார்த்தைகள் வலுவான காற்றைப்போலிருக்கும்.

௩ பராபரன் நியாயத்தைப் புரட்டுவாரோ? சர்வத்துக்கும் வல்லவர் நீதியைப் புரட்டுவாரோ?

௪ உம்முடைய பிள்ளைகள் அவருக்கு விரோதமாகப் பாவம்செய்திருந்தால், இவர் அவர்களை அவர்கள் பாதகத்தின் ஆக்கினைக்கு ஒப்புக்கொடுத்தார்.

௫ நீர் பராபரனைக் காலம்பெறத்தேடி, சர்வத்துக்கும் வல்லவரைநோக்கி விண்ணப்பம்செய்து,

௬ சுத்தமும், செம்மையுமாயிருந்தீரேயானால், அப்போது அவர் உமக்காக விழித்து, நீதியுள்ள உம்முடைய வாசஸ்தலத்தைச் சாங்கோபாங்கமாக்குவார்.

௭ உம்முடைய துவக்கம் கொஞ்சமாயிருந்தாலும், உமக்கிருக்கிறது பிற்பாடு மிகவும் வர்த்திக்கும்.

௮ ¶ இதற்காக நீர் முந்தின தலைமுறையில் விசாரித்து, அவர்கள் பிதாக்களின் செய்தியை ஆராய வகைபாருமே.

௯ ஏனெனில் நாம் நேற்று உண்டாகி ஒன்றும் அறியாதிருக்கிறோம்; ஏனென்றால் பூமியின்மேல் நம்முடைய நாள்கள் நிழலைப் போலிருக்கின்றன.

௰ அவர்கள் உம்மை உபதேசித்து உமக்கு அதைச்சொல்லி, தங்கள் இருதயத்திலிருக்கும் நியாயங்களை வெளிப்படுத்துவார்களல்லவோ?

௰௧ சேறில்லாமல் நாணல் ஓங்கிவளருமோ? தண்ணீரில்லாமல் கோரைப்புல் முளைக்குமோ?

௰௨ இல்லாவிட்டால் அது இன்னம் தன் பச்சையோடிருந்தும், அறுக்கப்படாதிருந்தும் மற்றப் புல்லையெல்லாம்பார்க்க வாடிப்போமல்லவோ?

௰௩ பராபரனை மறக்கிற எல்லாருடைய வழிகளும் அப்படித்தானிருக்கின்றன; மாயக்காரன் வரப்பார்த்துக்கொள்ளுதல் அழியும்.

௰௪ அவனுடைய வீண் நினைவு அறுந்துபோய், அவனுடைய நம்பிக்கை சிலந்திப் பூச்சிக் கூடுபோலிருக்கும்.

௰௫ அவன் தன் வீட்டின்மேல் ஊன்றுகிறான்; ஆனால் அது உறுதியாயிராது; அதைப் பிடித்துக்கொண்டிருக்கிறான்; ஆனால் அது நிற்காது.

௰௬ வெயில் எதிக்காததற்குமுன்னே அவன் பச்சைச்செடி; அதின் கொடிகள் அவன் தோட்டத்தின்மேலே படருகிறது.

௰௭ அதின் வேர்கள் கற்குவியலில் சிக்கி, கற்பாறைக்கு நேரிடும்.

௰௮ அது அதினிடத்தில் இராதபடிக்கு நிர்மூலமானபின், அது இருந்த இடம் உன்னை

நான் கண்டதில்லையென்று அதை மறுதலிக்கும்.

௰௯ இதோ அவன் மார்க்கத்தின் மகிழ்ச்சி இப்படிப்போகிறது; ஆனால் வேறேபேர் மண்ணிலிருந்து முளைப்பார்கள்.

௨௰ ¶ இதோ பராபரன் உத்தமனை வெறுக்கிறதுமில்லை, பொல்லாதவர்களுக்கு கைலாகு கொடுக்கிறதுமில்லை.

௨௧ நீர் உத்தமனாயிருக்கும்போது, உம்முடைய வாய் நகைப்பினாலும், உம்முடைய உதடுகள் கெம்பீரத்தினாலும், நிரப்பப்படும்மட்டும் இப்படிக் காண்பீர்.

௨௨ உம்மைப்பகைக்கிறவர்கள் வெட்கத்தால் மூடப்படுவார்கள்; ஆகாதவர்களுடைய கூடாரம் இல்லாதேபோம் என்றான்.

## ௯. அதிகாரம்.

யோபு மறுவுத்தரவு கொடுத்துச் சொன்னதாவது:

௨ ஆம், இது இப்படியிருக்கிறது என்கிறதை அறிவேன்; பராபரனுக்குமுன்பாக மனுஷன் நீதிமானாய் இருப்பதெப்படி?

௩ அவர் இவனோடே வழக்காடச் சித்தமாயிருந்தால், ஆயிரத்தில் ஒன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவு சொல்லமாட்டான்.

௪ அவர் இருதயத்திலே ஞானமுள்ளவரும் பெலத்தில் பராக்கிரமருமாயிருக்கிறார்; அவருக்கு விரோதமாகத் தன்னைக் கடினப்படுத்திச் சுகித்தவன் யார்?

௫ அவர் பர்வதங்களை அவைகளறியாமல் பேர்த்து, தம்முடைய கோபத்தில் அவைகளைப் புரட்டிப்போடுகிறார்.

௬ அவர் பூமியை அதின் தூண்கள் அதிரத்தக்கதாய் அதின் ஸ்தலத்தைவிட்டு அசைக்கிறார்.

௭ அவர் சூரியனுக்குச் சொல்ல அது உதிக்காதிருக்கும்; அவர் நட்சத்திரங்களை முத்திரிக்கிறார்.

௮ அவர் ஒருவர் வானங்களை விரித்து, சமுத்திர அலைகளின்மேல் நடக்கிறவர்.

௯ அவர் ஆயிலியத்தையும், மிருகசீரிஷத்தையும், சத்த நட்சத்திரத்தையும், தெற்கத்தி மண்டலங்களையும் உண்டாக்கினவர்.

௰ ஆராய்ந்துமுடியாத பெரியகாரியங்களையும், எண்ணிமுடியாத அதிசயங்களையும் அவர் செய்கிறார்.

௰௧ இதோ நான் காணாமல் அவர் என்னைக் கடந்து, நான் அவரை உணராமல் அவர் மாறுபட்டுப்போகிறார்.

௰௨ இதோ அவர் பறித்துக்கொண்டு போகிறபோது அவரை மறிப்பவனார்? நீர் என்ன செய்கிறீர் என்று அவரை கேட்பவனார்?

௰௩ பராபரன் தம்முடைய கோபத்தைத் திருப்பார்; பெருமையாய்ச் சகாயம்பண்ணுபவர்கள் அவர் கீழ்ப்பணியவேண்டும்.

௰௪ இப்படியிருக்கையில் நான் அவருக்கு மறுமொழிகொடுத்து, அவரோடே பேச எனக்காக வார்த்தைகளைத் தெரிந்துகொள்ளுகிறதற்கு நான் எம்மாத்திரம்?

௰௫ நான் நீதி விளங்கப்பட்டாலும் அவருக்கு மறுமொழி சொல்லக்கூடாமல், என்னை நியாயம் தீர்க்கிறவரை இரக்கத்துக்குக் கெஞ்சுவேன்.

௰௬ எனக்கு மறுஉத்தரவு கொடுப்பாரென்று நான் கூப்பிட்டாலும், அவர் என் சத்தத்துக்குச் செவிகொடுப்பாரென்று நம்பேன்.

௰௭ ஏனென்றால் அவர் புசலினால் என்னை நொறுக்கி, முகாந்திரமில்லாமல் அநேகம் காயங்களை எனக்கு வருவிக்கிறார்.

௰௮ நான் சுவாசம்வாங்குகிறதற்கு எனக்கு இடம்கொடாமல், கசப்புகளால் என்னைத் திருப்தியாக்குகிறார்.

௰௯ சத்துவத்தைப்பார்த்தால் இதோ அவரே பெலத்தவர்; நியாயத்தைப்பார்த்தால் என்னை வரவழைத்து விசாரிப்பவன் யார்?

௨௰ நான் என்னை நீதிமானாக்கினாலும் என் வாய் என்னைக் குற்றம்சுமத்தும்; நான் உத்தமனென்றாலும் என்னை மாறுபாடானவனென்று தீர்ப்பார்.

௨௧ நான் உத்தமனென்றாலும் என்னைத் தானே நான் எண்ணேன்; என் ஜீவனை அரோசிக்கிறேன்.

௨௨ ¶ இந்த ஒரு காரியம் நமக்கு வழக்காயிருக்கிறது; ஆகையினால் அதைச் சொல்லுகிறேன்; அதென்னவெனில் உத்தமனையும் ஆகாதவனையும் அவர் அழிக்கிறார் என்பதுதானே.

௨௩ சவுக்கானது அசுப்பிலே வாதித்துக் கொல்லுகிறபோது, குற்றமில்லாதவர்களின் சோதனைக்கு நகைக்கிறார்.

௨௪ தேசம் ஆகாதவன் கையில் ஒப்புக்கொடுக்கப்படும்; அதிலிருக்கிற நியாதிபதிகளின் முகத்தை மூடிப்போடுகிறார்; அவர் இதைச்செய்கிறதில்லையென்றால் பின்னை யார் இதைச் செய்கிறார்.

௨௫ என்னுடைய நாள்கள் அஞ்சற்காரனைப்பார்க்கிலும் தீவிரித்து, நன்மை காணாமல் பறந்துபோம்.

௨௬ அவைகள் நன்றாய் ஓடுகிற கப்பல்களைப்போலும் இரையின்மேல் பாய்கிற கழுகைப்போலும் கடந்துபோம்.

௨௭ என்னுடைய அங்கலாய்ப்பை நான் மறந்து, என் முகத்தின் துக்கத்தைவிட்டு, திடன்கொள்வேனென்று சொன்னால்,

௨௮ என் நோய்களுக்கெல்லாம் பயமாயிருக்கிறேன், என்னைக் குற்றமில்லாதவனாக நடத்தீர் என்றறிவேன்.

௨௯ நான் பொல்லாதவனாயிருந்தால், நான் இத்தனை விருதாவாய்ப் போராடுவானேன்?

௩௰ நான் என்னை உறைந்த மழைத்தண்ணீரால் கழுவி, என் கைகளைச் சவுக்காரத்தினாலே சுத்தம்பண்ணினாலும்,

௩௧ அப்போது தேவரீர் என்னை என் வஸ்திரங்கள் எனக்கு அருவருப்பாயிருக்கும்படிக்கு, சேற்றுப்பள்ளத்திலேதோய்ப்பீர்.

௩௨ ஏனெனில் நான் அவருக்குப் பிரதியுத்தாரம் சொல்லுகிறதற்கும், நாங்கள்கூட நியாயத்திற்கு வருகிறதற்கும், அவர் என்னைப்போல மனுஷனல்ல.

௩௩ எங்கள் இருவரின்மேலே தன் கையை வைக்கத்தக்க மத்தியஸ்தன் எங்களுக்குள்ளே இல்லை.

௩௪ அவர் தமது மிலாற்றை என்னைவிட்டு அகற்றுவாராக; அவருடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௩௫ அப்போது நான் பேசி, அவருக்குப் பயப்படாதிருப்பேன்; ஏனென்றால் நீங்கள் நினைக்கிறபடி என் காரியமிராது.

## ௰. அதிகாரம்.

நான் உயிரோடிருக்கிறதை என் ஆத்துமா அரோசிக்கிறது; நான் என் துயரத்துக்கு எனக்குள்ளே இடம்கொடுத்து, என் மனச்சஞ்சலத்தினாலே பேசுவேன்.

௨ நான் பராபரனுடனே என்னைத் துன்மார்க்கனென்று தீர்க்காதிரும், தேவரீர் எதின்நிமித்தம் என்னோடே வழக்காடுகிறீர் என்று எனக்குத் தெரியப்பண்ணுமென்பேன்.

௩ நீர் என்னை ஒடுக்கி, உம்முடைய கைகளின் வேலையை வெறுத்து, ஆகாதவர்களின் யோசனையைக் கிருபாகடாட்சமாய்ப் பார்க்கிறது உமக்கு நன்றாயிருக்குமோ?

௪ மாம்சக்கண்கள் உமக்குண்டோ? மனுஷன் பார்க்கிறபிரகாரமாய்ப் பார்க்கிறீரோ?

௫ நீர் என் அக்கிரமத்தை நோண்டித் தேடி, என் பாவத்துக்காக ஆராய்ந்து விசாரிக்கிறதற்கு,

௬ உம்முடைய நாள்கள் ஒரு மனுஷன் நாள்களைப்போலும், உம்முடைய வருஷங்கள் ஒரு புருஷனுடைய நாள்களைப்போலுமிருக்கின்றனவோ?

௭ நான் துன்மார்க்கனல்ல என்பது உம்முடைய அறிவிலிருக்கிறது; ஆனால் உம்முடைய கைக்கு என்னைத் தப்புவிக்கிறவனில்லை.

௮ ¶ உம்முடைய கரங்கள் என்னையும் என்னைச் சூழ்ந்திருக்கிற எல்லாவற்றையும் உருவாக்கிப் படைத்திருந்தும், என்னை நிர்மூலமாக்குகிறீர்.

௯ தேவரீர் என்னைக் களிமண்ணைப்போலும் உண்டாக்கினீர் என்பதையும், என்னைத் திரும்பத் தூளாகப்போகப்பண்ணுவீர் என்பதையும் நினைவுகூரும்.

௰ தேவரீர் என்னைப் பாலைப்போல வார்த்து, தயிரைப்போல என்னை உறையப்பண்ணினதில்லையோ?

௰௧ எனக்குத் தோலையும் சதையையும் தரித்து, என்னை எலும்புகளாலும் நரம்புகளாலும் இசைத்தீர்.

௰௨ எனக்கு உயிரைத் தந்ததுமல்லாமல், உபகாரத்தையும் எனக்குச் செய்துவந்தீர்; உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக் காப்பாற்றிற்று.

௰௩ ஆனால் இவைகளை உம்முடைய மனதிலே அடக்கினாலும், இது உமக்குள் இருக்கிறது என்கிறதை அறிவேன்.

௰௪ ¶ நான் பாவஞ்செய்தால், அதை நீர் என்னிடத்திலே விசாரித்து, என் அக்கிரமத்தை என்மேல் சுமத்தாமல் விடீர்.

௰௫ நான் துன்மார்க்கனாயிருந்தால் எனக்கையோ! நான் நீதிமானாயிருந்தாலும் என் தலையை நான் எடுக்கக்கூடாது; கனவீனத்தால் திருப்தியானேன், நீர் என் சிறுமையைப் பாரும்.

௰௬ ஏனென்றால் அது பெருகுகிறது; சிங்கத்தைப்போல என்னை வேட்டையாடுகிறீர்; பின்னையும் ஆச்சரியமானபடி என்னை நடத்துகிறீர்.

௰௭ நீர் உம்முடைய சாட்சிகளை எனக்கு எதிராக இரட்டிக்கவும், என்மேல் உம்முடைய தாங்கலைப் பெருகவும்பண்ணுகிறீர்; விசைக்குவிசை அதிக போராட்டம் எனக்குண்டு.

௰௮ ¶ நீர் என்னைக் கெர்ப்பத்திலிருந்து புறப்படப்பண்ணினதென்ன? ஒரு கண்ணும் என்னைக் காணாதபடிக்கு, நான் அப்போது சீவித்துப்போனால் தாவிலை.

௰௯ அப்போது நான் ஒருக்காலும் இல்லாததுபோலிருந்து, கெர்ப்பத்திலிருந்து பிரேதக்குழிக்குக் கொண்டுபோகப்பட்டிருப்பேன்.

௨௰ என்னுடைய நாள்கள் கொஞ்சமல்லவோ?

௨௰௧ காரிருளும் மரண அந்தகாரமுமான இருண்ட தேசத்துக்கும், அந்தகாரமாய்க் கிடக்கிற ஒழுங்கில்லாத மரணநிழலிலுள்ள தேசத்துக்கும், நான் போய்த் திரும்பவாராதவனாகுமுன்னே,

௨௰௨ நான் சற்று முசிப்பாறும்படிக்குத் தேவரீர் ஓய்ந்து என்னைவிட்டிருமென்றான்.

## ௰௧. அதிகாரம்.

அப்போது நாகமாத்தியனான சோப்பார் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ வார்த்தைகளின் ஏராளத்துக்கு எதிர் உத்தரவு சொல்லப்படத்தேவையில்லையோ? சள்ளுவாயன் நீதி விளங்கப்படுவானோ?

௩ உம்முடைய வீம்புவார்த்தைகளுக்கு மனுஷர் மவுனமாயிருப்பார்களோ? நீர் சக்கந்தம் பண்ணுகையில், ஒருவரும் உம்மை வெட்கப்படுத்தத் தேவையில்லையோ?

௪ நான் சொல்லிக் காண்பிக்கிறது சுத்தமென்றும், நான் தேவரீருடைய பார்வைக்குத் துப்புரவானவன் என்றும் நீர் சொல்லுகிறீர்.

௫ ஆனால் பராபரன் பேசி, உமக்கு எதிராகத் தம்முடைய உதடுகளைத் திறந்து,

௬ உமக்கு ஞானத்தின் இரகசியங்களை அறியப்படுத்தினால் தாவிலை; ஏனெனில் உள்நியாயத்தைப்பார்த்தால், அது இரட்டிப்புள்ளதாயிருக்கிறது; ஆகையால் உம்முடைய அக்கிரமத்தின்நிமித்தம் பராபரன் உம்மை மறந்தாரென்றறியும்.

௭ ¶ பராபரனுடைய அந்தரங்க ஞானத்தை நீர் கண்டு, சர்வத்துக்கும் வல்லவருடைய குறையற்ற நியாயம்மட்டும் எட்டி, அதைக் கண்டுபிடிப்பீரோ?

௮ அது வானம் அத்தனையாய் உயர்ந்தது; நீர் செய்யத்தக்கதென்ன? அது பாதாளத்திலும் ஆழமானது; நீர் அறியத்தக்கதென்ன?

௯ அதின் அளவு பூமியைப்பார்க்கிலும் நீளமும் சமுத்திரத்தைப்பார்க்கிலும் அகலமுமாயிருக்கிறது.

௰ அவர் கடந்துபோனாலும், அவர் அடைத்துப்போட்டாலும், அவர் கூட்டங்கூட்டினாலும் அவரைத் தடைபண்ணுபவன் யார்?

௰௧ ஏனெனில் அவர் மாயையான மனுஷரை அறிவார்; அவர் அக்கிரமத்தைக் கண்டும் அதை உணர்ந்துகொள்ளாரோ?

௰௨ மனுஷன் புத்தியில்லாமலிருந்தாலும் காட்டுக்கழுதைக்குட்டிக்கு ஒப்பாகப் பிறந்திருக்கிறான்; பெருநெஞ்சுள்ளவனாயிருக்கிறான்.

௰௩ ¶ நீர் உம்முடைய இருதயத்தை ஆயத்தப்படுத்தி, உம்முடைய கைகளை அவருக்கு நேராக விரித்தால் தாவிலை.

௰௪ உம்முடைய கையிலே அக்கிரமம் உண்டாயிருந்தால், அதைத் தூரத்தில் அகற்றி, அநியாயம் உம்முடைய கூடாரங்களில் வாசமாயிருக்கவொட்டாதிரும்.

௰௫ ஏனென்றால் அப்போது உம்முடைய முகத்தை மாசில்லாமல் ஏறெடுத்துப் பயப்படாமல் பெலப்பட்டிருப்பீர்.

௰௬ அப்போது நீர் வருத்தத்தை மறந்து, அதைக் கடந்துபோன தண்ணீரைப்போல நினைப்பீர்.

௰௭ அப்போது உம்முடைய ஆயுசுகாலம் பட்டப்பகலைப்பார்க்கிலும் விளங்கிநிற்கும்; இருள் அடைந்த நீர் விடியுங்காலத்தைப்போலிருப்பீர்.

௰௮ நம்பிக்கை உண்டாகையால் திடனாயிருப்பீர்; தோண்டியெடுத்துச் சுகமாய்ப் படுத்துக்கொள்வீர்.

௰௯ பயப்படுத்துவாரில்லாமல் படுத்துக்கொண்டிருப்பீர்; அநேகர் உமது முகத்தைநோக்கி விண்ணப்பம்பண்ணுவார்கள்.

௨௰ ஆனால் ஆகாதவர்களுடைய கண்கள் பூத்துப்போய், அவர்கள் அடைக்கலம் அவர்களைவிட்டழிந்து, அவர்கள் நம்பிக்கை செத்துப்போகுதலாயிருக்குமென்றான்.

## ௧௨. அதிகாரம்.

யோபு பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ ஆம், நீங்களே ஞானமுள்ள சனம்; உங்களுடனே ஞானம் சாகும்.

௩ எனக்கும் உங்களைப்போலப் புத்தியிருக்கிறது; நான் உங்களுக்குத் தாழ்கிறதில்லை; இப்படிக்கொத்தவைகளுடைய அறிவு யாருக்கு இல்லாதிருக்கும்?

௪ என் சிநேகிதரால் நான் நகைக்கப்பட்டு, பராபரனை நோக்கிக் கூப்பிடுகிறேன்; அவர் எனக்கு மறுஉத்தரவு அருளுவார்; உத்தமனாகிய நீதிமான் நகைப்புக்கிடமானவன்.

௫ ஆபத்துப்படுகிறவனுக்குச் சுகமாயிருக்கிறவனுடைய நினைவினால் உண்டாகிறது அசங்கதம், காலிடறினவர்களுக்கு அது நேரிட்டிருக்கிறது.

௬ ¶ பாழ்க்கடிக்கிறவர்களின் கூடாரங்களுக்குச் சாங்கோபாங்கமும், பராபரனுக்குச் சினம் உண்டாக்குகிறவர்களுக்கு அவர் தம்முடைய கையினால் கொடுத்ததினாலே வெகு சுகமுமுண்டு.

௭ இப்போதும் நீ மிருகங்களைத்தானே கேள், அவைகள் உனக்குப் போதிக்கும், ஆகாயத்துப் பறவைகளைக் கேள், அவைகள் உனக்கறிவிக்கும்.

௮ அல்லது பூமியை விசாரித்துக்கேள், அது உனக்கு உபதேசிக்கும், சமுத்திரத்தின் மச்சங்கள் அதை உனக்கு விவரிக்கும்.

௯ கர்த்தருடைய கரம் இதைச்செய்ததென்று இவைகளெல்லாவற்றினாலும் அறியாதவன் யார்?

௰ எல்லா உயிர்ப்பிராணிகளின் சீவனும், எல்லா மனுஷமாம்சத்தின் ஆவியும் அவர் கையிலிருக்கின்றன.

௰௧ ¶ வாய் போசனத்தை ருசிபார்க்கிறதுபோல, செவி வார்த்தைகளைச் சோதித்துப் பார்க்கிறதும் இல்லையோ?

௰௨ விருத்தாப்பியரிடத்தில் ஞானமும் வயதுசென்றவர்களிடத்திலே உணர்வும் இருக்கிறதே.

௰௩ எத்தனை அதிகம் அவரிடத்தில் ஞான

மும் வல்லமையுமிருக்கும்? அவருக்குத் தான் ஆலோசனையும் உணர்வும் இருக்கின்றன.

௰௪ இதோ அவர் இடித்தால் கட்டப்படுதலில்லை, அவர் மனுஷனை அடைத்தால் திறக்கப்படுதலில்லை.

௰௫ இதோ அவர் தண்ணீர்களை அடக்கினால் அவைகள் சுவறிப்போம், அவர் அதை வரவிட்டால், பூமியைக் கீழதுமேல தாக்கும்.

௰௬ அவரிடத்திலே பெலனும் மெய்ஞ்ஞானமும் இருக்கின்றன; மோசம்போகிறவனும் மோசம்போக்குகிறவனும், அவர் கையின்கீழிருக்கிறார்கள்.

௰௭ அவர் யோசனைக்காரரைக் கொள்ளையிட்டுக்கொண்டுபோய், நியாயாதிபதிகளின் புத்தியைப் பயித்தியமாக்குகிறார்.

௰௮ அவர் இராசாக்களுடைய சுருக்கைக் கட்டவிழ்த்து, அவர்கள் இடுப்புகளைக் கச்சைகட்டுகிறார்.

௰௯ அவர் மந்திரிகளைக் கொள்ளையிட்டுக் கொண்டுபோய், பெலத்தோரைப் புரட்டிப்போடுகிறார்.

௨௰ அவர் நிசமுள்ளவர்களுடைய உதட்டை விலக்கி, முதிர்வயதுள்ளவர்களின் ஆலோசனையை வாங்கிப்போடுகிறார்.

௨௧ அவர் பிரபுக்களின்மேல் அசங்கதத்தை ஊற்றி, வல்லமையுள்ளவர்களின் கச்சையைத் தளர்ந்துபோகப்பண்ணுகிறார்.

௨௨ அந்தகாரத்திலிருக்கிற ஆழங்களை அவர் வெளியரங்கமாக்கி, மரணநிழலை வெளிச்சத்தில் புறப்படப்பண்ணுகிறார்.

௨௩ அவர் சாதிகளைப் பெருகவும் அழியவும் பண்ணுகிறார்; அவர் சாதிகளைப் பரவவும் குடிவிலகவும் பண்ணுகிறார்.

௨௪ அவர் தேசச்சனத்தினுடைய தலைவரின் நெஞ்சை வாங்கிப்போட்டு, அவர்களை வழியில்லாத அந்தரத்திலே அலையப்பண்ணுகிறார்.

௨௫ அவர்கள் வெளிச்சமற்ற இருளிலே தடவித்திரிகிறார்கள்; அவர்களை வெறித்தவர்களைப்போலத் தடுமாறித் திரியப்பண்ணுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

இதோ இவைகளெல்லாவற்றையும் என்னுடைய கண் கண்டு, என்னுடைய காது கேட்டு உணர்ந்துகொண்டிருக்கின்றன.

௨ நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் அறிந்திருக்கிறேன்; நான் உங்களுக்குத் தாழ்கிறவனல்ல.

௩ ¶ சர்வத்துக்கும் வல்லவரோடே நான் பேசினால் நல்லது; பராபரனோடே என் நியாயத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்புவேன்.

௪ ஏனெனில் நீங்கள் பொய்யைப் பிணைக்கிறவர்களாமே; நீங்களெல்லாரும் காரியமில்லாத வயித்தியர்.

௫ நீங்கள் மவுனமாய் இருக்கவேயிருந்தால் தாவிலை; அது உங்களுக்கு ஞானமாயிருக்கும்.

௬ ¶ நீங்கள் என் நியாயத்தைக் கேட்டு, என் உதடுகள் சொல்லும் விசேஷங்களைக் கவனியுங்கள்.

௭ நீங்கள் பராபரனுக்காக நியாயக்கேடாய்ப் பேசி, அவருக்காகக் கபட்டை வசனிக்கவேண்டுமோ?

௮ அவர் முகத்தைப் பார்ப்பீர்களோ? பராபரனுக்காக வழக்காடுவீர்களோ?

௯ அவர் உங்களை ஆராய்ந்தால் அது உங்களுக்கு நன்மையோ? மனுஷனைச் சக்கந்தம்பண்ணுகிறதுபோல அவரைச் சக்கந்தம்பண்ணுவீர்களோ?

௰ நீங்கள் அந்தரங்கமாய் முகதாட்சிணியம்பண்ணினால் அவர் உங்களைக் கண்டிக்கவே கண்டிப்பார்.

௰௧ அவருடைய மகத்துவம் உங்களைத் திடுக்கிடப்பண்ணாதோ? அவருடைய பயங்கரம் உங்கள்மேல் விழாதோ?

௰௨ நீங்கள் உங்கள் பேரை நினைக்கப்பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்கும், உங்கள் மேட்டிமைகள் சேற்றுக்

குவியல்களுக்கும் சமானமானது.

௰௩ ¶ நான் பேசும்படிக்கு எனக்குமுன்பாக மவுனமாயிருங்கள்; என்மேல் வருகிறதுவரட்டும்.

௰௪ நான் என் பல்லுகளினாலும் என் சதையைப் பிடுங்கி, என் பிராணனை என் கையிலே யோக்கியத்துக்குள் வைப்பானேன்?

௰௫ இதோ அவர் என்னைக் கொன்றுபோட்டாலும், அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன்; ஆனால் என் வழிகளை அவருக்கு முன்பாக ரூபகாரம்பண்ணுவேன்.

௰௬ அவர் என் இரட்சிப்புமாயிருப்பார்; ஏனெனில் ஒரு மாயக்காரன் அவருக்கு முன்பாக வரமாட்டான்.

௰௭ நீங்கள் என் வசனத்தையும், நான் சொல்லிக்காண்பிக்கிறதையும், உங்கள் செவிகளால் கேட்கவே கேளுங்கள்.

௰௮ இதோ என்னுடைய நியாயத்தை அணியணியாய் வைத்தேன்; நான் நீதிவிளங்கப்படுவேன் என்றறிவேன்.

௰௯ என்னோடே வழக்காடவேண்டுமென்று இருக்கிறவன் யார்? இப்போது நான் மவுனமாகிச் சீவித்துப்போவேனே.

௨௰ ¶ இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச் செய்யாதிருப்பீராக; அப்போது உமது முகத்துக்குமுன்பாக ஒளித்துக் கொள்ளாதிருப்பேன்.

௨௧ உம்முடைய கையை என்னைவிட்டுத் தூரப்படுத்தும்; உம்முடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௨௨ அப்போது நீர் கூப்பிடும்; நான் மறுஉத்தரவு கொடுப்பேன்; அல்லது நான் பேசுவேன், நீர் எனக்கு மறுமொழியை அருளும்.

௨௩ என்மேலிருக்கிற அக்கிரமங்களும் பாவங்களும் எத்தனை? என் மீறுதலையும் என் பாவத்தையும் எனக்கறிவியும்.

௨௪ தேவரீர் உம்முடைய முகத்தை மறைத்து, என்னை உமக்குப் பகைஞனாக எண்ணிக்கொள்ளுவானேன்?

௨௫ காற்றடித்த சருகை நொறுக்குவீரோ? காய்ந்துபோன துரும்பைப் பின்தொடருவீரோ?

௨௬ ஏனெனில் தேவரீர் மகா கசப்பான தீர்ப்புகளை என்மேலெழுதி, என் சிறுவயதின் அக்கிரமங்களை எனக்குப் பலிக்கப்பண்ணி,

௨௭ என் கால்களைத் தொழுவடித்துப்போட்டு, என் வழிகளையெல்லாம் காவல்பண்ணுகிறீர்; என் கால் அடிகளில் அடையாளத்தைப் போடுகிறீர்.

௨௮ இப்படிக்கொத்தவன் அழுகிப்போகிற வஸ்துவைப்போலவும், பொட்டரித்த வஸ்திரத்தைப்போலவும் அழிந்துபோகையில்தானே.

## ௰௪. அதிகாரம்.

ஸ்திரியினிடத்தில் பிறந்த மனுஷன் நாள் குறுகினவனும் சஞ்சலம் நிறையப்பட்டவனுமாயிருக்கிறான்.

௨ அவன் பூப்போலப் பூத்து, அறுப்புண்டு, நிலைநிற்காமல் நிழலைப்போல ஓடிப்போகிறான்.

௩ ஆகிலும் இப்படிக்கொத்தவன்மேலே தேவரீர் உம்முடைய கண்களைத் திறந்துவைத்து, உம்மோடே தீர்த்துக்கொள்ளும் நியாயத்துக்கு என்னைக் கொண்டுவருகிறீர்.

௪ அசுத்தமானவர்களிலே சுத்தமான ஒருவனையாகிலும் கண்டெடுக்கத்தக்கவன் யார்?

௫ அவனுடைய நாள்கள் இம்மாத்திரம் என்று குறிக்கப்பட்டிருகையால், அவனுடைய மாதங்களின் தொகை உம்மிடத்திலிருக்கிறது; அவன் கடந்துபோகக்கூடாத எல்லைகளை அவனுக்குக் கட்டளையிட்டீர்.

௬ அவன் ஒரு கூலிக்காரனைப்போலே தன் நாளின் வேலையாயிற்றென்று இரம்மியப்படுமட்டும் அவன் ஓய்ந்திருக்கும்படிக்கு உமது பார்வையை அவனைவிட்டு விலக்கும்.

௭ ¶ ஒரு மரம் வெட்டிப்போடப்பட்டாலும், இன்னும் பயிராகுமென்றும், அதின்

துளிர் துளிர்க்காதிருப்பதில்லை என்றும், அதற்காக நம்பிக்கையுண்டு.

௮ அதின் வேர் தரையிலே பழையதாகி, அதின் அடிக்கட்டை மண்ணிலே செத்தாலும்,

௯ தண்ணீரின் வாசனையினல் அது துளிர்த்து, ஒரு நாற்றைப்போலக் கிளைக்கும்.

௰ மனுஷனோவென்றால் செத்தபின் சாரமில்லை; நரசீவன் சீவித்துப்போனபின் அவன் எங்கே?

௰௧ ¶ தண்ணீர்கள் ஏரியிலிருந்து வடிந்து, ஆறுவற்றிச் சுவறிப்போகிறதுபோலே,

௰௨ மனுஷர் படுத்துக்கிடந்து வானங்கள் இல்லாதேபோகுமளவிலும் எழுந்திருக்கிறதுமில்லை; நித்திரைதெளிந்து விழிக்கிறதுமில்லை.

௰௩ ¶ தேவரீர் என்னைப் பிரேதக்குழியில் மறைத்து, உமது கோபம் திரும்புமட்டும், என்னை ஒளித்து என்னைத் திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு ஒரு திட்டத்தைக் குறித்தால் தாவிலை.

௰௪ மனுஷன் செத்தபின் பிழைப்பானோ? என்னுடைய போராட்டத்தின் நாளெல்லாம் என்னுடைய சீர்மாறுதல் எப்போது வருமென்று காத்திருக்கிறேன்.

௰௫ ¶ என்னைக் கூப்பிடும், அப்போது நான் உமக்கு மறுஉத்தரவு சொல்லுவேன்; உம்முடைய கைகளின் கிரியையின்மேல் விருப்பம்வைப்பீராக.

௰௬ இப்போதோவென்றால் என் நடைகளை எண்ணுகிறீர்; என் பாவத்தின்மேலல்லவோ கவனமாயிருக்கிறீர்.

௰௭ என்னுடைய மீறுதல் ஒரு கட்டாகக் கட்டப்பட்டு முத்திரைபோட்டிருக்கிறது; என் அக்கிரமத்தை ஒருமிக்கச் சேர்த்தீர்.

௰௮ ¶ ஒரு பர்வதம்முதலாய் விழுந்து கரையும், ஒரு கன்மலை தன் இடத்தைவிட்டுப் பேர்ந்துபோம்.

௰௯ தண்ணீர்கள் கல்லுகளைக் குடையும், பூமியின் தூள் அதிலே தானாய் முளைத்து அதை மூடும்; அப்படி மனுஷன் வரப் பார்த்துக்கொண்டதை அழிக்கிறீர்.

௨௰ தேவரீர் என்றைக்கும் அவனைப் பெலனாய் நெருக்குகிறதினல் அவன் போகிறான்; அவன் முக உருவை மாறப்பண்ணி அவனை அனுப்பிவிடுகிறீர்.

௨௧ அவன் பிள்ளைகள் கனப்பட்டாலும் அவன் அறியான்; அவர்கள் சிறுமைப்பட்டாலும் அவர்களைக் கவனியான்.

௨௨ அவன் மாம்சம் அவனிலிருக்கும் தறுவாயிலோவென்றால், அதற்கு நோவிருக்கும்; அவன் ஆத்துமம் அவனுக்குள்ளிருக்கும்மட்டும் துக்கிக்குமென்றான்.

## ௰௫. அதிகாரம்.

அப்போது தேமானியனாகிய எலிப்பாஸ் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ ஞானமுள்ளவன் காற்றைப்போலொத்த அறிவாய் உத்தரவு சொல்லி, தன் வயிற்றைக் கொண்டல்காற்றினல் நிரப்பி,

௩ ஒரு பிரயோசனமும் இல்லாத வார்த்தைகளாலும், ஒன்றுக்கும் உதவாத வசனங்களாலும் தர்க்கிக்கலாமோ?

௪ நீர் பயப்படுதலையும் வீணென்று சொல்லி, பராபரனுக்கு முன்பாகச் செபத்தியானத்தைக் குறையப்பண்ணுகிறீர்.

௫ ஏனெனில் உம்முடைய வாய் உம்முடைய அக்கிரமத்தைச் சொல்லிக்காட்டுகிறது; நீர் தந்திரமுள்ளவர்களின் நாவைத் தெரிந்துகொண்டீர்.

௬ நானல்ல, உம்முடைய வாய் உம்மை ஆகாதவன் என்று தீர்க்கிறது; உம்முடைய உதடுகள் உமக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகின்றன.

௭ ¶ நீர் மனுஷரில் முந்திப் பிறந்தவரோ? மேடுகளுக்குமுன்னே உருவாக்கப்பட்டீரோ?

௮ நீர் பராபரனுடைய இரகசிய ஆலோசனையைக் கேட்டு, ஞானத்தை உம்மண்டைக்கே சேரப்பண்ணினீரோ?

௯ நாங்கள் அறியாத எந்தக்காரியத்தை நீர் அறிந்திருக்கிறீர்? எங்களுக்குள்ளே

இல்லாத எந்த உணர்வு உமக்கிருக்கிறது?

௰ எங்களுக்குள்ளே உம்முடைய தகப்பனைப்பார்க்கிலும் பெரிய வயதுள்ள நரைத்தோரும் விருத்தாப்பியரும் இருக்கிறார்கள்.

௰௧ பராபரனால் உண்டாகத்தக்க ஆறுதல்களும், உம்மோடே சொல்லப்படுகிற மெதுவான பேச்சும் உமக்கு அற்பகாரியமாயிருக்கிறதோ?

௰௨ ¶ உம்முடைய இருதயம் உம்மை எங்கே கொண்டுபோகிறது? உம்முடைய கண்கள் நெறிப்பாயிருக்கிறதென்ன?

௰௩ அதேதெனில் பராபரனுக்கு விரோதமாக உம்முடைய ஆவியை வைத்து, உம்முடைய வாயிலிருந்து வசனங்களைப் புறப்படப்பண்ணுகிறீர்.

௰௪ ஒரு மனுஷன் சுத்தமாயிருக்கிறதற்கும், ஸ்திரியினிடத்தில் பிறந்தவன் நீதிமானாயிருக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம்?

௰௫ இதோ தம்முடைய பரிசுத்தவான்களையும் அவர் நம்பார்; பரமண்டலங்களும் அவர் பார்வைக்குச் சுத்தமல்ல.

௰௬ எத்தனை அதிகமாய் அநியாயத்தைத் தண்ணீரைப்போலக் குடிக்கிற மனுஷன் அருவருப்பும் துர்க்கந்தமும் உள்ளவனாயிருக்கிறான்?

௰௭ ¶ உமக்குக் காரியத்தைத் தெரியப்பண்ணுவேன்; என்னைக் கேளும்; நான் கண்டதை உமக்கு விவரிப்பேன்.

௰௮ ஞானிகள் தங்கள் பிதாக்கள் சொல்லைக்கேட்டு மறைக்காமல் அறிவித்ததைத் தானே சொல்லுவேன்.

௰௯ அப்படிக்கொத்தவர்களுக்குமாத்திரம் தேசமானது, அந்நியர் அவர்கள் நடுவாய்க் கடந்துபோகாதபடிக்குக் கொடுக்கப்பட்டிருந்ததே.

௨௰ அவர்கள் அறிவித்ததேதெனில் ஆகாதவன் உயிரோடிருக்கிற நாளெல்லாம் அவன் தனக்கு வாதை உண்டாக்குகிறான்; பலவந்தனுக்கு அவன் வருஷங்களின் தொகை இன்னதென்று மறைக்கப்பட்டிருக்கிறது.

௨௧ பயங்கரங்களின் சத்தம் அவன் காதுகளிலிருக்கிறது; சமாதானநாளிலும் பாழ்க்கடிக்கிறவன் அவன்மேல் வருவான்.

௨௨ இருளிலிருந்து திரும்பிவர அவனுக்கு நம்பிக்கையில்லாமல், பதிவிருக்கிறவர்களின் பட்டையத்துக்கு அவன் பயப்படுகிறான்.

௨௩ அப்பம் எங்கே கிடைக்குமென்று அவன் அலைந்துதிரிகிறான்; அந்தகார நாள் தன் கையின் செய்கையினாலே தனக்கு ஆயத்தப்பட்டிருக்கிறதை அறிவான்.

௨௪ இக்கட்டும் நெருக்கமும் அவனைக் கலங்கப்பண்ணி, படைக்கு ஆயத்தமான இராசாவைப்போல அவன்மேல் பெலக்கும்.

௨௫ ஏனெனில் அவன் பராபரனுக்கு விரோதமாகத் தன் கையை நீட்டி, சர்வத்துக்கும் வல்லவருக்கு விரோதமாகப் பராக்கிரமம் பாராட்டுகிறான்.

௨௬ கடினக்கழுத்தோடும், பருத்ததும் ஏடுப்பானதுமான தன்னுடைய கேடயங்களோடும் அவருக்கு எதிராக ஓடுகிறான்.

௨௭ ஏனென்றால் அவன் தன் முகத்தைத் தன் கொழுப்பினாலே மூடி, தன்னுடைய அடிவயிறு தொங்கிவிடப்பண்ணுகிறான்.

௨௮ ஆனால் பாழான பட்டணங்களிலும், குடியிருக்கக்கூடாமல் கல்க்குவியலாய்ப் போகவிருக்கிற வீடுகளிலும் வாசம்பண்ணுவான்.

௨௯ அவன் ஐசுவரியவானாவதுமில்லை; அவன் ஆஸ்தி நிற்பதுமில்லை; அப்படிப்பட்டவர்களின் வளர்த்தி தேசத்தில் படருவதுமில்லை.

௩௰ இருளுக்கு அவன் தப்புவதில்லை; அக்கினிச்சுவாலை அவனுடைய கிளையைக் காய்ந்துபோகப்பண்ணும்; அவருடைய வாயின் சுவாசத்தால் அற்றுப்போவான்.

௩௧ வழிதப்பினவன் மாயையை நம்பானாக; ஏனென்றால் மாயைதான் அவன் பலனாயிருக்கும்.

௩௨ அது அவன் நாள் வராததற்குமுன்னே அவனுக்கு நிறைந்தபடி பலிக்கும்; அவனுடைய கப்பு பச்சைகொள்வதில்லை.

௩௩ அவன் திராட்சச்செடியைப்போலத் தன் பிஞ்சுகளை உலுக்கி, ஒலிவமரத்தைப்போலத் தன் பூக்களை உதிரப்பண்ணுவான்.

௩௪ ஏனென்றால் மாயக்காரரின் கூட்டம் அந்தரமாம்; பரிதானம் வாங்கினவர்களின் கூடாரங்களை அக்கினி பட்சிக்கும்.

௩௫ அப்படிப்பட்டவன், வருத்தத்தைக் கெர்ப்பம்தரித்து அநியாயத்தைப் பெறுகிறான்; அவர்கள் கெர்ப்பம் கபட்டைப் பிறப்பிக்கும் என்றான்.

## ௰௬. அதிகாரம்.

யோபு மறுமொழிகொடுத்துச் சொன்னதாவது:

௨ இப்படிப்பட்ட அநேகம் காரியங்களை நான் கேட்டேன்; நீங்கள் எல்லாரும் அலட்டுண்டாக்குகிற தேற்றரவுகாரர்.

௩ காற்றான வார்த்தைகளுக்கு முடிவுண்டாகாதோ? அல்லது இப்படி நீ உத்தரவுகொடுக்க உனக்கு உரம் உண்டாக்குகிறதென்ன?

௪ உங்கள் ஆத்துமம் என் ஆத்துமத்தின் ஸ்தலத்திலிருந்தால், உங்களைப்போல நானும் பேசுவேனோ? அப்போது நான் உங்களுக்கு விரோதமாக வார்த்தைகளை மிச்சமாக்கி, உங்களுக்கு எதிராக என் தலையைத் துலுக்குவேனோ?

௫ நான் என் வாயினால் உங்களுக்குத் திடன்சொல்லுவேனே, என் உதடுகளின் அசைவு துக்கமாற்றுமே.

௬ ¶ நான் பேசினாலும் என் நோய் ஆறாது; நான் பேசாவிட்டாலும் எந்த நோய் என்னை விட்டுப் பிரிந்துபோம்?

௭ இப்போது என்னை நன்றாய் இளைப்பாக்கினார்; என் கூட்டத்தையெல்லாம் பாழாக்கினீர்.

௮ தேவரீர் என்னைச் சுருங்கிப்போகப் பண்ணினது, அதற்குச் சாட்சி; என்னுடைய இளைத்தல் என்னில் அத்தாட்சியாக நின்று, என் முகத்துக்குமுன்பாக உத்தரவுசொல்லும்.

௯ அவனுடைய கோபம் என்னைப் பீறுகின்றது; என்னைப் பகைக்கிறான்; தன் பல்லுகளை என்மேலே கடித்துக்கொள்ளுகிறான்; என் சத்துரு எனக்கு விரோதமாகத் தன் கண்களைக் கூர்மையாக்கினான்.

௰ எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை விரிவாய்த் திறந்தார்கள்; நிந்தையாக என்னை என் கன்னங்களில் அடித்தார்கள்; ஏகமாய் எனக்கு விரோதமாகக் கூட்டம்கூடினார்கள்.

௰௧ ¶ பராபரன் என்னை அநியாயக்காரன் வசமாக ஒப்புவித்து, ஆகாதவர்களின் கையில் என்னை அகப்படப்பண்ணினார்.

௰௨ சாங்கோபாங்கத்துடனே இருந்தேன்; ஆனால் அவர் என்னை நசுக்கி, என் பிடரியைப் பிடித்து, என்னை நொறுக்கி, என்னைத் தமக்கு இலக்காக நிறுத்தினார்.

௰௩ அவருடைய வில்க்காரர் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள்; என் இரல்களைத் தப்பவிடாமல் பிளந்தார்; எனது பிச்சைத் தரையில் ஊற்றிவிட்டார்.

௰௪ அவர் எனக்கு நொறுக்குதலின்மேல் நொறுக்குதலை வரப்பண்ணினார்; பராக்கிரமசாலியைப்போல என்மேல் விழுந்தார்.

௰௫ நான் இரட்டுச்சீலையைத் தைத்து, என் தோளின்மேலே போர்த்துக்கொண்டேன்; என் மகிமையைத் தூளிலே போட்டுவிட்டேன்.

௰௬ என் முகம் அழுகிறதினால் அழுக்குப்பட்டது; என் கண்ணிமைகளின்மேல் மரணநிழல் உண்டாயிருக்கிறது.

௰௭ என் கைகளிலே கொடுமையில்லாதிருக்கையிலும், என் செபம் சுத்தமாயிருக்கையிலும்தானே.

௰௮ ¶ பூமியே, என் இரத்தத்தை மூடிப்போடாதே; என் அலறுதலுக்கு இனி இடம் உண்டாகாதிருப்பதாக.

௰௯ இப்போதும் இதோ என் சாட்சி பரமண்டலத்திலும், என்னை அறிந்தவர் உன்னதங்களிலுமிருக்கிறார்.

௨௰ என் சிநேகிதர் என்னைப் பரியாசம்பண்ணுகிறவர்கள்; என் கண் பராபரனை நோக்கிக் கண்ணீர் சொரிகிறது.

௨௧ ஒரு மனுப்புத்திரன் தன் சிநேகிதனுக்காக வழக்குத் தீர்த்துக்கொள்ளுகிறதுபோல, பராபரனோடே இந்த மனுஷனுக்காக வழக்குத் தீர்த்துக்கொள்ளுவார் ஒருவருண்டு.

௨௨ ஏனென்றால் குறுகின வருஷங்களின் முடிவுவந்தது; நான் திரும்பிவராத வழியிலே போவேன்.

## ௰௭. அதிகாரம்.

என் சுவாசம் அழியும்; என் நாள்கள் அவிந்துபோகின்றன; பிரேதக்குழி எனக்கு முன்பாக இருக்கிறது.

௨ ¶ பரியாசம்பண்ணுகிறவர்கள் என்னிடத்திலில்லையோ? அவர்கள் உண்டாக்குகிற கசப்பினிமித்தம் என் கண் இராநித்திரைநிராதோ?

௩ தேவரீர் மேல்போட்டுக்கொண்டு, எனக்காகப் பிணைப்படுமே; வேறே யார் எனக்கு அஸ்தம் கொடுக்கத்தக்கவர்?

௪ ஏனென்றால் அவர்கள் இருதயத்துக்கு ஞானத்தை மறைத்தீர்; ஆகையால் அவர்களை உயர்த்தாதிருப்பீர்.

௫ எவன் தன் சிநேகிதருக்குக் கேடாகத் துரோகம்பேசுகிறானோ, அவன் பிள்ளைகளின் கண்களும் பூத்துப்போகும்.

௬ ¶ அவர் என்னைச் சனக்கூட்டங்களில் பழமொழியாக வைத்ததினால், அவரவர் முகத்துக்கு அருவருப்பானேன்.

௭ இதினிமித்தமாக என் கண்கள் சஞ்சலத்தினால் இருள் அடைந்தன; என் அவயவங்களெல்லாம் ஒரு நிழலைப்போலிருக்கின்றன.

௮ செம்மைமார்க்கத்தார் இதற்காகப் பிரமிப்பார்கள்; குற்றமில்லாதவன் மாயக்காரனுக்கு விரோதமாக எழும்புவான்.

௯ நீதிமான் தன் வழியைக் கெட்டியாய்ப் பிடிப்பான்; கைகள் சுத்தமானவன் பலத்துக்கொண்டே இருப்பான்.

௰ இப்போதும் நீங்களெல்லாரும் திரும்பிக்கொண்டு வாருங்கள்; உங்களில் ஞானமுள்ள ஒருவனையும் காணேன்.

௰௧ ¶ என் நாள்கள் போயின; என் இருதயத்தில் எனக்குண்டாயிருந்த சிந்தனைகள் அறுந்துபோயின.

௰௨ அவைகள் இராவைப் பகலாக்கின; இருளுக்கு வெளிச்சம் சமீபித்துவருமென்று எண்ணின.

௰௩ அப்படி நான் பார்த்துக்கொண்டிருந்தாலும், பாதாளம் என் வீடாயிருக்கும்; இருளில் என் படுக்கையைப் போடுவேன்.

௰௪ அழிவைப் பார்த்து, நீ என் தகப்பனென்கிறேன்; பூச்சிகளைப் பார்த்து, நீங்கள் என் தாயும் என் சகோதரியுமென்கிறேன்.

௰௫ என் பார்த்துக்கொள்ளுதல் இப்போது எங்கே? நான் பார்த்துக்கொண்டதைக் காண்பவன் யார்?

௰௬ பாதாளத்தின் தாழ்ப்பாள்களுக்குள்ளாக இறங்கும்; அப்போது தூளில் ஏகமாய்க் கிடக்கையில் இளைப்பாறுதல் இருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ நீங்கள் எந்தமட்டும் பேச்சுகளை முடிக்காதிருப்பீர்கள்? புத்திமான்களாயிருங்கள்; நாங்களும் பிறகு பேசட்டும்.

௩ நாங்கள் மிருகங்களைப்போல எண்ணப்பட்டு, உங்கள் பார்வைக்குத் திட்டுள்ளவர்களாயிருப்பானேன்?

௪ உமது கோபத்தினால் உம்மைத்தானே பீறுகிறவனாகிய உம்முடையநிமித்தமாகப் பூமி பாழாய்விடப்பட்டுக் கன்மலை தன்னிடத்தைவிட்டுப் பேருமோ?

௫ ¶ ஆகாதவர்களுடைய வெளிச்சமும்

அவிந்து, அவர்களுடைய நெருப்பின் பொறிகளும் பிரகாசியாதிருக்கும்.

௬ அப்படிப்பட்டவனுடைய கூடாரத்தில் வெளிச்சம் அந்தகாரப்பட்டு, அவன் விளக்கு அவனுக்குமுன்பாக அணைந்துபோகும்.

௭ அவன் பெலனாய் நடந்த நடைகள் குறைந்துபோய், அவன் ஆலோசனை அவனை விழப்பண்ணும்.

௮ ஏனென்றால் அவன் தன் கால்களாலே வலையில் அகப்பட்டு, வலைச்சிக்கலிலே நடக்கிறான்.

௯ கண்ணி அவன் குதிகாலைப் பிடிக்கும், பறிகாரர் அவனை மேல்கொள்ளுவார்கள்.

௰ அவனுக்காகச் சுருக்கு தரையில் ஒளித்து, அவனுக்காகக் கண்ணி வழியிலே வைக்கப்பட்டிருக்கிறது.

௰௧ சுற்றிலுமிருந்துண்டாகும் பயங்கரங்கள் அவனைத் திடுக்கிடப்பண்ணி, அவன் கால்களைத் திக்குத்தெரியாமல் அலையப்பண்ணும்.

௰௨ அவனுடைய பெலத்துக்குப் பட்டினியாயிருக்குதல் வந்து, அவன் பாரிசத்திலே கேடு ஆயத்தப்பட்டு நிற்கும்.

௰௩ அது அவன் தோலின் திராணியைப் பட்சிக்கும்; பயங்கரமான மரணமே அவன் திராணியைப் பட்சிக்கும்.

௰௪ அவன் நம்பிக்கை அவன் கூடாரத்திலிருந்து பிடுங்கப்படும்; இது அவனைப் பயங்கரங்களின் இராசாவண்டைக்குத் துரத்தும்.

௰௫ அவனுக்கு ஒன்றுமில்லாதேபோனதினால், பயங்கரம் அவன் கூடாரத்திலே குடியிருக்கும்; கெந்தகம் அவன் வாசஸ்தலத்தின்மேலே தெளிக்கப்படும்.

௰௬ தாழவிருக்கிற அவன் வேர்கள் பட்டுப்போகும்; உயரவிருக்கிற அவன் கொப்புகள் வெட்டப்பட்டுப்போகும்.

௰௭ அவனை நினைக்கும் நினைப்புப் பூமியிலிருந்தழியும்; வீதிகளில் அவன் பேரில்லாமல்போகும்.

௰௮ அவன் வெளிச்சத்திலிருந்து இருளில் துரத்திவிடப்பட்டுப் பூலோகத்திலிருந்து தள்ளுண்டுபோவான்.

௰௯ அவன் சனத்துக்குள்ளே அவனுக்குப் புத்திரனில்லாமலும், பேரனில்லாமலும், அவன் குடித்தனங்களில் மீதியாயிருக்கத்தக்க ஒருவனில்லாமலும் இருக்கும்.

௨௰ பின்னடியார் அவன் நாளுக்காகப் பிரமிப்பார்கள்; முற்காலம் முதல் இன்னமிருக்கிறவர்களை அருக்களிப்புப் பிடிக்கும்.

௨௧ அக்கிரமக்காரன் குடியிருந்த தானங்கள் இவைகள்தான்; பராபரனை அறியாதே போனவன் ஸ்தலம் இதுதான் என்பார்களென்றான்.

## ௰௯. அதிகாரம்.

யோபு மறுமொழிகொடுத்துச் சொன்னதாவது:

௨ ¶ நீங்கள் எந்தமட்டும் என் ஆத்துமாவை வருத்தப்படுத்தி, என்னை வார்த்தைகளினாலே நொறுக்குவீர்கள்?

௩ இப்போது பத்துத்தரம் என்னை நிந்தித்தீர்கள், நீங்கள் எனக்குக் கடினமுகம் காண்பிக்கிறதினால் உங்களுக்கு வெட்கமில்லை.

௪ நான் தப்பிநடந்தது மெய்யானாலும், என் தப்பிதம் என்னோடேதானே இருக்கிறது.

௫ நீங்கள் எனக்கு விரோதமாக உயர்ந்து, எனக்கு நிந்தையாக என்னைக் கடிந்துகொள்ளவேண்டும் என்றிருந்தீர்களேயாகில்,

௬ பராபரன் என்னைக் கவிழ்த்து, தம்முடைய வலையை என்மேல் வீசினார் என்றறியுங்கள்.

௭ இதோ கொடுமை என்று கூப்பிடுகிறேன்; ஆனால் நான் கேட்கப்படுகிறதில்லை; கூக்குரலிடுகிறேன், ஆனால் நியாயம்செய்ததில்லை.

௮ நான் கடந்துபோகக்கூடாதபடிக்கு அவர் என் பாதையை வேலி அடைத்து என் வழிகளை இருளாக்கிவிட்டார்.

௯ என்னிலிருந்த என் மகிமையை அவர் உரிந்துகொண்டு, என் சிரசின் கிரீடத்தை எடுத்துப்போட்டார்.

௰ அவர் என்னைச் சுற்றிலும் இடித்துப்போட்டதினால், நான் போகிறேன்; என் நம்பிக்கையை ஒரு செடியைப்போலப் பிடுங்கிப்போட்டார்.

௰௧ அவர் தமது கோபத்தை என்மேல் எரியப்பண்ணினார்; என்னைத் தம்முடைய சத்துருக்களில் ஒருவனாக எண்ணிக்கொள்ளுகிறார்.

௰௨ அவருடைய தண்டுப்படைகள் ஏகமாய் வந்து, எனக்கு விரோதமாகத் தங்கள் வழியை உயர்த்தி, என் கூடாரத்தைச் சுற்றிப் பாளயம் இறங்கினார்கள்.

௰௩ என் சகோதரரை என்னைவிட்டுத் தூரப்படுத்தினார்; எனக்கு அறிமுகமானவர்கள் எனக்கு அந்நியராய்ப்போனார்கள்.

௰௪ என் பந்துசனங்கள் விலகிப்போய், என் வங்கணக்காரர் என்னை மறந்தார்கள்.

௰௫ என் வீட்டார்களும், என் வேலைக்காரிகளும், என்னை அந்நியனாகப் பார்க்கிறார்கள்; அவர்கள் பார்வைக்கு நான் அசலூரானைப் போலிருக்கிறேன்.

௰௬ நான் என் வேலைக்காரனைக் கூப்பிடுகிறபோது எனக்கு மறுவுத்தரவு கொடான்; என் வாயினால் நான் அவனைக் கெஞ்சிக் கேட்கவேண்டும்.

௰௭ என் சுவாசம் என் பெண்சாதிக்கு வேறுபட்டிருக்கிறது; என் கெர்ப்பத்தின் பிள்ளைகளுக்காகப் பரதபிக்கிறேன்.

௰௮ சிறுபிள்ளைகளும் என்னை அசட்டைபண்ணுகின்றன; நான் எழுந்தால், அவைகள் எனக்கு விரோதமாகப் பேசுகின்றன.

௰௯ என் பிராணசிநேகிதரெல்லாரும் என்னை அரோசிக்கிறார்கள்; நான் சிநேகித்தவர்கள் எனக்கு விரோதமாய்த் திரும்பினார்கள்.

௨௰ என் எலும்புகள் என் தோலோடும் என் மாம்சத்தோடும் ஒட்டிக்கொண்டிருக்கின்றன; என் பல்லுகளை மூடக் கொஞ்சம் தோல் தப்பினது.

௨௧ என் சிநேகிதராகிய நீங்கள் எனக்கிரங்குங்கள், எனக்கிரங்குங்கள்; ஏனென்றால் பராபரனுடைய கை என்னைத் தொட்டது.

௨௨ பராபரனைப்போல நீங்கள் என்னைத் துன்பப்படுத்துவானேன்? என் மாம்சத்தைப் பட்சித்தும் ஆற்றாமையாய் இருக்கிறதென்ன?

௨௩ ¶ ஆ நான் இப்போது சொல்லும் வார்த்தைகள் எழுதப்பட்டால் தாவிலை, அவைகள் ஒரு புஸ்தகத்தில் வரையப்பட்டு,

௨௪ என்றைக்குமிருக்க அவைகள் கருங்கல்லிலே உளிவெட்டும் இயஎழுத்துமாய் வெட்டப்பட்டுப் பதிந்தால் தாவிலை.

௨௫ ஏனென்றால் என் மீட்பர் உயிரோடிருக்கிறார் என்கிறதையும், அவர் இறுங்கடைசியானவராய்த் தூளின்மேல் நிற்பார் என்கிறதையும் நான் அறிந்திருக்கிறேன்.

௨௬ இந்த என்னுடைய தோல்முதலானவை அழுகிப்போனபிற்பாடு, நான் என் மாம்சத்திலிருந்து பராபரனைப் பார்ப்பேன்.

௨௭ அவரை நான் எனக்கென்று பார்ப்பேன்; அந்நியகண்ணல்ல, என்னுடைய கண்களே அவரைக் காணும்; இந்த வாஞ்சையாய் என் உள்ளிந்திரியங்கள் எனக்குள் தொய்ந்துபோகின்றன.

௨௮ ¶ இந்த வார்த்தையின் வேர் எனக்குள் கண்டுபிடிக்கப்படுகையில், நாம் ஏன் அவனைத் துன்பப்படுத்துகிறோம் என்று நீங்கள் சொல்லவேண்டியதாமே.

௨௯ பட்டையத்துக்குப் பயப்படுங்கள்; ஏனெனில் மூர்க்கமானது பட்டைய ஆக்கினைக்கு நேரான அநியாயம், நியாயத்தீர்ப்பு உண்டென்கிறதை நீங்கள் அறியவும் என்றான்.

## ௨௰. அதிகாரம்.

அப்போது நாகமாத்தியனான சோப்பார் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ இதற்காக மறுஉத்தரவுகொடுக்க என் சிந்தனைகள் என்னை ஏவுகையால் நான் தீவிரித்துக்கொள்ளுகிறேன்.

௩ நான் நிந்தித்தேன் என்று கடிந்துகொள்ளப்பட்டதைக் கேட்டேன்; ஆனால் என் உணர்வினுடைய ஆவி எனக்காகப் பிரதியுத்தாரம் சொல்லும்.

௪ ¶ ஆகாதவர்களின் கெம்பீரம் குறுகினதாயிருந்து, மாயக்காரரின் சந்தோஷம் ஒரு நிமிஷம்மாத்திரம் நிற்குமென்கிறதையும்,

௫ அவர் மனுஷனைப் பூமியில் வைத்த ஆதிகாலமுதல் இப்படியிருக்கிறதென்கிறதையும் நீர் அறியீரோ?

௬ அவனுடைய மேன்மை வானபரியந்தம் உயர்ந்தாலும், அவன் தலை மேகங்கள் மட்டும் எட்டினாலும்,

௭ அவன் தன் நரகலைப்போல என்றைக்கும் அழிவான்; அவனைக் கண்டவர்கள், அவன் எங்கே என்பார்கள்.

௮ அவன் ஒரு சொப்பனத்தைப்போலப் பறந்து, காணப்படாதே போய் இராத்தரிசனத்தைப்போலப் பறக்கடிக்கப்படுவான்.

௯ அவனைப் பார்த்த கண் இனி அவனைப் பார்ப்பதில்லை; அவனிருந்த ஸ்தலம் இனி அவனைக் காண்பதுமில்லை.

௰ அவன் பிள்ளைகள் எளிமையானவர்களுக்கு இராசிபண்ணி, அவன் பறித்ததை அவன் கைகள் திரும்பக் கொடுக்கவேண்டும்.

௰௧ அவன் எலும்புகள் அவனுடைய அந்தரங்க பாவங்களினால் நிறைந்திருந்து, அவனோடேகூட மண்ணிலே படுத்துக்கொள்ளும்.

௰௨ ¶ பொல்லாப்பு அவன் வாயிலே தித்திக்கையால், அவன் அதைத் தன் நாவின்கீழ் அடக்கி,

௰௩ அதை விடாமல், பதனம்பண்ணி, தன் வாய்க்குள்ளே வைத்துக்கொண்டிருந்தாலும்,

௰௪ அவன் போசனம் அவன் குடல்களில் மாறப்பட்டு, அவனுக்குள் விரியன்பாம்புகளின் பிச்சாய்ப்போகும்.

௰௫ அவன் விழுங்கின ஆஸ்தியை வாந்திபண்ணுவான்; பராபரன் அதை அவன் வயிற்றிலிருந்து வெளியே தள்ளிவிடுவார்.

௰௬ ¶ அவன் விரியன்பாம்புகளின் விஷத்தை உறிஞ்சுவான்; விரியனின் நாக்கு அவனைக் கொன்றுபோடும்.

௰௭ தேனும் நெய்யும் ஓடும் வாய்க்கால்களையும் ஆறுகளையும் அவன் காண்பதில்லை.

௰௮ தான் பிரயாசப்பட்டுத் தேடினதை அவன் விழுங்காமல் திரும்பக் கொடுப்பான்; அவன் திரும்பக் கொடுக்கிறது அவன் ஆஸ்திக்குச் சரியாயிருக்கும்; களிகூராதிருப்பான்.

௰௯ அவன் ஒடுக்கி, ஏழைகளைக் கைவிட்டு, தான் கட்டாத வீட்டைப் பறித்தபடியினாலும்,

௨௰ தன் வயிற்றில் ஆற்றாமையாயிருந்தபடியினாலும், அவனுக்கு அவன் இச்சித்த காரியங்களில் ஒன்றுமிருப்பதில்லை.

௨௧ அவன் போசனத்தில் ஒன்றும் மீதியானதில்லை; ஆகையால் அவன் ஆஸ்தி நிலைநிற்பதில்லை.

௨௨ அவன் வேண்டுமென்ற பரிபூரணம் அவனுக்கு வந்தபின், அவனுக்கு வியாகுலம் உண்டாம்; சிறுமைப்படுகிற ஒவ்வொருவர் கை அவன்மேல் வரும்.

௨௩ ¶ தன் வயிற்றை நிரப்பத்தக்கது இன்னம் அவனுக்கிருந்தாலும், அவர் அவன்மேல் தமது கோபத்தின் உக்கிரத்தை வரவிட்டு, அவன் அசனம்பண்ணுகையில், அதை அவன்மேல் வருஷிக்கப்பண்ணுவார்.

௨௪ இருப்பு ஆயுதங்களுக்கு அவன் தப்பி ஓடினாலும் எருவில் அவனை உருவ எய்யும்.

௨௫ உருவின பட்டயம் அவன் சரீரத்தையும், அதின் மின்னுதல் அவன் பிச்சையும், உருவிப்போய்ப் புறப்படும்; பயங்கரங்கள் அவன்மேல் வரும்.

௨௬ அவன் ஒளிக்கும் இடங்களில் சகலவித இருளும் அடங்கியிருக்கும்; ஊதப்பட்டிராத அக்கினி அவனைப் பட்சிக்கும்; அவன் கூடாரத்தில் மீதியாயிருக்கின்றவன் தீங்கு அநுபவிப்பான்.

௨௭ வானங்கள் அவன் அக்கிரமத்தை வெளிப்படுத்தி, பூமி அவனுக்கு விரோதமாக

எழும்பும்.

உஅ அவன் வீட்டின் வரத்துப் போய்விடும், அவருடைய கோபத்தின் நாளிலே அவைகள் கரைந்துபோகும்.

உகூ இது பராபரனால் பொல்லாத மனுஷனுக்கு வருகிற பங்கும், அவன் பேச்சுக்குப் பராபரனால் வருகிற சுதந்தரமுமாய் இருக்கிறதென்றான்.

## உக. அதிகாரம்.

யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

உ என் வசனத்தைக் கேட்கவே கேளுங்கள்; இது நீங்கள் என்னைத் தேற்றரவுபண்ணுமாப்போல எனக்கிருக்கும்.

ங நான் பேசும்படிக்கு என்னைச் சகித்திருங்கள்; நான் பேசினதற்குப்பிற்பாடு பரிகாசம்பண்ணுங்கள்.

ச நான் மனுஷனைப் பார்த்து அங்கலாய்க்கிறேனோ? ஆனாலும் என் ஆவி விதனப்படாதிருப்பானேன்?

ரு என்னண்டைக்கு முகந்திருப்புங்கள்; அப்போது நீங்கள் பிரமித்து உங்கள் வாயைக் கையால் பொத்துவீர்கள்.

சு ¶ இதை நான் நினைக்கையில் கலங்குகிறேன்; என் மாம்சத்துக்கு நடுக்கம் பிடிக்கும்.

எ துன்மார்க்கர் பிழைத்து, கிழவராய்ப் போய், வல்லமையிலும் பெலப்பானேன்?

அ அவர்களோடும்கூட அவர்கள் வித்தார் அவர்களுக்குமுன்பாகவும், அவர்கள் சந்ததியார் அவர்கள் கண்களுக்கு முன்பாகவும் திடப்படுகிறார்கள்.

கூ அவர்கள் வீடுகள் பயமில்லாமல் சுகமாயிருக்கும்; பராபரனுடைய மிலாறு அவர்கள்மேல் இறங்காது.

ய அவர்களுடைய எருது பொலிந்தால், அவத்தமாயிராது; அவர்களுடைய பசு சினை அழியாமல் ஈன்றது.

யக அவர்கள் தங்கள் குழந்தைகளை ஒரு மந்தையைப்போல, வெளியே போகவிடுவார்கள்; அவர்கள் பிள்ளைகள் குதித்துக்கொண்டு திரிகின்றன.

யஉ அவர்கள் மேளத்தையும் சுரமண்டலத்தையும் பிடித்துச்சத்தமிட்டு, கின்னரத்தின் ஓசைக்குச் சந்தோஷப்படுகிறார்கள்.

யங அவர்கள் செல்வத்தோடே தங்கள் நாள்களைப் போக்கி, ஒரு கணப்பொழுதிலே குழியில் இறங்குகிறார்கள்.

யச இப்படிப்பட்டவர்கள் பராபரனுக்கு. எங்களைவிட்டு விலகியிரும், உம்முடைய வழிகளை அறிய விரும்போமென்று சொல்லி,

யரு சர்வத்துக்கும் வல்லவரை நாம் சேவிக்க அவர் யார்? அவரைநோக்கிச் செபம்பண்ணுவதினால் நமக்குப் பிரயோசனம் என்னவென்கிறார்கள்.

யசு ¶ ஆனால் இதோ அவர்கள் வாழ்வு அவர்கள் கையிலிராது; ஆகாதவர்களின் ஆலோசனை எனக்குத் தூரமாயிருக்கக்கடவது.

யஎ எத்தனை அசுப்பாய் ஆகாதவர்களின் விளக்கு அணைந்து, அவர் தமது கோபத்தினால் வேதனைகளைப் பகிர்ந்துகொடுக்கையில், அவர்கள் ஆபத்து அவர்கள்மேல் வரும்.

யஅ அவர்கள் காற்று முகத்திலிருக்கிற துரும்பைப்போலும், பெருங்காற்றுப் பறக்கடிக்கிற பதரைப்போலும் இருக்கிறார்கள்.

யகூ பராபரன் அவனுடைய அக்கிரமத்தை அவன் பிள்ளைகளுக்கு வைத்துவைக்கிறார்; அவன் உணரத்தக்கவிதமாய் அதை அவனுக்குப் பலிக்கப்பண்ணுகிறார்.

உய தன்னுடைய சங்காரத்தை அவனுடைய கண்கள் காணும், சர்வத்துக்கும் வல்லவருடைய உக்கிரத்தைக் குடிப்பான்.

உக ஏனெனில் அவன் மாதங்களின் தொகை குறுக்கப்படுகையில், அவனுக்குப்பிற்பாடு அவன் வீட்டினால் அவனுக்கிருக்கும் விருப்பமென்ன?

உஉ ¶ உயர்ந்தவர்களை நியாயந்தீர்க்கிற பராபரனுக்கு அறிவு சொல்லப்படலாமோ?

உங ஒருவன் தன் சர்வ சாங்கோபாங்கத்தோடும் சுகத்தோடுமிருந்து குறையற்ற

பெலனுள்ளவனாய்ச் சாகிறான்.

உச அவனுடைய பால்ப்பானைகள் பால் நிரம்பினதும், அவன் எலும்புகளின் ஊன் புஷ்டியுமாயிருந்தன.

உரு பின்னொருவன் சந்தோஷத்தோடே சாப்பிடாதவனாயிருந்து, மனக்கிலேசத்தோடே சாகிறான்.

உசு இருவரும் மண்ணிலே கிடக்கிறார்கள்; பூச்சிகள் அவர்களை மூடிக்கொள்ளும்.

உஎ ¶ இதோ நான் உங்கள் நினைவுகளையும், நீங்கள் எனக்குக் கொடுமையாய்ச் செய்கிற வினைகளையும் அறிவேன்.

உஅ ஏனென்றால், நீங்கள் பிரபுவினுடைய வீடு எங்கே என்றும், ஆகாதவர்கள் வாசம்பண்ணின கூடாரம் எங்கே என்றும் சொல்லுகிறீர்கள்.

உகூ வழியிலே கடந்துபோகிறவர்களை நீங்கள் கேட்டு, அவர்கள் சொல்லும் அடையாளங்களை நீங்கள் அறியவில்லையோ?

௩0 ஏனென்றால் பொல்லாதவன் ஆபத்தின் நாளுக்கென்று வைக்கப்படுகிறான்; அப்படிப்பட்டவர்கள் கோபாக்கினைகளின் நாளுக்கென்று கொண்டுபோகப்படுகிறார்கள்.

௩க அப்படிப்பட்டவனுடைய மார்க்கத்தை அவன் முகத்துக்குமுன்பாகத் தூண்டிக் காண்பிப்பவன் யார்? அவன் செய்ததற்குத்தக்கதை அவனுக்குச் சரிக்கட்டுபவன் யார்?

௩உ அவனோவென்றால் கல்லறைக்குக் கொண்டுவரப்படுகிறான்; அவன் கோரிக்காகப் பராமரிக்கையுமாயிருந்தான்.

௩௩ பள்ளத்தாக்கின் கழுப்பத்தைகள் அவனுக்கு இன்பமாயிருந்து, தனக்குப் பின்னான மனுஷரா எல்லாம் இழுத்துக் கொள்ளுகிறான்; அவனுக்கு முன்னாகப் போனவர்களும் எண்ணிக்கைக்கு அடங்காதவர்கள்.

௩ச இப்போதும் நீங்கள் மாயையான ஆறுதலை எனக்குச் சொல்லுகிறதென்ன? உங்கள் மறுமொழிகளில் உண்மைக்கேடுதான் பிடித்திருக்கிறதென்றான்.

## உஉ. அதிகாரம்.

அப்போது தேமானியனான எலிப்பாஸ் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

உ ஒரு மனுஷன் விவேகியாயிருந்து, தனக்குத்தான் பிரயோசனமாயிருக்கிறதினால் பராபரனுக்குப் பிரயோசனமாயிருப்பானோ?

௩ நீர் உம்மை நீதிமானாக்குகிறது சர்வத்துக்கும் வல்லவருக்கு விருப்பமாயிருக்குமோ? நீர் உம்முடைய வழிகளை உத்தமமென்று எண்ணுகிறது ஆதாயமாயிருக்குமோ?

ச அவர் உமக்குப் பயப்படுகிறதினால் உம்மோடே வழக்காடி, உம்மோடே நியாயத்துக்கு வருவாரோ?

ரு உம்முடைய பொல்லாப்புப் பெரியதும், உம்முடைய அக்கிரமங்கள் முடிவில்லாதவைகளுமாய் இருக்கின்றனவல்லவோ?

சு ஏனென்றால் முகாந்தரமில்லாமல் உம்முடைய சகோதரர் கையில் அடகுவாங்கி, அம்மணமானவர்களின் வஸ்திரங்களைப் பறித்துக்கொண்டீர்?

எ விடாய்த்தவனுக்குத் தாகத்துக்குத் தண்ணீர் வாராமலும், பசியாயிருக்கிறவனுக்கு அப்பம்கொடாமலும் போனீர்.

அ பெலத்தவனுக்கே சீமையில் இடமுண்டாயிற்று; முகத்தாட்சிணியமாய்ப் பார்க்கப்பட்டவன் அதில் குடியிருந்தான்.

கூ விதவைகளை வெறுமையே அனுப்பிவிட்டீர்; தாய் தகப்பன் இல்லாதவர்களின் புயங்கள் முறிக்கப்பட்டன.

௰ ஆகையால் உம்மைச் சுற்றிலும் கருக்குகள் போடப்பட்டு, அசுப்பிலே உமக்கு வந்த பயங்கரம், அல்லவென்று நீர் பார்க்கக்கூடாதபடிக்கு இருளும் உம்மைக் கலங்கப்பண்ணி,

௰க சலப்பிரளயம் உம்மை மூடுகிறது.

௰உ ¶ பராபரன் பரமண்டலங்களின்

உயரத்திலிருக்கிறாரல்லவோ? நட்சத்திரங்கள் எத்தனை உயரமென்று அவைகளின் உயரத்தைப் பாரும்.

௰௩ ஆனால் நீர், பராபரன் அறிகிறதேது, அந்தகாரத்துக்குள் இருக்கிறதை நியாயம் தீர்ப்பாரோவென்றும்,

௰௪ அவர் பாராதபடிக்கு மேகங்கள் அவருக்கு மறைவிடமாயிருக்கின்றன, பரமண்டலங்களின் சக்கரத்திலே அவர் உலாவுகிறாரென்றும் சொல்லுகிறீர்.

௰௫ அக்கிரம மாந்தர் பூர்வத்தில் நடந்த மார்க்கத்தைக் கைக்கொள்ளுவீரோ?

௰௬ காலம் வராததற்குமுன்னே அவர்கள் வாடிப்போனார்கள்; அவர்களுடைய அஸ்திபாரத்தின்மேலே வெள்ளம் புரண்டது.

௰௭ பராபரன் அவர்கள் வீடுகளை நன்மையால் நிரப்பியிருந்தாலும், அவர்கள் அவருக்கு எங்களை விட்டுவிலகும், சர்வத்துக்கும் வல்லவர் தங்களுக்கு என்னசெய்வாரென்றார்கள்.

௰௮ ஆகையால் துன்மார்க்கரின் ஆலோசனை எனக்குத் தூரமாயிருப்பதாக.

௰௯ எங்கள் நிலை நிர்மூலமாகாமல், அவர்களுக்கு மீதியானதையோ அக்கினி பட்சித்ததென்பதை நீதிமான்கள் கண்டு சந்தோஷப்படுகிறார்கள்.

௨௰ குற்றமில்லாதவன் அவர்களை நகைக்கிறான்.

௨௧ ¶ நீர் அவரோடே பழக்கம்பண்ணிக்கொண்டு, சமாதானமாகுமே; இதினால் நன்மை உமக்கு வரும்.

௨௨ அவருடைய வாக்கின் நியாயப்பிரமாணத்தை ஏற்றுக்கொண்டு, அவர் வார்த்தைகளை உம்முடைய இருதயத்தில் தரித்துக்கொள்ளுமே.

௨௩ நீர் சர்வத்துக்கும் வல்லவரண்டைக்கு மனந்திரும்பினால், திரும்பக் கட்டப்படுவீர்; நீர் அக்கிரமத்தை உமது கூடாரத்துக்குத் தூரமாக்கினால்,

௨௪ அப்போது பொன்னைத் தூளைப்போலும், ஓப்பீரின் தங்கத்தை ஆற்றுக்கல்லுகளைப்போலும் சேர்த்துவைப்பீர்.

௨௫ அப்போது சர்வத்துக்கும் வல்லவர் தாமே உம்முடைய அபரஞ்சிப்பொன்னும், உமக்குச் சொக்கவெள்ளியுமாயிருப்பார்.

௨௬ ஏனென்றால் அப்போது சர்வத்துக்கும் வல்லவர்மேலே மனமகிழ்ச்சியாயிருந்து, பராபரனுக்கு நேராக உம்முடைய முகத்தை ஏறெடுப்பீர்.

௨௭ நீர் அவரைநோக்கி விண்ணப்பம்பண்ண அவர் உம்மைக் கேட்பார்; அப்போது உம்முடைய பொருத்தனைகளைச் செலுத்துவீர்.

௨௮ அப்போது நீர் ஒரு காரியத்தை நிருணயம்பண்ணினால், அது உமக்கு நிலைவரப்படும், அப்போது உம்முடைய வழிகளில் வெளிச்சம் பிரகாசிக்கும்.

௨௯ மனுஷர் ஒருவனை ஒடுக்குகையில், நீர் அவன் உயர்த்தப்படக்கடவானென்றால், அவர் முனையற்றுப்போனவனை இரட்சிப்பார்.

௩௰ குற்றமற்றிராதவனையுங்கூடத் தப்புவிப்பார், உம்முடைய கைகளின் சுத்தத்தின்நிமித்தம் அவன் தப்பிப்போவானென்றான்.

## உ௩ அதிகாரம்.

யோபு பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ இந்நாள்மட்டும் என்னுடைய அங்கலாய்ப்பு முண்டித்தனமாக எண்ணப்படும்; என்னுடைய வாதை என் தவிப்பைப் பார்க்கிலும் கடினமானது.

௩ நான் அவரை எங்கே கண்டு சந்திக்கலாமென்பதை அறிந்தால் தாவிலை; அப்போது நான் அவர் ஆசனத்துக்குமுன்பாக வந்துசேர்ந்து,

௪ நியாயத்தை அவருக்குமுன்பாக வரிசையாய் வைத்து, காரியத்தை ரூபிக்கும் வார்த்தைகளால் என் வாயை நிரப்புவேன்.

௫ அவருடைய மொழிகளை அறிந்து,

எனக்கு என்ன சொல்வாரென்பதை உணர்ந்துகொள்ளுவேன்.

சு அவர் தம்முடைய மகா வல்லமையின்படியே என்னோடே வழக்காடுவாரோ? அவர் அப்படிச் செய்யாமல் என்மேலே தயைவைப்பார்.

எ செம்மைமார்க்கத்தான் அங்கே அவரோடே நியாயம்பார்த்துக்கொள்ளலாம், ஆனதுகொண்டு என்னை நியாயம்தீர்க்கிறவரின் கைக்கு என்றைக்கும் நீங்கலாய்த் தப்புவித்துக்கொள்ளுவேன்.

அ இதோ நான் முன்னாகப்போனாலும் அவர் இல்லை; பின்னாகப்போனாலும் அவரை உணரேன்.

கூ இடதுபுறத்திலும் அவர் செயலைக் காணேன்; வலதுபுறத்திலும் நான் அவரைப் பாராதபடிக்கு ஒளித்திருக்கிறார்.

ம ஆனால் என்னிடத்திலிருக்கிற மார்க்கத்தை அறிவார்; அவர் என்னைச் சோதிக்கையில் பொன்னாக விளங்கிப்போவேன்.

மக என் கால்கள் அவர் அடிகளைப் பற்றிப் பிடித்தன; அவருடைய நெறியை நான் சாயாமல் கைக்கொண்டேன்.

மஉ அவர் உதடுகளின் கற்பனைகளை நான் விட்டுப் பின்வாங்கினதில்லை; அவருடைய வாயின் வார்த்தைகளை என் அப்பத்தைப் பார்க்கிலும் காத்துக்கொண்டேன்.

மங ¶ அவரோவென்றால் ஒரே நிலைமையாயிருக்கிறார்; அவரைத் திருப்பப்போகிறவர் யார்? அவருடைய சித்தம் வேண்டுமென்றிருக்கிறதை அவர் செய்வார்.

மச எனக்குக் குறித்திருக்கிறதை நிறைவேற்றுவார்; இதைப்போல ஒத்தவைகள் இன்னம் அவரிடத்தில் வெகுவாக இருக்கின்றன.

மரு ஆகையால் அவருக்குமுன்பாகக் கலங்குகிறேன்; அதை நான் தியானிக்கிறபோது, அவருக்குப் பயப்படுகிறேன்.

மசு ஏனெனில் பராபரன் இருதயத்தை இளக்கரிக்கப்பண்ணினார்; சர்வத்துக்கும் வல்லவர் என்னைக் கலங்கப்பண்ணினார்.

மஎ அந்தகாரம் வராததற்குமுன்னே நான் சங்கரிக்கப்படாமலும், இருளை அவர் எனக்கு மறைக்காமலும் போனதினாலேதானே.

## உச. அதிகாரம்.

சர்வத்துக்கும் வல்லவரை அறிந்திருக்கிறவர்கள் அவர் கட்டளையிடுகிற நன்னாள்களைக் காணாதபடிக்கு, அப்படிக்கொத்த காலங்கள் அவரால் அடக்கப்படாதே போனதென்ன?

உ எல்லைகளை ஓற்றி, மந்தைகளைப் பறித்துக்கொண்டு மேய்த்து,

ங தாய்தகப்பன் இல்லாதவர்களின் கழுதையை ஓட்டிக்கொண்டுபோய், விதவையின் எருதை அடகாக வாங்கி,

ச தேசத்தில் சிறுமையானவர்கள் ஏகமாய் ஒளித்துக்கொள்ளத்தக்கவிதமாக, எளியவர்களை வழியைவிட்டு விலக்குகிறார்கள்.

ரு ஆகையால் இதோ இவர்கள் காட்டுக் கழுதைகளைப்போல, இரைதேட அதிகாலமே தங்கள் வேலைக்குப் புறப்படுகிறார்கள்; அந்தரவெளியானது அவர்களுக்கு அவர்கள் பிள்ளைகளுக்காக ஆகாரம் கொடுக்க வேண்டும்.

சு வயலில் இவர்கள் அவனுக்கு அவனுடைய பயிரை அறுத்து, துன்மார்க்கனுக்கு அவன் திராட்சத்தோட்டத்தின் பழங்களைச் சேர்த்து,

எ குளிரிலே மூடிக்கொள்ளுகிறதற்கு இல்லாததினால், உடுப்பு அற்ற அம்மணமாய் இராத்தங்கி,

அ மலைகளிலிருந்து ஓடிவருகிற தண்ணீரிலே நனைந்து, ஒதுக்கில்லாததினால் கன்மலையை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.

கூ ¶ அவர்களோ தகப்பனில்லாத பிள்ளையை முலையைவிட்டுப் பறித்து, தரித்திரன் போர்த்துக்கொண்டிருக்கிறதை அடகுவாங்குகிறார்கள்.

ம அவனை உடுப்பில்லாத அம்மணமாக நடக்கவும், பட்டினியாக அரிக்கட்டுகளைச் சுமக்கவும்,

௰௧ தங்கள் மதில்களுக்குள்ளே செக்காடவும், தாகத்தவனமாய் ஆலையாடவும் பண்ணுகிறார்கள்.

௰௨ ஊரில் மனுஷர் தவித்து, குற்றுயிருள்ளவர்களின் ஆத்துமம் கூப்பிடும் என்றாலும், பராபரன் அதை அடாதகாரியமாக அவர்கள்மேல் சுமத்துகிறதில்லை.

௰௩ ¶ அவர்கள் வெளிச்சத்துக்கு விரோதம்பண்ணுகிறவர்களின் கூட்டத்தார், அவர்கள் அவருடைய வழிகளை அறியாமலும், அவருடைய பாதைகளில் தரிக்காமலும் இருக்கிறார்கள்.

௰௪ கொலைபாதகன் பொழுதுவிடிகிறபோது எழுந்து, சிறுமையும் எளிமையுமானவனைக் கொன்று, இராக்காலத்திலே திருடனைப்போலிருக்கிறான்.

௰௫ விபசாரனுடைய கண் மாலைமயங்குகிறவேளைக்குக் காத்திருந்து, ஒரு கண்ணும் என்னைப் பார்ப்பதில்லையென்று முக்காடுபோட்டுக்கொள்ளுகிறான்.

௰௬ அவர்கள் பகலில் அடையாளம் பார்த்த வீடுகளை இருட்டிலே கன்னமிட்டு, வெளிச்சத்தை அறியாதிருக்கிறார்கள்.

௰௭ ஏனெனில் விடியுங்காலம்கூட அவர்களுக்கு மரண நிழலாயிருக்கிறது; அதேனென்றால் அப்படிப்பட்டவன் மரணநிழலின் பயங்கரத்லதை உணருகிறான்.

௰௮ நீரோட்டத்தைப்போல, தீவிரமாகப் போவான்; தேசத்தில் அவன் பங்கு சபிக்கப்பட்டுப்போகிறதினால், அவன் திராட்சத்தோட்டங்களின் வழிக்கு இனி முகம்திருப்பமாட்டாதிருப்பான்.

௰௯ ¶ வரட்சியும் உஷ்ணமும் உறைந்த மழையின் தண்ணீரையும், பாதாளமானது பாவிகளையும், அற்றுப்போகப்பண்ணுகின்றன.

௨௰ அவனைப் பெற்ற கெர்ப்பம் அவனை மறக்கும்; புழுப்புழுப்பாகிறது அவனுக்கு இன்பமாகும்; அவன் அப்புறம் நினைக்கப்படுவதில்லை; அக்கிரமமானது சொத்தை மரத்தைப்போல முறிந்துவிழும்.

௨௧ ¶ பிள்ளைபெறாத மலடியின் ஆஸ்தியை மேய்ந்துவிட்டு, விதவைக்கு நன்மைசெய்யாதேபோனான்.

௨௨ தன் பெலத்தினாலே வல்லவர்களைத் தன் பாரிசமாக்கி எழும்பியும், பிராணன் அவனுக்கு நிசமல்ல.

௨௩ பராபரன் அவனுக்குச் சுகசீவனைக் கட்டளையிட்டால், அதின்மேலே கெட்டியாய் நம்பிக்கைவைக்கிறான்; ஆனால் அவருடைய கண்கள் அப்படிப்பட்டவர்களின் வழிகளுக்கு விரோதமாயிருக்கின்றன.

௨௪ அவர்கள் கொஞ்சக்காலம் உயர்ந்திருந்து, காணாமல்போய், தாழ்த்தப்பட்டு, மற்ற எல்லாரைப்போலும் அடக்கப்படுகிறார்கள்; கதிர்களின் முனையைப்போல அறுக்கப்படுகிறார்கள்.

௨௫ அப்படியில்லையோ? என்னைப் பொய்க்காரனாக்கி, என் வார்த்தைகளை ஒன்றுமில்லாததாக்கப் போக்குகிறவன் யாரென்றான்.

## ௨௫. அதிகாரம்.

அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ ஆளுகையும் பயங்கரமும் அவரிடத்தில் இருக்கின்றன, அவர் தமது உன்னதமான ஸ்தலங்களில் சமாதானம் உண்டாக்குகிறார்.

௩ அவருடைய இராணுவங்களுக்குத் தொகையுண்டோ? அவருடைய வெளிச்சம் யார்மேலே உதிக்காதிருக்கிறது?

௪ இப்படியிருக்கையில், மனுஷன் பராபரனுக்கு முன்பாக நீதிமானாயிருப்பது எப்படி? ஸ்திரியினிடத்தில் பிறந்தவன் சுத்தமாயிருப்பது எப்படி?

௫ சந்திரனை அண்ணாந்துபாரும், அதுவும் பிரகாசமற்றது, நட்சத்திரங்களும் அவர் பார்வைக்குச் சுத்தமற்றவைகள்.

௬ புழுவாயிருக்கிற மனிதனும், பூச்சியாயிருக்கிற மனுப்புத்திரனும் எத்தனை அதிகமென்றான்.

## உசு. அதிகாரம்.

யோபோவென்றால் மறுமொழிகொடுத்துச் சொன்னதாவது:

உ திடனில்லாதவனுக்கு எப்படி ஒத்தாசைபண்ணினாய்? பெலனற்ற கைப்பட்டையை எப்படி ஆதரித்தாய்?

௩ நீ ஞானமில்லாதவனுக்கு எப்படி உசாவுதலையாயிருந்து, மெய்ஞ்ஞானத்தைப் பரிபூரணமாய் அறிவித்தாய்?

௪ யாருக்கு அறிவு சொன்னாய்? உன்னிலிருந்து புறப்பட்ட ஆவி யாருடையது?

௫ ¶ சலத்தின்கீழ் மடிந்த இராட்சதருக்கும், அவர்களிடத்திலே கூடத் தங்குகிறவர்களுக்கும் தத்தளிப்புண்டு.

௬ அவருக்குமுன்பாகப் பாதாளம் வெளியாய்த் திறந்ததும் நரகம் மூடப்படாததுமாயிருக்கின்றன.

எ அவர் வடக்கை வெறுமையின்மேலே விரித்து, பூமியை அந்தரத்திலே தொங்கவைக்கிறார்.

அ அவர் தண்ணீர்களைத் தம்முடைய மேகங்களிலே கட்டிவைக்கிறார், அவைகளின் கீழ் மேகம் கிழிகிறதுமில்லை.

௯ அவர் தம்முடைய ஆசனம் நிற்கிற ஆகாசத்தைக் கெட்டியாயிருக்கப்பண்ணி, அதின்மேலே தம்முடைய மேகத்தை விரிக்கிறார்.

௰ அவர் தண்ணீர்கள்மேலெல்லாம் சக்கரவட்டம் தீர்ந்தார்; வெளிச்சமும் இருளும் முடியும்மட்டும், அப்படியிருக்கத்தானே.

௰௧ அவருடைய உதம்புதலினால் வானத்தின் தூண்கள் அதிர்ந்து தத்தளிக்கும்.

௰௨ தம்முடைய வல்லமையினாலே சமுத்திரத்தைப் பிளந்து, தம்முடைய உணர்வினால் அதின் மூர்க்கத்தை நொறுக்குகிறார்.

௰௩ தம்முடைய ஆவியினாலே வானத்தை அலங்கரித்தார்; அவருடைய கரம் நீளமான சர்ப்பத்தை உருவாக்கிற்று.

௰௪ இதோ இவைகள் அவருடைய வழிகளின் கடைமுனிகள், நாங்கள் அவரைக் குறித்துக் கேட்ட வார்த்தை எத்தனை போதாததாயிருக்கின்றது; அவருடைய வல்லமையின் இடிமுழக்கம் இன்னதென்று அறிந்தவன் யாரென்றான்.

## உஎ. அதிகாரம்.

யோபு பின்னையும் தன் வாக்கியங்களை எடுத்துப்பேசிச் சொன்னதாவது:

உ என்னுடைய சுவாசம் என்னிலும் பராபரனுடைய ஆவி என் மூக்கிலும் இருக்கும்மட்டும்,

௩ என் உதடுகள் அக்கிரமம் சொல்வதுமில்லை, என் நாக்கு கபட்டை உரைப்பதுமில்லையென்று,

௪ என்னுடைய நியாயத்தை விலக்குகிற பராபரனும் என் ஆத்துமத்தைக் கசப்பாக்குகிற சர்வவல்லவருமானவருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.

௫ நீங்கள் பேசுகிறது நீதியென்று நான் ஒத்துக்கொள்வது எனக்குத் தூரமாயிருப்பதாக; என் ஆவி பிரியும்மட்டும் என் உத்தமத்தை என்னைவிட்டு விலக்கேன்.

௬ என் நீதியைக் கெட்டியாய்ப் பிடிக்கிறேன்; அதை நான் விட்டுவிடேன்; என் நாள்களைக்குறித்து என் இருதயம் என்னை நிந்திக்காது.

எ என் பகைஞன் ஆகாதவனைப்போலும், எனக்கு விரோதமாய் எழும்புகிறவன் அக்கிரமக்காரனைப்போலும் இருப்பானாக.

அ ¶ ஏனெனில் மாயக்காரன் பொருளைத் தேடிவைத்திருந்தாலும், பராபரன் அவன் ஆத்துமத்தைப் பறிக்கும்போது, அவனுடைய நம்பிக்கையென்ன?

௯ நிர்ப்பந்தம் அவன்மேல் வரும்போது, பராபரன் அவன் கூப்பிடுதலைக் கேட்பாரோ?

௰ அவன் சர்வத்துக்கும் வல்லவர்மேலே மனமகிழ்ச்சியாயிருப்பானோ? அவன் சகல காலத்திலும் பராபரனைத் தொழுதுகொண்டிருப்பானோ?

௰௧ ¶ பராபரனுடைய கரத்தைக்குறித்து உங்களை உபதேசிப்பேன்; சர்வத்துக்கும் வல்லவரிடத்தில் இருக்கிறதை நான் மறைப்பதில்லை.

௰௨ இதோ நீங்களெல்லாரும் அதைக் கண்டிருந்தும் நீங்கள் இத்தனை வீண் நினைவாயிருக்கிறதென்ன?

௰௩ பொல்லாத மனுஷனுக்குப் பராபரனிடத்திலிருந்து வருகிற பங்கும், கொடூரக்காரர் சர்வத்துக்கும் வல்லவரால் அடைகிற சுதந்தரமும் என்னவெனில்,

௰௪ அவனுடைய குமாரர் பெருகினால் பட்டையத்துக்கு இரையாகத்தானே, அவன் கெர்ப்பத்தின் பிறப்புகள் அப்பத்தினாலே திருப்தியாவதில்லை.

௰௫ அவனுக்கு மீதியானவர்கள் செத்துப் புதைக்கப்படுவார்கள்; அவனுடைய விதவைகள் புலம்புவதுமில்லை.

௰௬ அவன் மண்ணத்தனை வெள்ளியைக் குவித்துக்கொண்டாலும், களிமண்ணத்தனை வஸ்திரங்களைச் சவதரித்தாலும்,

௰௭ அவன் அதைச் சவதரித்தான், ஆனால் நீதிமான் அவைகளை உடுத்திக்கொண்டு, குற்றமில்லாதவன் வெள்ளியைப் பங்கிடுவான்.

௰௮ அவனுடைய வீடு செல்லுக்கட்டினதுபோலும், காவல்காக்கிறவன் போட்ட குடிசையைப்போலுமாகும்.

௰௯ அவன் ஐசுவரியவானாய்த் *தூங்கிக்கிடந்து, ஒன்றும் பறிகொடாதேபோனாலும், அவன் தன் கண்களைத் திறக்கும்போது ஒன்றுமில்லாதிருக்கும்.

௨௰ திகில்கள் வெள்ளத்தைப்போல அவனைப் பிடிக்கும், இராக்காலத்திலே பெருங்காற்று அவனை வாரிக்கொண்டுபோகும்.

௨௧ கொண்டல்காற்று அவனைத் தூக்கிக் கொள்ளுகையால் போய்விடுவான்; அது அவனை அவன் தலத்திலிருந்து தள்ளிக் கொண்டுபோகும்.

௨௨ அவர் இவைகளை அவன்மேல் வரப்பண்ணி, அவனைத் தப்பவிடாதிருப்பார்; அவர் கைக்குத் தப்ப ஓடிப்போவான்.

௨௩ அவன்மேல் கைகொட்டி, அவனை அவன் தலத்தைவிட்டு உசுப்புவார்கள்.

## ௨௮. அதிகாரம்.

வெள்ளிக்குப் பிறப்புண்டே, பொன்னுக்குப் புடமிடும் தலமுமுண்டு.

௨ இரும்பு மண்ணிலிருந்து எடுக்கப்படும்; வெண்கலம் கல்லுகளால் உருக்கி எடுக்கப்படும்.

௩ காரிருளிலும் மரணநிழலிலும் இருக்கிற கல்லுகளைக் கடையாந்தர இடங்களிலெல்லாம் ஆராய்ந்து தேட, இருளுக்கு அங்கே முடிவுண்டாக்கப்படும்.

௪ பாட்டாளியண்டையில் அவன் தாண்டமாட்டாத நிலையாத ஆறு எழும்பினாலும், அது வற்றப்பண்ண மனுஷரால் எடுத்துவிடப்பட்டுப்போகும்.

௫ பூமியிலோவென்றால் ஆகாரம் விளையும்; அதின் கீழ்இடங்களிலிருக்கிறவைகள், அக்கினியாலாகுவதுபோல மாறப்பட்டுப் போகின்றன.

௬ அதின் கல்லுகள் நீலக்கல்லுகளின் இடமாயிருக்கும்; அதற்குப் பொன்பொடிகளும் உண்டாயிருக்கும்.

௭ ஒரு பட்சியும் அறியாததும், வல்லூறின் கண் காணாததும்,

௮ துஷ்டமிருகக்குட்டிகள் மிதிக்காததும், சிங்கம் கடவாததுமான வழி அதற்கு இருக்கிறது.

௯ தங்கள் கைகளைக் கல்பாறையின்மேல் நீட்டி, மலைகளை வேரோடே புரட்டுகிறார்கள்.

௰ கல்மலைகளைப் பிளந்து, நீர்க்கால்களைப் புறப்படப்பண்ணுகிறார்கள்; அவர்கள் கண் விலையுயர்ந்ததெல்லாவற்றையும் பார்க்கிறது.

௰௧ ஒரு துளியும் புறப்படாதபடிக்கு ஆறுகளை அடைக்கிறார்கள்; ஒளிப்பிடத்திலிருக்கிறதை வெளிச்சத்திலே கொண்டுவருகிறார்கள்.

௰உ ¶ ஆனால் ஞானம் கண்டெடுக்கப்படு வதெங்கே? உணர்வு கிடைக்கிற ஸ்தலம் ஏது?

௰௩ அதின் விலையை மனுஷன் அறியான்; அது சீவனுள்ளோருடைய பூமியிலே அகப்படுகிறதில்லை.

௰௪ ஆழமானது, அது என்னிலில்லையென்கிறது, சமுத்திரமானது, அது என்னோடில்லையென்கிறது.

௰௫ அதற்கு இடாக அபரஞ்சியைக் கொடுக்கவும், அதற்குக் கிரயமாக வெள்ளியை நிறுக்கவும் கூடாது.

௰௬ ஓப்பீரின் தங்கமும், விலையேறப்பெற்ற கோமேதகமும், பச்சையும் அதற்கு இடல்ல.

௰௭ பொன்னும் பளிங்கும் அதற்கு ஒப்பல்ல; சுத்தப்பொன்னாபரணங்களுக்கு அதை மாற்றக்கூடாது.

௰௮ பவளத்தையும் முத்துகளையும் நினைக்கப்படாது; ஏனெனில் முத்துகளைப்பார்க்கிலும் ஞானத்தின் விலை அதிகமானது.

௰௯ எத்தியோப்பியாவின் புஷ்பராகம் அதற்கு ஒப்பல்ல; அபரஞ்சிப் பொன்னும் அதற்குச் சரிவிலை அல்ல.

உ௰ ¶ இப்படியிருக்கையில் ஞானம் எங்கே இருந்துவரும்; உணர்வு தங்கும் இடம் ஏது.

உக ஏனெனில் அது சீவனுள்ளோர் எல்லாருடைய கண்களுக்கும் ஒளித்ததும், ஆகாசத்துப் பறவைகளுக்கு மறைந்ததுமாயிருக்கின்றது.

உஉ அழிவும் மரணமும், நாங்கள் எங்கள் காதுகளினாலேமாத்திரம் அதின் கீர்த்தியை கேட்டோமென்கின்றன.

உ௩ ¶ அதின் வழியைப் பராபரன் அறிவார்; அதின் ஸ்தலம் அவருக்கே தெரியும்.

உ௪ ஏனெனில் அவர் பூமியின் கடையாந்தரங்களைப் பார்த்து, எல்லா வானங்களின் கீழும் இருக்கிறதைக் கண்டு,

உ௫ காற்றுக்குத்தக்கநிறையைஉண்டாக்கி, தண்ணீர்களுக்கு அளவுப்பிரமாணமிட்டு,

உ௬ மழைக்குத் திட்டத்தையும், இடிமுழக்கங்களோடே கூடிய மின்னலுக்கு வழியையும், உண்டாக்குகையில்,

உ௭ அப்போது அவர் அதைப்பார்த்து விவரித்து, அதை ஆயத்தப்படுத்தி, ஆய்ந்தோய்ந்து பார்த்து,

உ௮ மனுஷனுடனே, இதோ ஆண்டவருக்குப் பயப்படுகிறதே ஞானம், பொல்லாப்பை விட்டு விலகுகிறதே உணர்வென்றாரென்று சொன்னான்.

## உ௯. அதிகாரம்.

பின்னையும் யோபு தன் வாக்கியத்தை உரைத்துச் சொன்னதாவது:

உ பராபரனுடைய தீபம் என் சிரசின் மேல் பிரகாசிக்கிறதினால், நான் அவர் வெளிச்சத்தினால் இருளைத் தாண்டிவந்த பூர்வ மாதங்களிலும்,

௩ அவர் என்னைக் காப்பாற்றிவந்த நாள்களிலும், எனக்கிருந்த சீரை எனக்குக் கொடுப்பவன் யார்?

௪ பராபரனுடைய இரகசியச்செயல் என் கூடாரத்தின்மேல் உண்டாகி,

௫ சர்வத்துக்கும் வல்லவர் இன்னம் என்னோடிருந்ததும், என் பணிவிடைக்காரர் என்னைச் சூழ்ந்திருந்ததும்,

௬ என் அடிகளை நான் நெய்யினால் கழுவி, எனக்கடுத்த கல்மலைகளிலிருந்து எண்ணெய் நதிகள் ஓடிவந்ததும்,

௭ ¶ நான் பட்டணவீதியால் வாசலுக்குப் புறப்பட்டுப்போய், வீதியில் என் ஆசனத்தைப் போடுவித்ததுமான என் செல்வத்தின்நாள்களில் எனக்கிருந்த சீரை எனக்குக் கொடுப்பவன் யார்?

௮ அப்போது வாலிபர் என்னைக் கண்டு ஒளித்துக்கொண்டார்கள், விருத்தாப்பியர் எழுந்திருந்து நின்றார்கள்.

௯ பிரபுக்கள் பேசாதிருந்து, கையினால் தங்கள் வாயைப் பொத்திக்கொண்டார்கள்.

௰ பெரிய மனுஷரின் சத்தம் அடங்கி, அவர்கள் நாக்கு அவர்கள் மேல்வாயில்

ஒட்டிக்கொண்டது.

௰௧ என்னைக் கேட்ட காது என்னைப் பாக்கியவானென்றது; என்னைக் கண்ட கண் எனக்குச் சாட்சியிட்டது.

௰௨ ஏனெனில் கூப்பிடுகிற சிறுமையானவனையும், திக்கும் ஒத்தாசையும் இல்லாதவனையும் விடுவித்தேன்.

௰௩ கெட்டுப்போகப் போகிறவனுடைய ஆசீர்வாதம் என்மேல் வந்தது; விதவையின் இருதயத்தைக் கெம்பீரிக்கப்பண்ணினேன்.

௰௪ நீதியைத் தரித்துக்கொண்டேன்; அது என்னுடைய உடுப்பாயிற்று; என்னுடைய நியாயம் எனக்குச் சால்வையும் பாகையுமாயிற்று.

௰௫ நான் குருடனுக்குக் கண்களும், சப்பாணிக்குக் கால்களுமாயிருந்தேன்.

௰௬ நான் எளியவர்களுக்குத் தகப்பனாயிருந்து, நான் அறியாத வழக்கை ஆராய்ந்தேன்.

௰௭ நான் அநியாயக்காரருடைய கடைவாய்ப்பல்லுகளை உடைத்து, அவர்கள் பறித்ததை அவர்கள் பல்லுகளிலிருந்து பிடுங்கினேன்.

௰௮ என் கூட்டோடே நான் சிவிப்பேன், என் நாட்களை மணல் அத்தனையாய்ப் பெருகப்பண்ணுவேனென்றேன்.

௰௯ என்னுடைய வேர் தண்ணீர்களின் ஓரமாய்ப் படர்ந்தது; பனி என் பயிரின்மேலே இராத்தங்கியிருந்தது.

௨௰ என் மகிமை என்னில் புதிதாகி, என் கையிலுள்ள என் வில் நவமாய்ப் பலத்துக்கொண்டது.

௨௰௧ ¶ எனக்குச் செவிகொடுத்துக் காத்திருந்தார்கள்; என் ஆலோசனையைக் கேட்டு, மவுனமாயிருந்தார்கள்.

௨௰௨ என் பேச்சுக்கு இரட்டிக்காதிருந்தார்கள்; என் வசனம் அவர்கள்மேல் துளிதுளியாய் விழுந்தது.

௨௰௩ ஏனென்றால் மழைக்குக் காத்திருக்கிறதுபோல, எனக்குக் காத்திருந்து, பின்மாரிக்கு ஆசையுள்ளவர்கள்போலத் தங்கள் வாயை ஆவென்று திறந்திருந்தார்கள்.

௨௰௪ நான் அவர்களைப்பார்த்து நகைக்கும்போது, அவர்கள் நம்பாமலும், என் முகத்தின் பிரகாசத்தை அற்றுப்போகப்பண்ணாமலும் இருந்தார்கள்.

௨௰௫ அவர்கள் வழிக்குப்போக எனக்குச் சித்தமாகும்போது, நான் தலைவனாய் உளுக்காந்து, இராணுவத்துக்குள் இராசாவைப்போலும் துக்கித்தவர்களைத் தேற்றரவுபண்ணுகிறவனைப்போலுமிருந்தேன்.

## ௩௰. அதிகாரம்.

இப்போதோவெனில் என்னிலும் இளவயதானவர்கள் என்னை நகைக்கிறார்கள்; இப்படிப்பட்டவர்களுடைய பிதாக்களை நான் என் மந்தையிலிருக்கிற நாய்களண்டையில் வைக்க அசட்டைபண்ணினேன்.

௨ விருத்தாப்பியத்தினாலே கெட்டுப்போன அவர்கள் கைகளின் பெலனும் எனக்கு என்ன உதவியாயிருக்கும்.

௩ குறைச்சலினாலும் பசியினாலும் அவர்கள் தனித்துவிடப்பட்டு, வெகுநாளாய்ப் பாழும் வெறுமையுமான அந்தரவெளிக்கு ஓடிப்போய்,

௪ செடிகளுக்குள்ளிருக்கிற தழைகளைப் பிடுங்குவார்கள்; காட்டுப்பூண்டுகளின் கிழங்குகள் அவர்களுக்கு ஆகாரமாயிருக்கும்.

௫ அவர்கள் மனுஷரின் நடுவிலிருந்து துரத்தப்படுவார்கள்; கள்ளன் பிறகே கூப்பிடுமாப்போல, அவர்கள்பிறகே கூப்பிடப்படும்.

௬ பள்ளத்தாக்குகளின் வெடிப்புகளிலும், பூமியின் கெபிகளிலும், கல்மலைகளிலும் குடியிருக்கிறார்கள்.

௭ செடிகளுக்குள்ளிருந்து கதறி, காஞ்சொறிகளின்கீழ் கூடுவார்கள்.

௮ அவர்கள் மூடரின் பிள்ளைகளும், அபகீர்த்திக்காரரும், தேசத்திலிருந்து துரத்தப்படுகிறவர்களுமாயிருக்கிறார்கள்.

௯ ஆனால் இப்போது நான் அவர்கள் பாட்டும் பழமொழியுமானேன்.

௰ என்னை அருவருத்து, எனக்குத் தூரமாகி, என் முகத்துக்குமுன்பாகத் துப்பக் கூசாதிருக்கிறார்கள்.

௰௧ ஏனெனில் அவர் என் கயிற்றை அவிழ்த்து, என்னைச் சிறுமைப்படுத்தினபடியினாலே, இவர்கள் கடிவாளத்தை என் முகத்துக்குமுன்பாக உதறிவிட்டார்கள்.

௰௨ வலதுபாரிசத்தில் வாலிபர் எழும்பி, என் கால்களை வாரிப்போட்டு, தங்கள் கேடானவழிகளை எனக்கு நேராக ஆயத்தப்படுத்துகிறார்கள்.

௰௩ என் பாதையைத் தகர்த்து, எனக்கு ஆபத்து நடத்துகிறார்கள்; அதற்கு அவர்களுக்கு ஒத்தாசைபண்ணுகிற பெலன் தேவையில்லை.

௰௪ பெரிதான திறப்புண்டாக்கிக் கிட்டி, தாங்கள் தகர்த்தவழியால் உட்புகுந்து வருகிறார்கள்.

௰௫ பயங்கரங்கள் என்மேல் திரும்புகின்றன; அவைகள் காற்றைப்போல, என் ஆத்துமத்தைப் பின்தொடர்கின்றன; என் சுகவாழ்வு ஒரு மேகத்தைப்போலக் கடந்துபோயிற்று.

௰௬ ¶ ஆகையால் இப்போது என் ஆத்துமம் என்னில் சிந்துண்டுபோயிற்று; உபத்திரவத்தின் நாள்கள் என்னைப் பிடித்தன.

௰௭ இராக்காலத்திலே என் எலும்புகள் என்னில் துளைக்கப்பட்டு, என் நரம்புகளுக்கு இளைப்பாறுதல் இல்லாதிருக்கிறது.

௰௮ நோயின் உக்கிரத்தினால் என் உடுப்பு வேறுபட்டுப்போயிற்று; அது என் அங்கியின் கழுத்துப் பட்டையைப்போல, என்னைச் சுற்றிக்கொண்டது.

௰௯ சேற்றிலே தள்ளப்பட்டேன்; தூளுக்கும் சாம்பலுக்கும் ஒத்துப்போனேன்.

௨௰ உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; ஆனால் தேவரீர் எனக்கு மறுவுத்தரவுகொடீர்; கெஞ்சி நிற்கிறேன், ஆனால் என்மேல் பராமுகமாயிருக்கிறீர்.

௨௧ என்மேலே கொடூரமுள்ளவராக மாறினீர்; உம்முடைய கரத்தின் வல்லமையால் எனக்கு விரோதிக்கிறீர்.

௨௨ தேவரீர் என்னைத் தூக்கி, என்னைக் காற்றிலே பறக்கவிட்டு, என் இருப்பை உருகிப்போகப்பண்ணுகிறீர்.

௨௩ ஏனென்றால் சகல சீவாத்துமாக்களுக்கும் குறிக்கப்பட்ட தாவரமாகிய மரணத்துக்கு என்னை ஒப்புக்கொடுப்பீரென்று அறிவேன்.

௨௪ ஆனால் நான் ஒருவரைத் தமது ஆபத்திலே தவிக்கப்பண்ணினதும்,

௨௫ துன்னாளை அநுபவிக்கிறவனுக்காக நான் அழாதிருந்ததும், எளியவனுக்காக என் ஆத்துமம் வியாகுலப்படாதேபோனதும் உண்டானால், அவர் என் மனுவுக்கு இடம் கொடாமல், எனக்கு விரோதமாய்த் தம்முடைய கையை நீட்டுவாராக.

௨௬ ஆனால் நன்மைக்குக் காத்திருந்த எனக்குத் தீமைவந்தது; வெளிச்சத்தை வரப் பார்த்துக்கொண்ட எனக்கு இருள் வந்தது.

௨௭ ¶ என் குடல்கள் பொங்கி, அமராதிருக்கின்றன; உபத்திரவநாள்கள் என்மேல் வந்தன.

௨௮ வெய்யில் படாதிருந்தும், நான் கரிகறுத்துத் திரிகிறேன்; நான் சபையிலிருந்து எழுந்திருக்கும்போது அலறுகிறேன்.

௨௯ நான் மலைப்பாம்புகளுக்குச் சகோதரனும், கோட்டான் பட்சிகளுக்குத் தோழனும் ஆனேன்.

௩௰ என்னைச் சூழ்ந்திருக்கிற என் தோல் கறுத்துப்போயிற்று; என் எலும்புகள் உஷ்ணத்தினால் காய்கின்றன.

௩௧ என் சுரமண்டலம் புலம்பலாகவும், என் கின்னரம் அழுகிறவர்களின் சத்தமாகவும் மாறின.

## ௩௧. அதிகாரம்.

என் கண்களோடே உடம்படிக்கைபண்ணின நான் ஒரு கன்னியாஸ்திரியின்மேல் நினைப்பாயிருப்பதேது?

௨ ஏனெனில் அப்போது உன்னதங்களிலிருந்து பராபரன் இறங்கப்பண்ணும் பங்கும், உன்னதத்திலிருந்து சர்வத்துக்கும் வல்லவர் கொடுக்கும் சுதந்தரமும், என்னவாயிருக்கும்?

௩ மாறுபாடானவனுக்கு ஆபத்தும், அக்கிரமச் செய்கைக்காரருக்குத் தள்ளப்படுதலுமல்லவோ உண்டாயிருக்கும்?

௪ அவர் என் வழிகளைப் பார்த்து, என் நடைகளையெல்லாம் எண்ணுகிறாரல்லவோ?

௫ நான் மாயையிலே நடந்தேனோ, என் கால் கபடு நடத்தத் தீவிரித்ததோவென்று,

௬ சமுத்திரையான தராசிலே பராபரன் என்னை நிறுப்பாராக, அப்போது என் உத்தமத்தை அறிவார்.

௭ என் நடைகள் வழியைவிட்டு விலகினதும், என் இருதயம் என் கண்களைப் பின்தொடர்ந்ததும், ஏதாகிலும் என் கைகளில் ஒட்டிக்கொண்டதும் உண்டானால்,

௮ அப்போது நான் விதைத்ததை வேறொருவன் புசித்து, என் பயிர்கள் வேரற்றுப் போகக்கடவன.

௯ என் இருதயம் யாதொரு ஸ்திரியின் மேல் மயங்கி, எனக்கடுத்தவனுடைய வாசலை நான் எட்டிப்பார்த்ததுண்டானால்,

௰ அப்போது என் பெண்சாதி வேறொருவனுக்கு மாவரைப்பாளாக; வேற்றுமனிதர் அவள்மேலே சாய்வார்களாக.

௰௧ ஏனென்றால் அது தோஷம், அது நியாயாதிபதிகளால் விசாரிக்கப்படும் அக்கிரமம்.

௰௨ ஏனெனில் அது பாதாளபரியந்தம் பட்சிக்கும் அக்கினியாய் என் வரத்தையெல்லாம் வேரற்றுப்போகப்பண்ணுகிறதாயிருக்கும்.

௰௩ ¶ என் வேலைக்காரனாகிலும், என் வேலைக்காரியென்கிலும், என்னோடு வழக்காடும்போது, அவர்கள் நியாயத்தை நான் அசட்டைபண்ணியிருந்தால்,

௰௪ பராபரன் எழும்பும்போது, நான் செய்வதென்ன? அவர் விசாரிக்கும்போது, நான் அவருக்கென்னமறுவுத்தரவுசொல்லுவேன்?

௰௫ தாயின் கெர்ப்பத்தில் என்னை உண்டுபண்ணினவர் அவனையும் உண்டுபண்ணி. ஒரேவிதமான கெர்ப்பத்தில் எங்களைச் செப்பனிட்டதில்லையோ?

௰௬ ¶ எளியவர்கள் வாஞ்சித்ததை நான் கொடாதிருந்து, விதவையின் கண்களைப் பூத்துப்போகப்பண்ணி,

௰௭ தாய் தகப்பனில்லாத பிள்ளை என் துணுக்கையிலே சாப்பிடாமல், நான் ஒருவனாய்ச் சாப்பிட்டேனோ?

௰௮ என் சிறுவயதுதுவக்கி அவன் தகப்பனைப்போலான என்னோடே வளர்ந்தானே; நான் என் தாயின் கெர்ப்பத்திலே பிறந்ததுமுதல் அப்படிப்பட்டவர்களைக் கைலாகுகொடுத்து நடத்தினேன்.

௰௯ ஒருவன் உடுப்பில்லாததினால் மடிந்துபோகிறதையும், ஏழைக்கு மூட இல்லாதிருக்கிறதையும், நான் பார்த்தபோது,

௨௰ அவன் என் ஆடுகளின் மயிரினாலே அடைந்த அனலினால், அவன் இடை என்னை ஆசீர்வதிக்காதிருந்ததும்,

௨௰௧ ஒலிமுகவாசலில் எனக்கு உபபலம் உண்டென்று நான் கண்டு, திக்கற்றவன்மேல் என் கையை நீட்டினதும் உண்டானால்.

௨௰௨ என் கைப்பட்டை தோளிலிருந்து சரிந்து, என் புயத்து எலும்பு முறிந்துபோவதாக.

௨௰௩ ஏனென்றால் பராபரன் ஆக்கினையிடுவாரென்றும், அவருடைய மகத்துவத்தை உத்தரிக்கமாட்டேனென்றும், எனக்குப் பயங்கரமாயிருந்தது.

௨௰௪ ¶ நான் பொன்னின்மேல் என் நம்பிக்கையைவைத்து, அபரஞ்சியைப்பார்த்து, நீ என் ஆதாரவென்று நான் சொன்னதும்,

௨௰௫ என் ஆஸ்தி பெரியதென்றும், என் கைக்கு மிகுதியும் கிடைத்ததென்றும், நான் மகிழ்ந்ததும்,

௨௰௬ சூரியன் பிரகாசிக்கிறபோதும் அல்லது சந்திரன் மகிமையாய்ப் புறப்படுகிறபோதும், நான் அதை நோக்கி,

௨௭ என்னுடைய வாய் என் கையை முத்திசெய்ய, என் இருதயம் இரகசியமாய் மயக்கப்பட்டதும் உண்டானால்,

௨௮ அதுவும் நியாயாதிபதிகளால் விசாரிக்கப்படத்தக்க அக்கிரமமாயிருக்கும்; ஏனெனில் அப்போது உயரவிருக்கிற பராபரனை மறுதலிப்பேனே.

௨௯ என் பகைஞனுடைய ஆபத்துக்கு நான் மகிழ்ந்து, பொல்லாப்பு அவனைப் பிடித்ததென்று களிகூர்ந்துகொண்டிருந்தேனோ?

௩௰ அவன் சிவனுக்குச் சாபத்தைக்கேட்கும் பாவத்தைச்செய்ய, என் தொண்டைக்கு நான் இடம் கொடுத்ததில்லை.

௩௧ அவன் மாம்சமானவர்களில் திருப்தியாகாதவனைக் காண்பிப்பவன் யாரென்று என் கூடாரத்தின் மனுஷர் சொல்லார்களோ?

௩௨ பரதேசி வீதியிலே இராத்தங்கினதில்லை; வழிப்போக்கனுக்கு என் வாசல்களைத் திறந்தேன்.

௩௩ நான் ஆதாமைப்போல என் மீறுதல்களை மூடி, என் அக்கிரமத்தை என் மடியிலே ஒளித்துவைத்தேனோ?

௩௪ திரள்கூட்டத்துக்கு நான் பயந்ததினாலும், அல்லது இனத்தார் சனத்தார்பண்ணும் இகழ்ச்சி என்னைத் திடுக்கிடப்பண்ணினதினாலும், நான் பேசாதிருந்து, வாசற்படியைவிட்டுப் புறப்படாதிருந்தேனோ?

௩௫ ¶ ஆ, என் வழக்கைக் கேட்கிறவன் எனக்குக் கொடுக்கப்பட்டால் தாவிலை; இதோ சர்வத்துக்கும் வல்லவர் எனக்கு உத்தரவு அருளிச்செய்யவும், என் வழக்காளி தன் வழக்கை எழுதிக்கொடுக்கவும் எனக்கு ஆசையுண்டு.

௩௬ அதை நான் என் தோளின்மேல் வைத்துக்கொண்டு, எனக்குக் கிரீடமாகத் தரித்துக்கொள்வேனே.

௩௭ அவனுக்கு நான் என் நடைகளை இலக்கம் இலக்கமாய்க் காண்பித்து, அவனை வழிகாட்டியாகச் சேர்த்துக்கொள்ளுவேன்.

௩௮ ¶ எனக்கு விரோதமாக என் காணிபூமி கூப்பிடுகிறதும், அதின் படைச்சால்களும்கூட அழுகிறதும்,

௩௯ கூலிகொடாமல் நான் அதின் பலனைப் புசித்து, பயிரிட்டவர்களின் ஆத்துமத்தை உபத்திரவப்படுத்தினதும் உண்டானால்,

௪௰ அதில் கோதுமைக்குப் பதிலாக முள்ளும், வால்கோதுமைக்குப்பதிலாகக் களையும் முளைக்கக்கடவன என்றான்; யோபின் வார்த்தைகள் முடிந்தன.

## ௩௰௨. அதிகாரம்.

அப்போது அந்த மூன்று மனுஷர் யோபு தன் பார்வைக்கு நீதிமானாயிருந்தபடியினாலே, அவனுக்குப் பிரதியுத்தாரம்சொல்லி ஓய்ந்தார்கள்.

௨ ஆனால் இராமுடைய வம்சத்தானாகிய பரூகேயேலின் குமாரன் எலீகு என்ற பூசியனுக்குக் கோபம்மூண்டது; யோபு பராபரனைப்பார்க்கிலும் தன்னைத்தான் நீதிமானாக்கினநிமித்தம், அவனுக்கு அவன்மேலும் கோபம்மூண்டது.

௩ கொடுக்கத்தக்க மறுமொழி யோபின் மூன்று சிநேகிதருக்கு அகப்படாதிருந்தும், அவர்கள் அவனை ஆகாதவனென்று தீர்த்ததினிமித்தம் அவர்கள்மேலும் அவனுக்குக் கோபம் மூண்டது.

௪ அவர்கள் தன்னைப்பார்க்கிலும் வயது சென்றவர்களானபடியினாலே, எலீகு யோபின் வார்த்தைகள் முடிந்து தீருமட்டும் காத்திருந்தான்.

௫ ஆனால் அந்த மூன்று மனுஷரின் வாயிலே மறு உத்தரவு பிறக்கவில்லையென்று எலீகு கண்டபோது, அவனுக்குக் கோபம் மூண்டது.

௬ ¶ ஆனதுகொண்டு பரூகேயேலின் குமாரன் எலீகு என்ற பூசியன் பிரதியுத்தாரங்கொடுத்துச் சொன்னதாவது: நான் கொஞ்சவயதானவன்; நீங்களோவென்றால் விருத்தாப்பியர்; ஆகையால் நான் அஞ்சி, என்னுடைய நினைப்பை உங்களுக்குமுன்பாக வெளிப்படுத்தப் பயந்திருந்தேன்.

௭ நாள்சென்றவர்கள் பேசி, வயதுமிகுதி

யானவர்கள் ஞானத்தை அறிவிக்கட்டுமென்றேன்.

௮ ஆனால் மனுஷரில் ஆவியிருந்தாலும், சர்வத்துக்கும் வல்லவருடைய சுவாசமே அவர்களை உணர்வுள்ளவர்களாக்கும்.

௯ மற்றப்படி பெரியவர்கள் ஞானமுள்ளவர்களுமல்ல, முதிர்வயதானவர்கள் நியாயத்தை உணர்ந்தவர்களுமல்ல.

௰ ஆகையால் எனக்குக் கேள்விகொடுங்கள்; நானும் என்னுடைய நினைப்பை வெளிப்படுத்துவேன் என்கிறேன்.

௰௧ ¶ இதோ உங்கள் வசனங்கள் முடியும்மட்டும் காத்திருந்தேன்; நீங்கள் சொல்லத்தக்கதை ஆராய்ந்து தேடும்மட்டும், உங்கள் உணர்வின் நியாயங்களுக்குச் செவிகொடுத்தேன்.

௰௨ இப்படி உங்கள் சொல்லைக் கவனித்தேன்; ஆனால் இதோ உங்களில் யோபுக்கு நியாயத்தைத் தெரியக்காட்டி, அவருடைய வசனங்களுக்கு ஏற்ற பிரதியுத்தாரத்தைச் சொல்லுகிறவனில்லை.

௰௩ மனுஷனல்ல, பராபரன் அவனை விழத்தள்ளினார் என்கிறதினால், ஞானத்தைப் பிடித்தோம் என்று சொல்லாதிருங்கள்.

௰௪ அவர் என்னைப்பார்த்துப் பேசினதில்லை; நீங்களோ சொன்ன வார்த்தைகளினால் நான் அவருக்குப் பிரதியுத்தாரம் சொல்வதில்லை.

௰௫ ¶ அவர்கள் கலங்கி, அப்புறம் பிரதியுத்தாரம் சொல்லாதிருக்கிறார்கள்; அவர்களுக்குப் பேச்சுகள் அற்றுப்போயின.

௰௬ அவர்கள் பேசார்களோவென்று காத்திருந்தேன்; ஆனால் அவர்கள் அப்புறம் மறுமொழிகொடாமலிருக்கிறபடியினாலே,

௰௭ நானும் பிரதியுத்தாரமாக எனக்குத் தோன்றியமாத்திரத்தைச் சொல்லுவேன்; நானும் என் நினைப்பை வெளிப்படுத்துவேன்.

௰௮ ஏனெனில் வார்த்தைகள் எனக்குள் நிறைந்திருக்கின்றன; என் உள்ளத்தின் ஆவி என்னை நெருக்குகிறது.

௰௯ இதோ என்னுடைய உள்ளம் திறந்திராததும், புதுத்துருத்திகளை முதலாய்ப் பீறப்பண்ணுகிறதுமான புது இரசத்தைப் போலிருக்கிறது.

௨௰ எனக்கு லெகுச்சுவாசம் பறியும்படிக்குப் பேசுவேன்; என் உதடுகளைத் திறந்து பிரதியுத்தாரம் சொல்லுவேன்.

௨௧ நான் ஒருவனுடைய முகத்தைப்பாராமலும், ஒரு மனுஷனுக்கு இச்சகம்பேசாமலும் இருப்பேனாக.

௨௨ ஏனெனில் இச்சகம்பேச அறியேன், மற்றப்படி என்னை உண்டாக்கினவர் சீக்கிரத்துக்குள்ளே என்னை எடுத்துக்கொள்ளுவார்.

## ௩௩. அதிகாரம்.

இப்போதும் யோபே, என் நியாயங்களைக் கேளும்; என் வார்த்தைகளுக்கெல்லாம் செவிகொடும்.

௨ இதோ என் வாயை இப்போது திறந்தேன்; என் வாயிலிருக்கிற என்னுடைய நாவானது பேசும்.

௩ என் வார்த்தைகள் என் இருதயத்தின் உண்மைக்கு ஒத்திருக்கும்; நான் அறிந்ததை என் உதடுகள் சுத்தமாய் வசனிக்கும்.

௪ பராபரனுடைய ஆவியானவர் என்னை உண்டாக்கினார்; சர்வத்துக்கும் வல்லவருடைய சுவாசம் எனக்கு உயிர்கொடுத்தது.

௫ உமக்குக் கூடுமானால் எனக்கு மறுமொழிகொடும்; எனக்கெதிராக நீர் ஆயத்தப்பட்டு நின்றிரும்.

௬ இதோ நான் உம்மைப்போலப் பராபரனால் உண்டானவன்; நானும் களிமண்ணினால் எடுக்கப்பட்டவன்.

௭ இதோ நீர் பயப்பட்டுக்கலங்கத்தேவையில்லை; என்னுடைய கை உம்முடைய மேல் பாரமாயிருப்பதில்லை.

௮ ¶ நான் காதாரக்கேட்க நீர் சொன்னதும், எனக்குக் கேள்வியான உம்முடைய வார்த்தைகளின் சத்தமும் என்னவென்றால்,

௯ நான் மீறுதல் இல்லாத சுத்தன்; நான்

துப்புரவானவன்; என்னில் அக்கிரமமில்லை.

௰ இதோ என்னில் அவர் யாதொருகாரியத்தைக் குற்றமாய்ப் பிடித்து, என்னைத் தமக்குச் சத்துருவாக எண்ணிக்கொள்ளுகிறார்.

௰௧ அவர் என் கால்களைத் தொழுவிலே மாட்டி, என் நடைகளை எல்லாம் காவல்படுத்துகிறாரென்றீர்.

௰௨ இதோ இதிலே நீர் நீதியுள்ளவர் அல்லவென்று உமக்குப்பிரதியுத்தாரமாகச்சொல்லுகிறேன்; ஏனெனில் மனுஷனைப்பார்க்கிலும், பராபரன் பெரியவராய் இருக்கிறார்.

௰௩ ¶ அவர் தம்முடைய நடத்தைகள் எல்லாவற்றையுங்குறித்து உத்தரவயணம் சொல்லவில்லையென்று நீர் அவரோடே வழக்காடுவானேன்?

௰௪ ஏனென்றால் பராபரன் ஒருவிசை சொல்லியிருக்கிற காரியத்தை இரண்டாம் விசை பார்த்துத் திருத்துகிறவரல்ல.

௰௫ கனநித்திரை மனுஷர்மேல் இறங்கி, அவர்கள் படுக்கையின்மேல் அயர்ந்துபோகையில்,

௰௬ அப்போது அவர் இராக்காலத்துத் தரிசனையான சொப்பனத்திலே மனுஷருடைய செவிக்குத் தாம் செய்யும் காரியத்தை வெளிப்படுத்தி, அதை அவர்களுக்கு வரும் தண்டனையினாலே முத்திரைபோடுகிறதுண்டு.

௰௭ மனுஷனுடைய செய்கையை நீக்கவும், பெருமைச்சிந்தையை மனுஷனில் அடங்கப்பண்ணவும்,

௰௮ இப்படியே அவன் ஆத்துமத்தை அழிவுக்கும், அவன் சீவனைப் பட்டைய வெட்டுக்கும் தப்பவிடவும் அப்படிச்செய்கிறார்.

௰௯ ¶ ஆகையால் இவன் தன் படுக்கையிலே வாதையினாலும் தன்னுடைய சகல எலும்புகளில் அகோரமான நோவினாலும், தண்டிக்கப்படுகிறான்.

௨௰ அவனுடைய சீவன் அப்பத்தையும், அவன் ஆத்துமம் ருசிகரமான போசனத்தையும், அரோசிக்கும்,

௨௧ அவனுடைய மாம்சம் காணப்படாதபடிக்கு அழிந்து, காணப்படாதிருந்த அவன் எலும்புகள் பிதுங்குகின்றன.

௨௨ அவனுடைய ஆத்துமம் அழிவுக்கும், அவனுடைய பிராணன் சாவுக்கும் சமீபிக்கின்றது.

௨௩ ஆயிரத்தில் ஒருவராகிய சாமாதித் தூதனானவர் மனுஷனுக்குத் தம்முடைய நிதானத்தை அறிவிக்கும்படிக்கு, அவனுக்கு அநுசாரியாயிருந்தாரேயாகில்,

௨௪ அவர் அவனுக்கு இரங்கி, அவன் அழிவில் இறங்காதபடிக்கு, நீர் அவனை இரட்சியும்; மீட்கும்பொருளை நாம் கண்டுபிடித்தோமென்பார்.

௨௫ அப்போது அவன் மாம்சம் வாலிபத்தில் இருந்ததைப்பார்க்கிலும், ஆரோக்கியமடையும்; தன் வாலவயது நாள்களுக்குத் திரும்புவான்.

௨௬ அவன் பராபரனைநோக்கி விண்ணப்பம்பண்ணினபின், அவன் அவருடைய சமுகத்தைக் கெம்பீரத்தோடே பார்க்கத்தக்கவிதமாய் அவர் அவன்மேல் பிரியமாகி, அந்த மனுஷனுக்கு அவனுடைய நீதியின்பலனைக் கொடுப்பார்.

௨௭ அவன் மனுஷரை நோக்கிப்பார்த்துச் சொல்வதாவது: நான் பாவஞ்செய்து செம்மையானதைப் புரட்டினேன்; அது எனக்குப் பிரயோசனமாயிருந்ததில்லை.

௨௮ ஆனால் என் ஆத்துமம் அழிவுக்கு ஏகாதபடிக்கு, அவர் அதை இரட்சித்தார்; ஆகையால் என்பிராணன் வெளிச்சத்தைக் காணுமென்பான்.

௨௯ ¶ இதோ பராபரன் மனுஷனுடைய ஆத்துமத்தை அழிவுக்கு விலக்குகிறதற்கும் அவனைச் சீவனுள்ளோரின் வெளிச்சத்தினாலே பிரகாசிப்பிக்கிறதற்கும்,

௩௰ அவர் இவையெல்லாம் அவனிடத்திலே இரண்டுமூன்றுதரம் நடப்பிக்கிறார்.

௩௰௧ ¶ யோபே, நீர் கவனித்து என் சொல்லைக்கேளும்; நான் பேசும்படிக்கு, நீர் மவுனமாயிரும்.

௩௨ சொல்லத்தக்க நியாயங்கள் இருந்ததேயானால், எனக்கு மறுஉத்தரவு கொடும்; பேசும்; ஏனெனில் உம்மை நீதிமானாகத் தீர்க்க எனக்கு ஆசையுண்டு.

௩௩ ஒன்றும் இல்லாதிருந்தேயாகில், நீர் என் சொல்லைக்கேளும்; மவுனமாயிரும்; நான் உமக்கு ஞானத்தை உபதேசிப்பேனென்றான்.

## ௩௪. அதிகாரம்.

பின்னையும் எலீகு மறுவுத்தரவுகொடுத்துச் சொன்னதாவது:

௨ ஞானிகளே, என் வார்த்தைகளைக் கேளுங்கள்; அறிவாளிகளே, எனக்குச் செவிகொடுங்கள்.

௩ ஏனெனில் வாயானது போசனத்தை ருசிபார்க்கிறதுபோல, செவியானது வார்த்தைகளைச் சோதித்துப்பார்க்கும்.

௪ நமக்காக நியாயமானதைத் தெரிந்துகொள்வோமாக; நன்மை ஏதென்று நமக்குள்ளே அறிந்துகொள்வோமாக.

௫ ஏனெனில், நான் நீதிமான்; பராபரன் என் நியாயத்தைத் தள்ளிவிட்டாரென்றும்,

௬ நியாயம் என்னிடத்தில் இருந்தும் நான் பொய்யனென்று எண்ணப்படுகிறேன்; மீறுதல் இல்லாதிருந்தும், என் அம்புக்காயம் ஆறாததாயிருக்கிறதென்றும்,

௭ பரியாசம்பண்ணுதலைத் தண்ணீரைப் போலக் குடித்து,

௮ அக்கிரமக்காரரோடே ஏகமார்க்கத்தானாகவும், ஆகாத மனுஷரோடே நடக்கிறவனாகவும், எண்ணப்பட்ட யோபைப்போல இருக்கிற மனுஷன் யாரென்றும் யோபு சொன்னார்.

௯ பின்னையும், மனுஷன் பராபரன்மேலே பிரியம்வைக்கிறது அவனுக்குப் பிரயோசனம் அல்லவென்றாரே.

௰ ¶ ஆகையினாலே புத்தியுள்ள மனுஷரே, என்னைக் கேளுங்கள்; ஆகாமியம் பராபரனுக்கும், நீதிக்கேடு சர்வவல்லவருக்கும் தூரமாயிருக்கின்றன.

௰௧ அதேதென்றால் மனுஷனுடைய செய்கைக்குத்தக்கதை அவனுக்குச் சரிக்கட்டி, அவனவன் மார்க்கத்துக்குத்தக்கதாக அவனுக்குக் கிடைக்கப்பண்ணுகிறார்.

௰௨ பராபரன் ஆகாமியம் செய்யாமலும், சர்வத்துக்கும் வல்லவர் நீதியைப் புரட்டாமலும் இருக்கிறது மெய்யாமே.

௰௩ பூமியின்மேல் மனுஷனுக்கு அதிகாரம் கொடுத்தவர் யார்? பூச்சக்கரத்தை எல்லாம் திட்டப்படுத்தினவர் யார்?

௰௪ அவர் தம்முடைய இருதயத்தை அவனுக்கு விரோதமாகத் திருப்பினாராகில் அவனுடைய ஆவியையும், அவனுடைய சுவாசத்தையும் தம்மண்டைக்கு இழுத்துக் கொள்ளுவார்.

௰௫ அப்படியே மாம்சமெல்லாம் ஏகமாய்ச் சீவித்துப்போய் மனுஷன் தூளுக்குத் திரும்புவான்.

௰௬ ¶ உமக்கு உணர்விருந்தால் இதைக் கேளும், என் வார்த்தைகளின் சத்தத்துக்குச் செவிகொடும்.

௰௭ நீதியைப் பகைக்கிற ஒருவன் ஆளக்கூடுமோ? மகா நீதிபரனை ஆகாதவரென்று தீர்ப்பீரோ?

௰௮ ஒரு இராசாவைப்பார்த்துப் பேலியாளே என்றும், அதிபதிகளில் ஒருவனைப்பார்த்து ஆகாதவனே என்றும் சொல்லத்தகுமோ?

௰௯ பிரபுக்களின் முகத்தைப் பாராமலும் ஏழையைப்பார்க்கிலும் ஐசுவரியவானை எண்ணாமலும் இருக்கிறவரைநோக்கி அப்படிச் சொல்வதெப்படி? அதேதெனில் இவர்களெல்லாரும் அவர் கரங்களின் செய்கையாயிருக்கிறார்கள்.

௨௰ இப்படிப்பட்டவர்கள் அசுப்பாய்ச் சாகிறதும், சனங்கள் பாதிச்சாமத்தில் கலங்கி அப்பாலே போகிறதும், கைக்கொண்டல்லாமல் பலவந்தர் எடுத்துப்போடப்படுகிறதுமுண்டு.

௨௰௧ ஏனென்றால் அவருடைய கண்கள் அவரவர் வழிகளை நோக்கியிருக்கின்றன;

அவர் அவர்களுடைய நடைகளை எல்லாம் பார்க்கிறார்.

௨௨ அக்கிரமக்காரர் ஒளிந்துக்கொள்ளத் தக்க இருளுமில்லை, மரணநிழலுமில்லை.

௨௩ அதேதென்றால் பராபரனுக்குமுன்பாக வந்து வழக்குக்கு நிற்க, அவர் ஒருவனுக்கும் இன்னம் வெகுவாய் இடங்கொடார்.

௨௪ ஆராய்ந்து முடியாத நியாயமாய் அவர் வல்லமையுள்ளவர்களை முறித்து, வேறே மனுஷரை அவர்கள் ஸ்தலத்திலே நிறுத்துகிறார்.

௨௫ அவர்கள் வேலைகளை அவர் அறிந்தபடியினாலே, அவர்கள் நசுங்கிப்போகத்தக்க விதமாய் இராத்திரி காலத்திலே அவர்களைக் கவிழ்த்துப்போடுகிறார்.

௨௬ அவர்கள் அவரைவிட்டுப் பின்வாங்கி, அவருடைய எல்லா வழிகளையும் உணர்ந்துகொள்ளாமல் போனபடியினாலே,

௨௭ அவர் எளியவனுடைய கூக்குரலை அவர்கள்மேல் சுமத்தி, எல்லாரும் பார்க்கும் இடத்தில் அவர்களைப் பொல்லாதவர்களென்று அடிக்கிறார்.

௨௮ ஏனெனில் அவர் சிறுமையானவர்களின் கூக்குரலைக் கேட்கிறார்.

௨௯ அவர் தண்டிக்காமல் அமரிக்கையாயிருந்தாரானால், ஆகாதவர்களைத் தண்டிப்பவர் யார்? அவர் பாராதபடிக்குத் தம்முடைய முகத்தை மறைத்தால், அப்போது சாதியின்மேலும் ஒவ்வொரு மனுஷன்மேலும் நோக்கமாயிருப்பவர் யார்?

௩௰ அப்போது மாயம்பண்ணுகிற மனுஷன் ஆளாதபடிக்கும், சனம் சிக்கிக்கொள்ளப்படாதபடிக்கும் பார்ப்பவர் யார்?

௩௧ ¶ ஆனால் நாம் மன்னித்தோம்; நாம் அழிப்பதில்லை என்று சொல்லப் பராபரன் அதிகாரியுமாயிருக்கிறார்.

௩௨ நான் காணாத காரியத்தை நீர் எனக்குப் போதியும், நான் அநியாயம்பண்ணினேனானால் நான் இனி அப்படிச் செய்வதில்லை.

௩௩ நீர் அப்படிச் செய்யமாட்டோமென்கிறபடியினாலே, உம்மோடிருக்கிறவர்களில் ஒருவன் உமக்குப் பதிலாக அதைச் செய்யச்சொல்லுவீரோ? ஏனெனில் நானல்ல. நீரே தெரிந்துகொள்ளவேண்டும்; அல்லவென்று நீர் அறிந்திருக்கிறதைச் சொல்லும்.

௩௪ யோபு அறிவோடே பேசினதில்லை; அவர் வார்த்தைகள் உணர்வுள்ளவைகளல்லவென்று,

௩௫ புத்தியுள்ள மனுஷர் என் பாரிசமாய்ப் பேசுவார்கள்; ஞானமுள்ள மனுஷன் எனக்குக் கேள்விகொடுப்பான்.

௩௬ என் பிதாவே, யோபு அக்கிரமமனுஷரின் சொல்லாய்ச் சொன்ன மறு உத்தரவுகளின்நிமித்தம் அவர் என்றைக்கும் சோதிக்கப்பட நியாயமாம்.

௩௭ ஏனெனில் தம்முடைய பாவத்தோடே மீறுதலைக் கூட்டினார்; அவர் எங்களுக்குள்ளே கைகொட்டிப் பராபரனுக்கு விரோதமாகத் தம்முடைய வார்த்தைகளை மிகுதியாக்கினாரென்றான்.

## ௩௫. அதிகாரம்.

பின்னையும் எலிகு மறு உத்தரவுகொடுத்துச் சொன்னதாவது:

௨ என்னுடைய நீதி பராபரனுடையதைப் பார்க்கிலும் பெரியதென்று நீர் சொன்னது நியாயமென்றெண்ணுகிறீரோ?

௩ அதேதெனில் நான் பாவியாயிராததினால் எனக்குப் பிரயோசனமென்ன, லாபமும் என்ன? என்றீர்.

௪ உமக்கும் உம்மோடேகூட இருக்கிற உம்முடைய சிநேகிதருக்கும்கூட நான் பிரதியுத்தாரம் சொல்லுவேன்.

௫ ¶ நீர் வானத்தை அண்ணாந்துபார்த்து. உம்மைப்பார்க்கிலும் உயரமாய் இருக்கிற ஆகாசமண்டலங்களைக் கண்ணோக்கும்.

௬ நீர் பாவம்செய்தால் அதினாலே அவருக்கு எந்த நஷ்டத்தை நடப்பிப்பீர்? உம்முடைய மீறுதல்கள் மிகுதியானாலும், அதினாலே அவருக்கு எந்தச் சேதத்தை உண்டாக்குவீர்?

௭ நீர் நீதிமானானால், அதினாலே அவருக்கு

என்னத்தைக் கொடுப்பீர்? அல்லது அதி
னால் அவர் உம்முடைய கையில் எந்த லா
பத்தை அடைவார்?

௮ உம்முடைய ஆகாமியம் உம்மைப்போ
லொத்த மனுஷனுக்கும், உம்முடைய நீதி
மனுப்புத்திரனுக்கும் யாதொன்றைச் செய்
யலாமோ?

௯ அநேகருடைய பலவந்தத்தை அநுப
விக்கிறதினால், ஒடுக்கப்பட்டவர்கள் கூப்
பிட்டு, வல்லவர்களுடைய புயத்தினிமித்
தம் அலறுகிறார்கள்.

௰ ஆனால் ஒருவரும் என்னை உண்டாக்கி
னவரும், இரவிலே கீதங்களைக் கட்டளை
யிடுகிறவரும்,

௰௧ பூமியின் மிருகங்களைப்பார்க்கிலும்
எங்களைக் கல்விமான்களும், ஆகாசத்துப்
பறவைகளைப்பார்க்கிலும் எங்களை ஞான
முள்ளவர்களுமாக்குகிறவருமான பராபர
ன் எங்கே என்று சொல்லுகிறதில்லை.

௰௨ அங்கே அவர்கள் பொல்லாதவர்க
ளின் பெருமையினிமித்தம் கூப்பிடுகிறார்
கள்; ஆனால் அவர் மறுஉத்தரவு கொடார்.

௰௩ ¶ பராபரன் மாயைக்குச் செவிகொ
டாரே, சர்வத்துக்கும் வல்லவர் அதைப்
பாரார்.

௰௪ அவருடைய தரிசனம் உமக்குக் கி
டைக்கிறதில்லை என்று நீர் சொல்லிக்கொள்
ளுகிறீரே, ஆனால் நியாயத்தீர்ப்பு அவருக்கு
முன்பாக இருக்கின்றது; ஆகையால் அவ
ருக்குக் காத்துக்கொண்டிரும்.

௰௫ இப்போதோவென்றால் அவருடைய
கோபமானது நியாயத்தை இன்னம் விசாரி
யாது; அவர் இன்னம் ஒன்றையும் குறை
யற்றபடியாய்த் தீரார்.

௰௬ ஆகையால் யோபு வீணாய்த் தம்மு
டைய வாயைத்திறந்து, அறிவில்லாமல்
வார்த்தைகளை மிச்சமாக்கினாரென்றான்.

## ௩௬. அதிகாரம்.

எலிகூ அப்புறம் பேசிச் சொன்னதாவது:

௨ நான் பேசும்மட்டும் சற்றே பொறும்;
ஏனென்றால் இன்னம் பராபரனுக்காகச்
சொல்லவேண்டிய நியாயங்களை உமக்குக்
காண்பிப்பேன்.

௩ நான் என் அறிவைத் தூரத்திலிருந்து
கொண்டுவந்து, என்னை உண்டாக்கினவ
ருடைய நீதியை விளங்கப்பண்ணுவேன்.

௪ அதேதென்றால் மெய்யாகவே என்
வார்த்தைகள் பொய்யற்றிருக்கும், உம்
மோடே பேசுகிறவன் அறிவில் உத்தமன்.

௫ ¶ இதோ பராபரன் மகத்துவமுள்ளவரா
யிருந்தாலும் ஒருவனையும் புறக்கணியார்;
மன உருக்கத்தினாலும் அவர் மகத்துவமுள்
ளவர்.

௬ அவர் துன்மார்க்கனைப் பிழைக்கவொட்
டாதிருக்கிறார்; ஆனால் சிறுமையானவர்க
ளின் நியாயத்தை விசாரிக்கிறார்.

௭ அவர் நீதிமான்களைவிட்டுத் தம்முடைய
கண்களை விலக்காமல் அவர்களை இராசாக்க
ளோடேகூட ஆசனத்தில் ஏறவும், உயர்ந்த
ஸ்தலத்தில் என்றைக்கும் உளுக்கார்ந்திருக்
கவும்பண்ணுகிறார்.

௮ சிலர் விலங்குகள் போடப்பட்டு, உபத்
திரவத்தின் கயிறுகளால் கட்டப்பட்டிருந்
தால்,

௯ அவர் இவர்கள் கிரியையையும், மிஞ்
சிப்போன இவர்களுடைய மீறுதல்களையும்
இவர்களுக்குத் தெரியப்பண்ணி,

௰ இவர்கள் செவியைக் கடிந்துகொள்ளு
தலுக்குத் திறந்து, அக்கிரமத்தைவிட்டுத்
திரும்பச்சொல்லுவார்.

௰௧ இவர்கள் கேட்டு அவருக்கு ஊழியம்
செய்தால், தங்கள் நாள்களை நன்மையாக
வும், தங்கள் வருஷங்களைச் செல்வப்பாக்
கியமாகவும் போக்கிவிடுவார்கள்.

௰௨ கேளார்களேயாகில் பட்டையத்துக்கு
இரையாகி, அறிவு அடையாததினால் மாண்
டுபோவார்கள்.

௰௩ ¶ மாயமான இருதயத்தார் மூக்கை
நெறிக்கிறார்கள்; அவர் அவர்களைக் கட்டி
வைத்தாலும் கெஞ்சிக்கூப்பிடார்கள்.

௰௪ அவர்கள் சீவன் கொஞ்ச வயதிலே

மாளும்; புணர்ச்சிக்காரருக்குள்ளே அவர்கள் பிராணன் முடியும்.

௰௫ ஆனால் சிறுமைப்பட்டவர்களை அவர் அவர்கள் சிறுமைக்கு நீங்கலாக்கி, அவர்கள் ஒடுக்கப்பட்டிருக்கையில் அவர்கள் செவியைத் திறக்கிறார்.

௰௬ அப்படி அவர் உம்மையும் நெருக்கத்தின் வாய்க்கு விலக்கி ஒடுக்கமில்லாத விசாலத்திலே வைப்பார்; உம்முடைய பந்தியில் பரிமாறப்படுவது நிறைந்த கொழுப்புள்ளதாயிருக்கும்.

௰௭ ஆனால் ஆகாதவன்மேல் வரும் நியாயத்தீர்ப்பை நிரந்தரமாகப் பார்ப்பீர்; நியாயமும், நீதியும் உம்மை ஆதரிக்கும்.

௰௮ உக்கிரமுண்டாகிறதினால் அவர் உம்மை ஒரு அடியினால் எடுத்துப்போடாதபடிக்குப் பாரும்; அப்போது மிகுதியான மீட்கும்பொருளானது உம்மை அதற்கு நீங்கலாக்கமாட்டாது.

௰௯ அப்போது மன இடுக்கத்தில் உம்முடைய அலறுதலாகிலும், பலத்தினுடைய எந்தச் சத்துவங்களாகிலும் எண்ணப்படுமோ?

௨௰ சனசதளங்கள் தங்கள் இடத்தைவிட்டு வாரிக்கொள்ளப்படப்போகிற இரவை வாஞ்சிக்காதிரும்.

௨௧ அக்கிரமத்துக்குத் திரும்பாதபடிக்கு எச்சரிக்கையாயிரும்; ஏனெனில் உபத்திரவத்தினாலே அதைத்தான் தெரிந்துகொண்டீர்.

௨௨ ¶ இதோ பராபரன் தம்முடைய வல்லமையில் உயர்ந்திருக்கிறார்; அவரைப்போலொத்த சாஸ்திரி யார்?

௨௩ அவருடைய வழியின் நியாயத்தை விசாரிக்கத்தக்கவன் யார்? அல்லது அநியாயஞ்செய்தீர் என்று சொல்லத்தக்கவன் யார்?

௨௪ மனுஷர் நோக்கிப்பார்க்கிற அவருடைய கிரியையை நீர் மகிமைப்படுத்த நினைவுகூரும்.

௨௫ எல்லா மனுஷரும் அதைக் காண்கிறார்களே; தூரத்திலிருந்து அது மனுஷனுக்கு வெளிப்படுகின்றது.

௨௬ இதோ பராபரன் நாம் அறிய முடியாத மகத்துவமுள்ளவர்; அவருடைய வருஷங்களின் இலக்கம் ஆராய்ந்து முடியாதது.

௨௭ அதேதென்றால் அவர் தண்ணீரின் துளிகளை அணுவைப்போல ஏறப்பண்ணுகிறதினால், அவைகள் அவருடைய மூடுபனி மேகத்திலிருந்து மழையாகச் சொரிகின்றது.

௨௮ அதை மேகங்கள் பெய்யப்பண்ணி, திரள் மனுஷர்மேல் தூறுகின்றன.

௨௯ மேகங்களின் விரிவுகளையும், அவருடைய கூடாரத்தின் குமுறல்களையும் உணர முடியுமோ?

௩௰ இதோ அவைகளின்மேல் தம்முடைய மின்னலின் வெளிச்சத்தை விரித்துச் சமுத்திரத்தின் ஆழங்களை மூடுகிறார்.

௩௧ அதேதென்றால் அவைகளால் சனசதளங்களை நியாயம்விசாரிக்கிறவருமாயிருக்கிறார்; ஆகாரத்தைப் பரிபூரணமாய்க் கட்டளையிடுகிறவருமாயிருக்கிறார்.

௩௨ அவர் மின்னலின் வெளிச்சத்தைக் கைகளினால் மூடி, நடுவே யாதொன்று அதை மறிக்கக் கற்பனைகொடுக்கிறார்.

௩௩ அதினால் அவர் செய்ய நினைக்கிறதையும், மந்தாரம் எழும்பப்போகிறதையும் ஆடுமாடுகள் அறியப்படுத்தும்.

## ௩௭. அதிகாரம்.

என் இருதயமும் இதினாலே தத்தளித்துத் தன்னிடத்தைவிட்டுத் தெறிக்கின்றது.

௨ அவருடைய சத்தத்தினால் உண்டாகிற அதிர்த்தலையும், அவர் வாயிலிருந்து புறப்படுகிற முழக்கத்தையும் கேட்கவே கேளுங்கள்.

௩ அவர் வானத்தின்கீழெங்கும் அதையும், பூமியின் கடையாந்தரங்கள்மேல் அதின் மின்னலையும் போகவிடுகிறார்.

௪ இதன்பிறகு அவர் சத்தமாய் முழங்கித் தம்முடைய மகத்துவத்தின் சத்தத்தைக் குமுறப்பண்ணுகிறார்; அவருடைய சத்தம் கேட்கப்படுகையில் அது தவிர்க்கப்படாது.

௫ பராபரன் தம்முடைய சத்தத்தை ஆச்சரியமானவிதமாய்க்குமுறப்பண்ணுகிறார்; நாம் கிரகிக்கக்கூடாத பெரியகாரியங்களைச் செய்கிறார்.

௬ அதேதெனில் அவர் உறைந்த மழையையும், கன்மழையையும், தம்முடைய வல்லமையின் பெருமழைகளையும் பார்த்து, பூமியின்மேல் உண்டாயிருங்களென்று சொல்லுகிறார்.

௭ தம்முடைய செய்கிரியையாயிருக்கிற சகல மனுஷரும் தம்மை உணர, அவர் அதினாலே சகல மனுஷருடைய கையையும் முத்திரித்துப்போடுகிறார்.

௮ அப்போது காட்டுமிருகங்கள் தங்கள் ஒளிப்பிடங்களில் புகுந்து தங்கள் கெபிகளில் தாவரித்துக்கொள்ளும்.

௯ ¶ தெற்கேயிருந்து சூறாவளிக்காற்றும், வடக்கிலிருந்து குளிரும் வரும்.

௰ தம்முடைய சுவாசத்தினால் பராபரன் குளிரைக் கொடுக்கிறார்; அப்போது தண்ணீர்களின் விசாலம் உறைந்துபோம்.

௰௧ அவர் காந்தியினாலே மேகங்களை நெருக்கி, தம்முடைய வெளிச்சத்தினாலே மந்தாரத்தைச் சிதறப்பண்ணுகிறார்.

௰௨ அவர் அவைகளுக்குக் கற்பிக்கிற எல்லாவற்றையும், அவைகள் பூலோகச் சக்கரத்திலே நடப்பிக்கும்படிக்கு அவர் அவைகளைத் தம்முடைய ஞான ஆலோசனைகளின்படியே சுற்றித் திரியப்பண்ணுகிறார்.

௰௩ ஒன்றில் மிலாருகவும், ஒன்றில் தம்முடைய பூமிக்கு லாபமாகவும், ஒன்றில்கிருபையாகவும் அவைகளை வரப்பண்ணுகிறார்.

௰௪ ¶ யோபே, இவைகளுக்குச் செவிகொடும்; தரித்துநின்று பராபரனுடைய ஆச்சரியங்களைத் தியானித்துக்கொள்ளும்.

௰௫ பராபரன் அவைகளைத் திட்டம்பண்ணி, தம்முடைய மேகத்தின் மின்னலைப்பிரகாசிக்கப்பண்ணும் விதத்தை அறிவீரோ?

௰௬ மேகங்களுக்கு வைக்கும் நிறையையும், குறையற்ற அறிவுள்ளவரின் அற்புதங்களையும்,

௰௭ தென்றலினால் அவர் பூமியை அமைதலாயிருக்கப்பண்ணுகிறபோது, உம்முடைய வஸ்திரங்கள் அனல் உண்டாக்குகிற விதத்தையும் அறிவீரோ?

௰௮ வார்க்கப்பட்ட கண்ணாடியைப்போலக் கெட்டியான ஆகாயமண்டலங்களை நீர் அவரோடேகூட இருந்து விரித்தீரோ?

௰௯ அவருக்கு நாம் சொல்லத்தக்கதை எங்களுக்குப் போதியும்; ஏனெனில் அந்தகாரத்தின்நிமித்தம் வரிசைதப்பிப் பேசுகிறோம்.

௨௰ நான் சொல்லப்போனால் அது அவருக்குமுன்பாக விவரிக்கப்படத்தக்கதாக இருக்குமோ? எவனொருவன் சொல்லக்கூடுமோ அவன் விழுங்கப்படுவானே.

௨௧ ¶ இப்போதும் காற்றுவீசி ஆகாயமண்டலங்களையும் மப்பு நீங்கப்பண்ணி இருக்கிறபோதும், வடக்கேயிருந்து பொன்னுக்கொத்த காந்தி வருகிறபோதும்,

௨௨ ஆகாயமண்டலத்திலே பிரகாசிக்கிற சூரியனைமுதலாய் ஒருவரும் நோக்கிப்பார்க்கக்கூடாதே; பராபரனிடத்திலோவென்றால் பயங்கரமான மகத்துவமுண்டு.

௨௩ சர்வத்துக்கும் வல்லவரை நாம் கண்டுபிடிக்கக்கூடாது; அவர் வல்லமையாலே பெருத்தவர்; அவர் நியாயத்தையும், மகா நீதியையும் அமுக்கிப்போடார்.

௨௪ ஆகையால் மனுஷர் அவருக்குப் பயப்படவேண்டும்; தங்கள் எண்ணத்தில் ஞானிகளாகிய எவர்களையும் அவர் பாரா ரென்றான்.

## ௩௮. அதிகாரம்.

அப்போது கர்த்தர் பெருங்காற்றிலிருந்து யோபுக்கு உத்தரவுகொடுத்து விளம்பினதாவது:

௨ அறிவில்லாதவார்த்தைகளினால் ஆலோசனையைஅந்தகாரப்படுத்துகிறஇவன்யார்?

௩ இப்போதும் புருஷனைப்போல உன் இடையைக் கட்டிக்கொள்; நாம் உன்னைக் கேட்போம்; நீ நம்மைப் போதி.

௪ ¶ நாம் பூமியை அஸ்திபாரப்படுத்துகிறபோது நீ எங்கேயிருந்தாய்? நீ அறிவாளியானால் அதை அறிவி.

௫ அதற்கு அதின் அளவை வைத்தவர் யார்? அல்லது அதின்மேல் நூல்போட்டவர் யார் என்கிறதை நீ அறிந்தால் சொல்.

௬ அதினுடைய நிலைகள் எதின்மேலே பாவப்பட்டன.

௭ அல்லது விடியற்காலத்து நட்சத்திரங்கள் ஏகமாய்ப் பாடிப் பராபரனுடைய பிள்ளைகளெல்லாம் கெம்பீரிக்கையில் அதின் கோடிக்கல்லை வைத்தவர் யார்?

௮ ¶ சமுத்திரம் கெர்ப்பத்திலிருந்து புரண்டு புறப்படுகிறபோது, அதைக் கதவுகளால் அடைத்தவர் யார்?

௯ நாம் மேகங்களை அதற்கு வஸ்திரமாகவும், இருளை அதற்குப் புடவையாகவும் போட்டபோதும்,

௰ நாம் அதின்மேல் நம்முடைய திட்டத்தைப் பரவவிடுகிறதினால், அதற்குத் தாழ்ப்பாள்களையும் கதவுகளையும் போட்டு,

௰௧ இம்மட்டும் வருவாய், மிஞ்சி வாராய், இங்கே உன் அலைகளின் பெருமை அடங்கக்கடவதென்று நாம் சொல்லுகிறபோதும் நீ எங்கேயிருந்தாய்?

௰௨ ¶ உன்னுடைய நாள்கள்வலாயிலே நீ விடியற்காலத்துக்குக் கற்பனை தந்து, கிழக்கு வெளுக்குதலுக்கு, அதின் இடத்தைக் காண்பித்ததுண்டோ?

௰௩ ஆகாதவர்கள் பூமியிலிருந்து உதறிப் போடப்படும்படிக்கு அதின் கடையாந்தரங்களைப் பிடிக்கவும்,

௰௪ களிமண்ணிலே முத்திரைபோடுகிறதினால் வேறே ரூபம் உண்டாகிறதுபோல, அவைகளை வஸ்திரத்தைப்போலக் காணப்படப்பண்ணவும்,

௰௫ ஆகாதவர்களின் வெளிச்சம் அவர்களைவிட்டுவிலகி மேட்டிமையான புயம் முறிந்துபோகப்பண்ணவும் தெரியுமோ?

௰௬ ¶ நீ சமுத்திரத்தின் அடித்தலங்கள் மட்டும் புகுந்து ஆழத்தின் அடியில் உலாவினதுண்டோ?

௰௭ மரணத்தின் வாசல்கள் உனக்குத் திறந்ததுண்டோ? மரணநிழலின் வாசல்களை நீ பார்த்ததுண்டோ?

௰௮ நீ பூமியின் விசாலங்களை ஆராய்ந்து அறிந்ததுண்டோ? இவைகளை எல்லாம் நீ அறிந்திருந்தால் அறிவி.

௰௯ ¶ வெளிச்சம் வாசமாயிருக்கும் இடத்துக்கு வழியெங்கே? இருளினுடைய ஸ்தலமெங்கே?

௨௰ அதின் எல்லை இன்னதென்று அது உனக்குப் பிடிபடுமோ? அதின் வீட்டுக்குப் போகிற பாதைகளை அறிந்திருக்கிறாயோ?

௨௰௧ நீ அப்போது பிறந்ததினாலும், உன் நாள்களின் இலக்கம் பெரிதானதினாலும் அதை அறிவாயோ?

௨௰௨ ¶ உறைந்த மழையின் பண்டகசாலைகளுக்குள் பிரவேசித்தாயோ?

௨௰௩ நாம் நெருக்கம் வருத்துவிக்கிறகாலத்துக்கும் கலகம் யுத்தமென்றவைகளின் நாளுக்கும் வைத்துவைத்த உறைந்த மழையிருக்கிறபண்டகசாலைகளிலேபார்த்தாயோ?

௨௰௪ ¶ மின்னல் பகிரப்படுகிறதற்கும், கீழ்காற்றுப் பூமியின்மேலே சிதறுகிறதற்குமான வழியெங்கே?

௨௰௫ குடியில்லாத பூமியின்மேலும், மனுஷனில்லாத வனாந்தரத்தின்மேலும் வருஷிக்கப்பண்ணவும்,

௨௰௬ பாழும், அந்தரவெளியுமானதைத் திருப்தியாக்கவும் பூண்டுகளின் முளைகளை முளைப்பிக்கவும்,

௨௰௭ பெருமழைக்குச் சலதாரைகளையும், இடிமுழக்கங்களின் மின்னலுக்கு வழிகளையும் பகுத்தவன் யார்?

௨௰௮ ¶ மழைக்கு ஒரு தகப்பனுண்டோ? அல்லது பனியின் துளிகளைச் செனிப்பித்தவன் யார்?

௨௰௯ கல்லைப்போலிருக்கிறதின்கீழ்த் தண்ணீர்கள் மறைக்கப்பட்டுக் கெட்டிப்படுகிற ஆழத்தின்மேல்,

௩௰ உறைந்த தண்ணீர் யார் வயிற்றிலிருக்

து புறப்படுகிறது? ஆகாயத்தினுடைய உறைந்த பனியைப்பெற்றவன் யார்?

௩௧ ¶ சத்த நட்சத்திரத்தின் இன்பமான இணைப்பை இணைப்பாயோ? அல்லது யாதொரு நட்சத்திரராசியின் கட்டுகளை அவிழ்ப்பாயோ?

௩௨ கிரகங்களை அதினதின் காலத்திலே புறப்படப்பண்ணுவாயோ? கரடியும், அதின் குட்டிகளும் என்னப்பட்ட நட்சத்திரங்களை வழிநடத்துவாயோ?

௩௩ நீ வானத்தின் ஒழுங்குகளை அறிவாயோ? அது பூமியையாளும் ஆளுகையை நீ திட்டம்பண்ணுவாயோ?

௩௪ ஏராளமான தண்ணீர் உன்மேலே சொரியவேணும் என்று உன் சத்தத்தை மேகங்கள்பரியந்தம் உயர்த்துவாயோ?

௩௫ நீ மின்னல்களை அழைத்தனுப்பி, அவைகள் புறப்பட்டு வந்து, இதோ இங்கே இருக்கிறோம் என்று உன்னோடே சொல்லப்பண்ணுவாயோ?

௩௬ உள்ளிந்திரியங்களில் ஞானத்தை வைத்தவன் யார்? அல்லது புத்திக்கு உணர்வைக் கொடுத்தவன் யார்?

௩௭ ஞானத்தினாலே கொடிமாசிகளை எண்ணுபவன் யார்?

௩௮ தூளானது ஏகபாளமாகவும், மண்கட்டிகள் ஒன்றுக்கொன்று ஒட்டிக்கொள்ளவும், ஆகாயத்தின் தண்ணீர்த்துருத்திகளைப் பொழியப்பண்ணுபவன் யார்?

## ௩௯. அதிகாரம்.

நீ சிங்கத்துக்கு இரையைவேட்டையாடி,

௨ சிங்கக்குட்டிகள் தாங்கள் தங்குமிடங்களிலேகிடந்து கெபியிலேபதிவிருக்கிறபோது அவைகளின் ஆசையைத் தீர்ப்பாயோ?

௩ காக்கைக்குஞ்சுகள் பராபரனைநோக்கிக் கூப்பிட்டு, ஆகாரமில்லாமல் பறந்து அலைகிறபோது அவைகளுக்கு அவைகள் இரையைச் சவதரிக்கிறவன் யார்?

௪ ¶ மலையாடுகள் ஈனும்காலத்தை அறிவாயோ? மான்கள் குட்டிபோடுதலைக் கவனித்தாயோ?

௫ அவைகள் சினைப்பட்டிருந்து வருகிற மாதங்களை நீ எண்ணி, அவைகள் ஈனும் காலத்தை அறிவாயோ?

௬ அவைகள் குனிந்து நொந்து தங்கள் குட்டிகளைப் போட்டு, தங்கள் வாதைகளை நீங்கப்பண்ணும்.

௭ அவைகளின் குட்டிகள் பலத்துப் பயிரிலே வளர்ந்து புறப்பட்டுப்போய்த் திரும்ப அவைகளண்டைக்கு வராதிருக்கும்.

௮ காட்டுக்கழுதையைத் தன் இச்சையாய்த் திரியவிட்டவன் யார்? அந்தக் காட்டுக் கழுதையின் கட்டுகளை அவிழ்த்தவன் யார்?

௯ அதற்கு நாம் வனாந்தரத்தை வீடாகவும், உப்புத்தரையை வாசஸ்தலங்களாகவும் கொடுத்தோம்.

௰ அது பட்டணத்தினுடைய இரைச்சலை நகைத்து ஆளோட்டியின் கூக்குரல்களைக் கேளாதிருக்கின்றது.

௰௧ அது மலைகளிலே தன் மேய்ச்சலைப் பராமரித்துச் சகலவித பச்சைப்பூண்டுகளைத் தேடித்திரிகின்றது.

௰௨ ¶ காட்டெருமை உன்னைச் சேவிக்க விரும்புமோ? அது உன் முன்னணைக்குமுன்பாக இராத்தங்குமோ?

௰௩ படைச்சால்களை உழ நீ காட்டெருமையைக் கயிறுபோட்டு ஏரிலே பிணைப்பாயோ? அது உனக்குப் பின்னாகப் பள்ளங்களை நிரவுமோ?

௰௪ அதின் பெலன் பெரியதென்று நீ அதை நம்பிக்கொண்டு உன் வேலையை அதற்கு ஒப்புவிப்பாயோ?

௰௫ உன் விதைகளின் பலனை அது திரும்பக் கொண்டுவந்து, உன் களஞ்சியத்தில் சேர்க்கும் என்று நீ அதை நம்புவாயோ?

௰௬ தீக்குருவிகள் தங்கள் செட்டைகளை அசைவாட்டி ஓடுகின்றன; கொக்குத் தன் செட்டைகளாலும், இறகுகளாலும் பறக்கிறதற்குச் சரியல்லவோ?

௰௭ அது தன் முட்டைகளைத் தரையிலே யிட்டு, அவைகளைத் தூளிலே அனலுறைக்

கப் பின்வைத்துவிட்டுப் போய்,

௰௫ ஒருவர் கால் அவைகளிலே படுமென்கிறதையும், காட்டுமிருகங்கள் அவைகளை மிதித்துவிடும் என்கிறதையும் மறந்துவிடும்.

௰௬ அது தன் குஞ்சுகள் தன்னுடையதல்லாததுபோல அவைகளைக் காக்காத கடின குணமாயிருக்கும்; அவைகளுக்காக அது ஐயமற்றிருக்கிறபடியினாலே அது பட்ட வருத்தம் அபத்தமாம்.

௨௰ ஏனெனில் பராபரன் அதற்கு ஞானத்தை விலக்கிவைத்து, அதற்குச் சற்றாகிலும் உணர்வைக் கொடாதிருக்கிறார்.

௨௧ அது உயர எழும்பும் வேளையிலே குதிரையையும், அதின்மேல் ஏறியிருக்கிறவனையும் நகைக்கின்றது.

௨௨ ¶ குதிரைக்கு நீ வீரியத்தைக் கொடுப்பாயோ? அதின் கழுத்துக்கு நீ கனைக்குதலை உடுத்துவிப்பாயோ?

௨௩ ஒரு வெட்டுக்கிளியை மிரட்டுகிறதுபோல அதை மிரட்டுவாயோ? அதினுடைய நாசியின் முக்கியம் பயங்கரமாயிருக்கின்றது.

௨௪ பாளயம் இறங்குகையில் அது வீரியமாய்க் களித்து, ஆயுதங்களைத் தரித்தவருக்கு எதிராகப் புறப்படும்.

௨௫ அது கலங்காமலும், பட்டையத்துக்குப் பின்வாங்காமலும் பயப்படுதலை நகைக்கும்.

௨௬ அம்பறாத்தூணியும், மின்னுகிற இட்டியும், அம்பும், அதற்கு எதிராக இரைகிறபோது,

௨௭ அது உதறிப் படபடென்று தரையைக் குழிபறித்து, எக்காளத்தின் தொனியை எண்ணாதேபோகும்.

௨௮ எக்காளத்தொனிக்கு அது நிகியென்று கனைக்கின்றது; யுத்தத்தையும், சேர்வைக்காரரின் ஆரவாரத்தையும், ஆர்ப்பரிப்பையும் தூர இருந்து மோப்பம் பிடிக்கின்றது.

௨௯ ¶ உன்னுடைய உணர்வினாலே கழுகு பறந்து தெற்குக்கு எதிராகத் தன் செட்டைகளை விரிக்கிறதோ?

௩௰ உன்னுடைய கற்பனையினாலே கழுகு உயரப்பறந்து உயரத்திலே தன் கூட்டைக் கட்டுமோ?

௩௧ அது கன்மலையிலும், கன்மலையின் நுனியிலும், அரணான தலத்திலும் வாசம் பண்ணி இராத்தங்கும்.

௩௨ அங்கேயிருந்து இரையை வேவுபார்க்கின்றது; அதின் கண்கள் தூர இருந்து அதை நோக்குகின்றன.

௩௩ அதின் குஞ்சுகள் இரத்தத்தை உறிஞ்சும்; பிணங்கள் எங்கேயோ அங்கே அது சேருமென்றார்.

௩௪ ¶ பின்னையும் கர்த்தர் யோபுக்கு உத்தரவுகொடுத்துச் சொன்னதாவது:

௩௫ சர்வத்துக்கும் வல்லவரோடே நீ வழக்காடினதற்குப் புத்திவந்ததோ? பராபரனைக் குற்றம்பிடிக்கிறவன் இவைகளுக்கு உத்தரவு சொல்லக்கடவானென்றார்.

௩௬ ¶ அப்போது யோபு கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௩௭ இதோ நான் அற்பனடைவாய்ப் பேசினேன்; நான் உமக்கு என்ன மறு உத்தரவுசொல்லுவேன்; என் கையினால் என் வாயைப் பொத்திக்கொள்ளுகிறேன்.

௩௮ நான் ஒருதரம் இரண்டுதரம் பேசினேன், இனி நான் பிரதியுத்தாரம் கொடுக்காமலும் பேசாமலும் இருப்பேனென்றான்.

## ௪௰. அதிகாரம்.

அப்போது கர்த்தர் பெருங்காற்றில் இருந்து யோபுக்கு உத்தரவுகொடுத்துச் சொன்னதாவது:

௨ ¶ இப்போதும் புருஷனைப்போல நீ உன் அரையைக் கட்டிக்கொள்; நாம் உன்னைக் கேட்போம், நீ நமக்கு அறிவி.

௩ நீ நம்முடைய நியாயத்தையும் அபத்தமாக்குவாயோ? நீ உன்னை நீதிமானாக்கிக் கொள்ளும்படிக்கு நம்மை ஆகாதவர் என்று தீர்ப்பாயோ?

௪ பராபரனுடைய புயத்தைப்போல உனக்குப் புயமுண்டோ? அவரைப்போலச் சத்

தமாய் இடியை முழங்கப்பண்ணுவாயோ?

௰ இப்போதும் நீ முக்கியத்தாலும், மகத்துவத்தாலும் உன்னை அலங்கரித்து, மகிமையையும் கனத்தையும் தரித்துக்கொள்.

௧௧ நீ உன் கோபத்தின் மூர்க்கங்களை இறைத்து, அகந்தையுள்ளவனையெல்லாம் பார்த்து அவனைத் தாழ்த்து.

௧௨ பெருமையுள்ளவனையெல்லாம் நோக்கி, அவனைப் பணியப்பண்ணி, துன்மார்க்கரை அவர்களிருக்கிற ஸ்தலத்திலே நிர்மூலமாக்கு.

௧௩ நீ அவர்களை ஏகமாய்ப் புழுதியிலே புதைத்து, அவர்கள் முகங்களை அந்தரத்திலே கட்டிப்போடு.

௧௪ அப்போது உன் வலதுகை உனக்கு இரட்சிப்புண்டுபண்ணும் என்று நாமும் உன்னைப் புகழுவோம்.

௧௫ ¶ இப்போதும் கடல்குதிரையை நீ நோக்கிப்பார்; உன்னைப்போல அதையும் உண்டாக்கினோம்; அது மாட்டைப்போலப் புல்லைத் தின்னும்.

௧௬ அதோ அதினுடைய பெலன் அதின் இடுப்பிலும், அதின் வீரியம் அதினுடைய வயிற்றின் நரம்புகளிலுமிருக்கின்றன.

௧௭ அது தன் வாலைக் கேதுருமரத்தைப்போல நீட்டுகின்றது; அதினுடைய இடுப்பின் நரம்புகள் பின்னிக்கொண்டிருக்கின்றன.

௧௮ அதின் எலும்புகள் கெட்டியான வெண்கலத்தைப்போலும், அதின் அஸ்திகள் இரும்புக் கம்பிகளைப்போலும் இருக்கின்றன.

௧௯ பராபரன் நடத்தின கிரியைகளில் அது பிரதான ஒரு கிரியை, அதை உண்டாக்கினவர் அதற்கு அதின் பட்டையத்தைக்கூடக் கட்டிவைத்தார்.

௨௰ மேடுகள் அதற்கு மேய்ச்சலை முளைக்கப்பண்ணுகையால், சகலவித காட்டுமிருகங்களும் அங்கே விளையாடிக்கொண்டிருக்கும்.

௨௧ அது நிழலுள்ள செடிகளின்கீழும், நாணலின் மறைவிலும், உளையிலும் படுத்துக்கொள்ளும்.

௨௨ தழைகளின் நிழல் அதைக் கவிந்து, நதியின் அலரிகள் அதைச் சூழ்ந்துகொள்ளும்.

௨௩ இதோ நதி புரண்டாலும் அது திகிரிக்காது; யோர்தான் நதியத்தனை தண்ணீர் அதின் வாயளவு வந்தாலும் அது நம்பிக்கையாயிருக்கும்.

௨௪ அதின் கண்கள் பார்த்திருக்க அதைப் பிடிப்பார்களோ? மூக்கணாங்கயிறுகளை அதின் மூக்கில் குத்தலாமோ?

௨௫ ¶ முதலையைத் தூண்டிலினாலே அல்லது அதின் நாக்கை நீ தாழவிடுகிற கயிற்றினாலே பிடித்திருப்பாயோ?

௨௬ அதின் மூக்கை நார்க்கயிறுபோட்டுக் கட்டுவாயோ? குறட்டினால் அதின் தாடையை உருவக்குத்துவாயோ?

௨௭ அது உனக்கு அநேக விண்ணப்பங்களைப்பண்ணி, உன்னைப் பார்த்து இச்சக வார்த்தைகளைச் சொல்லுமோ?

௨௮ அது உன்னோடே உடம்படிக்கைபண்ணுமோ? அதைச் சதாகாலம் அடிமை கொள்ளுவாயோ?

௨௯ ஒரு குருவியோடே விளையாடுகிறது போல நீ அதனோடே விளையாடி, அதை நீ உன் பெண்பிள்ளைகளண்டையிலே கட்டி வைப்பாயோ?

௩௰ கூட்டாளிகள் அதைப் பிடிக்கப் பிரயத்தனப்பட்டு, அதை வியாபாரிகளுக்குப் பங்கிடுவார்களோ?

௩௧ நீ அதின் தோலிலே அநேக அம்புகளையும், அதின் தலையிலே அநேக மண்டாக்களையும் எறிவாயோ?

௩௨ அதின்மேல் உன்கையைப்போடு, யுத்தத்தை நினை, இனி அப்படிச் செய்யாய்.

௩௩ இதோ அதைப் பிடிக்கலாம் என்று நம்பினவன் மோசம்போய் அதைப் பார்த்தவுடனே விழுவானல்லவோ?

## சக. அதிகாரம்.

அதை எழுப்பத்தக்க தயிரியவானில்லாதிருக்கையில் நமக்குமுன்பாக நிலைநிற்பவன் யார்?



௨ தனக்குப் பதில்கொடுக்கப்பட முந்தி

நமக்குக் கொடுத்தவன் யார்? எல்லா வானங்களின்கீழிருக்கிறது நம்முடையது.

௩ ¶ அதின் கனுக்களும், அதின் வீரியமும், அதின் உடல் இசைவின் நேர்த்தியும் இன்னதென்று நாம் சொல்லாதிருப்பதில்லை.

௪ அது மூடியிருக்கிற அதின் உடுப்பைக் கிளப்புபவன் யார்? அதின் இரண்டு தாடைகளின் நடுவே கடிவாளம் போடத்தக்கவன் யார்?

௫ அதினுடைய முகத்தின் கதவைத் திறப்பவன் யார்? சுற்றுமிருக்கிற அதினுடைய பல்லுகள் பயங்கரமானவைகள்.

௬ முத்திரைப்பதிப்பாய் அழுத்தமாய் அடர்த்தியான அதின் பரிசைகளின் அரணிப்பு மகா முக்கியமுள்ளது.

௭ அவைகள் நடுவே காற்றும் புகமாட்டாத நெருக்கமாய் அவைகள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன.

௮ அவைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு இணைபிரியாமல் பிடித்துக்கொண்டிருக்கின்றன.

௯ அதின் தும்மல்கள் வெளிச்சத்தைப் பிரகாசிக்கப்பண்ணுகின்றன; அதின் கண்கள் விடியத்தாரத்தின் புருவங்களைப்போலிருக்கின்றன.

௰ அதின் வாயிலிருந்து எரிகிற பந்தங்கள் புறப்பட்டு, அக்கினிப் பொறிகள் தெறிக்கப்படும்.

௰௧ கொதிக்கிற சட்டியிலும், கொப்பரையிலும் இருந்து புறப்படுகிறதுபோல, அதின் நாசிகளிலிருந்து புகை புறப்படுகின்றது.

௰௨ அதின் சுவாசம் கரிகளைக் கொளுத்திவிடும்; அதின் வாயிலிருந்து சுவாலை புறப்படும்.

௰௩ அதின் கழுத்திலே பெலன் வாசமாயிருக்கின்றது; சஞ்சலப்படுத்துதல் அதற்குக் களிப்பாயிருக்கும்.

௰௪ அதின் உடல்கூறுகள் அசையாத கெட்டியாய் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருக்கின்றன.

௰௫ அதின் இருதயம் கல்போலவும், எந்திரத்தின் அடிக்கல்லைப்போலவும் கெட்டியாயிருக்கிறது.

௰௬ ¶ அது எழும்பும்போது பலசாலிகள் பயந்து, அது நொறுக்கிவிடுமென்று பாவநிவிர்த்தியைத் தேடுகிறார்கள்.

௰௭ யாவனொருவன் அதின் அண்டையில் சேர்ந்தால், அவனுடைய பட்டையமாகிலும், இட்டி, வல்லையம், நேரிசமென்கிலும் அதற்கு நிற்காது.

௰௮ அது இரும்பை வைக்கோலாகவும் வெண்கலத்தை உளுத்த மரமாகவும் எண்ணுகிறது.

௰௯ அம்பு அதைத் துரத்தாது; கவண் கல்லுகள் அதற்குத் துரும்பாகும்.

௨௰ அது பெருங்கல்லுகளைத் தாளடிகளாக எண்ணி, இட்டியின் அசைக்குதலை நகைக்கும்.

௨௧ ¶ அதின் கீழாகக் கூர்மையான கல்லுகள் கிடந்தாலும், அது சேற்றின்மேல் ஓடுகிறதுபோலக் கருக்கானதின்மேல் ஓடும்.

௨௨ அது ஆழத்தைக் காய்கிற பானையைப்போலப் பொங்கப்பண்ணிக் கடலைத் தயிலத்தைப்போலக் கலக்குகிறது.

௨௩ அது தனக்குப் பின்னாக இருக்கிற வழியை விளங்கப்பண்ணுகிறதினால், ஆழமானது வெளுப்பான நரையைப்போலக் காண்பிக்கும்.

௨௪ தரையின்மேல் வளருகிறதொன்றும் அதற்கு ஒப்பல்ல; அது பயமற்றிருக்க உண்டுபண்ணப்பட்டது.

௨௫ அது மேட்டிமையானதையெல்லாம் கொஞ்சமாகப் பார்க்கிறது; அது பெருமையான சீவன்களுக்கெல்லாம் இராசாவாயிருக்கிறதென்றார்.

## ௪௨. அதிகாரம்.

அப்போது யோபு கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௨ தேவரீர் சகலத்தையும் செய்ய வல்லவர்; தேவரீர் செய்ய நினைத்தது தடைப

டக்கூடாதென்கிறதை அறிந்திருக்கிறேன்.

௩ தான் அறியாத ஆலோசனையை மூடி வைக்கத்தக்கவன் யார்? ஆகையால் நான் உணராததையும், என் புத்திக்கு மிஞ்சினதையும், நான் அறியாததையும் அலப்பினேனென்கிறேன்.

௪ இப்போதும் நீர் கேள்விகொடும், அப்போது நான் பேசுவேன்; உம்மைக் கேட்பேன், நீர் என்னைப் போதியும்.

௫ என் செவியினால் உம்முடைய சொல் கேட்டேன்; இப்போது என் கண்ணும் உம்மைப் பார்க்கிறது.

௬ ஆகையால் நான் என்னை அருவருத்து, தூளிலும் சாம்பலிலுமிருந்து மனஸ்தாபப்படுகிறேனென்றான்.

௭ ¶ கர்த்தர் இந்த வார்த்தைகளை யோபோடே பேசினபின் சம்பவித்ததேதெனில், கர்த்தர் தேமானியனான எலிப்பாசைப் பார்த்துச் சொன்னதாவது: உன்மேலும் உன்னுடைய இரண்டு சிநேகிதர்மேலும் நமக்குக் கோபம் மூண்டது; ஏனெனில் நம்முடைய தாசனாகிய யோபு பேசினது போல, நீங்கள் நம்மைக்குறித்து நிதானமாய்ப் பேசினதில்லை.

௮ இப்போதும் நீங்கள் ஏழு எருதுகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும் பிடித்துக்கொண்டு, நம்முடைய தாசனாகிய யோபின் அண்டைக்குப்போய், உங்களுக்காகச் சர்வாங்கதகனங்களைப் பலியிடுங்கள்; நம்முடைய தாசனாகிய யோபும் உங்களுக்காக வேண்டுதலைச் செய்யக்கடவான்; ஏனென்றால் நாம் உங்களை உங்கள் மூடத்தனத்துக்குத்தக்கதாக நடத்தாதபடிக்கு, அவன் முகத்தையே பார்ப்போம்; ஏனெனில் நம்முடைய தாசனாகிய யோபு பேசினதுபோல, நீங்கள் நம்மைக்குறித்து நிதானமாய்ப் பேசினதில்லையென்றார்.

௯ ¶ அப்போது தேமானியனான எலிப்பாசும் சூகியனான பில்தாதும் நாகமாத்தியனான சோப்பாரும் போய், கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி செய்தார்கள்; அப்போது கர்த்தர் யோபின் முகத்தைப் பார்த்தார்.

௰ ¶ யோபு தன் சிநேகிதருக்காக வேண்டிக்கொள்ளுகையில், கர்த்தர் அவன் சிறையிருப்பை மாற்றினார்; யோபுக்கு முன்னிருந்தவையெல்லாவற்றையும் பார்க்கிலும் இரண்டத்தனையாய்க் கர்த்தர் அவனுக்கு வரப்பண்ணினார்.

௰௧ அப்போது அவனுடைய எல்லாச் சகோதரரும் சகோதரிகளும் முன் அவனுக்கு அறிமுகமான அனைவரும் அவனண்டைக்கு வந்து, அவனுடனே, அவன் வீட்டிலே அப்பம்புசித்து, கர்த்தர் அவன்மேல் வரவிட்டிருந்த சகல தீங்கின்நிமித்தம் அவனுக்காக அங்கலாய்த்து, அவனுக்கு ஆறுதல் சொல்லி, அவரவர் அவனுக்கு ஒவ்வொரு தங்கக்காசையும், அவரவர் ஒவ்வொரு பொன் ஆபரணத்தையும்அவனுக்குக் கொடுத்தார்கள்.

௰௨ ¶ யோபின் முன்னிருப்பைப்பார்க்கிலும் கர்த்தர் அவன் பின்னிருப்பை ஆசீர்வதித்ததினால் அவனுக்குப் பதினாலாயிரம் ஆடுகளும், ஆறாயிரம் ஒட்டகங்களும், ஆயிரம் ஏர்க்குண்டைகளும், ஆயிரம் கழுதைகளும் உண்டாயின.

௰௩ ஏழு குமாரரும், மூன்று குமாரத்திகளும் அவனுக்குப் பிறந்தார்கள்.

௰௪ மூத்தவளுக்கு எமிமாளென்ற பேரும், இரண்டாவதுக்குக் கெத்சியாளென்ற பேரும், மூன்றாவதுக்குக் கேரேனாப்பூக் என்ற பேரும் இட்டான்.

௰௫ தேசத்திலெங்கும் யோபின் குமாரத்திகளைப்போலச் சவுந்தரியமான பெண்பிள்ளைகள் காணப்பட்டதில்லை; அவர்களுக்கு அவர்கள் தகப்பன் அவர்கள் சகோதரரின் நடுவிலே சுதந்தரம் கொடுத்தான்.

௰௬ ¶ இதற்குப்பிறகு யோபு நூற்றுநாற்பது வருஷம் உயிரோடிருந்து, நாலு தலைமுறையாகத் தன் பிள்ளைகளையும் தன் பிள்ளைகளுடைய பிள்ளைகளையும் கண்டான்.

௰௭ பிற்பாடு யோபு முதிர்ந்தவனும் பரிபூரணவயதுள்ளவனுமாய் மரித்தான்.

# ஞான சங்கீத புஸ்தகம்.

## க. சங்கீதம்.

ஆகாதவர்களுடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், சரசக்காரர் உளுக்காந்திருக்கிற இடத்தில் உளுக்காராமலும்,* *சங். உக. ச. உ கொரி. கூ. யச. ழு. எபே. ரு. யக. க கொரி. யரு. ககூ.

உ கர்த்தருடைய வேதத்தின்மேல் பிரியமாயிருந்து, அவருடைய வேதத்தில் இரவும்பகலும் தியானிப்பாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.* *சங். ளயகூ. க. ழு. ருமோ. கூ. கூ, கூ. கொலோ. ௩. யகூ.

௩ அவன் நீர்வாய்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்திலே தன் கனியைத் தந்து, இலை உதிராதிருக்கிற மரத்தைப்போல இருப்பான்; அவன் செய்வதெல்லாம் வாய்க்கும்.* *சங். கூஉ. ய௩. ழு. எரே. யஎ. அ. யோசு. க. அ.

ச ¶ ஆகாதவர்கள் அப்படியிராமல் காற்றுப் பறக்கடிக்கும் பதரைப்போல இருக்கிருர்கள்.* *மத். ௩. யஉ.

ரு ஆகையால் ஆகாதவர்கள் நியாயத்தீர்ப்பிலும், பாவிகள் நீதிமான்களின் சபையிலும் நிலைநிற்பதில்லை.

கூ ஏனென்றால் கர்த்தர் நீதிமான்களின் வழியை அறிந்திருக்கிருர்; ஆகாதவர்களின் வழியோ அழியும்.

## உ. சங்கீதம்.

சாதிகள் கொந்தளித்து, சனசதளங்கள் விருதாக் காரியத்தைச் சிந்திப்பானேன்?* *அப். ச. உரு, உஅ.

உ கர்த்தருக்கு விரோதமாகவும், அவர் அபிஷேகம்பண்ணினவருக்கு விரோதமாகவும், பூமியின் இராசாக்கள் எழும்பிக்கொண்டு, தலைவர் ஏகமாய் ஆலோசனை பண்ணி,

௩ அவர்கள் கட்டுகளை அறுத்து, அவர்கள் கயிறுகளை நம்மைவிட்டு எறிந்துபோடுவோமென்கிருர்கள்.* *எரே. உ. உய.

ச ¶ பரமண்டலங்களில் வாசமாயிருக்கிறவர் நகைப்பார்; ஆண்டவர் அவர்களைப் பரியாசம் பண்ணுவார்.* .*சங். ருக. கூ. வாக். க. உகூ, உஎ.

ரு அப்போது தம்முடைய கோபத்திலே அவர்களோடே பேசி, தம்முடைய உக்கிரத்திலே அவர்களைக் கலங்கப்பண்ணுவார்.

கூ நாம் நம்முடைய பரிசுத்த பர்வதமாகிய சீயோன்மீதில் நம்முடைய இராசாவை அபிஷேகம் பண்ணினேம்.

எ ¶ தீர்மானத்தின் விபரம்சொல்லுவேன்; கர்த்தர் என்னுடனே, நீர் நம்முடைய குமாரன்; இன்று நாம் உம்மைச் செனிப்பித்தோமென்றும்,* *அப். ய௩. ௩௩. எபி. க. ரு: ரு. ரு.

அ ¶ நம்மைக் கேளும், அப்போது சாதிகளை உமக்குச் சுதந்தரமாகவும், பூமியின் எல்லைகளை உமக்குச் சொந்தமாகவும் கொடுப்போம்.* *சங். உஉ. உஅ, உகூ. எஉ. அ, யக.

கூ இருப்புக்கோலால் அவர்களை நொறுக்கி, குயக்கலத்தைப்போல அவர்களைச் சிதறடிப்பீரென்றும் சொன்னர்.* *வெளி. உ. உகூ, உஎ: யஉ. ரு: யகூ. யரு.

ய ¶ இப்போதும் இராசாக்களே, உணர்வு

டையுங்கள்; பூமியின் நியாயாதிபதிகளே, புத்திமான்களாய் நடந்துகொள்ளுங்கள்.

௰௧ பயத்துடனே கர்த்தருக்கு ஊழியம் செய்யுங்கள்; நடுக்கத்துடனே களிகூருங்கள்.* *பிலி. ௨. ௰௨.

௰௨ குமாரன் கோபமடையாமலும் நீங்கள் வழியில் அழியாமலுமிருக்கும்படிக்கு அவரை முத்திசெய்யுங்கள்; ஏனென்றால் கொஞ்சக்காலத்திலே அவருடைய கோபம் பற்றியெரியும்; அவரை அண்டிக் கொள்ளுகிற யாவரும் பாக்கியவான்கள்.*
*வெளி. ௬. ௰௬, ௰௭. சங். ௩௪. ௬.

## ௩. சங்கீதம்.

(தாவீது தன் குமாரன் அப்சலோமுக்குத் தப்பி ஓடிப்போகையிலே பாடின சங்கீதம்.)

கர்த்தாவே என் சத்துருக்கள் எத்தனையாய்ப் பெருகினார்கள்; எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள் அநேகர்.*
*சங். ௨௫. ௰௯.

௨ அவனுக்குப் பராபரனிடத்திலே இரட்சிப்பில்லை என்று என் ஆத்துமாவைக்குறித்துச் சொல்லுகிறவர்கள் அநேகராயிருக்கிறார்கள்; சேலா.* *௨ சாமு. ௰௬. ௭, ௮.

௩ ¶ ஆனால் கர்த்தாவே, தேவரீர் எனக்கான கேடயமும், என் மகிமையும், என் தலையை உயர்த்துகிறவருமாயிருக்கிறீர்.*
*சங். ௭. ௰௧. ௧ மோ. ௰௫. ௧.

௪ என் சத்தத்தினாலே கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது தமது பரிசுத்த பருவதத்திலிருந்து என் விண்ணப்பத்தைக் கேட்டார்; சேலா.

௫ நான் படுத்துக்கொண்டு நித்திரைபண்ணினேன், விழித்துக்கொண்டேன், ஏனெனில் கர்த்தர் என்னைத் தாங்குகிறார்.*
*சங். ௪. ௬. வாக். ௩. ௨௪.

௬ சுற்றிலும் எனக்கு விரோதமாகப் பாளயமிறங்குகிற பதினாயிரம்பேருக்குப் பயப்படேன்.* *சங். ௨௭. ௩.

௭ கர்த்தாவே, எழுந்திரும்; என் பராபரனே என்னை இரட்சியும்; ஏனெனில் நீர் என் பகைஞரெல்லாரையும் தாடையிலே அடித்து, ஆகாதவர்களுடைய பல்லுகளைத் தகர்த்துவிடுகிறீர்.

௮ இரட்சிப்பு கர்த்தருடையதே; தேவரீருடைய ஆசீர்வாதம் உம்முடைய சனத்தின்மேலிருப்பதாக; சேலா.*
*எரே. ௩. ௨௩. வெளி. ௭. ௰; ௰௯. ௧.

## ௪. சங்கீதம்.

(இன்னூரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் நீதியின் பராபரனே நான் கூப்பிடுகையில் என்னைக் கேளும்; நெருக்கத்தில் இருக்கிற எனக்கு விசாலமுண்டாக்கினீர்; என்மேல் இரங்கி என் விண்ணப்பத்தைக் கேளும்.* *சங். ௫. ௨; ௨௭. ௭.

௨ ¶ மனுப்புத்திரரே, எந்தமட்டும் என் கீர்த்தியை அவமானமாக்கி, அவத்தத்தைச் சிநேகித்து, பொய்யைத் தேடுவீர்கள்; சேலா.

௩ கர்த்தர் தம்முடைய சன்மார்க்கனை அதிசயமாய் நடத்துகிறாரென்று அறியுங்கள்; நான் கர்த்தரைநோக்கிக் கூப்பிடுகையில் அவர் கேட்பார்.

௪ நீங்கள் சினம் அடைந்தால் பாவம்செய்யாதிருங்கள்; உங்கள் படுக்கையில் உங்கள் இருதயத்திலே பேசி அமர்ந்திருங்கள்; சேலா.* *எபே. ௪. ௨௬.

௫ நீதியின்பலிகளைச் செலுத்தி, கர்த்தரின்மேல் நம்பிக்கையாயிருங்கள்.*
*சங். ௫௧. ௰௯. ஹ.

௬ ¶ நமக்கு நன்மை காண்பிப்பவன் யாரென்று சொல்லுகிறவர்கள் அநேகர்; உம்முடைய முகத்தின் வெளிச்சத்தை எங்கள்மேல் ஏறெடும் கர்த்தாவே.*
*சங். ௩௧. ௰௭. ௪ மோ. ௬. ௨௬.

௭ அவர்களுக்குத் தானியமும் திராட்சப்பழஇரசமும் பெருகியிருக்கிற காலத்தினுடைய சந்தோஷத்திலும், அதிக சந்தோஷத்தை என் இருதயத்திலே தந்தீர்.

௮ சமாதானத்திலே சயனித்துக்கொண்டும், நித்திரைபண்ணியுமிருப்பேன்; ஏனெனில் கர்த்தாவே, தேவரீர் ஒருவரே

என்னைச் சுகமாய்த் தங்கப்பண்ணுகிறீர்.*
* சங். ௩. ௬.

## ரு. சங்கீதம்.

(நெகிலோத்தில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் வார்த்தைகளுக்குச் செவிகொடும்; என் தியானத்தை உணர்ந்துகொள்ளும்.* * சங். ௪. ௨: ௰எ. ௧.

௨ என் இராசாவே, என் பராபரனே, என் கூப்பிடுதலின் சத்தத்தைக் கவனியும், ஏனெனில் உம்மைநோக்கி விண்ணப்பஞ் செய்வேன்.

௩ கர்த்தாவே, காலமே என் சத்தத்தைக் கேட்பீராக; காலமே உமக்கு நேரே வந்து ஆயத்தமாகிக் காத்திருப்பேன்.*
* சங். அஅ. ௰௪.

௪ ஏனென்றால் தேவரீர் ஆகாமியத்தை விரும்புகிற தேவனல்ல, பொல்லாதவன் உம்மிடத்திலே தரிகொள்ளமாட்டான்.*
* சங். ௩௪. ௰எ.

௫ வீம்புக்காரர் உம்முடைய கண்களுக்கு முன்பாக நிலைநிற்பதில்லை; எல்லா அக்கிரமக்காரரையும் பகைக்கிறீர்.*
*மத். எ. ௨௩.

௬ பொய்பேசுகிறவர்களை அழிப்பீர்; இரத்தப்பிரியனையும், சூதுள்ள மனுஷனையும் கர்த்தர் அருவருக்கிறார்.

எ நானோ உம்முடைய மிகுந்த கிருபையினாலே உமது வீட்டிக்குள்ப் பிரவேசித்து, உம்முடைய பரிசுத்த தேவாலயச் சந்நிதியில் உமக்குப் பயந்து பணிந்துகொள்ளுவேன்.

அ ¶ கர்த்தாவே, என் சத்துருக்களின் நிமித்தம் என்னை உம்முடைய நீதியிலே நடத்தி, எனக்குமுன்பாக உம்முடைய வழியைச் செம்மைப்படுத்தும்.*
* சங். ௨எ. ௰௧.

௯ ஏனெனில் அவர்கள் வாயிலே நிசமில்லை; அவர்கள் உள்ளம் கேடுபாடுகள்; அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதக்குழியாயிருக்கின்றது; தங்கள் நாவினால் இச்சகம் பேசுகிறார்கள்.*
* உரோ. ௩. ௰௩.

௰ பராபரனே, அவர்கள் தங்கள் ஆலோசனைகளை விட்டுவிடும்படிக்கு, அவர்களைக் குற்றவாளிகளாக்கும்; அவர்கள் துரோகங்களினுடைய திரட்சியினிமித்தம் அவர்களைத் தள்ளிவிடும்; ஏனென்றால் தேவரீருக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினார்கள்.

௰௧ ¶ ஆனால் உம்மை அண்டிக்கொள்ளுகிறவர்கள் எல்லாரும் சந்தோஷித்து. என்றென்றைக்கும் கெம்பீரிப்பார்களாக; ஏனெனில் அவர்களைக் காப்பாற்றுகிறீர்; உம்முடைய நாமத்தைச் சிநேகிக்கிறவர்கள் உம்மிலே களிகூருவார்கள்.*
* சங். ௬௧. ௪.

௰௨ ஏனென்றால் கர்த்தாவே, தேவரீர் நீதிமானை ஆசீர்வதித்து, அவனைத் தயையென்ற கேடயத்தினாலே சூழ்ந்துகொள்வீர்.

## ௬. சங்கீதம்.

(எண்ணரம்புக் கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கோபத்தில் என்னைக் கடிந்துகொள்ளாதிரும், உம்முடைய உக்கிரத்தில் என்னைத் தண்டியாதிரும்.*
* சங். ௩அ. ௨. எரே. ௰. ௨௪.

௨ என்மேல் இரங்கும் கர்த்தாவே, ஏனெனில் நான் பெலனற்றிருக்கிறேன்; என்னைக் குணமாக்கும் கர்த்தாவே, ஏனெனில் என் எலும்புகள் கலங்கியிருக்கின்றன.

௩ என் ஆத்துமா மிகவும் கலங்கியிருக்கின்றது; கர்த்தாவே, நீர் எந்தமட்டும் இரங்காதிருப்பீர்.* * சங். எ௬. ௫.

௪ திரும்பும் கர்த்தாவே, என் ஆத்துமாவை விடுவியும், உம்முடைய கிருபையின் நிமித்தம் என்னை இரட்சியும்.

௫ ஏனென்றால் மரணத்தில் உம்மை நினைவுகூருவதில்லை; பாதாளத்தில் உம்மைத் துதிப்பவன் யார்?

௬ என் பெருமூச்சுகளால் இளைத்தேன்:

இராமுழுதும் என் மெத்தையை மிகவும் இரிக்கப்பண்ணி, என் கண்ணீரால் என் கட்டிலை நனைக்கிறேன்.

௭ என் கண்கள் சலிப்பினால் குழிவிழுந்து போயின; என் சத்துருக்கள் அனைவர்நிமித்தம் திரைந்துபோயிற்று.* *சங். ௩௧. ௰.

௮ ¶ அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்னைவிட்டு அகன்றுபோங்கள்; ஏனென்றால் கர்த்தர் என் அழுகையின் சத்தத்தைக் கேட்டார்.

௯ கர்த்தர் என் விண்ணப்பத்தைக் கேட்டார்; கர்த்தர் என் செபத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்.* *சங். ௰. ௰௭.

௰ என் பகைஞரெல்லாரும் வெட்கி, மிகவும் கலங்கிப்போவார்கள்; அவர்கள் பின்னாகத் திரும்பி, அசுப்பிலே வெட்கப்படுவார்கள்.* *சங். ௩௫. ௪: ௪௰. ௰௫, ௰௬. ௨ சாமு. ௰௬. ௭, ௮, ௰௧.

## ௭. சங்கீதம்.

(எமீனியின் குமாரனாகிய கூஷியினுடைய வார்த்தைகள் நிமித்தம் தாவீது கர்த்தரைநோக்கிப் பாடின துயரகீதம்.)

என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்; என்னைப் பின்தொடருகிறவர்களெல்லாருக்கும் தேவரீர் என்னை விலக்கி இரட்சித்து,

௨ சத்துரு சிங்கம்போல என் ஆத்துமாவைப் பிடித்துப்போய், விடுவிக்கிறவன் இல்லாமையால் பீறாதபடிக்கு என்னைத் தப்பப்பண்ணும்.* *சங். ௰. ௯.

௩ ¶ என் பராபரனாகிய கர்த்தாவே, நான் இதைச் செய்ததும், என் கைகளில் நியாயக்கேடிருக்கிறதும்,* *யோபு. ௩௧. ௭. மு.

௪ எனக்கு முகாந்தரமில்லாமல் இடுக்கண்செய்தவனைத் தப்பவேபண்ணின நான் என்னோடே சமாதானமாயிருந்தவனுக்குத் தீமைசெய்ததும் உண்டானால்,

௫ பகைஞன் என் ஆத்துமாவைத் தொடர்ந்துபிடித்து, என் பிராணனைத் தரையிலே தள்ளி மிதித்து, என் கனத்தைத் தூளிலே தாழ்த்திப்போடக்கடவான்; சேலா.

௬ ¶ கர்த்தாவே, நீர் உம்முடைய கோபத்தில் எழுந்திருந்து எனக்கு இடுக்கண்செய்கிறவர்களுடைய மூர்க்கங்களின்நிமித்தம் உயர்ந்து, எனக்காக விழித்துக்கொள்ளும்; ஏனெனில் நியாயத்தீர்ப்பைக் கற்பித்தீரே.

௭ அப்போது சனங்களுடைய கூட்டம் உம்மைச் சூழும்; அவர்களுக்காக உயரத்துக்குத் திரும்பும்.* *சங். ௱௪௨. ௮.

௮ கர்த்தர் சனங்களுக்கு நியாயம்செய்வார்; கர்த்தாவே, என் நீதியின்படியும் என்னிலுள்ள உண்மையின்படியும் எனக்கு நியாயம்செய்யும்.

௯ ஆகாதவர்களின் பொல்லாங்கை ஒழியப்பண்ணுமே; நீதிமானை நிலைநிறுத்துவீராக; ஏனெனில் நீதியுள்ள பராபரனாகிய தேவரீர் இருதயங்களையும், உள்ளிந்திரியங்களையும் சோதித்தறிகிறவர்.* *எரே. ௰௧. ௨௰: ௰௭. ௰. வெளி. ௨. ௨.

௰ ¶ என் கேடயம் செம்மை இருதயத்தாரை இரட்சிக்கிற பராபரனிடத்தில் இருக்கிறது.

௰௧ பராபரன் நீதியுள்ள நியாயாதிபதியும், நாள்தோறும் சினத்திருக்கிற தேவனுமானவர்.* *சங். ௯. ௫.

௰௨ மனந்திரும்பாதிருந்தால், தம்முடைய பட்டயத்தைக் கருக்காக்குவார்; அவர் தம்முடைய வில்லை நாணேற்றி அதை முஸ்திப்பாக்கி,

௰௩ அவனுக்குச் சாவுக்கினமான ஆயுதங்களை ஆயத்தம்பண்ணினார்; தம்முடைய அம்புகளை அக்கினி அம்புகளாக்குவார்.

௰௪ ¶ இதோ அக்கிரமத்தைப் பெறக் கெர்ப்பவேதனையாயிருக்கிறான்; தீவினையைக் கெர்ப்பம்தரித்தான்; ஆனால் அவத்தத்தைப்பெறுவான்.* *யோபு. ௰௫. ௩௫.

௰௫ குழியை வெட்டி அதைப் பள்ளமாக்கினான்; தான் பறித்த குழியிலே விழுவான்.* *சங். ௯. ௰௬. வாக். ௨௬. ௨௭.

௰௬ அவன் தீவினை அவன் சிரசின்மேலே திரும்பி, அவன் கொடுமை அவன் உச்சந்தலையின்மேல் இறங்கும்.* *வாக். ௫. ௨௨.

௰எ நான் கர்த்தரை அவருடைய நீதியின் படி துதித்து உன்னதமான கர்த்தருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

## அ. சங்கீதம்.

(கித்தீத்திலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீருடைய நாமம் பூமியெங்கும் எத்தனை பிரபலமாயிருக்கின்றது; உம்முடைய மகத்துவத்தை வானங்களுக்கு மேல்வுட்டமாக்கினீர்.

உ பகைஞனையும், பழிகாரனையும் ஓயப்பண்ண, தேவரீர் உம்முடைய சத்துருக்களின் நிமித்தம் குழந்தைகள் பாலகர் வாயினாலே பெலன் உண்டுபண்ணினீர்.*
*மத். உக. ௰௬. சங். உ௬. க.

௩ ¶ நான் உம்முடைய விரல்களின் கிரியையாகிய உம்முடைய வானங்களையும் நீர் ஆயத்தப்படுத்தின சந்திரனையும், நட்சத்திரங்களையும் பார்க்கும்போது,*
*சங். ௱உ. உ௬.

௪ மனுஷன், நீர் அவனை நினைக்கிறதற்கும், மனுஷனுடைய குமாரன், நீர் அவனை நோக்கிப்பார்க்கிறதற்கும் எம்மாத்திரம் என்கிறேன்.* *எபி. உ. ௬. சங். ௱௪௪. ௩. யோபு. எ. ௰எ.

௫ நீர் அவனைக் கொஞ்சத்தியாலம் தேவதூதரிலும் சிறியவராக்கினீர்; ஆனால் மகிமையினாலும், கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர்.* *எபி. உ. எ, ௬.

௬ நீர் அவருக்கு உம்முடைய கைகளுடைய கிரியைகளின்மேல் ஆளுகை தந்து, சருவத்தையும்,* *க கொரி. ௰௫. உஎ.

எ ஆடுமாடு முதலானவைகள் எல்லாவற்றையும், அதனோடேகூட வெளியின் மிருகங்களையும்,* *க மோ. க. உ௮: ௬. உ.

௮ ஆகாசத்துப் பட்சிகளையும், சமுத்திரத்து மச்சங்களையும், கடல்களின் பாதைகளில் நடமாடுகிறதையும் அவர் பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.

௯ எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீருடைய நாமம் பூமியெங்கும் எத்தனை பிரபலமாயிருக்கின்றது.

## ௯. சங்கீதம்.

(முதலாபேனிலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின சங்கீதம்.)

என் முழு இருதயத்தாலும் கர்த்தரைத் துதிப்பேன்; உம்முடைய அதிசயங்களை எல்லாம் விவரிப்பேன்.

உ உமக்குள் மகிழ்ந்து களிகூருவேன்; உன்னதமானவரே, உம்முடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுவேன்.*
* சங். ௩க. அ: ௬உ. உ.

௩ ¶ ஏனென்றால் என் சத்துருக்கள் பின்னாகத் திரும்பி, உம்முடைய முகத்துக்கு முன்பாக இல்லாதபடிக்கு இடறுண்டழிந்தார்கள்.* * சங். உ௰. ௬.

௪ அதேதெனில் நீர் என் நியாயத்தையும் என் வழக்கையும் தீர்த்து, நீதியுள்ள நியாயாதிபதியாய் இராசாசனத்தின்மேல் உளுக்காந்தீர்.* * சங். எ. ௰உ.

௫ சாதிகளை உதம்பி, ஆகாதவனை அழித்து, அவர்கள் நாமத்தை என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்கும் கொலைத்துப்போட்டீர்.

௬ ¶ சத்துரு பண்ணின பாழ்க்கடிப்புகள் என்றென்றைக்கும் முடிவடைந்தன; ஏனென்றால் அவர்கள் பட்டணங்களை நிர்மூலம்பண்ணினீர்; அவர்கள் பேர் அவர்களோடும்கூட அழிந்தது.

எ கர்த்தரோவெனில் என்றென்றைக்குமிருப்பார்; தம்முடைய ஆசனத்தை நியாயத்தீர்ப்புக்கு ஆயத்தம்பண்ணினார்.*
* சங். ௬௬. ௰௩: ௬௮. ௬.

௮ அவர் பூச்சக்கரத்தை நீதியாய் நியாயந்தீர்த்து, சனசதளங்களுக்குச் செம்மையாய் நீதஞ்செய்வார்.* * சங். ௬௬. ௰௩: ௬௮. ௬.

௯ சிறுமைப்பட்டவனுக்குக் கர்த்தர் உயர்ந்த அடைக்கலமாயிருப்பார்; நெருக்கப்

படுகிற காலங்களில் அவர் உயர்ந்த அடைக்கலம்தானே.* *சங். ருஎ. ருகூ.

௰ ஆகையால் உமது நாமத்தை அறிந்தவர்கள் உம்மை நம்பியிருப்பார்கள்; ஏனெனில் கர்த்தாவே, உம்மைத் தேடுகிறவர்களைத் தேவரீர் கைவிடுகிறதில்லை.*
* சங். ருசு. ௫, கூ.

௰௧ ¶ சீயோனில் வாசமான கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணி, அவர் செய்கைகளைச் சனசதளங்களுக்குள்ளே அறிவியுங்கள்.

௰௨ ஏனென்றால் சிந்துண்ட இரத்தப்பழிகளை அவர் கேட்டு அவைகளை நினைக்கிறார்; சிறுமையானவர்களுடைய கூப்பிடுதலை மறவார்.* *௫ மோ. ருஉ. சரு.

௰௩ ¶ என்னை மரணவாசல்களிலிருந்து உயரப்பண்ணுகிற கர்த்தாவே, நான் உம்முடைய துதிகளை எல்லாம் சீயோன் குமாரத்தியின் வாசல்களில் விவரித்து, உம்முடைய இரட்சிப்பினாலே களிகூரும்படிக்கு,

௰௪ தேவரீர் என்மேல் இரங்கி, என்னைப் பகைக்கிறவர்களால் எனக்கு வரும் சிறுமையைப் பாரும்.

௰௫ ¶ சாதிகள் தாங்கள் வெட்டின பள்ளத்திலே அமிழ்ந்தினார்கள்; அவர்கள் மறைவாய் வைத்த வலையிலே அவர்கள் கால் அகப்பட்டுக்கொண்டது.* * சங். எ. ௰கூ.

௰௬ கர்த்தர் தாம் செய்த நியாயத்தினால் அறியப்பட்டார்; ஆகாதவன் தன் கைகளுடைய செய்கையிலே சிக்கப்பட்டான்; இது தியானிக்கப்படத்தக்கது; சேலா.

௰௭ ஆகாதவர்களும் பராபரனை மறக்கிற எல்லாச் சாதிகளும் நரகத்துக்குத் திரும்புவார்கள்.

௰௮ ஏனெனில் எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவதில்லை; சிறுமைப்பட்டவர்களுடைய காத்துக்கொள்ளுதல் நித்தியகாலமாய்க் கெட்டுப்போயிருப்பதுமில்லை.

௰௯ மனுஷன் பெலன்கொள்ளாதபடிக்கு எழுந்திரும் கர்த்தாவே, சாதிகள் உம்முடைய முகத்துக்குமுன்பாக நியாயந்தீர்க்கப்படக்கடவர்கள்.

௨௰ சாதிகள் தாங்கள் மனுஷரென்று அறியும்படிக்கு, அவைகளுக்குப் பயமுண்டாக்கும் கர்த்தாவே.

## ௰. சங்கீதம்.

கர்த்தாவே, ஏன் தூரத்திலே நிற்கிறீர்? நெருக்கப்படுகிற காலங்களில் ஏன் உம்மை மறைக்கிறீர்?

௨ ஆகாதவன் தன் பெருமையினாலே சிறுமையானவனைக் கொரேமாய்த் துன்பப்படுத்துகிறான்; ஆனால் அவர்கள் சதிநினைத்த தீவினைகளிலே பிடிக்கப்படக்கடவர்கள்.*
* சங். ௫எ. எ.

௩ ஏனெனில் ஆகாதவன் தன் ஆத்துமாவின் ஆசையைத்தொட்டுப் பெருமைபாராட்டுகிறான்; பொருளாசைக்காரன் தன்னை ஆசீர்வதித்துக் கர்த்தரை அசட்டைபண்ணுகிறான்.* *௫ மோ. உகூ. ௰கூ, ௨௰.

௪ ஆகாதவன் தன் முகநெறிப்பினால் ஒன்றுக்கும் விசாரப்படாதே போகிறான்; அவன் நினைவுகளெல்லாம் பராபரன் இல்லை என்பதே.* * சங். ௰௪. க.

௫ அவன் வழிகள் எப்போதும் வாதை உண்டாக்குகிறவைகள்; உம்முடைய நியாயத்தீர்ப்புகளோ அவன் பார்வைக்கு மகா உயர்ந்த தூரமாயிருக்கின்றன; தன் எதிராளிகளை எல்லாம் சீறுகிறான்.

௬ தன் இருதயத்திலே நான் அசைக்கப்படாமலும், தலைமுறை தலைமுறையாகத் தீங்கடையாமலும் இருப்பேனென்கிறான்.*
* வெளி. ௰௮. எ.

௭ அவன் வாய் சர்ப்பனையினாலும், கபடங்களினாலும், தந்திரத்தினாலும் நிறைந்திருக்கிறது; அவன் நாவின்கீழ்த் தீவினையும் அக்கிரமமும் இருக்கின்றன.*
*உரோ. ௩. ௰௪.

௮ கிராமங்களிலே பதிவிருந்து, ஒளிப்பிடங்களிலே குற்றமில்லாதவனைக் கொல்லுகிறான்; அவன் கண்கள் ஏழையைச் சூட்டாய்ப் பார்க்கின்றன.

௯ தன் கெபியிலிருக்கிற சிங்கத்தைப்

போலே மறைவிலே பதிவிருக்கிறான்; சிறுமையானவனைப் பிடிக்கப் பதிவிருந்து, சிறுமையானவனைத் தன் வலைக்குள் இழுத்துப் பிடிக்கிறான்.* *சங். ௩௭. ௩௨.

௰ ஏழைகளின் கூட்டம் அலைச்சல்பட்டு, ஒடுங்குண்டு, அவன் வல்லமையில் விழுகிறது.

௰௧ பராபரன் அதை மறந்தாரென்றும், அவர் தம்முடைய முகத்தை மறைத்து, அதை என்றைக்கும் பாராதிருப்பாரென்றும் தன் இருதயத்திலே சொல்லுகிறான்.* *சங். ௯௪. ௯, ௭.

௰௨ ¶ பராபரனாகிய கர்த்தாவே, எழுந்திருந்து, உம்முடைய கையை உயர்த்தும்; சிறுமையானவர்களை மறவாதிரும்.

௰௩ அவர் அதைக் கேட்டு விசாரிப்பதில்லையென்று ஆகாதவன் தன் இருதயத்திலே சொல்லி, பராபரனை அசட்டைபண்ணுவானேன்?

௰௪ அதைப் பார்த்திருக்கிறீரே, ஏனெனில் தேவரீர் அவர்களுக்குப் பதில்செய்ய அவர்கள் தீவினையையும் அலட்டுண்டாக்குதலையும் நோக்கியிருக்கிறீர்; அது உம்முடைய கையிலிருக்கிறது; உமக்கு ஏழை தன்னை ஒப்புவிக்கிறான்; திக்கற்றவனுக்குத் தேவரீர் சகாயராயிருக்கிறீர்.* *சங். ௬௮. ௫.

௰௫ நீர் ஆகாதவனுடைய புயத்தை முறித்து, பொல்லாதவனுடைய ஆகாமியம் காணாதேபோகும்மட்டும் அதைத் தேடி விசாரியும்.

௰௬ ¶ கர்த்தர் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்கும் இராசாவாயிருக்கிறார்; புறச்சாதியார் அவருடைய தேசத்திலிருந்து அழிந்துபோவார்கள்.* *சங். ௨௯. ௰: ௱௪௬. ௰. வெளி. ௰௧. ௰௫. சங். ௯. ௰௮.

௰௭ கர்த்தாவே, சிறுமைப்பட்டவர்களுடைய வேண்டுதலைக் கேட்டிருக்கிறீர்; அவர்கள் இருதயத்தைத் திடப்படுத்துவீர்.

௰௮ மண்ணான மனுஷன் அப்புறம் பெலவந்தம்செய்யத் தொடராதபடிக்குத் தேவரீர் திக்கற்றவனுக்கும் ஒடுக்கப்பட்டவனுக்கும் நீதிசெய்ய, உம்முடைய செவியைச் சாய்த்துக் கவனிப்பீர்.* *௫ மோ. ௰. ௰௮.

## ௰௧. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தரை நம்பியிருக்கிறேனே, பின்னை எப்படி நீங்கள் என் ஆத்துமாவுடனே பட்சியைப்போல உங்கள் மலையிலே பறந்தலையுங்கள் என்கிறீர்கள்?

௨ ஏனெனில் இதோ ஆகாதவர்கள் வில்லை வளைத்து, செம்மை இருதயத்தாரின் மேல் அந்தகாரத்தில் எய்ய, தங்கள் அம்புகளை நாணின்மேலே தொடுக்கிறார்கள்.* *சங். ௫௭. ௫.

௩ அஸ்திபாரங்கள்தானும் நிர்மூலமாகிறதே, நீதிமான் என்னசெய்வான்?

௪ ¶ கர்த்தர் தம்முடைய பரிசுத்த அரமனையிலிருக்கிறார்; கர்த்தருடைய ஆசனம் பரமண்டலங்களில் இருக்கிறது; அவருடைய கண்கள் பார்க்கின்றன; அவருடைய இமைகள் மனுப்புத்திரரைச் சோதித்தறிகின்றன.* *ஏசா. ௬௬. ௧.

௫ கர்த்தர் நீதிமானைச் சோதித்தறிகிறார்; ஆனால் ஆகாதவனையும் கொடுமையைச் சிநேகிக்கிறவனையும் அவருடைய ஆத்துமா பகைக்கின்றது.* *சங். ௫. ௫.

௬ ஆகாதவர்கள்மேலே சிதைவுகளையும், அக்கினியையும், கெந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணுவார்; கடுங்கோடைக்கொந்தளிப்பு அவர்கள் குடிக்கும் பாத்திரத்தின் பங்கு.* *௧ மோ. ௰௯. ௨௪. சங். ௭௫. ௮.

௭ ஏனெனில் கர்த்தர் நீதிபரனும், நீதியைச் சிநேகிக்கிறவருமாயிருக்கிறார்; அவருடைய முகம் செம்மையானவனை நோக்கியிருக்கிறது.

## ௰௨. சங்கீதம்.

(எண்ணரம்புக் கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

இரட்சியும் கர்த்தாவே, ஏனெனில் சன்மார்க்கர் அற்றுப்போய், உண்மையுள்ளவர்

கள் மனுப்புத்திரரில் குறைந்திருக்கிறார்கள்.

௨ அவரவர் தங்களுக்கடுத்தவரோடே இச்சக உதடுகளால் அபத்தம் பேசுகிறார்கள்; இருமனதாலே பேசுகிறார்கள்.

௩ கர்த்தர் எல்லா இச்சக உதடுகளையும், பெருமைகளைப் பேசிக்கொண்டிருக்கிற நாவையும் அறுப்பாராக.

௪ அவர்கள் எங்கள் நாவுகளால் மேல்வட்டமாயிருப்போம்; எங்கள் உதடுகள் எங்களோடிருக்கின்றனவென்றும், யார் எங்களுக்கு ஆண்டவனென்றும் சொல்லுகிறார்கள்.

௫ ¶ சிறுமைப்பட்டவர்களுடைய பாழாக்குதலின் நிமித்தமும், எளியவர்களுடைய பெருமூச்சின் நிமித்தமும், இப்போது நாம் எழுந்திருந்து, அவனால் சீறுண்டவனைச் சுகபத்திரமாயிருக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬ கர்த்தருடைய வார்த்தைகள் மண்குகையிலே ஏழுதரம் உருக்கிப் புடமிடப்பட்ட வெள்ளிக்கொப்பான சுத்தச்சொற்களாயிருக்கின்றன.* *வாக். ௩௰. ௫.

௭ கர்த்தாவே, தேவரீர் அவர்களைக் காப்பாற்றி, அவனவனை என்றைக்கும் இந்தச் சந்ததிக்கு விலக்கிக் காப்பீராக.

௮ மனுப்புத்திரரில் சண்டாளர் உயர்ந்திருக்கும்போது, ஆகாதவர்கள் எங்கும் சுற்றித்திரிகிறார்கள்.* *வுாக். உ௮. ௰௨.

## ௰௩. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, எந்தமட்டும் என்னை மறந்துகொண்டே இருப்பீர்? எந்தமட்டும் உம்முடைய முகத்தை எனக்கு மறைப்பீர்?

௨ எந்தமட்டும் என் ஆத்துமாவிலே யோசனைகளையும், என் இருதயத்திலே சஞ்சலத்தையும், நித்தம் நித்தம் வைப்பேன்? எந்தமட்டும் என் சத்துரு என்மேல் உயருவான்?

௩ என் பராபரனாகிய கர்த்தாவே, நீர் நோக்கிப்பார்த்து என் செபத்தைக் கேட்டருளும்.

௪ அவனை மேற்கொண்டேனென்று என் பகைஞன் சொல்லாமலும் நான் தள்ளம்பாறுகிறதினால் என் சத்துருக்கள் களிகூராமலும் இருப்பதற்காக, தேவரீர் என் கண்களை நான் மரணநித்திரை அடையாதபடிக்கு வெளிச்சமாக்கும்.* *சங். ௨௫. ௨.

௫ ¶ நானோ உம்முடைய கிருபையின்மேலே நம்பிக்கையுற்றிருக்கிறேன்; உம்முடைய இரட்சிப்பினால் என் இருதயம் களிகூரும்; கர்த்தர் எனக்கு நன்மைசெய்தாரென்று அவரைப் பாடுவேன்.

## ௰௪. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரன் இல்லையென்று பைத்தியகாரன் தன் இருதயத்தில் சொல்லுகிறான்; தங்களைக் கெடுத்துக் கிரியைகளில் தங்களை அருவருப்பாக்கினார்கள்; நன்று செய்கிறவனில்லை.* *சங். ௫௩. ௨. ஐ.

௨ பராபரனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோவென்று பார்க்க, கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்திரரைக் கண்ணோக்கினார்.

௩ எல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்; நன்றுசெய்கிறவனில்லை. அப்படிப்பட்ட ஒருவனாகிலுமில்லை.* *உரோ. ௩. ௰-௰௨.

௪ ¶ அப்பத்தைப் பட்சிக்கிறதுபோலே நம்முடைய சனத்தைப் பட்சிக்கிற சகல அக்கிரமக்காரருக்கும் அறிவுதானும் இல்லையோ? கர்த்தரைத் தொழுதுகொள்ளார்கள்.* *ஓசே. ௭. ௰௪.

௫ அங்கே மெத்தவும் அருக்களித்தார்கள்; ஏனெனில் பராபரன் நீதிமானுடைய சந்ததியோடே இருக்கிறார்.

௬ கர்த்தர் சிறுமையானவனுடைய நம்பிக்கை என்று நீங்கள் அவனுடைய ஆலோச

னையை வெட்கப்படுத்தினீர்கள்.

எ ஆ சீயோனிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்பு வந்தால் தாவீளே; கர்த்தர் தம்முடைய சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்கோபுக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சியும் உண்டாம்.* * சங். ருசு. எ.

## ௰ரு. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, யார் உம்முடைய கூடாரத்திலே தங்குவான்? யார் உம்முடைய பரிசுத்தபருவதத்திலே வாசமாயிருப்பான்.* *சங். ௬.

உ ¶ உண்மையாய் நடந்து நீதியை நடப்பித்து, மனதாரச் சத்தியத்தைப் பேசுகிறவன்தானே.* *ஏசா. ௩௩. ௰௫.

௩ தன் நாவினாலே பின்புறணி பேசாமலும், தனக்கடுத்தவனுக்குத் தீங்குசெய்யாமலும், தன்னைச் சேர்ந்தவன்மேல் நிந்தனையான பேச்சை எடுக்காமலுமிருக்கிறான்.

ச ஆகாதவன் அவன் பார்வைக்கு இழிவானவன்; கர்த்தருக்குப் பயந்தவர்களையோ கனம்பண்ணுகிறான்; தன் நஷ்டத்துக்கு ஆணையிட்டும் தவறாதிருக்கிறான்.

௫ தன் பணத்தை அடுத்திக்குக் கொடாமலும், குற்றமில்லாதவனுக்கு விரோதமாகப் பரிதானம் வாங்காமலும் இருக்கிறான்; இப்படிச்செய்கிறவன் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை.* *உ மோ. உஉ. உ௫. வாக். ௰எ. உ௩.

## ௰சு. சங்கீதம்.

(தாவீதின் பொற்பணதிக் கீதம்.)

பராபரனே, என்னைக் காப்பாற்றும்; ஏனெனில் உம்மை நம்பியிருக்கிறேன்.

உ கர்த்தருடனே, தேவரீர் என் ஆண்டவராயிருக்கிறீரென்றும்,

௩ பூமியிலுள்ள பரிசுத்தவான்களுக்காகவும், நான் என்னுடைய எல்லாப் பிரியத்தையும் வைத்திருக்கிற மகாத்துமாக்களுக்காகவும், என் நன்மை உம்மிடத்தில் எனக்கில்லாதேபோமென்றும் சொன்னேன்.

ச வேறொருவரண்டைக்குத் தீவிரிக்கிறவர்களின் வேதனைகள் பெருகும்; அவர்கள் பட்சிக்கிற இரத்தமான பானபலிகளை நான் செலுத்தாமலும், அவர்கள் நாமங்களை என் உதடுகளில் ஏற்றுக்கொள்ளாமலும் இருப்பேன்.* *ஏசா. க. ௰௧, ௰௫.

௫ கர்த்தர் என் பங்குவீதமும் என் பாத்திரத்தின் பங்குமானவர்; தேவரீர் எனக்கு வரும் வீதத்தைக் காப்பாற்றுகிறீர்.

சு நேர்த்தியான இடங்களிலே வீதம் எனக்குக் கிடைத்தது; ஆம், வடிவமான சுதந்திரம் எனக்குண்டாயிற்று.

எ ¶ எனக்கு ஆலோசனையான கர்த்தரைத் துதிப்பேன்; அதற்கு இராக்காலங்களிலும் என் உள்ளிந்திரியங்கள் என்னை ஏவும்.

அ கர்த்தரை எப்போதும் எனக்குமுன்பாக வைத்துக்கொள்ளுகிறேன்; அவர் என் வலதுபாரிசத்திலிருக்கிறபடியால் அசைக்கப்படாதிருப்பேன்.* *அப். உ. உ௫—உஅ.

சு ஆகையினாலே என் இருதயம் பூரித்தது, என் மகிமை களிகூர்ந்திருக்கிறது; என் மாம்சமும் பத்திரமாய்த் தாபரித்திருக்கும்.

௰ ஏனெனில் என் ஆத்துமாவைப் பாதாளத்திலே விடீர்; உம்முடைய பரிசுத்தவானை அழிவைக் காணவொட்டீர்.* *அப். உ. உசு—௩௧: ௰௩. ௩௫—௩எ.

௰௧ சீவனுடைய வழியை எனக்குத் தெரியப்படுத்துவீர்; உம்முடைய சமூகத்திலே சந்தோஷங்களின் பரிபூரணமும், உம்முடைய வலதுபாரிசத்திலே செல்வபாக்கியங்களும் என்றென்றைக்கும் இருக்கும்.

## ௰எ. சங்கீதம்.

(தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, நீர் நீதியைக் கேட்டருளி, என் கூப்பிடுதலைக் கவனித்து, கபட உதடுகளால் வராத என் விண்ணப்பத்துக்குச் செவிகொடும்.* *சங். ச. உ: எ. சு.

௨ உம்முடைய சந்நிதியிலிருந்து என் நியாயம் வெளிப்படவும், உம்முடைய கண்கள் நிதானங்களைப் பார்க்கவுங்கடவது.

௩ நீர் என் இருதயத்தைச் சோதித்து, அதை இராக்காலத்தில் விசாரித்து, என்னைப் புடமிட்டுப்பார்த்தும், ஒன்றுங் கண்டுபிடியாதிருக்கிறீர்; என் வாய் மீறுதபடிக்குத் தீர்மானம்பண்ணினேன்.

௪ மனுஷன் செய்காரியங்களுக்கோவென்றால், நான் என்னை உம்முடைய உதடுகளின் சொற்படி துஷ்டனுடைய பாதைகளுக்கு இடைஞ்சலாய்க் காக்கிறேன்.

௫ என் காலடிகள் பிசகாதபடிக்கு, என் நடைகளையும் உம்முடைய வழிகளுக்குள்ளே திடப்படுத்தும்.

௬ ¶ பராபரனே, நான் உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; ஏனெனில் எனக்குக் கேள்விகொடுக்கிறீர்; என்னண்டைக்கு உம்முடைய செவியைச் சாய்த்து, என் வார்த்தையைக் கேட்டருளும்.

௭ உம்மை நம்புகிறவர்களை உம்முடைய வலதுகரத்துக்கு விரோதித்தெழும்புகிறவர்களின் கைக்குத் தப்புவித்து இரட்சிக்கிறவரே, உம்முடைய கிருபைகளை அதிசயமானவைகளாக்கும்.

௮ ¶ என்னைக் கண்ணின் கறுப்புவிழியைப்போலே தற்காரும்.* *சகரி. ௨. ௮.

௯ என்னைப் பாழ்க்கடிக்கிற துன்மார்க்கருக்கும், என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற என் பிராணப் பகைஞருக்கும், மறைவாக என்னை உம்முடைய செட்டைகளின் நிழலிலே காப்பாற்றும்.* *சங். ௬௩. ௮.

௰ நிணம் துன்னியிருக்கிறார்கள்; தங்கள் வாயினாலே பெருமையாய்ப் பேசுகிறார்கள்.

௰௧ எங்கள் நடைகளில் இப்போது எங்களை வளைந்துகொண்டார்கள்; அவர்கள் கண்கள் எங்களைத் தரையிலே விழப்பண்ண நோக்கிக்கொண்டிருக்கின்றன.

௰௨ பீறுகிறதற்கு ஆசையான சிங்கத்துக்கும், மறைவுகளிலே பதிவிருக்கிற சிங்கக்குட்டிக்கும் ஒப்பாயிருக்கிறான்.* *சங். ௰. ௯.

௰௩ கர்த்தாவே, நீர் எழுந்திருந்து அவனுக்கு முந்திக்கொண்டு அவனை மடங்கப்பண்ணும்; கர்த்தாவே, என் ஆத்துமாவை உம்முடைய பட்டயத்தினால் ஆகாதவன் கைக்கும், உம்முடைய கரத்தினாலே லோக மனுஷராகிய சனங்களின் கைக்கும் தப்புவியும்.

௰௪ அவர்கள் பங்கு இச்சீவனில் இருக்கிறது; அவர்கள் வயிற்றை உமது பொக்கிஷவைப்பினால் நிரப்புகிறீர்; அவர்கள் பிள்ளைகள் திருப்தியாகி, தங்கள் மீதியைத் தங்கள் குழந்தைகளுக்குப் பின்வைக்கிறார்கள்.* *லூக். ௰௬. ௨௫.

௰௫ ¶ நானோவெனில் நீதியில் உம்முடைய சமுகத்தைத் தரிசிப்பேன்; நான் விழிக்கும்போது உமது சாயலால் திருப்தியாவேன்.* *மத். ௫. ௮.

## ௰௮. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தருடைய தாசனாகிய தாவீதின் சங்கீதம். அவன் இந்தப் பாட்டின் வார்த்தைகளைக் கர்த்தர் தன்னைத் தன்னுடைய எல்லாச் சத்துருக்களின் கைகளுக்கும், சவுலின் கைக்கும், நீங்கலாக்கி விடுவித்தநாளிலே கர்த்தரைநோக்கிச் சொல்லி,* உரைத்ததாவது:) *௨ சாமு. ௨௨. ௨.

என் பெலனாகிய கர்த்தாவே, உம்மை உட்கருத்தாய்ச் சிநேகிப்பேன்.

௨ கர்த்தர் என் கன்மலையும், என் கோட்டையும், என்னை விடுவிக்கிறவரும், என் பராபரனும், நான் நம்பியிருக்கிற என்னுடைய குன்றும், என் கேடயமும், என் இரட்சிப்பின் கொம்பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார்.* *சங். ௯௧. ௨. எபி. ௨. ௰௩.

௩ தோத்திரிக்கப்பட்ட கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது என் சத்துருக்களுக்கு நீங்கலாகி இரட்சிக்கப்பட்டேன்.

௪ மரணத்தின் கட்டுகள் என்னைச் சுற்றிப்பிடித்தன; பேலியாளின் வாய்க்கால்கள் என்னை அலுக்கப்பண்ணிற்று.* *சங். ௱௰௬. ௩.

௫ நரகத்தின் கட்டுகள் என்னைச் சூழ்ந்துகொண்டு, மரணத்தின் கண்ணிகள் எனக்கு நேரிட்டன.

௬ எனக்குண்டான நெருக்கத்திலே கர்த்தரைத் தொழுதுகொண்டு, என் பராபரனை நோக்கிக் கூப்பிட்டேன்; தமது அரமனையிலிருந்து என் சத்தத்தைக் கேட்டார்; என் கூப்பிடுதல் அவருக்குமுன்பாக அவர் செவிகளில் ஏறிற்று.* *ஏசா. ௨௬. ௰௬.

௭ ¶ அப்போது பூமி அசைந்து அதிர்ந்து, பருவதங்களின் அஸ்திவாரங்கள் குலுங்கி அசைந்தன; ஏனெனில் எரிச்சலானார்.

௮ புகை அவர் நாசியாலும், பட்சிக்கிற அக்கினி அவர் வாயாலும் எழும்பி, அவரால் நெருப்பு நெருப்புத்தழலாய் எரிந்தது.* *எபி. ௰௨. ௨௯.

௯ வானங்களைத் தாழ்த்தி இறங்கினார்; அவர் பாதங்களின் கீழே இருளிருந்தது.

௰ கேருபீன்மேல் ஏறிப்பறந்து, காற்றின் செட்டைகள்மீதிலே பறந்தார்.

௰௧ இருளைத் தம்முடைய ஒளிப்பிடமாக்கினார்; அவரைச் சூழ்ந்த அவருடைய கூடாரம் தண்ணீர்களின் இருட்டும், ஆகாசத்துக் கார்மேகங்களுமானது.

௰௨ அவர் முகதாவின் பிரகாசத்தினால் அவருடைய மேகங்கள் பறந்து விலகி, கல்மழையும் நெருப்புத்தழல்களும் விழுந்தன.

௰௩ கர்த்தர் வானங்களிலே குமுறி, உன்னதமானவர் தமது சத்தத்தைக் காட்டினார்; கல்மழையும், நெருப்புத்தழல்களும் விழுந்தன.* *சங். ௯௩. ௩.

௰௪ தம்முடைய அம்புகளை அனுப்பி, அவர்களைச் சிதறவடித்து, மின்னல்களைத் திரளாக்கி, அவர்களைக் கலங்கப்பண்ணினார்.

௰௫ அப்போது கர்த்தாவே, உம்முடைய உதம்புதலாலும், உம்முடைய நாசியின் சுவாசக்காற்றினாலும், தண்ணீர்களின் பள்ளங்கள் காணப்பட்டுப் பூதலத்தின் அஸ்திவாரங்கள் திறவுண்டன.

௰௬ ¶ உயரத்திலிருந்து கைநீட்டி, என்னைப் பிடித்து, திரள் தண்ணீர்களிலிருக்கிற என்னைத் தூக்கிவிட்டார்.

௰௭ என் வலுசத்துருவுக்கும், என்னைப் பகைக்கிறவர்களுக்கும் என்னை விலக்கி விடுவித்தார்; ஏனெனில் என்னிலும் பெலத்திருந்தார்கள்.

௰௮ என் ஆபத்தின் நாளில் எனக்கு எதிரிட்டு மறித்தார்கள்; ஆனால் கர்த்தர் எனக்காதரவாயிருந்து,

௰௯ என்னை எடுத்து விசாலத்திலே வைத்து, என்னைத் தப்புவித்தார்; ஏனெனில் என்மேலே பிரியமாயிருந்தார்.

௨௰ கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாக எனக்குப் பதில் அளித்தார்; என் கைகளுடைய சுத்தத்துக்குத்தக்கதாக எனக்குச் சரிக்கட்டினார்.

௨௧ அதேதென்றால் கர்த்தருடைய வழிகளைக் கைக்கொண்டுவந்தேன்; நான் என் பராபரனைவிட்டு ஆகாமியம் செய்ததில்லை.

௨௨ *ஏனெனில் அவருடைய நியாயங்களையெல்லாம் எனக்கு முன்பாக நிறுத்தினேன்; நான் அவருடைய பிரமாணங்களை என்னைவிட்டு அகற்றாமல், *அப். ௨௩. ௧.

௨௩ அவர்முன்பாக மனவுண்மையாயிருந்து, என் துர்க்குணத்துக்கு என்னை விலக்கிக் காத்தேன்.

௨௪ ஆகையால் கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாகவும், தம்முடைய கண்களுக்கு முன் இருக்கிற என் கைகளின் சுத்தத்துக்குத்தக்கதாகவும் எனக்குச் சரிக்கட்டினார்.

௨௫ ¶ சன்மார்க்கனுக்கு உம்மைச் சன்மார்க்கமாகவும், மன உண்மையான மனுஷனுக்கு உம்மை மன உண்மையாகவும்,

௨௬ சுத்தனுக்கு உம்மைச் சுத்தமாகவும், மாறுபாடானவனுக்கு உம்மைக் கோணலாகவும் காண்பிக்கிறீர்.

௨௭ ஏனெனில் தேவரீர் சிறுமைப்பட்ட சனத்தை இரட்சித்து மேட்டிமையான கண்களைத் தாழ்த்துகிறீர்.

௨௮ அதேதெனில் தேவரீர் என் விளக்கை வெளிச்சமாக்குகிறீர்; என் பராபரனாகிய

கர்த்தர் என் இருளைப் பிரகாசிப்பிக்கிறார்.*
*சங். ௯௭. ௰௧: ௱௰௨. ௪.

௨௯ உம்மோடே ஒரு பரிவாரத்துக்குள் பாய்ந்துபோவேன்; என் பராபரனோடே ஒரு மதிலைத் தாண்டுவேன்.

௩௰ பராபரனுடைய வழி உத்தமமானது; கர்த்தருடைய வசனம் புடமிடப்பட்டதாயிருக்கின்றது; தம்மை நம்புகிற அனைவருக்கும் அவர் கேடயமாயிருக்கிறார்.

௩௧ ஏனென்றால் கர்த்தரை அல்லாமல் தேவன் யார்? நம்முடைய பராபரனைத்தவிரக் கல்மலையும் யார்?

௩௨ என்னைப் பெலத்தால் அரைகட்டி, என் வழியை உத்தமமாக்குகிறவர் பராபரன்.

௩௩ என் கால்களை மான்களுடைய கால்களைப்போலாக்கி, என்னுடைய உயர்தலங்களில் என்னை நிறுத்துகிறார்.

௩௪ வெண்கல வில்லும் என் புயங்களால் வளைய, என் கைகளை யுத்தத்துக்குப் பழக்குவிக்கிறார்.* *சங். ௱௪௪. ௧.

௩௫ உம்முடைய இரட்சிப்பின் கேடயத்தையும் எனக்குத் தந்தீர்; உம்முடைய வலதுகரம் என்னைத் தாங்குகின்றது; நீர் என்னைச் சிறுமைப்படுத்துகிறது என்னைப் பெரியவனாக்கும்.* *சங். ௭௧. ௨௰, ௨௧.

௩௬ என் கணுக்கால்கள் தள்ளாடாதபடிக்கு நான் நடக்கிற வழியை அகலமாக்கினீர்.

௩௭ என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து அவர்களைப் பிடிப்பேன்; அவர்களை நிர்மூலமாக்குந்தனையும் திரும்பேன்.

௩௮ அவர்கள் எழுந்திருக்கமாட்டாமல், என் பாதங்களின் கீழ் விழத்தக்கவிதமாய் அவர்களை வெட்டுவேன்.* *சங் ௨. ௯.

௩௯ ஏனெனில் யுத்தத்துக்கு நீர் என்னைப் பெலத்தால் இடைகட்டி, என்மேல் எழும்பினவர்களை என்கீழ் மடங்கப்பண்ணி,

௪௰ நான் என் பகைஞரைச் சங்கரிக்கும்படியாக என் சத்துருக்களின் பிடரியை எனக்கு ஒப்புக்கொடுத்தீர்.

௪௧ கூப்பிடுகிறார்கள்; ஆனால் இரட்சிக்கிறவர் இல்லை; கர்த்தரைநோக்கிக் கூப்பிடுகிறார்கள்; ஆனால் அவர்களுக்கு அவர் உத்தரவு கொடுக்கவில்லை.

௪௨ * அவர்களைக் காற்றுமுகத்திலே தூளாக நருக்கித் தெருக்களின் சேற்றைப்போல அவர்களை ஒழித்துப்போடுவேன்.
*சங். ௰௯. ௭.

௪௩ நீர் சனத்தின் சண்டைகளுக்கு என்னைத் தப்பவிட்டு, என்னைச் சாதிகளுக்குத் தலைவனாக்குகிறீர்; நான் அறியாத சனம் என்னைச் சேவிக்கின்றன.

௪௪ அவர்கள் என் சத்தத்தைக் கேட்டவுடனே, எனக்குக் கீழ்ப்படிகிறார்கள்; அந்நியரும் எனக்கு இச்சகம்பேசி அடங்குகிறார்கள்.

௪௫ அந்நியர் முனைவிழுந்துபோய்த் தங்கள் அடைப்புகளிலிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.

௪௬ ¶ கர்த்தர் சீவனுள்ளவரும் என் கன்மலையானவர் தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.

௪௭ என் இரட்சிப்பின் பராபரனும் பழிக்குப் பழிவாங்கும் செயங்களை எனக்களித்துச் சனங்களை எனக்குக் கீழ்ப்படுத்தி, என் சத்துருக்களுக்கு என்னை விலக்கி விடுவிக்கிற பராபரனுமானவர் உயர்ந்தவர்.*
*சங். ௨௪. ௫.

௪௮ என்னை எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள்மேலும் உயர்த்துகிறீர்; கொடுமையான மனுஷனுக்கு என்னைத் தப்புவிக்கிறீர்.* *சங். ௨௭. ௯.

௪௯ இதின்நிமித்தம் கர்த்தாவே, சாதிகளுக்குள்ளே உம்மை அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்துக்குச் சங்கீதம்பாடுவேன்.* *உரோ. ௰௫. ௯.

௫௰ தாம் வைத்த இராசாவுடைய இரட்சிப்புகளை அவர் பெரியவைகளாக்கி, தாம் அபிஷேகம்பண்ணின தாவீதுக்கும் அவன் வித்துக்கும் என்றென்றைக்கும் கிருபை செய்கிறார்.

## ௰௯. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

வானங்கள் பராபரனுடைய மகிமையைச் சொல்லுகின்றது; ஆகாசவிரிவு அவருடைய கரங்களின் கிரியையை அறிவிக்கின்றது.* *சங். ௯௭. ௬.

௨ ஒரு பகல் மறுபகலுக்கு வார்த்தைகளைப் பொழிகின்றது; ஒரு இரா மறு இராவுக்கு அறிவைத் தெரிவிக்கின்றது.

௩ அவைகளின் சத்தம் கேள்விப்படாத பாஷையுமில்லை, பேச்சுகளுமில்லை.

௪ அவைகளின்நூல் பூமியெங்கும், அவைகளின் வசனங்கள் பூச்சக்கரத்துக் கடைசிமட்டும் புறப்பட்டுப்போகின்றன; சூரியனுக்கு அவைகளில் ஒரு கூடாரத்தைப் போட்டார்.* *உரோ. ௰. ௰௮.

௫ அது தன் மணவறையிலிருந்து புறப்படுகிற மணவாளனைப்போலிருந்து பராக்கிரமசாலியைப்போலத் தன் பாதையிலோட மகிழ்ச்சியாயிருக்கின்றது.

௬ அது வானங்களின் இம்முனையிலிருந்து புறப்பட்டு, அவைகளின் அம்முனைகளுக்குச் சுற்றி ஓடுகின்றது; அதின் காந்திக்கு மறைவானதொன்றுமில்லை.

௭ ¶ கர்த்தருடைய வேதம் குறையற்றதும், ஆத்துமாவை உயிர்ப்பிக்கிறதுமாயிருக்கின்றது; கர்த்தருடைய சாட்சி சத்தியமும், பேதையை ஞானியாக்குகிறதுமாயிருக்கின்றது.* *சங். ௱௰௯. ௱௫.

௮ கர்த்தருடைய கட்டளைகள் செம்மையும், இருதயத்தைச் சந்தோஷிப்பிக்கிறவைகளுமாயிருக்கின்றன; கர்த்தருடைய கற்பனை தூய்மையும், கண்களை வெளிச்சமாக்குகிறதுமாயிருக்கின்றது.* *சங். ௱௰௯. ௱௫.

௯ கர்த்தருக்குப் பயப்படுதல் சுத்தமும், என்றென்றைக்கும் நிற்கிறதுமாயிருக்கின்றது; கர்த்தருடைய நியாயங்கள் உண்மையும், அவைகள் அனைத்தும் நீதியுமாயிருக்கின்றன.

௰ அவைகள் பொன்னைப்பார்க்கிலும், அநேகம் அபரஞ்சியைப்பார்க்கிலும், இச்சிக்கப்படத்தக்கவைகளும் தேனிலும் தேன்கூண்டொழுகலிலும் மதுரமுமாயிருக்கின்றன.

௰௧ *உம்முடைய ஊழியக்காரனும் அவைகளால் எச்சரிக்கப்படுகிறான்; அவைகளைக் கைக்கொள்ளுகிறதினாலே திரளான பலன் இருக்கின்றது.* *சங். ௱௰௯. ௭௨. ௱௨௭. வாக். ௮. ௰, ௰௧. சங். ௱௰௯. ௱௩.

௰௨ ¶ *பிழைகளை யுணருகிறவன் யார்? மறைவானவைகளுக்கு என்னை நீங்கலாக்கியருளும். *சங். ௱௯. ௩.

௰௩ அகந்தைக்காரர் என்னை ஆண்டுகொள்ளாதபடிக்கு அடியேனை அவர்களுக்கு விலக்கிக்காரும்; அப்போது மன உண்மையும் மகா துரோகத்துக்கு நீங்கலுமாயிருப்பேன்.

௰௪ என் கன்மலையும் என் மீட்பருமாகிய கர்த்தாவே, உமக்கு முன்பாக என் வாயின் வார்த்தைகளும், என் இருதயத்தின் தியானமும் பிரியமாயிருக்கக்கடவது.

## ௨௰. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

நெருக்கப்படுகிற நாளிலே கர்த்தர் உமது செபத்தைக் கேட்கக்கடவர்; யாக்கோபுடைய பராபரனின் நாமம் உமக்கு உயர்ந்த அடைக்கலமாவதாக.* *வாக். ௰௮. ௰.

௨ அவர் பரிசுத்தஸ்தலத்திலிருந்து உமக்கு ஒத்தாசையை அனுப்பி, சீயோனிலிருந்து உம்மை ஆதரிக்கக்கடவர்.

௩ நீர் செலுத்தும் காணிக்கைகளை எல்லாம் அவர் நினைத்து, உம்முடைய சர்வாங்கதகனபலியைப் பிரியமாக ஏற்றுக்கொள்ளக்கடவர்; சேலா.

௪ அவர் உம்முடைய இருதயத்தினுடைய ஆசையின்படி உமக்குக் கொடுத்து, உம்முடைய ஆலோசனையை எல்லாம் நிறைவேற்றக்கடவர்.* *சங். ௨௧. ௩.

௫ நாங்கள் உமது இரட்சிப்பினாலே கெம்பீரித்து, எங்கள் பராபரனுடைய நாமத்திலே கொடியேற்றுவோம்; உம்முடைய வேண்டுதல்களை எல்லாம் கர்த்தர் நிறைவேற்றக்கடவார்.* *சங். ௰௩. ௯.

௬ ¶ கர்த்தர் தாம் அபிஷேகம்பண்ணினவனை இரட்சிக்கிறார் என்கிறதை இப்போது அறிந்திருக்கிறேன்; தம்முடைய வலது கரத்தினுடைய இரட்சிப்பின் வல்லமைகளைக் காண்பித்து, அவனைத் தமது பரிசுத்த வானங்களிலிருந்து அவருடைய செபத்தைக் கேட்பார்.

௭ அவர்கள் இரதங்கள்மேலும், அவர்கள் குதிரைகள்மேலும், நம்பிக்கையாயிருக்கிறார்கள்; நாங்களோவென்றால் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை நினைத்திருப்போம்.* *சங். ௪௪. ௭.

௮ அவர்கள் முறிந்துவிழுந்தார்கள்; நாங்களோவென்றால் எழுந்து நிற்கிறோம்.

௯ கர்த்தாவே இரட்சியும்; நாங்கள் கூப்பிடுகிற நாளிலே இராசா எங்கள் செபத்தைக் கேட்கக்கடவார்.* *சங். ௰௨. ௨.

## ௨௧. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய வல்லமையிலே இராசா மகிழ்ச்சியாயிருந்து, உம்முடைய இரட்சிப்பினாலே எத்தனையாய்க் களிகூருகிறார்.

௨ அவருடைய இருதயத்தின் ஆசையின்படி நீர் அவருக்குக் கொடுத்து, அவருடைய உதடுகளின் விண்ணப்பத்தைத் தள்ளாதிருக்கிறீர்; சேலா.* *சங். ௨௰. ௫.

௩ ஏனெனில் நன்மையின் ஆசீர்வாதங்களால் அவருக்கு நேரிட்டு, அவர் சிரசில் அபரஞ்சிக்கிரீடம் தரிப்பிக்கிறீர்.* *சங். ௱௩௨. ௰௮.

௪ உம்மைச் சீவனைக் கேட்டார்; அவருக்கு என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களான நாள்நீடிப்பை அளித்தீர்.* *சங். ௰௯. ௰.

௫ உமது இரட்சிப்பினால் அவருடைய கனம் பெரியதாயிருக்கிறது; மகிமையையும் மகத்துவத்தையும் அவர்மேல் வைக்கிறீர்.

௬ ஏனெனில் அவரை என்றென்றைக்கும் ஆசீர்வாதங்களாக வைக்கிறீர்; அவரை உம்முடைய சமுகத்திலே மகிழ்ச்சியாலே பூரிப்பாக்குகிறீர்.* *க மோ. ௰௨. ௩: ௰௯. ௰௧.

௭ அதேதென்றால் இராசா கர்த்தரின்மேல் நம்பிக்கையாயிருக்கிறார்; ஆகையால் உன்னதமானவருடைய தயையினாலே அசைக்கப்படாதிருப்பார்.

௮ ¶ உம்முடைய கை உம்முடைய சத்துருக்களை எல்லாம் கண்டுபிடிக்கும்; உம்முடைய வலதுகரம் உம்மைப் பகைக்கிறவர்களைக் கண்டுபிடிக்கும்.

௯ உமது கோபத்தின் காலத்திலே அவர்களை அக்கினிச் சூளையாக்கிவிடுவீர்; கர்த்தர் தம்முடைய கோபத்திலே அவர்களை விழுங்குவார்; அக்கினி அவர்களைப் பட்சிக்கும்.

௰ அவர்கள் கனியைப் பூமியில் இல்லாமலும், அவர்கள் வித்தைத மனுப்புத்திரரில் இல்லாமலும் போகத்தக்கவிதமாக அழிப்பீர்.* *சங். ௱௯. ௰௩.

௰௧ ஏனெனில் உமக்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்தார்கள்; தீவினையை எத்தனம்பண்ணினார்கள்; ஆனால் மேற்கொள்ளாதே போனார்கள்.

௰௨ அவர்களை இலக்காக வைத்து, அவர்கள் முகத்துக்கு நேரே உம்முடைய அம்புகளை நாணேற்றிவிடுவீர்.

௰௩ கர்த்தாவே, உம்முடைய பெலத்திலே உயரும்; அப்போது உம்முடைய வல்லமையைப் பாடிக் கீர்த்தனம்பண்ணுவோம்.

## ௨௨. சங்கீதம்.

(அதிகாலமே வேட்டையாடப்பட்ட பெண்மானின்பேரிலே பாடி, இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் பராபரனே, என் பராபரனே, நீர் என்னைக் கைவிட்டதேது; என் இரட்சிப்புக்கும் என் கதறுதலின் வார்த்தைகளுக்கும்

ஏன் தூரமாயிருக்கிறீர்.* *மத். ௨௭. ௪௬. மாற். ௰௫. ௩௪. எபி. ௫. ௭.

௨ என் பராபரனே, நான் பகலிலே கூப்பிட்டும் உத்தரவு கொடீர்; இரவிலே கூப்பிட்டும் எனக்கு அமைதலில்லை.

௩ ¶ இஸ்ரவேலின் துதிகளுக்குள்ளே வாசமாகிய தேவரீரோவென்றால் பரிசுத்தர்.

௪ உம்முடைய மேல் எங்கள் பிதாக்கள நம்பிக்கையாயிருந்தார்கள்; நம்பின அவர்களை விடுவித்தீர்.

௫ உம்மை நோக்கிக் கூப்பிட்டுத் தப்பினார்கள்; உம்மை நம்பி வெட்கப்பட்டுப் போகாதிருந்தார்கள்.

௬ நானோ மனுஷனல்லாத பூச்சியும், மனுஷனுடைய நிந்தையும், சனத்தால் அசங்கிக்கப்பட்டவனுமாயிருக்கிறேன்.

௭ என்னைப் பார்க்கிறவர்களெல்லாரும் என்னைப் பரியாசம்பண்ணி, உதட்டைப் பிதுக்கித் தலையைத் துலுக்கி,*

*மத். ௨௭. ௩௯.

௮ கர்த்தர்மேல் நம்பிக்கையாய் இருந்தானே, அவர் அவனை விடுவிக்கட்டும்; அவன் மேலே பிரியமாயிருக்கிறாரே, இப்போது அவனை மீட்டுவிடட்டுமென்கிறார்கள்.*

*மத். ௨௭. ௪௩.

௯ தேவரீரோவெனில், என்னைக் கெர்ப்பத்திலிருந்து இழுத்தவர்; என் தாயின் முலைகளில் என்னை உம்முடையமேல் நம்பிக்கையாயிருக்கப் பண்ணினீர்.*

*சங். ௭௧. ௫, ௬.

௰ கெர்ப்பத்திலிருந்து உம்முடைய சார்பில் விழுந்தேன்; நான் என் தாயின் வயிற்றிலே பிறந்ததுமுதல் தேவரீர் என் பராபரன்.

௰௧ ¶ என்னைவிட்டுத் தூரமாகாதிரும்; ஏனெனில் நெருக்கம் கிட்டியிருக்கிறது சகாயருமில்லை.

௰௨ அநேகம் காளைகள் என்னைச் சூழ்ந்து, பாசான் தேசத்து வலுவான எருதுகள் என்னை வளைந்துக்கொண்டன.

௰௩ பீறிக் கெர்ச்சிக்கிற சிங்கத்தைப்போல, என்மேலே தங்கள் வாயைத் திறக்கிறார்கள்.

௰௪ தண்ணீரைப்போல ஊற்றுண்டேன்; என் எலும்புகளெல்லாம் கட்டுவிட்டன; என் இருதயம் மெழுகுபோலாகி, என் குடல்களின் நடுவே உருகிற்று.

௰௫ என் பெலன் ஓட்டைப்போலக் காய்ந்துபோய், என் நாவு என் மேல்வாயோடே ஒட்டிக்கொண்டது; என்னை மரணத்தூளிலே போடுகிறீர்.

௰௬ ஏனெனில் நாய்கள் என்னைச் சூழ்ந்து, பொல்லாதவர்களின் கூட்டம் என்னைச் சுற்றிக்கொண்டது; என் கைகளையும் என் கால்களையும் உருவக் குத்தினார்கள்.*

*லூக். ௨௩. ௩௩.

௰௭ என் எலும்புகளையெல்லாம் நான் எண்ணலாம்; அவர்கள் என்னை நோக்கியிருந்து, என்னிலே தங்கள் ஆசையைப் பார்க்கிறார்கள்.

௰௮ என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்மேல் சீட்டுப் போடுகிறார்கள்.* *மத். ௨௭. ௩௫. யோவா. ௰௯. ௨௩, ௨௪.

௰௯ ¶ ஆனால் கர்த்தாவே, தேவரீர் தூரமாகாதிரும்; என் பெலனே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும்.*

*சங். ௬௯. ௰௮.

௨௰ என் ஆத்துமாவைப் பட்டயத்துக்கும், என் தனிமையை நாய்களின் துஷ்டத்தனத்துக்கும் தப்புவியும்.

௨௧ என்னைச் சிங்கத்தின் வாய்க்கும், காண்டாமிருகங்களின் கொம்புகளுக்கும், விலக்கி இரட்சித்து என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௨௨ ¶ உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்து, நடுச்சபையில் உம்மைத் துதிப்பேன்.* *எபி. ௨. ௰௧, ௰௨.

௨௩ கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே அவரைத் துதியுங்கள்; யாக்கோபின் வித்தாகிய நீங்களெல்லாரும் அவரைக் கனம்பண்ணுங்கள்; இஸ்ரவேலின் வித்தாகிய

நீங்களெல்லாரும் அவருக்கு அஞ்சிக்கையாயிருங்கள்.* *சங். ௩௨. ௰௧.

௨௪ ஏனெனில் சிறுமையானவனுடைய சிறுமையை அவர் அசங்கதியாமலும், அருவருக்காமலும், தம்முடைய முகத்தை அவனைவிட்டு மறைத்திராமலும், அவன் தம்மைநோக்கிக் கூப்பிடுகையில் அவனைக் கேட்டார்.

௨௫ உம்மைக்குறித்துத் திரளான சபையிலே நான் துதிசொல்லுவேன்; அவருக்குப் பயப்படுகிறவர்களுக்கு முன்பாக என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.

௨௬ ¶ சிறுமையானவர்கள் புசித்துத் திருப்தியடைவார்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்கள் அவரைத் துதிப்பார்கள்; உங்கள் இருதயம் என்றென்றைக்கும் வாழும்.*
*ஏசா. ௬௫. ௰௩, ௰௪.

௨௭ பூமியின் எல்லைகளெல்லாம் இதை நினைத்துக் கர்த்தரண்டைக்குத் திரும்பி, சாதிகளுடைய சந்ததிகளெல்லாம் உமக்கு முன்பாகப் பணியக்கடவது.*
*சங். ௨. ௮: ௭௨. ௰௧: ௮௬. ௯.

௨௮ ஏனெனில் இராச்சியம் கர்த்தருடையது; அவர் சாதிகளை ஆளுகிறவர்.

௨௯ பூமியிலே தூளித்தவர்கள் அனைவரும் புசித்துப் பணிந்துகொள்வார்களாக; தூளில் இறங்கித் தங்கள் சீவனைப் பிழைப்பூட்டமாட்டாதவர்கள் அனைவரும் அவருக்குமுன்பாகக் குனிவார்களாக.

௩௰ அவருக்கு ஆராதனைசெய்யும் வித்து தலைமுறை தலைமுறையாக ஆண்டவருடையதென்று எண்ணப்படும்.* *ஏசா. ௫௩. ௰.

௩௧ இவைகளைச் செய்தார் என்று பிறக்கப்போகிற சனத்துக்கு அவருடைய நீதியை வந்து அறிவிப்பார்கள்.

## ௨௩. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்; நான் தாழ்ச்சியடையேன்.* *யோவா. ௰. ௰௧. ஏசா. ௪௰. ௰௧: ௩௪. ௰௧.

௨ அவர் என்னைப் புல்லுள்ள தலங்களில் மேய்த்து, என்னை அமர்ந்த தண்ணீர்களண்டைக்குக் கொண்டுபோய் விடுகிறார்.

௩ அவர் என் ஆத்துமாவைக் குளிரப்பண்ணி, என்னைத் தம்முடைய நாமத்தின் நிமித்தமாக நீதியின் பாதைகளில் நடத்துகிறார்.* *எரே. ௩௧. ௨௫. மத். ௰௧. ௨௮.

௪ நான் மரணநிழலின் பள்ளத்தாக்கிலே நடந்தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன்; ஏனெனில் தேவரீர் என்னோடேகூட இருக்கிறீர்; உம்முடைய கோலும், உம்முடைய தடியும் என்னைத் தேற்றுகின்றன.*
*சங். ௩. ௬, ௭: ௱௰௮. ௬.

௫ என் சத்துருக்களுக்கு எதிரே நீர் எனக்கு முன்பாக ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என் தலையை எண்ணெயால் அபிஷேகம்பண்ணுகிறீர்; என் பாத்திரம் நிரம்பியிருக்கிறது.

௬ என் சீவனுள்ள நாளெல்லாம் நன்மையும் கிருபையும் என்னைத் தொடரும்; நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்தநாள்களாய் நிலைத்திருப்பேன்.* *சங். ௨௭. ௪.

## ௨௪. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

பூமியும், அதின் நிறைவும், பூச்சக்கரமும், அதிலுள்ள குடிகளும் கர்த்தருடையது.*
*சங். ௫௰. ௰௨. ௧ கொரி. ௰. ௨௬, ௨௮.

௨ ஏனெனில் அவரே அதைக் கடல்களிலும் உயரமாக அஸ்திபாரப்படுத்தி, அதை நதிகளிலும் உயரமாகத் திடப்படுத்தினார்.

௩ ¶ யார் கர்த்தருடைய பர்வதத்தில் ஏறி, யார் அவருடைய பரிசுத்தஸ்தலத்திலே நிலைத்திருப்பான்?* *சங். ௫௰. ௧. ழ். ஏசா. ௩௩. ௰௪, ௰௭.

௪ ¶ கைகளிலே குற்றமில்லாதவனும் இருதயத்திலே சுத்தனுமாயிருந்து, தன் ஆத்துமாவை மாயைக்கு ஒப்புக்கொடாமலும், கபடாய் ஆணையிடாமலுமிருக்கிறவனே.



௫ அவன் கர்த்தரால் ஆசீர்வாதத்தையும்,

தன் இரட்சிப்பினுடைய பராபரனால் நீதியையும் பெறுவான்.

௬ ¶ இதுவே அவருக்காகக் கேட்டு விசாரித்து, அவருடைய சமுகத்தைத் தேடுகிற யாக்கோபென்ற சந்ததி; சேலா.

௭ ¶ வாசல்களே, மகிமையின் இராசா உள்ப்பிரவேசிப்பதற்கு உங்கள் தலைகளை உயர்த்துங்கள்; அநாதிவாசல்களே உயருங்கள்.* *௧ கொரி. ௨. ௮.

௮ ¶ யார் இந்த மகிமையின் இராசா? அவர் வல்லமையும் பராக்கிரமுமான கர்த்தர், அவர் யுத்தத்திலே பராக்கிரமமான கர்த்தர் தானே.

௯ வாசல்களே, மகிமையின் இராசா உள்ப்பிரவேசிப்பதற்கு உங்கள் தலைகளை உயர்த்துங்கள், அநாதிவாசல்களே உயருங்கள்.

௰ ¶ யார் இந்த மகிமையின் இராசா? அவர் சேனைகளுடைய கர்த்தரானவர்; அவரே மகிமையின் இராசா; சேலா.

## உரு. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மண்டைக்கு என் ஆத்துமாவை உயர்த்துகிறேன்.

௨ என் பராபரனே, உம்மை நம்பியிருக்கிறேன்; என் சத்துருக்கள் என்மேலே களிகூராதபடிக்கு, நான் வெட்கப்பட்டுப் போகாதிருப்பேனாக.* *சங். ௩௧. ௨: ௩௪. ௬.

௩ உமக்குக் காத்திருக்கிற ஒருவராகிலும் வெட்கப்பட்டுப்போகாமல் முகாந்தரமில்லாமல் துரோகம்பண்ணுகிறவர்களே வெட்கப்பட்டுப்போவார்கள்.* *ஏசா. ௨௮. ௰௬: ௪௯. ௨௩. ௨ரோ. ௰. ௰௧.

௪ கர்த்தாவே, உம்முடைய வழிகளை எனக்குத் தெரிவியும்; உம்முடைய பாதைகளை எனக்குப் போதிப்பியும்.* *சங். ௨௭. ௰௧: ௮௬. ௰௧: ௱௧௯. ௨௪: ௱௪௩. ௮.

௫ என்னை உம்முடைய சத்தியத்திலே வழிநடத்தி, என்னைப் போதிப்பியும்; ஏனெனில் தேவரீர் என் இரட்சிப்பின் பராபரன்; தேவரீருக்கு நித்தம் காத்திருக்கிறேன்.* *சங். ௨௪. ௫.

௬ கர்த்தாவே, உம்முடைய இரக்கங்களையும், உம்முடைய கிருபைகளையும் நினைத்தருளும்; ஏனெனில் அவைகள் அநாதிகாலம் துவக்கி இருக்கின்றன.* *சங். ௱௩. ௰௭.

௭ என் இளவயதின் பாவங்களையும், என் மீறுதல்களையும் நினையாதிரும்; கர்த்தாவே தேவரீர் உம்முடைய தயையினிமித்தம் என்னை உம்முடைய கிருபையின்படியே நினைத்தருளும்.* *யோபு. ௰௩. ௨௬.

௮ ¶ கர்த்தர் நல்லவரும் உத்தமருமாயிருக்கிறார்; ஆகையால் பாவிகளை வழியிலே போதிக்கிறார்.* *௫ மோ. ௩௨. ௪.

௯ சிறுமையானவர்களை நியாயத்திலே நடத்தி, சிறுமையானவர்களுக்குத் தம்முடைய வழியைப் போதிப்பிக்கிறார்.

௰ கர்த்தருடைய உடம்படிக்கையையும் அவருடைய சாட்சிகளையும் கைக்கொள்ளுகிறவர்களுக்கு, அவருடைய பாதைகளெல்லாம் கிருபையும் உண்மையுமானவைகள்.

௰௧ கர்த்தாவே, உம்முடைய நாமத்தினிமித்தம் என் அக்கிரமத்தை மன்னியும்; ஏனெனில் இது பெரியது.* *சங். ௩. ௩.

௰௨ கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் யார்? அவன் தெரிந்துகொள்ளவேண்டிய வழியை அவனுக்குப் போதிப்பிப்பார்.* *சங். ௩௨. ௮.

௰௩ அவன் ஆத்துமா நன்மையிலே தங்கி, அவன் வித்து பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளும்.

௰௪ கர்த்தருடைய இரகசியம் அவருக்குப்பயந்தவர்களுக்குள்ளிருக்கிறது; அவர்களுக்குத் தம்முடைய உடம்படிக்கையைத் தெரியப்படுத்துவார்.* *வாக். ௩. ௩௨.

௰௫ ¶ என் கண்கள் எப்போதும் கர்த்தரின்மேல் வைக்கப்பட்டிருக்கின்றன; ஏனெனில் அவரே என் கால்களை வலைக்கு நீங்கலாக்கிவிடுவார்.* *சங். ௱௨௧. ௧, ௨.

௰௬ என்மேலே நோக்கமாகி எனக்கிரங்கும்; ஏனெனில் நான் தனித்தவனும் சிறு

மைப்பட்டவனுமாயிருக்கிறேன்.

௰௭ என் இருதயத்தின் வியாகுலங்கள் பெருகியிருக்கின்றன; என்னை என் இடுக்கண்களுக்கு நீங்கலாக்கிவிடும்.

௰௮ என் சிறுமையையும் என் வருத்தத்தையும் பார்த்து, என் பாவங்களையெல்லாம் நீக்கிவிடும்.

௰௯ என் சத்துருக்களைப் பாரும்; ஏனெனில் அவர்கள் பெருகியிருந்து, அக்கிரமப் பகையாய் என்னைப் பகைக்கிறார்கள்.*

* சங். ௩. ௨.

௨௰ என் ஆத்துமாவைக் காப்பாற்றி, நான் வெட்கப்பட்டுப்போகாதபடிக்கு என்னை விடுவியும்; ஏனெனில் உம்மை நம்பி இருக்கிறேன்.

௨௰௧ உத்தமமும் நிதானமும் என்னைக் காக்கக்கடவது; ஏனெனில் உமக்குக் காத்திருக்கிறேன்.

௨௰௨ பராபரனே, இஸ்ரவேலை அதின் எல்லா இக்கட்டுகளுக்கும் நீங்கலாக்கி மீட்டுவிடும்.* * சங். ௱௩௰. ௮.

## ௨௬. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என்னை நியாயம் விசாரியும்; ஏனெனில் நான் என் உண்மையிலே நடக்கிறேன்; நான் கர்த்தரை நம்பியிருக்கிறேன், ஆகையால் நான் தள்ளாடுவதில்லை.*

* சங். ௭. ௯.

௨ கர்த்தாவே, என்னை ஆராய்ந்து என்னைச் சோதியும், என் உள்ளிந்திரியங்களையும் என் இருதயத்தையும் புடமிட்டுப்பாரும்.

௩ ஏனெனில் உம்முடைய கிருபை என் கண்களுக்குமுன்பாக இருக்கிறது; உம்முடைய சத்தியத்திலே நடந்துகொள்ளுகிறேன்.

௪ வீண் மனுஷரோடே உளுக்காரேன்; பதிவிருக்கிறவர்களிடத்திலே சேரேன்.*

* சங். ௧. ௧. வாக். ௧. ௰. ௨ கொரி. ௬. ௰௪, ௰௫.

௫ பொல்லாதவர்களின் கூட்டத்தைப் பகைக்கிறேன்; ஆகாதவர்களோடே உளுக்காரேன்.

௬ நான் என் கைகளைக் குற்றமில்லாமையிலே கழுவி,

௭ இப்படியே கர்த்தாவே நான் துதியின் சத்தத்தைத் தொனிக்கப்பண்ணி, உம்முடைய அதிசயங்களையெல்லாம் விவரிப்பதற்காக, உம்முடைய பீடத்தைச் சுற்றிவருகிறேன்.

௮ கர்த்தாவே, உமது வீட்டின் வாசஸ்தலத்தையும், உமது மகிமையின் கூடாரஸ்தலத்தையும், சிநேகிக்கிறேன்.* * சங். ௨௭. ௪.

௯ என் ஆத்துமாவைப் பாவிகளோடும், என் சீவனை இரத்தப்பிரியரோடுங்கூட வாரிக்கொள்ளாதிரும்.* * சங். ௨௮. ௩.

௰ அவர்கள் கையிலே தீவினை இருக்கிறது; அவர்கள் வலதுகை பரிதானங்களால் நிறைந்திருக்கிறது.

௰௧ நானோ என் உண்மையிலே நடக்கிறேன்; என்னை மீட்டுக்கொண்டு என்மேல் இரங்கும்.

௰௨ என் கால் செம்மையான வழியிலே நிலைநிற்கும், சபைகளிலே கர்த்தரைத் துதிப்பேன்.

## ௨௭. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் வெளிச்சமும் என் இரட்சிப்புமானவர்; யாருக்குப் பயப்படுவேன்? கர்த்தர் என் சீவனின் பெலனானவர்; யாருக்கு அருக்களிப்பேன்?* * மீகா. ௭. ௮. யோவா. ௮. ௰௨. சங். ௱௰௮. ௬.

௨ எனக்கிருக்கிற என் சத்துருக்களும் என் பகைஞருமாகிய பொல்லாதவர்கள் என் மாம்சத்தைப் பட்சிக்க என்னண்டையில் சேருகையில் அவர்களே இடறி விழுவார்கள்.* * எரே. ௨௰. ௰௧.

௩ எனக்கு விரோதமாக ஒரு பாளயமிறங்கினாலும் என் இருதயம் பயப்படாது; என்மேல் யுத்தம் எழும்பினாலும் இதிலே நான்

நம்பிக்கையாயிருக்கிறேன்.* * சங். ௩. ௭.

௪ ஒன்றை நான் கர்த்தரிடத்திலே கேட்டேன், அதையே தேடுவேன்; நான் கர்த்தருடைய இன்பத்தைப் பார்த்து, அவருடைய தேவாலயத்தில் ஆராயும்படிக்கு, நான் என் ஜீவனுள்ள நாளெல்லாம் கர்த்தருடைய வீட்டிலே தங்குவதைத்தானே.*

* சங். ௪௨. ௩: ௫௨. ௰.

௫ ஏனெனில் தீங்குநாளில் என்னைத் தம்முடைய கூடாரத்தில் ஒளித்து, என்னைத் தம்முடைய கூடாரமறைவிலே மறைத்து, என்னைக் கல்மலையின்மேல் உயர்த்துகிறார்.*

* சங். ௩௧. ௨௧.

௬ இப்போதும் என்னைச் சுற்றிலுமிருக்கிற என் சத்துருக்களின்மேல் என் தலை உயர்த்தப்படும்; அதினிமித்தம் அவருடைய கூடாரத்திலே நான் கெம்பீரப் பலிகளையிட்டுக் கர்த்தரைப் பாடி அவரைக் கீர்த்தனம் பண்ணுவேன்.

௭ ¶ கர்த்தாவே, நான் கூப்பிடுகிற என் சத்தத்தை நீர் கேட்டு எனக்கு இரங்கி, எனக்கு உத்தரவு அருளிச்செய்யும்.

௮ நம்முடைய முகத்தைத் தேடுங்களென்றீரே என்று என் இருதயம் உமக்குச் சொல்லுகின்றது; உம்முடைய முகத்தைத் தேடுகின்றேன் கர்த்தாவே.

௯ எனக்கு உம்முடைய முகத்தை மறைக்காதிரும்; உம்முடைய அடியானைக் கோபமாய் விலக்காதிரும், நீரே என் சகாயரானவர்; என் இரட்சிப்பின் பராபரனே என்னை நெகிழாமலும், என்னைக் கைவிடாமலும் இரும்.* * சங். ௰௩. ௨. எபி. ௰௩. ௫.

௰ ஏனெனில் என் தகப்பனும், என் தாயும் என்னைக் கைவிட்டார்கள்; ஆனால் கர்த்தர் என்னைச் சேர்க்கிறார்.

௰௧ கர்த்தாவே, என் எதிராளிகளினிமித்தம் நீர் உம்முடைய வழியை எனக்குப் போதிப்பித்து, செம்மையான பாதையில் என்னை நடத்தும்.* * சங். ௨௫. ௪.

௰௨ என் சத்துருக்களின் மனதுக்கு என்னை ஒப்புக்கொடாதிரும்; ஏனெனில் பொய்ச்சாட்சிகளும், ஆக்கிரமித்துச் சீறுகிறவர்களும் எனக்கு விரோதமாக எழும்பினார்கள்.

௰௩ ¶ நானோவென்றால் ஜீவனுள்ளோரின் தேசத்திலே கர்த்தருடைய நன்மைகளைப் பார்ப்பேனென்று விசுவாசிக்கிறேன்.

௰௪ கர்த்தருக்குக் காத்திரு; பெலத்துக் கொண்டு திடமனதாயிருந்து கர்த்தருக்குக் காத்திரு.* * ஆப. ௨. ௩. சங். ௩௧. ௨௫.

## ௨௮. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

என் கல்மலையாகிய கர்த்தாவே, உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; நீர் எனக்கு உத்தரவு கொடாததினால், நான் குழியில் இறங்குகிறவர்களுக்கு ஒப்பாகாதபடிக்கு, எனக்கு மவுனமாயிராதிரும்.*

* சங். ௱௪௩. ௭.

௨ நான் உம்மைநோக்கிச் சத்தமிட்டு, என் கைகளை உம்முடைய பரிசுத்தசந்நிதிக்கு நேராக எடுக்கையில் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேளும்.

௩ தங்களுக்கடுத்தவர்களோடே சமாதானமென்று சொல்லியும், பொல்லாப்பைத் தங்கள் இருதயங்களில் வைத்திருக்கிற ஆகாதவர்களோடும், அக்கிரமக்காரரோடும் என்னை இழுக்காதிரும்.* * எரே. ௯. ௮.

௪ அவர்கள் கிரியைகளுக்கும், அவர்கள் நடத்தைகளின் பொல்லாங்குக்கும் தக்கதாக அவர்களுக்குக் கொடும்; அவர்கள் கைகளின் செய்கைக்குத்தக்கதாக அவர்களுக்கு அளியும்; அவர்களுக்குச் சரிக்குச் சரிக்கட்டும்.

௫ ஏனெனில் கர்த்தருடைய கிரியைகளையும், அவர் கரங்களின் செய்கையையும் கவனியார்கள்; அவர்களை நிர்மூலமாக்குவார், அவர்களைக் குடியேற்றார்.* * ஏசா. ௫. ௰௨.

௬ ¶ கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்;

ஏனென்றால் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டார்.

௭ கர்த்தர் என் பெலனும் என் கேடயமுமாயிருக்கிறார்; அவரை என் இருதயம் நம்பியிருந்தது; அப்போது சகாயம்பெற்றேன்; ஆகையால் என் இருதயம் களிகூருகின்றது; என்பாட்டினால் அவரைத் துதிப்பேன்.

௮ கர்த்தர் அவர்களுடைய பெலன், அவரே தாம் அபிஷேகம்பண்ணுவித்தவனை இரட்சிக்கிற பெலன்.

௯ தேவரீர் உமது சனத்தை இரட்சித்து, உமது சுதந்தரத்தை ஆசீர்வதித்து, அவர்களை மேய்த்து, அவர்களை என்றென்றைக்கும் உயர்த்தும்.

## ௨௯. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

பெலவான்களின் புத்திரரே, கர்த்தருக்கு மகிமையையும் பெலனையும் செலுத்துங்கள்; கர்த்தருக்கு அதைச் செலுத்துங்கள்.* *சங். ௯௬. ௭, ௯.

௨ கர்த்தருக்கு அவர் நாமத்தின் மகிமையைச் செலுத்துங்கள்; பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரைப் பணிந்துகொள்ளுங்கள்.* *சங். ௱௰. ௩.

௩ ¶ கர்த்தருடைய சத்தம் தண்ணீர்களின்மேலே கேட்கப்படும்; மகிமையின் பராபரனாகிய கர்த்தர் திரளான தண்ணீர்களின்மேலே குமுறுகிறார்.

௪ கர்த்தருடைய சத்தம் வல்லமையும், கர்த்தருடைய சத்தம் மகத்துவமுமாய் முழங்குகிறது.

௫ கர்த்தருடைய சத்தம் கேதுருக்களை உடைக்கும்; கர்த்தர் லீபனோனின் கேதுருக்களை உடைத்து,* *ஏசா. ௨. ௰௩.

௬ அவைகளைக் கன்றுக்குட்டிகளைப்போலவும், லீபனோனையும் சீரியோனையும் காண்டாமிருகக் குட்டிகளைப்போலவும் சிமாளிக்கப்பண்ணுகிறார்.* *௫ மோ. ௩. ௯.

௭ கர்த்தருடைய சத்தம் அக்கினிச்சுவாலைகளைப்போல வெட்டுகிறது.

௮ கர்த்தருடைய சத்தம் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகிறது; கர்த்தர் காதேஸ் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகிறார்.

௯ கர்த்தருடைய சத்தம் பெண்மான்களை ஈனப்பண்ணிக் காடுகளைத் திறப்பாக்கும்; ஆனால் அவருடைய தேவாலயத்தில் ஒவ்வொருவன் அவருக்கு மகிமை செலுத்துகிறான்.

௰ கர்த்தர் சலப்பிரளயம் வரப்பண்ண உளுக்காந்தார்; கர்த்தர் என்றென்றைக்கும் இராசாவாய் உளுக்காந்திருக்கிறார்.* *௧ தீமோ. ௧. ௰௭.

௰௧ கர்த்தர் தமது சனத்துக்குப் பெலன் கொடுப்பார், கர்த்தர் தம்முடைய சனத்தைச் சமாதானம் தந்து ஆசீர்வதிப்பார்.

## ௩௰. சங்கீதம்.

(வீட்டுப் பிரதிஷ்டையின் பாட்டாகிய தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, நீர் என் சத்துருக்களை என்மேற் சந்தோஷப்படவொட்டாமல் என்னைக் கைதூக்கி எடுத்தபடியினாலே உம்மை உயர்த்துவேன்.

௨ என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிட்டேன், அப்போது என்னைக் குணமாக்கினீர்.

௩ கர்த்தாவே, நீர் என் ஆத்துமாவைப் பாதாளத்திலிருந்து ஏறப்பண்ணி, நான் குழியில் இறங்காதபடிக்கு என்னை உயிரோடே காத்தீர்.* *சங். ௮௬. ௰௩: ௱௰௬. ௩, ௪.

௪ ¶ கர்த்தருடைய பரிசுத்தவான்களே அவரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய பரிசுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்டாடுங்கள்.* *சங். ௯௭. ௰௨.

௫ ஏனெனில் அவருடைய கோபம் ஒரு நிமிஷமும், அவருடைய தயவு நீடிய வாழ்வுமாம்; சாயங்காலத்தில் அழுகை தங்கும், காலமே கெம்பீரமுண்டு.* *ஏசா. ௫௪. ௭.

௬ ¶ என்றைக்கும் அசைக்கப்படேனென்று நான் என் சுகத்திலே சொன்னேன்.

௭ ஏனெனில் கர்த்தாவே, உமது தயையினாலே என் பருவதத்தைத் திடமாய் நிற்கப்பண்ணியிருந்தீர்; ஆனால் உமது முகத்தை நீர் மறைத்துக்கொண்டபொழுது கலங்கினவனானேன்.

௮ நான் குழியில் இறங்குகையில், என் இரத்தத்தால் என்ன ஆதாயமுண்டு? தூள் உம்மைத் துதித்து, உம்முடைய சத்தியத்தை அறிவிக்குமோவென்றும்,*

* சங். ௬. ௫.

௯ கர்த்தாவே, நீர் கேட்டு என்மேலிரங்கும்; கர்த்தாவே, எனக்கு அநுகூலராய் இருமென்றும் சொல்லி,

௰ கர்த்தாவே, உம்மைநோக்கிக் கூப்பிட்டேன்; கர்த்தரைநோக்கிக் கெஞ்சினேன்.

௰௧ என் புலம்பலை எனக்கு ஆநந்தக்களிப்பாக மாறப்பண்ணினீர்; என் மகிமை அமர்ந்திராமல் உம்மைக் கீர்த்தனம் பண்ணும்பொருட்டாக என் இரட்டை எடுத்துப்போட்டு, என்னை மகிழ்ச்சியால் இடைகட்டினீர்.* *சங். ௱௰௬. ௭, ௮: ௰௬. ௯.

௰௨ என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை என்றென்றைக்கும் துதிப்பேன்.

## ௩௰௧. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்; நான் என்றைக்கும் வெட்கப்பட்டுப் போகாதிருக்கட்டும்; உமது நீதியின்நிமித்தம் என்னை விடுவியும்.* * சங். ௭௧. ௧, ௨.

௨ என்னண்டைக்கு உமது செவியைச் சாய்த்து, சீக்கிரமாய் என்னைத் தப்புவியும்; என்னை இரட்சிக்கும்படிக்கு, எனக்குப் பெலத்த கன்மலையும் அரமனையுமாயிரும்.

௩ ஏனெனில் தேவரீர் என் கன்மலையும் என் கோட்டையும்தானே; உமது நாமத்தின்நிமித்தம் என்னை வழிநடத்தும்.

௪ அவர்கள் எனக்கு மறைவாய் வைத்த வலைக்கு என்னை நீங்கலாக்கிவிடும்; ஏனெனில் தேவரீர் என்னுடைய பெலன்.

௫ உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்; சத்தியபரனாகிய கர்த்தாவே, என்னை மீட்டுவிட்டீர்.* * லூக். ௨௩. ௪௬.

௬ வீண் மாயைகளைக் கைக்கொள்ளுகிறவர்களை நான் பகைத்துக் கர்த்தரை நம்பியிருக்கிறேன்.

௭ உமது கிருபையிலே களிகூர்ந்து மகிழுவேன்; ஏனென்றால் நீர் என் சிறுமையைப் பார்த்து, நெருக்கங்களில் என் ஆத்துமாவை அறிந்துகொண்டு,

௮ என்னைச் சத்துருவின் கையில் ஒப்புக்கொடுத்துவிடாமல், என் பாதங்களை விசாலத்திலே நிறுத்தினீர்.* * சங். ௰௮. ௩௭.

௯ ¶ எனக்கு இரங்கும் கர்த்தாவே, ஏனெனில் நெருக்கப்படுகிறேன்; சலிப்பினால் என் கண்ணும், என் ஆத்துமாவும், என் வயிறுங்கூடக் கருகிப்போயின.

௰ ஏனெனில் என் பிராணன் சஞ்சலத்தாலும் என் வருஷங்கள் தவிப்பினாலும் கழிந்துபோயின, என் அக்கிரமத்தினாலே என் பெலன் விழுந்து, என் எலும்புகள் உலர்ந்துபோயின.

௰௧ என்னுடைய எல்லாச் சத்துருக்களினிமித்தம் நான் என் அயலகத்தாருக்கு மகா நிந்தையும், எனக்கு அறிமுகமானவர்களுக்குத் திகிலுமானேன்; வீதியிலே என்னைக் காணுகிறவர்கள் என்னைவிட்டு ஓடிப்போகிறார்கள்.* * சங். ௩௮. ௰௨.

௰௨ செத்தவனைப்போல எல்லாராலும் மனதார மறக்கப்பட்டேன்; கெட்ட பாத்திரத்தைப்போலானேன்.

௰௩ ஏனெனில் அநேகருடைய அவதூறுகளைக் கேட்டேன்; அவர்கள் ஏகமாய் எனக்கு விரோதமாக ஆலோசனைபண்ணுகிறதினாலே திகில் என்னைச் சூழ்ந்துகொண்டது; என் பிராணனை வாங்க நினைக்கிறார்கள்.

௰௪ ¶ நானோவெனில் கர்த்தாவே, உம்

மை நம்பியிருக்கிறேன்; தேவரீர் என் பராபரன் என்கிறேன்.

௰௫ என் காலங்கள் உம்முடைய கரத்திலிருக்கின்றன; என் சத்துருக்களின் கைக்கும், என்னைப் பின்தொடருகிறவர்களின் கைக்கும் என்னைத் தப்புவியும்.

௰௬ நீர் உம்முடைய முகத்தை உம்முடைய ஊழியக்காரன்மேலே பிரகாசிக்கப்பண்ணி, உமது கிருபையினாலே என்னை இரட்சியும்.* *சங். ௬௨. ௭.

௰௭ கர்த்தாவே, நான் வெட்கப்பட்டுப்போகாதிருக்கட்டும்; ஏனெனில் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; ஆகாதவர்கள் வெட்கப்பட்டு, பாதாளத்தில் மவுனமாய்ப் போகட்டும்.

௰௮ நீதிமான்மேல் பெருமையோடும், அசங்கதத்தோடும், கடினமாய்ப் பேசுகிற பொய் உதடுகள் கட்டுப்படுவதாக.

௰௯ ¶ உமக்குப் பயந்தவர்களுக்கு நீர் வைத்துவைத்ததும், உம்மை நம்புகிறவர்களுக்கு நீர் மனுப்புத்திரருக்கு எதிரே உண்டுபண்ணினதுமான உம்முடைய நன்மை எத்தனை திரள்.* *ஏசா. ௬௪. ௪.

௨௰ அவர்களை உமது முகத்தின் மறைவிலே மனுஷரின் இடும்புகளுக்கு இடைஞ்சலாய்க் காப்பாற்றி, அவர்களை உமது கூடாரத்திலே நாவுகளின் சண்டைக்கு ஒளிக்கிறீர்.

௨௧ கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்; ஏனெனில் என்னை அரணிப்பான பட்டணத்தில் வைக்கிறதற்குச் சரியாக என்மேலே தம்முடைய கிருபையை அதிசயமானதாக்கினார்.* *சங். ௰௭. ௭.

௨௨ உம்முடைய கண்களுக்குமுன்பாக இராதபடிக்கு, வெட்டுண்டேனென்று நான் என் மனக்கலக்கத்திலே சொன்னேன்; ஆனால் நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில், என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டீர்.

௨௩ ¶ கர்த்தருடைய பரிசுத்தவான்களாகிய நீங்களெல்லாரும் அவரைச் சிநேகியுங்கள்; உண்மையானவர்களைக் கர்த்தர் தற்காத்துப் பெருமை செய்கிறவனுக்குப் பரிபூரணமாய்ப் பதில்செலுத்துகிறார்.

௨௪ கர்த்தருக்குக் காத்திருக்கிற நீங்கள் அனைவரும் பெலத்துக்கொண்டு திடமனதாயிருங்கள்.* *சங். ௨௭. ௪.

## ௩௨. சங்கீதம்.

௧ எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டு, எவனுடைய பாவம் மூடப்பட்டதோ அவன் பாக்கியவான்.* *உரோ. ௪. ௭, ௮.

௨ எவன்மேல் கர்த்தர் அவன் அக்கிரமத்தைச் சுமத்தாதிருக்கிறாரோ, எவனுடைய ஆவியில் கபடமில்லாதிருக்கிறதோ, அந்த மனுஷன் பாக்கியவான்.

௩ ¶ நான் அடக்கிவைத்தமட்டும் நித்தம் என் கதறுதலினாலே என் எலும்புகள் உலர்ந்துபோயின.

௪ ஏனெனில் இரவும் பகலும் என்மேல் உம்முடைய கை பாரமாயிருந்ததினாலே, என் சாரம் உஷ்ணகால வறட்சிகளைப்போல வரண்டுபோயிற்று; சேலா.

௫ நான் என் அக்கிரமத்தை மறைக்காமல், என் பாவத்தை உமக்கு அறிவித்தேன்; என் மீறுதல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடுவேனென்றேன்; அப்போது தேவரீர் என் பாவத்தின் அக்கிரமத்தை மன்னித்தீர்; சேலா.* *வாக். ௨௮. ௰௩. ௧ யோ. ௧. ௯.

௬ இதற்காகச் சகாயம்கிடைக்கும்காலத்திலே சகல சன்மார்க்கனும் உம்மைநோக்கி விண்ணப்பஞ்செய்வான்; அப்போது வெகு தண்ணீர்களுடைய வெள்ளம் வந்தும், அவனைச் சேராது.* *ஏசா. ௪௩. ௨.

௭ தேவரீர் எனக்கு மறைவிடமாயிருந்து, இக்கட்டுக்கு என்னை விலக்கிக் காத்து விடுவித்தலின் கெம்பீரங்களால் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிறீர்; சேலா.* *சங். ௨௭. ௫: ௯௧. ௨௧.

௮ ¶ உனக்கு நாம் புத்திபடிப்பித்து, நீ நடக்கவேண்டிய வழியில் உன்னைப் போதிப்பித்

து, உன்மேல் வைத்த கண்ணினால் உனக்கு ஆலோசனை கொடுப்போம்.* *சங்.௨௫.௰௨.

௯ உன் கிட்டச் சேராவிட்டால், வாராலும் கடிவாளத்தினாலும் வாய் கட்டப்பட வேண்டிய குதிரையைப்போலவும், உணர்வற்ற கோவேறுகழுதையைப்போலவும் இராதிருங்கள்.

௰ ஆகாதவனுக்கு அநேகம் வேதனைகளுண்டாம்; ஆனால் கர்த்தரை நம்பியிருக்கிறவனைக் கிருபை சூழ்ந்துகொள்ளும்.* *சங். ௰௬. ௪.

௰௧ நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள்; செம்மை இருதயத்தாரே நீங்கள் அனைவரும் கெம்பீரியுங்கள்.* *சங். ௩௩. ௧.

## ௩௩. சங்கீதம்.

நீதிமான்களே, கர்த்தருக்குள் கெம்பீரியுங்கள்; துதிக்கிறது செம்மையானவர்களுக்கு அடுக்கும்.* *சங்.௩௨.௰௧: ௱௪௭.௧.

௨ கர்த்தரைச் சுரமண்டலத்தினாலே துதித்து, அவரைத் தம்புருவினாலும், பத்து நரம்பு வீணையினாலும் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௩ அவரைப் புதுப்பாட்டாய்ப் பாடி, கெம்பீரத்துடனே நேர்த்தியாய்க் கொட்டுங்கள்.* *சங். ௪௰. ௩.

௪ ¶ ஏனெனில் கர்த்தருடைய வார்த்தை செம்மையும் அவருடைய செய்கைகளெல்லாம் சத்தியமுமாயிருக்கின்றன.* *சங். ௰௯. ௰.

௫ நீதியையும் நியாயத்தையும் சிநேகிக்கிறார்; பூமி கர்த்தரின் கிருபையால் நிறைந்திருக்கின்றது.* *சங்.௪௫.௭: ௱௰௯. ௬௪.

௬ கர்த்தரின் வார்த்தையினாலே பரமண்டலங்களும், அவருடைய வாயின் ஆவியினாலே அவைகளின் எல்லாச் சேனையும் உண்டாக்கப்பட்டன.

௭ அவர் சமுத்திர சலங்களைக் குவியலாகக் கூட்டி, ஆழங்களைப் பொக்கிஷவைப்பாக வைத்தார்.* *யோபு. ௩௮. ௮.

௮ பூமியெல்லாம் கர்த்தருக்குப் பயப்பட்டு, பூச்சக்கரக் குடிகளெல்லாம் அவருக்கு அஞ்சி இருப்பதாக.

௯ ஏனெனில் அவர் சொல்ல ஆகும், அவர் கட்டளையிட நிற்கும்.* *ஆதி. ௧. ௩.

௰ கர்த்தர் சாதிகளின் ஆலோசனையை அவத்தமாக்கி, சனங்களுடைய நினைவுகளைத் தவிர்க்கிறார்.* *யோபு.௫.௰௨. ஏசா.௧௯.௩.

௰௧ கர்த்தருடைய ஆலோசனையோ நித்தியகாலமாகவும், அவர் இருதயத்தின் நினைவுகள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும்.* *ஏசா. ௪௬. ௰.

௰௨ ¶ கர்த்தர் தெய்வமாயிருக்கப்பட்ட சாதியும், அவர் தமக்குச் சுதந்தரமாகத் தெரிந்துகொண்ட சனமும் பாக்கியமானது.* *சங். ௬௫. ௫: ௱௪௪. ௰௫.

௰௩ வானங்களிலிருந்து கர்த்தர் நோக்கிப் பார்த்து, எல்லா மனுப்புத்திரரையும் காண்கிறார்.

௰௪ தாம் வாசமாயிருக்கிற தானத்திலிருந்து பூமியின் குடிகள் எல்லார்மேலும் கண்ணோக்கமாயிருக்கிறார்.

௰௫ அவர் இவர்களனைவருடைய இருதயத்தையும் உருவேறப்படுத்தி, அவர்கள் செய்கைகளை எல்லாம் கவனித்திருக்கிறார்.

௰௬ இராசா இராணுவத்திரளால் இரட்சிக்கப்படான்; சவுரியவான் பெலத்தின் மிகுதியாலே தப்பான்.

௰௭ இரட்சிக்கப்படுவதற்குக் குதிரை விருதா, அது தன் பெரிய வீரியத்தாலே தப்புவியாது.* *சங். ௱௪௭. ௰.

௰௮ ¶ இதோ, தமக்குப் பயந்து தமது கிருபைக்குக் காத்திருக்கிறவர்களின் ஆத்துமாக்களை மரணத்துக்கு விலக்கி விடுவிக்கவும்,* *சங். ௩௪. ௰௫.

௰௯ அவர்களைப் பஞ்சத்தில் உயிரோடே காக்கவும், கர்த்தருடைய கண் அவர்கள் மேலே வைக்கப்பட்டிருக்கின்றது.

௨௰ நம்முடைய ஆத்துமா கர்த்தருக்குக் காத்திருக்கிறது; அவர் நம்முடைய ஒத்தா

சையும் நம்முடைய கேடயமுமானவர்.

௨௧ ஏனெனில் அவருடைய பரிசுத்த நாமத்தை நாம் நம்பியிருக்கிறபடியால், நம்முடைய இருதயம் அவருக்குள் சந்தோஷமாயிருக்கும்.

௨௨ கர்த்தரே நாங்கள் உம்மை நம்பினபடி, உமது கிருபை எங்கள்மேல் இருக்கக்கடவது.

## ௩௰௪. சங்கீதம்.

(தாவீது தன் முகசாடையை அபிமெலேகுக்குமுன்பாக வேறுபடுத்தினதினாலே, அவனாலே துரத்திவிடப்பட்டுப்போகையில் பாடின சங்கீதம்.)

கர்த்தனை எல்லாக்காலத்திலும் தோத்திரிப்பேன்; அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்கும்.* * சங். ௱௪. ௩௩.

௨ கர்த்தருக்குள் என் ஆத்துமா மேன்மைபாராட்டும்; சிறுமையானவர்கள் அதைக்கேட்டு மகிழுவார்கள்.* *எரே. ௯. ௨௪.

௩ என்னோடேகூடக் கர்த்தனை மகிமைப்படுத்துங்கள்; நாம் ஒருமித்து அவர் நாமத்தை உயர்த்துவோம்.

௪ ¶ நான் கர்த்தனைத் தேடினபோது, அவர் எனக்கு மறுஉத்தரவு கொடுத்து, என்னை என்னுடைய எல்லாத் திகில்களுக்கும் நீங்கலாக்கிவிட்டார்.* * ஏசா. ௬௫. ௨௪.

௫ அவரைநோக்கி அவரண்டை ஓடிவருகிறவர்களின் முகங்கள் வெட்கத்துக்குள்ளாகாது.

௬ இந்தச் சிறுமையானவன் கூப்பிட்டான்; அப்போது கர்த்தர் கேட்டு, அவனை அவன் நெருக்கங்களுக்கெல்லாம் நீங்கலாக்கி இரட்சித்தார்.

௭ கர்த்தருடைய தூதர் அவருக்குப் பயந்தவர்களைச் சுற்றிலும் பாளயம்போட்டு, அவர்களை விடுவிக்கிறார்.* * சங். ௯௧. ௰௧. 2 இரா. ௬. ௰௬, ௰௭.

௮ கர்த்தர் நல்லவரென்றதை உருசித்துப்பாருங்கள்; அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.* * சங்.௨.௰௨: ௪௰. ௫.

௯ கர்த்தருடைய பரிசுத்தவான்களே, அவருக்குப் பயந்திருங்கள்; ஏனெனில் அவருக்குப் பயந்தவர்களுக்குக் குறைவில்லை * * சங். ௩௭. ௰௯.

௰ சிங்கக்குட்டிகள் தாழ்ச்சி அடைந்து பட்டினியாயிருக்கும்; கர்த்தரைத் தேடுகிறவர்களுக்கோவென்றால், ஒரு நன்மையும் குறைபடாது.

௰௧ ¶ பிள்ளைகளே, வந்து என்னைக் கேளுங்கள்; கர்த்தருக்குப் பயப்படுதலை உங்களுக்குக் கற்றுக்கொடுப்பேன்.

௰௨ ஜீவனை விரும்பி, நன்மைகாணும் நாட்களைச் சிநேகிக்கிற மனுஷன் யார்?* * ௧ பே. ௩. ௰, ௰௨.

௰௩ உன் நாவைப் பொல்லாப்புக்கும், உன் உதடுகளைக் கபடவசனிப்புக்கும் விலக்கலாய்க் காத்துக்கொள்.

௰௪ பொல்லாப்பை விட்டு விலகி நன்மைசெய்; சமாதானத்தைத் தேடி அதைப் பின்தொடர்.* * சங்.௩௭.௨௭. ஏசா.௧.௰௬,௰௭.

௰௫ ¶ கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள்மேல் வைக்கப்பட்டு, அவருடைய செவிகள் அவர்கள் கூப்பிடுதலைக் கவனிக்கின்றன.* * சங். ௩௩. ௰௮, ௰௯.

௰௬ பொல்லாங்கு செய்கிறவர்கள்பேரைப் பூமியில் இராமல் அற்றுப்போகப்பண்ண, கர்த்தருடைய முகம் அவர்களுக்கு விரோதமாயிருக்கின்றது.

௰௭ நீதிமான்கள் கூப்பிடும்போது, கர்த்தர் அவர்களைக் கேட்டு, அவர்களை அவர்களுடைய எல்லா நெருக்கங்களுக்கும் நீங்கலாக்கிவிடுகிறார்.

௰௮ இருதயம் நொறுங்குண்டவர்களுக்குக் கர்த்தர் சமீபமாயிருந்து, ஆவி நொறுங்குண்டவர்களை இரட்சிக்கிறார்.* * சங். ௱௪௫. ௰௮, ௰௯.

௰௯ நீதிமானுக்கு வருகிற தீங்குகள் அநேகமாயிருக்கின்றன; ஆனால் கர்த்தர் அவைகளெல்லாவற்றிற்கும் அவனை நீங்கலாக்கிவிடுகிறார்.* * ௨ தீமோ. ௩. ௰௧.

௨௰ அவன் எலும்புகளை எல்லாம் காப்பாற்றுகிறார்; இவைகளில் ஒன்றும் முறிக்கப்படுகிறதில்லை.

௨௧ தீங்கு ஆகாதவனைக் கொல்லும்; நீதிமானைப் பகைக்கிறவர்களே நேரஸ்தராவார்கள்.

௨௨ கர்த்தர் தமது ஊழியக்காரரின் ஆத்துமாவை மீட்டுவிடுகிறார்; அவரை அண்டிக்கொள்ளுகிறவர்களெல்லாரும் குற்றம் சுமக்காதிருப்பார்கள்.* *சங். ௩௭. ௩௩.

## ௩௫. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, நீர் என் வழக்காளிகளோடே வழக்காடி, என்னோடு யுத்தம்பண்ணுகிறவர்களோடு யுத்தம்பண்ணும்.

௨ நீர் கேடயத்தையும் பரிசையையும் பிடித்து, எனக்கு ஒத்தாசையாக எழும்பி,

௩ என்னைப் பின்தொடருகிறவர்களோடு எதிர்த்துநிற்க ஈட்டியை ஓங்கி, அவர்களை மறித்து, என் ஆத்துமாவுடனே, நாம் உன் இரட்சிப்பென்று சொல்லும்.

௪ என் பிராணனை வாங்கத்தேடுகிறவர்கள் வெட்கி இலச்சையடைந்து பின்னிட்டுத் திரும்பவும், எனக்குப் பொல்லாப்பை நினைக்கிறவர்கள் நாணமடையவும்,*
*சங். ௪௰. ௰௫: ௰௭. ௩.

௫ அவர்கள் காற்றுமுகத்திலே பதரைப் போலாகவும் வேண்டும்; கர்த்தருடைய தூதன் அவர்களைத் தள்ளுவானாக.*
*சங். ௧. ௪: ௮௩. ௰௪.

௬ அவர்கள் வழி இருளும் சறுக்கலுமாகக் கடவது; கர்த்தருடைய தூதன் அவர்களைத் தொடருவானாக.

௭ ஏனெனில் முகாந்தரமில்லாமல் குழிக்குள்ளப்படுத்த, தங்கள் வலையை எனக்கு ஒளித்துவைத்தார்கள்; முகாந்தரமில்லாமல் என் ஆத்துமாவுக்குக் குழி வெட்டினார்கள்.

௮ ¶ அவன் அறியாமல் பாழ்க்கடிப்பு அவனுக்கு வந்து, அவன் மறைவாய் வைத்த அவன் வலை அவனையே பிடிக்க, அவனே பாழ்க்கடிப்பாய் அதிலேதான் விழவேண்டும்.* *சங். ௭. ௰௬, ௰௭.

௯ அப்படியே என் ஆத்துமா கர்த்தருக்குள் களிகூர்ந்து, அவருடைய இரட்சிப்பிலே மகிழ்ந்திருக்கும்.

௰ சிறுமையானவனை அவனிலும் பெலவானுடைய கைக்கும், சிறுமையானவனையும் எளியவனையும் அவனைக் கொள்ளையாடுகிறவனுடைய கைக்கும் தப்புவிக்கிற உம்மைப்போலே யார், கர்த்தாவே, என்று என் எலும்புகளெல்லாம் சொல்லும்.

௰௧ ¶ கொடுமையான சாட்சிகள் எழும்பி, நான் அறியாததை என்னைக் கேட்கிறார்கள்.

௰௨ எனக்கு நன்மைக்குத் தீமை சரிக்கட்டி, என் ஆத்துமா முதல் அற்றுப்போகப் பார்க்கிறார்கள்.* *சங். ௩௮. ௨௰.

௰௩ அவர்கள் வியாதியாயிருந்தபோதோவெனில், இரட்டு என் உடுப்பாயிருந்தது; நான் உபவாசத்தால் என் ஆத்துமாவை உபத்திரவப்படுத்தினேன்; என் ஜெபமும் என் மடியிலே இரட்டித்தது.

௰௪ எனக்குச் சிநேகிதனாகவும், எனக்குச் சகோதரனாகவும் பாவித்து நடந்துகொண்டேன்; தாய்க்காகத் துக்கிக்கிறவனைப்போலத் துக்கவஸ்திரம் தரித்துத் தலைகவிழ்ந்து நடந்தேன்.

௰௫ ஆனால் நான் ஆபத்துப்படுகையில் சந்தோஷப்பட்டுக் கூட்டம்கூடுகிறார்கள்; நொண்டிகளும், நான் அறியாதவர்களும். எனக்கு விரோதமாகக் கூட்டம்கூடி, என்னைப் பீறி, அமராதிருக்கிறார்கள்.*
*யோபு. ௩௰. ௧–௰௧.

௰௬ அப்பத்துக்காக மாயமும் பரியாசமும் பண்ணுகிறவர்களுக்குள் இருந்துகொண்டு என்மேலே பல்க்கடிக்கிறார்கள்.

௰௭ ¶ ஆண்டவரே, எந்தமட்டும் இதைப் பாராதிருப்பீர்; என் ஆத்துமாவை அவர்கள் பாழ்க்கடிப்புகளுக்கும், என் தனிமை

லைச் சிங்கக்குட்டிகளுக்கும் தப்புவித்துத் திருப்பும்.

௧௮ உம்மைப் பெரிய சபையிலே துதிப்பேன்; திரளான சனத்துக்குள்ளே உம்மைப் புகழுவேன்.* * சங். ௨௰.௰: ௱௰௧.௧.

௧௯ வீணாய் எனக்குச் சத்துருக்களானவர்கள் என்நிமித்தம் சந்தோஷியாமலும், முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் கண் சிமிட்டாமலும் இருப்பார்களாக.

௨௰ ஏனெனில் அவர்கள் சமாதானமாய்ப் பேசாமல், தேசத்திலே அமர்ந்திருக்கிறவர்களுக்கு விரோதமாய்க் கபடமான காரியங்களைத் தியானித்து,

௨௧ எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை விரிவாய்த் திறந்து, ஆகா, ஆகா, எங்கள் கண் கண்டது என்கிறார்கள்.*
* சங். ௪௰.௰௫: ௭௰. ௪.

௨௨ ¶ கர்த்தாவே, நீர் அதைக் கண்டீர்; மவுனமாயிராதிரும், ஆண்டவரே, என்னை விட்டுத் தூரமாகாதிரும்.

௨௩ என் பராபரனே, என் ஆண்டவரே, என் நியாயத்துக்கும், என் வழக்குக்கும் விழித்தெழும்பும்.* * சங். ௪௪. ௨௪.

௨௪ என் பராபரனாகிய கர்த்தாவே, அவர்கள் என்நிமித்தம் சந்தோஷியாதபடிக்கு, உம்முடைய நீதியின்படி என்னை நியாயம் விசாரியும்.* * சங். ௪௩. ௧.

௨௫ அவர்கள் தங்கள் இருதயத்திலே, எங்கள் ஆத்துமாவே, ஆகா என்றும், அவனை விழுங்கினோம் என்றும் சொல்லாதிருப்பார்களாக.

௨௬ என் தீங்குக்காகச் சந்தோஷிக்கிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி, எனக்கு விரோதமாய்ப் பெருமைப்படுகிறவர்கள் வெட்கத்தாலும், இலச்சையாலும் உடுத்தப்படக்கடவார்கள்.* * சங். ௬. ௰௧: ௪௰. ௰௪, ௰௫.

௨௭ என் நீதியை விரும்புகிறவர்கள் கெம்பீரித்து மகிழ்ந்து தம்முடைய ஊழியக்காரனுடைய சமாதானத்தை விரும்புகிற கர்த்தர் மகிமைப்படக்கடவார் என்று எப்போதும் சொல்லுவார்களாக.* * சங். ௪௰. ௰௭.

௨௮ என் நாவு உமது நீதியையும், சகல நாளிலும் உமது துதியையும் சொல்லுகிறதாயிருக்கும்.

## ௱௩௬. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தருடைய தாசனாகிய தாவீதின் சங்கீதம்.)

ஆகாதவனுடைய துரோகப்பேச்சு என் இருதயத்தின் உள்ளத்துக்குத் தெரியும்; அவன் கண்களுக்குமுன்பாகத் தெய்வப் பயப்படுதலில்லை.

௨ ஏனென்றால் தன் துர்க்குணத்தை நிறைவேற்றவும், வர்மம் வைக்கவும், தனக்குத் தானே தன் பார்வைக்கு ஏற்றபடி இச்சகம்பேசுகிறான்.

௩ அவன் வாயின் வார்த்தைகள் அக்கிரமமும் கபடமுமாய் இருக்கின்றன; நன்மை செய்வதற்கான புத்தியைக் காக்காமல் விட்டுவிட்டான்.* * சங். ௫௩. ௰௩.

௪ அவன் தன் படுக்கையின்மேல் அக்கிரமத்தைச் சிந்தித்துக்கொண்டு, நல்லதல்லாத வழியிலே நிலைத்து, பொல்லாப்பை வெறுக்காதிருக்கிறான்.

௫ ¶ கர்த்தாவே, உமது கிருபை வானங்களில் இருக்கிறது; உமது சத்தியம் ஆகாசமண்டலங்கள்பரியந்தமும் எட்டுகிறது.*
* சங். ௫௭. ௰௧.

௬ உமது நீதி வலிய பருவதங்களைப்போலவும், உமது நியாயங்கள் மகா ஆழமாகவும் இருக்கின்றன; கர்த்தாவே, மனுஷரையும் மிருகங்களையும் காப்பாற்றுகிறீர்.*
* உரோ. ௰௧. ௩௩. சங். ௱௪௫. ௰௫, ௰௬.

௭ பராபரனே, உம்முடைய கிருபை எத்தனை அருமையாயிருக்கிறது; அதினாலே மனுப்புத்திரர் உம்முடைய செட்டைகளின் நிழலிலே திடன்கொண்டு தங்குகிறார்கள்.* * சங். ௰௭. ௮: ௫௭. ௨.

௮ உமது வீட்டினுடைய சம்பூரணத்தால்

மஸ்தாகுகிறார்கள்; உம்முடைய செல்வங்களின் ஆற்றினால் அவர்களைத் தாகந்தீர்க்கிறீர்.

௯ ஏனெனில் உம்மிடத்திலே சீவனுடைய ஊற்றிருக்கின்றது; உம்முடைய வெளிச்சத்தில் வெளிச்சத்தைக் காண்கிறோம்.*
*யோவா. க. ச.

௰ ¶ உம்மை அறிந்தவர்கள்மேல் உமது கிருபையையும், செம்மை இருதயத்தார்மேல் உமது நீதியையும் நீட்டும்.

௰க பெருமைக்காரரின் கால் என்மேல் வராமலும், ஆகாதவர்களுடைய கை என்னைப் பறக்கடியாமலும் இருப்பதாக.

௰உ ¶ அங்கே அக்கிரமக்காரர் விழுந்து, எழுந்திருக்கமாட்டாமலே தள்ளுண்டுபோகிறார்கள்.

## ௩௭. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

பொல்லாதவர்கள்மேல் எரிச்சலாகாதிரு; நியாயக்கேடு செய்கிறவர்கள்மேல் பொறாமையாகாதிரு.* *சங். ௭௩. ௩. வாக். உச. ௰௯.

உ ஏனென்றால் புல்லைப்போலச் சீக்கிரமாய் அறுப்புண்டு, பச்சையான பூலைப்போல உலருவார்கள்.

௩ கர்த்தரை நம்பியிருந்து நன்மைசெய்; தேசத்தில் குடியிருந்து சத்தியத்தை மேய்ந்துகொள்.

௪ கர்த்தர்மேலே மனமகிழ்ச்சியாய் இரு; அவர் உன் இருதயத்தின் வேண்டுதல்களை உனக்குக் கொடுப்பார்.* *சங். உ௰. ௫.

௫ உன் வழியைக் கர்த்தருக்குச் சாட்டிவிடு; அவர்மேல் நம்பிக்கையாய் இரு; அவரே காரியத்தை நடப்பித்து,*
* சங். ௫௫. உ௩.

௬ உன் நீதியை வெளிச்சத்தைப்போலவும் உன் நியாயத்தைப் பட்டப்பகலைப்போலவும் வெளிப்படப்பண்ணுவார்.

௭ ¶ கர்த்தரை நோக்கி அமர்ந்து, அவருக்குக் காத்துக்கொண்டிரு; தன் வழி வாய்க்கிறவன்மேலும், தீவினைகளைச் செய்கிற மனுஷன்மேலும் எரிச்சலாகாதிரு.

௮ கோபத்தை நெகிழ்ந்து உக்கிரத்தை விட்டுவிடு; பொல்லாப்புச் செய்யவே இனமாகிற எரிச்சல் உனக்கு வேண்டாம்.*
*யாக். க. உ௰.

௯ ஏனெனில் பொல்லாதவர்கள் வேரறுப்புண்டு போவார்கள்; ஆனால் கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௰ இன்னம் கொஞ்சநேரந்தான்; அப்போது ஆகாதவன் இரான், அவன் தானத்தையுற்று விசாரித்தாயானால் அவன் இல்லை.

௰க மெத்தனவுள்ளவர்களோவென்றால், பூமியைச் சுதந்தரித்துக்கொண்டு, மகா சமாதானத்தினாலே மனமகிழ்ச்சியாயிருப்பார்கள்.* *மத். ௫. ௫.

௰உ ¶ ஆகாதவன் நீதிமானுக்குத் தீவினை நினைத்து, அவன்மேலே பற்கடிக்கிறான்.

௰௩ ஆண்டவர் அவனை நகைக்கிறார்; ஏனெனில், அவன் நாள்வருகிறதென்று காண்கிறார்.* * சங். உ. ௪.

௰௪ சிறுமையும் எளிமையுமானவனை மடிவிக்கவும், செம்மைமார்க்கத்தாரை விழப்பண்ணவும், ஆகாதவர்கள் பட்டயத்தை உருவி, தங்கள் வில்லை நாணேற்றுகிறார்கள்.

௰௫ ஆனால் அவர்கள் பட்டையம் அவர்களுடைய இருதயத்துக்குள் போய், அவர்கள் வில்லுகள் முறியும்.* * சங். ௭. ௰௭.

௰௬ ¶ அநேக ஆகாதவர்களுக்குள்ள திரட்சியைப்பார்க்கிலும், நீதிமானுக்குள்ள கொஞ்சமானது நல்லது.* * வாக். ௰௫. ௰௬.

௰௭ ஏனெனில், ஆகாதவர்களுடைய புயங்கள் முறியும்; ஆனால் நீதிமான்களைக் கர்த்தர் தாங்குகிறார்.

௰௮ ¶ மன உண்மையானவர்களின் நாள்களைக் கர்த்தர் அறிந்திருக்கிறார்; அவர்கள் சுதந்தரம் என்றென்றைக்குமிருக்கும்.

௰௯ துர்க்காலத்திலே வெட்கப்பட்டுப் போகாதிருந்து பஞ்சகாலத்திலே திருப்தியடைவார்கள்.* * சங். ௩௩. ௰௮, ௰௯.

௨௰ ஆகாதவர்களோவென்றால் அழிவார்கள்; கர்த்தருடைய சத்துருக்கள் புல்லுள்ள தலங்களின் வடிப்பத்தைப்போல ஒழிந்துபோவார்கள்; புகையில் ஒழிந்துபோவார்கள்.

௨௧ ஆகாதவன் கடன்வாங்கிச் செலுத்தாதேபோகிறான்; நீதிமானோவெனில், இறங்கிக் கொடுக்கிறான்.

௨௨ ஏனெனில் அவரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; அவரால் சபிக்கப்பட்டவர்களோவென்றால் வேரறுப்புண்டுபோவார்கள்.

௨௩ ¶ நல்ல மனுஷனுடைய நடைகள் கர்த்தரால் உறுதிப்படும்; அவனுடைய வழியின்மேல் அவர் பிரியமாயிருக்கிறார்.

௨௪ அவன் விழுந்தால் தள்ளப்படுகிறதில்லை; ஏனென்றால் கர்த்தர் அவன் கையைத் தாங்குகிறார்.* * சங். ௱௪௫. ௰௪.

௨௫ நான் இளைஞனாயிருந்தேன், முதிர்வயதும் ஆனேன்; ஆனால் நீதிமான் கைவிடப்பட்டதையும், அல்லது அவன் வித்து அப்பம்தேடுகிறதையும் கண்டேனில்லை.

௨௬ நித்தம் இரங்கிக் கடன்கொடுக்கிறான்; அவன் வித்து ஆசீர்வாதமாயிருக்கும்.

௨௭ ¶ பொல்லாப்பைவிட்டு விலகி, நன்மைசெய்து என்றென்றைக்கும் நிலைத்திரு.*
* சங். ௩௪. ௰௪.

௨௮ ஏனெனில் கர்த்தர் நியாயத்தைச் சிநேகிக்கிறவர், அவர் தம்முடைய சன்மார்க்கரைக் கைவிடுவதில்லை; அவர்கள் என்றைக்கும் தற்காக்கப்படுவார்கள்; ஆனால் ஆகாதவர்களுடைய வித்து வேரறுப்புண்டுபோம்.

௨௯ நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொண்டு, என்றைக்கும் அதிலே வாசமாயிருப்பார்கள்.* * வாக். ௨. ௨௧, ௨௨.

௩௰ ¶ நீதிமானுடைய வாய் ஞானத்தை உரைத்து, அவனுடைய நாவும் நியாயத்தைப் பேசும்.

௩௧ அவனுடைய பராபரனின் வேதம் அவன் இருதயத்தில் இருக்கிறது; அவன் நடைகள் தள்ளாடுவதில்லை.*
* ஏசா. ௫௧. ௭.

௩௨ நீதிமானை ஆகாதவன் வேவுபார்த்து, அவனைக் கொலைசெய்ய வகைதேடுகிறான்.*
* சங். ௰. ௯.

௩௩ கர்த்தரோவென்றால் அவனை இவன் கையிலே விடுவதுமில்லை, அவன் நியாயம் விசாரிக்கப்படுகையில் அவனை ஆகாதவனாகத் தீர்ப்பதுமில்லை.

௩௪ நீ கர்த்தருக்குக் காத்திருந்து, அவருடைய வழியைக் கைக்கொள்; அப்போது நீ பூமியைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு உன்னை உயர்த்துவார்; ஆகாதவர்கள் வேரறுப்புண்டுபோவதைப் பார்ப்பாய்.

௩௫ ¶ பெலவந்தனுமாய், முளைத்த நிலத்தில் நிற்கிற பச்சைமரத்தைப்போலத் தழைத்தவனுமாய் இருக்கிற ஒரு ஆகாதவனைக் கண்டேன்.

௩௬ ஆனால் ஒழிந்துபோனான்; இதோ அவனில்லை; அவனைத் தேடினேன்; ஆனால் அவன் காணப்படவில்லை.

௩௭ நீ உத்தமனை நோக்கிச் செம்மையானவனைப் பார்த்திரு; ஏனெனில் அம்மனுஷனுடைய பின்காரியம் சமாதானம்.

௩௮ துரோகிகளோ, ஏகமாய் அழிக்கப்படுவார்கள்; ஆகாதவர்களின் பின் காரியம் வேரறுப்புண்குதல்.* * சங். ௭௩. ௰௯.

௩௯ ஆனால் நீதிமான்களுடைய இரட்சிப்பும், இக்கட்டுக் காலத்திலே அவர்கள் பெலனும் கர்த்தரால் வரும்.

௪௰ கர்த்தர் அவர்களுக்கு ஒத்தாசைபண்ணி, அவர்களை விடுவிப்பார்; அவர்களை ஆகாதவர்களுடைய கைக்குத் தப்புவித்து இரட்சிப்பார்; ஏனெனில் அவரை நம்பியிருக்கிறார்கள்.

## ௩௮. சங்கீதம்.

(நினைப்பூட்டுதலாகப் பாடின தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கடுமையில் என்னைக் கடிந்துகொள்ளாதிரும்; உம்முடைய உக்கிரத்தில் என்னைத் தண்டியாதிரும்.* * சங். ௬. ௨. எரே. ௰. ௨௪.

௨ ஏனெனில் உம்முடைய அம்புகள் எனக்குள்ப்பட்டன; உம்முடைய கை என்மேல் இறங்கிற்று.* * யோபு. ௬. ௪.

௩ ¶ உமது சினத்தால் என் மாம்சத்திலே ஆரோக்கியம் இல்லை; என் பாவத்தினால் என் எலும்புகளில் சமாதானமில்லை.

௪ ஏனெனில் என் அக்கிரமங்கள் என் தலையின்மேல் ஏறி, பாரச்சுமையைப்போல எனக்கு மிஞ்சின பாரமாயிற்று.* *புல. ௧. ௰௪.

௫ என் பயித்தியத்தினால் என் புண்கள் நாற்றமெடுத்து அழுகிப்போயின.

௬ மிகுதியாகவும் மடங்கி ஒடுங்கினேன்; நாள்தோறும் கரிகறுத்துத் திரிகிறேன்.

௭ ஏனெனில் என் குடல்கள் வெட்டையால் நிறைந்திருக்கின்றன; என் மாம்சத்திலே ஆரோக்கியம் இல்லை.

௮ மிகுதியாகவும் பெலனற்றுப்போய் அலைச்சலபட்டேன்; என் இருதயத்தின் கொந்தளிப்பினால் கதறுகிறேன்.

௯ ¶ ஆண்டவரே, உமக்குமுன்பாக என் ஏங்கல் எல்லாமிருக்கின்றது; என் தவிப்பு உமக்கு மறைக்கப்பட்டதல்ல.

௰ என் இருதயம் குழம்பி அலைகிறது; என் பெலன் என்னைவிட்டு, என் கண்களுடைய வெளிச்சந்தானும் என்னில் இல்லாதேபோயிற்று.

௰௧ என் சிநேகிதரும் என் தோழமாரும் என் வாதைக்கு எதிரே நின்றிருந்து, என்னைச் சேர்ந்தவர்கள் தூரமாய் நிற்கிறார்கள்.* *யோபு. ௰௯. ௰௪.

௰௨ என் பிராணனை வாங்கப்பார்க்கிறவர்கள் எனக்குக் கண்ணிகளை வைக்கிறார்கள்; எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் கேடுபாடுகளைப் பேசி, நித்தம் கபடங்களைச் சிந்திக்கிறார்கள்.

௰௩ நானோவெனில் செவிடனைப்போலக் கேளாதவனாகவும், தன் வாயைத் திறவாத ஊமையனைப்போலவும் இருக்கிறேன்.

௰௪ கேளாமலும், தன் வாயில் எதிர் உத்தரவுகள் இல்லாமலுமிருக்கிற மனுஷனைப்போலானேன்.

௰௫ ¶ ஆதேனென்றால் கர்த்தாவே, உமக்குக் காத்திருக்கிறேன்; என் பராபரனாகிய ஆண்டவரே, தேவரீர் மறு உத்தரவு கொடுப்பீர்.

௰௬ ஏனெனில் என்நிமித்தம் சந்தோஷப்படாதிருப்பார்களாக என்றேன்; என்கால் தள்ளாடும்போது என்மேல் பெருமைப்படுவார்களே.

௰௭ ஏனெனில் நான் தள்ளம்பாற இனமானவன்; என் நோவு எப்போதும் எனக்குமுன்பாக இருக்கிறது.

௰௮ ஏனென்றால் என் அக்கிரமத்தை அறிக்கையிட்டு, என் பாவத்தினிமித்தம் விசாரப்பட்டிருக்கிறேன்.* * சங். ௩௨. ௫.

௰௯ ஆனால் என் சத்துருக்கள் வாழ்ந்து பெலத்திருக்கிறார்கள்; முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் பெருத்திருக்கிறார்கள்.

௨௰ நன்மைக்குத்தீமை சரிக்கட்டுகிறவர்கள், நான் நன்மையைப் பின்பற்றுகிறபடியால் என்னை விரோதிக்கிறார்கள்.

௨௧ கர்த்தாவே, என்னைக் கைவிடாதிரும்; என் பராபரனே, எனக்குத் தூரமாயிராதிரும்.

௨௨ என் இரட்சிப்பாகிய ஆண்டவரே. எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக் கொள்ளும்.

## ௩௯. சங்கீதம்.

(எதித்தூன் என்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப் பட்ட தாவீதின் சங்கீதம்.)

நான் என் நாவினாலே பாவம்செய்யாத

படிக்கு, நான் என் வழிகளைக் காத்து, ஆகாதவன் எனக்குமுன்பாக இருக்கும்மட்டும் என் வாயைக் கடிவாளத்தால் பத்திரப்படுத்துவேன் என்றேன்.* *சங். ௰௭. ௩: ௱௪௧. ௩.

௨ நான் மவுனப்பட்டு ஊமையனாயிருந்து, நலமானதைப் பேசாமல் அமர்ந்தேன்; ஆனால் என் நோவு அதிக துரிசாயிற்று.* *சங். ௩௮. ௰௪.

௩ என் இருதயம் எனக்குள் எரிந்ததினால் என் தியானத்தினால் நெருப்பு வேகிறதாயிருந்தது; அப்போது என் நாவினால் விண்ணப்பம்செய்தேன்.

௪ ¶ கர்த்தாவே, நான் எத்தனையாய் நிலைபற்றவனென்று நான் உணர, என் முடிவையும் என் நாள்களின் அளவு எம்மாத்திரம் என்கிறதையும் எனக்குத் தெரிவியும்.* *சங். ௯௰. ௰௨.

௫ இதோ நாலு விரல்கடைகளாய் என் நாள்களை அளவிட்டீர்; என் ஆயுசு உமக்குமுன்பாக ஒன்றும் இல்லாததுபோல இருக்கிறது; ஆம், எந்த மனுஷனும் மாயையே என்கிறது நிசம்; சேலா.* *சங். ௯௨. ௰: ௱௪௪. ௪.

௬ வேஷமாகவே மனுஷன் திரிகிறான்; மாயையாகவே அமளிபண்ணுகிறார்கள்; ஆஸ்தியைச் சேர்க்கிறான்; ஆனால் யார் அவைகளை வாரிக்கொள்ளுவாரென்று அறியான்.

௭ ¶ இப்போதும் ஆண்டவரே, எதுக்கு எதிர்பார்ப்பேன்; என் நம்பிக்கை உம்முடையமேல் இருக்கிறது.* *சங். ௨௫. ௨.

௮ என்னை என் மீறுதல்களுக்கெல்லாம் நீங்கலாக்கும்; என்னைப் பயித்தியக்காரனுடைய நிந்தனையாக வைக்காதிரும்.* *சங். ௭௯. ௯.

௯ என் வாயைத் திறவாமல் மவுனமாயிருக்கிறேன்; ஏனெனில் தேவரீர் அதைச் செய்தீர்.

௰ உம்முடைய வாதையை என்னிலிருந்து எடுத்துப்போடும்; உமது கரத்தின் அடிகளால் நான் தொய்ந்துபோனேன்.

௰௧ நீர் அக்கிரமத்தின் நிமித்தம் மனுஷனைக் கடிந்துகொண்டு தண்டிக்கிறபோது, அவன் வடிவைப் பொட்டரிப்பாய் அழியப்பண்ணுகிறீர்; மெய்யாக எந்த மனுஷனும் மாயை; சேலா.

௰௨ ¶ கர்த்தாவே, என் செபத்தைக் கேட்டு, என் கூப்பிடுதலுக்குச் செவிகொடும்; என் கண்ணீருக்கு மவுனமாயிராதிரும்; ஏனெனில் உமக்குமுன்பாக நான் என்னுடைய எல்லாப் பிதாக்களைப்போல, அரதேசியும் பரதேசியுமாயிருக்கிறேன்.* *சங். ௱௰௯. ௰௯. ௧ பே. ௨. ௰௨. ௩ மோ. ௨௫. ௨௩. ௧ நாளா. ௨௯. ௰௫. எபி. ௰௧. ௰௩.

௰௩ நான் இனி இராமல்போகுமுன்னே, இலகுவடைவதற்காக என்னை விட்டுவிலகும்.* *யோபு. ௰. ௨௰. ௨௧.

## ௪௰. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தருக்குக் காக்கவே காத்திருந்தேன்; அப்போது அவர் என்னண்டைக்குச் சாய்ந்து, என் கூப்பிடுதலைக் கேட்டு,

௨ என்னைப் பயங்கரமான குழியிலும், உளையான சேற்றிலுமிருந்து ஏறப்பண்ணி, என் கால்களைக் கல்மலையின்மேல் நிறுத்தி, என் அடிகளை உறுதிப்படுத்தி,* *சங். ௯௯. ௩.

௩ எங்கள் பராபரனைத் துதிக்கும் புதுப் பாட்டை என் வாயிலே கொடுத்தார்; அநேகர் அதைக் கண்டு பயந்து, கர்த்தரை நம்புவார்கள்.* *சங். ௯௯. ௧.

௪ அகந்தைக்காரரையும் பொய்க்குச் சாய்கிறவர்களையும் நோக்காமல், கர்த்தரைத் தன் நம்பிக்கையாக வைக்கிற மனுஷன் பாக்கியவான்.* *சங். ௩௪. ௯.

௫ ¶ என் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் எங்கள்மேல் உம்முடைய அதிசயங்களையும், உம்முடைய யோசனைகளையும் பெ

ருகப்பண்ணினீர்; தேவரீருக்கு ஒப்பிடுதல் இல்லை; நான் அவைகளை அறிவித்துச் சொல்லியும் அவைகள் எண்ணிக்கைக்கு மேலானவைகள்.* *சங். அகூ. எ.

௬ பலியையும் காணிக்கையையும் நீர் விரும்பாமல், செவிகளை எனக்கு ஆயத்தம் பண்ணினீர்; சருவாங்கதகனபலியையும், பாவம்போக்கும்பலியையும் நீர் கேட்டதில்லை.* *எபி. ௰. ரு, ௰. ஏசா. ருஎ. ரு, கூ.

௭ இதோ வருகிறேனென்று அப்போது சொன்னேன்; புஸ்தகச் சுருளில் என்னைக் குறித்து எழுதியிருக்கிறது.*
*யோவா. ரு. ௩௯, ௪௬.

௮ என் பராபரனே, உமக்குப் பிரியமானதைச் செய்ய விரும்புகிறேன்; உமது நியாயப்பிரமாணம் என் உள்ளத்துக்குள்ளிருக்கிறது.* *மத். ௨௬. ௩௯. யோவா. ௪. ௩௪.

௯ திரளான சபையிலே நீதியைப் பிரசங்கிக்கிறேன்; இதோ கர்த்தாவே, என் உதடுகளை மூடேனென்கிறதை நீர் அறிவீர்.*
*சங். ௩ரு. ௰அ.

௰ உம்முடைய நீதியை என் இருதயத்துக்குள் மறையேன்; உமது சத்தியத்தையும், உமது இரட்சிப்பையும் சொல்லுகிறேன்; உமது கிருபையையும், உமது உண்மையையும் திரளான சபைக்கு அறிவியாதபடிக்கு ஒளியேன்.

௰௧ ¶ கர்த்தாவே, தேவரீர் உம்முடைய இரக்கங்களை எனக்குக் கிடையாமல்போகப்பண்ணாதிரும்; உமது கிருபையும், உமது உண்மையும் எப்போதும் என்னைக் காப்பாற்றக்கடவன.

௰௨ ஏனெனில் எண்ணிக்கைக்கு அடங்காத பொல்லாப்புகள் என்னைச் சூழ்ந்து, என் பார்வைக்கு அடங்காத என்னுடைய அக்கிரமங்கள் என்னைத் தொடர்ந்துபிடித்தன; அவைகள் என் தலையின் மயிர்களிலும் அதிகமாயிருக்கிறதினால், என் இருதயம் என்னைவிட்டுப் போயிற்று.*
*சங். கூகூ. ரு, கூ.

௰௩ கர்த்தாவே, என்னை விடுவித்தருளும்; கர்த்தாவே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும்.* *சங். ௨௨. ௨௰.

௰௪ என் ஆத்துமாவை அழிக்கத்தேடுகிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி, என் தீங்கை விரும்புகிறவர்கள் பின்னிட்டு இலச்சையடையக்கடவார்கள்.* *சங்.எ௰.௩. மு.

௰ரு என்மேல் ஆகா, ஆகா, என்கிறவர்கள் தாங்கள் அடையும் வெட்கமான பலனாலே திடுக்கிடக்கடவார்கள்.* *சங்.௩ரு.௨௧.மு.

௰௬ உம்மைத் தேடுகிற அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக; உம்முடைய இரட்சிப்பைச் சிநேகிக்கிறவர்கள் எப்போதும், கர்த்தர் மகிமைப்படக்கடவார் என்பார்களாக.

௰௭ நான் சிறுமையும் எளிமையுமானவன்; கர்த்தரோவெனில் எனக்காக நினைவாயிருப்பார்; தேவரீரே என் துணையும் என்னை விடுவிக்கிறவருமாயிருக்கிறீர்; என் பராபரனே தாமதியாதிரும்.* *சங். கூகூ. ௩௰: ௱கூ. ௨௨.

## ௪௧. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

சிறுமைப்பட்டவன்மேலே கவனிப்பான சிந்தையுள்ளவன் பாக்கியவான்; கர்த்தர் அவனைத் தீங்குநாளிலே விடுவிப்பார்.*
*வாக். ௰௪. ௨௧.

௨ கர்த்தர் அவனைத் தற்காத்து, அவனை உயிரோடே வைப்பார்; பூமியின்மேல் பாக்கியவானாயிருப்பான்; அவனை அவன் சத்துருக்களின் மனதுக்கு ஒப்புக்கொடீர்.

௩ கட்டிலின்மேல் பிணியாய்க்கிடக்கிற அவனைக் கர்த்தர் தாங்குவார்; அவனுடைய வியாதியிலே அவன் படுக்கையை எல்லாம் மாறப்பண்ணுவீர்.

௪ ¶ கர்த்தாவே, என்மேல் இரங்கும்; என் ஆத்துமாவைக் குணமாக்கும்; ஏனெனில் உமக்கு விரோதமாகப் பாவம்செய்

தேனென்று நான் சொன்னேன்.*
*சங். ௬.௩: ௫௧. ௬.

௫ எப்போது சாவான், எப்போது அவன் பேர் அழியுமென்று என் சத்துருக்கள் எனக்குப் பொல்லாப்பாய்ச் சொல்லுகிறார்கள்.

௬ என்னை ஒருவன் பார்க்கவந்தால், அபத்தம் பேசுகிறான்; அவன் இருதயம் அக்கிரமத்தைப் பொறுக்கிக்கொண்டு வெளியே போய் அதைச் சொல்லுகிறான்.

௭ என்மேல் ஏகமாய் முணுமுணுக்கிறார்கள்; என் பகைஞர் எல்லாரும் எனக்கு விரோதமாயிருந்து, எனக்குப் பொல்லாப்பை நினைத்து,

௮ பேலியாளின் கர்மம் அவனை ஒட்டிக்கொண்டிருக்கிறது; கிடக்கிற அவன் இனி எழுந்திருப்பதில்லை என்கிறார்கள்.

௯ என்னோடே சமாதானமாயிருந்தவனும், நான் நம்பினவனும், என்னுடைய அப்பத்தைப் புசித்தவனுமாகிய மனுஷனும் என்மேலே தன் குதிகாலைமிகுதியும்எடுத்தான்.*
*யோவா. ௰௩. ௰௮.

௰ ¶ ஆனால் கர்த்தாவே, தேவரீர் எனக்கு இரங்கி, நான் அவர்களுக்குச் சரிக்கட்ட என்னை எழுந்திருக்கப்பண்ணும்.

௰௧ என் சத்துரு என்மேலே கெம்பீரிக்காமல் போவதினாலே என்மேல் பிரியமாயிருக்கிறீர் என்கிறதை அறிவேன்.

௰௨ நான் மன உண்மையாயிருக்கிறதினால் நீர் என்னைத் தாங்கி, என்னை என்றென்றைக்கும் உம்முடைய முகத்துக்குமுன்பாக நிலைநிறுத்துவீர்.

௰௩ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் தோத்திரிக்கப்பட்டவர்; ஆமென், ஆமென்.* *சங். ௭௨. ௰௮, ௰௯: ௮௯. ௫௩: ௱௬. ௪௮.

## ௪௨. சங்கீதம்.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட போதக சங்கீதம்.)

மான் தண்ணீர் நதிகளின்மேல் வாஞ்சையாய்க் கதறுமாப்போல, என் ஆத்துமா உம்முடையமேல் வாஞ்சையாய்க் கதறுகிறது, பராபரனே.

௨ என் ஆத்துமா ஜீவனுள்ள தெய்வமாகிய பராபரன்மேலே தாகமாயிருக்கிறது; நான் எப்போது பிரவேசித்து, பராபரனுடைய சந்நிதியிலே காணப்படலாம்.*
*சங். ௬௩. ௨: ௱௪௩. ௬.

௩ உன் பராபரன் எங்கே என்று என்னுடனே நாள்தோறும் சொல்லப்படுகையால், இரவும்பகலும் என் கண்ணீர் எனக்கு அப்பமாயிற்று.* *சங். ௭௯. ௰.

௪ இவைகளை நான் நினைத்துக்கொண்டு, எனக்குள்ளிருக்கும் என் ஆத்துமாவை ஊற்றிவிடுகிறேன்; ஏனெனில் முந்தி நான் கும்புக்குள்ளே நடந்துவந்து, பண்டிகையை ஆசரிக்கிற கூட்டத்தினுடைய கெம்பீரமும் துதியுமான சத்தத்துடனே பராபரனுடைய வீடுமட்டும் ஏகமாய் ஏகுவேனே.

௫ ¶ என் ஆத்துமாவே, ஏன் முறிந்துபோய் என்னிலே கொந்தளிக்கிறாய்; பராபரனுக்குக் காத்துக்கொண்டிரு; ஏனெனில் இன்னம் அவரை அவர் சமுகத்தினுடைய இரட்சிப்புகளின் நிமித்தம் துதிப்பேன்.* *சங். ௪௩. ௫.

௬ என் பராபரனே, என்னில் என் ஆத்துமா முறிந்துகொண்டிருக்கின்றது; ஆகையால் யோர்தான் தேசத்திலும், எர்மோன் மலைகளிலும், சிறு மலையிலுமிருந்து உம்மை நினைக்கிறேன்.

௭ உம்முடைய மதகுகளின் இரைச்சலால் ஆழத்தை ஆழம் கூப்பிடுகின்றது; உம்முடைய வெள்ளங்களும் உம்முடைய அலைகளுமெல்லாம் என்மேலே புரளுகின்றன.

௮ ஆனால் பகல்காலத்திலே கர்த்தர் தமது கிருபையைக் கட்டளையிடுகிறார்; இராக்காலத்தில் என் ஜீவனுடைய பராபரனை விண்ணப்பம்செய்யும் அவருடைய பாட்டு என்னோடிருக்கும்.

௯ நான் என் கன்மலையாகிய பராபரனோடே, ஏன் என்னை மறக்கிறீர், சத்துரு என்னை ஒடுக்குகிறதினால், நான் ஏன் கரிகறுத்துத் திரியவேண்டுமென்கிறேன்.*
*சங். ௪௩. ௨.

௰ உன் பராபரன் எங்கே என்று என் சத்துருக்கள் நாள்தோறும் என்னோடே சொல்லி என்னை நிந்திக்கிறது, என் எலும்புகளை உருவும் வாதையாய் எனக்கு இருக்கிறது.

௰௧ ¶ என் ஆத்துமாவே, ஏன் முறிந்துகொண்டிருக்கிறாய்? ஏன் என்னில் கொந்தளிக்கிறாய்? பராபரனுக்குக் காத்துக்கொண்டிரு; ஏனெனில் இன்னம் அவரை என் முகத்தின் குறையற்ற இரட்சிப்பென்றும், என் பராபரனென்றும் துதிப்பேன்.*
*௬. வச. சங். ௪௩. ௫.

## ௪௩. சங்கீதம்.

பராபரனே, நீர் என்னை நியாயம்விசாரித்து, சன்மார்க்கமில்லாத சாதி என்னை விலக, என் வழக்கை வழக்காடி, சூதும் அநியாயமுமான மனுஷனுக்கு என்னைத் தப்புவியும்.* *சங். ௨௬. ௧.

௨ ஏனெனில் தேவரீர் என் பெலனாகிய பராபரன்; ஏன் என்னைத் தள்ளிவிடுகிறீர்? சத்துரு என்னை ஒடுக்குகிறதினால், நான் ஏன் கரிகறுத்துத் திரியவேண்டும்.* *சங். ௪௪.௰.

௩ உம்முடைய வெளிச்சத்தையும், உமது சத்தியத்தையும் அனுப்பும்; அவைகள் என்னை நடத்தி, என்னை உமது பரிசுத்த பருவதத்துக்கும், உம்முடைய வாசஸ்தலங்களுக்கும் கொண்டுபோகவும்,*
*சங். ௰௫. ௧.

௪ நான் பராபரனுடைய பீடத்தண்டைக்கும் என் களிகூருதலான மகிழ்ச்சியின் பராபரனண்டைக்கும் பிரவேசித்து, என் தெய்வமாகிய பராபரனே, உம்மைச் சுரமண்டலத்தாலே துதிக்கவும்தானே.

௫ ¶ என் ஆத்துமாவே, ஏன் முறிந்துகொண்டிருக்கிறாய்? ஏன் என்னில் கொந்தளிக்கிறாய்? பராபரனை நம்பு; ஏனெனில் இன்னம் அவரை என் முகத்தின் குறையற்ற இரட்சிப்பென்றும், என் பராபரனென்றும் துதிப்பேன்.* *சங். ௪௨. ௬, ௰௨.

## ௪௪. சங்கீதம்.

(கோராகின் புத்திரரில் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட போதக சங்கீதம்.)

பராபரனே, பூருவ நாள்களாகிய தங்கள் நாள்களில் நீர் நடப்பித்த கிரியையை எங்கள் பிதாக்கள் எங்களுக்கு விவரித்தார்கள்; அதை எங்கள் காதுகளாலே கேட்டோம்.

௨ தேவரீர் உம்முடைய கையினாலே சாதிகளைத் துரத்தி, இவர்களை நாட்டிச் சனசதனங்களைத் துன்பப்படுத்தி, அவைகளைத் தள்ளிவிட்டீர்.

௩ ஏனெனில் அவர்கள் தங்கள் பட்டையத்தாலே தேசத்தைக் கட்டிக்கொண்டதில்லை; அவர்கள் புயமுமல்ல, உம்முடைய வலதுகரமும், உம்முடைய புயமும், உம்முடைய முகத்தின் வெளிச்சமும் அவர்களை இரட்சித்தன; ஏனெனில் அவர்கள் மேலே பிரியமாயிருந்தீர்.

௪ ¶ பராபரனே, தேவரீரே என் இராசாவானவர்; யாக்கோபின் குறையற்ற இரட்சிப்பைக் கட்டளையிடும்.

௫ உம்மாலே எங்கள் சத்துருக்களை முட்டுவோம்; எங்கள்மேல் விழுகிறவர்களை உம்முடைய நாமத்தினாலே மிதிப்போம்.*
*சங். ௬௰. ௰௪: ௱௮. ௰௪.

௬ ஏனெனில் என் வில்லை நம்பேன்; என் பட்டையம் என்னை இரட்சிப்பதுமில்லை.

௭ நீரோவெனில் எங்கள் சத்துருக்களுக்கு எங்களை நீங்கலாக்கி இரட்சித்து, எங்களைப்பகைக்கிறவர்களை வெட்கப்படுத்தினீர்.

௮ பராபரனுக்குள் நித்தம் மேன்மைபாராட்டுகிறோம்; உம்முடைய நாமத்தை என்றென்றைக்கும் துதிப்போம்; சேலா.

௯ ¶ இப்போதோவெனில் நீர் எங்கள்

சேனைகளுடனே புறப்படாமல், எங்களைத் தள்ளிவிட்டு நாணப்பண்ணுகிறீர்.*

*சங். ௱௮. ௰௨.

௰ எங்களைச் சத்துருவுக்கிடைந்து பின்னிட்டுத் திரும்பப்பண்ணுகிறீர்; எங்கள் பகைஞர் தங்களுக்கென்று கொள்ளையாடுகிறார்கள்.

௰௧ நீர் எங்களை ஆடுகளைப்போல இரையாக ஒப்புக்கொடுத்து, சாதிகளுக்குள்ளே எங்களைச் சிதறடிக்கிறீர்.

௰௨ உம்முடைய சனத்தை இலவசமாக விற்கிறீர்; அவர்களைக் கிரயப்படுத்துகிறதினாலே வரப்படாதேபோகிறீர்.

௰௩ எங்களை எங்கள் அயலாருக்கு நிந்தையும், எங்கள் சுற்றுப்புறத்தாருக்குப் பரியாசமும், சக்கந்தமுமாக வைக்கிறீர்.*

*சங். ௭௯. ௪.

௰௪ எங்களைச் சாதிகளுக்குள்ளே பழமொழியாகவும், சனசதளங்களுக்குள்ளே தலைதுலுக்குதலாகவும் வைக்கிறீர்.

௰௫ சத்துருவையும் குரோதம் தீர்த்துக்கொள்ளுகிறவனையும் தொட்டு நிந்தித்து, தூஷணிக்கிறவனுடைய சத்தத்தினாலே,

௰௬ நித்தம் என் இலச்சை எனக்குமுன்பாக இருக்கிறது; என் முகத்தின் வெட்கம் என்னை மூடுகிறது.

௰௭ ¶ இவையெல்லாம் எங்களுக்கு வந்திருந்தும் உம்மை நாங்கள் மறந்ததுமில்லை; உம்முடைய உடம்படிக்கைக்குத் திருகுபண்ணினதுமில்லை.

௰௮ நீர் எங்களை வலுசர்ப்பங்களுள்ள தலத்திலே நசுக்கி, மரணநிழலினாலே எங்களை மூடியிருந்தும்,

௰௯ எங்கள் இருதயம் பின்வாங்கினதும், எங்கள் காலடி உம்முடைய பாதையைவிட்டு விலகினதுமில்லை.

௨௰ நாங்கள் எங்கள் பராபரனுடைய நாமத்தை மறந்து, எங்கள் உள்ளங்கைகளை அந்நியதேவருக்கு விரித்திருந்தோமானால்,

௨௰௧ பராபரன் அதை ஆராய்ந்து விசாரியாதிருப்பாரோ? ஏனெனில் அவர் இருதயத்தின் அந்தரங்கங்களை அறிந்திருக்கிறார்.

௨௰௨ ஆனால் உம்முடைய நிமித்தம் நாங்கள் நாள்தோறும் கொலைசெய்யப்பட்டு அடிக்கப்படும் ஆடுகளைப்போலே எண்ணப்பட்டிருக்கிறோம்.

௨௰௩ ¶ *ஆண்டவரே, விழித்துக்கொள்ளும்; ஏன் நித்திரைபண்ணுகிறீர்; எங்களை என்றைக்கும் தள்ளிவிடாமல் எழுப்பும்.†

*உரோ. ௮. ௩௬. †மத். ௮. ௨௪, ௨௫.

௨௰௪ ஏன் உம்முடைய முகத்தை மறைத்து, எங்கள் சிறுமையையும் எங்கள் ஒடுங்குதலையும் மறப்பீர்.

௨௰௫ ஏனெனில் எங்கள் ஆத்துமா புழுதிமட்டாகக் குனியப்பட்டு, எங்கள் வயிறு தரையோடு ஒட்டியிருக்கிறது.

௨௰௬ எங்களுக்கு ஒத்தாசையாக எழுந்திருந்து, உம்முடைய கிருபையின் நிமித்தம் எங்களை மீட்டுவிடும்.

## ௪௫. சங்கீதம்.

(ஆறுகாம்புச் கின்னூரத்திலே வாசிக்கக் கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சிநேகப்பாட்டாகிய போதக சங்கீதம்.)

என் இருதயம் நல்ல விசேஷத்தை ஊற்றிவிடும்; நான் கவிகட்டுகிறது இராசாவின் மேலேதான் என்கிறேன்; என் நாவு தேறின கணக்கனுடைய எழுத்தாணி.*

*கொலோ. ௩. ௰௬.

௨ எல்லா மனுப்புத்திரரிலும் மகா அழகாயிருக்கிறீர்; கிருபை உம்முடைய உதடுகளில் ஊற்றியிருக்கிறது; ஆகையால் பராபரன் உம்மை என்றென்றைக்கும் ஆசிர்வதிக்கிறார்.

௩ ¶ *சவுரியவானே, உமது மகிமையும் உமது மகத்துவமுமாகிய உம்முடைய பட்டயத்தை நீர் உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு, *உன். ௫. ௰. லூக். ௪. ௨௨.

௪ சத்தியத்தின் நிமித்தமாகவும், நீதியான

சாந்தத்தின் நிமித்தமாகவும் உமது மகத்துவத்திலே செயமாய் ஏறிவாரும்; உமது வலதுகரம் பயங்கரமானவைகளை உமக்குப் படிப்பிக்கும்.* * வெளி. ௰௯. ௰௧. ௱.

௫ உம்முடைய அம்புகள் கூர்மையாயிருக்கின்றன; சனசதளங்கள் உமக்குக் கீழ்விழுவார்கள்; அவைகள் இராசாவுடைய சத்துருக்களின் இருதயத்துக்குள்ப்படும்.*
*சங். ௱௰. ௬.

௬ பராபரனே, உம்முடைய இராசாசனம் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நிற்கும்; உமது இராச்சியத்தின் செங்கோல் செம்மையான செங்கோலாயிருக்கிறது.*
*தானி. எ. ௰௪. எபி. ௧. அ, ௯.

எ நீதியைச் சிநேகித்து, ஆகாமியத்தைப் பகைத்திருக்கிறீர்; ஆகையினாலே பராபரனே, உம்முடைய பராபரன், உம்முடைய தோழரைப்பார்க்கிலும் உம்மை மகிழ்ச்சியின் எண்ணெயினாலே அபிஷேகம்பண்ணினார்.* *யோவா. ௩. ௩௪, ௩௫. அப். ௰. ௩அ.

அ நீர் மகிழ்ச்சிபொருந்திய தந்த அரமனைகளிலிருந்து புறப்படுகையில், உம்முடைய வஸ்திரங்களெல்லாம்வெள்ளைப்போளம்சந்தனம்காசியாவுமானவாசனையாயிருக்கிறது.

௯ உம்முடைய நாயகிகளுக்குள்ளே அரசரின் குமாரத்திகளுண்டு; இராசஸ்திரி உம்முடைய வலதுபாரிசத்திலே ஓப்பீரின் தங்கம் அணிந்தவளாய் நிற்கிறாள்.*
*உன். ௯. எ, அ. வெளி. ௰௯. எ,௯: ௨௧. ௨.

௰ குமாரத்தியே, நீ கேட்டுப்பார்த்து, உன் செவியைச் சாய்த்து, உன் சனத்தையும் உன் தகப்பன் வீட்டையும் மறந்துபோ.*
*லூக். ௰௪. ௨௬.

௰௧ அப்போது இராசா உன் அழகுக்கு விருப்பமாவார்; ஏனென்றால் அவர் உன் ஆண்டவராயிருக்கிறார்; ஆகையால் அவரைப் பணிந்துகொள்.* *உன். ௪. ௧. ௱.

௰௨ அப்போது தீருகுமாரத்தியும் சனத்தின் ஐசுவரியவான்களும் வெகுமானம் கொண்டுவந்து, உன் முகத்துக்கு முன்பாக வருந்துவார்கள்.* *சங். எ௨. ௰. வெளி. ௨௧. ௨௪.

௰௩ ¶ இராசாவின் குமாரத்தி உள்ளாக முற்றிலும் மகிமையானவள்; அவள் உடுப்புப் பொன்சரிகை அலங்காரமானது.*
*௧ பே. ௩. ௩, ௪.

௰௪ சித்திரத்தையல் ஆடைகளுடனே இராசாவண்டைக்குக் கொண்டுவரப்படுவாள்; அவள் தோழிகளாகிய கன்னியாஸ்திரிகள் அவர்கள் பிறகாலே வருவார்கள்; அவர்கள் உன்னண்டைக்குக் கூட்டிக் கொள்ளப்படுவார்கள்.

௰௫ மகிழ்ச்சிகளோடும் களிகூருதலோடும் கொண்டுவரப்பட்டு, இராசாவின்அரமனைக்குள் பிரவேசிப்பார்கள்.

௰௬ உன் பிதாக்களுக்குப் பதிலாக உன் பிள்ளைகள் இருப்பார்கள்; அவர்களைப் பூமியெங்கும் பிரபுக்களாக வைப்பாய்.

௰எ உம்முடைய நாமத்தை எல்லாத் தலைமுறைகளிலும் பிரஸ்தாபப்படுத்துவேன்; இவைகள் நிமித்தமாகச் சனசதளங்கள் உம்மை என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் துதிப்பார்கள்.

## ௪௬. சங்கீதம்.

(ஆலமோத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டு.)

பராபரன் நமக்கு அடைக்கலமும், பெலனும், நெருக்கங்களில் பரிபூரணமாய்க் கிடைக்கிற அநுகூலமுமானவர்.*
*சங். ௯௧. ௧, ௨. வாக். ௰அ. ௰.

௨ ஆகையால் பூமி நிலைமாறினாலும், மலைகள் நடுச் சமுத்திரங்களிலே சாய்ந்தாலும்,

௩ அவைகளின் சலங்கள் கொந்தளித்துப் பொங்கி, அவைகள் பெருகுகிறதினாலே பருவதங்கள் அதிர்ந்தாலும் பயப்படோம்; சேலா.* *லூக். ௨௧. ௨௫, ௨௬. சங். ௩. எ: ௨௭. ௩.

௪ ஆறும் அதின் நீர்க்கால்களும் பராபரனுடைய பட்டணத்தையும், உன்னதமா

னவருடைய கூடாரங்களின் பரிசுத்தஸ்த லத்தையும் சந்தோஷிப்பிக்கும்.*
*சகரி. ௰௪. ௮.

௫ பராபரன் அதின் நடுவில் இருக்கிறார்; அது அசையாது; விடியற்காலம் வருகையில் பராபரன் அதற்குச் சகாயம்பண்ணுவார்.

௬ சாதிகள் கொந்தளித்து, இராச்சியங்கள் அசைந்தன; அவர் தமது முழக்கத்தால் சத்தமிடுகையில் பூமி உருகும்.

௭ சேனைகளுடைய கர்த்தர் நம்மோடுகூட இருக்கிறார்; யாக்கோபுடைய பராபரன் நமக்கு உயர்ந்த அடைக்கலமானவர்; சேலா.* *உரோ. ௮. ௩௧.

௮ ¶ பூமியிலே பாழ்க்கடிக்குதலை நடப்பிக்கிற கர்த்தருடைய செயல்களை வந்து பாருங்கள்.* *சங். ௬௬. ௫.

௯ அவர் பூமியின் கடைமுனைமட்டும் யுத்தங்களை ஓயப்பண்ணுகிறவர்; வில்லை ஒடித்து, ஈட்டியை முறிக்கிறார்; இரதங்களை நெருப்பினாலே சுட்டெரிக்கிறார்.*
*சங். ௭௬. ௩.

௰ நீங்கள் ஓய்ந்திருந்து நாம் பராபரனென்று அறியுங்கள்; சாதிகளுக்குள் உயர்ந்திருப்போம், பூமியிலே உயர்ந்திருப்போம்.

௰௧ சேனைகளுடைய கர்த்தர் நம்முடனேகூட இருக்கிறார்; யாக்கோபுடைய பராபரன் நமக்கு உயர்ந்த அடைக்கலமானவர்; சேலா.

## சஎ. சங்கீதம்.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

சகல சனசதளங்களே, கைகொட்டி, பராபரனுக்குக் கெம்பீர சத்தமாய் ஆர்ப்பரியுங்கள்.

௨ ஏனெனில் உன்னதமானவராகிய கர்த்தர் பயங்கரமானவரும் பூமியின்மீதெங்கும் பெரிய இராசாவுமாயிருக்கிறார்.*
*சங். ௭௬. ௮.

௩ நமக்குச் சனசதளங்களையும், நம்முடைய கால்களுக்குச் சாதிகளையும் கீழ்ப்படுத்துவார்.

௪ நமக்குத் தாம் சிநேகித்த யாக்கோபின் முக்கியமாகிய நம்முடைய சுதந்தரத்தைத் தெரிந்துகொடுப்பார்; சேலா.

௫ ¶ பராபரன் ஆர்ப்பரிப்போடும், கர்த்தர் எக்காளச் சத்தத்தோடும் ஏறுகிறார்.

௬ பராபரனைக் கீர்த்தனத்தின்மேல் கீர்த்தனம்பண்ணுங்கள்; நம்முடைய இராசாவைக் கீர்த்தனத்தின்மேல் கீர்த்தனம் பண்ணுங்கள்.* *ஏசா. ௰௨. ௫, ௬.

௭ ஏனெனில் பராபரன் பூமி அனைத்துக்கும் இராசா; போதக சங்கீதத்தால், அவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௮ பராபரன் சாதிகள்மேல் இராசரிகம் பண்ணுகிறார்; பராபரன் தம்முடைய பரிசுத்த ஆசனத்தின்மீதில் உளுக்காருகிறார்.

௯ சனசதளங்களின் பிரபுக்கள் ஆபிரகாமுடைய பராபரனின் சனமாய்ச் சேர்க்கப்படுகிறார்கள்; ஏனெனில் பூமியின் கேடயங்கள் பராபரனுடையது; அவர் மிகுதியும் உயர்ந்தவர்.* *சங். ௮௨. ௮.

## சஅ. சங்கீதம்.

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதப் பாட்டு.)

நம்முடைய பராபரனுடைய பட்டணத்திலும், நம்முடைய பரிசுத்த பருவதத்திலும், கர்த்தர் பெரியவரும் மிகுதியாய்த் தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.*
*சங். ௱௪௫. ௩.

௨ சீயோன் பருவதமும், வடபுறங்களிலுள்ள மகா இராசாவின் பட்டணமும், வடிப்பமான நிலையும், சருவபூமியின் மகிழ்ச்சியுமாயிருக்கின்றன.* *மத். ௫. ௩௫.

௩ அதின் அரமனைகளில் பராபரன் உயர்ந்த அடைக்கலமாக அறியப்பட்டிருக்கிறார்.

௪ ¶ ஏனெனில் இதோ இராசாக்கள் கூடிக்கொண்டு ஏகமாய்க் கடந்துவந்தார்கள்.

௫ ஆனால் அவர்கள் அதைப் பார்க்குமள

வில் பிரமித்துக் கலங்கி, தீவிரமாய்த் தெறித்துப்போனார்கள்.

௬ நடுக்கமும், கெர்ப்பவதியின் வேதனைக்குச் சரியான வேதனையும் அங்கே அவர்களைப் பிடித்தன.

௭ கீழ்க்காற்றினால் தர்ஷீசின் கப்பல்களை உடைக்கிறீர்.* *ஏசா. ௨. ௰௨, ௰௭.

௮ நாம் கேட்டிருக்கிறதற்குச் சரியாய்ச் சேனைகளுடைய கர்த்தரின் பட்டணத்திலே கண்டோம்; நம்முடைய பராபரனுடைய பட்டணத்திலேதானே பராபரன் அதை என்றென்றைக்கும் உறுதிப்படுத்துவார்; சேலா.

௯ ¶ பராபரனே, உம்முடைய தேவாலயத்தின் நடுவிலே உமது கிருபையைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறோம்.

௰ பராபரனே, உமது நாமம் எப்படியிருக்கின்றதோ, அப்படி உமது புகழ்ச்சியும் பூமியினுடைய கடையாந்தரங்கள்பரியந்தம் இருக்கின்றது; உமது வலதுகரம் நீதியால் நிறைந்திருக்கிறது.

௰௧ உம்முடைய நியாயத்தீர்ப்புகளின் நிமித்தம் சீயோன் பருவதம் மகிழ்ந்து, யூதாவின் குமாரத்திகள் களிகூருவார்கள்.

௰௨ ¶ சீயோனைச் சுற்றி, அதை வளைந்து வாருங்கள்; அதின் கொம்மைகளை எண்ணுங்கள்.

௰௩ நீங்கள் பின்சந்ததிக்கு விவரிப்பதற்காக, அதின் அலங்கத்தின்மேல் உங்கள் மனதை வைத்து, அதின் அரமனைகளை ஒவ்வொன்றாய்க் கவனியுங்கள்.

௰௪ ஏனெனில் இந்தப் பராபரன் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் நம்முடைய பராபரனாயிருக்கிறார்; அவர் நம்மை மரணத்தைக் கடக்க அழைத்துக் கொண்டுபோவார்.

## ௪௯. சங்கீதம்.

(கோராகின் புத்திரரிலொருவன் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

சனசதளங்களாகிய நீங்களெல்லாரும் இதைக் கேளுங்கள்.

௨ சிறியோரும், பெரியோரும், ஐசுவரியவான்களும், எளியவர்களுமாகிய உலகக் குடிகளே, எல்லாரும் ஏகமாய்ச் செவி கொடுங்கள்.

௩ என் வாய் ஞானங்களைப் பேசும்; என் இருதயத்தின் தியானம் புத்தியுள்ளதாயிருக்கும்.

௪ என் செவியை உவமை மொழிக்குச் சாய்த்து, என் புதைபொருளைச் சுரமண்டலத்தால் வெளிப்படுத்துவேன்.*
*சங். ௭௮. ௨.

௫ ¶ தங்கள் ஆஸ்தியை நம்பித் தங்கள் திரளான ஐசுவரியத்தினாலே பெருமை பாராட்டி,

௬ என்னை ஒடுக்குகிறவர்களுடைய அக்கிரமம் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற தீங்கு நாள்களில் ஏன் பயப்படுவேன்?

௭ இனி என்றைக்கும் அழிவைக் காணாமல் உயிரோடிருக்கும்படிக்கு,

௮ அவர்களில் யாரும் தன் சகோதரனை மீட்கவே மீட்கவும், அவனை மீட்கும்பொருளைப் பராபரனுக்குக் கொடுக்கவும்மாட்டான்.

௯ ஏனெனில் அவர்கள் ஆத்தும மீட்பு என்றென்றைக்கும் நடவாதபடிக்கு விலை உயர்ந்ததாயிருக்கின்றது.* *மத். ௰௬. ௨௬.

௰ ¶ ஏனென்றால் ஞானிகளும் மரித்து, மூடனும் மிருககுணமுள்ளவனும் ஏகமாய் அழிந்து, தங்கள் ஆஸ்தியை வேறே மனுஷருக்குப் பின்வைத்துப்போகிறதைக் காண்பான்.

௰௧ தங்கள் வீடுகள் நித்தியகாலமாகவும், தங்கள் வாசஸ்தலங்கள் தலைமுறைதலைமுறையாகவும் இருக்கவேண்டுமென்பது அவர்கள் உள்ளத்தின் ஆசையாயிருக்கிறது; அவர்கள் தங்கள் நாமங்களைப் பூமிகளுக்குத் தரிக்கிறார்கள்.

௰௨ ஆகிலும் அந்த முக்கியத்தோடிருக்கிற மனுஷன் அதிலே தங்கித்தரியாமல் அழிந்

து போகிற மிருகங்களுக்குச் சமானமாயிருக்கிறான்.

௰௩ அவர்களுடைய இந்த வழி அவர்களுடைய பயித்தியமாயிருக்கிறது; அவர்கள் பின்னடியாரும் அவர்கள் வாய்ப்பிறப்புக்குப் பிரிதிப்படுகிறார்கள்; சேலா.

௰௪ ஆடுகளைப்போல நரகத்திலே கிடத்தப்படுகிறார்கள்; மரணம் அவர்களை மேயும்; ஆனால் செம்மையானவர்கள் விடியற்காலத்திலே அவர்களை ஆண்டுகொள்ளுவார்கள்; அவர்கள் தங்கள் வாசஸ்தலத்திலிருந்து நிலைத்திருக்கக்கூடாத அவர்களுடைய உருவைப் பாதாளம் அழிக்கும்.*

*மாற். ௯. ௪௪. மல். ௪. ௧-௩.

௰௫ ஆனால் என் ஆத்துமாவைப் பராபரன் நரகத்தின் வலுமைக்குத் தப்புவித்து மீட்பார்; ஏனெனில் என்னை அவர் சேர்த்துக்கொள்ளுவார்; சேலா.* *சங். ௭௩. ௨௪.

௰௬ ¶ ஒருவன் ஐசுவரியவானாகி, அவன் வீட்டின் மகிமை பெருகும்போது பயப்படாதிரு.

௰௭ ஏனெனில் அவன் தன் மரணத்தில் ஒன்றும் எடுத்துப்போவதில்லை; அவன் மகிமை அவனைப் பின்சென்று இறங்குவதில்லை.

௰௮ அவன் உயிரோடிருக்கையிலே தன் ஆத்துமாவை ஆசீர்வதித்தாலும், உனக்கு நீ நன்மைசெய்கிறாயென்று மனுஷர் அவனைப் புகழ்ந்தாலும்,* *லூக். ௰௨. ௰௯.

௰௯ அது என்றென்றைக்கும் வெளிச்சத்தைக் காணாத தன் பிதாக்களின் சந்ததியைச் சேரும்.

௨௰ முக்கியமுற்றும் புத்தியற்றும் இருக்கிற மனுஷன் அழிந்துபோகும் மிருகங்களுக்குச் சமானமாயிருக்கிறான்.

## ௫௰. சங்கீதம்.

(ஆசாவின் சங்கீதம்.)

வல்லமையுள்ள பராபரனாகிய கர்த்தர் வசனித்து, சூரியனுதிக்கும் திசைதுவக்கி அது அஸ்தமிக்கும் திசைமட்டுமுள்ள பூமியைக் கூப்பிடுகிறார்.

௨ பூரண வடிவுள்ள சீயோனிலிருந்து பராபரன் பிரகாசிக்கிறார்.

௩ நம்முடைய பராபரன் மவுனமாயிராமல் வருவார்; அவருக்கு முன்னாலே அக்கினி எரிக்கும்; அவரைச் சுற்றிலும் மகா புசல் கொந்தளிப்பாயிருக்கும்.*

* சங். ௯௯. ௰௩.

௪ அவர் தம்முடைய சனத்தை நியாயந்தீர்க்க உயரவிருக்கும் வானங்களையும், பூமியையும் கூப்பிடுவார்.

௫ பலியின்மேல் பண்ணப்பட்ட நம்முடைய உடம்படிக்கைக்குள்ளாயிருக்கிற நம்முடைய பரிசுத்தவான்களை நமக்குக் கூட்டுங்களென்பார்.

௬ அப்போது வானங்கள் அவருடைய நீதியை அறிவிக்கும்; ஏனெனில் பராபரனே நியாயாதிபதி; சேலா.

௭ ¶ நம்முடைய சனமே கேள், நாம் பேசுவோம்; இஸ்ரவேலே நாம் உனக்குள்ளே சாட்சி விளங்கப்பண்ணுவோம்; உன் தேவனாகிய பராபரன் நாமே.*

* சங். ௮௧. ௰, ௰௧.

௮ உன் பலிகளின் நிமித்தம் உன்னைக் கடிந்துகொள்ளோம்; ஏனெனில் உன்னுடைய சருவாங்கதகனங்கள் எப்போதும் நமக்கு முன்பாக இருக்கின்றன.

௯ நாம் உன் வீட்டிலிருந்து காளைகளையும், உன் தொழுவங்களிலிருந்து ஆட்டுக்கடாக்களையும் வாங்கிக்கொள்வதில்லை.

௰ ஏனெனில் சகல காட்டுச்சீவன்களும், பருவதங்களில் ஆயிரங்களாய்த் திரிகிற மிருகங்களும் நம்முடையவைகளே.

௰௧ மலைகளிலுள்ள பறவையனைத்தையும் அறிவோம்; வெளியில் நடமாடுகிறவைகள் நம்முடைய வசமாமே.

௰௨ பசியாயிருந்தோமானால் உனக்குச் சொல்லோம்; ஏனெனில் பூச்சக்கரமும் அதின் நிறைவும் நம்முடையவைகளே.*

*சங். ௨௪. ௧.

௰௩ எருதுகளின் மாம்சம் புசித்து, ஆட்-

டுக்கடாக்களின் இரத்தம் குடிப்போமோ?

௰௪ நீ பராபரனுக்குத் தோத்திரத்தைப் பலியிட்டு, உன்னதமானவருக்கு உன் பொருத்தனைகளைச் செலுத்தி,* *எசா. க. ௰௪: ௰௫. ௰௭.

௰௫ நெருக்கப்படுகிற நாளிலே நம்மை நோக்கிக் கூப்பிடு, அப்போது உன்னை விடுவிப்போம்; அதற்காக நீ நம்மை மகிமைப்படுத்தக்கடவாய்.

௰௬ ¶ ஆனால் ஆகாதவனுக்குப் பராபரன் சொல்லுகிறதாவது: நீ நம்முடைய பிரமாணங்களைச் சொல்லவும், நமது உடம்படிக்கையை உன் வாயில் வைக்கவும் உனக்கு என்ன நியாயம் இருக்கிறது?

௰௭ கடிந்துகொள்ளுதலை நீ பகைத்து, நம்முடைய வார்த்தைகளை உனக்குப் பின்னாக எறிந்துவிடுகிறாயே.

௰௮ நீ திருடனைக் கண்டால் அவனோடு ஒருமித்துப்போகிறாய்; விபசாரரோடும் உனக்குப் பங்கிருக்கின்றது.

௰௯ உன் வாயைப் பொல்லாப்புக்குத் திறந்துவிடுகிறாய்; உன் நாவு சர்ப்பனையைப் பிணைக்கும்

௨௰ நீ உளுக்கார்ந்து உன் சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசி, உன்னுடைய தாயின் மகனுக்கு அவதூறுண்டாக்குகிறாய்.

௨௧ ¶ இவைகளை நீ செய்யும்போது, மவுனமாயிருந்தோம்; உன்னைப்போல இருக்கவே இருப்போமென்று நினைவுகொண்டாய்; ஆனால் நாம் உனக்குத் தூண்டிக்காட்டி, உன் கண்களுக்குமுன்பாக ஒவ்வொன்றாக நிறுத்துவோம்.

௨௨ பராபரனை மறக்கிறவர்களே, விடுவிக்கின்றவன் இல்லாமல் நாம் பீறிப்போடாதபடிக்கு, இதை உணர்ந்துகொள்ளுங்கள்.

௨௩ ¶ தோத்திரத்தைப் பலியிடுகிறவன் நம்மை மகிமைப்படுத்துகிறான்; இப்படி வழியை ஆயத்தப்படுத்துகிறவனுக்குப் பராபரனுடைய இரட்சிப்பைக் காண்பிப்போம்.

## ருக. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்)

பத்சேபாளிடத்தில் பிரவேசித்திருந்த அவனண்டைக்கு நாத்தான் தீர்க்கதரிசி வந்தபோது, அவன் பாடினது.*

*௨ சாமு. ௰௨. க, ௰௪.

௨ பராபரனே, உம்முடைய கிருபையின்படி எனக்கு இரங்கி, உம்முடைய மிகுந்த இரக்கங்களின்படியே என் மீறுதல்கள் நீங்க என்னைச் சுத்திகரியும்.

௩ ¶ என் அக்கிரமம் நீங்க என்னை மிகவும் கழுவி, என்பாவமற என்னைச் சுத்திகரியும்.

௪ ஏனெனில் என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன்; என் பாவம் எப்போதும் எனக்குமுன்பாக நிற்கிறது.

௫ தேவரீர் ஒருவருக்கு விரோதமாக நான் பாவத்தை நடப்பித்து, உம்முடைய கண்களுக்குமுன்பாகப் பொல்லாப்பானதைச் செய்தேனென்கிறதை நீர் உம்முடைய வசனங்களில் நீதிவிளங்கவும், உமது நியாயத்தீர்ப்பில் சுத்தம்விளங்கவும் அறிக்கையிடுகிறேன்.* *உரோ. ௩. ௪.

௬ ¶ இதோ துர்க்குணத்தில் உருவானேன்; என் தாய் என்னைப் பாவத்திலே கெர்ப்பம் தரித்தாள்.* *வாக். ௨௰. ௬. யோவா. ௩. ௪.

௭ இதோ உள்ளத்தில் உண்மையிருக்க, நீர் விரும்புகிறீர்; இரகசியத்திலே ஞானத்தை எனக்குத் தெரியப்படுத்துவீராக.

௮ நான் சுத்தமாவதற்கு நீர் இசோப்பால் என்னைப் பாவமறப்பண்ணி, நான் உறைந்த மழையிலும் வெண்மையாவதற்கு என்னைக் கழுவுவீராக.* *௩ மோ. ௰௪. ௨, ௭.

௯ எனக்குச் சந்தோஷமும், மகிழ்ச்சியும் கேட்கப்பண்ணும்; அப்போது நீர் நொறுக்கின எலும்புகள் களிகூரும்.

௰ என் பாவங்களைப் பாராதபடிக்கு, நீர் உமது முகத்தை மறைத்து, என் மீறுதல்களை எல்லாம் நீக்கும்.

௰௧ சுத்த இருதயத்தை எனக்குள் சிருஷ்

டியும், பராபரனே, நிலைவரமான ஆவியை என் உள்ளத்திலே புதிதாய் உண்டாக்கும்.

௰௨ உம்முடைய முகத்தைவிட்டு என்னைத் தள்ளாமலும், உமது பரிசுத்தஆவியை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளாமலுமிரும்.

௰௩ உம்முடைய இரட்சிப்பின் சந்தோஷத்தை எனக்குத் திரும்பக் கட்டளையிடும்; உச்சாகமான ஆவி என்னைத் தாங்கட்டும்.

௰௪ ¶ அப்போது பாதகருக்கு உம்முடைய வழிகளை உபதேசிப்பேன்; பாவிகள் உம்மண்டைக்குத் திரும்புவார்கள்.

௰௫ என் இரட்சிப்பின் தேவனாகிய பராபரனே இரத்தப்பழிகளுக்கு என்னை நீங்கலாக்கி விடுவியும்; அப்போது என் நாவு உம்முடைய நீதியைக் கெம்பீரித்துப் பாடும்.* *௨ சாமு. ௰௨. ௯.

௰௬ ஆண்டவரே, என் உதடுகளைத் திறவும்; அப்போது என் வாய் உம்முடைய துதியை அறிவிக்கும்.

௰௭ ஏனெனில் பலியை விரும்பீர், மற்றப்படி அதைச் செலுத்துவேன்; சர்வாங்கதகனபலி உமக்குப் பிரியமானதல்ல.*
*சங். ௪௰. ௭.

௰௮ பராபரனுக்கு ஏற்கும்பலிகள் நொறுங்குண்ட ஆவிதான்; பராபரனே, நொறுங்குண்டதும் நருங்குண்டதுமான இருதயத்தைப் புறக்கணியீர்.* *ஏசா. ௫௭. ௰௫.

௰௯ ¶ சீயோனுக்கு உமது பிரியத்தின்படி நன்மைசெய்யும்; எருசலேமின் மதில்களைக் கட்டுவீராக.

௨௰ அப்போது சர்வாங்கதகனமும், முழுத்தகனமுமான நீதியின் பலிகளுக்குப் பிரியப்படுவீர்; அப்போது உம்முடைய பீடத்தின்மேலே காளையெருதுகளைப் பலியிடுவார்கள்.

## ௫௨. சங்கீதம்.

(இராசத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம்.)

பெலவானே, பொல்லாப்பைச் செய்து ஏன் பெருமைபாராட்டுகிறாய்? பராபரனுடைய கிருபை நாள்தோறுமுள்ளது.*
*௧ சாமு. ௨௧. ௭.

௨ கூர்மையாக்கப்பட்டுக் கபடுசெய்கிற சவரகன் கத்தியைப்போலே உன் நாக்கு கேடுபாடுகளை எத்தனம்பண்ணுகிறது.*
*சங். ௫௭. ௫. வாக். ௰௮. ௮.

௩ நன்மையைப்பார்க்கிலும் தீமையையும், நிதானம்பேசுகிறதைப்பார்க்கிலும் பொய்யையும் சிநேகிக்கிறாய்; சேலா.

௪ விழுங்குகிறதற்கான சகல வார்த்தைகளையும், கபட்டு நாக்கையும் சிநேகிக்கிறாய்.

௫ ¶ பராபரன் உன்னையும் என்றென்றைக்கும் நிர்மூலமாக்குவார்; அவர் உன்னைப் பிடித்து, உன்னைக் கூடாரத்திலிருந்து பிடுங்கி, உன்னைச் சீவனுள்ளோருடைய பூமியில் இராதபடிக்கு வேரற்றுப்போகப்பண்ணுவார்; சேலா.

௬ அதை நீதிமான்கள் கண்டு பயந்து அவனை நகைத்து,

௭ இதோ பராபரனைத் தன் பெலனாக வைக்காமல், தன் ஐசுவரியத் திரட்சியை நம்பி, தன் தீவினையிலே பெலத்துக்கொண்ட மனுஷனென்பார்கள்.*
*எரே. ௰௭. ௫, ௯, சங். ௪௯. ௯, ௭.

௮ ¶ நானோவெனில் பராபரனுடைய வீட்டிலே பச்சையான ஒலீவமரத்தைப்போலிருப்பேன்; பராபரனுடைய கிருபையை எப்போதும் என்றென்றைக்கும் நம்பியிருக்கிறேன்.* *சங். ௯௨. ௰௩, ௰௪.

௯ நீர் அதைச் செய்தீரென்று உம்மை நான் என்றென்றைக்கும் துதித்து, உம்முடைய பரிசுத்தவான்களுக்கு முன்பாக உமது நாமத்துக்குக் காத்திருப்பேன்; ஏனெனில் அது நலமானது.* *சங். ௩௭. ௫, ௯.

## ௫௩. சங்கீதம்.

(இராசத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதகசங்கீதம்.)

பராபரன் இல்லை என்று பயித்தியக்காரன்

தன் இருதயத்தில் சொல்லுகிறான்; தங்களைக் கெடுத்து நியாயக்கேட்டினால் அருவருப்பாக்கினார்கள்; நன்றுசெய்கிறவனில்லை.

௨ பராபரனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோ என்று பார்க்கப் பராபரன் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்திரரைக் கண்ணோக்கினார்.

௩ அவர்களெல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்; நன்றுசெய்கிறவன் ஒருவனாகிலுமில்லை.

௪ ¶ அப்பத்தைப் பட்சிக்கிறதுபோல,நம்முடைய சனத்தைப் பட்சிக்கிற அக்கிரமக்காரருக்கும் அறிவுதானும் இல்லையோ? பராபரனைநோக்கிக் கூப்பிட்டார்கள்.

௫ திகிலில்லாத அவ்விடத்திலே மெத்தவும் திகில் அடைந்தார்கள்; ஏனெனில் உனக்கு விரோதமாய்ப் பாளயம் இறங்கினவனுடைய எலும்புகளைப் பராபரன் சிதறடித்தார்; அவர்களை வெட்கப்படுத்தினாய்; ஏனெனில் பராபரன் அவர்களை வெறுத்துவிட்டார்.

௬ ஆ சீயோனிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்புகள் வந்தால் தாவிளை; பராபரன் தம்முடைய சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்கோபுக்குக களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சியுமுண்டாம்.

## ௫௪. சங்கீதம்.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதகசங்கீதம்; தாவீது எங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருக்கிறானே என்று சீப்பூரார்வந்து சவுலுக்குச் சொன்னபோது பாடினது.)

பராபரனே, நீர் உம்முடைய நாமத்தின் நிமித்தமாக என்னை இரட்சித்து, உம்முடைய வல்லமையினாலே எனக்கு நியாயஞ்செய்யும்.

௨ பராபரனே, என் செபத்தைக்கேளும்; என் வாயின் வார்த்தைகளுக்குச் செவிகொடும்.* *சங். ௫. ௨, ௩.

௩ ஏனெனில் அந்நியர் எனக்கு விரோதமாக எழும்பி, பெலவான்கள் என் பிராணனை வாங்கத்தேடுகிறார்கள்; பராபரனைத் தங்களுக்கு முன்பாக நிறுத்தி நோக்கார்கள்; சேலா.* *சங். ௮௬. ௧௪.

௪ ¶ இதோ பராபரன் எனக்குச் சகாயர்; ஆண்டவர் என் ஆத்துமாவை ஆதரிக்கிறவர்களுக்குள் இருக்கிறார்.

௫ அவர் என் சத்துருக்களுக்குத் தீமையைச் சரிக்கட்டுவார்; உமது சத்தியத்தின் நிமித்தமாக அவர்களைச் சங்கரியும்.

௬ உச்சாகமாய் உமக்குப் பலிசெலுத்துவேன்; கர்த்தாவே உமது நாமத்தைத் துதிப்பேன்; ஏனெனில் அது நலமானது.

௭ ஏனென்றால் எல்லா நெருக்கத்தையும் நீக்கி என்னை விடுவிப்பார்; என் கண் என்னுடைய சத்துருக்களில் நீதிசரிக்கட்டுதலைக் காணும்.

## ௫௫. சங்கீதம்.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதகசங்கீதம்.)

பராபரனே, நீர் என் விண்ணப்பத்துக்கு மறைந்திராமல், என் செபத்துக்குச் செவிகொடும்.

௨ என்னைக் கவனித்திருந்து, எனக்கு உத்தரவு அருளிச்செய்யும்; நான் சத்துருவினுடைய கூக்குரலின்நிமித்தமும், ஆகாதவன் செய்யும் இடுக்கணின்நிமித்தமும் என்செபத்தியானத்திலே புலம்பிக் கதறுகிறேன்.

௩ ஏனெனில் என்மேல் அக்கிரமத்தைச் சார்த்தி, குரோதத்தினால் என்னைப் பகைக்கிறார்கள்.

௪ ¶ என் இருதயம் எனக்குள் வேதனைப்பட்டிருக்கிறது; மரணத்திகில்கள் என்மேல் விழுந்தன.

௫ பயமும் நடுக்கமும் எனக்கு வந்தது, அருக்களிப்பு என்னை மூடிற்று.

௬ ஆ எனக்குப் புறாவைப்போலே செட்டைகளிருந்தால் தாவிளை என்றேன்; அப்போது பறந்துபோய் எங்கேயாகிலும் தரித்திருப்பேன்.

எ இதோ தூரமாய் அகன்று வனாந்தரத்திலே தங்குவேன்; சேலா.

அ பெருங்காற்றுக்கும், புசலுக்கும் தப்பத் தீவிரித்துக்கொள்ளுவேன்.

௯ ¶ ஆண்டவரே, அவர்களை விழுங்கும்; அவர்கள் நாவைப் பிரிந்துபோகப்பண்ணும்; ஏனெனில் கொடுமையும் சண்டையும் ஊரிலே காண்கிறேன்.

௰ அவைகள் இரவும்பகலும் அதின் மதில்களில் அதைச் சுற்றுகின்றன; அக்கிரமமும், வருத்தமும் அதின் நடுவிலிருக்கின்றன.

௰௧ கேடுபாடுகள் அதின் நடுவிலிருக்கின்றன; தந்திரமும், கபடமும் அதின் வீதியை விட்டு விலகாது.

௰௨ ¶ ஏனெனில் என்னை நிந்தைப்படுத்துகிறவன் சத்துருவாய் இருந்தவனல்ல, மற்றப்படி அதைச் சகிப்பேன்; எனக்கு விரோதமாய்ப் பெருமையாகிறவன் என்னைப் பகைத்தவனல்ல; மற்றப்படி அவனுக்கு மறைந்திருப்பேன்.

௰௩ எனக்கு இராசியான மனுஷனும், என் வழிகாட்டியும், எனக்கு அறிமுகமானவனுமாகிய நீயே அவன்.* *சங். ௪௧. ௯.

௰௪ நாம் ஒருமித்து, இன்பமும் இரகசியமுமாய் யோசித்து, பராபரனுடைய வீட்டுக்கு ஏகமாய்ப் போனோமே.

௰௫ மரணம் அவர்கள்மேல் தண்டல்காரனாய் விழுவதாக; உயிரோடே பாதாளத்துக்கு இறங்கக்கடவார்கள்; ஏனெனில் அவர்கள் சஞ்சரிப்பிலும், அவர்கள் உள்ளத்திலும் பொல்லாப்புகள் இருக்கின்றன.

௰௬ ¶ நானோ பராபரனை நோக்கிக் கூப்பிடுவேன்; கர்த்தர் என்னை இரட்சிப்பார்.

௰௭ அந்தி, சந்தி, மத்தியானத்திலும் கெஞ்சிக் கதறுவேன்; என் சத்தத்தைக் கேட்பார்.* *தானி. ௬. ௰.

௰௮ எனக்கு வந்த போரை நீக்கி, என் ஆத்துமாவைச் சமாதானமாக மீட்டுவிடுகிறார்; ஏனெனில் திரளானகூட்டமாய் என்னோடு எதிர்த்திருக்கிறார்கள்.* *சங். ௩. ௨.

௰௯ பராபரன் கேட்டு, அவர்களைத் தாழ்த்துவார்; ஆதிமுதலாய் நியாயத்துக்கு உளுக்கார்ந்திருக்கிறார்; சேலா. ஏனெனில் அவர்களிடத்திலே குணமாறுதலில்லை, பராபரனுக்குப் பயப்படார்கள்.

௨௰ ¶ தன்னோடே சமாதானமாயிருந்தவர்கள்மீதில் தன் கைகளைப் போட்டு, தன் உடம்படிக்கையைக் கொலைத்துப்போடுகிறான்.

௨௧ அவன் வாயின் சொற்கள் வெண்ணெயைப்போல மெதுவானவைகள்; அவன் இருதயமோ யுத்தம்; அவன் வார்த்தைகள் எண்ணெயிலும் மிருதுவானவைகள்; ஆனால் அவைகளே உருவின பட்டயங்கள்.* *சங். ௫௭. ௫.

௨௨ கர்த்தர்மேல் உன் பாரத்தைப் போடு; அவர் உன்னைப் பராமரிப்பார்; நீதிமானை என்றென்றைக்கும் தள்ளாடவொட்டார்.* *சங். ௩௭. ௫.

௨௩ பராபரனே, தேவரீர் அவர்களை அழிவின் குழியில் இறங்கப்பண்ணுவீர்; இரத்தப்பிரியரும், சூதான மனுஷரும், தங்கள் ஆயுசின் நாள்களுக்கு வந்துசேருவதில்லை; நானோவென்றால் உம்மை நம்புவேன்.* *சங். ௫. ௭.

## ருசா. சங்கீதம்.

(பெலிஸ்தியர் தாவீதைக் காத்தூரிலே பிடிக்கையில், அவன் தூரமாயிருக்கிறவர்களுக்குள்ளே ஊமையாயிருக்கிற புறாவின்பேர்லே பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம்.)

பராபரனே, எனக்கு இரங்கும்; ஏனெனில் மனுஷன் என்னை விழுங்கப்பார்க்கிறான்; நாள்தோறும் போர்செய்து என்னை ஒடுக்குகிறான்.

௨ நாள்தோறும் என் சத்துருக்கள் என்னை விழுங்கப்பார்க்கிறார்கள்; ஏனெனில் உயரத்திலிருந்து எனக்கு விரோதமாய்ப் போர்செய்கிறவர்கள் அநேகர்.

௩ ¶ நான் பயப்படுகிற நாளிலே உம்மை நம்புவேன்.

௪ பராபரனை அவருடைய வார்த்தையின் நிமித்தம் துதிப்பேன்; பராபரனை நம்பியிருக்கிறேன்; நான் பயப்படேன்; மாம்சம் எனக்கு என்னசெய்யும்?

௫ ¶ நித்தம் என் வார்த்தைகளைப் புரட்டுகிறார்கள்; அவர்கள் நினைவுகளெல்லாம் எனக்கு விரோதமாய் எனக்குப் பொல்லாப்புச் செய்வதற்கு இருக்கின்றன.

௬ கூடிச்சேர்ந்து பதிவிருக்கிறார்கள்; அவர்கள் என் பிராணனை வாங்க ஆசையாய் என் அடியைப் பிடித்துவருகிறார்கள்.

௭ தங்கள் அக்கிரமத்திலே தப்புவார்களோ? பராபரனே, உம்முடைய கோபத்திலே சனசதளங்களைக் கீழே தள்ளும்.

௮ என் அலைதலைத் தேவரீர் எண்ணியிருக்கிறீர்; என் கண்ணீரை உம்முடைய துருத்தியிலே வையும்; அவைகள் உம்முடைய கணக்கில் அல்லவோ இருக்கின்றன.

௯ ¶ நான் உம்மைநோக்கிக் கூப்பிடும் நாளில் என் சத்துருக்கள் பின்னிட்டுத் திரும்புவார்கள்; பராபரன் எனக்காக இருக்கிறாரென்கிறதை அறிவேன்.

௰ பராபரனை அவருடைய வார்த்தையின் நிமித்தம் துதிப்பேன்; கர்த்தரை அவருடைய வார்த்தையின் நிமித்தம் துதிப்பேன்.

௰௧ பராபரனை நம்பியிருக்கிறேன்; நான் பயப்படேன்; மனுஷன் எனக்கு என்ன செய்வான்.* *சங். ௱௰௮. ௬. எபி. ௰௩. ௬.

௰௨ பராபரனே, உமக்குச் சொன்ன பொருத்தனைகள் என்மேல் இருக்கின்றன; தோத்திரங்களை நான் உமக்குச் செலுத்துவேன்.* *சங். ௬௬. ௰௩.

௰௩ ஏனெனில் பராபரனுக்குமுன்பாக நான் சீவனுள்ளோருடைய வெளிச்சத்திலே நடக்கும்படிக்கு, என் ஆத்துமாவை மரணத்துக்கும், என் கால்களை இடறலுக்குமல்லவோ தப்புவித்தீர்.* *௧ மோ. ௰௭. ௧. சங். ௱௰௬. ௮.

## ௫௭. சங்கீதம்.

(தாவீது சவுலுக்குத்தப்பி ஓடி, கெபியில் ஒதுங்குகையில் தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணைக்கீதம்.)

எனக்கு இரங்கும் பராபரனே, எனக்கு இரங்கும்; ஏனெனில் உம்மை என் ஆத்துமா அண்டிக்கொள்ளுகிறது; விக்கினங்கள் கடந்துபோகும்மட்டும் உம்முடைய செட்டைகளின் நிழலிலேவந்தடைவேன்.* *சங். ௰௭. ௮.

௨ எனக்காக யாவையும்செய்து முடிக்கப்போகிற தேவனாகிய உன்னதமான பராபரனை நோக்கிக் கூப்பிடுவேன்.

௩ என்னை விழுங்கப்பார்க்கிறவன் என்னை நிந்திக்கையில், அவர்பரமண்டலங்களிலிருந்து ஒத்தாசை அனுப்பி என்னை இரட்சிப்பார்; சேலா. பராபரன் தமது கிருபையையும், தமது சத்தியத்தையும் அனுப்புவார்.

௪ ¶ என் ஆத்துமா சிங்கங்களின் நடுவில் இருக்கிறது; தீயைஇறைக்கிற மனுப்புத்திரருக்குள்ளே கிடக்கிறேன்; அவர்கள் பல்லுகள் ஈட்டியும், அம்புகளும், அவர்கள்நாக்குகருக்கான பட்டையமுமாயிருக்கின்றன.

௫ ¶ பராபரனே, வானங்களின்மேல் உயரும், உம்முடைய மகிமை பூமியனைத்தின் மேலும் உயர்வதாக.* *சங். ௱௮. ௫.

௬ என் காலடிகளுக்கு வலையை முஸ்திப்புப் பண்ணினார்கள்; என் ஆத்துமாவை மடங்கடித்தான்; எனக்குமுன்பாகக் குழியை வெட்டி, அதின் நடுவிலே விழுந்தார்கள்; சேலா.* *சங். ௭. ௰௫.

௭ என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது; பராபரனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது; நான் பாடிக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௮ என் மகிமையே விழி, தம்புருவே, சரமண்டலமே விழி, அதிகாலமே விழிப்பேன்.* *சங். ௱௮. ௨-௪.

௯ ஆண்டவரே, உம்மைச் சனசதளங்க

ளுக்குள்ளே துதிப்பேன்; சாதிகளுக்குள்ளே உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௰ ஏனெனில் உமது கிருபை வானங்கள் பரியந்தமும், உமது சத்தியம் ஆகாயமண்டலங்கள்பரியந்தமும் பெரிதாயிருக்கிறது.* *சங். ௩௬. ௫.

௰௧ பராபரனே, வானங்களின்மேல் உயரும்; உம்முடைய மகிமை பூமியனைத்தின்மேல் உயர்வதாக.

## ௫௮. சங்கீதம்.

(தான் கெட்டுப்போகாதபடிக்குத் தாவீது பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம்.)

மனுப்புத்திரரே, நீங்கள் ஊமையாயிருக்கையில் மெய்யாய் நீதியைச் சொல்லுவீர்களோ? நிதானமாய் நியாயந்தீர்ப்பீர்களோ?

௨ மனதாரத்தானே நியாயக்கேடுகளைச் செய்கிறீர்கள்; பூமியிலே உங்கள் கைகளின் கொடுமையை நிறுத்துக்கொடுக்கிறீர்கள்.

௩ ஆகாதவர்கள் கெர்ப்பமாய் உற்பவித்ததுமுதல்க்கொண்டு பேதலிக்கிறார்கள்; பொய்பேசுகிறவர்கள் தாயின் வயிற்றில் பிறந்ததுமுதல்க்கொண்டு வழிதப்புகிறார்கள்.

௪ சர்ப்பவிஷத்துக்கு ஒப்பான விஷம் அவர்களில் இருக்கிறது.* *சங். ௱௪௰. ௩.

௫ முணுமுணுக்கிறவர்களும் வித்தையுள்ள தம்பனக்காரனும் இடுகிற சத்தத்தைக் கேளாதபடிக்கு, தன் காதை அடைக்கிற செவிடான விரியன்பாம்பைப்போல இருக்கிறார்கள்.

௬ ¶ பராபரனே, அவர்கள் வாயிலிருக்கிற அவர்கள் பல்லுகளைத் தகர்த்துவிடும்; கர்த்தாவே, சிங்கக்குட்டிகளின் கடைவாய்ப் பல்லுகளை நொறுக்கிவிடும்.* *சங். ௩. ௭.

௭ தானாய்க் கடந்தோடுகிற தண்ணீரைப்போல அவர்கள் கழிந்துபோகட்டும், தங்கள் அம்புகளை அவர்கள் நாணேற்றினால், அவைகள் தறிப்புண்டவைகளாகக்கடவது.

௮ கரைந்துபோகிற நத்தையைப்போலப் போகக்கடவர்கள்; கெர்ப்பம் விழுந்துபோகிற ஸ்திரியின் முதிராப்பிண்டத்தைப்போல சூரியனைக் காணாதிருப்பார்களாக.

௯ உணருகிறதற்குமுன் உங்கள் முட்கள் முட்காடாயின; அதைப் பச்சையோடே தானே உக்கிரமான புசலினாலே அடித்துக்கொண்டுபோவார்.

௰ ¶ நீதியைச் சரிக்கட்டுதலை நீதிமான் காணும்போது மகிழ்வான்; தன் பாதங்களை ஆகாதவனுடைய இரத்தத்திலே கழுவுவான்.

௰௧ அப்போது மனுஷன் மெய்யாய் நீதிமானுக்குப் பலனுண்டென்றும், மெய்யாய்ப் பூமியில் நியாயஞ்செய்கிற பராபரன் உண்டென்றும் சொல்லுவான்.

## ௫௯. சங்கீதம்.

(தாவீதைக் கொல்லுவதற்காகச் சவுல் அவன் வீட்டைக் காவல்காப்பவர்களை அனுப்புகையில், அவன் தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம்.)

என் பராபரனே, என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும்; என்மேல் எழும்புகிறவர்களுக்கு என்னை விலக்கி, உயர்ந்த அடைக்கலத்திலே வையும்.

௨ அக்கிரமக்காரருக்கு என்னைத் தப்புவித்து, இரத்தப்பிரியரான மனுஷருக்கு என்னை விலக்கி இரட்சியும்.

௩ ¶ ஏனெனில் இதோ, என் பிராணனுக்குப் பதிவிருக்கிறார்கள்; கர்த்தாவே, என்னிடத்தில் மீறுதலும் பாவமும் இல்லாதிருந்தும், பெலவான்கள் எனக்கு விரோதமாய்க் கூட்டங்கூடுகிறார்கள்.

௪ என்னிடத்தில் அக்கிரமம் இல்லாதிருந்தும் ஓடித்திரிந்து ஆயத்தமாகிறார்கள்; எனக்கு நேராக விழித்துப்பாரும்.* *சங். ௩௫. ௨௩.

௫ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, இஸ்ரவேலின் பராபரனே, தேவரீர் சகல சாதிகளையும் விசாரிக்க எழும்பும்; அகங்கா

ரமாய்த் துரோகஞ்செய்கிற யாருக்கும் இரங்காதிரும்; சேலா.

௬ அவர்கள் சாயங்காலத்திலே திரும்பிவந்து நாய்களைப்போலக் குலைத்து ஊரைச்சுற்றி ஓடுகிறார்கள்.

௭ ¶ இதோ, தங்கள் வாயினாலே வாதாடுகிறார்கள்; அவர்கள் உதடுகளில் பட்டயங்களுண்டு; ஏனெனில், அதைக் கேட்கிறவன் யார் என்றார்கள்.* *சங். ௭. ௫: ௰. ௰௧: ௯௪. ௭.

௮ ஆனால் கர்த்தாவே, தேவரீர் அவர்களை நகைப்பீர்; சகல சாதிகளையும் பரியாசம் பண்ணுவீர்.* *சங். ௨. ௪

௯ அவன் வல்லமையைக் கண்டு, உமக்குக் காத்திருப்பேன்; ஏனெனில் பராபரன் எனக்கு உயர்ந்த அடைக்கலம்.

௰ கிருபையுள்ள என் பராபரன் எனக்கு நேரிட்டுவருவார்; பராபரன் என்னை என் சத்துருக்களில் நீதிசரிக்கட்டுதலைக் காணப்பண்ணுவார்.

௰௧ ¶ எங்கள் கேடயமாகிய ஆண்டவரே, என் சனம் அதை மறவாதபடிக்கு அவர்களை நீர் கொன்றுவிடாமல், அவர்களை உமது பெலத்தினாலே அலையப்பண்ணித் தாழ்த்தும்.

௰௨ அவர்கள் உதடுகளின் பேச்செல்லாம் அவர்கள் வாயில் பாவமாயிருக்கின்றன; ஆகையால் தங்கள் பெருமையிலும், தாங்கள் சொல்லுகிற சர்ப்பனையினிமித்தமும், பொய்யினிமித்தமும் அவர்கள் பிடிபடட்டும்.

௰௩ பராபரன் யாக்கோபிலே பூமியின் எல்லைகள் பரியந்தமும் ஆளுகிறவரென்று அவர்கள் அறிவதற்கு, அவர்களை உம்முடைய உக்கிரத்திலே நிர்மூலமாக்கும்; இனிஇல்லாதபடிக்கு அவர்களை நிர்மூலமாக்கும்; சேலா.

௰௪ அவர்கள் சாயங்காலத்திலே திரும்பி வந்து, நாய்களைப்போலக் குலைத்து, ஊரைச் சுற்றி ஓடக்கடவர்கள்.

௰௫ அவர்கள் திருப்தியாகாதேபோனால் சாப்பிடுகிறதற்கு அலைந்து திரிந்து முறுமுறுக்கக்கடவர்கள்.

௰௬ ¶ நானோவெனில் உம்முடைய வல்லமையைப் பாடி, காலமே உம்முடைய கிருபையைக் கெம்பீரமாய்ப் புகழுவேன், ஏனெனில் எனக்கு நெருக்கமுண்டானநாளிலே எனக்கு உயர்ந்த அடைக்கலமும் ஒதுக்குமானீர்.* *சங். ௬௨. ௪.

௰௭ என் பலனே, உம்மைக் கீர்த்தனம் பண்ணுவேன்; ஏனெனில் பராபரன் எனக்கு உயர்ந்த அடைக்கலமும் என் கிருபையுள்ள பராபரனுமாயிருக்கிறார்.

## ௬௰. சங்கீதம்.

(தாவீது மெசொபொத்தாமியா தேசத்துச் சூரியரோடும், சோபாதேசத்துச் சூரியரோடும் யுத்தம்பண்ணினபோதும், யோவாப் திரும்பி உப்புப்பள்ளத்தாக்கிலே ஏதோமியரில் பன்னீராயிரம்பேரை வெட்டினபோதும் அவன் சாட்சியை விளக்குவிக்கும் ஆறாகம்புக்கின்னரத்திலே போதிப்புக்காகப் பாடினதும். இராகத்தலைவனுக்கு ஒப்புவித்ததுமான பொற்பணதிக்கீதம்.)

பராபரனே, எங்களை ஒழித்துவிட்டு, எங்களைத் தகர்த்துவிட்டுக் கோபமாயிருந்தீர்; திரும்ப எங்கள்புறமாய்த் திரும்பும்.* *சங். ௪௪. ௨௪.

௨ பூமியை அதிரப்பண்ணி, அதை வெடிப்பாக்கினீர்; அதின் வெடிப்புகளைக் கட்டும்; ஏனெனில் அசைகிறது.

௩ உம்முடைய சனத்துக்குக் கடினமான காரியத்தைக் காணப்பண்ணினீர்; தத்தளிப்பின் மதுபானத்தை எங்களுக்குக் குடிக்கக்கொடுத்தீர்.* *ஏசா. ௫௧. ௰௭, ௨௨.

௪ ஆனால் உம்முடைய பிரியர் விடுவிக்கப்படும்படிக்கு ஏற்றும் கொடியை உமக்குப் பயந்தவர்களுக்குச் சத்தியத்தினிமித்தமாகத் தந்தீர்; சேலா.

௫ உமது வலதுகரத்தினாலே இரட்சித்து எங்கள் செபத்தைக் கேளும்.* *சங். ௱௮. ௭.

௬ ¶ பராபரன் தமது பரிசுத்தஸ்தலத்திலே

விளம்பினதைப்பற்றிக் களிகூருவேன்; சீகேமைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்கை அளந்துகொள்ளுவேன்.

௭ கிலெயாத் என்னுடையது; மனாசேயும் என்னுடையது; எப்பிராயீம் என்தலையின் பெலன்; யூதா என் நியாயநெறியாளன்.

௮ மோவாப் நான் கழுவுகிற பாத்திரமாயிருக்கும்; ஏதோமின்மேலே என் பாதஇரட்சையை நீட்டுவேன்; பெலிஸ்தேயாவே, என்னைப் பார்த்துக் கெம்பீரி.

௯ ¶ என்னை அரணான பட்டணத்துக்குள் வழிவிடுபவர் யார்? என்னை ஏதோம்மட்டும் கொண்டுபோகுபவர் யார்?

௰ பராபரனே, எங்கள் சேனைகளோடே புறப்படாமல், எங்களை ஒழித்துவிட்டிருந்த பராபரனானவர் தேவரீர் அல்லவோ?

௰௧ இக்கட்டுக்குத்தப்ப எங்களுக்குச் சகாயம் கட்டளையிடும்; ஏனெனில் மனுஷ இரட்சிப்பு அவத்தம்.

௰௨ ¶ பராபரனாலே பெலன் செய்வோம்; அவரே எங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார்.* *சங். ௰௮. ௩௰: ௪௪. ௬.

## ௬௧. சங்கீதம்.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என் கூப்பிடுதலைக் கேட்டு, என் விண்ணப்பத்துக்குக் கவனியும்.

௨ என் இருதயம் தொய்யும்போது, பூமியின் கடையாந்தரத்திலிருந்து உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; நான் நிற்கிறதிலும் உயரமான கல்மலையில் என்னைக் கொண்டுபோய்விடும்.

௩ ஏனெனில் சத்துருவுக்கு எதிரே எனக்கு அடைக்கலமும் பெலத்த துர்க்கமுமானீர்.

௪ சதாகாலங்களாக உம்முடைய கூடாரத்திலே தங்குவேன்; உம்முடைய செட்டைகளின் மறைவிலே வந்தடைவேன்; சேலா.* *சங். ௫௭. ௨.

௫ ¶ ஏனெனில் பராபரனே, தேவரீர் என் பொருத்தனைகளைக் கேட்டீர்; உம்முடைய நாமத்துக்குப் பயந்தவர்களின் சுதந்தரத்தை எனக்குத் தந்தீர்.

௬ இராசாவுடைய நாள்களோடே நாள்களைக் கூட்டுவீர்; அவன் வருஷங்கள் தலைமுறைதலைமுறையாக இருக்கும்.

௭ பராபரனுக்கு முன்பாக என்றென்றைக்கும் நிலைத்திருப்பான்; அவனைத் தற்காக்கக் கிருபையையும் உண்மையையும் கட்டளையிடும்.

௮ இப்படியே தினமும் என் பொருத்தனைகளை நான் செலுத்தும்படியாய், உமது நாமத்தை என்றைக்கும் கீர்த்தனம்பண்ணுவேன்.

## ௬௨. சங்கீதம்.

(எதித்துனென்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.

பராபரனையே நோக்கி என் ஆத்துமா அமர்ந்திருக்கிறது, அவரால் என் இரட்சிப்பு வரும்.

௨ அவரே என் கல்மலையும், என் இரட்சிப்பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார்; நான் மெத்தவும் அசைக்கப்படுவதில்லை.* *சங். ௰௮. ௩.

௩ எந்தமட்டும் ஒரே மனுஷனுக்குப் பொல்லாப்புண்டாக்கப் பார்ப்பீர்கள்; நீங்கள் அனைவரும் கொலையுண்ணப்பட்டு, சாய்ந்த மதிலுக்கும் இடிந்த சுவருக்கும் சரியாவீர்கள்.

௪ ஆகிலும் அவர்கள் அவனை அவன் மேன்மையிலிருந்து விழத்தள்ள ஆலோசனைபண்ணி, அபத்தம்பேச விரும்புகிறார்கள்; தங்கள் வாயினாலே ஆசிர்வதித்து, தங்கள் உள்ளத்திலே சபிக்கிறார்கள்; சேலா.*
*சங். ௫௫. ௨௨.

௫ ¶ ஆனால் என் ஆத்துமாவே, பராபரனை நோக்கி அமர்ந்திரு; ஏனெனில் நான் நம்புகிறது அவராலே வரும்.* *ஏசா. ௩௰. ௰௫.

௬ அவரே என் கன்மலையும், என் இரட்சிப்பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார்; நான் அசைக்கப்படுவதில்லை.

௭ பராபரனிடத்தில் என் இரட்சிப்பும் என் மகிமையும் இருக்கிறது; என் பெலனான கன்மலையும் என் அடைக்கலமும் பராபரனுக்குள் இருக்கிறது.* *சங். ௬௧. ௪.

௮ சனமே, எந்தக்காலத்திலும் அவரை நம்பி, அவருக்குமுன்பாக உங்கள் இருதயத்தை ஊற்றிவிடுங்கள்; பராபரன் நமக்கு அடைக்கலமாயிருக்கிறார்; சேலா.

௯ ¶ ஆனால் மனுப்புத்திரர் மாயையும், துனாமக்கள் பொய்யுந்தானே; தராசிலே அவர்கள் ஏகமாய் மாயையிலும் இலேசாய் ஏறுகிறதற்கானவர்கள்.* *சங். ௬௨. ௯-௰௨.

௰ கொடுமையையும் கொள்ளையையும் நம்பாமலும், வீணாய் உப்பாமலும் இருங்கள்; ஆஸ்திவளர்ந்தால் இருதயத்தை அதின்மேல் வைக்காதிருங்கள்.* *மாற். ௰. ௨௪. லூக். ௰௨. ௰௫—௨௧. ௧ திமோ. ௬. ௰௭—௰௯.

௰௧ பராபரன் ஒன்று சொன்னார்; அதை இரண்டொருதரம் கேட்டேன்; வல்லமை பராபரனுடையதென்பதுதானே.

௰௨ கிருபையும் உம்முடையது, ஆண்டவரே, ஏனெனில் தேவரீர் அவனவனுக்கும் அவனவன் செய்கைக்குத்தக்கதாகச் செலுத்துவீர்.

## ௬௩. சங்கீதம்.

(தாவீது யூதாவின் வனாந்தரத்தில் இருக்கையில் பாடின சங்கீதம்.)

பராபரனே, தேவரீர் என்னுடைய பராபரன், அதிகாலையில் உம்மைத் தேடுகிறேன்; வரண்டதும் விடாய்த்ததும் தண்ணீர் அற்றதுமான பூமியில் என் ஆத்துமா உம்முடையமேலே தாகமாயிருக்கிறது; என் மாம்சம் உம்மை வாஞ்சிக்கிறது.*

*சங். ௪௨. ௨௩: ௱௪௩. ௬.

௨ உமது வல்லமையையும் உமது மகிமையையும் காணும்படிக்கு, நான் பரிசுத்தஸ்தலத்தில் உம்மைப்பார்க்க எத்தனை ஆசையுண்டு.* *சங். ௨௭. ௪.

௩ ஏனென்றால் சீவனைப்பார்க்கிலும் உமது கிருபை நல்லது, என் உதடுகள் உம்மைத் துதித்துக்கொண்டிருக்கும்.

௪ இப்படியே நான் சீவனுள்ளமட்டும் உம்மைத் தோத்திரித்து, உமது நாமத்தில் என் கைகளை ஏறெடுப்பேன்.*

*சங். ௱௪. ௩௩.

௫ நிணத்தையும் கொழுப்பையும் உண்டதுபோல, என் ஆத்துமா திருப்தியாகும்; நான் என் மெத்தையின்மேலே உம்மை நினைக்கிறபோது, என் வாய் கெம்பீரிப்பான உதடுகளால் உம்மைப் போற்றும்.*

*சங். ௩௬. ௯: ௬௫. ௫.

௬ ¶ சாமங்களில் உம்மைத் தியானிக்கிறேன்.

௭ ஏனெனில் நீர் எனக்குத் துணையாயிருந்ததினால், உம்முடைய செட்டைகளின் நிழலிலே கெம்பீரிப்பாயிருக்கிறேன்.

௮ என் ஆத்துமா உம்மை ஒட்டிக்கொண்டு தொடருகிறது; என்னை உமது வலது கரம் தாங்குகிறது.* *௧ கொரி. ௯. ௰௭.

௯ ஆனால் என் ஆத்துமாவைப் பாழாக்கத் தேடுகிறவர்கள் பூமியின் பாதாளங்களில் போவார்கள்.

௰ அவர்களைப் பட்டையத்தால் போக்கிவிடுவார்கள்; நரிகளின் பங்காவார்கள்.

௰௧ இராசாவோவெனில் பராபரனுக்குள் மகிழ்வான்; அவர்மேல் சத்தியம்பண்ணுகிறவனெல்லாம் மேன்மைபாராட்டுவான்; ஏனெனில் பொய்பேசுகிறவர்களின் வாய் அடைக்கப்படும்.

## ௬௪. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என் கெஞ்சுதலிலே என் சத்தத்தைக்கேளும்; சத்துருவால் வரும் திகில் நீக்கி, என் பிராணனைக் காப்பாற்றும்.

௨ என்னைப் பொல்லாதவர்களின் இரகசிய

ஆலோசனைக்கும், அக்கிரமக்காரருடைய அமளிக்கும் இடைஞ்சலாக மறையும்.

௩ ¶ அவர்கள் தங்கள் நாவைப் பட்டையத்தைப்போல கூர்மையாக்குகிறார்கள்.*

*சங். ௫௯. ௮.

௪ மறைவுகளில் உத்தமனை எய்யக் கசப்பான வார்த்தைகளைத் தங்கள் அம்புகளாக்கி நாணேற்றுகிறார்கள்; அவனை அசுப்பிலே எய்து பயப்படாதிருக்கிறார்கள்.*

*சங். ௰௧. ௨.

௫ அவர்கள் பொல்லா விசேஷத்தை உறுதிபண்ணிக்கொண்டு, கண்ணிகளை மறைவாய் வைப்பதைப் பேசி, அவைகளை யார் காண்பானென்கிறார்கள்.

௬ நியாயக்கேடுகளைத் தேடி எத்தனம்பண்ணுகிறார்கள்; ஆய்ந்து தேட எத்தனம்பண்ணுகிறார்கள்; அதுவே அவனவனுடைய உள்ளம்; அவர்கள் இருதயம் ஆழமுமாயிருக்கிறது.

௭ ¶ ஆனால் பராபரன் அவர்களை எய்வார்; தீவிரமாய் அம்புபட்டதுபோல, அவர்கள் வாதைகள் இருக்கும்.

௮ அவர்கள் நாவுகள் அவர்களைத்தானே விழப்பண்ணும்; அவர்களில் நீதியைச் சரிக்கட்டுதலைப் பார்க்கிற யாவரும் ஓடிப்போவார்கள்.

௯ எல்லா மனுஷரும் பயந்து, பராபரனுடைய கிரியையை அறிவித்து அவர் செயலை உணருவார்கள்.

௰ நீதிமான் கர்த்தருக்குள் மகிழ்ந்து அவரை நம்புவான்; செம்மை இருதயத்தார் அனைவரும் மேன்மைபாராட்டுவார்கள்.

## ௬௫. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் கீதமாகிய பாட்டு.)

பராபரனே, சீயோனில் உம்மைநோக்கி அமைந்திருந்து துதிக்கிறார்கள்; உமக்குப் பொருத்தனை செலுத்தப்படும்.*

*சங். ௬௨. ௨.

௨ செபத்தைக் கேட்கிறவரே, உம்மண்டைக்குச் சகல மாம்சமும் வருவதாக.

௩ அக்கிரமங்களின் விசேஷங்கள் என்மேல் மிஞ்சி வல்லமைகொண்டன; ஆனால் எங்கள் மீறுதல்களைத் தேவரீர் நிவிர்த்தியாக்குகிறீர்.

௪ உம்முடைய பிரகாரங்களில் வாசமாயிருக்க நீர் தெரிந்துகொண்டு சேர்க்கிறவன் பாக்கியவான்; உம்முடைய பரிசுத்த தேவாலயமாகிய உமது வீட்டின் நன்மையால் திருப்தியாவோம்.* *சங். ௮௪. ௫.

௫ பூமியின் கடையாந்தரங்களும், தூரத்திலுள்ள கடற்கரைகளும், எல்லாம் நம்பும் நம்பிக்கையாகிய எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் பயங்கரமான காரியங்களைச் செய்கிறதினால் எங்களுக்கு நீதியுள்ள மறுவுத்தரவை அருளுகிறீர்.

௬ ¶ உம்முடைய பெலத்தினாலே பருவதங்களை உறுதிப்படுத்தி, வல்லமையை இடைகட்டிக்கொண்டிருந்து,

௭ சமுத்திரங்களின் உக்கிரத்தையும், அவைகளுடைய அலைகளின் உக்கிரத்தையும், சனசதளங்களின் அமளியையும் அமர்த்துகிறவராயிருக்கிறீர்.

௮ கடையாந்தர இடங்களில் குடியிருக்கிறவர்களும் உம்முடைய அடையாளங்களின்நிமித்தம் பயப்படுகிறார்கள்; விடியற்காலத்திலும், சாயங்காலத்திலும் புறப்படுகிறவைகளைக் கெம்பீரிக்கப்பண்ணுகிறீர்.

௯ தேவரீர் பூமியை விசாரித்துப்பார்த்து, அதற்குத் தவனமுண்டாக்கினபின் அதை மிகவும் சம்பூரணப்படுத்துகிறீர்; பராபரனுடைய வாய்க்கால் தண்ணீர் நிரம்பியிருக்கிறது; நீர் இப்படி அதைத் திருத்தினபின் அவர்களுக்குத் தானியத்தை விளைவிக்கிறீர்.

௰ அதின் வரப்புகள் தணியத்தக்கவிதமாய் அதின் படைச்சால்களுக்குத் தண்ணீர் இறைத்து, அதை மழைகளால் கரையப்படுத்தி அதின் பயிரை ஆசீர்வதிக்கிறீர்.

௰௧ வருஷத்தை உம்முடைய நன்மையால் முடிசூட்டுகிறீர்; உம்முடைய பாதைகள் நெய்யாய்ப் பொழிகின்றன.

௰௨ வனாந்தர தாவரங்கள்மேலும் பொழிகிறது; மேடுகள் சுற்றிலும் பூரிப்பாயிருக்கின்றன.

௰௩ மேய்ச்சல் வெளிகள் ஆடுகளைப் பூண்டிருக்கின்றன; பள்ளத்தாக்குகள் தானியத்தால் மூடியிருக்கின்றன; அதினிமித்தம் கெம்பீரித்துப் பாடுகிறார்கள்.

## ௬௬. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதமாகிய பாட்டு.)

பூமியின் குடிகளே, எல்லாரும் பராபரன் முன்பாகக் கெம்பீரியுங்கள்.* *சங். ௱. ௧.

௨ அவர் நாமத்தின் மகிமையைக் கீர்த்தனம்பண்ணி, அவர் துதியைக் கனமானதாக்குங்கள்.

௩ பராபரனுடனே, உம்முடைய கிரியைகளில் எத்தனை பயங்கரமாயிருக்கிறீர் என்று சொல்லுங்கள்; உமது வல்லமையினுடைய திரட்சியினிமித்தமாக உம்முடைய சத்துருக்கள் உமக்கு வணக்கமாய்ப் பேசுவார்கள்.

௪ பூமியனைத்தும் உம்மைப் பணிந்துகொண்டு, உம்மைக் கீர்த்தனம்பண்ணக்கடவது; அவர்கள் உம்முடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணக்கடவார்கள்; சேலா.

௫ ¶ வந்து பராபரனுடைய செய்கைகளைப் பாருங்கள்; அவர் மனுப்புத்திரரிடத்தில் நடப்பிக்கும் கிரியையில் பயங்கரமானவர்.

௬ கடலை வெட்டாந்தரையாக மாற்றினார்; ஆற்றைக் கால்நடையாய்க் கடந்தார்கள்; அங்கே அவரால் மகிழ்ச்சியடைந்தோம்.*
*௨ மோ. ௰௪. ௨௧. யோசு. ௩. ௰௪. ஞு.

௭ அவர் தம்முடைய வல்லமையினால் என்றென்றைக்கும் ஆளுகிறவர்; அவருடைய கண்கள் சாதிகள்மேல் நோக்கமாயிருக்கின்றன; முரட்டாட்டக்காரர் தங்களை உயர்த்தாதிருப்பார்களாக; சேலா.

௮ ¶ சனசதனங்களே, நம்முடைய பராபரனைத் தோத்திரித்து, அவர் துதியின் சத்தத்தைக் கேட்கப்பண்ணுங்கள்.

௯ அவர் நம்முடைய கால்களைத் தள்ளாடவொட்டாமல், நம்முடைய ஆத்துமாவை உயிரோடே வைக்கிறார்.

௰ ஏனென்றால் பராபரனே, எங்களைச் சோதித்தீர்; வெள்ளியைப் புடமிடுகிறதுபோலே எங்களைப் புடமிட்டீர்.

௰௧ எங்களை வலைக்குள்ப்படுத்தி, எங்கள் இடுப்புகளின்மேல் வருத்தமான பாரத்தைப் போட்டீர்.

௰௨ மனிதரை எங்கள் தலையின்மேல் ஏறிப்போகப்பண்ணினீர்; தீக்கும் தண்ணீருக்கும் உள்ளானோம்; ஆனால் சம்பூரணம் அடைய எங்களை அதற்கு நீங்கலாக்கிப் புறப்படப்பண்ணினீர்.* *ஏசா. ௪௩. ௨.

௰௩ ¶ சர்வாங்கதகனங்களோடே உமது வீட்டுக்குள்ப்பிரவேசிப்பேன்.

௰௪ என் இக்கட்டில் என் உதடுகள் திறவுண்டு, என் வாய் சொன்ன என்னுடைய பொருத்தனைகளை உமக்குச் செலுத்துவேன்.

௰௫ உமக்குக் கொழுப்பான தகனபலிகளையிட்டு, ஆட்டுக்கடாக்களின் நிணப்புகையையும் காட்டுவேன்; மாடுகளையும் கடாக்களையும் படைப்பேன்; சேலா.

௰௬ ¶ பராபரனுக்குப் பயந்தவர்கள் எல்லாரும் வந்து கேளுங்கள்; அவர் என் ஆத்மத்துக்குச் செய்ததைச் சொல்லுவேன்.

௰௭ அவரைநோக்கி என் வாயினாலே கூப்பிட்டேன்; என் நாவினால் உயர்த்தப்பட்டார்.

௰௮ என் இருதயத்தில் அக்கிரமநோக்கமாயிருந்தேனானால், ஆண்டவர் என்னைக் கேளார்.* *யோவா. ௯. ௩௧.

௰௯ மெய்யாய்ப் பராபரன் என்னைக் கேட்டு, என் செபத்தின் சத்தத்துக்குக் கவனித்தார்.

௨௰ என் செபத்தை அலட்சியம்பண்ணாமலும், தமது கிருபையை என்னைவிட்டு விலக்காமலுமிருந்த பராபரன் தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௭. சங்கீதம்.

(பின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.)

பூமியில் உம்முடைய வழியும், எல்லாச் சாதிகளினும் உம்முடைய இரட்சிப்பும் அறியப்பட,

௨ பராபரன் எங்களுக்கு இரங்கி, எங்களை ஆசீர்வதித்து, தம்முடைய முகத்தை எங்கள்மேல் பிரகாசிக்கப்பண்ணக்கடவார்.*

*௪ மோ. ௬. ௨௪, ௨௫.

௩ பராபரனே, சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக; எல்லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்பதாக.

௪ சாதிகள் மகிழ்ந்து கெம்பீரிப்பதாக; ஏனெனில் சனசதளங்களை நிதானமாய் நியாயந்தீர்த்து, பூமியிலுள்ள சாதிகளை நடத்துவீர்; சேலா.

௫ பராபரனே, சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக; எல்லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்பதாக.

௬ பூமி தன் பலனைத் தரக்கடவது; எங்கள் தேவனாகிய பராபரன் எங்களை ஆசீர்வதிக்கக்கடவார்.

௭ பராபரன் எங்களை ஆசீர்வதிக்கக்கடவார்; பூமியின் எல்லைகளெல்லாம் அவருக்குப் பயந்திருப்பதாக.

## ௬௮. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் பாட்டாகிய சங்கீதம்.)

பராபரன் எழுந்திருப்பார்; அவருடைய சத்துருக்கள் சிதறுண்டு, அவரைப் பகைக்கிறவர்கள் அவருக்குமுன்பாக ஓடிப்போவார்கள்.* *௪ மோ. ௰. ௩௫.

௨ புகைகாற்றினாலே தள்ளப்படுமாப்போல, அவர்களைத் தள்ளுவீர்; நெருப்பின்முன் மெழுகு உருகுமாப்போல, ஆகாதவர்கள் பராபரனுடைய சந்நிதியால் அழிவார்கள்.

௩ ஆனால் நீதிமான்கள் பராபரனுக்குமுன்பாக மகிழ்ந்து களிகூர்ந்து சந்தோஷமாய்க் களிப்பார்கள்.

௪ ¶ பராபரனைப் பாடி அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; வனாந்தரங்களில் ஏறிவருகிறவருக்கு வழியைச் சமனாக்குங்கள்; அவருடைய நாமம் கர்த்தர், அவருக்குமுன்பாகக் களிகூருங்கள்.*

*ஏசா. ௪௰. ௩.

௫ அவர் திக்கற்றவர்களுக்குப் பிதாவும் விதவைகளுக்கு நியாயம் விசாரிக்கிறவருமாய்த் தம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்தில் இருக்கிற பராபரன்.

௬ அவர் தனிமையானவர்களை வீட்டிலே வாசமாயிருக்கப்பண்ணி, கட்டுண்டவர்களைச் சரியான வேளைகளில் நீக்கிவிடுவிக்கிற பராபரன்; முரட்டாட்டக்காரரோவெனில் வறண்ட தலத்திலே தங்குவார்கள்.*

* சங். ௱௰௩. ௯. ஏசா. ௫௪. ௧, ௩.

௭ ¶ பராபரனே, நீர் உம்முடைய சனத்தின்முன்னாலே புறப்பட்டு, அவாந்தர வெளியிலே நடந்துவருகையில், சேலா.

௮ பூமி அதிர்ந்தது, வானங்களும் பராபரனுக்குமுன்பாகப் பொழிந்தன; இந்தச் சீனாய் இஸ்ரவேலின் தேவனாகிய பராபரனுக்குமுன்பாக இப்படியாயிற்று.*

* ௨ மோ. ௰௯. ௰௬, ௰௮.

௯ பராபரனே, சம்பூரண மழையைப் பெய்யப்பண்ணுவீர், இளைத்ததாகிய உமது சுதந்தரத்தைத் தேவரீர் திடப்படுத்துவீர்.*

* ஏசே. ௩௩. ௨௬.

௰ ¶ அதிலே உம்முடைய மந்தை தங்கியிருக்கிறது; பராபரனே, சிறுமையானவனுக்கு அதை உம்முடைய தயையினால் பக்குவமாக்குவீர்.

௰௧ ஆண்டவர் வசனந்தருவார்; சுவிசேஷகரின் திரளான சேனையுண்டாயிருக்குட்

௰௨ சேனைகளின் இராசாக்கள் சுற்றிச்சுற்றித் திரிவார்கள்; வீட்டிலே வாசமாயிருக்கிறவனோ கொள்ளையைப் பங்கிடுவான்.

௰௩ நீங்கள் இருபுறப் படைவகுப்புகளுக்குள் இருக்கையில், வெள்ளியாலே மூடப்பட்ட புருச்செட்டைகளின் சாயலாகவும், தங்கநிறமாகிய அதின் இறகுகளின் சாயலாகவும் காணுகிறது.

௰௪ சர்வத்துக்கும் வல்லவர் அதின் இராசாக்களை இங்குமங்கும் வைத்தால் காரிருளிலே வெளிச்சமாம்.

௰௫ பராபரனுடைய பருவதம் பாசான் பருவதத்தைப்போல இருக்கிறது; அது பாசான் பருவதத்தைப்போல மேடுகளுள்ளது.

௰௬ பருவதங்களே, மேடுகளே, ஏன் விம்மியிருக்கிறீர்கள்? இந்தப் பருவத்திலே வாசமாயிருக்கப் பராபரன் விரும்பினார்; ஆம் கர்த்தர் அதிலே என்றென்றைக்கும் வாசமாயிருப்பார்.

௰௭ ¶ பராபரனுடைய இரதங்கள் பதினாயிரங்களும், ஆயிரத்தாயிரங்களுமானவை; ஆண்டவர் பரிசுத்தஸ்தலமான சீனாவில் இருந்தவண்ணமாய் அவர்களுக்குள் இருக்கிறார்.* *உ இரா. சு. ௰௭. தானி. ௭. ௰.

௰௮ தேவரீர் உன்னதத்துக்கேறிச் சிறையாக்குதலைச் சிறையாக்கிப்போட்டு, வரங்களை மனிதருக்குள்ளும் முருட்டாட்டம் செய்தவர்களுக்குள்ளும் கூடப்பங்கிடுவதற்கும், இப்படியே பராபரனாகிய கர்த்தர் அவர்களுக்குள் வாசமாயிருப்பதற்குமாக வாங்கிக்கொண்டீர்.* *எபே. ச. அ. யோவா. ௩. ௰௩. அப். உ. ௩௩.

௰௯ ¶ ஆண்டவர் எந்நாளும் தோத்திரிக்கப்பட்டவர்; நம்முடையமேல் பாரம் சுமத்துகிறார்; ஆனால் அவரே நம்முடைய இரட்சிப்பான பராபரன்; சேலா.*
* உ கொரி. க. ௫.

௨௰ பராபரன் நமக்கு இரட்சிப்புகளையருளுகிற பராபரனாயிருக்கிறார்; ஆண்டவராகிய கர்த்தரால் மரணத்துக்கு நீங்கும் போக்குகளுண்டு.

௨௧ மெய்யாகவே பராபரன் தம்முடைய சத்துருக்களின் சிரசையும், தன் தோஷங்களில் நடந்துகொண்டிருக்கிறவனுடைய மயிருள்ள உச்சியையும் உடைப்பார்.*
* சங். ௱௰. ௫, ௬.

௨௨ சத்துருக்களில் அவனவனுடைய இரத்தத்தில் உம்முடைய கால் பதியும்படியாகவும், உம்முடைய நாய்களின் நாக்கு அதை நக்கும்படியாகவும்,

௨௩ ஆண்டவர் பாசானிலிருந்து நம்முடைய சனத்தைத் திரும்ப அழைத்துவருவோமென்றும், அதைச் சமுத்திர ஆழங்களிலிருந்து திரும்ப அழைத்துவருவோமென்றும் சொன்னார்.

௨௪ ¶ பராபரனே, உம்முடைய நடைகளைக் காண்பார்கள்; என் பராபரனும் என் இராசாவும், பரிசுத்தஸ்தலத்திலே நடந்துவருகிற நடைகளைத்தானே.

௨௫ முன்னாகப் பாடுவாரும், பின்னாக மேளம்சேவிக்கிற கன்னியாஸ்திரிகளுக்குள்ளே கின்னரங்களை வாசிப்பாரும் நடப்பார்கள்.* *உ மோ. ௰௫. உ௩.

௨௬ ஆண்டவராகிய பராபரன் இஸ்ரவேலினுடைய ஊற்றின்நிமித்தமாகச் சபைகளில் தோத்திரியுங்கள் என்பார்கள்.*
* சகரி. ௰௩. க. யோவா. ௭. ௩௭.

௨௭ அங்கே அவர்களை ஆளுகிற சின்ன பென்யமீனும், யூதாவின் பிரபுக்களும், அவர்கள் கூட்டமும், செபுலோனின் பிரபுக்களும், நவ்தலியின் பிரபுக்களுமுண்டு.*
* பிலி. ௩. ௫. க கொரி. ௰௫. சு, ௰. அப். க. ௰௩, ௰௪.

௨௮ ¶ உம்முடைய பராபரன் உமது பெலத்தைக் கட்டளையிட்டார்; பராபரனே, நீர் எங்களுக்கு உண்டுபண்ணினதைத் திடப்படுத்தும்.* *மத். உக. ௪உ.

௨௯ எருசலேமிலுள்ள உம்முடைய தேவாலயத்திற்காக இராசாக்கள் உமக்குக் கா

ணிக்கைகளைக் கொண்டுவருவார்கள்.*
* சங். ௭௨. ௰.

௩௰ காணலிலே தங்கும் மிருகத்தையும், வெள்ளித்துண்டுகளின்நிமித்தம் மிதித்துப் போட்டு, சனசதளங்களென்ற கன்றுக்குட்டிகளுக்குள் இருக்கிற வலுவான எருதுகளின் கூட்டத்தையும் உதம்பும்; யுத்தங்களை விரும்புகிற சனசதளங்களைச் சிதறடிப்பார்.

௩௧ பிரபுக்கள் எகிப்திலிருந்து வருவார்கள்; எத்தியோப்பியா தன் கைகளைப் பராபரனண்டைக்கு எடுக்கத் தீவிரிக்கும்.

௩௨ ¶ பூமியின் இராச்சியங்களே, பராபரனைப் பாடி ஆண்டவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; சேலா.

௩௩ ஆதி வானங்களுடைய வானங்களின் மேல் ஏறியிருக்கிறவரைப் பாடுங்கள்; இதோ தமது சத்தத்தால் வலுமுழக்கத்தைக் கேட்கப்பண்ணுகிறார்.* *சங். ௨௯. ௪.

௩௪ பராபரனுக்கு வல்லமையைச் செலுத்துங்கள்; அவருடைய மகிமை இஸ்ரவேலின்மீதிலும், அவருடைய வல்லமை ஆகாயமண்டலங்களிலுமுள்ளது.* *சங். ௨௯. ௧.

௩௫ பராபரனே, உமது பரிசுத்தஸ்தலங்களிலிருந்து பயங்கரமாய் விளங்குகிறீர்; சனத்துக்குப் பெலனையும், சத்துவங்களையும் கொடுக்கிறவர் இஸ்ரவேலின் பராபரன் தானே, பராபரன் தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௯. சங்கீதம்.

(ஆறு நரம்புக் கின்னரத்திலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என்னை இரட்சியும், ஏனெனில் தண்ணீர்கள் ஆத்துமாமட்டும் வருகின்றன.

௨ நிலையாத ஆழத்தின் உளையில் அமிழ்ந்து, தண்ணீர்களின் பாதாளங்களுக்கு உள்ளானேன்; நீரோட்டங்கள் என்மேல் புரண்டு போகின்றன.* * சங். ௪௨. ௭.

௩ நான் கூப்பிடுகிறதினாலே இளைத்தேன்; என் தொண்டை கம்மிப்போயிற்று; என் பராபரனுக்கு நான் காத்திருக்கையால் என் கண்கள் பூத்துப்போயின.* *சங். ௨௨. ௨, ௩.

௪ முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் என் தலையின் மயிர்களிலும் அதிகமாயிருக்கிறார்கள்; எனக்கு வீண்சத்துருக்களாய் என்னைச் சங்கரிக்கிறவர்கள் பெலத்திருக்கிறார்கள்; அது நான் கொள்ளையிடாததைத் திரும்பக் கொடுக்குங்காலம்.*
*யோவா. ௰௫. ௨௫.

௫ ¶ பராபரனே, நீர் என் பயித்தியத்தை அறிந்திருக்கிறீர், என் குற்றங்கள் உமக்கு ஒளித்திராது.* *சங். ௪௰. ௰௩. ௨ கொரி. ௫. ௨௧.

௬ சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவரே, உம்மை நம்புகிறவர்கள் என்னாலே வெட்கப்பட்டுப்போகாமலும் இஸ்ரவேலின் பராபரனே, உம்மைத் தேடுகிறவர்கள் என்னாலே நாணம் அடையாமலுமிருப்பார்களாக.

௭ ஏனெனில் உம்முடைய நிமித்தம் நிந்தையை உத்தரிக்கிறேன், இலச்சை என் முகத்தை மூடுகிறது.* *ஏசா. ௫௰. ௬.

௮ என் சகோதரருக்கு வேற்றுமனுஷனும், என் தாயின் பிள்ளைகளுக்கு அந்நியனுமானேன்.

௯ ஏனென்றால் உம்முடைய வீட்டுக்காக இருக்கிற பத்திவயிராக்கியம் என்னைப் பட்சித்தது; உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தனைகள் என்மீதில் விழுந்தன.*
*யோவா. ௨. ௰௭. ௨ரோ. ௰௫. ௩.

௰ என் ஆத்துமாவின் உபவாசத்திலே அழுதேன்; ஆனால் அது எனக்கு நிந்தனைகளாயிற்று.* *லூக். ௰௯. ௪௧. சங். ௱௯. ௨௪, ௨௫.

௰௧ இரட்டை என் உடுப்பாக்கினேன்; ஆனால் அவர்களுக்குப் பழமொழியானேன்.

௰௨ வாசலில் உளுக்காந்திருக்கிறவர்கள் என்னைக்குறித்துப் பேசுகிறார்கள்; மதுபானம் பண்ணுகிறவர்களின் பாடலானேன்.

௰௩ ¶ நானோவென்றால் கர்த்தாவே, பிரியமான காலத்திலே உம்மைநோக்கி, என் விண்ணப்பத்தைச் செய்கிறேன்; பராபரனே, உமது மிகுந்த கிருபையினாலும், உமது இரட்சிப்பின் சத்தியத்தினாலும் என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௰௪ நான் அமிழ்ந்துபோகாதபடிக்கு என்னைச் சேற்றுக்கு நீங்கலாக்கிவிடும், நான் என்னைப் பகைக்கிறவர்களையும் தண்ணீர்களின் ஆழங்களையும் விட்டு நீங்கட்டும்.

௰௫ நீரோட்டங்கள் என்மேல் புரளாமலும், ஆழம் என்னை விழுங்காமலும், துரவு என்மேலே தன் வாயை அடைக்காமலுமிருப்பதாக.

௰௬ கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்; ஏனெனில் உம்முடைய கிருபை நலமாயிருக்கிறது; உம்முடைய மிகுந்த இரக்கங்களின்படியே என்னை நோக்கிப்பாரும்.

௰௭ உமது முகத்தை உம்முடைய ஊழியக்காரனுக்கு மறைக்காதிரும்; ஏனெனில் எனக்கு நெருக்கமுண்டு, தீவிரமாய் என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௰௮ நீர் என் ஆத்துமாவைக் கிட்டி, அதை விடுவித்துக்கொள்ளும்; என் சத்துருக்களின் நிமித்தம் என்னை மீட்டுவிடும்.

௰௯ ¶ தேவரீர் என் நிந்தையையும், என் வெட்கத்தையும், என் அவமானத்தையும் அறிந்திருக்கிறீர்; என் சத்துருக்கள் அனைவரும் உமக்கு எதிரே இருக்கிறார்கள்.

௨௰ நிந்தை என் இருதயத்தை முறிக்கிறது; மிகவும் பெலக்கேடானேன்; யாவனொருவன் பரிதாபப்படுவானோவென்று காத்திருந்தேன், ஒருவனுமில்லை; தேற்றரவுபண்ணுகிறவர்களுக்குக் காத்திருந்தேன்; யாரையுங்காணேன்.

௨௧ எனக்குப் பிச்சுண்ணத்தந்து, என் தாகத்தில் எனக்குக் காடிகுடிக்கக் கொடுக்கிறார்கள்.* *மத். ௨௭. ௩௪, ௪௮. மாற். ௰௫. ௨௩. யோவா. ௰௯. ௨௮, ௨௯.

௨௨ அவர்களுடைய பந்தி அவர்களுக்கு முன்பாகச் சுருக்கும், சரிக்கட்டுதலான கண்ணியுமாகக்கடவது.* *உரோ. ௰௧. ௯, ௰.

௨௩ அவர்களுடைய கண்கள் காணாதபடிக்கு அந்தகாரப்படக்கடவன; அவர்கள் இடுப்புகளை எப்போதும் தள்ளாடப்பண்ணும்.

௨௪ உம்முடைய சினத்தை அவர்கள்மேல் ஊற்றும், உம்முடைய கோபத்தின் உக்கிரம் அவர்களைத் தொடர்ந்துபிடிப்பதாக.

௨௫ அவர்கள் வீடுவாசல் பாழாகக்கடவது; அவர்களுடைய கூடாரங்களில் குடியில்லாமல் போவதாக.* *அப். ௧. ௨௰.

௨௬ ஏனெனில் தேவரீர் அடித்தவனை அவர்கள் துன்பப்படுத்தி, தேவரீரால் காயப்பட்டவர்களை நோகப்பேசுகிறார்கள்.

௨௭ அவர்கள் உமது நீதிக்கு வராதபடிக்கு அவர்களுடைய அக்கிரமத்தின்மேல் அக்கிரமம் சேரட்டும்.

௨௮ அவர்கள் நீதிமான்களோடே எழுதப்படாமல் ஜீவபுஸ்தகத்தில் கிறுக்கப்படக்கடவார்கள்.* *பிலி. ௪. ௩.

௨௯ ¶ நானோவெனில் சிறுமையும் நோவுமுள்ளவன்; பராபரனே, உம்முடைய இரட்சிப்பு எனக்கு உயர்ந்த அடைக்கலமாவதாக.* *சங். ௱௯. ௨௨.

௩௰ பராபரனுடைய நாமத்தைப் பாட்டினாலே துதித்து, அவரைத் தோத்திரத்தினாலே மகிமைப்படுத்துவேன்.

௩௧ கொம்பும் விரிகுளம்புமுள்ள மாட்டையும், காளையையும், எருதையும் பார்க்கிலும் அதுவே கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும்.* *சங். ௪௰. ௭.

௩௨ சிறுமையானவர்கள் அதைக் கண்டு, சந்தோஷப்படுவார்கள்; பராபரனைத் தேடுகிறவர்களே உங்கள் இருதயம் வாழும்.* *சங். ௨௨. ௨௭.

௩௩ ஏனெனில் கர்த்தர் எளியவர்களைக் கேட்கிறவர், கட்டுண்ட தம்முடையவர்களை அவர் புறக்கணியார்.

௩௪ வானங்களும், பூமியும், சமுத்திரங்களும், அவைகளில் அசைவாடுகிற யாவும் அவரைத் துதிக்கக்கடவது.*
*சங். ௱௪௮. ௧. மு.

௩௫ ஏனெனில் பராபரன் சீயோனை இரட்சித்து, யூதாவின் பட்டணங்களைக் கட்டுவார்; அப்போது அங்கே குடியிருந்து அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௩௬ அவருடைய ஊழியக்காரரின் வித்தார் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; அவருடைய நாமத்தைச் சிநேகிக்கிறவர்கள் அதிலே வாசமாயிருப்பார்கள்.*
*சங். ௱௨. ௨௮.

## ௭௰. சங்கீதம்.

(நினைப்பூட்டுதலாகப்பாடி இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என்னைத் தப்புவிக்கவும், கர்த்தாவே, எனக்குச் சகாயம் செய்யவும் தீவிரியும்.* *சங். ௭௧. ௰௨, ௰௩.

௨ என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள் வெட்கி நாணுவார்கள், என் தீங்கை விரும்புகிறவர்கள் பின்னிட்டுத் திரும்பி, இலச்சையடைவார்களாக.* *சங். ௩௫. ௪: ௪௰. ௰௫. மு.

௩ ஆகா, ஆகா, என்கிறவர்கள் தாங்கள் அடையும் வெட்கமான பலனாலே பின்னிடைந்து போகக்கடவார்கள்.

௪ உம்மைத் தேடுகிற அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக; உம்முடைய இரட்சிப்பைச் சிநேகிக்கிறவர்கள் எப்போதும் பராபரன் மகிமைப்படக்கடவார் என்பார்களாக.

௫ நானோவெனில் சிறுமையும் எளிமையுமாயிருக்கிறேன், பராபரனே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரியும், என் துணையும் என்னை விடுவிக்கிறவரும் தேவரீர்; கர்த்தாவே, தாமதியாதிரும்.

## ௭௧. சங்கீதம்.

கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்; நான் என்றைக்கும் வெட்கப்பட்டுப்போகாதிருக்கட்டும்.

௨ உம்முடைய நீதியின் நிமித்தமாக என்னைத் தப்புவித்து விடுவிப்பீராக; என்னண்டைக்கு உம்முடைய செவியைச் சாய்த்து என்னை இரட்சியும்.* *தானி. ௯. ௰௬.

௩ எனக்கு நான் எப்போதும் வந்தடையும் கல்மலையாக இரும்; என்னை இரட்சிப்பதற்குக் கட்டளையிட்டீரே; ஏனெனில் தேவரீர் என் கல்மலையும் என் கோட்டையும் தானே.* *சங். ௰௮. ௨, ௩.

௪ என் பராபரனே, என்னை ஆகாதவனுடைய கைக்கும், நியாயக்கேடும் துஷ்டாட்டமுமுள்ளவனுடைய கைக்கும் தப்புவியும்.

௫ ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் என்னுடைய நோக்கமும், என் சிறுவயதுதுவக்கி என் நம்பிக்கையுமாயிருக்கிறீர்.* *சங். ௪௯. ௨.

௬ நான் கெர்ப்பத்திலிருந்ததுமுதல் உம்முடையமேல் சார்ந்துகொண்டேன்; தேவரீர் என்னை என் தாயின் குடல்களிலிருந்து இழுத்தவர், உம்முடையமேல் எப்போதும் துதிசொல்லுவேன்.* *சங். ௨௨. ௰, ௰௧.

௭ ¶ அநேகருக்கு ஒரு அற்புதம்போலானேன்; தேவரீரோவென்றால் எனக்குப் பெலத்த அடைக்கலம்.

௮ என் வாய் உமது துதியினாலும், நாள்தோறும் உமது மகத்துவத்தினாலும் நிறைவதாக.

௯ முதிர்ந்தவயதிலே என்னைத் தள்ளிவிடாமலும், என் பெலன் ஒடுங்கும்போது என்னைக் கைவிடாமலுமிருப்பீராக.

௰ ஏனெனில் என் சத்துருக்கள் எனக்கு விரோதமாய்ப் பேசி, என் ஆத்துமாவுக்குக் காவலிருக்கிறவர்கள் ஏகமாய் ஆலோசனை பண்ணி,

௰௧ பராபரன் அவனைக் கைவிட்டார்; அவனைத் தொடர்ந்துபிடியுங்கள்; ஏனெனில் விடுவிப்பாரில்லை என்கிறார்கள்.

௰௨ பராபரனே, எனக்குத் தூரமாக இராதேயும்; என் பராபரனே, எனக்குச் சகா

யம்பண்ணத் திவிரியும்.* *சங். ௭௰.௨,௩.

௰௩ என் ஆத்துமாவை விரோதிக்கிறவர்கள் வெட்கி அழியவும், எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் நிந்தையாலும் இலச்சையாலும் மூடப்படவுங்கடவார்கள்.

௰௪ ¶ நானோ எப்போதும் நம்பி, உம்முடைய எல்லாத் துதியின்மேலும் துதியைக் கூட்டுவேன்.

௰௫ என் வாய் உமது நீதியையும், நாள்தோறும் உமது இரட்சிப்பையும் சொல்லும்; ஏனெனில் அவைகளின் தொகையை அறியேன்.

௰௬ கர்த்தராகிய ஆண்டவருடைய வல்லமைகளில் உள்ப்பிரவேசிப்பேன்; உம்முடைய நீதியைமாத்திரமே நினைப்பேன்.

௰௭ பராபரனே,என் சிறுவயதுதுவக்கி என்னைப் போதித்துவந்தீர்; இந்நேரமட்டுக்கும் உம்முடைய அதிசயங்களை அறிவிக்கிறேன்.

௰௮ இப்போதும் பராபரனே, நான் உமது புயத்தை இச்சந்ததிக்கும், உமது வல்லமையை வரப்போகிற யாவருக்கும் அறிவிக்குமளவும் முதிர்ந்தவயதும் நரையும்மட்டாக என்னைக் கைவிடீராக.

௰௯ பெரிதானவைகளைச் செய்த பராபரனே, உம்முடைய நீதி உயரமட்டும் சேருகிறது; பராபரனே உம்மைப்போலே யார்?

௨௰ ¶ அநேக இடுக்கண்களையும், கொடிதானவைகளையும், என்னைப் பார்க்கப்பண்ணின நீர் திரும்ப என்னை உயிர்ப்பித்து, திரும்ப என்னைப் பூமியின் பாதாளங்களிலிருந்து ஏறப்பண்ணுவீராக.* *௧ சாமு. ௨. ௬.

௨௰௧ என் முக்கியத்தைப் பெருகப்பண்ணி, என்னை மறுபடியும் தேற்றுவீராக.

௨௰௨ என் பராபரனே, நானும் தம்புருவினாலே உம்மையும், உம்முடைய சத்தியத்தையும் துதிப்பேன்; இஸ்ரவேலினுடைய பரிசுத்தரே, உம்மைச் சுரமண்டலத்தால் கீர்த்தனம்பண்ணுவேன்.

௨௰௩ என் உதடுகளும், நீர் மீட்டுவிட்ட என் ஆத்துமாவும் கெம்பீரிக்கும்; ஏனெனில் உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௨௰௪ என் நாவும் நாள்தோறும் உமது நீதியைக் கொண்டாடும்; ஏனென்றால் எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் வெட்கி இலச்சைப்பட்டுப்போனார்கள்.

## ௭௨. சங்கீதம்.

(சாலொமோனுடையது.)

பராபரனே, இராசாவுக்கு உம்முடைய நியாயத்தீர்ப்புகளையும், இராசாவின் குமாரனுக்கு உம்முடைய நீதியையும் கட்டளையிடும்.

௨ ¶ அவர் உம்முடைய சனத்தை நீதியும், உம்முடைய சிறுமையானவர்களை நிதானமுமாய் நியாயம் விசாரிப்பார்.*

*ஏசா. ௰௧. ௩—௫.

௩ பருவதங்கள் சனத்துக்குச் சமாதானத்தைத் தரும்; மேடுகள் நீதியின் விளைவோடிருக்கும்.

௪ அவர் சனத்தில் சிறுமையானவர்களை நியாயம்விசாரித்து, எளியவன் பிள்ளைகளை இரட்சித்து, இடுக்கண் செய்கிறவனை நசுக்குவார்.

௫ சூரியனும் சந்திரனுமுள்ளமட்டும் உமக்குத் தலைமுறை தலைமுறையாகப் பயந்திருப்பார்கள்.* *சங். ௮௯. ௩௭, ௩௮.

௬ புல்லறுப்புண்ட வெளியின்மேல் இறங்குகிற மழையைப்போலவும், பூமியை நனைக்கிற தூற்றல்களைப்போலவும் இறங்குவார்.

௭ அவருடைய நாள்களில் நீதிமான் செழிப்பான், சந்திரனில்லாமல் போகும்மட்டும் மிகுதியான சமாதானமிருக்கும்.

௮ ஒரு சமுத்திரம்துவக்கி மற்றச் சமுத்திரம்மட்டாகவும், ஆறுதுவக்கிப் பூமியின் எல்லைகள்மட்டாகவும், ஆளுவார்.*

*சங். ௮௯. ௨௰௯. சகரி. ௯. ௰.

௯ அவருக்குமுன்பாக வனாந்தரத்தார் குனிவார்கள்; அவருடைய சத்துருக்கள் மண்ணை நக்குவார்கள்.

௰ தர்சீசின் இராசாக்களும், தீவுகளின்

இராசாக்களும் காணிக்கைகளைச் செலுத்த வருவார்கள்; சபேயா,செபா என்ற தேசங்களின் இராசாக்கள் வெகுமானங்களைக் கொண்டுவருவார்கள்.*

*சங். கூஅ. ௩ம. ஏசா. கூம. கூ.

ம௧ சகலஇராசாக்களும் அவரைப் பணிந்துகொள்வார்கள்; சகல சாதிகளும் அவரைச் சேவிப்பார்கள்.* *வெளி. ம௧. மரு.

ம௨ ஏனெனில் கூப்பிடுகிற எளியவனையும், சிறுமையானவனையும், உதவியற்றவனையும் விடுவிப்பார்.

ம௩ தரித்திரமும் எளிமையுமானவனைத் தப்புவித்து, எளியவர்களின் ஆத்துமாக்களை இரட்சிப்பார்.

ம௪ அவர்கள் ஆத்துமாக்களைத் தந்திரத்துக்கும் கொடுமைக்கும் தப்ப விடுவித்துக் கொள்ளுவார்; அவர்கள் இரத்தம் அவருடைய பார்வைக்கு அருமையானது.

மரு அவர் பிழைப்பார், அவருக்குச் சபேயாவின் பொன்னில் கொடுக்கப்படும்; எப்போதும் அவரை வேண்டிச் செபம் பண்ணப்படும்; எந்நாளும் தோத்திரிக்கப்படுவார்.* *வெளி. ௧. ம௪. ஏசா. கூம. கூ. மத். ௨. ம௧.

மகூ பூமியில் பருவதங்களின் கொடுமுடியிலே விதைக்கப்பட்ட ஒருபிடி தானியம் போலிருக்கும்; அதின் விளைச்சல் லீபனோனைப்போலே அசையும்; நிலத்தினுடைய பூண்டுகளைப்போலே பட்டணத்திலிருந்து பூப்பார்கள்.

மஎ அவருடைய நாமம் என்றென்றைக்கும் இருக்கும்; சூரியனுள்ளமட்டும் அவருடைய நாமம் சந்தான பரம்பரையாயிருக்கும்; எல்லாச் சாதிகளும் அவருக்குள் ஆசீர்வதித்துக்கொண்டு, அவரைப் பாக்கியமுடையவர் என்பார்கள்.* *௧ மோ. ம௨. ௩.

ம௮ ¶ ஒருவராய் அதிசயங்களைச் செய்கிற இஸ்ரவேலின் தம்பிரானாயிருக்கிற பராபரனாகிய கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவரும்,

மகூ அவருடைய மகிமையான நாமம் என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டதுமாமே; அவருடைய மகிமையால் பூமியனைத்தும் நிறையப்படுவதாக; ஆமன், ஆமன்.*

*ஏசா. கூ. ௩.

உம இசாயின் குமாரனாகிய தாவீதின் செபங்கள் முடிந்தன.

## எ௩. சங்கீதம்.

(ஆசாபின் சங்கீதம்.)

இஸ்ரவேலுக்கு, அதாவது, இருதயத்திலே சுத்தமானவர்களுக்குப் பராபரன் நல்லவர்தானே.* *மத். ரு. அ.

௨ என்னுடைய கால்களோவென்றால் சாயவும், என் அடிகள் சறுக்கவும் சற்றுத் தப்பிற்று.

௩ ஏனெனில் ஆகாதவர்களின் சாங்கோபாங்கத்தை நான் காண்கையில், வீம்புக்காரர்மேல் பொறாமையானேன்.*

*யோபு.௨௧. எ, ௨௧. எரே. ம௨. ௧—௩.

௪ ¶ அதேனென்றால் தங்கள் மரணம்மட்டும் அவர்களுக்கு இடுக்கண்களில்லாமல் அவர்களுடைய பெலன் புஷ்டியாயிருக்கிறது.

ரு நரசீவ வருத்தத்தில் அகப்பட்டிரார்கள்; வேறே மனுஷரோடே உபாதி அடையார்கள்.

கூ ஆகையால் பெருமை அவர்களை ஒரு சரப்பணியைப்போலே பூணும், அவர்கள் கொடுமை அவர்களை ஆடை ஆபரணத்தைப்போலே மூடும்.

எ அவர்கள் கண்கள் நிணத்திலிருந்து பார்க்கின்றன; அவர்கள் மனவேகங்கள் நடந்தேறுகின்றன.

அ பிறரைத் தொய்யப்பண்ணி, அகங்காரமாய் இடுக்கண்செய்வதைப் பேசுகிறார்கள்; உயரத்திலிருந்து பேசுகிறார்கள்.

கூ தங்கள் வாயை வானத்திலே வைக்கிறார்கள்; அவர்கள் நாவின்படியே பூமியிலே நடக்கும்.

௰ ஆனபடியால் அவர்களுடைய சனம் இந்த வழியாகவே திரும்பும்; தண்ணீர்கள் அவர்களுக்குப் பரிபூரணமாகச் சுரந்து வரும்.

௰௧ அவர்கள், பராபரன் அதை எப்படி அறிவார்; உன்னதமானவரில் அதின் அறிவுண்டோ என்கிறார்கள்.* *சங். ௰. ௰௧: ௯௪. ௭.

௰௨ இதோ இவர்கள் ஆகாதவர்களாமே; ஆகிலும் என்றும் சுகசீவிகளாயிருந்து ஆஸ்தியைப் பெருகப்பண்ணுகிறார்கள்.

௰௩ ¶ நான் விருதாவாகவே என் இருதயத்தைச் சுத்தம்பண்ணி, என் கைகளைக் குற்றமில்லாமையிலே கழுவினேன்.*
*மல்கி. ௩. ௰௩. று.

௰௪ நான் நித்தம் வாதிக்கப்படுகிறவனுமே; என் தண்டனைகள் காலைமாறு திரும்புமே.

௰௫ இப்படிச் சொல்வேன் என்றேனேயாகில், இதோ உம்முடைய பிள்ளைகளின் சந்ததிக்குத் துரோகியாவேன்.

௰௬ இதை அறியும்படிக்கு யோசித்தேன்.

௰௭ ஆனால் நான் பராபரனுடைய பரிசுத்தஸ்தலங்களுக்குள்ப் பிரவேசித்து, அவர்கள் கடைசிக்காரியத்தைக் கவனித்து உணருமளவும் அது என் பார்வைக்கு வித்தனமாயிருந்தது.

௰௮ ¶ சறுக்கல்களிலே அவர்களை நிறுத்தி, அவர்களைப் பாழ்க்கடிப்புகளில் விழப்பண்ணுகிறீர்.

௰௯ ஒரு நிமிஷத்தில் எத்தனையாய்ப் பாழாவார்கள்; பயங்கரங்களாலே அழிந்து நிர்மூலமாவார்கள்.* *சங். ௩௭. ௩௫.

௨௰ ஆண்டவரே நித்திரை தெளிந்தவுடனே, சொப்பனம் ஒழியுமாப்போல, அவர்கள் வேஷத்தைப் பட்டணத்தில் இனமாய்ப் போகப்பண்ணுவீர்.

௨௧ ¶ என் நெஞ்சு வர்மித்து, நான் என் உள்ளிந்திரியங்களில் குத்துருவப்படுகிறவனாயிருக்கையில்,

௨௨ நான் காரியத்தை அறியாத மூடனும், உமக்கு முன்பாக மிருககுணமுமாயிருந்தேன்.

௨௩ ஆகையால் நான் எப்போதும் உம்மண்டையிலே தரிப்பேன்; என் வலதுகையைப் பிடித்துத் தாங்குவீர்.

௨௪ உம்முடைய யோசனையின்படி என்னை நடத்தி, கடைசியில் என்னை மகிமையில் ஏற்றுக்கொள்வீராக.

௨௫ பின்னை யார் எனக்குப் பரமண்டலங்களில் இருக்கிறார்; உம்மோடே நான் இருக்கையில் பூமியில் எனக்கு வேறே விருப்பமில்லை.

௨௬ என் மாம்சமும் என் இருதயமும் மாளும்போது, பராபரன் என்றென்றைக்கும் என் இருதயத்தின் கன்மலையும் என் பங்குமாயிருக்கிறார்.

௨௭ ¶ ஏனெனில் இதோ உம்மைவிட்டுத் தூரமாகிறவர்கள் அழிவார்கள்; உம்மைவிட்டுச் சோரம்போகிற அனைவரையும் சங்கரிப்பீர்.

௨௮ எனக்கோ பராபரனை அண்டிக்கொண்டிருக்கிறதே நல்லது; நான் உமது கிரியைகளையெல்லாம் சொல்லிவரும்படிக்கு. கர்த்தராகிய ஆண்டவர்மேல் என் நம்பிக்கையை வைத்திருப்பேன்.

## ௭௪. சங்கீதம்.

(ஆசாபின் போதக சங்கீதம்.)

பராபரனே, ஏன் எங்களை என்றைக்கும் தள்ளிவிடுகிறீர்? ஏன் உமது கோபம் உம்முடைய மேய்ச்சலின் ஆடுகள்மேல் புகைகிறது?* *சங். ௪௪. ௨௩, ௨௪.

௨ நீர் பூர்வகாலம்துவக்கிச் சம்பாதித்துக்கொண்ட உமது சபையையும், நீர் மீட்டுக்கொண்ட உம்முடைய சுதந்தரமான கோத்திரத்தையும், நீர் வாசமாயிருந்த சியோன் பருவதத்தையும் நினைவுகூரும்.

௩ நித்திய பாழ்க்கடிப்புகளுக்கும் உம்முடைய பாதங்களை எழுந்தருளப்பண்ணும்;

சத்துரு பரிசுத்தஸ்தலத்தில் அனைத்தையும் கெடுத்துவிட்டான்.

௪ ¶ உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஆலயங்களின் உள்ப்புறத்திலே கெர்ச்சித்து, தங்கள் அடையாளங்களை அடையாளங்களாக வைத்தார்கள்.

௫ மரங்களுடைய அடர்த்தியில் வெட்ட, கோடரிகளை ஓங்கி எடுக்கிறவனென்று அவனவன் பேர்போனான்.

௬ இப்போதும் அதின் சித்திரவேலைகளை ஏகமாய் வாச்சியாலும், சுத்திகளாலும் தகர்த்தார்கள்.

௭ உம்முடைய பரிசுத்தஸ்தலத்தை அக்கினிக்கு இரையாக்கி, உம்முடைய நாமத்தின் வாசஸ்தலத்தைத் தரையாக்கி, பரிசுத்தத்தைக் கொலைத்துப்போட்டார்கள்.

௮ அவர்களை ஏகமாய் நிர்த்தூளியாக்குவோமென்று தங்கள் இருதயத்தில் சொல்லி, தேசத்திலுள்ள பராபரனுடைய ஆலயத்தை எல்லாம் சுட்டெரித்தார்கள்.

௯ எங்கள் அடையாளங்களைக் காணோம்; தீர்க்கதரிசி அப்புறமில்லை; எந்தமட்டும் என்றறிகிறவன் எங்களிடத்திலுமில்லை.

௰ ¶ பராபரனே, எந்தமட்டும் சத்துரு நிந்திப்பான்; பகைஞன் என்றைக்கும் உம்முடைய நாமத்தைத் தூஷணிப்பானோ?

௰௧ ஏன் உமது கையையும், உமது வலது கரத்தையும் முடக்கிக்கொள்ளுகிறீர்; அதை உமது மடியிலிருந்து எடுத்து நீட்டிக்கொண்டிரும்.

௰௨ ஏனெனில் பூமியின் நடுவிலே இரட்சிப்புகளைச் செய்கிற பராபரன் ஆதிகால முதலாய் என்னுடைய இராசா.*

*சங். ௯௮. ௨௧.

௰௩ தேவரீர் உம்முடைய வல்லமையால் சமுத்திரத்தை இரண்டாகப் பிளந்து, தண்ணீர்களில் வலுசர்ப்பங்களின் தலைகளை உடைத்தீர்.

௰௪ தேவரீர் முதலைகளின் தலைகளை நருக்கிப்போட்டு, அதை வனாந்தரத்தாராகிய சனத்துக்குப் போசனமாகக் கொடுத்தீர்.

௰௫ தேவரீர் ஊற்றையும் ஆற்றையும் பிளந்து பிறக்கப்பண்ணினீர்; தேவரீர் வலுநதிகளையும் வற்றிப்போகப்பண்ணினீர்.

௰௬ பகலும் உம்முடையது; இரவும் உம்முடையது; தேவரீர் வெளிச்சத்தையும் சூரியனையும் படைத்தீர்.

௰௭ தேவரீர் பூமியின் எல்லைகளை எல்லாம் திட்டம்பண்ணினீர்; கோடைகாலத்தையும், மாரிகாலத்தையும் தேவரீர் உண்டாக்கினீர்.

௰௮ ¶ சத்துரு கர்த்தராகிய தேவரீரை நிந்திக்கிறதையும், பயித்தியங்கொண்ட சனம் உம்முடைய நாமத்தைத் தூஷணிக்கிறதையும் நினைத்திரும்.* *ஏசா. ௩௭. ௰௭.

௰௯ உம்முடைய காட்டுப்புறாவின் ஆத்துமாவை மிருகத்துக்கு ஒப்புக்கொடாதிரும்; உம்முடைய சிறுமையானவர்களின் பிராணனை என்றைக்கும் மறந்திராதேயும்.

௨௰ உம்முடைய உடம்படிக்கையை நினைத்தருளும்; ஏனெனில் பூமியில் இருளான இடங்கள் கொடுமைக் குடியிருப்புகளால் நிறைந்திருக்கின்றன.

௨௧ நொருங்குண்டவன் நாணத்தோடே திரும்பாமல், சிறுமையானவனும் எளிமையானவனும் உம்முடைய நாமத்தைத் துதிப்பார்களாக.

௨௨ பராபரனே, நீர் எழும்பி உம்முடைய வழக்கை வழக்காடும்; பயித்தியக்காரனாலே நாள்தோறும் உமக்கு வரும் நிந்தையை நினையும்.

௨௩ உம்முடைய சத்துருக்களின் கூக்குரலை மறவாதிரும்; உமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களின் அமளி எப்போதும் அதிகரிக்கிறது.

## ௭௫. சங்கீதம்.

(தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும், இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

உம்மைத் துதிக்கிறோம்; பராபரனே, உம்

மைத் துதிக்கிறோம்; உம்முடைய நாமம் சமீபமாயிருக்கிறது; உம்முடைய அதிசயங்களைச் சொல்லிவருகிறார்கள்.

௨ நியமிக்கப்பட்டதை நான் அடையும்போது, நான் உத்தம நிதானமாய் நியாயந்தீர்ப்பேன்.

௩ பூமியும், அதின் எல்லாக் குடிகளும் இளகிப்போனாற்போலே ஆயிற்று; நான் அதின் தூண்களை நிலைநிறுத்துவேன்; சேலா.

௪ ¶ வீம்புக்காரருடனே வீம்பு சொல்லாதிருங்களென்றும், ஆகாதவர்களுடனே கொம்புகளை ஏறெடுக்காதிருங்களென்றும் சொன்னேன்.

௫ உங்கள் கொம்புகளை உயரமாயெடுக்காதிருங்கள்; பெருமைக் கழுத்தினால் கடினமாய்ப் பேசாதிருங்கள்.* *சங். ௩௧.௰௬.

௬ ஏனெனில் கிழக்கிலாகிலும், மேற்கிலாகிலும், மலைகளின் வனாந்தரத்திசையிலாகிலுமிருந்து உங்களுக்குச் செயம்வராதென்றேன்.

௭ ஏனென்றால் பராபரனே நியாயாதிபதி, இவனைத் தாழ்த்தி அவனை உயர்த்துகிறார்.* *௧ சாமு. ௨. ௭, ௮.

௮ ஏனெனில் மிகுதியும் கலங்கிப் பொங்குகிற மதுபானத்தினாலே நிறைந்த பாத்திரம் கர்த்தருடைய கையில் இருக்கிறது; அதிலிருந்து வார்க்கிறார்; ஆனால் பூமியிலுள்ள ஆகாதவர்கள் அனைவரும் அதின் வண்டல்களை உறிஞ்சிக் குடிப்பார்கள்.

௯ ¶ நானோவெனில் என்றைக்கும் இதை அறிவித்து, யாக்கோபுடைய பராபரனைக் கீர்த்தனம்பண்ணி,

௰ ஆகாதவர்களின் கொம்புகளை எல்லாம் வெட்டுவேன்; நீதிமானுடைய கொம்புகளோ உயர்த்தப்படும்.

## ௭௬. சங்கீதம்.

(கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

யூதாவில் பராபரன் அறியப்பட்டவர்; இஸ்ரவேலில் அவருடைய நாமம் பெரியது.

௨ சாலேமில் அவருடைய கூடாரமும், சீயோனில் அவருடைய வாசஸ்தலமும் இருக்கிறது.

௩ அங்கேயிருந்து வில்லின் அம்புகளையும், கேடயத்தையும், பட்டயத்தையும், யுத்தத்தையும் முறிக்கிறார்; சேலா.

௪ ¶ மகத்துவமானவரே, கொள்ளையிடுகிற மலைகளைப்பார்க்கிலும் தேவரீர் பிரகாசமுள்ளவர்.

௫ வீரிய நெஞ்சுள்ளவர்கள் கொள்ளையாய்ப்போனார்கள், தங்கள் நித்திரையை அடைந்து அயர்ந்தார்கள்; வல்லமையுள்ள எல்லா மனிதருடைய கைகளும் அவர்களுக்குக் கவ்வைக்கு வராதேபோயின.

௬ யாக்கோபின் பராபரனே, உம்முடைய உதம்புதலால், இரதங்களும் குதிரைகளும் உறங்கிவிழுந்தன.

௭ நீர், நீரே பயங்கரமானவர்; உமது கோபம் பற்றி எரிகிறதுமுதல் யார் உமக்குமுன்பாக நிற்பான்.

௮ வானங்களிலிருந்து நியாயத்தீர்ப்பைக் கேட்கப்பண்ணினீர்.

௯ பூமியிலுள்ள எல்லாச் சிறுமையானவர்களையும் இரட்சிக்க, பராபரன் நியாயம்விசாரிப்பதற்கு எழும்புகையில் பூமி பயந்து அமர்ந்தது; சேலா.

௰ ¶ ஏனெனில் மனிதனுடைய உக்கிரம் உமது மகிமையை விளங்கப்பண்ணும்; இன்னம் அதிக உக்கிரங்களால் இடைகட்டிக்கொள்ளுவீர்.

௰௧ உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்தனைகளைச் சொல்லிச் செலுத்துங்கள்; அவரைச் சூழ்ந்திருக்கிற அனைவரும் பயங்கரமானவருக்குக் காணிக்கைகளைக் கொண்டுவரக்கடவார்கள்.

௰௨ பிரபுக்களின் ஆவியைத் தறிக்கிறார்; பூமியின் இராசாக்களுக்கு அவர் பயங்கரமானவர்.

## எஎ. சங்கீதம்.

(எதித்துனென்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நான் பராபரனுக்கு நேராக என் சத்தத்தை உயர்த்திக் கூப்பிடுகிறேன்; என் சத்தத்தைப் பராபரனண்டைக்கு உயர்த்துகிறேன்; அவர் எனக்குச் செவிகொடுக்கிறார்.

௨ என் நெருக்கத்தின்நாளிலே ஆண்டவரைத் தேடினேன்; என் கை இராக்காலத்திலே ஒழிந்திராமல் விரிக்கப்பட்டிருந்தது; என் ஆத்துமா ஆறுதலடைந்துகொள்ளாதேபோயிற்று.* *சங். ௫௰. ௰௫.

௩ நான் பராபரனை நினைக்கும்போது அலறினேன்; நான் யோசிக்கும்போது என் ஆவி தொய்ந்துபோயிற்று; சேலா.

௪ என் கண்களின் இமைகளைப் பிடித்திருந்தீர்; நான் பேசமாட்டாதபடிக்கு மனமுறிதலாயிருந்தேன்.

௫ ¶ பூர்வநாள்களையும் ஆதிகாலத்து வருஷங்களையும் சிந்தித்தேன்.* *சங்.௱௪௩.௫.

௬ நான் இராக்காலத்தில் என் கின்னரங்களை நினைத்து, என் இருதயத்தோடே சம்பாஷித்துக்கொண்டேன்; என் ஆவி ஆராய்ந்ததாவது:

௭ ஆண்டவர் இனி அப்புறம் தயைசெய்யாமல், நித்தியகாலங்களாக ஒழித்துவிடுவாரோ?

௮ அவருடைய கிருபை என்றென்றைக்கும் அற்று, வாக்குத்தத்தமானது தலைமுறைதலைமுறைக்கும் ஒழிந்துபோயிற்றோ?

௯ பராபரன் இரங்க மறந்தாரோ? தம்முடைய இரக்கங்களைக் கோபத்தினால் அடைத்துப்போட்டாரோ என்றேன்; சேலா.

௰ ¶ ஆனால் இது பெலஇனப்படும் வகை; காரியத்தின் மாறுதல் உன்னதமானவருடைய வலதுகரத்திலிருக்கிறதென்று சொல்லி,

௰௧ கர்த்தருடைய செயல்களை நினைவுகூர்ந்தேன்; உம்முடைய பூர்வகாலத்து அதிசயங்களைத்தானே நான் நினைவுகூர்ந்து,

௰௨ உம்முடைய எல்லாக் கிரியைகளையும் தியானித்து, உம்முடைய செயல்களை யோசித்தேன்.

௰௩ ¶ பராபரனே, உமது வழி பரிசுத்தஸ்தலத்திலுள்ளது; பராபரனைப்போலப் பெரிய தேவன் யார்?

௰௪ அதிசயங்களைச் செய்கிற பராபரன் தேவரீரே, சனசதளங்களுக்குள்ளே உம்முடைய வல்லமையைத் தெரியப்பண்ணினீர்.

௰௫ யாக்கோபு யோசேப் என்றவர்களின் புத்திரராகிய உம்முடைய சனத்தை உமது புயத்தினாலே மீட்டுக்கொண்டீர்; சேலா.

௰௬ சலங்கள் உம்மைக் கண்டன; பராபரனே, சலங்கள் உம்மைக் கண்டு தத்தளித்தன; ஆழங்களும் குலுங்கின.

௰௭ மேகங்கள் சலங்களைப் பொழிந்துவிட்டன; ஆகாயமண்டலங்கள் முழக்கமிட்டன; உம்முடைய அம்புகளும் தெரிப்புண்டு பறந்தன.* *சங். ௰௮. ௰௨–௰௬.

௰௮ உம்முடைய குமுறலின் சத்தம் வட்டமிட்டு முழங்கிற்று; மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்பித்தன; பூமி குலுங்கி அதிர்ந்தது.

௰௯ உம்முடைய வழி கடலிலும், உமது பாதைகள் வலுதண்ணீர்களிலும் இருந்தன; உம்முடைய காலடிகள் தெரியப்படாதே போயின.

௨௰ மோசே ஆரோன் என்றவர்களின் கையால், உமது சனத்தை ஒரு ஆட்டுமந்தையைப்போலே வழிநடத்தினீர்.

## எஅ. சங்கீதம்.

(ஆசாபின் போதகசங்கீதம்.)

என் சனமே, என் உபதேசத்திற்குக் கேள்விகொடுத்து, என் வாயின் வசனங்களுக்கு உங்கள் செவிகளைச் சாயுங்கள்.

௨ என் வாயை உவமைகளால் திறப்பேன்;

பூர்வகாலமுதல் புதைபொருளானவைகளை வெளிப்படுத்துவேன்.* *சங். ௪௯. ௫. மத். ௰௩. ௩௫.

௩ நாங்கள் கேட்டதும், அறிந்ததும், எங்கள் பிதாக்கள் எங்களுக்குச் சொல்லிவந்ததுமான விசேஷங்களை,

௪ நாங்கள் அவர்களுடைய பிள்ளைகளுக்கு மறைக்காமல், கர்த்தரின் துதிகளையும், அவருடைய பெலத்தையும், அவர் செய்த அவருடைய அதிசயங்களையும் பின்சந்ததிக்கு விவரிப்போம்.

௫ ¶ ஏனெனில் அவர் யாக்கோபிலே சாட்சியை ஏற்படுத்தி, இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்து, அதைத் தங்கள் பிள்ளைகளுக்கு அறிவிக்க நம்முடைய பிதாக்களுக்குக் கற்பித்தார்.

௬ பிறக்கப்போகிற பிள்ளைகளாகிய பின்சந்ததி அதை அறிந்துகொண்டு, எழும்பி, தங்கள் பிள்ளைகளுக்கும் சொல்லவும்,

௭ பராபரன்மேலே தங்கள் நம்பிக்கையை வைத்து, பராபரனுடைய செயல்களை மறவாமல், அவர் கற்பனைகளைக் கைக்கொள்ளவும்,

௮ முரட்டாட்டமும் கலகமுமுள்ள சந்ததியாகிய தங்கள் பிதாக்களுக்கு ஒப்பாகாதிருக்கவுந்தானே; அவர்கள் தங்கள் இருதயத்தைச் செம்மைப்படுத்தாத சந்ததியாயிருந்தார்கள்; அவர்களுடைய ஆவி பராபரனுடனே உண்மையாயிருந்ததில்லை.*

*௫ மோ. ௩௨. ௫, ௬.

௯ ஆயுதம் அணிந்த வில்காரரான எப்பிராயீம் புத்திரர் யுத்தநாளிலே முதுகைக் காட்டினார்கள்.

௰ பராபரனுடைய உடம்படிக்கையைக் கைக்கொள்ளாமல், அவர் நியாயப்பிரமாணத்திலே நடக்கமாட்டோமென்று,

௰௧ அவர் செயல்களையும் அவர் தங்களுக்குக் காண்பித்த அவருடைய அதிசயங்களையும் மறந்தார்கள்.

௰௨ அவர்களுடைய பிதாக்களின்முன்பாக எகிப்துதேசத்துச் சோகான் பட்டணவெளியிலே அதிசயங்களைச் செய்தார்.

௰௩ கடலைப் பிளந்து, அவர்களைக் கடக்கப்பண்ணி, சலங்களைக் குவியலாக நிறுத்தி,

௰௪ அவர்களைப் பகல்காலத்திலே மேகத்தாலும் இராமுழுவதும் அக்கினி வெளிச்சத்தாலும் வழிகாட்டி அழைத்தார்.

௰௫ வனாந்தரத்தில் கல்மலைகளைப் பிளந்து, அவர்களுக்கு மகா ஆழங்களுக்குச் சரியான தண்ணீர்களால் தாகம் தீர்த்து,

௰௬ கல்மலையிலிருந்து நதிகளைப்புறப்படப்பண்ணி, தண்ணீர்களை ஆறுகளாய் இறங்கி ஓடவிட்டார்.

௰௭ ¶ ஆனால் அவர்கள் அப்புறம் அவருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யவும், உன்னதமானவருக்கு வரண்டவெளியிலே கோபமூட்டவும் தொடர்ந்து,

௰௮ தங்கள் மனதுக்கேற்கும் போசனத்தைக் கேட்கிறதினால் பராபரனைத் தங்கள் இருதயங்களில் பரிட்சைபார்த்து,*

*௪ மோ. ௰௧. ௪—௬.

௰௯ பராபரன் வனாந்தரத்திலே பந்தியை ஆயத்தப்படுத்தமாட்டுவாரோ என்றும்,

௨௰ இதோ அவர் கல்மலையை அடித்ததினால் தண்ணீர்கள் புறப்பட்டு நதிகளாய்ப் புரண்டுவந்தன; அப்பத்தையும் கொடுக்கமாட்டுவாரோ? தம்முடைய சனத்துக்கு மாம்சத்தையும் ஆயத்தப்படுத்துவாரோ என்றும் பராபரனுக்கு விரோதமாய்ப் பேசினார்கள்.

௨௧ ¶ ஆகையால் கர்த்தர் கேட்டு உக்கிரமானார்; யாக்கோபுக்கு விரோதமாய் அக்கினி பற்றியெரிந்தது.

௨௨ அவர்கள் பராபரன்மேல் விசுவாசியாமலும் அவர் இரட்சிப்பை நம்பாமலும் போனதினாலே, இஸ்ரவேலுக்கு விரோதமாகக் கோபம் எழும்பிற்று.

௨௩ அவர் உயரவிருக்கும் ஆகாய மேகங்களுக்குக் கற்பித்து, வானங்களின் கதவுகளைத் திறந்து,

உச அவர்கள்மேல் மன்னாவை ஆகாரமாக வருஷிக்கப்பண்ணி,வானதானியத்தை அவர்களுக்குக் கொடுத்தார்.

உரு வல்லவர்களின் அப்பத்தை ,அவனவன் சாப்பிட்டான்; அவர்களுக்குப் பரிபூரண ஆகாரத்தை அனுப்பினார்.

உசு ¶ ஆகாயத்திலே கிழக்காற்றை வரப்பண்ணி, தம்முடைய வல்லமையினாலே தென்றலையும் எடுத்துவந்து,

உஎ அவர்கள்மீதில் மாம்சத்தைத் தூளத்தனையும், செட்டையுள்ள பட்சிகளைக் கடல்களை மணலத்தனையுமாய் வருஷிக்கப்பண்ணி,

உஅ அவைகளை அவர்கள் நடுப்பாளயத்திலேஅவர்கள் கூடாரங்களைச் சுற்றிலும் இறங்கப்பண்ணினார்.

உகூ அவர்கள் புசித்து மிகவும் திருப்தியானார்கள்; அவர்களுடைய இச்சையை அவர்களுக்கு நிறைவேற்றினார்.

௩ய ¶ அவர்கள் தங்கள் இச்சையை வெறுக்காதிருந்தார்கள்; அவர்களுடைய போசனம் இன்னம் அவர்கள் வாயில் இருக்கையில்,

௩க பராபரனுடைய கோபம் அவர்கள்மேல் எழும்பி, அவர்களில் கொழுத்தவர்களுக்குள்ளே அவர் சங்காரம் செய்து, இஸ்ரவேலில் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை மடியப்பண்ணினார்.* *ச மோ. யக. ௩௩.

௩உ ¶ இப்படியெல்லாம் இருந்தும் அவர்கள் இன்னம் அவருடைய அதிசயங்களை நம்பாமல் பாவம்செய்தார்கள்.

௩௩ ஆனதுகொண்டு அவர்கள் நாள்களை மாயையிலும், அவர்கள் வருஷங்களைப் பயங்கரத்திலும் கழியப்பண்ணினார்.

௩ச ¶ தங்களை அவர் கொல்லும்போது, அவர்கள் அவருக்காக விசாரித்து, திரும்பிக்கொண்டு, பராபரனைக் காலமே தேடி,

௩ரு பராபரன் தங்கள் கன்மலை என்றும், உன்னதமான பராபரன் தங்கள் மீட்பரென்றும் நினைவுகூர்ந்து,

௩௬ தங்கள் வாயினாலே அவருக்கு இச்சகம்பேசி, தங்கள் நாவுகளினாலே பொய் சொன்னார்கள்.

௩எ ஏனெனில் அவர்கள் இருதயம் அவரோடே நிலைவரமாயிருந்ததில்லை; அவருடைய உடம்படிக்கையில் அவர்கள் உண்மையாயிருக்கவில்லை.

௩அ ¶ அவரோ இரக்கமாயிருந்து, அவர்களை அழிக்காதபடிக்கு, அவர்கள் அக்கிரமத்தை மூடி, தம்முடைய எல்லா உக்கிரத்தையும் எழுப்பாமல் அநேகந்தரம் தமது கோபத்தை விலக்கி,

௩கூ இவர்கள் மாம்சமும், திரும்பிவராமல் அகலுகிற காற்றுமாயிருக்கிறார்களென்று நினைவுகூர்ந்தார்.

சய ¶ எத்தனைவிசை அவருக்கு வனாந்தரத்திலே கோபமூட்டி, அவாந்தரவெளியிலே அவருக்கு நோகநடந்தார்கள்.

சக அடிக்கடி பராபரனைப் பரிட்சைபார்த்து, இஸ்ரவேலின் பரிசுத்தரை மட்டுத்திட்டப்படுத்தினார்கள்.

சஉ அவருடைய கரத்தையும் அவர் எகிப்தில் தம்முடைய அடையாளங்களையும், சோகான் பட்டணவெளியிலே தம்முடைய அற்புதங்களையும் செய்து,

ச௩ தங்களைச் சத்துருவுக்கு விலக்கி மீட்டநாளையும் இவர்கள் நினையாதேபோனார்கள்.

சச அவர்களுடைய நதிகளையும், அவர்களுடைய ஆறுகளையும், அவர்கள் அவைகளில் குடிக்கக் கிடையாதபடிக்கு இரத்தமாக மாற்றினார்.

சரு அவர்களைத் தின்னும் வண்டுச்சாதிகளையும், அவர்களைக் கெடுக்கும் தவளைகளையும் அவர்களுக்குள் அனுப்பி,

சசு அவர்கள் பலனைப் பச்சைப் புழுக்களுக்கும், அவர்கள் பிரயாசத்தை வெட்டுக்கிளிகளுக்கும் கொடுத்தார்.

சஎ அவர்களுடைய கொடிமுந்திரிகைச் செடிகளைக் கல்மழைகளினாலும், அவர்கள்

முசுக்கட்டைமரங்களை ஆலாங்கட்டியினாலும் அழித்து,

௪௮ அவர்கள் மிருகஜீவன்களைக் கல்மழைக்கும், அவர்கள் ஆடுமாடுகளை இடிகளுக்கும் ஒப்புக்கொடுத்தார்.

௪௯ தமது கோபத்தின் உக்கிரத்தையும், மூர்க்கத்தையும், சினத்தையும், நெருக்கத்தையும், தீங்குசெய்ய விடப்பட்ட தூதர்களையும் அவர்களுக்குள் அனுப்பினார்.

௫௰ தம்முடைய கோபத்துக்கு வழியைச் சரிப்பிடித்தார்; அவர்கள் ஆத்துமாவை அவர் மரணத்திற்கு விலக்கிக் காக்காமல், அவர்கள் ஜீவனை அவர் பெருவாரிக்காய்ச்சலுக்கு ஒப்புக்கொடுத்து,

௫௧ காமின் கூடாரங்களாகிய எகிப்திலே தலைச்சன்களாயிருந்த முதல்பேறு யாவையும் அழித்து,

௫௨ தம்முடைய சனத்தை ஆடுகளைப்போலே புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்தரத்திலே மந்தையைப்போல கூட்டிக்கொண்டுவந்து,

௫௩ அவர்களைப் பத்திரமாய்ப் பயப்படாதபடிக்கு நடத்தினார்; ஆனால் அவர்கள் சத்துருக்களைக் கடல் மூடிப்போட்டது.

௫௪ அவர்களைத் தம்முடைய பரிசுத்த எல்லைமட்டுக்கும், தம்முடைய வலதுகரம் சம்பாதித்த இந்தப் பருவதம்மட்டுக்கும் அழைத்துவந்து,

௫௫ அவர்கள் முகத்துக்குமுன்பாகச் சாதிகளைத் துரத்திவிட்டு, இவர்கள் தேசத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடுவித்து, இஸ்ரவேலின் கோத்திரங்களை இவர்களுடைய கூடாரங்களில் குடியேற்றினார்.

௫௬ ¶ ஆகிலும் அவர்கள் உன்னதமான பராபரனைப் பரிட்சைபார்த்து, அவருக்குக் கோபமூட்டி, அவருடைய சாட்சிகளைக் கைக்கொள்ளாமல் போய்,

௫௭ தங்கள் பிதாக்களைப்போல வழிவிலகித் துரோகம்பண்ணி மோசம்போக்கும் வில்லைப்போலத் துவண்டு,* *ஓசே.௭.௰௬.

௫௮ அவருக்குத் தங்கள் மேடைகளாலே கோபத்தையும், தங்கள் சுரூபங்களாலே எரிச்சலையும் உண்டாக்கினார்கள்.

௫௯ ¶ பராபரன் அதைக்கேட்டு உக்கிரமாகி, இஸ்ரவேலை மிகவும் வெறுத்து,

௬௰ தாம் மனுஷருக்குள்ளே போட்ட கூடாரமாகிய சீலோவிலுள்ள வாசஸ்தலத்தை நெகிழ்ந்து,* *௧ சாமு. ௪. ௪–௰௧.

௬௧ அவர்கள் பெலத்தைச் சிறையிருப்பிலும், அவர்கள் மகிமையைச் சத்துருவின் கையிலும் ஒப்புக்கொடுத்து,*

* ௧ சாமு. ௫. ௧, ௨.

௬௨ தம்முடைய சனத்தைப் பட்டயத்திற்கு இரையாக்கிவிட்டு, தமது சுதந்தரத்திற்கு விரோதமாய் உக்கிரமானார்.

௬௩ அவர்கள் இளைஞரை அக்கினி பட்சித்தது; அவர்கள் கன்னியாஸ்திரிகள் வாழ்க்கைப்படாதிருந்தார்கள்.

௬௪ அவர்கள் ஆசாரியர்கள் பட்டயத்தால் விழுந்தார்கள்; அவர்கள் விதவைகள் அழுததில்லை.

௬௫ ¶ அப்போது ஆண்டவர் நித்திரை தெளிந்தவனைப்போலவும், மதுபானத்தால் கெம்பீரிக்கிற பராக்கிரமசாலியைப்போலவும் விழித்து,

௬௬ தம்முடைய சத்துருக்களைப் பின்புறமாக அடிப்படுத்தி, அவர்களுக்குநித்திய நிந்தையைவரப்பண்ணினார்.* *௧சாமு.௫.௬.

௬௭ ஆனால் அவர் யோசேப்பின் கூடாரத்தைப் புறக்கணித்து, எப்பிராயீம் கோத்திரத்தைத் தெரிந்துகொள்ளாமல்,

௬௮ தாம் சிநேகித்த சீயோன் பருவதமிருக்கிற யூதா கோத்திரத்தைத் தெரிந்துகொண்டு,

௬௯ தம்முடைய பரிசுத்தஸ்தலத்தை உயர்ந்த மேடுகளாகவும், என்றைக்கும் நிற்கத் தாம் அஸ்திவாரப்படுத்தின பூமியைப்போலாகவும் கட்டி,

௭௰ தம்முடைய தாசனாகிய தாவீதைத் தெரிந்து, அவனை ஆட்டுத்தொழுவங்களி

விருந்து எடுத்துக்கொண்டார்.* *௧ சாமு. ௰௬. ௧–௰௩.

௭௧ கறவல் ஆடுகளின் பிறகாலே நடந்த அவனைத் தம்முடைய சனமாகிய யாக்கோபையும், தம்முடைய சுதந்தரமாகிய இஸ்ரவேலையும் மேய்ப்பதற்காக அழைத்துக்கொண்டுவந்தார்.

௭௨ இவன் அவர்களைத் தன் இருதயத்தினுடைய உண்மையின்படியே மேய்த்து, அவர்களைத் தன் கைகளுடைய வினாவினால் நடத்தினான்.

## ௭௯. சங்கீதம்.

(ஆசாபின் சங்கீதம்.)

பராபரனே, புறச்சாதியார் உம்முடைய சுதந்தரத்தில் வந்து, உமது பரிசுத்த தேவாலயத்தைத் தீட்டுப்படுத்தி, எருசலேமை மண்மேடுகளாக்கிவிட்டார்கள்.

௨ உம்முடைய ஊழியக்காரரின் பிரேதங்களை ஆகாயத்துப் பறவைகளுக்கும், உம்முடைய பரிசுத்தவான்களின் மாம்சத்தைப் பூமியின் மிருகங்களுக்கும் இரையாகக் கொடுத்தார்கள்.

௩ எருசலேமைச் சுற்றிலும் தண்ணீரைப்போல அவர்களுடைய இரத்தத்தைச் சிந்திவிட்டார்கள்; அடக்கம்பண்ணுவாருமில்லை.

௪ எங்கள் அயலாருக்கு நிந்தையும், எங்கள் சுற்றுப்புறத்தாருக்குப் பரியாசமும் சக்கந்தமுமானோம்.* *சங். ௪௪. ௰௪: ௮௰. ௭.

௫ ¶ எந்தமட்டும் கர்த்தாவே, என்றென்றைக்கும் கோபமாயிருப்பீரோ? எந்தமட்டும் உம்முடைய எரிச்சல் அக்கினியைப்போல எரியும்?* *சங். ௮௫. ௯: ௮௯. ௪௭.

௬ உம்மை அறியாத சாதிகள்மேலும், உமது நாமத்தைத் தொழுதுகொள்ளாத இராச்சியங்கள்மேலும் உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும்.* *எரே. ௰. ௨௫.

௭ ஏனெனில் யாக்கோபைப் பட்சித்து, அவன் குடியிருப்பைப் பாழாக்கினார்கள்.

௮ ¶ எங்கள் முந்தின அக்கிரமங்களை நினையாதிரும்; தீவிரமாய் உம்முடைய இரக்கங்கள் எங்களுக்கு நேரிட்டுவரக்கடவன; ஏனெனில், மெத்தவும் குறுகிப்போனோம்.* *ஏசா. ௬௪. ௯.

௯ எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் உமது நாமத்தினுடைய மகிமையின்நிமித்தமாக எங்களுக்கு ஒத்தாசைசெய்து, எங்களைத் தப்புவித்து, உமது நாமத்தின்நிமித்தமாக எங்கள் பாவங்களை நிவிர்த்தியாக்கும்.

௰ அவர்களுடைய பராபரன் எங்கேயென்று புறச்சாதிகள் சொல்லுவானேன்? உம்முடைய ஊழியக்காரருடைய சிந்துண்ட இரத்தத்தின் பழிவாங்குதல் சாதிகளுக்குள்ளே எங்கள் கண்களுக்குமுன்பாகத் தெரியப்படக்கடவது.* *சங். ௱௰௫. ௨. யோபு. ௨. ௰௭.

௰௧ ¶ கட்டுண்டவனுடைய பெருமூச்சு உமக்குமுன்பாக வரட்டும்; கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களை நீர் உமது புயபெலத்தினுடைய பெருக்கத்தின்படியே உயிரோடே காப்பாற்றும்.

௰௨ ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மை நிந்தித்த நிந்தையை அவர்களுக்கு ஏழத்தனையாக அவர்கள் மடியிலே திரும்பப்பண்ணும்.

௰௩ அப்படியே உம்முடைய சனமும் உம்முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நாங்கள் உம்மை என்றென்றைக்கும் புகழுவோம்; தலைமுறைதலைமுறையாக உமது துதியைச் சொல்லிவருவோம்.

## ௮௰. சங்கீதம்.

(சாட்சியை விளக்குவிக்கும் ஆருசாம்பிலே பாடி இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

இஸ்ரவேலின் மேய்ப்பரே, செவிகொடும்; யோசேப்பை ஆட்டுமந்தையைப்போலே நடத்துகிறவரே, கேருபீன்களின்மேல் வாசம்பண்ணுகிறவரே, பிரகாசியும்.* *௨ மோ. ௰௫. ௨௧: ௨௫. ௨௨.

௨ எப்பிராயீமுக்கும், பென்யமீனுக்கும், மனாசேயுக்கும்முன்பாக நீர் உமது வல்லமையை எழுப்பி, எங்களுக்கு இரட்சிப்பாக வாரும்.* *௪ மோ. ௨. ௰௭-௨௪; ௰. ௨௧-௨௪.

௩ பராபரனே, எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து, உம்முடைய முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும்; அப்போது இரட்சிக்கப்படுவோம்.* *சங். ௬௭. ௧.

௪ ¶ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, எந்தமட்டும் உமது சனத்தினுடைய செபத்துக்கு விரோதமாய்ப் புகைவீர்.

௫ கண்ணீரின் அப்பத்தை அவர்களுக்குப் புசிக்கவும், கண்ணீரை மகா பெரிய அளவாக அவர்களுக்குக் குடிக்கவுங்கொடுத்தீர்.* *சங். ௱௨. ௰.

௬ எங்களை எங்கள் அயலாருக்கு வழக்காக வைக்கிறீர்; எங்கள் சத்துருக்கள் தங்களுக்குள்ளே பரியாசம்பண்ணுகிறார்கள்.

௭ சேனைகளின் பராபரனே, எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து உம்முடைய முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும்; அப்போது இரட்சிக்கப்படுவோம்.

௮ ¶ ஒரு கொடிமுந்திரிகையை எகிப்திலிருந்து எடுத்துவந்தீர்; சாதிகளைத் துரத்திவிட்டு அதை நாட்டினீர்.

௯ அதற்குமுன்பாக இடமாக்கி, அதை வேர்தரிக்கப்பண்ணினீர்; அது தேசத்தைச் சூழ்ந்துகொண்டது.

௰ அதின் நிழலால் பருவதங்கள் மூடப்பட்டன; அதின் கொம்புகள் பராபரனுடைய கேதுருக்களைப்போலாயின.

௰௧ தன் கொடிகளைச் சமுத்திரம்மட்டாகவும், தன் கிளைகளை நதிமட்டாகவும்விட்டது.

௰௨ இப்போதும் வழிநடக்கிற யாவரும் அதை ஒடிக்க அதின் அடைப்புகளை ஏன் தகர்த்துவிட்டீர்.* *சங். ௮௯. ௪௨.

௰௩ காட்டுப்பன்றி அதை உழுதுபோட்டு, வெளியின் மிருகங்கள் அதைப் பட்டிமேய்ந்தது.

௰௪ ¶ சேனைகளின் பராபரனே, திரும்பி வாரும்; நீர் வானங்களிலிருந்து கண்ணோக்கிப்பார்த்து, இந்தக் கொடிமுந்திரிகைச் செடியையும்,

௰௫ உம்முடைய வலதுகரம் நாட்டின கிளையையும் உமக்கு நீர் திடப்படுத்தின குமாரனின் நிமித்தமாக விசாரியும்.* *2 சாமு. ௭. ௰௨-௰௬.

௰௬ அக்கினியால் சுடப்பட்டும், வெட்டுண்டும்போயிற்று; உம்முடைய முகத்தின் உதம்புதலால் அழிந்துபோகிறார்கள்.

௰௭ உமது கரம் உமது வலதுபாரிசத்துப் புருஷன்மீதிலும், உமக்கு நீர் திடப்படுத்தின மனுஷகுமாரன்மீதிலும் இருப்பதாக.

௰௮ ¶ அப்போது உம்மை விட்டுவிலகோம்; எங்களை உயிர்ப்பியும், அப்போது உமது நாமத்தைத் தொழுதுகொள்ளுவோம்.

௰௯ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, எங்களைத் திருப்பிக்கொண்டுவாரும்; உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும்; அப்போது இரட்சிக்கப்படுவோம்.

## ௮௧. சங்கீதம்.

(கித்தித்தில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நம்முடைய பெலனாகிய பராபரனைக் கெம்பீரித்துப் பாடி, யாக்கோபின் பராபரனுக்கென்று ஆர்ப்பரியுங்கள்.

௨ கீதமெடுத்து மேளத்தையும், இன்ப ஓசையான சுரமண்டலத்தையும், தம்புருவோடுங்கூடத் தாருங்கள்.

௩ மாதப்பிறப்பிலும், நம்முடைய திட்டமான பண்டிகை நாளிலும் எக்காளம் ஊதுங்கள்.* *௩ மோ. ௨௩. ௨௪.

௪ ¶ ஏனெனில் அவை இஸ்ரவேலுக்குப் பிரமாணமும், யாக்கோபுடைய பராபரனின் நியாயமுமாயிருக்கின்றன.

௫ நாம் அறியாத பாஷையைக் கேட்ட எகிப்துதேசத்துக்கு விரோதமாக அவர் எழும்பிப் புறப்படுகையில், யோசேப்பிலே அதைச் சாட்சியாக ஏற்படுத்தினார்.

௬ ¶ அவன் தோளைச் சுமைக்கு விலக்கினோம்; அவன் கைகள் கூடைக்கு நீங்கலாய்ப் போயின.

௭ நெருக்கத்திலே கூப்பிட்டாய், அப்போது உன்னைத் தப்புவித்தோம்; குமுறலின் மந்தாரத்திலிருந்து உனக்கு மறுஉத்தரவை அருளிச்செய்தோம்; மெரிபாவின் தண்ணீர்களிடத்தில் உன்னைச் சோதித்தறிந்தோம்; சேலா.

௮ நம்முடைய சனமே கேள், உனக்குள் சாட்சியிடுவோம்; இஸ்ரவேலே, நீ நம்முடைய சொல்கேட்டால் தாவிலை.

௯ உனக்குள் வேற்றுத்தேவன் உண்டாயிருக்கவேண்டாம்; நீ அந்நியதேவனை நமஸ்கரிக்கவும்வேண்டாம்.

௰ உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறப்பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் நாமே, உன் வாயை விரிவாய்த்திற, நாம் அதை நிரப்புவோம் என்றோம்.* *௨ மோ.௨௰.௨.

௰௧ ஆனால் நம்முடைய சனம் நம்முடைய சத்தத்தைக் கேட்டதில்லை; இஸ்ரவேல் நம்மை விரும்பினதில்லை.

௰௨ ஆகையால் அவர்களை அவர்கள் இருதயத்தின் கடினத்துக்கு விட்டோம்; தங்கள் யோசனைகளிலே நடந்தார்கள்.

௰௩ ¶ ஆ நமது சனம் நம்முடைய சொல்கேட்டு, இஸ்ரவேல் நம்முடைய வழிகளில் நடந்தால் தாவிலை.

௰௪ நாம் கொஞ்சக்காலத்திலே அவர்கள் எதிராளிகளைத் தாழ்த்தி, நம்முடைய கையை அவர்கள் சத்துருக்களுக்கு விரோதமாகத் திருப்புவோமே.

௰௫ அப்போது கர்த்தரைப் பகைக்கிறவர்கள் அவர்களுக்கு இதம்பேசி அடங்குவார்கள்; அவர்கள் காலம் என்றென்றைக்கும் இருக்கும்.

௰௬ கோதுமையின் புஷ்டியால் அவர்களைப் போஷிப்பார்; கன்மலையின் தேனினாலே உன்னைத் திருப்தியாக்குவோம்.*
* சங். ௱௪௭. ௰௪.

## ௮௨. சங்கீதம்.

(ஆசாபின் சங்கீதம்.)

பராபரன் தேவசபையிலே நின்றிருக்கிறார்; தேவர்களின் நடுவிலே அவர் விசாரிக்கிற நியாயமாவது:

௨ எந்தமட்டும் நீதிகேடாய் நியாயந்தீர்த்து, ஆகாதவர்களின் முகமாட்டம் பார்ப்பீர்கள்; சேலா.

௩ தரித்திரனுக்கும், திக்கற்றவனுக்கும் நியாயம்பண்ணி, சிறுமையானவனுக்கும் ஏழைக்கும் நீதிசெய்யுங்கள்.* *ஏசா.௧.௰௭.

௪ தரித்திரனையும் எளியவனையும் விடுவித்து, அவர்களை ஆகாதவர்களின் கைக்குத் தப்புவியுங்கள்.

௫ ¶ அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்; அந்தகாரத்திலே நடக்கிறார்கள்; தேசத்தின் அஸ்திவாரங்களெல்லாம் அசைகின்றன.* *சங். ௨. ௰.

௬ நீங்கள் தேவர்களென்றும், நீங்களனைவரும் உன்னதமானவரின் மக்களென்றும் நாம் சொன்னோம்.* *௨ மோ. ௨௧. ௬, ௨௨, ௨௮. யோவா. ௰. ௩௪.

௭ ஆகிலும் நீங்கள் மனுஷரைப்போலே செத்து, லோகப்பிரபுக்களில் ஒவ்வொருவனைப்போலே விழுந்துபோவீர்களென்றார்.

௮ ¶ பராபரனே, எழுந்திருந்து பூமியை நியாயந்தீரும்; ஏனெனில் தேவரீர் எல்லாச் சாதிகளையும் சுதந்தரமாக ஆண்டிருப்பவர்.* *சங். ௨. ௮.

## ௮௩. சங்கீதம்.

(ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

பராபரனே, சும்மாஇராதேயும்; பராபரனே, மவுனமும் அமரிக்கையுமாயிராதேயும்.* *சங். ௨௮. ௧.

௨ ஏனெனில் இதோ உம்முடைய சத்துருக்கள் கொந்தளித்து, உம்முடைய பகைஞர் தலையெடுக்கிறார்கள்.

௩ அவர்கள் உமது சனத்துக்கு விரோதமாகக் சர்ப்பனையோசனையாயிருந்து, உமது

மறைவிலிருக்கிறவர்களுக்கு விரோதமாக ஆலோசனைபண்ணுகிறார்கள்.

௪ நாம் அவர்களை அவர்கள் ஒரு சாதியாயிராமலும், இஸ்ரவேலின் பேர் இனி நினைக்கப்படாமலும் போவதற்காக அதம்பண்ணுவோம் வாருங்களென்கிறார்கள்.

௫ அதேதெனில் ஏதோமின் கூடாரத்தாரும், இஸ்மவேலரும், மோவாபும், ஆகாரியரும்,

௬ கேபாலும், அம்மோனும், அம்லேக்கும், தீருவின் குடிகளோடேகூடப் பெலிஸ்தியரும்,

௭ ஏகமான நிருணயமாய் ஆலோசனைபண்ணி, உமக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணினார்கள்.

௮ அசூரியரும் அவர்களோடேகூடக் கலந்து, லோத்தின் புத்திரருக்குப் புயபலமானார்கள்; சேலா.

௯ ¶ மீதியானியருக்கும் கீசோனென்ற ஆற்றண்டைஎந்தோரிலேஅழிக்கப்பட்டு,* *நியா. ௭. ௨௨.

௰ பூமிக்கு எருவாய்ப்போன சிசேராவுக்கும் யாபீனுக்கும் செய்ததுபோல அவர்களுக்கும் செய்யும்.* *நியா. ௪. ௰௫. ௲.

௰௧ அவர்களையும், அவர்கள் அதிபதிகளையும், ஓரேபுக்கும் சேபுக்கும், அவர்கள் பிரபுக்களை எல்லாம் சேபாகுக்கும் சல்முனாவுக்கும் சரியாக்கும்.* *நியா. ௭. ௨௫: ௮. ௰௨.—௨௧.

௰௨ ஏனெனில் பராபரனுடைய வாசஸ்தலங்களை நாம் எங்களுக்குச் சுதந்தரமாகக் சட்டிக்கொள்ளுவோமென்றார்கள்.

௰௩ என் பராபரனே, அவர்களைச் சுழல்காற்றின் புழுதிக்கும், காற்றுக் கொண்டுபோகும் துரும்புக்கும் சரியாக்கும்.

௰௪ காட்டை நெருப்புச் சுடுகிறதுபோலேயும், மலை வனங்களை அக்கினிச்சுவாலை எரித்துவிடுகிறதுபோலேயும்,

௰௫ நீர் அவர்களை உமது புசலினாலே தொடர்ந்து, உமது பெருங்காற்றினாலே அவர்களைக் கலங்கப்பண்ணும்.

௰௬ கர்த்தாவே, அவர்கள் உமது நாமத்தைத் தேடும்படிக்கு, அவர்கள் முகங்களைக் கனவீனத்தாலே மூடும்.

௰௭ தேவரீர் ஒருவர் உம்முடைய நாமத்தின்படியே, கர்த்தரும், பூமியனைத்தின்மேல் உன்னதமானவரும் என்கிறதை அவர்கள் உணர,

௰௮ அவர்கள் என்றைக்கும் வெட்கிக்கலங்கவும் நாணவும் அழியவுங்கடவர்கள்.

## ௮௰௪. சங்கீதம்.

(கித்தீத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரருக்குள்ள இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

௧ சேனைகளுடைய கர்த்தாவே, உம்முடைய வாசஸ்தலங்கள் எத்தனை இன்பமானவைகள்?

௨ என் ஆத்துமா கர்த்தருடைய பிராகாரங்களின்மேல், வாஞ்சையும், தவனமுமாயிருக்கிறது; என் இருதயமும், என் மாம்சமும் சீவனுள்ள பராபரனை நோக்கிக் கெம்பீர சத்தமிடுகின்றன.* *சங். ௨௬. ௮: ௨௭. ௪: ௪௨. ௧.

௩ அடைக்கலான் குருவிக்கு முதலாய் வீடும், தகைவிலான் குருவிக்குத் தன் குஞ்சுகளை வைக்கும் கூடும் கிடைக்கும்; என் இராசாவும் என் பராபரனுமாகிய சேனைகளுடைய கர்த்தாவே, உம்முடைய பீடங்களையே வாஞ்சித்திருக்கிறேன்.

௪ ¶ உம்முடைய வீட்டிலே வாசமாயிருந்து, எப்போதும் உம்மைத் துதிக்கிறவர்கள் பாக்கியவான்கள்; சேலா.

௫ உம்மிலே பெலன்கொள்ளுகிற மனுஷனும், தங்கள் இருதயங்களில் வழிகளைச் செவ்வையாக்கினவர்களும் பாக்கியவான்கள்.

௬ அழுகையின் பள்ளத்தாக்கை உருவக்கடந்து, அதை நீரூற்றாக்கிக்கொள்ளுகிறார்கள்; போதகனும் ஆசீர்வாதங்களால் மூடப்படுகிறான்.

௭ பராபரனுக்கு முன்பாகச் சீயோனிலே வந்து காணப்படும்மட்டும், பெலத்திலிருந்து பெலத்துப்போகிறார்கள்.

௮ ¶ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேளும்; யாக்கோபின் பராபரனே செவிகொடும்; சேலா.

௯ எங்கள் கேடயமாகிய பராபரனே, கண்ணோக்கமாயிரும்; நீர் அபிஷேகம்பண்ணினவரின் முகத்தைப்பாரும்.

௰ ஏனெனில் ஆயிரம் நாளைப்பார்க்கிலும் உம்முடைய பிரகாரங்களில் ஒரே நாள் நல்லது; ஆகாமியக் கூடாரங்களில் வாசமாயிருப்பதைப்பார்க்கிலும், என் பராபரனுடைய வீட்டின் வாசற்படியில் காப்பதையே தெரிந்துகொள்ளுவேன்.

௰௧ அதேதென்றால் பராபரனாகிய கர்த்தர், சூரியனும் கேடயமுமானவர்; கர்த்தர் கிருபையையும் மகிமையையும் அளிப்பார்; மனஉண்மையாய் நடக்கிறவர்களுக்கு நன்மையை வழங்காதிரார்.

௰௨ சேனைகளுடைய கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிற மனுஷன் பாக்கியவான்.* *சங். ௨௪. ௯.

## ௮௫. சங்கீதம்.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

கர்த்தாவே,உமது தேசத்தின்மேல் பிரியம் வைத்து, யாக்கோபின் சிறையிருப்பைத் திருப்பினீர்.

௨ உம்முடைய சனத்தின் அக்கிரமத்தை மன்னித்து, அவர்கள் பாவத்தை எல்லாம் மூடினீர்; சேலா.

௩ உம்முடைய உக்கிரத்தை எல்லாம் வாங்கிக்கொண்டு, உம்முடைய கோபத்தின் எரிச்சலைவிட்டுத் திரும்பினீர்.

௪ ¶ எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து, எங்கள்மேலுள்ள உமது தாங்கலை ஆறப்பண்ணும்.

௫ என்றென்றைக்கும்,எங்கள்மேல் கோபமாயிருப்பீரோ? தலைமுறைதலைமுறையாகவும் உமது கோபத்தை நீடித்திருக்கப்பண்ணுவீரோ?* *சங். ௭௭. ௮—௰: ௭௯. ௫.

௬ உம்முடைய சனம் உம்மில் மகிழ்ந்திருப்பதற்குத் தேவரீர் எங்களைத் திரும்ப உயிர்ப்பிப்பதில்லையோ?

௭ கர்த்தாவே, உம்முடைய கிருபையை எங்களுக்குக் காண்பித்து, உம்முடைய இரட்சிப்பை எங்களுக்குக் கட்டளையிடும்.

௮ ¶ கர்த்தராகிய பராபரன் என்ன விளம்புகிறாரென்று கேட்பேன்; ஏனெனில் அவருடைய சனமும் அவருடைய சன்மார்க்கரும் மதிகேட்டுக்குத் திரும்பாதபடிக்கு, அவர்களுக்குச் சமாதானம் தருவார்.

௯ ஆம், மகிமை நம்முடைய தேசத்தில் வாசமாயிருக்கும்படிக்கு அவருடைய இரட்சிப்பு அவருக்குப் பயந்தவர்களுக்குச் சமீபமாயிருக்கிறது.* *சங். ௱௪௫. ௰௮, ௰௯,

௰ கிருபையும், உண்மையும் ஒன்றுக்கொன்று சந்திக்கும்; நீதியும் சமாதானமும் ஒன்றுக்கொன்று முத்திசெய்யும்.

௰௧ உண்மை பூமியிலிருந்து முளைக்கும்; நீதி வானங்களிலிருந்து தாழப்பார்க்கும்.

௰௨ கர்த்தர் நன்மையும் கொடுப்பார்; எங்கள் தேசம் தன் பலனையும் தரும்.

௰௩ நீதி அவருக்குமுன்னாலே போம்; தமது அடிகளை வழியிலே வைப்பார்.

## ௮௬. சங்கீதம்.

(தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, உம்முடைய செவியைச் சாய்த்து என் விண்ணப்பத்தைக் கேளும்; ஏனெனில் நான் சிறுமையும் எளிமையுமானவன்.

௨ என் ஆத்துமாவைத் தற்காத்தருளும்; ஏனெனில் நான் பரிசுத்தன்; என் பராபரனே, உம்மை நம்பியிருக்கிற உம்முடைய அடியானைத் தேவரீர் இரட்சியும்.

௩ ஆண்டவரே, எனக்கு இரங்கும்; ஏனெ

ணில் நாள்தோறும் உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்.

௪ உம்முடைய அடியானுடைய ஆத்துமாவை மகிழ்ச்சியாக்கும்; ஏனெனில் ஆண்டவரே, உம்மண்டைக்கு என் ஆத்துமாவை ஏறப்பண்ணுகிறேன்.

௫ ஏனெனில் ஆண்டவரே, தேவரீர் நல்லவரும், மன்னிக்கிறவரும், உம்மைநோக்கிக் கூப்பிடுகிற யாவர்மேலும் கிருபை மிகுந்தவருமாயிருக்கிறீர்.

௬ கர்த்தாவே, என் செபத்துக்குச் செவிகொடுத்து, என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கவனியும்.

௭ நான் நெருக்கப்படுகிற நாளிலே உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; ஏனெனில் எனக்கு மறுமொழி கொடுக்கிறீர்.*
*சங். ௫௰. ௰௫: ௭௭. ௩.

௮ ¶ ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே உமக்கு நிகருமில்லை; உம்முடைய கிரியைகளுக்கு ஒப்புமில்லை.* *சங். ௭௧. ௰௯. ௨ மோ. ௰௫. ௰௫.

௯ ஆண்டவரே, நீர் உண்டாக்கின எல்லாச் சாதிகளும் வந்து, உமக்குமுன்பாகப் பணிந்து, உமது நாமத்துக்கு மகிமை செலுத்துவார்கள்.

௰ ஏனெனில் தேவரீர் பெரியவரும் அதிசயங்களைச் செய்கிறவருந்தானே; தேவரீர் ஒருவரே தேவன்.

௰௧ கர்த்தாவே, நான் உமது சத்தியத்திலே நடப்பதற்கு, உமது வழியை எனக்குப் போதியும்; உமது நாமத்திற்குப் பயந்திருப்பதற்கு என் இருதயத்தை ஒருமுகமாக்கும்.

௰௨ என் பராபரனாகிய ஆண்டவரே, உம்மை என் முழு இருதயத்தினாலும் துதித்து, உமது நாமத்தை என்றென்றைக்கும் மகிமைப்படுத்துவேன்.

௰௩ ஏனெனில் உம்முடைய கிருபை என்மேல் பெரியது; என் ஆத்துமாவை நரகபாதாளத்திற்குத் தப்புவித்தீர்.

௰௪ ¶ பராபரனே, அகந்தைக்காரர் எனக்கு விரோதமாய் எழும்பி, பெலவந்தருடைய கூட்டம் என் பிராணனை வாங்கத்தேடி, உம்மைத் தங்களுக்குமுன்பாக நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள்.* *சங். ௫௪. ௫.

௰௫ ஆனால் ஆண்டவரே, தேவரீர் மனவுருக்கமும் இரக்கமும், நீண்டசாந்தமும், கிருபையிலும், உண்மையிலும், பெருக்கமுமான தேவன்.* *௨ மோ. ௩௪. ௬.

௰௬ என்மேல் நோக்கமாகி எனக்கிரங்கும்; உமது பெலனை உம்முடைய அடியானுக்குக் கட்டளையிட்டு, உம்முடைய அடியாளின் குமாரனை இரட்சியும்.* *சங். ௱௰௬. ௰௬.

௰௭ கர்த்தாவே, தேவரீர் எனக்கு ஒத்தாசைசெய்து, என்னைத் தேற்றரவுபண்ணுகிறீர் என்று என் பகைஞர் கண்டு வெட்கும்படியாக, என்னிடத்தில் எனக்கு நலமாக ஒரு அடையாளம் செய்யும்.

## ௮௭. சங்கீதம்.

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.)

அவர் அஸ்திபாரம் பரிசுத்த பருவதங்களில் இருக்கிறது.

௨ கர்த்தர் யாக்கோபுடைய வாசஸ்தலங்களை எல்லாம் பார்க்கிலும், சீயோனின் வாசஸ்தலங்களைச் சிநேகிக்கிறார்.

௩ பராபரனுடைய பட்டணமே, மகிமையான விசேஷங்கள் உன்னில் வசனிக்கப்படும்; சேலா.

௪ ¶ நம்மை அறிந்தவர்களுக்குள்ளே இராகாபையும், பாபேலையும் நினைக்கப்படப்பண்ணுவோம்; இதோ பெலிஸ்தியரிலும் திரியரிலும் எத்தியோப்பியரிலும்கூட இன்னான் அங்கே பிறந்தானென்றும்,

௫ இவன், அவன், அதிலே பிறந்தானென்றும் சீயோனைக்குறித்துச் சொல்லப்படும்; உன்னதமானவர் தாமே அதைத் திடப்படுத்துவார்.

௬ கர்த்தர் சனங்களை எழுதும்போது, இன்

ரூர் அதிலே பிறந்தார்களென்று அவர்களை எண்ணுவார்; சேலா.

௭ பாடுவார்கள் துள்ளிக் களிகூருகிறவர்களைப்போல இருப்பார்கள்; நம்முடைய ஊற்றுகளெல்லாம் உன்னிலிருக்கும்.

## ௮௮. சங்கீதம்.

(சோர்வாயிருக்கிற பலவீனத்தின்பேரிலே பாடி, கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட எஸ்ராகியனான ஏமானின் போதக சங்கீதம்.)

என் இரட்சிப்பின் பராபரனாகிய கர்த்தாவே, பகல்காலத்திலும் இராக்காலத்திலும் உமக்கு முன்பாகக் கூப்பிடுகிறேன்.

௨ என் விண்ணப்பம் உம்முடைய முகத்துக்குமுன்பாக வரட்டும்; என் கூப்பிடுதலுக்கு உம்முடைய செவியைச்சாயும்.

௩ ¶ ஏனெனில் என் ஆத்துமா தீங்குகளால் நிறையப்பட்டது; என் சீவன் பாதாளத்துக்குச் சமீபமாய்ச் சேர்ந்தது.

௪ நான் குழியில் இறங்குகிறவர்களோடு எண்ணப்பட்டு, திடனற்ற புருஷனைப்போலானேன்.

௫ மரித்தவர்களில் ஒருவனைப்போலிருக்கிறேன்; நீர் அப்புறம் நினையாமல், உமது கையால் அறுப்புண்டுபோனவர்களும், பிரேதக்குழிகளிலே கிடக்கிறவர்களுமாகிய வெட்டுண்டவர்களைப்போலே நெகிழப்பட்டிருக்கிறேன்.

௬ என்னைப் பாதாளக்குழியிலும், இருளிலும், ஆழங்களிலும் வைத்தீர்.

௭ உம்முடைய உக்கிரம் என்னை இருத்துகிறது; உம்முடைய வெள்ளங்களாலெல்லாம்என்னை இடுக்கண்படுத்துகிறீர்; சேலா.

௮ எனக்கு அறிமுகமானவர்களை எனக்குத் தூரமாக விலக்கி, என்னை அவர்களுக்கு அருவருப்பாக்கினீர்; நான் புறப்படக்கூடாததாய் அடைபட்டிருக்கிறேன்.*

*சங். ௩௧. ௰௨; ௩௮. ௰௨. யோபு. ௰௯. ௰௩-௰௯.

௯ கோபினால் என் கண் தொய்ந்துபோயிற்று; கர்த்தாவே, அநுதினமும் நான் உம்மைநோக்கிக் கூப்பிட்டு, உமக்கு நேராக என் கைகளை விரிக்கிறேன்.

௰ ¶ மரித்தவர்களில் அதிசயங்களைச் செய்வீரோ? செத்த இராட்சதர் எழுந்து உம்மைத் துதிப்பார்களோ? சேலா.

௰௧ பிரேதக்குழியில் உமது கிருபையும், அழிவில் உமது உண்மையும், விவரிக்கப்படுமோ?* *சங். ௯. ௯.

௰௨ இருளில் உமது அதிசயங்களும், மறதியின் பூமியில் உமது நீதியும் அறியப்படுமோ?

௰௩ கர்த்தாவே, நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; காலமே என் விண்ணப்பம் உமக்கு நேரிடும்.

௰௪ ¶ கர்த்தாவே, ஏன் என் ஆத்துமாவை ஒழித்துவிட்டு, . உம்முடைய முகத்தை எனக்கு மறைக்கிறீர்.* *சங். ௰௩. ௨.

௰௫ சிறுவயதுதுவக்கி நான் சிறுமையானவனும், மாண்டுபோகிறவனுமாயிருக்கிறேன்; உம்மால் வரும் திகில்களைச் சுமந்து, அஞ்சிக்கையாயிருக்கிறேன்.

௰௬ உம்முடைய எரிச்சல்கள் என்மேல் கடக்கின்றன; உம்முடைய பயங்கரங்கள் என்னைச் சங்கரிக்கின்றன.

௰௭ அவைகள் என்னை நாள்தோறும் தண்ணீர்களைப்போலச் சூழ்ந்து, ஏகமாய் என்னை வளைந்துகொள்ளுகின்றன.

௰௮ சிநேகிதனையும், தோழனையும் எனக்குத் தூரமாக விலக்கினீர்; எனக்கு அறிமுகமானவர்கள் அந்தரங்கமானார்கள்.

## ௮௯. சங்கீதம்.

(எஸ்ராகியனான ஏத்தானின் போதக சங்கீதம்.)

கர்த்தரின் கிருபைகளை என்றென்றைக்கும் பாடுவேன்; உம்முடைய உண்மையைத் தலைமுறைதலைமுறையாக என் வாயினால் அறிவிப்பேன்.* *ஏசா. ௫௫. ௩.

௨ ஏனெனில் என்றென்றைக்கும் உன்வித்தை நிலைப்படுத்தி, தலைமுறைதலைமுறை

யாக உன் இராசாசனத்தைக் கட்டுவோமென்று,* *௨ சாமு. ௭. ௰௨, ௰௬.

௩ நாம் நம்மால் தெரிந்துகொள்ளப்பட்டவனுக்கு உடம்படிக்கைபண்ணி, நம்முடைய தாசனாகிய தாவீதுக்கு ஆணையிட்டோமென்றீர்; சேலா.

௪ இந்தக் கிருபை என்றென்றைக்கும் திடமாக்கப்பட்டிருக்கும்; வானங்களிலே தானும் உமது உண்மையை உறுதியாக்கிக் கொண்டிருக்கிறீரென்பேன்.

௫ ¶ இதினிமித்தம் கர்த்தாவே, வானங்கள் உம்முடைய அதிசயத்தைத் துதிக்கும்; பரிசுத்தவான்களின் சபையில் உம்முடைய உண்மையும் விளங்கும்.

௬ ஏனெனில் ஆகாயமண்டலத்தில் கர்த்தருக்கு நிகரானவர் யார்? பெலவான்களுடைய குமாரர்களில் கர்த்தருக்கு ஒப்பானவர் யார்?* *சங். ௮௬. ௮. ௨ மோ. ௰௫. ௰௧.

௭ பராபரன் பரிசுத்தருடைய பெரிய ஆலோசனைச் சங்கத்திலே பயங்கரமானவரும் தம்மைச் சுற்றிலுமிருக்கிற அனைவர் மேலும் பயப்படத்தக்கவருந்தானே.

௮ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, கர்த்தராயிருக்கிற உம்மைப்போல வல்லமையுள்ளவர் யார்? உம்முடைய உண்மை உம்மைச் சுற்றியிருக்கிறது.

௯ தேவரீர் சமுத்திரத்துப் பெருமையின் மேல் ஆளுகையாயிருக்கிறவர்; அதின் அலைகள் எழும்பினால் தேவரீர் அவைகளை அடக்குகிறீர்.

௰ தேவரீர் இராகாபை வெட்டுண்டவனைப்போலே நசுக்கி, உமது வல்லமையான புயத்தினால் உம்முடைய சத்துருக்களைச் சிதறவடித்தீர்.* *ஏசா. ௩௰. ௭. ௨ மோ. ௰௪. ௨௮.

௰௧ வானங்கள் உம்முடையது; பூமியும் உம்முடையது; பூச்சக்கரமும் அதின் நிறைவும்தானே; தேவரீர் அவைகளை அஸ்திபாரப்படுத்தினீர்.

௰௨ தேவரீர் வடக்கையும் தெற்கையும் சிருஷ்டித்தீர்; தாபோரும் எர்மோனும் உம்முடைய நாமம் விளங்கக் கெம்பீரிக்கும்.

௰௩ உமக்கு வல்லமையுள்ள புயமிருக்கிறது; உம்முடைய கை பலத்ததும், உம்முடைய வலதுகரம் உயர்ந்ததுமானது.

௰௪ நீதியும் நியாயமும் உம்முடைய ஆசனத்தின் அஸ்திபாரமாய் இருக்கின்றன; கிருபையும் உண்மையும் உம்முடைய முகத்துக்கு முன்னாக நடக்கின்றன.* *சங். ௯௭. ௨.

௰௫ ¶ கெம்பீரத்தை அறிந்த சனம் பாக்கியமுள்ளது; கர்த்தாவே, உம்முடைய முகத்தின் வெளிச்சத்திலே நடப்பார்கள்.

௰௬ அவர்கள் உம்முடைய நாமத்தின்மேலே நாள்தோறும் களிகூர்ந்து, உம்முடைய நீதியால் உயருவார்கள்.

௰௭ ஏனெனில் அவர்கள் பெலத்தினுடைய மகிமை தேவரீர்தானே; உம்முடைய தயையினாலே எங்கள் கொம்பு உயரும்.

௰௮ ஏனென்றால் கர்த்தரால் எங்களுடைய கேடயமும், இஸ்ரவேலின் பரிசுத்தரால் எங்களுடைய இராசாவுமுண்டு.

௰௯ ¶ அப்போது நீர் தரிசனத்திலே உம்முடைய பரிசுத்தவானைக்குறித்து விளம்பினதாவது: ஒரு சவுரியவான்மேலே சகாயம் பண்ணும் சத்தியை வைத்தோம்; சனத்தில் தெரிந்துகொள்ளப்பட்டவனை உயர்த்தினோம்.* *௧ சாமு. ௰௬. ௧.

௨௰ நம்முடைய தாசனாகிய தாவீதைக் கண்டுபிடித்தோம்; நம்முடைய பரிசுத்த எண்ணெயினால் அவனை அபிஷேகம்பண்ணினோம்.* *௧ சாமு. ௰௬. ௰௨, ௰௩.

௨௧ அவனோடே நம்முடைய கை உறுதியாயிருக்கும்; நம்முடைய புயம் அவனைத் திடப்படுத்தும்.

௨௨ சத்துரு அவனை எத்துவதில்லை; நியாயக்கேட்டின் மகன் அவனை ஒடுக்குவதில்லை.

௨௩ அவன் சத்துருக்களை அவனுக்குமுன்

பாக நருக்கி, அவன் பகைஞரை வெட்டுவோம்.

உச நம்முடைய உண்மையும், நம்முடைய கிருபையும் அவனோடிருக்கும்; நம்முடைய நாமத்திலே அவன் கொம்பு உயரும்.

உரு அவன் கையைச் சமுத்திரத்தையும், அவன் வலதுகரத்தை ஆறுகளையும் ஆள வைப்போம்.* *சங். எக. அ.

உகூ அவன் நம்மைத் தேவரீர் என் பிதாவும், என் பராபரனும், என் இரட்சிப்பின் கல்மலையும் என்றழைப்பான்.* *உ சாமு. எ. யச.

உஎ நாமும் அவனை முதல்பேரானவனும், பூமியின் இராசாக்களைப்பார்க்கிலும் உன்னதமானவனுமாக வைப்போம்.*
*எபி. க.சு. கொலோ. க. யரு.

உஅ என்றென்றைக்கும் நமது கிருபையை அவனுக்குக் காப்போம்; நமது உடம்படிக்கை அவனுக்குக் கெட்டியாயிருக்கும்.

உகூ அவன் வித்தை என்றென்றைக்கும் அவன் இராசாசனத்தை வானங்களுள்ள மட்டும் நிலைப்படுத்துவோம்.

ஙய ¶ அவன் குமாரர் நம்முடைய நியாயங்களில் நடவாமல், நமது வேதத்தை விட்டு,* *உ சாமு. எ. யச, யகூ.

ஙக நம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் நம்முடைய பிரமாணங்களைக் குலைத்துப்போட்டால்,

ஙஉ அவர்கள் மீறுதல்களை மிலாறுகளாலும், அவர்கள் அக்கிரமத்தை வாதைகளாலும் விசாரிப்போம்.

ஙங ஆனால் நம்முடைய கிருபையை அவனைவிட்டு விலக்காமலும், நம்முடைய உண்மையிலே பிசகாமலும் இருப்போம்.*
* ஏசா. நச. ய.

ஙச நம்முடைய உடம்படிக்கையைக் குலைத்துப்போடாமலும், நம்முடைய உதடுகள்விளம்பினதை மாற்றாமலும்இருப்போம்.

ஙரு தாவீதுக்குப் பொய்சொல்லோமென்று ஒருவிசை நம்முடைய பரிசுத்தத்தின்மேலே ஆணையிட்டோம்.

ஙகூ அவன் வித்து என்றென்றைக்கும் இருக்கும்; அவன் இராசாசனம் சூரியனைப்போல நமக்குமுன்பாக நிற்கும்.*
* சங். எஉ. யஎ.

ஙஎ அது சந்திரனைப்போலே என்றென்றைக்கும் உறுதியும், ஆகாயமண்டலத்துச் சாட்சியைப்போலே உண்மையுமாயிருக்குமென்றீர்; சேலா.* *க மோ. கூ. யஉ, யச.

ஙஅ ¶ ஆனால் தேவரீர் எங்களை ஒழித்துவிட்டு வெறுத்தீர்; நீர் அபிஷேகம்பண்ணுவித்தவன்மேல் உக்கிரமானீர்.

ஙகூ உம்முடைய தாசனுக்குப் பண்ணின உடம்படிக்கையை அருவருத்து, அவன் கிரீடத்தைத் தரையிலே தள்ளி, பரிசுத்தக்குலைச்சலாக்கினீர்.

சய அவன் மதில்களை எல்லாம் தகர்த்துவிட்டு, அவன் அரணிப்புகளை இடிதலாக்கினீர்.

சக வழிநடக்கிற அனைவரும் அவனைக் கொள்ளையிட்டார்கள்; தன் அயலாருக்கு நிந்தையானான்.* *சங். அய. யங.

சஉ அவன் சத்துருக்களின் வலதுகையை உயர்த்தி, அவன் விரோதக்காரர் அனைவருக்கும் சந்தோஷமுண்டாக்கினீர்.

சங அவனை யுத்தத்திலே தரிகொள்ளப்பண்ணாமல், அவன் பட்டையத்தின் கருக்கையும் மழுக்கிவிட்டீர்.

சச அவன் துப்புரவை அற்றுப்போகப்பண்ணி, அவன் இராசாசனத்தைத் தரையிலே தள்ளினீர்.

சரு அவன் வாலவயதின் நாள்களைக் குறுக்கி, அவனை வெட்கத்தால் மூடினீர்; சேலா.

சகூ ¶ கர்த்தாவே, எந்தமட்டும்? என்றென்றைக்கும் மறைந்திருப்பீரோ? எந்தமட்டும் உமது கோபம் அக்கினியைப்போல எரியும்.* *சங். எச. ய.

சஎ என் சீவன் எத்தனை நிலையற்றதென்கிறதை நினைத்தருளும்; ஏன் சகலமான மனுப்புத்திரரையும் விருதாவாய்ச் சிருஷ்டித்திருப்பீர்?

சஅ எந்த மனுஷன் மரணத்தைக் காணா

மல் உயிரோடிருந்து, தன் ஆத்துமாவைப் பாதாள வல்லடிக்கு விலக்கிவிடுவிப்பான்; சேலா.

சகூ ஆண்டவரே, நீர் தாவீதுக்கு உம்முடைய உண்மையைக்கொண்டு சத்தியம் பண்ணின உம்முடைய முந்தின கிருபைகள் எங்கே?

ருய ஆண்டவரே, உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஊழியக்காரரையும், நீர் அபிஷேகம்பண்ணினவனின் காலடிகளையும் நிந்திக்கிறதும்,

ருக நான் மகா சனசதளங்களை எல்லாம் என் மடியில் சுமக்கிறதினால் உண்டானதுமான என் நிந்தையை நினையும் கர்த்தாவே.

ருஉ கர்த்தர் என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டவர்; ஆமென், ஆமென்.

## கூய. சங்கீதம்.

(பராபரனுடைய மனுஷனாகிய மோசேயின் செபம்.)

ஆண்டவரே, தேவரீர் தலைமுறைதலைமுறையாக எங்களுக்கு அடைக்கலமானவர்.

உ பருவதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியையும் பூச்சக்கரத்தையும் உருவாக்குமுன்னும், தேவரீர் அநாதியாய் என்றென்றைக்கும் பராபரனாயிருக்கிறீர்.*

* வாக். அ. உரு.

ங நீர் மனிதனை நிர்த்தூளியாக்கி, மனுப்புத்திரரே, திரும்பிவாருங்களென்கிறீர்.

ச ஏனென்றால் ஆயிரம் வருஷம் உமது பார்வைக்கு நேற்றுக்கழிந்த நாளும், இராச்சாமமும்போல இருக்கிறது.*

* ஏசா. சங. யங. உ பேது. ங. அ.

ரு அவர்களைப் பெருவெள்ளமாய் அடித்துக்கொண்டு போகிறீர்; நித்திரைக்கு ஒத்திருக்கிறார்கள்; காலமே அவர்கள் உருவுமாறிய புல்லுக்கு ஒப்பானவர்கள்.*

* ஏசா. சய. கூ, எ.

கூ அது காலமே பூத்து உருவுமாறி, சாயங்காலத்தில் அறுப்புண்டு உலரும்.*

* சங். ளங. யரு, யகூ.

எ ஏனெனில் உமது கோபத்தால் அழிந்து, உம்முடைய உக்கிரத்தால் கலங்கிப்போனோம்.* *க கொரி. ய. ரு.

அ எங்கள் அக்கிரமங்களை உமக்குமுன்பாகவும், எங்கள் அந்தரங்கமானதை உம்முடைய முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தினீர்.

கூ ஆகையால் எங்கள் நாள்களெல்லாம் உம்முடைய சினத்தால் போய்விட்டன; எங்கள் வருஷங்களை ஒரு கதையைப்போலக் கழித்துவிட்டோம்.

ய எங்கள் ஆயுசுநாள்களில் எழுபதுவருஷமும், வெகுவாய்ப் பெலத்திருந்தால், எண்பது வருஷமுமுண்டு; அவைகளின் மேன்மையானதோவென்றால் பிரயாசமும் வீணுந்தானே; ஏனெனில் கடுக அறுப்புண்டு பறந்துபோகிறோம்.

யக உமது கோபத்தின் பெலனையும், உமது சினத்தையும், உமக்குப் பயப்படத்தக்க பயமாய் அறிந்துகொள்ளுகிறவனார்?

யஉ நாங்கள் ஞானமுள்ள இருதயத்தைத் தரித்துக்கொள்ளும்படியாக எங்கள் நாள்களை எண்ணும் அறிவை எங்களுக்குக் கட்டளையிடும்.

யங ¶ கர்த்தாவே, திரும்பி வாரும்; எந்த மட்டும் கோபமாயிருப்பீர்? உம்முடைய அடியாருக்காகப் பரிதபியும்.

யச நாங்கள் எங்கள் நாள்களிலெல்லாம் கெம்பீரித்து மகிழ, காலமே எங்களை உமது கிருபையாலே திருப்தியாக்கும்.

யரு தேவரீர் எங்களைச் சிறுமைப்படுத்தின நாள்களுக்கும், நாங்கள் தீங்கைக்கண்ட வருஷங்களுக்கும் ஈடாக எங்களை மகிழ்ச்சியாக்கும்.

யகூ உம்முடைய கிரியை உம்முடைய ஊழியக்காரருக்கும், உம்முடைய மகிமை அவர்கள் பிள்ளைகளுக்கும், காணப்படுவதாக.

யஎ எங்கள் பராபரனாகிய ஆண்டவரின் இன்பம் எங்கள்மேல் இருக்கக்கடவது;

எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்; ஆம், எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்.

## ௯௧. சங்கீதம்.

உன்னதமானவரின் மறைவிலிருக்கிறவன் சருவவல்லவருடைய நிழலில் இராத்தங்குவான்.* *சங். ௰௭. ௯: ௩௬. ௮.

௨ கர்த்தரை என்னடைக்கலமும், என் கோட்டையும், நான் நம்பியிருக்கிற என் பராபரனும் என்கிறேன்.

௩ ஏனெனில் அவர் உன்னைக் குருவிபிடிக்கிறவனுடைய கண்ணிக்கும், விக்கினமான பெருவாரிக் காய்ச்சலுக்கும் தப்புவிப்பார்.* *சங். ௱௨௪. ௭.

௪ தம்முடைய சிறகுகளாலே உன்னை மூடுவார்; அவர் செட்டைகளின்கீழே திடன்கொண்டு தங்குவாய்; அவருடைய உண்மை பரிசையும் கேடயமுமாம்.*
*சங். ௫௨. ௨. மத். ௨௩. ௩௭.

௫ இராவின் அருக்களிப்புக்கும், பகலில் பறக்கும் அம்புக்கும்,* *வாக். ௩. ௨௪, ௨௫.

௬ இருளில் நடமாடும் பெருவாரிக்காய்ச்சலுக்கும், மத்தியானத்தில் பாழ்க்கடிக்கும் சங்காரத்திற்கும், பயப்படாதிருப்பாய்.

௭ உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலதுபுறத்தில் பதினாயிரம்பேரும் விழுந்தாலும், அது உன்னண்டைக்குச் சேராது.

௮ உன் கண்களால்மாத்திரம் அதைப் பார்த்து, ஆகாதவர்களுக்கு வரும் சரிக்கட்டுதலைக் காண்பாய்.

௯ ¶ ஏனெனில் கர்த்தாவே, தேவரீர் என் அடைக்கலமாயிருக்கிறீர்; உன்னதமானவரை உனக்குத் தாபரமாக வைத்தாய்.

௰ பொல்லாப்பு உனக்கு வராமலும், வாதை உன் கூடாரத்தை அணுகாமலும் இருக்கும்.

௰௧ உனக்காகத் தம்முடைய தூதர்களுக்குக் கற்பிப்பார்; ஏனெனில் உன் வழிகளிலெல்லாம் உன்னைக் காக்கும்படிக்கு,*
*சங். ௩௪. ௮.

௰௨ உன் பாதம் கல்லில் இடறாதபடிக்கு கைகளில் உன்னை ஏந்திக்கொண்டு போவார்கள்.

௰௩ சிங்கத்தின் மீதிலும் விரியன்பாம்பின் மீதிலும் நடந்து, சிங்கக்குட்டியையும், வலுசர்ப்பத்தையும் மிதித்துவிடுவாய்.*
*லூக். ௰. ௰௯.

௰௪ ¶ நம்முடையமேல் அவன் வாஞ்சையாய் இருக்கிறபடியினாலே, அவனை விடுவிப்போம்; நமது நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியினாலே, அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்போம்.

௰௫ நம்மை நோக்கிக் கூப்பிடுவான்; நாம் அவனுக்கு மறுவுத்தரவு அருளிச்செய்வோம்; நெருக்கத்தில் நாம் அவனோடிருந்து, அவனைத் தப்புவித்து, அவனை மகிமைப்படுத்துவோம்.

௰௬ நீடித்த நாள்களால் அவனைத் திருப்தியாக்கி, நமது இரட்சிப்பை அவனுக்குக் காண்பிப்போம்.

## ௯௨. சங்கீதம்.

(ஓய்வுநாளின் பாட்டாகிய சங்கீதம்.)

பத்துநரம்பு வீணையாலும், தம்புருவாலும், சுரமண்டலத்தில் வாசிக்கும் தியானத்தாலும்,

௨ கர்த்தரைத் துதிக்கிறதும், உன்னதமானவரே, உமது நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுகிறதும்,* *சங். ௱௪௭. ௧.

௩ காலமே உம்முடைய கிருபையையும் இராத்திரியில் உம்முடைய உண்மையையும், அறிவிக்கிறதும் நலமாயிருக்கும்.

௪ ஏனெனில் கர்த்தாவே, உமது செய்கைகளால் என்னை மகிழ்ச்சியாக்கினீர்; உம்முடைய கரங்களின் கிரியைகளின் நிமித்தம் கெம்பீரிக்கிறேன்.

௫ ¶ கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் எத்தனைப் பெரியவைகள்; உம்முடைய

சிந்தனைகள் மகா ஆழமானவைகள்.*

* சங். ௱௪ ௨௯: ௱௩௯. ௰௭. ௨ரோ. ௰௧. ௩௩.

௬ மிருககுண மனுஷன் இதை அறியான்; மூடன் இதை உணரான்.

௭ ஆகாதவர்கள் புல்லைப்போலே செழித்து, சகல அக்கிரமக்காரரும் பூக்கும்போது, அவை அவர்களை என்றென்றைக்கும் அழிப்பதற்கு ஆகின்றன.

௮ ஆனால் கர்த்தாவே, என்றென்றைக்கும் உயர்ந்தவர்.

௯ ¶ ஏனெனில் இதோ கர்த்தாவே, உம்முடைய சத்துருக்கள், இதோ உம்முடைய சத்துருக்கள் அழிவார்கள்; சகல அக்கிரமக்காரரும் சிதறுண்டுபோவார்கள்.

௰ ஆனால் என் கொம்பைக் காண்டாமிருகத்தினுடையதைப்போல உயர்த்துவீர்; புது எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்படுகிறேன்.* * சங். ௮௯. ௰௮.

௰௧ என் சத்துருக்களிலும், என்மேல் எழும்புகிற பொல்லாதவர்களிலும், நடக்கும் சரிக்கட்டுதலை என் கண் கண்டு, என் காதுகள் கேட்கும்.

௰௨ ¶ நீதிமான் பனையைப்போலே செழித்து, லீபனோனிலுள்ள கேதுருவைப்போல வளருவான்.* * சங். ௫௨. ௰.

௰௩ கர்த்தருடையவீட்டிலே நாட்டப்பட்டவர்கள் எங்கள் பராபரனுடைய முற்றங்களில் செழித்திருப்பார்கள்.

௰௪ என் கன்மலையாகிய கர்த்தர் உத்தமரென்றும், அவரில் அநியாயப் பிசகில்லையென்றும் அறிவிப்பதற்காக,* * ௫ மோ. ௩௨. ௪.

௰௫ அவர்கள் நரைவயதில் இன்னம் கனிதந்து, புஷ்டியும் பச்சையுமாயிருப்பார்கள்.* * சங். ௧. ௩.

## ௯௱௩. சங்கீதம்.

கர்த்தர் இராசரிகம்பண்ணி, மகத்துவத்தை அணிந்துகொண்டார்; கர்த்தர் அதை அணிந்து பெலத்தினாலே அரைகட்டிக்கொண்டார்; ஆனதுகொண்டு பூச்சக்கரம் அசையாதபடிக்கு உறுதிப்படும்.*

* சங். ௯௭. ௧: ௯௯. ௧.

௨ உம்முடைய இராசாசனம் அப்போது முதலாய் உறுதியானது; தேவரீர் அநாதியாக இருக்கிறீர்.

௩ நதிகள் எறெடுக்கும் கர்த்தாவே, நதிகள் தங்கள் இரைச்சலை எறெடுக்கும்; நதிகள் தங்கள் அலைகளை எறெடுக்கும்.

௪ திரளான தண்ணீரின் இரைச்சலைப்பார்க்கிலும், சமுத்திரத்தின் வீரியமான அலைகளைப்பார்க்கிலும், கர்த்தர் உன்னதத்திலே வீரியமானவர்.* * சங். ௬௫. ௭: ௯௫. ௮.

௫ உம்முடைய சாட்சிகள் மகா உண்மையானவைகள்; கர்த்தாவே, பரிசுத்தம் நித்தியநாளாக உம்முடைய வீட்டின் அலங்காரமாயிருக்கிறது.* * யோவா. ௰௭. ௭.

## ௯௪. சங்கீதம்.

நீதியைச் சரிக்கட்டுகிற பராபரனாகிய கர்த்தாவே, நீதியைச் சரிக்கட்டுகிற பராபரனே, பிரகாசியும்.* * ௫ மோ. ௩௨. ௩௫. சங். ௮௰. ௨.

௨ பூமியின் நியாயாதிபதியே, நீர் உயர்ந்து பெருமைக்காரருக்குப்பதிலைச்சரிக்கட்டும்

௩ ¶ கர்த்தாவே, ஆகாதவர்கள் எந்தமட்டும் களிகூர்ந்து, ஆகாதவர்கள்தானே எந்தமட்டும் களிகூர்ந்திருப்பார்கள்?

௪ சகல அக்கிரமக்காரரும், வாயாடிக்கடினமாய்ப்பேசிப் பெருமைப்பாராட்டுகிறார்கள்.

௫ கர்த்தாவே, அவர்கள் உமது சனத்தை நொறுக்கி, உம்முடைய சுதந்தரத்தை ஒடுக்கி,

௬ விதவையையும் பரதேசியையும் கொன்று, திக்கில்லாதவர்களைக் கொலைப்படுத்தி,*

*எசே. ௨௨. ௭.

௭ கர்த்தர் பாராரென்றும், யாக்கோபின் பராபரன் உணராரென்றும் சொல்லுகிறார்கள்.

அ ¶ சனத்தில் மிருககுணத்தாரே, உணர்வடையுங்கள்; பயித்தியக்காரரே, எப்போது புத்திமான்களாவீர்கள்?

கூ காதை நாட்டுகிறவர் கேளாரோ? கண்ணை உருவாக்குகிறவர் காணாரோ?

ய சாதிகளைத் தண்டிக்கிறவர் கடிந்துகொள்ளாரோ? மனுஷனுக்கு அறிவைப் போதிக்கிறவர் அறியாரோ?

யக கர்த்தர் மனுஷனுடைய நினைவுகளை அவைகள் மாயையென்று அறிவார்.* * க கொரி. ங. உய.

யஉ ¶ கர்த்தாவே, ஆகாதவனுக்குக் குழி வெட்டப்படும்மட்டுக்கும், நீர் தீங்குநாள்களில் அமர்ந்திருக்கப்பண்ணிப் புத்திசொல்லி,

யங உம்முடைய வேதத்தால் போதிக்கிற மனுஷன் பாக்கியவான்.

யச ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தை நெகிழாமலும், தம்முடைய சுதந்தரத்தைக் கைவிடாமலும் இருப்பார்.

யரு அதேனென்றால் நியாயம் நீதியாகத் திரும்பும்; செம்மை இருதயத்தார் அனைவரும் அதைப் பின்செல்லுவார்கள்.

யசா ¶ என்னோடேகூடப் பொல்லாதவர்களுக்கு எதிராய் எழும்புபவன் யார்? என்னோடேகூட அக்கிரமக்காரருக்கு எதிராய் நிற்பவன் யார்?

யஎ கர்த்தர் எனக்குத் துணையாய் இராதிருந்தாராகில், என் ஆத்துமா மவுனத்தில் வாசமாவதற்குக் கொஞ்சம் தப்புவதாயிருக்கும்.

யஅ என் கால் தள்ளாடுமென்று நான் சொன்னபோதோவெனில், கர்த்தாவே, உமது கிருபை என்னைத் தாங்கிற்று.

யகூ என் உள்ளத்தில் என்னுடைய விசாரங்கள் பெருகுகையில், உம்முடைய தேற்றுதல்கள் என் ஆத்துமாவைத் துளிர்க்கப்பண்ணின.

உய பிரமாணத்திற்கு மிஞ்சின பாரத்தை உண்டுபண்ணுகிற கேடுபாடான ஆசனம் உமக்கு ஒத்துவருமோ?* * வெளி. உ. யங: யங. உ. உ கொரி. கூ. யச, யரு.

உக அவர்கள் நீதிமானுடைய ஆத்துமாவுக்கு விரோதமாகக் கும்புகூடிக் குற்றமில்லாத இரத்தத்தைக் குற்றப்படுத்துகிறார்கள்.

உஉ ஆனால் கர்த்தர் எனக்கு உயர்ந்த அடைக்கலமும், என் பராபரன் நான் நம்பிய கல்மலையுமாயிருக்கிறார்.

உங இவர் அவர்கள் அக்கிரமத்தை அவர்கள்மேலே திருப்பி, அவர்கள் பொல்லாப்பின்நிமித்தம் அவர்களைச் சங்கரிப்பார்; நம்முடைய பராபரனாகிய கர்த்தர் அவர்களைச் சங்கரிப்பார்.

## கூரு. சங்கீதம்.

கர்த்தனைக் கெம்பீரித்துப் பாடி, நம்முடைய இரட்சிப்பின் கல்மலையைச் சங்கீர்த்தனம்பண்ணக்கடவோம் வாருங்கள்.

உ துதியோடே அவர் சந்நிதிக்குமுன்பாக வந்து, சங்கீதங்களால் அவரை ஆர்ப்பரித்துப் பாடக்கடவோம்.* * சங். ௱. உ.

ங ஏனெனில் கர்த்தர் பெரிய தேவனும். எல்லாத் தேவர்களின்மேலும் பெரிய இராசாவுமாயிருக்கிறார்.* * சங். கூகூ. ச.

ச அவர் கையில் பூமியின் அந்தரங்கங்கள் இருக்கின்றன; பருவதங்களின் உயரங்களும் அவருடையவைகள்.

ரு சமுத்திரம் அவருடையது; அவரே அவைகளை உண்டாக்கினார்; வெட்டாந்தரையை அவருடைய கரங்கள் உருவாக்கின.

சா ¶ நாம் பணிந்து குனிந்து, நம்மை உண்டாக்கின கர்த்தருக்குமுன்பாக முழங்கால்படியிடக்கடவோம் வாருங்கள்.

எ ஏனெனில் அவர் நம்முடைய பராபரனும், நாம் அவருடைய மேய்ச்சலின் சனமும், அவருடைய கரத்தின் ஆடுகளுமாமே; இன்று அவருடைய சத்தத்தைக் கேட்டீர்களாகில்,* * எபி. ங. எ, யக. சங். ௱. ங.

அ வனாந்தரத்திலே சண்டைமூட்டுதலிலும், சோதனையின்நாளிலும் நடந்ததுபோ

ல, உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்தாதிருங்கள்.* * ௨ மோ. ௰எ. எ. ௪ மோ. ௨௰. ௰௩.

௯ அங்கே உங்கள் பிதாக்கள் நம்மைச் சோதித்து, நம்மைப் பரிட்சைபார்த்து, நம்முடைய கிரியையையும் கண்டார்கள்.

௰ நாற்பது வருஷமாக நாம் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் மனந்தப்பி நடக்கிற சனமென்றும், அவர்கள் நம்முடைய வழிகளை அறியாதேபோகிறவர்களென்றும் சொல்லி,

௰௧ அவர்கள் நம்முடைய ஓய்வுக்குள் பிரவேசிப்பதில்லையென்று நம்முடைய கோபத்திலே ஆணையிட்டோம்.* * ௪ மோ. ௰௪. ௨௧—௩௫.

## ௯௬. சங்கீதம்.

கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள்; பூமியின் குடிகளே எல்லாரும் கர்த்தரைப் பாடுங்கள்.* * சங். ௯௮. ௧. வெளி. ௫. ௯, ௰: ௰௪. ௩. ௧ நாளா. ௰௬. ௨௩.

௨ கர்த்தரைப்பாடி, அவருடைய நாமத்தைத் தோத்திரித்து, நாளுக்குநாள் அவருடைய இரட்சிப்பைச் சுவிசேஷமாய் அறிவியுங்கள்.

௩ சாதிகளுக்குள் அவருடைய மகிமையையும், எல்லாச் சனசதளங்களுக்குள்ளும் அவருடைய அதிசயங்களையும் விவரியுங்கள்.

௪ ஏனெனில் கர்த்தர் பெரியவரும் மிகுதியாய்த் தோத்திரிக்கப்பட்டவருமானவர்; அவர் எல்லாத் தேவர்களின்மீதிலும் பயங்கரமாய் இருக்கிறார்.

௫ ஏனென்றால் எல்லாச் சனசதளங்களுடைய தேவர்களும் விக்கிரகங்கள்தானே; கர்த்தரோ வானங்களை உண்டாக்கினார்.* *ஏசா. ௪௯. ௨௧.

௬ மகிமையும் கனமும் அவருக்குமுன்பாகவும், வல்லமையும் மகத்துவமும் அவர் பரிசுத்தஸ்தலத்திலும் இருக்கின்றன.

௭ ¶ சனசதளங்களின் வம்சங்களே, கர்த்தருக்கு மகிமையையும், பெலனையும், செலுத்துங்கள்; கர்த்தருக்கு அவைகளைச் செலுத்துங்கள்.* * சங். ௨௯. ௧, ௨.

௮ கர்த்தருக்கு அவருடைய நாமத்தின் மகிமையைச் செலுத்தி, காணிக்கைகளைக் கொண்டுவந்து, அவருடைய பிரகாரங்களுக்குள் பிரவேசியுங்கள்.

௯ கர்த்தரைப் பரிசுத்த அலங்காரத்துடனே பணியுங்கள்; பூமியின் குடிகளே, எல்லாரும் அவருக்குமுன்பாக நடுங்குங்கள்.

௰ கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார்; ஆனதுகொண்டு பூச்சக்கரம் அசையாதபடிக்கு உறுதிப்படுமென்றும், சனசதளங்களை நிதானமாய் நியாயந்தீர்ப்பாரென்றும், சாதிகளுக்குள்ளே சொல்லுங்கள்.* * சங். ௯௩. ௧. ம்ே. வெளி. ௰௧. ௰௫.

௰௧ வானங்கள் மகிழ்ந்து பூமி பூரிப்பாகி, சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்குவதாக.* * சங். ௯௮. எ. ம்ே.

௰௨ நாடும் அதிலுள்ள அனைத்தும் களிகூருவதாக; அப்போது கர்த்தருக்குமுன்பாக எல்லாக் காட்டுவிருட்சங்களும் கெம்பீரிக்கும்.

௰௩ ஏனெனில் அவர் வருகிறார்; அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்; பூச்சக்கரத்தை நீதியாகவும், சனசதளங்களை உண்மையாகவும் நியாயந்தீர்ப்பார்.

## ௯௭. சங்கீதம்.

கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார்; பூமி பூரிப்பாகி, திரளான தீவுகள் மகிழக்கடவது.* * சங். ௯௩. ௧: ௯௯. ௧.

௨ ¶ மேகமும் மந்தாரமும் அவரைச் சுற்றியிருக்கின்றன; நீதியும் நியாயமும் அவருடைய இராசாசனத்தின் மூலமானது.* * சங். ௮௯. ௰௫.

௩ அக்கினி அவர் முன்னாலேநடந்து சுற்றிலும் இருக்கிற அவருடைய சத்துருக்களைச் சுட்டெரிக்கிறது.* * சங். ௫௰. ௩. மல். ௪. ௧.

ச அவருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்பிக்கின்றன; பூமி அவைகளைக் கண்டு அதிரும்.

ரு கர்த்தரின் பிரசன்னத்தினாலே பருவதங்கள் மெழுகைப்போல உருகும்; சர்வபூமியினுடைய ஆண்டவரின் பிரசன்னத்தினாலேதானே.

சு வானங்கள் அவருடைய நீதியை அறிவிக்கும்; எல்லாச் சனசதளங்களும் அவருடைய மகிமையைக் காண்பார்கள்.*

* சங். ௰ரு. சு. வெளி. க. எ.

எ சுரூபங்களை வணங்கி, விக்கிரகங்கள் மேலே பெருமைபாராட்டுகிற யாவரும் வெட்கக்கடவார்கள்; எல்லாத் தேவர்களே அவரைப் பணியுங்கள்.* * எபி. க. சு.

அ ¶ சீயோன் கேட்டு மகிழும்; கர்த்தாவே, உம்முடைய நியாயத்தீர்ப்புகளாலே யூதாவின் குமாரத்திகள் களிகூருவார்கள்.

கூ ஏனென்றால் கர்த்தாவே, தேவரீர் சர்வபூமியின்மீதினும் உன்னதமானவர்; எல்லாத் தேவர்கள்மீதினும் மிகுதியும் உயர்ந்திருக்கிறீர்.

௰ ¶ கர்த்தரைச் சிநேகிக்கிறவர்களே, பொல்லாப்பைப் பகையுங்கள்; அவர் தம்முடைய பரிசுத்தவான்களின் ஆத்துமாக்களைக் காப்பாற்றி, அவர்களை ஆகாதவர்களின் கைக்குத் தப்புவிக்கிறார்.*

* ஆமோ. ரு. ௰ரு, ௰ரு. உரோ. ௰உ. கூ.

௰க நீதிமானுக்கு வெளிச்சமும், செம்மை இருதயத்தாருக்கு மகிழ்ச்சியும் விதைக்கப்பட்டிருக்கின்றன.* * சங். ளா௰உ. ச.

௰உ நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து, அவருடைய பரிசுத்தம் பிரஸ்தாபமாகும்படியாகத் துதியுங்கள்.* * சங். சுஉ. ௰க: சுசு. க.

## கூஅ. சங்கீதம்.

(சங்கீதம்.)

கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள்; ஏனெனில் அதிசயங்களைச் செய்திருக்கிறார்; அவருடைய வலதுகரமும், அவருடைய பரிசுத்த புயமும் அவருக்கு இரட்சிப்புண்டாக்குகின்றன.* * சங். கூசு. க.

உ ¶ கர்த்தர் தம்முடைய இரட்சிப்பைப் பிரஸ்தாபமாக்கி, தமது நீதியைச் சாதிகளுடைய கண்களுக்குமுன்பாக விளங்கப்பண்ணுகிறார்.

ரு அவர் இஸ்ரவேல் வீட்டுக்காகத் தமது கிருபையையும், தமது உண்மையையும் நினைக்கிறார்; பூமியின் எல்லைகளெல்லாம் நமது பராபரனுடைய இரட்சிப்பைக் காணுகிறது.

ச ¶ பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தருக்கென்று ஆர்ப்பரியுங்கள்; முழங்கிக் கெம்பீரித்துப் பாடுங்கள்.* * சங். ளா. க.

ரு கர்த்தரைச் சுரமண்டலத்தால் கீர்த்தனம்பண்ணுங்கள்; சுரமண்டலத்தாலும், கீத சத்தத்தாலுந்தானே.* * சங். ளாரு௰. ரு. ௲.

சு கர்த்தராகிய இராசாவுக்குமுன்பாகப் பூரிகைகளாலும் எக்காள சத்தத்தாலும் கெம்பீரியுங்கள்.

எ சமுத்திரமும், அதின் நிறைவும், பூச்சக்கரமும், அதில் குடியிருக்கிறவர்களும் முழங்குவதாக.* * சங். ௰சு. ௰க.

அ கர்த்தருக்குமுன்பாக ஆறுகள் கைகொட்டவும், பருவதங்கள் ஏகமாய்க் கெம்பீரிக்கவும் கடவன.

கூ ஏனெனில் அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார், பூச்சக்கரத்தை நீதியோடும், சனசதளங்களை மகா நிதானத்தோடும் நியாயந்தீர்ப்பார்.* * சங். கூ. கூ: கூசு. ௰சு.

## கூகூ. சங்கீதம்.

கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார்; சனசதளங்கள் தத்தளிக்கக்கடவன; கேருபீன்கள்மேல் வாசமாயிருக்கிறவர் இராசரிகம்பண்ணுகிறார்; பூமி அசைவதாக.*

* சங். கூரு. க: கூஎ. க.

உ கர்த்தர் சீயோனிலே பெரியவர்; அவர் எல்லாச்சனசதளங்கள்மேலும்உயர்ந்தவர்.

௩ உம்முடைய மகத்துவமும் பயங்கரமுமான நாமத்தைத் துதிப்பார்கள்; ஏனெனில் அவை பரிசுத்தமானவை.

௪ நியாயத்தைச் சிநேகிக்கிற இராசாவின் பெலத்தையும் துதிப்பார்களாக; தேவரீர் சுத்தானங்களை நிலைநிறுத்துகிறீர்; தேவரீர் யாக்கோபிலே நியாயமும் நீதியும் செய்கிறீர்.

௫ நம்முடைய பராபரனாகிய கர்த்தனை உயர்த்தி, அவர் பாதப்படியிலே பணியுங்கள்; ஏனெனில் பரிசுத்தராயிருக்கிறார்.

௬ ¶ அவருடைய தாசருக்குள்ளே மோசேயும், ஆரோனும், அவர் நாமத்தை நோக்கிக் கூப்பிடுகிறவர்களுக்குள்ளே சாமுவேலும் செய்ததுபோலத்தானே; கர்த்தனை நோக்கிக் கூப்பிட்டார்கள், அப்பொழுது அவர்களுக்கு மறுஉத்தரவு அருளிச்செய்தார்.

௭ மேகத்தூணில் அவர்களோடே பேசினார்; அவருடைய சாட்சிகளையும், அவர்தங்களுக்குக் கொடுத்த பிரமாணத்தையும், கைக்கொண்டார்கள்.

௮ எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் அவர்களுக்கு உத்தரவு அருளிச்செய்தீர்; அவர்களுக்கு மன்னிக்கிறவரும், அவர்கள் செய்கைகளுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறவருமான தேவனாயிருந்தீர்.

௯ நம்முடைய பராபரனாகிய கர்த்தனை உயர்த்தி, அவருடைய பரிசுத்தபருவதத்திற்கு நேராகப் பணியுங்கள்; ஏனெனில் நம்முடைய பராபரனாகிய கர்த்தர் பரிசுத்தராயிருக்கிறார்.

## ௱. சங்கீதம்.

(துதி சங்கீதம்.)

பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தனை ஆர்ப்பரியுங்கள்.* * சங். ௬௬. ௪.

௨ கர்த்தருக்கு மகிழ்ச்சியோடே ஆராதனை செய்து, கெம்பீர சத்தத்தோடே அவர் முன்பாக வாருங்கள்.

௩ கர்த்தரே பராபரனென்று அறியுங்கள்; நாமல்ல, அவரே நம்மைத் தமக்குச் சனமும் தம்முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாக்கினார்.* * சங். ௯௫. ௭.

௪ அவர் வாசல்களிலே துதியோடும் அவர் பிரகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவேசித்து, அவரைத் துதித்து, அவருடைய நாமத்தைத் தோத்திரியுங்கள்.

௫ ஏனெனில் கர்த்தர் நல்லவர்; அவருடைய கிருபை என்றென்றைக்கும், அவருடைய உண்மை தலைமுறைதலைமுறையாகவுமுள்ளது.* * சங். ௱௩௬. ௨.

## ௱௧. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கிருபையையும், நியாயத்தீர்ப்பையும் குறித்துப் பாடுவேன்; கர்த்தாவே, உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௨ உத்தமமான வழியிலே விவேகியாயிருப்பேன்; எப்பொழுது என்னண்டைக்கு வருவீர்? என் மன உண்மையாய் என் வீட்டுக்குள் நடந்துகொள்வேன்.

௩ நான் பேலியாளின் விசேஷத்தை என் கண்களுக்குமுன்பாக வைப்பதில்லை; வழிவிலகுகிறவர்களின் செய்கையைப் பகைக்கிறேன்; அவை என்னோடு ஒட்டிக்கொள்ளாது.

௪ மாறுபாடான இருதயம் என்னைவிட்டு அகலவேண்டும்; பொல்லாதவனை நான் அறிவதில்லை.

௫ தனக்கடுத்தவனை அந்தரங்கத்திலே அவதூறுபண்ணுகிறவனைச் சங்கரிப்பேன்; மேட்டிமைக் கண்ணனையும், பெருமை நெஞ்சுள்ளவனையும் பொறுக்கமாட்டேன்.* * சங். ௰௫. ௩.

௬ என்னோடே வாசம்பண்ண என் கண்கள் தேசத்தில் உண்மையானவர்களைப் பார்க்கும்; உத்தமமான வழியில் நடக்கிறவனே என்னைச் சேவிப்பான்.

௭ கபடம் செய்கிறவன் என் வீட்டுக்குள் இருப்பதில்லை; பொய்களைச் சொல்லுகிற

வன் என் கண்களுக்குமுன்பாக நிலைப்பதில்லை.

௮ எல்லா அக்கிரமக்காரரையும் கர்த்தருடைய பட்டணத்தில் இராதபடிக்கு, வேரறுக்கத் தேசத்தில் ஆகாதவர்களை எல்லாம் அதிகாலமே சங்கரிப்பேன்.

## ௱௨. சங்கீதம்.

(சிறுமைப்பட்டவன் தொய்ந்து, கர்த்தருக்குமுன்பாகத் தன் கெஞ்சுதலை ஊற்றிச் செய்யும் விண்ணப்பம்.)

கர்த்தரே, என் விண்ணப்பத்தைக் கேளும்; என் கூப்பிடுதல் உம்மண்டைக்குச் சேர்வதாக.

௨ எனக்கு நெருக்கம் உண்டாகிய நாளிலே உமது முகத்தை எனக்கு மறைக்காதிரும்; உமது செவியை என்னண்டைக்குச் சாயும்; நான் கூப்பிடுகிறநாளிலே எனக்குத் தீவிரமாய் உத்தரவு அருளிச்செய்யும்.

௩ ¶ ஏனெனில் என் நாள்கள் புகையைப்போலே பறிந்தன; என் எலும்புகள் ஒரு கொள்ளியைப்போல எரியுண்டன.

௪ என் இருதயம் ஒரு பூண்டைப்போல வெட்டுண்டு உலர்ந்தது; ஆகையால் என் அப்பத்தைப் புசிக்க மறக்கிறேன்.

௫ என் பெருமூச்சின் சத்தத்தினாலே என் எலும்புகள் என் மாம்சத்தோடு ஒட்டிக்கொள்ளுகின்றன.

௬ வனாந்தரநாரைக்கு ஒப்பானேன்; பாழ்ந்தலங்களில் தங்கிய ஆந்தையைப்போலானேன்.

௭ நான் நித்திரையில்லாமல் வீட்டின்மேல் தனித்திருக்கும் குருவியைப்போல இருக்கிறேன்.

௮ நாள்தோறும் என் சத்துருக்கள் என்னை நிந்திக்கிறார்கள்; எனக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டுகிறவர்கள் என்மேல் ஆணையிடுகிறார்கள்.* *புலம். ௨. ௰௫, ௰௬.

௯ ஏனெனில் உமது சினத்தாலும், உமது கடுங்கோபத்தாலும், நான் சாம்பலை அப்பமாகப் புசித்து, என் பானங்களை அழுகையோடே கலக்குகிறேன்.

௰ ஏனெனில் என்னைத் தூக்கித் தாழத் தள்ளினீர்.

௰௧ ¶ என் நாள்கள் சாய்ந்துபோகிற நிழலைப்போலாயின; நான் ஒரு பூண்டைப்போல உலருகிறேன்.* *சங். ௯௰. ௬, ௯. யோபு. ௰௪. ௨.

௰௨ ஆனால் கர்த்தாவே, தேவரீர் என்றென்றைக்கும் இருக்கிறீர்; உம்முடைய பேர்ப்பிரஸ்தாபம் தலைமுறைதலைமுறையாக நிற்கும்.

௰௩ தேவரீர் எழுந்தருளி, சீயோனுக்கு இரங்குவீராக; ஏனெனில் அதின்மேல் தயையாகிறதற்குக் காலமாம்; ஆதேனென்றால் அதற்காகக் குறித்தநேரம் வந்தது.

௰௪ ஏனெனில் உம்முடைய ஊழியக்காரர் அதின் கற்கள்மேல் ஆசை வைத்து அதின் மண்ணுக்குப் பரிதபிக்கிறார்கள்.

௰௫ ¶ கர்த்தர் சீயோனைக் கட்டி, தமது மகிமையில் வெளிப்பட்டு,

௰௬ ¶ சகாயமற்றவனுடைய விண்ணப்பத்தை அசட்டைபண்ணாமல், அவர்கள் செபத்தைநோக்கிப் பார்க்கும்போது,

௰௭ சாதிகள் கர்த்தருடைய நாமத்துக்கும், பூமியிலுள்ள இராசாக்களெல்லாம் உம்முடைய மகிமைக்கும் பயப்படுவார்கள்.

௰௮ இது பின்சந்ததிக்கு எழுதப்படும்.

௰௯ கர்த்தர் கட்டுண்டவர்களின் பெருமூச்சைக் கேட்கவும், கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களை விடுதலையாக்கவும்,

௨௰ தம்முடைய பரிசுத்த உயரத்திலிருந்து பார்த்து, வானங்களிலிருந்து பூமியின்மேலே கண்ணோக்கினார் என்கிறதின்நிமித்தம் சிருஷ்டிக்கப்படப்போகிற சனம் கர்த்தரைத் துதிக்கும்.

௨௧ கர்த்தருக்கு ஆராதனைசெய்ய, சனசதங்களும் இராச்சியங்களும் ஏகமாய்க் கூடிக்கொள்ளுகையில்,

௨௨ சீயோனிலே கர்த்தருடைய நாமத்தையும், எருசலேமிலே அவருடைய துதி

யையும் விவரிப்பார்கள்.

௨௩ ¶ என் பெலனையோ வழியிலே ஒடுக்கி, என் நாள்களைக் குறுக்குகிறார்.

௨௪ என் பராபரனே, என்னை என் ஆயுசின் பாதியில் எடுத்துக்கொள்ளாதிரும் என்கிறேன்; உம்முடைய வருஷங்கள் தலைமுறைதலைமுறைகளாக இருக்கும்.

௨௫ பூர்வத்திலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்கள் உம்முடைய கைகளின் கிரியையாயிருக்கின்றன.*

* எபி. ௧. ௰, ௰௨.

௨௬ அவைகள் அழிந்துபோம்; நீரோ நிலைநிற்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழையவைகளாய்ப்போம்; அவைகளை ஒரு சால்வையைப்போல மாற்றுவீர்; அவைகள் மாறிப்போகும்.

௨௭ நீரோவென்றால் இருக்கிறபிரகாரமாக இருக்கிறீர்; உம்முடைய வருஷங்கள் முடிந்துபோவதில்லை.

௨௮ உம்முடைய அடியாரின் பிள்ளைகள் நிலைகொண்டிருப்பார்கள்; அவர்கள் வித்து உமக்குமுன்பாக உறுதிப்படும்.*

* சங். ௬௯. ௩௭.

## ௱௩. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

என் ஆத்துமாவே, கர்த்தரையும், என் முழு உள்ளமே, அவருடைய பரிசுத்தநாமத்தையும் தோத்திரி.

௨ என் ஆத்துமாவே, கர்த்தரைத் தோத்திரி, அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதிரு.

௩ ¶ அவர் உன் அக்கிரமங்களை எல்லாம் மன்னித்து, உன் நோக்காட்டையெல்லாம் குணமாக்கி,

௪ உன் பிராணனை அழிவுக்கு விலக்கி மீட்டு உன்னைக் கிருபையாலும் இரக்கங்களாலும் முடிசூட்டி,* * யோபு. ௩௩. ௨௪, ௨௫, ௨௮.

௫ உன் வாயை நன்மையால் திருப்தியாக்குகிறதினாலே, கழுகுக்குச் சமானமாய் உன் வயது திரும்ப வாலவயதுபோலாகிறது.

௬ ¶ ஒடுக்கப்பட்ட யாவருக்கும் கர்த்தர் நீதியும் நியாயமும் செய்கிறார்.

௭ அவர் தம்முடைய வழிகளை மோசேக்கும், தம்முடைய கிரியைகளை இஸ்ரவேல் புத்திரருக்கும் தெரியப்பண்ணினார்.

௮ கர்த்தர் மன உருக்கமும், இரக்கமும், நீண்டசாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.* * சங். ௮௬. ௰௫; ௱௪௫. ௮. ௨ மோ. ௩௪. ௬.

௯ நித்தியகாலமாக வழக்காடார்; என்றைக்கும் கோபம் வைக்கார்.*

* ஏசா. ௫௭. ௰௬.

௰ அவர் நம்முடைய பாவங்களுக்குத்தக்கதாக நமக்குச் செய்யாமலும், நம்முடைய அக்கிரமங்களுக்குத்தக்கதாக நமக்குச் சரிக்கட்டாமலும் இருக்கிறார்.

௰௧ ஏனெனில் பூமியின்மேல் வானமிருக்கும் உயரம்போல அவருடைய கிருபை அவருக்குப் பயந்தவர்கள்மேல் வல்லபமாயிருக்கிறது.

௰௨ மேற்குக்கும் கிழக்குக்குமிருக்கும் தூரமாக நம்முடைய மீறுதல்களை நம்மைவிட்டு விலக்குகிறார்.

௰௩ தகப்பன் பிள்ளைகளுக்கு இரங்குவதுபோல, கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார்.

௰௪ ¶ ஏனென்றால் நாம் என்ன உருவென்று அவர் அறிவார்; நாம் மண்ணென்று நினைவுகூருகிறார்.

௰௫ மனுஷன் தன் நாள்களில் புல்லுக்கு ஒப்பாயிருக்கிறான்; வெளியின் புஷ்பத்தைப்போல பூக்கிறான்.* * சங். ௯௰. ௫, ௬. யோபு. ௰௪. ௧, ௨. ஏசா. ௪௰. ௬, ௮. [illegible].

௰௬ ஏனெனில் காற்று அதின்மேல் வீசிக் கடந்தவுடனே அது போயிற்று; அதின் தலம் அப்புறம் அதை அறிந்திராது.

௰௭ ஆனால் கர்த்தருடைய கிருபை அவருக்குப் பயந்தவர்கள்மேலும், அவருடைய

௧௭ அவர்கள் பிள்ளைகளுடைய பிள்ளைகளின்மேலும் அநாதியாய் என்றென்றைக்கும் உள்ளது.* *சங். ௱௰௭. ௨.

௰௮ அவருடைய உடம்படிக்கையைக் கைக்கொண்டு, அவருடைய கட்டளைகளை அவைகளின்படி செய்யும்படியாக நினைக்கிறவர்களின்மேலேதானே.* *௫ மோ. ௭. ௯.

௰௯ கர்த்தர் வானங்களில் தம்முடைய ஆசனத்தை உறுதிப்படுத்தினார்; அவருடைய இராசரீகம் சகலத்தையும் ஆளுகிறது.

௨௰ கர்த்தருடைய சொற்படிகேட்டு, அவருடைய வசனத்தின்படி செய்கிற பெலத்த சவுரிபவான்களாகிய அவருடைய தூதர்களே, அவரைத் தோத்திரியுங்கள்.* *தானி. ௭. ௰.

௨௧ கர்த்தருக்குப் பிரியமானதைச் செய்து, அவர் வேலையாள்களாயிருக்கிற அவருடைய எல்லாச் சேனைகளே, அவரைத் தோத்திரியுங்கள்.

௨௨ கர்த்தர் ஆளுகிற எவ்விடங்களிலுமுள்ள அவருடைய எல்லாக் கிரியைகளே, அவரைத் தோத்திரியுங்கள்; என் ஆத்துமாவே கர்த்தரைத் தோத்திரி.

## ௱௪. சங்கீதம்.

என் ஆத்துமாவே, கர்த்தரைத் தோத்திரி; என் பராபரனாகிய கர்த்தாவே, மிகவும் பெரியவராயிருக்கிறீர்; மகிமையையும் கனத்தையும் அணிந்துகொண்டிருக்கிறீர்.* * சங். ௯௰௩. ௧.

௨ வெளிச்சத்தை வஸ்திரம்போல உடுத்து, வானங்களைத் திரையைப்போல விரித்திருக்கிறார்.* *௧ யோ. ௧. ௫. ஏசா. ௪௰. ௨௨: ௪௪. ௨௪.

௩ தம்முடைய மேல்வீடுகளைத் தண்ணீர்களால் மச்சுப்பாவி, மேகங்களைத் தமது இரதமாக்கி, காற்றினுடைய செட்டைகளின் மேலே நடக்கிறார்.* *சங். ௰௮. ௰௧.

௪ தம்முடைய தூதரை ஆவிகளும், தம்முடைய வேலைக்காரரை அக்கினிக் கொழுந்துகளும் ஆக்குகிறார்.* *எபி. ௧. ௭.

௫ ¶ பூமியை அதின் மூலங்களின்மேல் அது நித்தகாலமும் என்றைக்கும் அசையாதபடிக்கு அஸ்திபாரப்படுத்தினார்.

௬ அதை உடுப்பினால் மூடுவதுபோல ஆழத்தால் மூடினீர்; பருவதங்களின்மேலே தண்ணீர்கள் நின்றன.

௭ அவைகள் உம்முடைய உதம்புதலால் விலகியோடி, உமது குமுறலின் சத்தத்தால் முறிந்துபோயின.

௮ மலைகள் வளர்ந்து, பள்ளத்தாக்குகள் நீர் அவைகளுக்கு அஸ்திபாரப்படுத்தின இடமாய்த் தாழ்ந்தன.

௯ அவைகள் பூமியை மூடத்திரும்பாதபடிக்கு அவைகள் கடவாதிருக்கும் எல்லையை வைத்தீர்.* *௧ மோ. ௧. ௯. யோபு. ௩௮. ௰, ௰௧. வாக். ௮. ௨௯.

௰ ¶ மலைக்கு நடுவாய் ஓட பள்ளத்தாக்குகளில் ஊற்றுகளை வரவிடுகிறீர்.

௰௧ அவைகள் வெளியின் சீவன்களுக்கெல்லாம் தண்ணீர்காட்டும்; அங்கே காட்டுக் கழுதைகள் தங்கள் தாகத்தைத் தீர்க்கும்.

௰௨ அவைகளின் ஓரமாய் ஆகாயத்துப் பறவைகள் சஞ்சரித்து கிளைகளுக்குள்ளிருந்து சத்தம்காட்டும்.

௰௩ பர்வதங்களுக்குத் தம்முடைய மேல்வீடுகளிலிருந்து தண்ணீர் இறைக்கிறார்; உம்முடைய கிரியைகளின் பலனாலே பூமி திருப்தியாகும்.

௰௪ ¶ மிருகங்களுக்குப் புல்லையும், மனிதருக்கு ஆகாரமாகப் பயிர்வகைகளையும் முளைப்பித்து, பூமியிலிருந்து அப்பத்தையும் வரப்பண்ணுகிறார்.

௰௫ கொடிமுந்திரிகைப்பழ இரசம் மனிதனுடைய இருதயத்தை முகக்களை எண்ணெயாய் விளங்க மகிழ்ச்சியாக்கும், அப்பம் மனிதனுடைய இருதயத்தை ஆதரிக்கும்.

௰௬ கர்த்தருடைய விருட்சங்களும், அவர் நாட்டின லீபனோனின் கேதுருக்களும் ரசனை நிரம்பியிருக்கும்.

௰௭ அங்கே குருவிகள் கூடுகட்டும், பாய்மரவிருட்சங்கள் கொக்குகளின் குடியிருப்பு.

௰௮ உயர்ந்த பர்வதங்கள் காட்டாடுகளுக்காயின; கல்மலைகள் குழிமுசல்களுக்கு அடைக்கலம்.

௰௯ ¶ சந்திரனைக்காலக்குறிப்புகளுக்காகப் படைத்தார்; சூரியன் தன் அஸ்தமிப்பை அறியும்.

௨௰ இராத்திரியாகும்படிக்கு இருளைக் கட்டளையிடுகிறீர்; அதிலே சகல காட்டுச்சீவன்களும் நடமாடும்.

௨௰௧ சிங்கக்குட்டிகள் இரைக்கும், பராபரனால் தங்கள் ஆகாரத்தைத் தேடுகிறதற்கும் கெர்ச்சிக்கும்.

௨௰௨ சூரியன் உதிக்கையில் அவைகள் ஒதுங்கி, தங்கள் தாபரங்களில் படுத்துக்கொள்ளும்.

௨௰௩ அப்போது மனிதன் தன் வேலைக்கும், தன் பண்ணைக்கும் சாயங்காலமட்டாகப் புறப்படுகிறான்.

௨௰௪ ¶ கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் எத்தனை திரள்; அவைகளை எல்லாம் ஞானமாய்ப் படைத்தீர்; பூமி உம்முடைய பொருள்களால் நிறைந்திருக்கிறது.

௨௰௫ இந்தப் பெரியதும் விஸ்தாரமுமான சமுத்திரமுந்தானே; அங்கே சிறியவைகளும் பெரியவைகளுமாய் அசைவாடுகிற எண்ணிக்கைக்குள் அடங்காத சீவன்களுண்டு.

௨௰௬ அங்கே கப்பல்களும், அதில் விளையாட நீர் உருவாக்கின திமிங்கலங்களும் நடமாடும்.

௨௰௭ தங்களுடைய ஆகாரத்தை ஏற்றவேளையிலே தர அவைகளெல்லாம் உம்மை நம்பியிருக்கும்.* *சங். ௱௪௫. ௰௫.

௨௰௮ அவைகளுக்கு நீர் கொடுக்க வாங்கிக்கொள்ளும்; நீர் உம்முடைய கையைத்திறக்க நன்மையால் திருப்தியாகும்.

௨௰௯ நீர் உமது முகத்தை மறைக்கத் திகைக்கும்; நீர் அவைகளின் சுவாசத்தை வாங்கிக்கொள்ள, அவைகள் மாண்டு, தங்கள் தூளுக்குத் திரும்பும்.

௩௰ நீர் உம்முடைய ஆவியை அனுப்பும்போது சிருஷ்டிக்கப்படும்; பூமியின் உருவையும் புதிதாக்குகிறீர்.

௩௰௧ ¶ கர்த்தருடைய மகிமை என்றென்றைக்கும் இருப்பதாக; கர்த்தர் தம்முடைய கிரியைகளால் மகிழுவாராக.* *௧ மோ. ௧. ௩௧.

௩௰௨ அவர் பூமியை நோக்கிப்பார்க்கிறபோது அதிரும்; அவர் பருவதங்களைத் தீண்டுகிறபோது புகையும்.

௩௰௩ நான் உயிரோடிருக்கையில் என் கர்த்தாவைப் பாடுவேன்; நான் இருக்கும்மட்டுக்கும் என் பராபரனைக் கீர்த்தனம்பண்ணுவேன்.* *சங். ௱௪௬. ௨.

௩௰௪ அவர்மேல் இருக்கிற என் தியானம் இனிதாயிருக்கும்; நான் கர்த்தருக்குள் மகிழுவேன்.

௩௰௫ பாவிகள் பூமியிலிருந்து நிர்மூலமாகி, ஆகாதவர்கள் இனியிராமல் போகக்கடவார்கள்; என் ஆத்துமாவே, கர்த்தனைத் தோத்திரி; அல்லேலூயா.

## ௱௫. சங்கீதம்.

கர்த்தனைத் துதித்து, அவருடைய நாமத்தைப் பிரஸ்தாபமாக்குங்கள்; அவருடைய செய்கைகளைச் சனசதனங்களுக்குள்ளே அறிவியுங்கள்.* *௧ நாளா. ௰௬. ௮, ௨௨.

௨ அவரைப் பாடி, அவரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய அதிசயங்களை எல்லாம் தியானித்துப் பேசுங்கள்.

௩ அவருடைய பரிசுத்த நாமத்திற்காக மேன்மைபாராட்டுங்கள்; கர்த்தனைத் தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக.

௪ கர்த்தருக்காகவும் அவர் வல்லமைக்காகவும் விசாரித்துக்கேட்டு, நித்தம் அவர் சமுகத்தைத் தேடுங்கள்.

௫ அவருடைய தாசனாகிய ஆபிரகாமின்

வித்தே, அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களாகிய யாக்கோபின் புத்திரரே,

௬ அவர் செய்த அவருடைய அதிசயங்களையும், அவருடைய அற்புதங்களையும், அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நினையுங்கள்.

௭ ¶ அவரே நம்முடைய பராபரனாகிய கர்த்தர்; பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகள் விளங்கும்.

௮ அவர் ஆயிரம் தலைமுறைக்குக் கட்டளையிட்ட வார்த்தையாக ஆபிரகாமோடே பண்ணின தமது உடம்படிக்கையையும்,

௯ இசாக்குக்கு இட்ட தமது ஆணையையும் என்றென்றைக்கும் நினைக்கிறார்.

௰ இதை யாக்கோபுக்குத் தீர்மானமாகவும், இஸ்ரவேலுக்கு நித்திய உடம்படிக்கையாகவும் உறுதிப்படுத்தி,

௰௧ உனக்கு உங்கள் சுதந்தரத்தின் வீதமாகிய கானான் சீமையைக் கொடுப்போமென்று,

௰௨ அவர்கள் அதிலே கொஞ்சத்தொகைக்குள்ப்பட்டபேரும் பரதேசிகளுமாயிருக்கையில் சொன்னார்.

௰௩ அவர்கள் ஒரு சாதியைவிட்டு மறுசாதியண்டைக்கும், ஒருஇராச்சியத்தைவிட்டு மறுசனத்தண்டைக்கும் நடந்துபோனார்கள்.

௰௪ ஒருவரும் அவர்களை ஒடுக்கவொட்டாதிருந்தார்.

௰௫ நாம் அபிஷேகம்பண்ணினவர்களை நீங்கள் தொடாமலும், நம்முடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்குசெய்யாமலும் இருங்களென்று அவர்கள் நிமித்தமாக இராசாக்களைக் கடிந்துகொண்டார்.* *௧மோ.௨௰.௩,௭.

௰௬ அவர் தேசத்தின்மேல் பஞ்சத்தை வரவழைத்து, அப்பமென்ற ஆதரவுகோலையெல்லாம் முறித்தார்.

௰௭ ¶ அவர்களுக்கு முன்னாலே ஒரு புருஷனை அனுப்பினார்; யோசேப்பு சிறையாக விற்றுப்போடப்பட்டான்.

௰௮ அவர் சொன்னது வருங்காலமட்டாக அவன் கால்களை விலங்குபோட்டு ஒடுக்கினார்கள்; அவன் பிராணன் இரும்பில் அடைபட்டது.

௰௯ கர்த்தருடைய வசனம் அவனைப் புடமிட்டது.

௨௰ இராசா அனுப்பி அவனைக் கட்டவிழ்க்கச்சொன்னான்; சனசதளங்களின் அதிபதி அவனை விடுதலைபண்ணினான்.

௨௧ தன் பிரபுக்களை அவன் மனதின்படி கட்டவும், தன் மூப்பர்களை ஞானிகளாக்கவும்,

௨௨ அவனைத் தன் வீட்டுக்கு ஆண்டவனும், தன் ஆஸ்திக்கெல்லாம் அதிபதியுமாக்கினான்.

௨௩ ¶ அப்போது இஸ்ரவேல் எகிப்திலே வந்தான்; யாக்கோபு காம்தேசத்தில் பரதேசியாயிருந்தான்.

௨௪ தம்முடைய சனத்தை மெத்தவும் பலுகவும், அதின் சத்துருக்களைப்பார்க்கிலும் அதைப் பெலக்கவும்பண்ணினார்.

௨௫ அவர்கள் இருதயம் அவருடைய சனத்தைப் பகைக்கவும், அவருடைய ஊழியக்காரரைச் சர்ப்பனைசெய்யவும் மாறிப்போயிற்று.

௨௬ தம்முடைய தாசனாகிய மோசேயையும், தாம் தெரிந்துகொண்ட ஆரோனையும் அனுப்பினார்.

௨௭ ¶ இவர்கள் அவர்களுக்குள் காம்தேசத்திலே அவர் சொன்ன அடையாளங்களையும், அற்புதங்களையும் செய்தார்கள்.

௨௮ இருளை அனுப்பி அந்தகாரமுண்டாக்கினார்; அவருடைய வார்த்தைகளுக்கு எதிர்ப்பாரில்லை.

௨௯ அவர்களுடைய தண்ணீர்களை இரத்தமாக மாற்றி, அவர்கள் மச்சங்களைச் சாகப்பண்ணினார்.

௩௰ அவர்கள் தேசம் தவளைகளைத் திரளாய்ப் பிறப்பித்தது, அவர்களுடைய இராசாக்களின் அறைவீடுகளிலும் உண்டாகத்தானே.

௩௧ அவர் விளம்பினபோது அவர்கள் எல்லைகளிலெங்கும் வண்டுச்சாதிகளும் பேன்களும் வந்தன.

௩௨ அவர்கள் மழைகளைக் கல்மழையாக்கி அவர்கள் தேசத்திலே சுவாலைவிட்டு எரியும் அக்கினியைக் கட்டளையிட்டு,

௩௩ அவர்களுடைய கொடிமுந்திரிகைச் செடிகளையும் அவர்கள் அத்திமரங்களையும் அழித்து, அவர்கள் எல்லைகளிலுள்ள மரங்களை முறித்தார்.

௩௪ அவர் விளம்பினபோது எண்ணிமுடியாத வெட்டுக்கிளிகளும், பச்சைக்கிளிகளும் வந்து,

௩௫ அவர்கள் தேசத்திலுள்ள சகல பூண்டையும் அரித்து, அவர்கள் நிலத்தின் கனியைத் தின்றுவிட்டன.

௩௬ அவர்கள் தேசத்திலே அவர் முதல்பேறனைத்தையும், அவர்களுடைய பெலத்திலெல்லாம் தலைமையானவர்களையும் சங்கரித்தார்.

௩௭ அப்போது இவர்களை வெள்ளியோடும், பொன்னோடும் புறப்படப்பண்ணினார்; இவர்கள் கோத்திரங்களில் இடறினவனுமில்லை.

௩௮ இவர்கள் புறப்படுகையிலே எகிப்து மகிழ்ந்தது; ஏனெனில் இவர்கள் பயம் அவர்கள்மேலே விழுந்தது.

௩௯ மறைவிடமாக ஒரு மேகத்தையும், இரவை வெளிச்சமாக்குகிறதற்காக அக்கினியையும் விரித்தார்.

௪௰ கேட்டார்கள்; அப்போது காடைகளை வரப்பண்ணினார்; வான அப்பத்தாலும் அவர்களைத் திருப்தியாக்கினார்.

௪௧ கன்மலையைத் திறந்தார்; அப்போது தண்ணீர்கள் புறப்பட்டு, வறண்ட வெளிகளில் ஆறாய் ஓடின.

௪௨ ¶ ஏனெனில் அவர் தம்முடைய பரிசுத்த வார்த்தையையும் தம்முடைய தாசனாகிய ஆபிரகாமையும் நினைத்து,* *௧ மோ. ௰௫. ௰௩, ௰௪.

௪௩ தம்முடைய சனத்தைக் களிப்போடும், தாம் தெரிந்துகொண்டவர்களைக் கெம்பீரத்தோடும் புறப்படப்பண்ணி,

௪௪ அவர்கள் தம்முடைய பிரமாணங்களைக் காத்து நடப்பதற்கும், தம்முடைய நியாயநெறிகளைக் கைக்கொள்வதற்குமென்று,

௪௫ அவர்களுக்குச் சாதிகளின் தேசங்களைக் கொடுத்தார்; சனசதனங்களின் பிரயாசத்தைச் சுதந்தரித்துக்கொண்டார்கள்; அல்லேலூயா.

## ௱௬. சங்கீதம்.

அல்லேலூயா, கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது.* *சங். ௱௭. ௧: ௱௩௬. ௧.

௨ கர்த்தருடைய வல்லமைகளைச் சொல்லி அவருடைய துதியை எல்லாம் பிரஸ்தாபமாக்கத்தக்கவன் யார்?

௩ எல்லாக்காலத்திலும் நியாயத்தைக் கைக்கொண்டு நீதியைச் செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௪ ¶ கர்த்தாவே, நான் உம்மாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் நன்மையைக் கண்டு, உம்முடைய சாதியின் மகிழ்ச்சியால் மகிழ்ந்து, உம்முடைய சுதந்தரத்தோடுகூட மேன்மைபாராட்டும்படிக்கு.

௫ நீர் உம்முடைய சனத்தின்மேலுள்ள கிருபையின்படி என்னை நினைத்து, உமது இரட்சிப்பினால் என்னைச் சந்தித்தருளும்.

௬ ¶ எங்கள் பிதாக்களோடுங்கூட நாங்கள் பாவஞ்செய்து, அக்கிரமம் நடப்பித்து, ஆகாமியம்பண்ணினோம்.* *தானி. ௯. ௫.

௭ எங்கள் பிதாக்கள் எகிப்திலே உம்முடைய அதிசயங்களை உணராமலும், உம்முடைய கிருபைகளின் திரட்சியை நினையாமலும் போய் நாணற்கடலாகிய சமுத்திரத்தோரத்தில் கலகம்பண்ணினார்கள்.* *௨ மோ. ௰௪. ௰௧, ௰௨.

௮ ஆனால் அவர் தமது வல்லமையை அறி

யப்பண்ணும்படிக்கு, அவர்களைத் தம்முடைய நாமத்தின்நிமித்தமாக இரட்சித்து,

௯ நாணற்கடலை உதம்பினார்; அது வரண்டுபோயிற்று; அப்போது அவர் வெட்டாந்தரையைப்போலான ஆழங்களில் அவர்களை நடக்கப்பண்ணி,

௰ அவர்களைப் பகைஞன் கைக்கு விலக்கி இரட்சித்து, சத்துருவின் கைக்கு அவர்களை விலக்கி மீட்பார்.

௰௧ ஆனால் அவர்கள் சத்துருக்களைத் தண்ணீர்கள் மூடின; அவர்களில் ஒருவனும் மீந்ததில்லை.

௰௨ அப்போது அவருடைய வார்த்தைகளின்மேலே விசுவாசித்து, அவருடைய துதியைப் பாடினார்கள்.* *௨ மோ. ௰௪. ௧. மு.

௰௩ ஆனால் சீக்கிரமாய் அவருடைய கிரியைகளை மறந்தார்கள்; அவர்கள் அவருடைய ஆலோசனைக்குக் காத்திராமல்,

௰௪ வனாந்தரத்தில் இச்சையுள்ளவர்களாகிப் பராபரனை அவாந்தரவெளியிலே பரிட்சைபார்த்தார்கள்.

௰௫ அப்போது அவர்கள் கேட்டதை அவர்களுக்குக் கொடுத்தார்; ஆனால் அவர்கள் ஆத்துமாக்களில் இளைப்பை அனுப்பினார்.

௰௬ ¶ அவர்கள் மோசேயின்மேலும், கர்த்தருடைய பரிசுத்தனாகிய ஆரோனின்மேலும் பாளயத்தில் பொறாமையானார்கள்.

௰௭ பூமி திறவுண்டு, தாத்தானை விழுங்கி, அபிராமின் கும்பை மூடிப்போட்டது.

௰௮ அவர்கள் கும்பிலே அக்கினி பற்றியெரிந்தது, அக்கினிச்சுவாலை ஆகாதவர்களைச் சுட்டுப்போட்டது.

௰௯ ¶ அவர்கள் ஓரேப்பிலே ஒரு கன்றுக்குட்டியை உண்டாக்கி, வார்க்கப்பட்ட விக்கிரகத்தைப் பணிந்துகொண்டு,

௨௰ தங்கள் மகிமையைப் புல்லைத்தின்னும் மாட்டின் சாயலாக மாற்றினார்கள்.

௨௰௧ காம்தேசமாகிய எகிப்திலே பெரிய கிரியைகளையும், அதிசயங்களையும், நாணற்கடலண்டையிலே பயங்கரங்களையும் செய்தவராகிய,

௨௰௨ தங்கள் இரட்சிப்பின் பராபரனை மறந்தார்கள்.

௨௰௩ ஆனபடியினாலே அவரால் தெரிந்துகொள்ளப்பட்ட மோசே, அவருடைய உக்கிரத்தை அவர்களை அழிக்காதபடிக்குத் திருப்ப, அவருக்குமுன்பாக இடிதலிலே நில்லாதிருந்தானாகில் அவர்களை நாசம்பண்ணுவோமென்றார்.

௨௰௪ ¶ அவருடைய வார்த்தையை விசுவாசியாமல், இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்டைபண்ணினார்கள்.

௨௰௫ கர்த்தருடைய சத்தத்திற்குச் செவிகொடாமல் தங்கள் கூடாரங்களில் முறுமுறுத்தார்கள்.

௨௰௬ ஆகையினாலே அவர்களை வனாந்தரத்திலே மடியவைக்கவும், அவர்கள் வித்தைச் சாதிகளுக்குள்ளே மடியவைக்கவும், அவர்களைத் தேசங்களில் சிதறடிக்கவும்,

௨௰௭ தம்முடைய கையை அவர்களுக்கு விரோதமாக எடுத்தார்.

௨௰௮ ¶ அவர்கள் பேயோர்பாகாலுக்கு உடந்தையாகி, சீவனில்லாதவைகளுக்கு இட்டபலிகளைப் புசித்து,

௨௰௯ தங்கள் கிரியைகளால் அவருக்குக் கோபம் உண்டாக்கினார்கள்; ஆகையால் சங்காரம் அவர்களுக்குள் புகுந்தது.

௩௰ அப்போது பினேகாஸ் எழுந்துநின்று நியாயஞ்செய்தான்; அதனால் சங்காரம் நிறுத்தப்பட்டது.

௩௰௧ அவை அவனுக்கு என்றுமுள்ள தலைமுறை தலைமுறைக்கும் நீதியாக எண்ணப்பட்டது.

௩௰௨ ¶ மெரிபாவின் தண்ணீர்களிடத்திலும் அவருக்குக் கடுங்கோபம் உண்டாக்கினார்கள்; அவர்கள் நிமித்தமாக மோசேக்கும் பொல்லாப்பு வந்தது.*

*௪ மோ. ௨௰. ௰௨.

௩௰௩ ஏனெனில் அவர்கள் அவன் ஆவிக்

குக் கோபமூட்டினதினாலே தன் உதடுகளால் பதறிப்பேசினான்.

௩௪ ¶ கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி அவர்கள் சனசதளங்களை அழிக்காமல்,

௩௫ சாதிகளுடனே கலந்து, இவர்கள் கிரியைகளைக் கற்று,

௩௬ இவர்களுடைய விக்கிரகங்களுக்கு ஆராதனைசெய்தார்கள்; இப்படியே அவர்களுக்கு இவர்கள் சுருக்கானார்கள்.

௩௭ அவர்கள் தங்கள் குமாரரையும், தங்கள் குமாரத்திகளையும் பசாசுகளுக்குப் பலியிட்டு,

௩௮ குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தினார்கள்; தாங்கள் கானானின் விக்கிரகங்களுக்குப் பலியிட்ட தங்கள் குமாரர் குமாரத்திகளுடைய இரத்தத்தைத்தானே சிந்தின இரத்தங்களால் அவர்கள் தேசம் தீட்டுப்பட்டது.

௩௯ அவர்கள் தங்கள் கிரியைகளால் அழுக்காகி, தங்கள் செய்கைகளால் சோரம் போனார்கள்.

௪௰ ¶ ஆகையால் கர்த்தருடைய கோபம் அவருடைய சனத்தின்மேல் மூண்டது; அவர் தமது சுதந்தரத்தை அருவருத்து,

௪௧ அவர்களைச் சாதிகளுடைய கையில் ஒப்புக்கொடுத்தார்; அப்போது அவர்கள் பகைஞர் அவர்களை ஆண்டு,

௪௨ அவர்கள் சத்துருக்கள் அவர்களை ஒடுக்கினார்கள்; இவர்கள் கையின்கீழ்த் தாழ்த்தப்பட்டார்கள்.

௪௩ அநேகந்தரம் அவர்களை விடுவித்தார்; அவர்களோ தங்கள் யோசனையால் அவருக்கு விரோதமாய்க் கலகம்பண்ணி, தங்களுடைய அக்கிரமத்தால் சிறுமைப்படுத்தப்பட்டார்கள்.

௪௪ அவர்கள் கூப்பிடுதலை அவர் கேட்கும்போதோவெனில், அவர்களுக்கு உண்டான இடுக்கத்தை அவர் கண்ணோக்கி,

௪௫ அவர்களுக்காகத் தம்முடைய உடம்படிக்கையை நினைத்து, தம்முடைய மிகுந்த கிருபையின்படி மனஸ்தாபப்பட்டு;

௪௬ அவர்களைச் சிறைபிடித்த யாவருக்கு முன்பாகவும் அவர்களுக்கு இரக்கங்களைக் கிடைக்கப்பண்ணினார்.

௪௭ ¶ எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, நாங்கள் உம்முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி, உமது துதிக்காக மேன்மைபாராட்டும்படிக்கு எங்களை இரட்சித்து, எங்களைச் சாதிகளிலிருந்து சேரும்.

௪௮ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய் என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டவர்; சனமெல்லாம் ஆமென், அல்லேலூயா என்பதாக.

## ௱எ. சங்கீதம்.

கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது.* *சங். ௱௬. ௧: ௱௩௬. ௧.

௨ கர்த்தர் சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி மீட்டு,

௩ பலதேசங்களாகிய கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலும், தெற்கிலுமிருந்து சேர்ந்தவர்கள் அப்படிச் சொல்லக்கடவர்கள்.

௪ ¶ தாபரிக்க ஊரைக்காணாமல் வனாந்தரத்தில் அவாந்தரவழியாய்,

௫ பசியாகவும், தாகமாகவும், ஆத்துமா தொய்ந்ததாகவும் அலைந்து திரிந்து,

௬ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், இவர் தங்கள் இக்கட்டுகளுக்கு நீங்கலாக்கித் தங்களை விடுவித்து.

௭ தாபரிக்கும் ஊருக்குப்போய்ச் சேர செம்மையான வழியிலே நடத்தினாரே.

௮ ¶ அவர்கள் தவனமான ஆத்துமாவைக் கர்த்தர் திருப்தியாக்கி, பசியான ஆத்துமாவை நன்மையால் நிரப்பினாரென்று,

௯ அவரை மனுஷருக்குமுன்பாக அவருடைய கிருபையின் நிமித்தமும், அவருடைய அதிசயங்களின் நிமித்தமும் துதிக்கக் கடவர்கள்.* *சங். ௫௰. ௰௫.

௰ ¶ பராபரனுடைய வார்த்தைகளுக்கு

விரோதமாய்க் கலகம்பண்ணி, உன்னதமானவருடைய ஆலோசனையை அசட்டைபண்ணினபடியினாலே,

௰௧ இருளிலும், மரணநிழலிலும் வைக்கப்பட்டிருந்து, ஒடுக்கத்திலும் இரும்பிலும் கட்டுண்டுகிடந்து,

௰௨ இப்படியே அவர் தங்கள் இருதயத்தை வருத்தத்தாலே தாழ்த்தினதினாலே சகாயர் இல்லாமல் விழுந்திருந்து,

௰௩ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், இவர் தங்கள் இக்கட்டுகளுக்குத் தங்களை நீங்கலாக்கி இரட்சித்து,* *௨ நாளா. ௩௩. ௰௧, ௰௩.

௰௪ இருளிலும், மரணநிழலிலுமிருந்து தங்களை வெளிப்படப்பண்ணி, தங்கள் கட்டுகளை அறுத்தாரே.

௰௫ ¶ அவர்கள் கர்த்தர் வெண்கலக் கதவுகளை உடைத்து, இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்தாரென்று,

௰௬ அவரை மனுஷருக்குமுன்பாக அவருடைய கிருபையின் நிமித்தமும், அவருடைய அதிசயங்களின் நிமித்தமும் துதிக்கக்கடவர்கள்.

௰௭ ¶ நிர்மூடராயிருந்து தங்கள் பாதகமார்க்கத்தாலும், தங்கள் அக்கிரமங்களாலும் நோய்கொண்டு ஒடுங்கி,

௰௮ சகல போசனத்தையும் மனவெறுப்பாய் அரோசித்து, மரணவாசல்கள் பரியந்தம் சமீபித்தவர்களாகி,

௰௯ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், இவர் தங்கள் இக்கட்டுகளுக்குத் தங்களை நீங்கலாக்கி இரட்சித்து,

௨௰ தம்முடைய வசனத்தை அனுப்பி, தங்களைக் குணமாக்கி, தங்கள் அழிவுக்குத் தப்புவித்தாரே.

௨௧ ¶ அவர்கள் கர்த்தரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையின் நிமித்தமும், அவருடைய அதிசயங்களின் நிமித்தமும் துதித்து,

௨௨ தோத்திரப்பலிகளைச் செலுத்தி, அவருடைய கிரியைகளைக் கெம்பீரத்தோடே விவரிக்கக்கடவர்கள்.

௨௩ ¶ சமுத்திரத்திற்கு இறங்கிப்போய்க் கப்பலேறி, பெருந்தண்ணீர்களிலே தொழில்பண்ணுகிறார்களே.

௨௪ அவர்கள் கர்த்தருடைய கிரியைகளையும், ஆழத்திலே அவருடைய அதிசயங்களையும் காண்கிறார்கள்.

௨௫ தாம் சொல்ல அதின் அலைகளை உயரப்பண்ணும் பெருங்காற்றை எழுப்புவார்.

௨௬ ஆகாயத்திற்கு ஏறித் தாழ்வுகளுக்கு இறங்குவார்கள்; அவர்கள் ஆத்துமா விசனத்தினாலே கரைந்துபோம்.

௨௭ வெறித்தவனைப்போல அலைந்து தளம்புவார்கள்; அவர்களுடைய ஞானமெல்லாம் முழுகிப்போம்.

௨௮ ஆனால் தங்கள் ஆபத்திலே அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், இவர் அவர்களைத் தங்கள் இக்கட்டுகளுக்கு நீங்கலாக்கி இரட்சித்து,

௨௯ கொந்தளிப்பை அமர்ந்து நிற்கப்பண்ணுவார்; அவைகளின் அலைகள் மவுனமடையும்.

௩௰ அப்போது அவைகள் தணிந்துபோயினவென்றும், தாங்கள் நாடின குடாக்கடலுக்கு அவர்களைக் கொண்டுவருகிறாரென்றும் சந்தோஷப்படுவார்கள்.

௩௧ ¶ ஆகையால் அவர்கள் கர்த்தரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையின்நிமித்தமும், அவருடைய அதிசயங்களின்நிமித்தமும் துதித்து,

௩௨ சனத்தின் சபையிலே அவரை உயர்த்தி, முதிர்ந்தவர்கள் உட்கார்ந்திருக்கும் இடத்திலே அவரைப் போற்றக்கடவர்கள்.

௩௩ ¶ அவர் ஆறுகளை வெட்டாந்தரையாகவும், நீரூற்றுகளை வரண்ட தலமாகவும்,

௩௪ செழித்த தேசத்தை அதின் குடிகளுடைய பொல்லாப்பின் நிமித்தம் உவர்நிலமாகவும் மாற்றுகிறார்.

௩௫ அவர் வெட்டாந்தரையைத் தண்ணீர்த்

தடாகங்களாகவும், வறண்டநிலத்தை நீரூற்றுகளாகவும் மாற்றி,

௩௬ பசித்தவர்களை அங்கே குடியேற்றுகிறார்; அவர்கள் குடியிருக்கும் ஊரைக் கட்டி,

௩௭ வயல்களை உண்டாக்கி விதைத்து, கொடிமுந்திரிகைத் தோட்டங்களை நாட்டுகிறார்கள்; அவைகள் வரத்துள்ள பலனைத் தரும்.

௩௮ அவர்களை ஆசீர்வதிக்கிறார்; மிகுதியும் பெருகுகிறார்கள்; அவர்களுடைய மிருகசீவன்களைக் குறுகப்பண்ணாதிருக்கிறார்.

௩௯ திரும்பவும் கொஞ்சமாகித் தீங்கினுடைய முற்றிக்கையாலும், சஞ்சலத்தாலும் தாழ்கிறார்கள்.

௪௰ அவர் பிரபுக்களின்மேல் அசட்டையைச் சொரிந்து, அவர்களை வழியில்லாத அவாந்தரத்திலே திரியப்பண்ணி,

௪௧ எளியவனையோ சிறுமையைவிட்டு எடுத்து, உயர்ந்த அடைக்கலத்திலே வைத்து, அவன் வம்சங்களை மந்தையைப்போல ஆக்குகிறார்.

௪௨ செம்மையானவர்கள் அதைக் கண்டு மகிழுகிறார்கள்; ஆனால் நியாயக்கேடெல்லாம் தன் வாயை மூடும்.

௪௩ எவன் ஞானமுள்ளவனோ அவன் இவைகளைக் கவனித்திருக்கக்கடவான்; அப்படிக்கொத்தவர்கள் கர்த்தருடைய கிருபைகளை உணர்ந்துகொள்ளுவார்கள்.

## ௱அ. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

பராபரனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது; நான் பாடிக் கீர்த்தனம்பண்ணுவேன்; என் மகிமையும்கூடத்தானே.*

* சங். ௫௭. ௮. ௰.

௨ தம்புருவே, சுரமண்டலமே விழி; அதிகாலமே விழிப்பேன்.

௩ கர்த்தாவே, உம்மைச் சனசதளங்களுக்குள்ளே துதிப்பேன்; சாதிகளுக்குள்ளே உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௪ ஏனெனில் உமது கிருபை வானங்களுக்கு மேலாகவும், உமது சத்தியம் ஆகாயமண்டலங்கள் பரியந்தமும் பெருகியிருக்கின்றன.* *சங். ௩௬. ௫.

௫ பராபரனே, வானங்களின்மேல் உயரும்; உம்முடைய மகிமை பூமியனைத்தின் மேலும் உயர்வதாக.

௬ உம்முடைய பிரியர் விடுவிக்கப்படும்படிக்கு, நீர் உம்முடைய வலதுகரத்தினாலே இரட்சித்து, எங்கள் செபத்தைக் கேளும்.* *சங். ௬௰. ௭. ௰.

௭ ¶ பராபரன் தம்முடைய பரிசுத்ததலத்தில் சொன்ன உத்தரவிலே களிகூருவேன்; சீகேமைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்கை அளந்துகொள்ளுவேன்.

௮ கிலேயாத் என்னுடையது; மனாசேயும் என்னுடையது; எப்பிராயீம் என் தலையின் பெலன்; யூதா என் நியாயநெறியாளன்.

௯ மோவாப் நான் கழுவுகிற பாத்திரமாயிருக்கும்; ஏதோமின்மேல் என் பாதஇரட்சையை நீட்டுவேன்; பெலிஸ்தேயாவின்மேல் ஆர்ப்பரிப்பேன்.

௰ ¶ என்னை அரணான பட்டணத்திற்குள் வழிவிடுபவர் யார்? என்னை ஏதோம்மட்டும் அழைத்துப்போகுபவர் யார்?

௧௧ பராபரனே, எங்கள் சேனைகளோடே புறப்படாமல், எங்களைத் தள்ளிவிட்டிருந்த பராபரன் தேவரீர் அல்லவோ?

௧௨ இக்கட்டுக்குத்தப்ப எங்களுக்குச் சகாயம் கட்டளையிடும்; ஏனெனில் மனித இரட்சிப்பு அவத்தம்.

௧௩ பராபரனால் பெலன் செய்வோம்; அவரே எங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார்.

## ௱கூ. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் துதியின் பராபரனே, மவுனமாயிராதேயும்.

௨ ஏனெனில் ஆகாதவனுடைய வாயும், கபடவாயும் எனக்கு விரோதமாய்த் திறந்திருக்கின்றன; கள்ளநாவினால் என்னோடே பேசுகிறார்கள்.

௩ பகையான வார்த்தைகளால் என்னைச் சூழ்ந்துகொண்டு, முகாந்தரமில்லாமல் என்மேல் போரிடுகிறார்கள்.

௪ என் சிநேகத்திற்குப் பதிலாக என்னை விரோதிக்கிறார்கள்; நானோவென்றால் செபம்பண்ணிக்கொண்டிருக்கிறேன்.

௫ நன்மைக்குப் பதிலாகத் தீமையையும், என் சிநேகத்திற்குப் பதிலாகப் பகையையும் எனக்குக் காண்பிக்கிறார்கள்.*

*சங். ௩௫. ௰௨.

௬ ¶ ஆகாதவனை அவன்மேல் நிறுத்தும்: சாத்தான் அவன் வலதுபக்கத்தில் நிற்பதாக.

௭ அவன் நியாயந்தீர்க்கப்படுகையில், அவன் ஆகாதவனாய்ப் புறப்படவும், அவன் செபம் பாவமாகவும்கடவது.*

*வாக். ௧. ௨௮, ௩௧.

௮ அவன் நாள்கள் கொஞ்சமாவதாக; அவன் உத்தியோகத்தை வேறொருவன் பெறக்கடவான்.* *அப். ௧. ௨௰.

௯ அவன் பிள்ளைகள் திக்கற்றவைகளும், அவன் பெண்சாதி விதவையுமாவாளாக.

௰ அவன் பிள்ளைகள் அலைந்து பிச்சை எடுத்து, தங்கள் பாழ்க்கடிப்புகளின் நிமித்தம் இரக்கவேணும்.

௰௧ கடன்கொடுத்தவன் அவனுக்கு உண்டானவை எல்லாவற்றையும் சிக்கிக்கொள்ளுவானாக; அந்நியர் அவன் பிரயாசத்தைப் பறிப்பார்களாக.

௰௨ அவன்மேல் தயைபாராட்டுகிறவனும் இல்லாமல், அவனுடைய திக்கற்ற பிள்ளைகளுக்கு இரங்குகிறவனும் இல்லாமற்போவதாக.

௰௩ அவனுக்குப் பின்னானவர்கள் வேரறுப்புண்ணக்கடவார்கள்; இரண்டாம் தலைமுறையில் அவர்கள் நாமம் குலைந்துபோவதாக.

௰௪ அவன் பிதாக்களின் அக்கிரமம் கர்த்தருக்குமுன்பாக நினைக்கப்படவும், அவன் தாயின் பாவம் நீங்காமல்,

௰௫ நித்தம் கர்த்தருக்கு எதிரே இருக்கவுங் கடவது, அவர்கள் பேர் பூமியில் இராமல் வேரறுப்புண்ணக்கடவது.

௰௬ ¶ ஏனென்றால் அவன் தயைசெய்ய நினைவுகொள்ளாமல் சிறுமையும் எளிமையும் மனநோவுமுள்ளவனைக் கொலைப்படுத்தும்படிக்குத் தொடர்ந்து,

௰௭ சாபத்தைச் சிநேகித்தபடியினாலே அது அவனுக்கு வரும்; அவன் ஆசீர்வாதத்தை விரும்பாதேபோனபடியினாலே அது அவனுக்குத் தூரமாம்.

௰௮ அவன் சாபத்தைத் தன் அங்கியாக உடுத்துக்கொண்டபடியினாலே, அது தண்ணீரைப்போலே அவன் உள்ளத்திலும், எண்ணெயைப்போலே அவன் எலும்புகளிலும் பாயும்.

௰௯ அவை அவனுக்கு மூடுவஸ்திரமாகவும், நித்தம் கட்டும் கச்சையாகவும் இருப்பதாக.

௨௰ இது என்னை விரோதிக்கிறவர்களுக்கும் என் ஆத்துமாவுக்கு விரோதமாய்த் தீங்கு பேசுகிறவர்களுக்கும் கர்த்தராலே வருங்கூலி.

௨௧ ¶ ஆனால் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீர் உமது நாமத்தின்நிமித்தமாக என்னை ஆதரித்து உம்முடைய கிருபை நலமானபடியினாலே என்னை விடுவியும்.

௨௨ ஏனெனில் நான் சிறுமையும் எளிமையுமானவன்; என் இருதயம் எனக்குள்ளே குத்துண்டிருக்கிறது.* *சங். ௪௰. ௰௭.

௨௩ சாயும் நிழலைப்போலப் போக்கப்பட்டேன்; ஒரு வெட்டுக்கிளியைப்போலப் பறக்கடிக்கப்படுகிறேன்.

௨௪ உபவாசத்தினால் என் முழங்கால்கள்

தடுமாறுகின்றன; என் மாம்சம் புஷ்டியற உலருகிறது.

௨௫ நான் அவர்களுக்கு நிந்தனையானேன்; அவர்கள் என்னைப் பார்க்கும்போது தங்கள் தலையைத் துலுக்குகிறார்கள்.*

* சங். ௨௨. ௭, ௮: ௬. ௰௧.

௨௬ ¶ என் பராபரனாகிய கர்த்தாவே, எனக்குச் சகாயம்பண்ணும்; உமது கிருபையின்படி என்னை இரட்சியும்.

௨௭ இது உமது கரம் என்றும், கர்த்தாவே, தேவரீர் இதைச் செய்தீரென்றும் அவர்கள் அறிவார்களாக.

௨௮ அவர்கள் சபித்தாலும், நீர் ஆசீர்வதியும்; அவர்கள் எழும்பினாலும், வெட்கப்பட்டுப்போவார்களாக; உம்முடைய அடியானோவெனில் மகிழுவானாக.

௨௯ என்னை விரோதிக்கிறவர்கள் இலச்சையால் உடுத்தப்பட்டுச் சால்வையைப்போலத் தங்கள் வெட்கத்தால் மூடப்படக்கடவர்கள்.* *சங். ௩௫. ௨௬.

௩௰ கர்த்தரை நான் மிகுதியும் என் வாயினாலே துதித்து, அநேகர் நடுவிலே அவரைப் புகழுவேன்.* *சங். ௨௨. ௨௩.

௩௧ ஏனெனில் அவர் எளியவனுடைய வலதுபாரிசத்திலே அவன் ஆத்துமாவை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறவர்களின் கைக்கு விலக்கி இரட்சிப்பதற்காக நிற்கிறார்.*

* சங். ௰௬. ௮.

## ௱௰. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் ஆண்டவருடனே, நாம் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதங்களுக்குப் படியாகப்போடுமட்டும், நம்முடைய வலதுபாரிசத்தில் உட்காருமென்றார்.* *மத். ௨௨. ௪௪.

௨ உமது வல்லமையின் செங்கோலைக் கர்த்தர் சீயோனிலிருந்து அனுப்பி, உம்முடைய சத்துருக்களின் நடுவே ஆளுமென்பார்.

௩ உமது பராக்கிரமத்தின் நாளிலே உம்முடைய சனம் மகா மனப்பூருவமும் பரிசுத்த அலங்காரமுமாயிருக்கும்; அதிகால இருட்டின் கெர்ப்பத்தில் பிறக்கும் பனிக்குச் சமானமாய் உம்முடைய இளந்தைச் சனம் உமக்குப் பிறக்கும்.

௪ நீர் என்றென்றைக்கும் மெல்கிசேதேக்கின் வண்ணமான ஆசாரியரென்று கர்த்தர் ஆணையிட்டார்; மனஸ்தாபப்படாமலும் இருப்பார்.* *எபி. ௫. ௬: ௬. ௨௰: ௭. ௰௭. ழி.

௫ தேவரீருடைய வலதுபாரிசத்தில் இருக்கிற ஆண்டவர் தமது கோபத்தின் நாளில் இராசாக்களை வெட்டுவார்.

௬ அவர் சாதிகளில் நியாயந்தீர்த்து, எல்லாவற்றையும் பிரேதங்களால் நிரப்பி, விஸ்தாரமான தேசத்தின்மேலே தலைவனாயிருக்கிறவனை நொறுக்கிவிடுவார்.*

* வெளி. ௰௬. ௰௧. ழி. சங். ௬௮. ௨௨.

௭ வழியிலே நதியில் குடிப்பார்; ஆகையாலே தலையை எடுப்பார்.

## ௱௰௧. சங்கீதம்.

அல்லேலூயா, செம்மையானவர்களின் சங்கத்திலும் சபையிலும் கர்த்தரை முழு இருதயத்தாலும் துதிப்பேன்.

௨ கர்த்தரின் செய்கைகள் பெரியவைகளும், அவர்களுடைய விருப்பங்களுக்கெல்லாம் சரியாய்த் தெரிந்துகொள்ளப்பட்டவைகளுமாயிருக்கின்றன.

௩ அவர் செய்கிறது மகிமையும் கனமுமானது; அவருடைய நீதி என்றென்றைக்கும் நிற்கும்.

௪ தம்முடைய அதிசயங்களின் நினைவுகூருதலை உண்டுபண்ணினார்; கர்த்தர் இரக்கமும் மனவுருக்கமுமானவர்.

௫ தமக்குப் பயந்தவர்களுக்கு ஆகாரம் கொடுத்தார்; தமது உடம்படிக்கையை என்றென்றைக்கும் நினைக்கிறார்.

௬ சாதிகளின் சுதந்தரத்தைத் தம்முடைய சனத்திற்குக் கொடுத்ததினாலே, தம்மு

டைய செய்கைகளின் பெலத்தை அதற்குத் தெரியப்பண்ணினார்.

எ அவருடைய கரங்களின் செய்கைகள் சத்தியமும் நியாயமும், அவருடைய கட்டளைகளெல்லாம் உண்மையுமாயிருக்கின்றன.

அ அவைகள் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்கும் உறுதியானவைகளும், உண்மையும், செம்மையுமாய்ச் செய்யப்பட்டவைகளுமாயிருக்கின்றன.

கூ அவர் தம்முடைய சனத்திற்கு மீட்பை அனுப்பி, தமது உடன்படிக்கையை நித்திய உடன்படிக்கையாகக் கட்டளையிட்டார்; அவருடைய நாமம் பரிசுத்தமும் பயங்கரமுமானது.

ய கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்திற்குத் துவக்கம்; அவைகளின்படி செய்கிற யாவருக்கும் நற்புத்தியுண்டு; அப்படிக்கொத்தவன் புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும்.* *வாக். க. எ: கூ. ய.

## ௱௰உ. சங்கீதம்.

அல்லேலூயா, கர்த்தருக்குப் பயந்து அவர் கற்பனைகளின்மேல் மிகவும் பிரியமாயிருக்கிற மனிதன் பாக்கியவான்.*
*சங். க. க, உ: ௱௰கூ. க: ௱உஅ. க.

உ அவன் வித்து பூமியில் வல்லபமாயிருக்கும்; செம்மையானவர்களின் சந்ததி ஆசீர்வதிக்கப்படும்.* *வாக். உய. எ.

௩ ஆஸ்தியும் ஐசுவரியமும் அவன் வீட்டிலிருக்கும்; அவன் நீதி என்றென்றைக்கும் நிற்கும்.* *சங். ௩௪. ய.

௪ செம்மையானவர்களுக்கு இருளிலே வெளிச்சம் உதிக்கும்; இரக்கமும் மனவுருக்கமும், நீதியுமுள்ளவராயிருக்கிறார்.*
*சங். கூஎ. யக.

௫ இரங்கிக் கடன்கொடுத்துத் தன் காரியங்களை நியாயமானபடி நடப்பிக்கிற மனுஷன் பாக்கியமுள்ளவன்.

௬ ஏனெனில் என்றென்றைக்கும் அசைக்கப்படாதிருப்பான்; நீதிமான் நித்திய கீர்த்தியுள்ளவன்.

எ துர்ச்செய்தியைக்கேட்கிறதினாலே பயப்படான்; அவன் இருதயம் கர்த்தரை நம்பித் திடனாயிருக்கும்.

அ அவன் இருதயம் உறுதியாய் இருக்கும்; அவன் தன் சத்துருக்களில் சரிக்கட்டுதலைக் காணும்மட்டும் பயப்படாதிருப்பான்.

கூ வாரி இறைத்து ஏழைகளுக்குக் கொடுக்கிறான்; அவன் நீதி என்றென்றைக்கும் நிற்கும்; அவன் கொம்பு மகிமையாக உயரும்.* *உ கொரி. கூ. கூ.

ய ஆகாதவன் அதைக்கண்டு மனமடிவாகி, தன் பற்களைக் கடித்து, கரைந்துபோவான்; ஆகாதவர்களுடைய ஆசை அழியும்.

## ௱௰௩. சங்கீதம்.

அல்லேலூயா, கர்த்தருடைய ஊழியக்காரரே, துதியுங்கள்; கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள்.* *சங். ௱௩௫. க.

உ கர்த்தருடைய நாமம் இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டிருக்கக்கடவது.* *தானி. உ. உய.

௩ சூரியன் உதிக்கும் திசைதுவக்கி அது அஸ்தமிக்கும் திசைமட்டும் கர்த்தருடைய நாமம் துதிக்கப்படக்கடவது.

௪ கர்த்தர் எல்லாச் சாதிகள்மீதிலும் உயர்ந்தவர்; அவருடைய மகிமை வானங்களிலும் மேல்வட்டமாயிருக்கிறது.

௫ ¶ உன்னதங்களில் வாசம்பண்ணி,*
*சங். ௱௩அ. கூ. ஏசா. ௫எ. ௰௫.

௬ வானங்களிலும் பூமியிலுமுள்ளவைகளைக் கண்ணோக்கத் தாழ்ந்துகொண்டு,

எ பிரபுக்களோடும், தமது சனத்தின் தலைவர்களோடும் உளுக்காரப்பண்ணும்படிக்கு,* *க சாமு. உ. அ.

அ சிறியவனை மண்ணிலிருந்து எடுக்கிறவரும், எளியவனைக் குப்பைக்காட்டிலிருந்து உயர்த்துகிறவரும்,

௯ மலடியை வீட்டிலே சந்தோஷமான பிள்ளைத்தாய்ச்சியாய்க் குடியிருக்கப்பண்ணுகிறவருமான நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குச் சமானமானவர் யார்? அல்லேலூயா.* *சங். ௮௯. ௭. ௨ மோ. ௰௫. ௰௧.

## ௱௰௪. சங்கீதம்.

இஸ்ரவேல் எகிப்திலும், யாக்கோபின் வீட்டார் அந்நிய பாஷையுள்ள சனத்திலுமிருந்து புறப்படுகையில்,

௨ யூதா அவருடைய பரிசுத்த சாதியும் இஸ்ரவேல் அவருடைய ஆளுகையுமாயின.

௩ கடல் கண்டு விலகியோடிற்று; யோர்தான் பின்னிட்டுத் திரும்பிற்று.*
*௨ மோ. ௰௪. ௨௧, ௨௨. யோசு. ௩. ௰௬.

௪ பர்வதங்கள் ஆட்டுக்கடாக்களைப்போலவும், மேடுகள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளின.* *௨ மோ. ௰௯. ௰௮.

௫ ¶ கடலே, நீ விலகியோடுகிறதற்கும், யோர்தானே, நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்கும்,

௬ பருவதங்களே, நீங்கள் ஆட்டுக்கடாக்களைப்போலவும், மேடுகளே, நீங்கள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளுகிறதற்கும் உங்களுக்கு என்ன வந்தது?

௭ பூமியே, நீ ஆண்டவருக்குமுன்பாகவும், யாக்கோபுடைய பராபரனுக்குமுன்பாகவும் அதிரு.

௮ அவர் கல்மலையைத் தண்ணீர்த்தடாகமாகவும், கல்பாறையை நீரூற்றுகளாகவும் மாற்றுகிறவர்.* *௪ மோ. ௨௰. ௰௧.

## ௱௰௫. சங்கீதம்.

எங்களுக்கல்ல கர்த்தாவே, எங்களுக்கல்ல, உம்முடைய நாமத்துக்கே தேவரீர் உமது கிருபையினிமித்தமும், உமது சத்தியத்தினிமித்தமும் மகிமை வரப்பண்ணும்.

௨ அவர்களுடைய பராபரன் இப்போது எங்கே என்று புறச்சாதிகள் சொல்லுவானேன்?* *சங். ௪௨. ௩.

௩ நம்முடைய பராபரனோ பரமண்டலங்களில் இருக்கிறார்; அவர் தமக்குச் சித்தமாயிருக்கிறவை எல்லாவற்றையும் செய்கிறார்.* *சங். ௱௩௫. ௬.

௪ ¶ அவர்களுடைய விக்கிரகங்கள் மனுஷருடைய கைகளின்வேலையாகிய வெள்ளியும் பொன்னுந்தானே.* *சங்.௱௩௫.௰௫.௰௬.

௫ அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது; அவைகளுக்குக்கண்களிருந்தும் காணாது.* *௫ மோ. ௪. ௨௮.

௬ அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது, அவைகளுக்கு மூக்கிருந்தும் மோவாது.

௭ அவைகளுக்குக் கைகளிருந்தும் தடவாது; அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது; தங்கள் தொண்டையால் சத்தமும் காட்டாது.

௮ அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிற எவனும் அவைகளைப்போல இருக்கிறார்கள்.

௯ ¶ இஸ்ரவேலே கர்த்தரை நம்பு; அவரே அவர்கள் ஒத்தாசையும், அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰ ஆரோனின் வீட்டாரே, கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்கள் ஒத்தாசையும், அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰௧ கர்த்தருக்குப் பயந்தவர்களே, கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்கள் ஒத்தாசையும், அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰௨ ¶ கர்த்தர் நம்மை நினைத்திருக்கிறார்; அவர் ஆசீர்வதிப்பார்; இஸ்ரவேல் வீட்டாரை ஆசீர்வதிப்பார்; அவர் ஆரோனின் வீட்டாரை ஆசீர்வதிப்பார்.

௰௩ கர்த்தருக்குப் பயந்தவர்களாகிய பெரியோரோடுங்கூடச் சிறியோராயும் ஆசீர்வதிப்பார்.

௰௪ கர்த்தர் உங்களையும், உங்கள் பிள்ளைகளையும் வர்த்திக்கப்பண்ணுவார்.

௰௫ பரமண்டலங்களையும் பூமியையும் ப

டைத்த கர்த்தராலே நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.

௰௬ ¶ பரமண்டலங்களோ கர்த்தருடையது; பூமியையோ மனுப்புத்திரருக்குக் கொடுத்தார்.

௰௭ செத்தவர்களும், மவுனத்தில் இறங்குகிற அனைவரும் கர்த்தரைத் துதியார்கள்.

௰௮ நாமோ இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் கர்த்தரைத் தோத்திரிப்போம்; அல்லேலூயா.

## ௱௰௬. சங்கீதம்.

கர்த்தர் என் சத்தத்தையும், என் விண்ணப்பங்களையும் கேட்டது எனக்குப் பிரியம்.

௨ ஏனென்றால் அவர் தமது செவியை என்னண்டையில் சாய்த்தார்; ஆகையால் என் நாள்கள் உள்ளமட்டும் அவரைநோக்கிக் கூப்பிடுவேன்.

௩ மரணத்தின் கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டு, நரகத்தின் இடுக்கண்கள் என்னைப் பிடித்தன; இக்கட்டையும், சஞ்சலத்தையும் அடைந்தேன்.* *சங். ௰௮. ௫. ௬.

௪ ஆனால் ஆ கர்த்தாவே, என் ஆத்துமாவை விடுவியும் என்று கர்த்தருடையநாமத்தைப் பற்றிக் கூப்பிட்டேன்.

௫ ¶ கர்த்தர் இரக்கமும் நீதியுமுள்ளவர்; நம்முடைய பராபரன் மனவுருக்கமானவர்.

௬ கர்த்தர் பேதைகளைக் காக்கிறார்; நான் மெலிந்துபோனேன்; ஆனால் என்னை இரட்சித்தார்.

௭ என் ஆத்துமாவே, என் இளைப்பாறுதலுக்குத் திரும்பு; ஏனெனில் கர்த்தர் உனக்கு நன்மைசெய்தார்.

௮ அதேனென்றால் என் ஆத்துமாவை மரணத்துக்கும், என் கண்ணைக் கண்ணீருக்கும், என் காலை இடறுதலுக்கும் தப்புவித்தீர்.* *சங். ௫௬. ௰௪.

௯ கர்த்தருக்குமுன்பாகச் சீவனுள்ளோருடைய தேசத்திலே நடப்பேன்.

௰ விசுவாசித்தேன்; ஆகையாலே பேசுகிறேன்; நான் மிகுதியும் ஒடுக்கப்பட்டிருந்தேன்.* *௨ கொரி. ௪. ௰௩.

௰௧ எந்த மனுஷனும் பொய்யனென்று நான் என் துன்பத்தின் துரிதத்திலே சொன்னேன்.* *உரோ. ௩. ௪.

௰௨ ¶ கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்களுக்காகவும் அவருக்கு என்ன இட்டைச் செலுத்துவேன்.

௰௩ இரட்சிப்புகளின் பாத்திரத்தை வாங்கி, கர்த்தருடைய நாமத்தைப்பற்றிக் கூப்பிடுவேன்.

௰௪ கர்த்தருக்கு என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்; ஆம் அவருடைய எல்லாச் சனத்துக்கும்முன்பாகத்தானே.* *சங். ௨௨. ௨௬.

௰௫ ¶ கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம்அவர் பார்வைக்கு அருமையானது.

௰௬ ஆ கர்த்தாவே, நான் உம்முடைய ஊழியக்காரன்; நான் உம்முடைய அடியாளின் பிள்ளையாகிய உம்முடைய ஊழியக்காரன்; என் கட்டுகளை அவிழ்த்தீர்.

௰௭ உமது துதியின் பலியைப் பலியிட்டு, கர்த்தருடைய நாமத்தைப்பற்றிக் கூப்பிடுவேன்.

௰௮ கர்த்தருடைய வீட்டின் பிரகாரங்களிலும், எருசலேமே, உன் நடுவிலும்,

௰௯ நான் கர்த்தருக்கு என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்; ஆம் அவருடைய எல்லாச் சனத்துக்குமுன்பாகத்தானே; அல்லேலூயா.* *சங். ௫௰. ௰௪.

## ௱௰௭. சங்கீதம்.

எல்லாச் சாதிகளே, கர்த்தரைத் துதியுங்கள்; எல்லாச் சனசதளங்களே, அவரைப் புகழுங்கள்.* *உரோ. ௰௫. ௰௧.

௨ ஏனெனில் அவருடைய கிருபை நம்முடையமேல் வல்லபமாயிருக்கிறது; கர்த்தரின் உண்மையும் என்றென்றைக்கும் நிற்கும்; அல்லேலூயா.

## ௱௰௮. சங்கீதம்.

கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்லவர்; அவர் கிருபை என்றுமுள்ளது.* *சங். ௱எ. க: ௱௩௬. க.

௨ அவர் கிருபை என்றும் உள்ளதென்று இஸ்ரவேல் சொல்லுவதாக.* *சங். ௱௰௫. ௰௨, ௰௩.

௩ அவர் கிருபை என்றும் உள்ளதென்று ஆரோனின் வீட்டார் சொல்லுவார்களாக.

௪ அவர் கிருபை என்றும் உள்ளதென்று கர்த்தருக்குப் பயந்தவர்கள் சொல்லுவார்களாக.

௫ ¶ நெருக்கத்திலிருந்து கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டேன்; கர்த்தர் என்னைக் கேட்டருளி விசாலத்திலே வைத்தார்.

௬ கர்த்தர் எனக்கு இருக்கிறார்; பயப்படேன், மனுஷன் எனக்கு என்ன செய்வான்?* *உரோ. ௮. ௩௧. எபி. ௰௩. ௬.

௭ எனக்கு அநுகூலம்பண்ணுகிறவர்கள் நடுவிலே கர்த்தர் எனக்கு இருக்கிறார்; ஆகையால் என் பகைஞரில் சரிக்கட்டுதலைக் காண்பேன்.

௮ மனுஷனை நம்புவதைப்பார்க்கிலும் கர்த்தர்மீதில் பற்றுதலாயிருக்கிறதே நலம்.

௯ பிரபுக்களை நம்புவதைப்பார்க்கிலும் கர்த்தர்மீதில் பற்றுதலாயிருக்கிறதே நலம்.

௰ எல்லாச் சாதியாரும் என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; ஆனால் கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௧ என்னைச் சுற்றி வளைந்துகொள்ளுகிறார்கள்; கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௨ தேன் ஈக்களைப்போல என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; ஆனால் முள்ச்செடிகளின் நெருப்பைப்போல அணைந்துபோடப்படுவார்கள்; கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௩ நான் விழ என்னைத் தள்ளவே தள்ளினாய்; ஆனால் கர்த்தர் எனக்கு ஒத்தாசைபண்ணுகிறார்.

௰௪ ¶ கர்த்தர் என் பெலனும் என் கீதமுமானவர்; அவர் எனக்கு இரட்சிப்பாக இருக்கிறார்.* *௨ மோ. ௰௫. ௨. ஏசா. ௰௨. ௨.

௰௫ நீதிமான்களின் கூடாரங்களில் இரட்சிப்பின் கெம்பீரசத்தம் இருக்கும்; கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமஞ்செய்யும்.

௰௬ கர்த்தரின் வலதுகரம் உயர்ந்தது, கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமம் செய்யும்.

௰௭ நான் சாவதில்லை, நான் பிழைத்திருந்து கர்த்தருடைய செய்கைகளை விவரிப்பேன்.

௰௮ கர்த்தர் என்னைத் தெண்டிக்கவே தெண்டித்தும், என்னைச் சாவுக்கு ஒப்புக்கொடார்.

௰௯ ¶ எனக்கு நீதியின் வாசல்களைத் திறவுங்கள், அவைகளுக்குள் பிரவேசித்து, கர்த்தரைத் துதிப்பேன்.* *ஏசா. ௨௬. ௨.

௨௰ இது கர்த்தரின் வாசல், நீதிமான்கள் அதற்குள் பிறவேசிப்பார்கள்.

௨௧ நீர் என்னைக் கேட்டருளி, எனக்கு இரட்சிப்பாக இருந்தபடியினாலே உம்மைத் துதிப்பேன்.

௨௨ வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே கோடிக்குத் தலையான கல்லாயிற்று.* *மத். ௨௧. ௪௨. மாற். ௰௨. ௰,௰௧. அப். ௪. ௰௧.

௨௩ அது கர்த்தராலாயிற்று; அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

௨௪ இது கர்த்தர் உண்டுபண்ணின நாள்; இதிலே களிகூர்ந்து மகிழக்கடவோம்.

௨௫ ஆ கர்த்தாவே, இரட்சியுமே; ஆ கர்த்தாவே, காரியத்தை வாய்க்கப்பண்ணுமே.* *மத். ௨௧. ௯. யோவா. ௰௨. ௰௩.

௨௬ கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்பட்டவர்; கர்த்தரின் வீட்டாரே, உங்களை ஆசீர்வதிக்கிறோம்.

௨௭ ¶ கர்த்தர் நம்மைப் பிரகாசிப்பிக்கிற பராபரனாயிருக்கிறார்; பண்டிகைப் பலியைப் பலிபீடத்தின் கொம்புகள்மட்டும்

கொண்டுபோகக் கயிறுகளால் கட்டுங்கள்.

௨௮ தேவரீர் என் பராபரன், உம்மைத் துதிப்பேன்; என் பராபரனே, உம்மை உயர்த்துவேன்.

௨௯ கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது.

## ௱௰௯. சங்கீதம்.

கர்த்தருடைய வேதத்தின்படியே நடக்கிற உத்தமமார்க்கத்தார் பாக்கியவான்கள்.*

* சங். ௧. ௧, ௨: ௱௰௨. ௧.

௨ அவருடைய சாட்சிகளைக் கைக்கொண்டு, அவரை முழு இருதயத்தாலும் தேடுகிறவர்கள் பாக்கியவான்கள்.

௩ அவர்கள் அநியாயம் செய்வதுமில்லை, அவருடைய வழிகளிலே நடப்பார்கள்.

௪ உம்முடைய கட்டளைகளைக் கருத்தாய்க் காக்கத் தேவரீர் கற்பித்தீர்.

௫ ஆ உம்முடைய பிரமாணங்களைக் காக்க என் வழிகள் நிலைவரப்பட்டால் தாவிளை.

௬ நான் உம்முடைய கற்பனைகளை எல்லாம் கண்ணோக்கும்போது வெட்கப்பட்டுப் போவதில்லை.

௭ உம்முடைய நீதியின் நியாயங்களை நான் கற்றுக்கொள்ளுகையால் உம்மைச் செம்மை இருதயத்தாலே துதிப்பேன்.

௮ உம்முடைய பிரமாணங்களைக் காப்பேன்; என்னைக் கைவிடாமலே இரும்.

௯ ¶ எதினால் வாலிபன் தன் பாதையைச் சுத்தம்பண்ணுவான்; உமது வசனத்தின்படி தன்னைக் காப்பதினாலேதானே.

௰ என் முழு இருதயத்தாலும் உம்மைத் தேடுகிறேன்; என்னை உம்முடைய கற்பனைகளைவிட்டு வழிதப்ப ஒட்டாதிரும்.

௰௧ நான் உமக்கு விரோதமாய்ப் பாவம் செய்யாதபடிக்கு, உம்முடைய வார்த்தைகளை என் இருதயத்திலே வைத்துவைத்தேன்.

௰௨ கர்த்தாவே, தேவரீர் தோத்திரிக்கப்பட்டவர்; உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௰௩ உம்முடைய வாக்கின் நியாயங்களை எல்லாம் என் உதடுகளால் விவரிப்பேன்.

௰௪ உம்முடைய சாட்சிகளின் வழியை நான் சகல ஆஸ்தியாகவும் பாவித்து, அதனால் களிப்பாயிருக்கிறேன்.

௰௫ உம்முடைய கட்டளைகளை யோசித்து, உம்முடைய பாதைகளைக் கண்ணோக்குகிறேன்.

௰௬ உம்முடைய பிரமாணங்களினாலே மனமகிழ்ச்சியாயிருக்கிறேன்; உமுடைய வசனத்தை மறவேன்.

௰௭ ¶ நான் பிழைத்து, உம்முடைய வசனத்தைக் காக்க உம்முடைய அடியானுக்குத் தயைசெய்யும்.

௰௮ உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கிறதற்காக என் கண்களைத் திறவும்.

௰௯ பூமியிலே நான் பரதேசி; உம்முடைய கற்பனைகளை எனக்கு மறைக்காதிரும்.*

* சங். ௩௯. ௰௨. ௧ பே. ௨. ௰௨.

௨௰ எக்காலமும் என் ஆத்துமா உம்முடைய நியாயங்களின்மேல் இருக்கிற வாஞ்சையினாலே நருக்குண்டிருக்கிறது.

௨௧ உம்முடைய கற்பனைகளைவிட்டு வழிவிலகுகிற சபிக்கப்பட்ட அகந்தைக்காரரை உதம்புகிறீர்.

௨௨ நிந்தையையும், அசட்டையையும் என்னைவிட்டு அகற்றும்; ஏனெனில் உம்முடைய சாட்சிகளைக் கைக்கொள்ளுகிறேன்.

௨௩ பிரபுக்களும் உட்கார்ந்திருந்து எனக்கு விரோதமாய்ப் பேசிக்கொள்ளுகிறார்கள்; உம்முடைய அடியானோ உம்முடைய பிரமாணங்களை யோசிக்கிறான்.

௨௪ உம்முடைய சாட்சிகள் என் செல்வங்களும், என் ஆலோசனைக்காரருமாய் இருக்கின்றன.

௨௫ ¶ என் ஆத்துமா மண்ணோடு ஒட்டி

யிருக்கிறது; உமது வார்த்தையின்படி என்னை உயிர்ப்பியும்.

௨௬ என் வழிகளை நான் விவரித்துக்காட்டினதற்கு எனக்கு உத்தரவு அருளிச்செய்தீரே; உம்முடைய பிரமாணங்களை எனக்குப் போதியும்.

௨௭ நான் உம்முடைய அதிசயங்களை யோசித்துக்கொள்வதற்காக என்னை உம்முடைய சாட்சிகளின் வழியை உணரப்பண்ணும்.

௨௮ சஞ்சலத்தால் ஆத்துமா கரைகிறது; உம்முடைய வசனத்தின்படி என்னை எடுத்து நிமிர்த்தும்.

௨௯ கள்ளமார்க்கத்தை என்னைவிட்டு விலக்கி, உம்முடைய வேதத்தை எனக்குத் தயவுபண்ணும்.

௩௰ சத்தியத்தின் வழியை நான் தெரிந்துகொண்டு, உம்முடைய நியாயங்களை எனக்குமுன்பாக நிறுத்தினேன்.

௩௧ உம்முடைய சாட்சிகளோடு ஒட்டிக்கொள்ளுகிறேன்; கர்த்தாவே, என்னை வெட்கத்திற்கு உள்ப்படப்பண்ணாதிரும்.

௩௨ உம்முடைய கற்பனைகளின் வழியிலே ஓடுவேன்; ஏனெனில் என் இருதயத்தை விரிவாக்குகிறீர்.

௩௩ ¶ கர்த்தாவே, நான் உம்முடைய பிரமாணங்களின் வழியை முடியக் கைக்கொள்வதற்காக அதை எனக்குப் போதியும்.

௩௪ எனக்கு உணர்வைக் கட்டளையிடும்; அப்போது நான் உமது வேதத்தைக் கைக்கொண்டு அதை முழு இருதயத்தாலும் காப்பேன்.

௩௫ உம்முடைய கற்பனைகளின் பாதையில் என்னை நடத்தும், ஏனெனில் அதின்மேல் பிரியமாயிருக்கிறேன்.

௩௬ பொருளாசைக்கு அல்ல, உம்முடைய சாட்சிகளுக்கே என் இருதயத்தைச் சார்ந்திருக்கப்பண்ணும்.*

* ௧ தீமோ. ௬.௰, ௰௧.

௩௭ நீர் என் கண்களை மாயையைப் பாராதபடிக்கு விலக்கி, உம்முடைய வழிகளில் என்னை உயிர்ப்பியும்.

௩௮ உமக்குப் பயப்படுகிறதற்கான உமது வசனத்தை உம்முடைய அடியானுக்கு நிலைப்படுத்தும்.

௩௯ நான் அஞ்சுகிற என் நிந்தையை விலக்கும்; ஏனெனில் உம்முடைய நியாயத்தீர்ப்புகள் நல்லவைகள்.

௪௰ இதோ உம்முடைய கட்டளைகள்மேல் வாஞ்சையாயிருக்கிறேன்; உமது நீதியால் என்னை உயிர்ப்பியும்.

௪௧ ¶ கர்த்தாவே, உம்முடைய வார்த்தையின்படி உம்முடைய தயவுகளும், உமது இரட்சிப்பும் எனக்கு வருவதாக.

௪௨ அப்போது என்னை நிந்திக்கிறவனுக்கு மறு உத்தரவு சொல்லுவேன்; ஏனெனில் உம்முடைய வசனத்தை நம்புகிறேன்.

௪௩ சத்தியத்தின் வசனத்தைமாத்திரம் என் வாயைவிட்டுப் பிரியவொட்டாதிரும்; ஏனெனில் உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குக் காத்திருக்கிறேன்.* *எரே. ௰௫. ௰௬.

௪௪ எப்போதும் என்றைக்குமுள்ள நித்தியகாலமும் உமது வேதத்தைக் காப்பேன்.

௪௫ விசாலத்திலே நடப்பேன்; ஏனெனில் உம்முடைய கட்டளைகளைத் தேடுகிறேன்.

௪௬ நான் உம்முடைய சாட்சிகளைக்குறித்து இராசாக்களுக்குமுன்பாகவும் வெட்காமல் பேசி,* *உரோ. ௧. ௰௬.

௪௭ நான் சிநேகித்திருக்கிற உம்முடைய கற்பனைகளின்மேலே மனமகிழ்ச்சியாயிருந்து,

௪௮ நான் சிநேகித்திருக்கிற உம்முடைய கற்பனைகளுக்கு நேராக என் கைகளை ஏறெடுத்து, உம்முடைய பிரமாணங்களை யோசிப்பேன்.

௪௯ ¶ நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை உம்முடைய அடியானுக்காக நினைத்தருளும்.

௫௰ அதுவே என் சிறுமையில் என்னுடைய ஆறுதல்; ஏனெனில் உம்முடைய வார்த்

தை என்னை உயிர்ப்பிக்கிறது.*

*சங். ௰௯. ௮. ௱.

௫௧ அகந்தைக்காரர் மிகவும் என்னைப் பரியாசம்பண்ணியும் உம்முடைய வேதத்தைவிட்டு விலகேன்.

௫௨ கர்த்தாவே, ஆதிமுதலான உம்முடைய நியாயத்தீர்ப்புகளை நினைத்து என்னைத் தேற்றுகிறேன்.

௫௩ உம்முடைய வேதத்தை விட்டுவிடுகிற ஆகாதவர்கள் நிமித்தமாய் எரிச்சல் என்னைப் பிடித்தது.

௫௪ நான் பரதேசியாய்த் தங்கும் வீட்டிலே உம்முடைய பிரமாணங்கள் எனக்குக் கீதங்களாயிருக்கின்றன.

௫௫ கர்த்தாவே, இராக்காலத்தில் உம்முடைய நாமத்தை நினைத்து, உம்முடைய வேதத்தைக் கைக்கொள்ளுகிறேன்.*

*சங். ௰௯. ௭: ௪௨. ௯.

௫௬ நான் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறபடியினாலே இப்படி எனக்கு உண்டாயிற்று.

௫௭ ¶ கர்த்தர் என் பங்கு; உம்முடைய வசனங்களைக் காப்பேனென்றேன்.

௫௮ நான் முழு இருதயத்தாலும் உம்முடைய முகத்தை நோக்கிக் கெஞ்சுகிறேன்; உமது வார்த்தையின்படி எனக்கு இரங்கும்.

௫௯ என் வழிகளைச் சிந்தித்துக்கொண்டு, என் கால்களை உம்முடைய சாட்சிகளுக்கு நேராகத் திருப்புகிறேன்.

௬௰ உம்முடைய கற்பனைகளைக் காத்துநடக்க நான் தாமதியாமலே தீவிரிக்கிறேன்.

௬௧ ஆகாதவர்களின் கும்புகள் என்னைக் கொள்ளையிட்டும் உம்முடைய வேதத்தை மறவேன்.

௬௨ உம்முடைய நீதியினுடைய நியாயத்தீர்ப்புகளின் நிமித்தம் உம்மைத் துதிக்கப் பாதிராத்திரியில் எழுந்திருக்கிறேன்.

௬௩ உமக்குப் பயந்து, உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிற அனைவருக்கும் நான் தோழன்.

௬௪ கர்த்தாவே, பூமி உமது கிருபையினாலே நிறைந்திருக்கிறது; உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.*

*சங். ௩௩. ௫.

௬௫ ¶ கர்த்தாவே, உமது வார்த்தையின்படி உம்முடைய அடியானை நன்றாய் நடத்தினீர்.

௬௬ நல்ல நிதானிப்பையும் அறிவையும் எனக்குக் கொடும்; ஏனெனில் உம்முடைய கற்பனைகளின்மேல் விசுவாசமாயிருக்கிறேன்.

௬௭ நான் தாழ்த்தப்படாததற்குமுன் நான் வழிதப்பினவன்; இப்போதோவெனில் உம்முடைய வார்த்தையைக் காத்து நடக்கிறேன்.

௬௮ தேவரீர் நல்லவரும் நன்மைசெய்கிறவருமாயிருக்கிறீர்; உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௬௯ அகந்தைக்காரர் என்மேல் பொய்களைப் பிணைக்கிறார்கள்; நானோ முழு இருதயத்தாலும் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறேன்.

௭௰ அவர்கள் இருதயம் நிணந்துற்றாற்போலக் கொழுத்திருக்கிறது; நானோ உம்முடைய வேதத்தின்மேலே மனமகிழ்ச்சியாயிருக்கிறேன்.

௭௧ நான் உம்முடைய பிரமாணங்களைக் கற்றுக்கொள்ளும்படிக்கு, நான் சிறுமையாக்கப்பட்டது எனக்கு நல்லது.

௭௨ அநேகம் ஆயிரமான பொன் வெள்ளியைப்பார்க்கிலும், உமது வாக்கினுடைய வேதமே எனக்கு நலம்.* *சங். ௰௯. ௰௧.

௭௩ ¶ உம்முடைய கரங்கள் என்னை உண்டாக்கி, என்னை உருவாக்கின; உம்முடைய கற்பனைகளைக் காக்க என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௭௪ நான் உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கையால், உமக்குப் பயந்தவர்கள் என்னைக் கண்டு சந்தோஷப்படுகிறார்கள்.

௭௫ கர்த்தாவே, உம்முடைய நியாயத்தீர்ப்

புகள் நீதியென்றும், உண்மையால் என்னைச் சிறுமைப்படுத்தினீரென்றும் அறிவேன்.

௭௬ நீர் உம்முடைய அடியானுக்குக் கொடுத்த உமது வார்த்தையின்படி, உமது கிருபை எனக்குத் தேற்றரவாயிருப்பதாக.

௭௭ நான் பிழைக்கும்படிக்கு உமது இரக்கங்கள் என்மேல் வரக்கடவன; ஏனெனில் உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி.

௭௮ அகந்தைக்காரர் என்னைப் பொய்களால் அமுக்கினதின்நிமித்தம் வெட்கக்கடவார்கள்; நானோ உம்முடைய கட்டளைகளை யோசித்திருப்பேன்.

௭௯ உமக்குப் பயந்து, உம்முடைய சாட்சிகளை அறிந்திருக்கிறவர்கள் என்னண்டைக்குத் திரும்புவார்களாக.

௮௰ நான் வெட்கத்திற்குள்ளாகாதபடிக்கு, என் இருதயம் உம்முடைய பிரமாணங்களில் உத்தமமாய் இருக்கக்கடவது.

௮௧ ¶ உம்முடைய இரட்சிப்புக்கு என் ஆத்துமா தவனமாய்த் தொய்ந்திருக்கிறது; உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கிறேன்.* *௧ மோ. ௪௯. ௰௮.

௮௨ எப்போது என்னைத் தேற்றரவுபண்ணுவீரென்று உம்முடைய வார்த்தையின்மேல் நோக்கமாய் என் கண்கள் பூத்துப்போகின்றன.

௮௩ ஏனென்றால் புகையில் துருத்தியைப் போலானேன்; உம்முடைய பிரமாணங்களையோ மறவேன்.

௮௪ உம்முடைய அடியானுடைய நாள்கள் எம்மாத்திரம், என்னைத் துன்பப்படுத்துகிறவர்களை எப்போது விசாரித்து நியாயஞ்செய்வீர்.

௮௫ அகந்தைக்காரர் உம்முடைய நியாயப்பிரமாணத்திற்கு ஏலாததாய் எனக்குக் குழிகளை வெட்டினார்கள்.

௮௬ உம்முடைய கற்பனைகளெல்லாம் உண்மை; பொய்களால் என்னைத் துன்பப்படுத்துகிறார்கள்; எனக்குச் சகாயம்பண்ணும்.

௮௭ அவர்கள் என்னைப் பூமியிலிராமல் பண்ண மெத்தச் சமீபமாயிற்று; ஆனால் நான் உம்முடைய கட்டளைகளை விட்டதில்லை.

௮௮ உமது கிருபையின்படியே என்னை உயிர்ப்பியும்; அப்போது உம்முடைய வாக்கின் சாட்சியைக் காத்துநடப்பேன்.

௮௯ ¶ கர்த்தாவே, என்றென்றைக்கும் உம்முடைய வசனம் மண்டலங்களில் நிலைநிற்கும்.* *ஏசா. ௪௰. ௮.

௯௰ தலைமுறைதலைமுறையாக உம்முடைய சத்தியம் இருக்கும்; பூமியை உறுதிப்படுத்தினீர்; அதினால் அது நிற்கும்.

௯௧ இன்றையதினம்மட்டும் அவைகள் உம்முடைய நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றும்படிக்கு நிற்கின்றன; ஏனெனில் சர்வமும் உமக்குப் பணிசெய்யும்.

௯௨ உமது வேதம் என் மனமகிழ்ச்சியாய் இராதிருந்ததானால் அப்போது என் சிறுமையிலே அழிவேன்.* *ரும. வச.

௯௩ என்றென்றைக்கும் உம்முடைய கட்டளைகளை மறவாதிருப்பேன்; ஏனெனில் அவைகளால் என்னை உயிர்ப்பித்தீர்.

௯௪ நான் உம்முடையவன், என்னை இரட்சியுமே; ஏனெனில் உம்முடைய கட்டளைகளைத் தேடுகிறேன்.

௯௫ ஆகாதவர்கள் என்னை அழிக்க என்னைக் காத்திருக்கிறார்கள்; நானோ உம்முடைய சாட்சிகளைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்.* *சங். ௩௭. ௩௨.

௯௬ சகல சம்பூரணத்திற்கும் எல்லையைக் கண்டேன்; உம்முடைய கற்பனையோவென்றால் மகா விஸ்தாரம்.

௯௭ ¶ உமது வேதத்தை எத்தனையாய்ச் சிநேகிக்கிறேன்; அதுவே நாள்தோறும் என்னுடைய யோசிப்பு.* *சங். ௧. ௨.

௯௮ உம்முடைய கற்பனைகளே என்னை என் சத்துருக்களிலும் அதிக ஞானமுள்ளவனாக்குகின்றன; ஏனெனில் என்றைக்கும் அவைகள் என்னுடனே இருக்கின்றன.

௯௯ என்னை உபதேசித்த எல்லாரைப்பார்க்கிலும் புத்தியுள்ளவனாயிருக்கிறேன்; ஏனெனில் உம்முடைய சாட்சிகள் என்னுடைய யோசிப்பு.

௱ முதிர்ந்த வயதுள்ளவர்களைப்பார்க்கிலும் உணர்வுள்ளவனாயிருக்கிறேன்; ஏனெனில் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொண்டிருக்கிறேன்.

௱௧ நான் உம்முடைய வசனத்தைக் காத்துநடக்கும்படிக்கு, சகல பொல்லாத பாதைக்கும் என் கால்களை விலக்குகிறேன்.

௱௨ உம்முடைய நியாயங்களை விட்டுவிலகேன்; ஏனெனில் தேவரீர் என்னைப் போதிப்பித்தீர்.

௱௩ உம்முடைய வார்த்தைகள் என் உருசிக்கு எத்தனை தித்திப்பானவைகள்? என் வாய்க்கு அவைகள் தேனிலும் மதுரமாயிருக்கும்.* *சங். ௰௯. ௰௧.

௱௪ உம்முடைய கட்டளைகளால் உணர்வடைந்தேன்; ஆனபடியால் எல்லாக் கள்ளவழியையும் பகைக்கிறேன்.

௱௫ ¶ உம்முடைய வசனம் என் கால்களுக்குத் தீபமும், என் பாதைக்கு வெளிச்சமுமானது.* *சங். ௰௯. ௯. ௨ பே. ௧. ௰௯.

௱௬ உம்முடைய நீதிநியாயங்களைக் காத்துநடப்பேனென்று ஆணையிட்டேன்; அதை நிருவாகமும்பண்ணுவேன்.

௱௭ மிகுதியும் ஒடுங்குண்டேன்; கர்த்தாவே, உம்முடைய வசனத்தின்படியே என்னை உயிர்ப்பியும்.

௱௮ கர்த்தாவே, என் வாயின் உச்சாகபலிகளை நீர் அங்கீகரித்தருளி, உம்முடைய நியாயங்களை எனக்குக் கற்றுக்கொடும்.* *சங். ௰௯. ௰௫. எபி. ௰௩. ௰௫.

௱௯ என் ஆத்துமா எப்போதும் என்கையில் இருக்கிறது; ஆனால் உம்முடைய வேதத்தை மறவேன்.

௱௰ ஆகாதவர்கள் எனக்குக் கண்ணிவைக்கிறார்கள்; ஆனால் உம்முடைய கட்டளைகளை நான் விட்டு வழிதப்பேன்.

௱௰௧ உம்முடைய சாட்சிகளை நித்தியசுதந்தரமாக்கிக்கொண்டிருக்கிறேன்; ஏனெனில் அவைகள் என் இருதயத்தின் சந்தோஷம்.

௱௰௨ உம்முடைய பிரமாணங்களின்படி என்றென்றைக்கும் முடியவும் செய்வதற்கு என் இருதயத்தைச் சாய்த்தேன்.

௱௰௩ ¶ வீண் சிந்தனைகளை நான் பகைத்து உமது வேதத்தைச் சிநேகிக்கிறேன்.

௱௰௪ என் மறைவும் என் கேடயமும் தேவரீர், உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கிறேன்.

௱௰௫ பொல்லாதவர்களே, என்னைவிட்டு அகன்றுபோங்கள்; ஏனெனில் என் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுவேன்.

௱௰௬ நான் பிழைக்கும்படிக்கு என்னை உமது வார்த்தையின்படி ஆதரியும்; என் நம்பிக்கை விருதாவாக என்னை வெட்கத்திற்கு உட்படுத்தாதிரும்.* *சங். ௨௫. ௨, ௩.

௱௰௭ நான் இரட்சிக்கப்பட்டு எக்காலமும் உம்முடைய பிரமாணங்களின்மேலே மனமகிழ்ச்சியாயிருக்கும்படிக்கு என்னை ஆதரியும்.

௱௰௮ உம்முடைய பிரமாணங்களை விட்டு வழிவிலகுகிற யாவரையும் மிதித்துப்போடுகிறீர்; ஏனெனில் அவர்களுடைய கபடம் வெறும் பொய்.

௱௰௯ பூமியிலுள்ள ஆகாதவர்களை எல்லாம் களிம்புகளைப்போல அகற்றிவிடுகிறீர்; ஆகையால் உம்முடைய சாட்சிகளைச் சிநேகிக்கிறேன்.

௱௨௰ உம்மால் அடையும் திகிலால் என் உடம்பு சிலிர்க்கிறது; உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குப் பயமாயிருக்கிறேன்.

௱௨௰௧ ¶ நியாயமும் நீதியும் செய்கிறேன்; என்னை ஒடுக்குகிறவர்களுக்கு ஒப்புக்கொடாதிரும்.

௱௨௰௨ உம்முடைய அடியானுக்கு நன்மையாக மேற்போட்டுக்கொள்ளும்; அகந்

தைக்காரர் என்னை ஒடுக்கவொட்டாதிரும்.

௱௨௩ உமது இரட்சிப்புக்கும், உமது நீதியின் வார்த்தைக்கும் காத்திருக்கிறதினால் என் கண்கள் பூத்துப்போகின்றன.

௱௨௪ உம்முடைய அடியானை உமது கிருபையின்படியே நடத்தி, உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௱௨௫ நான் உமது அடிமை; உம்முடைய சாட்சிகளை நான் அறியும்படிக்கு என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௱௨௬ நீதியைச்செய்யக் கர்த்தருக்கு வேளையாம்; அவர்கள் உம்முடைய நியாயப்பிரமாணத்தை முறித்தார்கள்.

௱௨௭ அதைக் கண்டு, நான் பொன்னையும் அபரஞ்சியையும்பார்க்கிலும் உம்முடைய கற்பனைகளைச் சிநேகிக்கிறேன்.*

* சங். ௰௯. ௰௧.

௱௨௮ நான் உம்முடைய கட்டளைகளை எல்லாம் முற்றிலும் செம்மையென்று எண்ணி, சகல கள்ளவழியையும் பகைக்கிறேன்.

௱௨௯ ¶ உம்முடைய சாட்சிகள் அதிசயமானவைகள்; ஆகையால் அவைகளை என் ஆத்துமா கைக்கொள்ளும்.

௱௩௰ உம்முடைய வார்த்தைகளின் சிறப்பு வெளிச்சம் தந்து, பேதைகளை உணர்வுள்ளவர்களாக்கும்.*

* சங். ௰௯. ௮, ௯. ௨ தீமோ. ௩. ௰௫. ௰௬.

௱௩௧ உம்முடைய கற்பனைகளை நான் வாஞ்சிக்கிறபடியினாலே, என் வாயை ஆவென்று திறந்து, அவைகளுக்கு ஏங்குகிறேன்.

௱௩௨ உம்முடைய நாமத்தைச் சிநேகிக்கிறவர்களுக்கு வழங்கும் நியாயத்தின்படியே என்னைநோக்கிப்பார்த்து எனக்குஇரங்கும்.

௱௩௩ நீர் என் காலடிகளை உம்முடைய வார்த்தையிலே நிலைப்படுத்தி ஒரு அநியாயமும் என்னை ஆளவொட்டாதிரும்.

௱௩௪ உம்முடைய கட்டளைகளை நான் காப்பதற்காக என்னை மனுஷரின் இடுக்க வல்லடிக்கு விலக்கி விடுவித்துக்கொள்ளும்.

௱௩௫ உம்முடைய அடியான்மேல் உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணி, உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௱௩௬ உம்முடைய வேதத்தைக் காத்து நடவார்களென்று என் கண்களிலிருந்து நீர்க்கால்கள் இறங்குகின்றன.

௱௩௭ ¶ கர்த்தாவே, தேவரீர் நீதிபரன்; உம்முடைய நியாயத்தீர்ப்புகள் செம்மையுமாயிருக்கின்றன.

௱௩௮ உம்முடைய சாட்சிகளுடைய நீதியின்படியேயும், உண்மையின்படியேயும் நடக்க மிகவும் கற்பித்தீர்.

௱௩௯ என் சத்துருக்கள் உம்முடைய வார்த்தைகளை மறந்தார்களென்று என் பக்திவைராக்கியம் என்னை அறுக்கிறது.*

* சங். ௬௯. ௯.

௱௪௰ உமது வசனம் மெத்தவும் புடம்பட்டது; உம்முடைய அடியான் அதைச் சிநேகிக்கிறான்.*

* சங். ௰௨. ௭.

௱௪௧ நான் சிறியவனும் அசட்டைபண்ணப்பட்டவனுமாயிருக்கிறேன்; ஆனால் உம்முடைய கட்டளைகளை மறவேன்.

௱௪௨ உம்முடைய நீதி நித்திய நீதி; உமது வேதம் சத்தியம்.*

* யோவா. ௰௭. ௰௭.

௱௪௩ இடுக்கணும், நெருக்கமும் என்னைப் பிடித்தது; ஆனால் உம்முடைய கற்பனைகள் என் மனமகிழ்ச்சி.

௱௪௪ உம்முடைய சாட்சிகளின் நீதி என்றென்றைக்கும் நிற்கும்; நான் பிழைக்கும்படிக்கு என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௱௪௫ ¶ முழு இருதயத்தாலும் கூப்பிடுகிறேன்; கர்த்தாவே, என் செபத்தைக் கேளும்; உம்முடைய பிரமாணங்களைக் கைக்கொள்ளுவேன்.

௱௪௬ உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; உம்முடைய சாட்சிகளை நான் காக்கும்படிக்கு என்னை இரட்சியும்.

௱௪௭ அதிகாலமே வந்து சத்தமிடுகிறேன்; உம்முடைய வார்த்தைக்குக் காத்திருக்கிறேன்.

௱௪௮ உமது வசனத்தை யோசிப்பதற்கு என் கண்கள் சாமங்களுக்குமுன்னே விழிக்கும்.

௱௪௯ உம்முடைய கிருபையின்படி என் சத்தத்தைக் கேளும்; கர்த்தாவே உம்முடைய நியாயத்தின்படி என்னை உயிர்ப்பியும்.

௱௫௰ தீவினையைப் பின்பற்றுகிறவர்கள் சமீபமாயிருக்கிறார்கள்; உம்முடைய வேதத்துக்குத் தூரமானார்கள்.

௱௫௧ கர்த்தாவே, தேவரீர் சமீபமாயிருக்கிறீர்; உம்முடைய கற்பனைகளெல்லாம் உண்மை.

௱௫௨ தேவரீர் உம்முடைய சாட்சிகளை என்றென்றைக்கும் நிற்க அஸ்திபாரப்படுத்தினீர் என்கிறதை நான் பூர்வகாலம்முதலாய் அவைகளால் அறிந்திருக்கிறேன்.

௱௫௩ ¶ என் சிறுமையைப்பார்த்து என்னை விடுவியும்; ஏனெனில் உமது வேதத்தை மறவேன்.

௱௫௪ என் வழக்கை நீர் வழக்காடி, என்னை மீட்டுக்கொள்ளும்; உம்முடைய வார்த்தையின்படியே என்னை உயிர்ப்பியும்.

௱௫௫ இரட்சிப்பு ஆகாதவர்களுக்குத் தூரமாயிருக்கிறது; ஏனெனில் உம்முடைய பிரமாணங்களைத் தேடார்கள்.

௱௫௬ கர்த்தாவே, உம்முடைய இரக்கங்கள் மிகுதியுமாயிருக்கின்றன; உம்முடைய நியாயங்களின்படி என்னை உயிர்ப்பியும்.

௱௫௭ என்னைத் துன்பப்படுத்துகிறவர்களும், எனக்கு நெருக்கம்செய்கிறவர்களும் அநேகர், ஆனால் உம்முடைய சாட்சிகளை விட்டுவிலகேன்.* *சங். ௬. ௨.

௱௫௮ உமது வசனத்தைக் காக்காத துரோகிகளை நான் காணும்போது அவர்களை அரோசிக்கிறேன்.

௱௫௯ இதோ உம்முடைய கட்டளைகளைச் சிநேகிக்கிறேன்; கர்த்தாவே, உமது கிருபையின்படி என்னை உயிர்ப்பியும்.

௱௬௰ உம்முடைய வசனம் சமூலமும் சத்தியம், உமது நீதியின் நியாயமெல்லாம் என்றைக்கும் நிற்கும்.* *௱௪௨. வச.

௱௬௧ ¶ பிரபுக்கள் முகாந்தரமில்லாமல் என்னைத் துன்பப்படுத்துகிறார்கள்; ஆனால் உமது வசனத்துக்கே என் இருதயம் பயப்படுகிறது.

௱௬௨ வெகு கொள்ளையுடைமையைக் கண்டுபிடிக்கிறவனைப்போல, நான் உமது வார்த்தையின்மேலே களிப்பாயிருக்கிறேன்.

௱௬௩ பொய்யைப் பகைத்து அருவருத்து, உம்முடைய வேதத்தைச் சிநேகிக்கிறேன்.

௱௬௪ உமது நீதியினுடைய நியாயங்களின் நிமித்தம் ஒரு நாளிலே ஏழுதரம் உம்மைத் துதிக்கிறேன்.

௱௬௫ உம்முடைய வேதத்தைச் சிநேகிக்கிறவர்களுக்கு மிகுந்த சமாதானமுண்டு; அவர்களுக்கு இடறலில்லை.

௱௬௬ கர்த்தாவே, உம்முடைய இரட்சிப்புக்கு நான் காத்திருந்து, உம்முடைய கற்பனைகளின்படி செய்கிறேன்.

௱௬௭ என் ஆத்துமா உம்முடைய சாட்சிகளைக் காக்கும்; அவைகளை மிகவும் சிநேகிக்கிறேன்.

௱௬௮ உம்முடைய கட்டளைகளையும், உம்முடைய சாட்சிகளையும் காத்துநடக்கிறேன்; ஏனெனில் என் வழிகளெல்லாம் உமக்குமுன்பாக இருக்கின்றன.

௱௬௯ ¶ கர்த்தாவே, என் கூப்பிடுதல் உமக்குமுன்பாகச் சேரக்கடவது; உமது வசனத்தின்படியே என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௱௭௰ என் விண்ணப்பம் உமக்குமுன்பாக வரச்செய்யும்; உமது வார்த்தையின்படியே என்னை விடுவியும்.

௱௭௧ உம்முடைய பிரமாணங்களை நீர் எனக்குக் கற்றுக்கொடுக்கும்போது என் உதடுகள் உமது துதியை வெளிப்படுத்தும்.

௱௭௨ என் நாவு உம்முடைய வசனத்தைப் பகர்ந்துபேசும்; ஏனெனில் உம்முடைய கற்பனைகளெல்லாம் நீதி.

௱௭௩ உமது கரம் எனக்குச் சகாயம் செய்ய இருக்கக்கடவது; ஏனெனில் உம்முடைய கட்டளைகளைத் தெரிந்துகொண்டேன்.

௱௭௪ கர்த்தாவே, உம்முடைய இரட்சிப்பின்மேல் ஆசையாயிருக்கிறேன்; உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி.

௱௭௫ என் ஆத்துமா பிழைத்து உம்மைத் துதிக்கக்கடவது; உம்முடைய நியாயத்தீர்ப்புகள் எனக்கு ஒத்தாசையாயிருப்பதாக.

௱௭௬ காணாமற்போன ஆட்டைப்போல வழிதப்பினேன்; உம்முடைய அடியானைத் தேடும்; ஏனெனில் உம்முடைய கற்பனைகளை மறவேன்.* *லூக். ௰௫. ௪.

## ௱௨௰. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

என் நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; என்னைக் கேட்டருளினார்.* *சங். ௫௰. ௰௫.

௨ கர்த்தாவே, கள்ள உதட்டுக்கும் கபட்டுநாவுக்கும் என் ஆத்துமாவைத் தப்புவியும்.

௩ ¶ கபட்டுநாவு உனக்குச் செய்ததென்ன? உனக்கு அப்புறம் உண்டாக்குவது மென்ன?

௪ அது பலவானுடைய கூர்மையான அம்புகளைப்போலவும், சூரைச்செடிகளை எரிக்கும் தழலைப்போலவுமிருக்கிறது.* *வாக். ௰௨. ௰௮.

௫ ¶ நான் மேசேக்கிலே குடியிருந்தது போதும், கேதாரின் கூடாரங்களண்டையிலே குடியிருக்கையால் எனக்கு ஐயோ.

௬ சமாதானத்தைப் பகைக்கிறவர்களிடத்தில் என் ஆத்துமா குடியிருந்தது போதும்.

௭ நான் சமாதானமாயிருக்கிறேன்; நான் பேசும்போதோவெனில், அவர்கள் யுத்தத்திற்கு எத்தனமாயிருக்கிறார்கள்.

## ௱௨௧. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

எனக்கு ஒத்தாசைவரும் பருவதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன்.

௨ வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து எனக்கு ஒத்தாசை வரும்.

௩ என் காலைத் தள்ளாடவொட்டார்; உன்னைக் காக்கிறவர் உறங்கார்.

௪ இதோ இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குகிறதுமில்லை; தூங்குகிறதுமில்லை.

௫ கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலதுபக்கத்திலே உனக்கு நிழலாயிருக்கிறார்.

௬ பகலில் வெயிலாகிலும், இரவில் நிலவென்கிலும் உன்னைச் சேதப்படுத்துவதில்லை.

௭ கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலக்கமாய்க் காப்பார்; அவர் உன் ஆத்துமாவைக் காப்பார்.* *சங். ௫௪. ௬.

௮ கர்த்தர் உன் போக்கையும், உன் வரத்தையும் இதுமுதற்கொண்டு என்றைக்கும் காப்பார்.

## ௱௨௨. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

கர்த்தருடைய வீட்டிற்குப் போவோமென்று எனக்குச் சொல்லுகிறவர்களால் மகிழ்ச்சியாயிருக்கிறேன்.

௨ எருசலேமே, உன் வாசல்களில் எங்கள் கால்கள் நிற்கலாயின.

௩ எருசலேமே, இசைவிணைப்பான பட்டணமாகக் கட்டப்பட்டிருக்கிறது.

௪ அங்கே இஸ்ரவேலுக்குச் சாட்சியாகக் கர்த்தருடைய கோத்திரங்களாகிற கோத்திரங்கள் கர்த்தரின் நாமத்தைத் தோத்திரிப்பதற்குப் போயேறும்.

௫ ஏனெனில் அங்கே நியாயாசனங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன; தாவீதுடைய

வீட்டாரின் ஆசனங்கள்தானே.

௬ ¶ எருசலேமின் சமாதானத்திற்காக வேண்டுங்கள்; உன்னைச் சிநேகிக்கிறவர்கள் சுகித்திருப்பார்களாக.

௭ உன் அலங்கத்திற்குள்ளே சமாதானமும், உன் அரமனைகளில் சுகமும் இருப்பதாக.

௮ என் சகோதரருக்காகவும், என் சிநேகிதருக்காகவும் உன்னில் சமாதானம் இருப்பதாக என்பேன்.

௯ எங்கள் பராபரனுகிய கர்த்தரின் வீட்டுக்காக உனக்கு நலமாயிருக்கிறதைத் தேடுவேன்.

## ௱௨௩. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினபாட்டு.)

பரமண்டலங்களில் வாசமாயிருக்கிற தேவரீரண்டைக்கு என் கண்களை ஏறெடுக்கிறேன்.* *சங். ௱௨௧. ௧, ௨.

௨ இதோ வேலைக்காரரின் கண்கள் தன் எசமானர்களின் கையையும், வேலைக்காரியின் கண்கள் தன் எசமாணி கையையும் நோக்கியிருக்குமாப்போலே, எங்கள் கண்கள் எங்கள் பராபரனுகிய கர்த்தரை அவர் எங்கள்மேல் இரக்கமாகும்மட்டும் நோக்கியிருக்கின்றன.

௩ எங்களுக்கு இரங்கும் கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும்; ஏனெனில் அசங்கதத்தாலே மிகவும் நிரப்பப்பட்டோம்.

௪ எங்கள் ஆத்துமா நிர்விசாரரின் சக்கந்தத்தாலும், அகந்தைக்காரரின் அசங்கதத்தாலும் மிகவும் நிரப்பப்பட்டிருக்கிறது.

## ௱௨௪. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

கர்த்தர் நமக்கிராதிருந்தாரானுல்,

௨ மனிதர் நமக்கு விரோதமாய் எழும்பினபோது, கர்த்தரே நமக்கிராதிருந்தாரானுல்,

௩ அப்போது அவர்கள் தங்கள் கோபம் நம்முடையமேல் எரிகையில், நம்மை உயிரோடே விழுங்கியிருப்பார்கள்.

௪ அப்போது தண்ணீர்கள் நம்முடைய மேல் புரண்டு, நீரோட்டம் நம்முடைய ஆத்துமாவின்மேல் கடந்து,

௫ உயர்ந்த தண்ணீர்களே நம்முடைய ஆத்துமாவின்மேல் கடக்குமென்று இஸ்ரவேல் இப்போது சொல்வதாக.

௬ ¶ நம்மை அவர்கள் பற்களுக்கு இரையாக ஒப்புக்கொடாதிருக்கிற கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்.

௭ நம்முடைய ஆத்துமா ஒரு குருவியைப் போலே வேட்டைக்காரரின் கண்ணிக்குத் தப்பிப்போயிற்று; கண்ணி தெறித்தது, நாம் தப்பினோம்.

௮ நம்முடைய சகாயம் வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தருடைய நாமத்தில் உள்ளது.* *சங். ௱௨௧. ௨.

## ௱௨௫. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்றுபாடினது.)

கர்த்தரை நம்புகிறவர்கள் அசையாதபடிக்கு என்றும் நிலைத்திருக்கும் சீயோன் பர்வதத்தைப்போல இருப்பார்கள்.* *சங். ௨௫. ௩.

௨ எருசலேமைச் சுற்றிலும் பர்வதங்கள் இருக்குமாப்போலே, கர்த்தர் இதுமுதலாய் என்றென்றைக்கும் தம்முடைய சனத்தைச் சுற்றிலும் இருக்கிறூர்.

௩ ஏனெனில் நீதிமான்கள் தங்கள் கைகளை அநியாயத்திற்கு நீட்டாதபடிக்கு, ஆகாமியத்தின் செங்கோல் நீதிமான்களுடைய வித்தின்மேலே நிலைக்காதேபோம்.

௪ ¶ கர்த்தாவே, நல்லவர்களுக்கும், தங்கள் இருதயங்களில் செம்மையானவர்களுக்கும் நன்மைசெய்யும்.

௫ ஆனுலோ தங்கள் கோணலான வழிகளுக்குச் சாய்கிறவர்களைக் கர்த்தர் அக்கிரமக்காரரோடே போகப்பண்ணுவார்; இஸ்ரவேலின்மேல் சமாதானம்.* *கலா. ௬. ௰௬.

## ௱உ௲. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினபாட்டு.)

சீயோனின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்பும்போது, சொப்பனம் காண்கிறவர்களைப்போல இருப்போம்.* *சங்.௰௪.௭.

௨ அப்போது நம்முடைய வாய் நகைப்பினாலும், நம்முடைய நாவு கெம்பீரத்தினாலும் நிறைந்திருக்கும்; அப்போது கர்த்தர் இவர்களிடத்திலே பெரியவைகளைச் செய்தாரென்று புறச்சாதிகளுக்குள்ளே சொல்லிக்கொள்வார்கள்.

௩ கர்த்தர் நம்மிடத்திலே பெரியவைகளைச் செய்தார்; இதின்நிமித்தம் மகிழ்ந்திருக்கிறோமென்போம்.

௪ ¶ கர்த்தாவே, தெற்கத்து வெள்ளங்களைப்போலே எங்கள் சிறையிருப்பைத் திருப்பும்.

௫ கண்ணீரோடே விதைக்கிறவர்கள் கெம்பீரத்தோடே அறுப்பார்கள்.* *மத்.௫.௪.

௬ அள்ளித்தூவும் விதையைச் சுமக்கிறவன் அழுது நடந்துகொண்டிருக்கிறான்; ஆனால் தான் அறுத்த அரிகளைச் சுமந்து கெம்பீரத்தோடே வரவே வருவான்.

## ௱உ௭. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட சாலொமோனின் பாட்டு.)

கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்கள் விருதாவாய் அதில் உழைக்கிறார்கள்; கர்த்தர் பட்டணத்தைக் காக்காராகில் சாமக்காரன் விருதாவாய் விழித்திருக்கிறான்.

௨ நீங்கள் இருட்டோடு எழுந்து, நேரப்பட வேலையிலே தரித்து, வருத்தங்களுள்ள அப்பத்தைச் சாப்பிடுகிறது விருதா; தமக்குப் பிரியமானவனுக்கு நித்திரையை அளிக்கிறார்.* *மத்.௬.௩௩.௩௪.

௩ ¶ இதோ பிள்ளைகள் கர்த்தர் அளிக்கிற சுதந்தரமும், கர்ப்பத்தின் கனி அவரால் வரும் பலனுமாயிருக்கிறது.

௪ வாலவயதுள்ள குமாரர் பெலவானுடைய கையிலுள்ள அம்புகளுக்குச் சரி.

௫ தன் அம்பறாத்தூணியை அவைகளால் நிரப்பின புருஷன் பாக்கியவான்; கூச்சமில்லாமல் சத்துருக்களோடே ஒலிமுக வாசலிலே பேசுவார்கள்.

## ௱உ௮. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினபாட்டு.)

கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவனெல்லாம் பாக்கியவான்.

௨ உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடுகையில் உனக்குப் பாக்கியமும் நன்மையுமிருக்கும்.

௩ உன் பெண்சாதி உன் வீட்டோரங்களில் கனிதரும் கொடிமுந்திரிகைபோலவும், உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போலவும் இருப்பார்கள்.

௪ ¶ இதோ கர்த்தருக்குப் பயந்த மனுஷன் இப்படி ஆசீர்வதிக்கப்படுவான்.

௫ கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்பார்; நீ சீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் நன்மையைக் காண்பாயாக.* *சங். ௱௩௪. ௩.

௬ நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளையும், இஸ்ரவேலின்மேல் சமாதானமிருக்கிறதையும் காண்பாயாக.

## ௱உ௯. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.)

என் சிறுவயதுதுவக்கி, அநேகம்விசை என்னை நெருக்கப்படுத்தினார்கள்.

௨ என் சிறுவயதுதுவக்கி அநேகம்விசை என்னை நெருக்கப்படுத்தியும் என்னை மேற்கொள்ளாதே போனார்கள்.

௩ உழுகிறவர்கள் என் முதுகின்மேல் உழுது, தங்கள் படைச்சால்களை நீளமாக்கினார்கள்.

௪ கர்த்தரோ நீதிபரன், ஆகாதவர்களின்

கயிறுகளை அறுத்தாரென்று இஸ்ரவேல் இப்போது சொல்வதாக.

௫ ¶ சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட்கிப் பின்னிட்டுத் திரும்பக்கடவார்கள்.

௬ பிடுங்கப்படுமுன் உலருகிற மேல்க்கூரைகளின் புல்லைப்போல இருப்பார்களாக.

௭ அதனால் அறுக்கிறவன் தன் கையையும், அரிகளைக் கட்டுகிறவன் தன் மடியையும் நிரப்பான்.

௮ அதற்கு வழிநடக்கிறவர்கள் கர்த்தருடைய ஆசீர்வாதம் உங்கள்மீது இருப்பதாக; உங்களைக் கர்த்தரின் நாமத்திலே ஆசீர்வதிக்கிறோமென்று சொல்வதுமில்லை.

## ௱௩௰. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

கர்த்தாவே, தாழ்வுகளிலிருந்து உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்.

௨ ஆண்டவரே, என் சத்தத்தைக் கேளும், உம்முடைய செவிகள் என் விண்ணப்பங்களின் சத்தத்திற்குக் கவனித்திருக்கக்கடவன.

௩ கர்த்தாவே, அக்கிரமங்களை நோக்கிக்கொண்டிருந்தீரானால், யார் நிலைநிற்பான் ஆண்டவரே?* *சங். ௱௪௩. ௨.

௪ ஆனால் உமக்குப் பயப்படும்படிக்கு மன்னிப்புத் தேவரீரிடத்தில் இருக்கிறது.

௫ ¶ கர்த்தருக்குக் காத்திருக்கிறேன்; என் ஆத்துமா காத்திருக்கிறது; அவருடைய வார்த்தையை நம்பியிருக்கிறேன்.

௬ எப்போது விடியுமென்று விடியுங்காலத்திற்குக் காத்திருக்கிற சாமக்காரரைப்பார்க்கிலும் என் ஆத்துமா ஆண்டவருக்குக் காத்திருக்கிறது.

௭ ¶ இஸ்ரவேல் கர்த்தரை நம்பக்கடவது; ஏனெனில் கர்த்தரிடத்திலே கிருபையும் அவரிடத்திலே திரளான மீட்புமிருக்கிறது.

௮ அவர் இஸ்ரவேலை அதின் அக்கிரமங்களுக்கெல்லாம் நீங்கலாக்கி மீட்பார்.

## ௱௩௰௧. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

கர்த்தாவே, என் இருதயம் உப்பினதாயிருக்கிறதில்லை; என் கண்கள் மேட்டிமையாயிருக்கிறதுமில்லை; நான் பெருங்காரியங்களிலும், எனக்கு மிஞ்சின கருமங்களிலும் நடக்கிறதுமில்லை.

௨ நான் என் ஆத்துமாவைப் போசங்கவும் அமரவும்பண்ணாதிருந்தேனாகில், என் ஆத்துமா தன் தாயினிடத்திலே முலைமறக்கப்பண்ணப்பட்டிருக்கிற குழந்தையைப்போல என்னிடத்தில் இருக்கும்.

௩ இஸ்ரவேல் இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் கர்த்தரை நம்பி இருக்கக்கடவது.

## ௱௩௰௨. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

கர்த்தாவே, தாவீதையும் அவனுடைய சகல உபத்திரவத்தையும் நினையும்.

௨ அவன் தான் கர்த்தருக்கு ஓரிடத்தையும், யாக்கோபுடைய வல்லவருக்கு வாசஸ்தலங்களையும் காணும்மட்டும்,*

*௨ சாமு. ௭. ௨. அப். ௭. ௪௬.

௩ தன் வீட்டின் கூடாரத்திலே பிரவேசியாமலும், தன் படுக்கையினுடைய கட்டிலின்மேல் ஏறாமலும்,

௪ தன் கண்களுக்கு நித்திரையையும், தன் இமைகளுக்கு உறக்கத்தையும் கொடாமலும் இருப்பானென்று,

௫ கர்த்தருக்கு ஆணையிட்டு, யாக்கோபுடைய வல்லவருக்குப் பொருத்தனை பண்ணினான்.

௬ இதோ நாம் எப்பிருத்தாவிலே அதின் செய்தியைக் கேட்டு, ஏயாரின் வெளிகளில் அதைக் கண்டோம்.

௭ அவருடைய வாசஸ்தலங்களுக்குள் பிரவேசித்து, அவர் பாதப்படியிலே பணிவோம்.* *சங். ௯௯. ௫.

௮ ¶ கர்த்தாவே, உம்முடைய தாபரவிடத்திற்குள்ளே தேவரீரும் உமது வல்லமையின் பெட்டியுமாய் எழுந்தருளும்.

௯ உம்முடைய ஆசாரியர்கள் நீதியை உடுத்திக்கொண்டு, உம்முடைய பரிசுத்தவான்கள் கெம்பீரிப்பார்களாக.

௰ நீர் அபிஷேகம்பண்ணுவித்தவன் முகத்தை உம்முடைய தாசனாகிய தாவீதினிமித்தமாகப் புறக்கணியாதிரும்.

௰௧ ¶ உன் கெர்ப்பத்தின் கனியை உன் இராசாசனத்தின்மேல் வைப்போமென்றும்,*
*௨ சாமு. ௭. ௰௨–௰௯.

௰௨ உன் குமாரர் நம்முடைய உடம்படிக்கையையும், நாம் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்போகிற நம்முடைய சாட்சியையும் காத்துநடந்தால், அவர்கள் குமாரரும் என்றென்றைக்கும் உன் இராசாசனத்தில் உளுக்காருவார்களென்றும் கர்த்தர் தாவீதுக்கு உண்மையாய் ஆணையிட்டார்; அதைவிட்டு அவர் பிசகுவதில்லை.

௰௩ ஏனெனில் கர்த்தர் சீயோனைத் தெரிந்துகொண்டு தமக்கு வாசஸ்தலமாக விரும்பினார்.

௰௪ இது என்றென்றைக்கும் நாம் தங்குமிடம்; அங்கே வாசம்பண்ணுவோம்; ஏனெனில் அதை விரும்பினோம்.

௰௫ அதின் ஆகாரத்தை நாம் ஆசீர்வதித்து வருவோம்; அதின் ஏழைகளை நாம் அப்பத்தாலே திருப்தியாக்கி,

௰௬ அதின் ஆசாரியர்களுக்கு இரட்சிப்பை உடுத்துவோம்; அதின் பரிசுத்தவான்கள் மிகவும் கெம்பீரிப்பார்கள்.

௰௭ அங்கே தாவீதுக்குக் கொம்பை முளைப்பிப்போம்; நாம் அபிஷேகம்பண்ணுவித்த தாவீதுக்கு விளக்கை ஆயத்தம்பண்ணினோம்.* *லூக். ௧. ௩௧, ௩௩, ௬௯.

௰௮ அவன் சத்துருக்களுக்கு வெட்கத்தை உடுத்துவோம்; அவன்மீதிலோவென்றால், அவனுடைய கிரீடம் பூக்குமென்றார்.

## ௱௩௩. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்பண்ணுகிறது எத்தனை நன்றும் எத்தனை இன்பமுமானது.

௨ அது ஆரோனுடைய சிரசின்மேல் ஊற்றப்பட்டு, அவனுடைய தாடியிலே வடிகிறதும், அவனுடைய அங்கிகளின்மேல் இறங்குகிறதுமான நல்ல தயிலத்துக்கும்,

௩ எர்மோனின் பனிக்கும், சீயோனின் பருவதங்களின்மேல் இறங்கும் பனிக்கும் ஒப்பாயிருக்கிறது; ஏனெனில் அங்கே கர்த்தர் என்றென்றைக்கும் ஆசீர்வாதத்தையும் சீவனையும் கட்டளையிடுகிறார்.

## ௱௩௪. சங்கீதம்.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

இதோ, இராக்காலங்களில் கர்த்தருடைய வீட்டிலே நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே, எல்லாரும் கர்த்தரைத் தோத்திரியுங்கள்.

௨ உங்கள் கைகளைப் பரிசுத்தஸ்தலத்திற்கு நேராக எடுத்துக் கர்த்தரைத் தோத்திரியுங்கள்.

௩ வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தர் உன்னைச் சீயோனிலிருந்து ஆசீர்வதிக்கக்கடவர்.

## ௱௩௫. சங்கீதம்.

அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள்.

௨ கர்த்தருடைய வீட்டிலும், நம்முடைய பராபரனுடைய வீட்டின் பிரகாரங்களிலும் நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே, துதியுங்கள்.

௩ கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் கர்த்தர் நல்லவர்; அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; ஏனெனில் அது இன்பமானது.

௪ ¶ ஏனென்றால் கர்த்தர் யாக்கோபைத் தமக்கென்றும், இஸ்ரவேலைத் தமக்குச்

சொந்தமென்றும் தெரிந்துகொண்டார்.

௫ ஏனெனில் கர்த்தர் பெரியவரென்றும், நம்முடைய ஆண்டவர் எல்லாத் தேவர்களுக்கும் மேலானவரென்றும் நான் அறிவேன்.* *சங். ௮௬. ௮.

௬ வானத்திலும், பூமியிலும், சமுத்திரங்களிலும், எல்லா ஆழங்களிலும், கர்த்தர் தமக்குச் சித்தமானவைகளை எல்லாம் செய்கிறார்.* *சங். ௱௰௫. ௩.

௭ அவர் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி, மழையுடன் மின்னல்களை உண்டாக்கி, காற்றைத் தம்முடைய பண்டகசாலைகளிலிருந்து புறப்படப்பண்ணுகிறவர்.* *எரே. ௰. ௰௩.

௮ அவர் எகிப்தின் தலைச்சன்களை மனுஷனைத்துவக்கி மிருகம்மட்டும் அடித்தவர்.

௯ எகிப்துதேசமே, உன் நடுவே அடையாளங்களையும், அற்புதங்களையும் பார்வோன்மேலும், அவனுடைய எல்லா ஊழியக்காரர்மேலும் அனுப்பினார்.

௰ அவர் அநேகம் சாதிகளை அடித்து, பெலத்த இராசாக்களைக் கொன்றுவிட்டு,

௰௧ எமோரியரின் இராசாவாகிய சிகோனையும், பாசானின் இராசாவாகிய ஓகையும், கானானின் சகல இராச்சியங்களையும் அழித்து,

௰௨ அவர்கள் தேசத்தைச் சுதந்தரமாகக் கொடுத்தார்; தம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகத்தானே.

௰௩ ¶ கர்த்தாவே, உம்முடைய நாமம் என்றைக்கும், கர்த்தாவே, உம்முடைய கீர்த்தி தலைமுறைதலைமுறைக்கும் இருக்கும்.* *சங். ௱௨. ௰௩.

௰௪ ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தின் நியாயத்தை விசாரித்து, தம்முடைய ஊழியக்காரர்மேல் பரிதாபமாவார்.

௰௫ அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள் மனுஷருடைய கைகளின் வேலையாகிய வெள்ளியும் பொன்னுந்தானே.*
*சங். ௱௰௫. ௪—௮.

௰௬ அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது; அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது.

௰௭ அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது; அவைகள் வாயிலே சுவாசமுமில்லை.

௰௮ அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிற அனைவரும் அவைகளைப்போல இருக்கிறார்கள்.

௰௯ ¶ இஸ்ரவேல் வீட்டாரே கர்த்தனைத் தோத்திரியுங்கள்; ஆரோனின் வீட்டாரே கர்த்தனைத் தோத்திரியுங்கள்.

௨௰ லேவி வீட்டாரே, கர்த்தனைத் தோத்திரியுங்கள்; கர்த்தருக்குப் பயந்தவர்களே, கர்த்தனைத் தோத்திரியுங்கள்.

௨௧ எருசலேமில் வாசம்பண்ணுகிற கர்த்தர் சீயோனிலிருந்து தோத்திரிக்கப்படக்கடவார்; அல்லேலூயா.

## ௱௩௬. சங்கீதம்.

கர்த்தனைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்லவர்; அவர் கிருபை என்றுமுள்ளது.*
*சங். ௱௬. ௧: ௱௭. ௧: ௱௰௮. ௧.

௨ தேவாதிதேவனைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௩ கர்த்தாதி கர்த்தனைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௪ ¶ ஒருவராய்ப் பெரிய அதிசயங்களைச் செய்கிறவனாயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.* *சங். ௭௨. ௰௮.

௫ வானங்களை ஞானமாய் உண்டாக்கினவனாயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௬ பூமியைத் தண்ணீர்களுக்கு உயரமாக விரித்தவனாயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௭ பெரிய வெளிச்சங்களை உண்டாக்கினவனாயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௮ பகலில் ஆளச் சூரியனைப் படைத்தவனாயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௯ இரவில் ஆளச் சந்திரனையும், நட்சத்திரங்களையும் படைத்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰ ¶ எகிப்தியருடைய தலைச்சன்களை அடித்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௧ இஸ்ரவேலை அவர்கள் நடுவிலிருந்து புறப்படப்பண்ணினவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௨ பெலத்த கையினாலும், நீட்டின புயத்தினாலும் அதைச் செய்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௩ நாணற்கடலை இரண்டாகப் பகிர்ந்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௪ இஸ்ரவேலை அதை நடுவழியாகக் கடக்கப்பண்ணினவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௫ பார்வோனையும், அவன் இராணுவப் பெலனையும் நாணற்கடலில் விழத் தள்ளினவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௬ தம்முடைய சனத்தை வனாந்தரத்தில் நடத்தினவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௭ ¶ பெரிய இராசாக்களை அடித்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௮ வல்லமையுள்ள இராசாக்களைக் கொன்றுபோட்டவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௰௯ எமோரியரின் இராசாவான சீகோனைக் கொன்றவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௰ பாசானின் இராசாவான ஓகையும் கொன்றவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௧ அவர்கள் தேசத்தைச் சுதந்தரமாகத் தந்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௨ அதைத் தம்முடைய பணிவிடைச் சனமாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகத் தந்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௩ ¶ நம்முடைய தாழ்மையிலே நம்மை நினைத்தவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௪ நம்மை நம்முடைய சத்துருக்களின் கையிலிருந்து பறித்துக்கொண்டவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௫ எல்லா மாம்சத்துக்கும் ஆகாரம் கொடுக்கிறவரையே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

௨௬ வானங்களுடைய பராபரனையே துதியுங்கள்; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

## ௱௩௭. சங்கீதம்.

பாபேலின் ஆறுகளண்டையிலே நாங்கள் உளுக்கார்ந்திருந்து, அங்கே சீயோனை நினைத்து அழுதுகொண்டோம்.

௨ அதின் நடுவிலிருக்கும் அலரிச்செடிகளின்மேல் எங்கள் சுரமண்டலங்களைத் தூக்கிவிட்டோம்.

௩ ஏனெனில் எங்களுக்குச் சீயோனின் பாட்டுகளிலே சிலவற்றைப் பாடுங்களென்று அங்கே எங்களைச் சிறைபிடித்தவர்கள் எங்கள் பாட்டு வசனங்களையும், எங்களை மண்மேடுகளாக்கினவர்கள் சந்தோஷம்பாராட்டலையும் கேட்டார்கள்.

௪ கர்த்தரின் பாட்டை நாங்கள் அந்நிய தேசத்திலே பாடுவது எப்படி?

௫ எருசலேமே, நான் உன்னை மறந்தால் என் வலதுகை என்னை மறப்பதாக.*

*எரே. ௫௧. ௫௰.

௬ நான் உன்னை நினையாமலும் நான் எருசலேமை என்னுடைய அதிக மகிழ்ச்சிக்கு மேன்மையாக உயர்த்தாமலும்போனால் என் நாவு என் மேல்வாயோடு ஒட்டிக் கொள்வதாக.

௭ ¶ அதைத் திறப்பாக்கிவிடுங்கள்; அதை அதின் அஸ்திவாரங்கள்மட்டும் திறப்பாக்கிவிடுங்களென்று சொல்லியிருக்கிற ஏதோம் புத்திரரை எருசலேமின் நாளிலே நினையும் கர்த்தாவே.* *ஒப. ௰. ௰௧.

௮ பாழாகும் பாபேல் குமாரத்தியே, நீ எங்களுக்குச் செலுத்தினபடி, உன் பதிலை உனக்குச் செலுத்துபவன் பாக்கியவான்.*
*எரே. ௫௰. ௰௫—௨௯: ௫௧. ௨௪. வெளி. ௰௮. ௬.

௯ உன் குழந்தைகளைப் பிடித்துக் கல்லோடே மோதியடிக்கிறவன் பாக்கியவான்.*
*ஏசா. ௰௩. ௰௬. வெளி. ௨. ௨௩.

## ௱௩௮. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

உம்மை என் முழு இருதயத்தினாலும் துதிப்பேன்; தேவர்களுக்குமுன்பாக உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௨ நான் உமது பரிசுத்த தேவாலயத்துக்கு நேராய்ப் பணிந்து, உம்முடைய கிருபையினிமித்தமும் உம்முடைய உண்மையினிமித்தமும் உமது நாமத்தைத் துதிப்பேன்; ஏனெனில் உம்முடைய சகல கீர்த்தியைப் பார்க்கிலும் உம்முடைய வார்த்தையை மகிமைப்படுத்தினீர்.

௩ நான் கூப்பிட்ட நாளிலே எனக்கு மறுஉத்தரவு அருளிச்செய்தீர்; என் ஆத்துமாவிலே பெலன்தந்து என்னைத் தயிரியப்படுத்தினீர்.

௪ கர்த்தாவே, பூமியின் இராசாக்களெல்லாம் உமது வாக்கின் வார்த்தைகளைக் கேட்கும்போது உம்மைத் துதிப்பார்கள்.*
*சங். ௬௮. ௩௩: ௭௨. ௰௧.

௫ கர்த்தாவின் வழிகளைப் பாடுவார்கள்; ஏனெனில் கர்த்தரின் மகிமை பெரியது.

௬ ¶ ஏனென்றால் கர்த்தர் உயர்ந்தவராயிருந்தும் தாழ்மையானவனை நோக்கிப்பார்க்கிறார்; மேட்டிமையானவனையோ தூரத்திலிருந்து அறிகிறார்.* *சங். ௱௰௩. ௫, ௬.

௭ நான் நெருக்கத்தின் நடுவிலே நடந்தால் நீர் என்னை உயிர்ப்பிக்கிறீர்; உம்முடைய கையை என் சத்துருக்களின் கோபத்திற்கு விரோதமாக நீட்டுகிறீர்; உமது வலதுகரம் என்னை இரட்சிக்கிறது.

௮ கர்த்தர் எனக்காக யாவையும் செய்து முடிப்பார்; கர்த்தாவே, உமது கிருபை என்றென்றைக்கும் உள்ளது; உம்முடைய கைகளின் கிரியைகளை நெகிழீராக.

## ௱௩௯. சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என்னை ஆராய்ந்து அறிந்திருக்கிறீர்.

௨ என் உளுக்காருதலையும், என் எழுந்திருக்குதலையும் தேவரீர் அறிந்திருக்கிறீர்; என் நினைவுகளைத் தூரத்திலிருந்து உணருகிறீர்.*
*எரே. ௰௭. ௰.

௩ நான் நடந்தாலும், படுத்திருந்தாலும் என்னைச் சூழ்ந்திருக்கிறீர்; என் வழிகளெல்லாம் உமக்குப் பழக்கமாயிருக்கின்றன.

௪ ஏனெனில் என் நாவில் சொல்பிறவாததற்குமுன்னே இதோ கர்த்தாவே, அவைகளை எல்லாம் அறிந்திருக்கிறீர்.

௫ பின்புறத்திலும் முன்புறத்திலும், நீர் என்னை நெருக்கி, என்மேலே உம்முடைய கரத்தை வைக்கிறீர்.

௬ ¶ இவ்வறிவு எனக்கு மிஞ்சின ஆச்சரியமும், எனக்கு எட்டாத உயரமுமாயிருக்கின்றது.

௭ உம்முடைய ஆவிக்கு மறைவாக எங்கே போவேன்? உம்முடைய முகத்திற்கு மறைவாக எங்கே ஓடுவேன்?

௮ நான் வானத்திற்கு ஏறினாலும் அங்கே தேவரீர் இருக்கிறீர்; நான் பாதாளத்திலே படுக்கைபோட்டாலும் இதோ தேவரீர் இருக்கிறீர்.* *ஆமோ. ௯. ௨, ௩.

௯ நான் விடியற்காலத்தின் செட்டைகளை எடுத்து, கடலின் இறுகடைசியிலே போய்த்தங்கினாலும்,

௰ அங்கேயும் உம்முடைய லக என்னை நடத்தி, உம்முடைய வலதுகரம் என்னைப் பிடிக்கும்.

௰க இருளாகிலும் என்னை மூடிவிடுமென்றாலும், இராவும் என்னைச் சுற்றிலும் வெளிச்சந்தானே.

௰உ உமக்கு மறைவாக இருளும் அந்தகாரப்படுத்தாமல், இராக்காலம் பகலைப்போல வெளிச்சமாயிருக்கும்; இருளும் வெளிச்சமும் சரி.

௰ங ஏனெனில் தேவரீர் என் உள்ளிந்திரியங்களைக் கைக்கொண்டிருக்கிறீர்; என் தாயின் கெர்ப்பத்தில் என்னைக் காப்பாற்றினீர்.

௰ச பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டானேன் என்கிறதின்நிமித்தம் உம்மைத் துதிக்கிறேன்; உம்முடைய கிரியைகள் அதிசயமானவைகளென்பது என் ஆத்துமாவுக்கு நன்றாய்த் தெரியும்.* *சங். ௱௰ங. எங. யோபு. ௰. அ, ௰உ. பிர. ௰க. ரு.

௰ரு நான் ஒளிப்பிடத்திலே உண்டாக்கப்பட்டுப் பூமியின் தாழ்விடங்களில் சித்திரவிநோதமாய் உருவெடுத்தபோது, என் எலும்புகள் உமக்கு மறைவாயிருந்ததில்லை.

௰சு என் கருவை உம்முடைய கண்கள் கண்டன; இவைகளில் ஒன்றுமில்லாதபோதே இவைகளனைத்தும் இவைகள் உருவேற்படும் நாள்களும், உம்முடைய புஸ்தகத்தில் எழுதியிருந்தது.

௰எ ¶ ஆனதுகொண்டு பராபரனே, உம்முடைய நினைவுகள் எனக்கு எத்தனை அருமையானவைகள்? அவைகளின் தொகைகள் எத்தனை திரட்சி?* *சங். ௯உ. ௬.

௰அ அவைகளை நான் எண்ணப்போனால் மணலைப்பார்க்கிலும் அதிகமாம்; நான் விழிக்கையில் இன்னம் உம்மண்டையில் இருக்கிறேன்.

௰௯ ¶ பராபரனே, ஆகாதவனைக் கொன்றீரானால் தாவிலை; இரத்தப்பிரியரான மனுஷரே, நீங்கள் என்னைவிட்டு அகன்றுபோங்கள்.

உ௰ அவர்கள் துர்க்குணப்பேச்சாய் உம்மைக்குறித்துப் பேசுகிறார்கள்; உம்முடைய சத்துருக்கள் வீணாக உப்பியிருக்கிறார்கள்.

உக கர்த்தாவே, உம்மைப் பகைக்கிறவர்களை நான் பகையாமலும், உமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களை அரோசியாமலும் இருப்பேனோ?

உஉ முழுப்பகையாய் அவர்களைப் பகைக்கிறேன்; எனக்குப் பகைஞராானார்கள்.

உங பராபரனே, என்னை ஆராய்ந்து என் இருதயத்தை அறிந்துகொள்ளும்; நீர் என்னைச் சோதித்து, என் சிந்தனைகளை அறிந்துகொண்டு,* *சங். உச. உ.

உச என்னில் வேதனையுண்டாக்கும்வழி உண்டோ என்று பார்த்து, என்னை நித்திய வழியிலே நடத்தும்.

## ௱சம். சங்கீதம்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, பொல்லாத மனுஷனுக்கு என்னைத் தப்புவியும்; கொடுமைக்காரனுக்கு என்னை விலக்கிக் காரும்.* *சங். சக. ங.

உ இருதயத்திலே அவர்கள் பொல்லாப்புகளைச் சிந்தித்து, நாள்தோறும் யுத்தங்களுக்கென்று கூட்டங்கூடுகிறார்கள்.

ங சர்ப்பத்தைப்போலே தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்கள்; அவர்கள் உதடுகளின்கீழே விரியன் பாம்புகளின் விஷமிருக்கிறது; சேலா.* *சங். ருரு. உஉ. உரோ. ங. ௰ங.

ச கர்த்தாவே, என்னை ஆகாதவன் கைகளுக்கு நீங்கலாகவும், கொடுமைக்காரனுக்கு விலக்கமாகவும் காரும்; அவர்கள் என் காலடிகளைத் தள்ளாடப்பண்ண நினைக்கிறார்கள்.

ரு அகந்தைக்காரர் எனக்குக் கண்ணியையும் கயிறுகளையும் மறைவாய் வைக்கிறார்கள், வழியோரத்திலே வலையைவிரித்து என

ங்குச் சுருக்குகளை வைக்கிறார்கள்; சேலா.

௬ ¶ நான் கர்த்தருடனே தேவரீர் என் பராபரனென்கிறேன்; கர்த்தாவே, என் விண்ணப்பங்களின் சத்தத்திற்குச் செவிகொடும்.

௭ ஆண்டவராகிய கர்த்தாவே, என் இரட்சிப்பின் பலனே, படைநாளிலே என் தலையை மூடிக்கொண்டிருக்கிறீர்.

௮ கர்த்தாவே, ஆகாதவனுடைய ஆசைகளைக் கட்டளையிடாமலும், அவன் தன்னை உயர்த்துகிறதற்கு இடமான அவனுடைய வினையத்தை நடந்தேறப்பண்ணாமலும் இருப்பீராக; சேலா.

௯ ¶ என்னை வளைந்துகொள்ளுகிறவர்களுடைய நஞ்சென்கிற அவர்கள் உதடுகளின் தீவினை அவர்களை மூடுவதாக.

௰ நெருப்புத்தழல் அவர்கள் மேல் விழுவதாக; அக்கினியிலும், தாங்கள் எழுந்திருக்கமாட்டாத பள்ளங்களிலும் அவர்களை விழப்பண்ணுவாராக.* *சங். ௰௧. ௬.

௰௧ பொல்லாத நாவுள்ளவன் பூமியிலே நிலைப்படுவதில்லை; கொடுமையான மனுஷனைப் பறக்கடிக்கப் பொல்லாப்பு அவனை வேட்டையாடும்.

௰௨ சிறுமையானவனுடைய வழக்கையும் எளியவர்களின் நியாயத்தையும் கர்த்தர் விசாரிப்பாரென்று அறிவேன்.

௰௩ ஆம் நீதிமான்கள் உம்முடைய நாமத்தைத் துதிப்பார்கள்; செம்மையானவர்கள் உமக்குமுன்பாகத் தரித்திருப்பார்கள்.

## ௱௪௧. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; என்னண்டைக்குத் தீவிரியும்; நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில் என் சத்தத்திற்குச் செவிகொடும்.

௨ என் விண்ணப்பம் உமக்கு முன்பாகத் தூபமாகவும், என் கையேற்பு அந்திப்பலிக் காணிக்கையாகவும்ஒப்பிடப்படக்கடவது.

௩ கர்த்தாவே, என் வாய்க்குக் காவலைவையும், என் உதடுகளின் வாசலைக் காவல் பண்ணும்.* *சங். ௩௯. ௨.

௪ அக்கிரமஞ்செய்கிற மனுஷரோடே ஆகாமியக் கிரியைகளை நடப்பிக்கும் துர்க்கருமத்திற்கு என் இருதயத்தை இணங்கவொட்டாதிரும்; இவர்கள் பதார்த்தங்களில் சாப்பிடாமல் இருப்பேனாக.

௫ நீதிமான் என்னைத் தயவாய்க் குட்டி என்னைக் கடிந்துகொள்ளக்கடவான்; அது தலைக்கு எண்ணெயைப்போல இருக்கும், என் தலை அதைத் தட்டுதல் பண்ணுவதில்லை; ஏனெனில் இன்னம் என் செபம் அவர்கள் இக்கட்டுகளுக்கு எதிரானதாமே.* *வாக். ௰௨. ௧.

௬ ¶ அவர்களுடைய நியாயாதிபதிகள் கன்மலைச் சார்வுகளிலிருந்து தள்ளுண்ணக்கடவார்கள்; என் வார்த்தைகளையோ இன்பமானவைகளென்று கேட்பார்களாக.

௭ பூமியில் எங்களை ஒருவன் வெட்டிப் பிளக்குமாப்போலே, எங்கள் எலும்புகள் பாதாளவாய்க்கு நேராகச் சிதறடிக்கப்பட்டன.

௮ ஆனால் ஆண்டவராகிய கர்த்தாவே, உம்மை என் கண்கள் நோக்குகின்றன; உம்மை நம்பியிருக்கிறேன், என் ஆத்துமாவை வெறுமையாக விடாதிரும்.

௯ எனக்கு அவர்கள் வைத்த கண்ணியின் சிக்குகளுக்கும், அக்கிரமக்காரரின் சுருக்குகளுக்கும் என்னை விலக்கிக்காரும்.* *சங். ௱௪௰. ௫.

௰ நான் கடந்துபோகுமளவும் தங்கள் தங்கள் வலைகளில் ஆகாதவர்கள்தானே ஏகமாய் விழுவார்களாக.

## ௱௪௨. சங்கீதம்.

(தாவீது கெபியிலிருக்கும்போது பண்ணின விண்ணப்பமாகிய போதக சங்கீதம்.)

கர்த்தரை நோக்கி, என் சத்தத்தினாலே கூப்பிடுகிறேன்; கர்த்தரை நோக்கி, என் சத்தத்தினாலே கெஞ்சுகிறேன்.

௨ அவருக்குமுன்பாக என் சஞ்சலத்தை ஊற்றி, அவருக்குமுன்பாக என் நெருக்கத்தை அறிக்கையிடுகிறேன்.

௩ என் ஆவி என்னில் தியங்கும்போது தேவரீர் என் பாதையை அறிந்திருக்கிறீர்; நான் நடக்கிற வழியிலே எனக்குக் கண்ணியை மறைவாய் வைத்தார்கள்.* *சங். ௱௪௩. ௪.

௪ நீர் வலதுபுறமாகக் கண்ணோக்கி என்னை அறிகிறவன் எனக்கில்லையென்று பாரும்; ஒதுக்கு எனக்கில்லாதேபோயிற்று; என் ஆத்துமாவுக்காக விசாரிக்கிறவனில்லை.

௫ கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; தேவரீர் என் அடைக்கலமும் சீவனுள்ளோருடைய பூமியில் என் பங்குமாயிருக்கிறீரென்கிறேன்.* *சங். ௯௧. ௧, ௨.

௬ என் கூக்குரலுக்குக் கவனியும்; ஏனெனில் மெத்தவும் குறுகினேன்; என்னைத் தொடருகிறவர்களுக்கு என்னைத் தப்புவியும்; ஏனெனில் எனக்கு மிஞ்சின பலமாக இருக்கிறார்கள்.* *சங். ௭. ௨.

௭ உம்முடைய நாமத்தை நான் துதிக்கும்படிக்கு என் ஆத்துமாவைக் காவலுக்கு நீங்கலாக்கிவிடும், எனக்குத் தயவுபண்ணினீரானால் நீதிமான்கள் என்னைச் சூழ்வார்கள்.* *சங். ௱௪௩. ௯.

## ௱௪௩. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் செபத்தைக்கேளும்; என் விண்ணப்பங்களுக்குச் செவிகொடும்; நீர் உம்முடைய உண்மையின்படியும், உம்முடைய நீதியின்படியும் எனக்கு மறுஉத்தரவு அருளிச்செய்து,* *சங். ௫. ௨: ௨௭. ௭.

௨ உம்முடைய அடியானோடே நியாயத்தீர்ப்புக்குள் பிரவேசியாதிரும்; ஏனெனில் சீவனுள்ள ஒருவனும் உமக்குமுன்பாக நீதிமானல்ல.

௩ ¶ ஏனென்றால் சத்துரு என் ஆத்துமாவைத் தொடர்ந்து, என் பிராணனைத் தரையோடே நசுக்கிவிட்டு, என்னைச் சதாகாலமாய் மரித்துக்கிடக்கிறவர்கள் இருக்கிறதுபோலே இருளில் இருக்கப்பண்ணுகிறான்.

௪ ஆகையால் என் ஆவி என்னில் தியங்கும்; என் இருதயம் எனக்குள்ளே திடுக்கிடும்.

௫ பூர்வநாள்களை நினைக்கிறேன்; உம்முடைய செய்கைகளை எல்லாம் தியானிக்கிறேன்; உம்முடைய கரங்களின் கிரியைகளை யோசிக்கிறேன்.* *சங். ௭௭. ௬: ௰௨. ௰௩.

௬ என் கைகளை உமக்கு நேராய் விரிக்கிறேன்; என் ஆத்துமா வரண்ட நிலத்தைப்போல உம்முடையமேலே தாகமாயிருக்கிறது; சேலா.* *சங். ௪௨. ௩: ௬௩. ௨.

௭ ¶ கர்த்தாவே, சீக்கிரமாய் என் செபத்தைக் கேளும், என் ஆவி தொய்ந்துபோம். நான் குழியில் இறங்குகிறவர்களுக்கு ஒத்துப்போகாதபடிக்கு உம்முடைய முகத்தை எனக்கு மறைக்காதிரும்.

௮ காலமே உமது கிருபையை என்னைக் கேட்கப்பண்ணும்; ஏனெனில், உம்மை நம்பியிருக்கிறேன்; நான் நடக்கவேண்டிய வழியை எனக்கு அறிவியும்; ஏனெனில் உம்மண்டைக்கு என் ஆத்துமாவை உயர்த்துகிறேன்.* *சங். ௨௫. ௧.

௯ கர்த்தாவே, என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும்; உம்மிடத்தில் ஒதுங்குகிறேன்.

௰ உமக்குப் பிரியமானதைச் செய்ய எனக்குப் படிப்பியும்; ஏனெனில் தேவரீர் என் பராபரன்; உம்முடைய நல்ல ஆவி என்னைச் செம்மையான வழியிலே நடத்துவாராக.

௰௧ கர்த்தாவே, உம்முடைய நாமத்தினிமித்தமாக என்னை உயிர்ப்பியும்; நீர் உம்முடைய நீதியின்படி என் ஆத்துமாவை இடுக்கணுக்கு நீங்கலாக்கிவிட்டு,

௰௨ உம்முடைய கிருபையின்படி என் சத்துருக்களைச் சங்கரித்து, என் ஆத்துமாவை இடுக்கண்படுத்துகிற யாவரையும்

அழியும்; ஏனெனில் நான் உம்முடைய அடியான்.

## ௱௪௪. சங்கீதம்.

(தாவீதின் சங்கீதம்.)

என் கைகளைப் போருக்கும், என் விரல்களை யுத்தத்துக்கும், படிப்பிக்கிற என் கன்மலையாகிய கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்.* *சங். ௰௮. ௩௫, ௩௪.

௨ அவர் என் தயையும், என் கோட்டையும், என் உயர்ந்த அடைக்கலமும், என்னை விடுவிக்கிறவரும், என் கேடயமும், நான் நம்பினவரும், என் சனத்தை எனக்குக் கீழ்ப்படுத்துகிறவருமாமே.*
*சங். ௰௮. ௨, ௩.

௩ ¶ கர்த்தாவே, மனுஷன் நீர் அவனை அறிகிறதற்கும், மனுபுத்திரன் நீர் அவனை எண்ணுகிறதற்கும், அவன் எம்மாத்திரம்?*
*யோபு. ௭. ௰௭.

௪ மனுஷன் மாயைக்கும் அவனுடைய நாள்கள் கடந்துபோகிற நிழலுக்கும் சாயலாயிருக்கும்.* *யோபு. ௰௪. ௨.

௫ ¶ கர்த்தாவே, நீர் உம்முடைய வானங்களைத் தாழ்த்தி இறங்கி, பர்வதங்களை அவைகள் புகையும்படிக்குத் தீண்டும்.

௬ மின்னல்களை விட்டு அவர்களைச் சிதறடித்து, உம்முடைய அம்புகளை அனுப்பி அவர்களைக் கலங்கடியும்.

௭ உமது கரத்தை உயரத்திலிருந்து நீட்டி என்னை விடுதலைபண்ணி, என்னைத் திரளான தண்ணீர்களுக்கும், அந்நிய புத்திரரின் கைக்கும் தப்புவியும்.

௮ அவர்கள் வாய் மாயையைப் பேசும்; அவர்கள் வலதுகை கள்ளக்கையாயிருக்கிறது.

௯ ¶ பராபரனே, இராசாக்களுக்குச் செயத்தைத் தந்து, உம்முடைய அடியானாகிய தாவீதைப் பொல்லாத பட்டயத்துக்குத் தப்புவிக்கிறவரே,

௰ உம்மை நான் புதுப்பாட்டாய்ப் பாடி, உம்மைத் தம்புருவாலும் பத்துநரம்பு வீணையாலும் கீர்த்தனம்பண்ணுவேன்.*
* சங். ௩௩. ௨, ௩.

௰௧ என்னை அந்நிய புத்திரரின் கைக்கு விலக்கி, என்னைத் தப்பப்பண்ணும்; அவர்கள் வாய் மாயையைப் பேசும்; அவர்கள் வலதுகை கள்ளக்கையாயிருக்கிறது.

௰௨ எங்கள் குமாரர் தங்கள் இளமையில் பயிராக்கப்பட்ட விருட்சக்கன்றுகளைப் போலவும், எங்கள் குமாரத்திகள் சித்திரந்தீர்ந்த அரமனைக் கோணங்களைப்போலவும் இருக்கவும்,

௰௩ எங்கள் பண்டகசாலைகள் சகலவகை வஸ்துக்களைத் தரத்தக்கவிதமாய் நிறைந்தவைகளாயிருக்கவும், எங்கள் ஆடுகள் எங்கள் கிராமங்களில் ஆயிரங்களும் பதினாயிரங்களுமாய் இருக்கவும்,

௰௪ எங்கள் எருதுகள் பெலத்திருக்கவும், பொல்லாங்கு உள்ப்புகுதலில்லாமலும், வலசைவாங்குதலில்லாமலும், எங்கள் வீதிகளில் கூக்குரலுண்டாகாமலும் இருக்கவும் கடவதென்பார்கள்.

௰௫ இப்படிச் சம்பவிக்கும் சனம் பாக்கியமுள்ளது; கர்த்தாவைத் தெய்வமாய்க் கொண்டிருக்கிற சனம் பாக்கியமுள்ளதுதானே.* *சங். ௩௩. ௰௨.

## ௱௪௫. சங்கீதம்.

(தாவீது பாடின துதி.)

இராசாவாகிய என் பராபரனே, உம்மை உயர்த்தி, உம்முடைய நாமத்தை எப்போதும் என்றென்றைக்கும் தோத்திரிப்பேன்.

௨ சகல நாளிலும் உம்மைத் தோத்திரித்து, எப்போதும் என்றென்றைக்கும் உம்முடைய நாமத்தைத் துதிப்பேன்.

௩ கர்த்தர் பெரியவரும் மிகவும் புகழப்படத்தக்கவருமாயிருக்கிறார்; அவர் மகத்துவத்துக்கு ஆராய்தலில்லை.

௪ தலைமுறைதலைமுறையாய் உம்முடைய கிரியைகளின் புகழ்ச்சியைச் சொல்லி, உம்

முடைய வல்லமைகளை அறிவிப்பார்கள்.

௫ உம்முடைய கனமான மகிமையின் பிரஸ்தாபத்தையும், உம்முடைய அதிசயமான கிரியைகளையுங்குறித்துப் பேசுவேன்.

௬ உம்முடைய பயங்கரங்களின் பெலத்தைச் சொல்லுவார்கள்; உம்முடைய மகத்துவத்தை விவரிப்பேன்.

௭ உமது தயையின் கீர்த்தியை நினைத்து வெளிப்படுத்தி, உமது நீதியைக் கெம்பீரித்துச் சொல்லுவார்கள்.

௮ ¶ கர்த்தர் இரக்கமும், மனவுருக்கமும், நீடியசாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.* * சங். ௱௩. ௮.

௯ கர்த்தர் எல்லார்மேலும் தயையுள்ளவர்; அவர் இரக்கங்கள் அவருடைய எல்லாக் கிரியைகளின்மேலும் உள்ளது.

௰ கர்த்தாவே, உம்முடைய எல்லாக் கிரியைகளும் உம்மைத் துதிக்கும்; உம்முடைய பரிசுத்தவான்கள் உம்மைத் தோத்திரித்து,

௰௧ தாங்கள் மனுப்புத்திரருக்கு உம்முடைய வல்லமையையும், உம்முடைய இராச்சியத்தின் கனமான மகிமையையும் அறிவிக்கும்படிக்கு,

௰௨ உமது இராச்சியத்தின் மகிமையைச் சொல்லி, உமது வல்லமையை விவரிப்பார்கள்.

௰௩ உம்முடைய இராச்சியம் எல்லாச் சதாகாலங்களின் இராச்சியமாகவும், உம்முடைய ஆளுகை எல்லாத் தலைமுறைதலைமுறையாகவும் இருக்கும்.* * சங். ௱௪௬. ௰.

௰௪ ¶ கர்த்தர் விழுகிற யாவரையும் தாங்கி, மடங்கடிக்கப்பட்ட யாவரையும் தூக்கி எடுக்கிறவர்.* * சங். ௱௪௬. ௮.

௰௫ எல்லாச் சீவன்களின் கண்களும் உம்மைநோக்கிக்கொண்டிருக்கின்றன; தேவரீர் ஏற்றவேளையிலே அவைகளின் போசனத்தை அவைகளுக்குக் கொடுக்கிறீர்.*
* சங். ௱௪. ௨௭.

௰௬ உம்முடைய கையைத் திறந்து, சீவனுள்ள எல்லாவற்றையும் இரம்மியமாய்த் திருப்தியடையப்பண்ணுகிறீர்.*
* சங். ௱௩௬. ௨௫.

௰௭ கர்த்தர் தம்முடைய வழிகளிலெல்லாம் நீதியுள்ளவரும், தம்முடைய கிரியைகளிலெல்லாம் கிருபையுள்ளவருமாயிருக்கிறார்.

௰௮ ¶ தம்மைநோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும், உண்மையாய்த் தம்மைநோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும் கர்த்தர் சமீபமாய் இருக்கிறார்.

௰௯ அவர் தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத்தின்படி செய்து, அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டு, அவர்களை இரட்சிக்கிறார்.*
* சங். ௩௭. ௪. வாக். ௰. ௨௪.

௨௰ கர்த்தர் தம்மைச் சிநேகிக்கிற யாவரையும் காப்பாற்றி, ஆகாதவர்கள் எல்லாரையும் அழிப்பார்.

௨௧ என் வாய் கர்த்தரின் துதியைச் சொல்வதாக; எல்லா மாம்சமும் அவர் பரிசுத்த நாமத்தை எப்போதும் என்றென்றைக்கும் தோத்திரிக்கக்கடவது.

## ௱௪௬. சங்கீதம்.

அல்லேலூயா, என் ஆத்துமாவே, கர்த்தரைத் துதி.* * சங். ௱௩. ௧: ௱௪. ௧.

௨ நான் சீவனுள்ளமட்டும் கர்த்தரைத் துதிப்பேன்; நான் இருக்குமளவும் என் பராபரனைக் கீர்த்தனம்பண்ணுவேன்.*
* சங். ௱௪. ௩௩.

௩ பிரபுக்களையும், இரட்சிப்பில்லாமனுப் புத்திரனையும் நம்பாதிருங்கள்.*
* சங். ௱௰௮. ௮, ௯. எரே. ௰௭. ௫.

௪ அவனுடைய ஆவி புறப்படும், தன் மண்ணுக்குத் திரும்புகிறான்; அந்நாளிலே அவன் யோசனைகள் அழியும்.

௫ ¶ யாக்கோபின் பராபரனைத் தன் துணையாகக்கொண்டிருந்து, வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ளவை எல்லாவற்றையும் உண்டாக்கின

...ன் பராபரனாகிய கர்த்தரின்மேல் தன் நம்பிக்கையை வைக்கிறவன் பாக்கியவான்.*

* சங். ௪௰. ௫: ௮௪. ௰௨.

௬ அவர் என்றென்றைக்கும் உண்மையைக் காக்கிறார்.

௭ ஒடுக்கப்பட்டவர்களுக்கு நியாயம் செய்கிறார்; பசியாயிருக்கிறவர்களுக்கு ஆகாரம் கொடுக்கிறார்; கட்டுண்டவர்களைக் கர்த்தர் விடுதலையாக்குகிறார்.

௮ ¶ குருடரின் கண்களைக் கர்த்தர் திறக்கிறார்; மடங்கடிக்கசப்பட்டவர்களைக் கர்த்தர் தூக்கி எடுக்கிறார்; நீதிமான்களைக் கர்த்தர் சிநேகிக்கிறார்.* * சங். ௱௪௫. ௰௪.

௯ கர்த்தர் பரதேசிகளைக் காப்பாற்றித் திக்கற்றவனையும், விதவையையும் ஆதரிக்கிறார்; ஆனால் ஆகாதவர்களின் வழியைக் கவிழ்க்கிறார்.

௰ கர்த்தர் சதாகாலமாகவும், சீயோனே, உன் பராபரன் தலைமுறைதலைமுறையாகவும் இராசரிகம்பண்ணுகிறார்; அல்லேலூயா.

## ௱௪௭. சங்கீதம்.

துதியே இன்பமும் ஏற்றதுமாய் இருக்கிறது; கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் நம்முடைய பராபரனைக் கீர்த்தனம்பண்ணுகிறது நல்லது.* *சங். ௯௨. ௧, ௨.

௨ கர்த்தர் எருசலேமைக் கட்டித் துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச்சேர்க்கிறார்.

௩ இருதயம் நொருங்குண்டவர்களைக் குணமாக்கி, அவர்கள் நோவுள்ள காயங்களைக் கட்டுகிறார்.* * ஏசா. ௬௧. ௧—௩.

௪ நட்சத்திரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளை எல்லாம் பேர்பேராக அழைக்கிறார்.* * ஏசா. ௪௰. ௨௬.

௫ நம்முடைய ஆண்டவர் பெரியவரும் மகா பெலனுள்ளவருமாயிருக்கிறார்; அவருடைய உணர்வு எண்ணிமுடியாது.*

* சங். ௱௩௫. ௫: ௱௪௫. ௩.

௬ கர்த்தர் சாந்தகுணமுள்ளவர்களை உயர்த்தி, ஆகாதவர்களைத் தரைமட்டும் தாழ்த்துகிறார்.* * சங். ௱௪௬. ௮, ௯.

௭ கர்த்தரைத் துதியோடே பாடிக்கொண்டிருந்து, நம்முடைய பராபரனைச் சுரமண்டலத்தால் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௮ அவர் வானத்தை மேகங்களால் மூடி, பூமிக்கு மழையை ஆயத்தப்படுத்தி, மலைகளில் புல்லை முளைப்பித்து,

௯ மிருகஜீவனுக்கும், கூப்பிடுகிற காக்கைக் குஞ்சுகளுக்கும் அவைகளின் ஆகாரத்தைக் கொடுக்கிறார்.

௰ குதிரைப் பெலத்தின்மேல் விருப்பமாய் இரார், புருஷனுடைய தொடைகளின்மேல் பிரியமாயிரார்.

௰௧ தமக்குப் பயந்து தம்முடைய கிருபைக்குக் காத்திருக்கிறவர்களின்மேல் கர்த்தர் பிரியமாயிருக்கிறார்.

௰௨ ¶ எருசலேமே, கர்த்தரைத் தோத்திரி; சீயோனே உன் பராபரனைத் துதி.*

* சங். ௱௪௯. ௰.

௰௩ ஏனெனில் உன் வாசல்களின் தாழ்ப்பாள்களைக் கெட்டியாக்கி, உன்னிலுள்ள உன் பிள்ளைகளை ஆசீர்வதிக்கிறார்.

௰௪ அவர் உன் எல்லைகளைச் சமாதானமுள்ளவைகளாக்கி, கோதுமையின் புஷ்டியால் உன்னைத் திருப்தியாக்குகிறார்.*

*சங். ௮௧. ௰௭.

௰௫ தம்முடைய வார்த்தையைப் பூமியின்மேல் அனுப்புகிறார்; அவருடைய சொல் மகா தீவிரமாய் ஓடும்.* *சங். ௩௩. ௯.

௰௬ பஞ்சடைவாக உறைந்த மழையைத் தந்து, சாம்பலடைவாக உறைந்த பனியைத் தூவுகிறார்.

௰௭ அவர் தம்முடைய கல்மழையைத் துணிக்கைகளாக அனுப்புகிறார்; அவருடைய குளிருக்குமுன்பாக நிற்பவன் யார்?

௰௮ தமது வார்த்தையை அனுப்பி, அவைகளை உருக்குகிறார்; தமது காற்றை வீசப்பண்ணுகிறார்; அப்போது தண்ணீர்களாய் ஓடும்.

௰௯ யாக்கோபுக்குத் தம்முடைய வசனங்களையும், இஸ்ரவேலுக்குத் தம்முடைய பிரமாணங்களையும், தம்முடைய நியாயங்களையும் அறிவிக்கிறார்.

௨௰ இப்படி அவர் எந்தச்சாதிக்கும் செய்ததில்லை; அவருடைய நியாயங்களை அறியாதேபோகிறார்கள்; அல்லேலூயா.*

* ௫ மோ. ௪. ௭, ௮.

## ௱௪௮. சங்கீதம்.

அல்லேலூயா, பரமண்டலங்களிலுள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்கள்; உயரங்களில் அவரைத் துதியுங்கள்.*

* சங். ௬௯. ௩௫.

௨ அவருடைய எல்லாத் தூதர்களே, அவரைத் துதியுங்கள்; அவருடைய எல்லாச் சேனைகளே, அவரைத் துதியுங்கள்.*

* லூக். ௨. ௰௩, ௰௪. சங். ௩௩. ௬.

௩ சூரியசந்திரரே, அவரைத் துதியுங்கள்; வெளிச்சமுள்ள எல்லா நட்சத்திரங்களே, அவரைத் துதியுங்கள்.

௪ வானங்களுடைய வானங்களே, ஆகாயமண்டலத்தின்மீதுள்ள தண்ணீர்களே, அவரைத் துதியுங்கள்.

௫ அவைகள் கர்த்தரின் நாமத்தைத் துதிக்கக்கடவன; ஏனெனில் அவர் கட்டளையிடச் சிருஷ்டிக்கப்பட்டன.

௬ அவர் அவைகளை என்றைக்குமுள்ள சதாகாலங்களாய் உறுதிப்படுத்தி, அவைகள் மாறாத பிரமாணத்தை அவைகளுக்குக் கட்டளையிட்டார்.

௭ ¶ பூமியிலுள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்கள்; திமிங்கிலங்களும், சகல ஆழங்களும்,

௮ அக்கினியும், கல்மாரியும், உறைந்த மழையும், மூடுபனியும், அவர் சொற்படி செய்யும் பெருங்காற்றும்,

௯ பருவதங்களும், சகல மேடுகளும், கனிமரங்களும், சகல கேதுருக்களும்,

௰ காட்டுச் சீவன்களும், சகல மிருகங்களும், ஊர்வனவும், இறகுள்ள பற களும்,

௰௧ பூமியின் இராசாக்களும், எல் சனசதளங்களும், பிரபுக்களும், பூமியி ள சகல நியாயாதிபதிகளும்,

௰௨ வாலிபரும், கன்னிகைகளும், மு தவயதும் இளவயதுமுள்ளவர்களும்,

௰௩ கர்த்தரின் நாமத்தைத் துதிக்கவு ஏனெனில் அவருடைய நாமம்மாத்திர உயர்ந்தது, அவருடைய மகிமை பூமிக்கு வானத்துக்கும் மேலாயிருக்கிறது.

௰௪ அவர் தம்முடைய எல்லாப் பரிசுத்த ருக்கும் தம்மைச்சேர்ந்த சனமாகிய இ வேல் புத்திரருக்குமே கொண்டாட்ட சத் தம்முடைய சனத்திற்கு ஒரு செ பை உயர்த்தினார்; அல்லேலூயா.*

* லூக். ௧. ௬௯: ௨. ௩௰, ௩௧.

## ௱௪௯. சங்கீதம்.

அல்லேலூயா, கர்த்தரைப் புதுப்பா டாய்ப் பாடுங்கள்; சன்மார்க்கரின் ச யில் அவருடைய துதி நடப்பதாக.*

* சங். ௯௬. ௧: ௯௮. ௧.

௨ இஸ்ரவேல் தன்னை உண்டாக்கின குள் மகிழ்ந்து, சீயோனின் குமாரர் தங் இராசாவுக்குள் களிகூர்ந்து,

௩ அவருடைய நாமத்தைக் கீதவாத்திய தால் துதித்து, அவரை மேளத்தாலும் ச ண்டலத்தாலும் கீர்த்தனம்பண்ணக்கட ர்கள்.

௪ ஏனெனில் கர்த்தர் தம்முடைய ச தின்மேல் பிரியம் வைக்கிறார்; சிறுமை னவர்களை இரட்சிப்பினாலே சிங்காரிப்பா

* லூக். ௨. ௰௪.

௫ ¶ சன்மார்க்கர் மகிமையாய்க் களிகூ து, தங்கள் படுக்கைகளின்மேலே கெம் ரிப்பார்கள்.

௬ அவர்கள் வாயில் கர்த்தரை உயர்த்தும் கீர்த்தனங்களும், அவர்கள் கையில் இருபுற மும் கருக்குள்ள பட்டயமும், இருக்கும்

எ சாதிகளில் பழிவாங்குதலும், சனசதனங்களில் தண்டனைகளும் செய்வதற்கும்,
*வெளி. உ. உகூ, உஎ.

அ அவர்களுடைய இராசாக்களைச் சங்கிலிகளாலும், அவர்களுடைய மேன்மக்களை இருப்பு விலங்குகளாலும் கட்டி,

கூ எழுதியிருக்கிற நியாயத்தை அவர்களில் செய்வதற்குமாகத்தானே; இந்தக் கனம் அவருடைய சன்மார்க்கர் அனைவர்களுக்கும் உண்டாம்; அல்லேலூயா.

## ௱ருய. சங்கீதம்.

அல்லேலூயா, தம்முடைய பரிசுத்தஸ்தலத்திலிருக்கிற பராபரனைத் துதியுங்கள்; அவருடைய பலம் விளங்குகிற ஆகாய விரிவைப்பார்த்து அவரைத் துதியுங்கள்.

உ அவருடைய வல்லமைகளுக்காக அவரைத் துதியுங்கள்; அவருடைய திரளான மகத்துவத்திற்காக அவரைத் துதியுங்கள்.

ந அவரை எக்காளத் தொனியினாலே துதியுங்கள், அவரைத் தம்புருவாலும், சுரமண்டலத்தாலும் துதியுங்கள்.

ச அவரை மேளத்தாலும், தேவாத்தியத்தாலும் துதியுங்கள்; அவரை வீணையாலும் கின்னரத்தாலும் துதியுங்கள்.

ரு அவரை ஓசையான கைத்தாளங்களாலும் துதியுங்கள்; அவரைக் கெம்பீரமான கைத்தாளங்களாலும் துதியுங்கள்.

கூ சுவாசமுள்ளவை எல்லாம் கர்த்தரைத் துதிப்பதாக; அல்லேலூயா.*
* வெளி. ரு. யந.

# சாலோமோனின் வாக்கியங்கள்.

## க. அதிகாரம்.

ஞானத்தையும் கல்வியையும் அறிந்து புத்தியின் வார்த்தைகளை உணர்ந்து,

உ விவேகம், நீதி, *நியாயம், நிதானம் என்னவைகளின் கல்வியை ஏற்றுக்கொள்வதற்கும்,* *சங். உரு. உக.

ந பேதைகளுக்கு வினைவையும், வாலிபருக்கு அறிவையும், நினைவையும் உண்டாக்குவதற்கும்,

ச தாவீதின் குமாரனும், இஸ்ரவேலின் இராசாவுமாகிய சாலோமோன் எழுதின வாக்கியங்கள்.

ரு ஞானமுள்ளவன் கேட்டு, உபதேசத்தில் அதிகப்படுவான்.

சா உணர்வுள்ளவன் வாக்கியத்தையும், அதின் அருத்தத்தையும், ஞானிகளின் சொற்களையும், அவைகளின் புதைபொருள்களையும் உணரத் திறமையை அடைவான்.

எ ¶ *கர்த்தருக்குப் பயப்படுதல் அறிவின் துவக்கம்; நின்மூடர் ஞானத்தையும், கல்வியையும் அசட்டைபண்ணுகிறார்கள்.
*சங். கூ. ய: ௱யக. ய.

அ *என் மகனே, உன் தகப்பன் புத்தியை நீ கேட்டு, உன் தாயின் போதகத்தை நெகிழாதிரு. *வாக். கூ. உய.

கூ ஏனெனில் *அவைகள் உன் தலைக்கு நேர்த்தியான முடியும், உன் கழுத்துக்குச் சரப்பணிகளுமாயிருக்கும். *வாக். ச. கூ.

ய என் மகனே, *பாவிகள் உனக்கு ஆசைபதம் காண்பித்தால் இச்சியாதிரு.
*வாக். ச. யச, யரு.

யக எங்களோடேகூட வா, நாம் இரத்தத்திற்குப் பதிவிருந்து, குற்றமற்றவர்களை முகாந்தரமில்லாமல் தாப்புக்கொண்டு,

யஉ அவர்களைப் பாதாளத்தைப்போல உயிரோடும், குழியில் இறங்குகிறவர்கள் விழுங்கப்படுகிறதுபோல முழுமையும்

விழுங்குவோமாக.

௰௩ விலையேறப்பெற்ற சகலவித ஆஸ்தியையும் கண்டுபிடிப்போம்; நம்முடைய வீடுகளைக் கொள்ளையால் நிரப்புவோம்.

௰௪ எங்களோடே ஏகபங்காளியாயிருப்பாய்; நமக்கெல்லாம் ஒரே பை இருக்குமென்று அவர்கள் சொன்னால்,

௰௫ என் மகனே, நீ அவர்களோடே வழிநடவாமல், உன் காலை அவர்கள் பாதைக்கு விலக்கமாய்க் கா.

௰௬ ஏனெனில் *அவர்கள் கால்கள் பொல்லாப்புக்கு ஓடி, இரத்தம் சிந்துகிறதற்குத் தீவிரிக்கின்றன. *ஏசா. ௫௯. ௭. ௨ரோ. ௩. ௰௫.

௰௭ எந்தச் சாதியுமான பறவையின் கண்களுக்கு முன்பாகவோ வலை விருதாவாய் விரிக்கப்படும்.

௰௮ இவர்களோ தங்களுடைய இரத்தத்திற்குப் பதிவும், தங்களுடைய ஆத்துமாவுக்கு ஒளிவுமாயிருக்கிறார்கள்.

௰௯ பொருளாசை வைக்கிற எவனுடைய வழிகளும் அப்படியிருக்கும்; அது தன் எசமானன்களில் ஆத்துமாவைச் சிக்கிக் கொள்ளும்.

௨௰ ¶ *உன்னத ஞானம் வெளியிலே கூப்பிட்டு, வீதிகளிலே தன் சத்தத்தைக் காட்டி, *வாக். ௮. ௧-௩.

௨௧ சந்தடியுள்ள தெருக்களின் முனையிலும் ஒலிமுக வாசல்களிலும் கூப்பிட்டு, பட்டணத்தில் தன் வசனங்களைச் சொல்லி உரைக்கிறதாவது:

௨௨ பேதைகளே, நீங்கள் பேதைமையைச் சிநேகிப்பதும், சக்கந்தக்காரர் சக்கந்தத்தை விரும்புவதும், மதிகேடர் அறிவைப் பகைப்பதும் எந்தமட்டும் இருக்கும்.

௨௩ நம்முடைய கடிந்துகொள்ளுதலுக்குத் திரும்புங்கள்; இதோ நமது ஆவியை உங்களுக்கு ஊற்றி, நம்முடைய வார்த்தைகளை உங்களுக்கு அறிவிப்போம்.

௨௪ ¶ ஆனால்* நாம் கூப்பிட்டும் நீங்கள் கேட்கமாட்டோம் என்கிறபடியினா... நமது கையை நாம் நீட்டியும் கவனிக்கிற... னில்லாமல் போய், *ஏசா. ௬௫. ௰௨: ... ௪. எரே. ௭. ௰௩.

௨௫ நீங்கள் நம்முடைய ஆலோசனை... எல்லாம் தள்ளி, நம்முடைய கடிந்து... ள்ளுதலைவிரும்பாமல்போகிறபடியினா...

௨௬ *நாமும் உங்கள் ஆபத்திலே நகைத்... நீங்கள் பயப்படும் காரியம் வரும்போ... ஆகடியம்பண்ணுவோம். *௫ மோ. ௨௮...

௨௭ நீங்கள் பயப்படும் காரியம் கொந்... ளிப்பைப்போலே வந்து, உங்கள் ஆப... துப் பெருங்காற்றைப்போல அணுகி, உ... கள் மீதில் நெருக்கமும் இடுக்கணும் வ... டும்போதுதானே.

௨௮ *அப்போது அவர்கள் நம்மைநோ... கிக் கூப்பிட்டும் மறுஉத்தரவு கொடா... ருப்போம்; காலமே நம்மைத் தேடியு... நம்மைக் காணாதிருப்பார்கள். *ஏசா. ௫௯. ௨.

௨௯ அவர்கள் அறிவைப் பகைத்து, கர்த்... ருக்குப் பயப்படுதலைத் தெரிந்துகொள்ள... மல் போனதற்குப் பதிலாகத்தானே.

௩௰ நம்முடைய ஆலோசனையை விரும்... பாமல், நம்முடைய கடிந்துகொள்ளுதல்... யெல்லாம் அசட்டைபண்ணினார்கள்.

௩௧ ஆகையால் தங்களுடைய மார்க்கத்... தின் பலனைத் தின்று, தங்கள் ஆலோச... களினாலே திருப்தியாவார்கள்.

௩௨ ஏனெனில் பேதைகளின் மாறுபா... அவர்களைக் கொன்று, மின்மூடரின் நிர்விசா... ரம் அவர்களை அழிக்கும்.

௩௩ நம்முடைய *சொல்கேட்கிறவனோ... பயமற்றுத் தாபரித்து, தீங்குடைய பீதி... ல்லாமல் சுகமாயிருப்பானென்கிறது. *ஏசா. ௧. ௰௯.

## ௨. அதிகாரம்.

என் மகனே, நீ உன் செவிகளை ஞானத்... தைக் கவனிக்கப்பண்ணி, உன் இருதயத்...

தை உணர்வுக்குச் சாய்க்கும்படியாய்,

௨ என் வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு, என் கற்பனைகளை உன்னிடத்திலே பத்திரப்படுத்தி,

௩ புத்தியை வாவென்று கூப்பிட்டு, உணர்வை *அழைக்க உன் சத்தத்தை உயர்த்தி, *யாக். ௧. ௫.

௪ அதை வெள்ளியைப்போலே தேடி, *அதைப் புதையல்களைப்போலே ஆராய்ந்தாயானால், *மத். ௰௩. ௪௪.

௫ அப்போது கர்த்தருக்குப் பயப்படுதலை உணர்ந்து, பராபரனை அறியும் உணர்வைக் கண்டடைவாய்.

௬ ¶ ஏனெனில் கர்த்தர் ஞானத்தைத் தருகிறார்; அவர் வாக்கினால் அறிவும், உணர்வும் வரும்.

௭ அவர் செம்மையானவர்களுக்கென்று மெய்ஞ்ஞானத்தை வைத்துவைத்து, உத்தமமாய் நடக்கிறவர்கள் நியாயத்தின் பாதைகளைக் காக்க அவர்களுக்குக் கேடயமாயிருந்து,

௮ தம்முடைய பரிசுத்தவான்களுடைய வழியைக் காக்கிறார்.

௯ அப்போது நீதியையும், நியாயத்தையும், நேர்நிதானங்களையும், சகல நல்வழியையும் உணர்வாய்.

௰ ¶ ஞானம் உன் இருதயத்திலே வந்து, அறிவு உன் ஆத்துமாவுக்கு இன்பமாகும்போது,

௰௧ நல்யோசனை உன்னைப் பத்திரம்பண்ணி, புத்தி உன்னைத் தற்காக்கும்.

௰௨ உன்னை ஆகாதவழிக்கும், மாறுபாடுகளைப் பேசுகிற மனுஷனுக்கும்,

௰௩ இருளான வழிகளில் நடக்கச் செம்மையான பாதைகளைவிட்டு,

௰௪ தீங்குசெய்ய மகிழ்ந்து, பொல்லாத மாறுபாடுகளின்மேல் களிகூருகிறவர்களுக்கும்,

௰௫ கோணலான வழிகளில் நடந்து, தங்கள் பாதைகளில் நேர்வழியை விலகுகிறவர்களுக்கும் உன்னைத் தப்புவிக்கவும்,

௰௬ தன் வார்த்தைகளால் இச்சகம்பேசுகிறவளும்,

௰௭ தன் இளவயதின் அதிபதியைவிட்டுத் தன் பராபரனுடைய உடம்படிக்கையை மறக்கிறவளுமான *வேற்றுப் பெண்சாதிக்கும், பரஸ்திரிக்கும் உன்னைத் தப்புவிக்கவும்தானே. *வாக். ௬. ௨௩, ௨௪.

௰௮ *ஏனெனில் அவள் வீடு சாவுக்கும், அவள் பாதைகள் மரித்தவர்களுக்கும் நேராகச் சாய்கிறது. *வாக். ௫. ௫.

௰௯ அவளண்டைக்குப் பிரவேசிக்கிற யாவரும் திரும்பாமலும், ஜீவனுடைய பாதைகளில் வந்தேறாமலும் போகிறார்கள்.

௨௰ ஆகையாலே நீ நல்லவர்களின் வழியிலே நடந்து, நீதிமான்களின் பாதைகளைப் பிடித்திருப்பாயாக.

௨௧ ஏனென்றால் *செம்மையானவர்கள் பூமியிலே வாசம்பண்ணி, உத்தமர் அதில் வைக்கப்படுவார்கள். *சங். ௩௭. ௰-௰௧. மத். ௫. ௫.

௨௨ ஆகாதவர்களோ பூமியிலிராதபடி வேரறுப்புண்டு, துரோகிகள் அதில் இராதபடிக்குப் பிடுங்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

என் மகனே, என் உபதேசத்தை மறவாயாக; என் கற்பனைகளை உன் இருதயம் காக்கக்கடவது.

௨ ஏனெனில் அவைகள் உனக்கு நீடித்த நாள்களையும், ஜீவனின் வருஷங்களையும், சமாதானத்தையும் பெருகப்பண்ணும்.

௩ கிருபையும் உண்மையும் உன்னை விடாதிருப்பதாக; நீ அவைகளை உன் கழுத்திலே கட்டி, அவைகளை உன் இருதயத்தின் பலகையில் எழுதிக்கொள்.

௪ அப்படியே பராபரன் கண்களிலும், மனுஷர் கண்களிலும் இரக்கத்தையும் நற்புத்தியையும் கண்டடைவாய்.

௫ ¶ உன்புத்தியின்மேல் நீ சாராமல் கர்த்

தரையே உன் முழு இருதயத்தாலும் நம்பு.

௬ உன் வழிகளிலெல்லாம் அவரை அறிந்துகொள்; அப்போது அவர் உன் பாதைகளைச் செம்மைப்படுத்துவார்.

௭ *உன் பார்வைக்கு நீ ஞானியாயிராதிரு; கர்த்தருக்குப் பயந்து பொல்லாப்பை விட்டுவிலகு. *ஏசா. ௫. ௨௧. உரோ. ௰௨. ௰௬.

௮ அது உன் தொப்புளுக்கு ஆரோக்கியமும், உன் எலும்புகளுக்கு ஊனுமாயிருக்கும்.

௯ ¶ *உன் ஆஸ்தியாலும், உன்னுடைய எல்லா வரத்தின் முதல் விளைவாலும் கர்த்தரைக் கனம்பண்ணு. *மல்கி. ௩. ௰.

௰ அப்போது உன் களஞ்சியங்கள் பரிபூரணத்தால் நிரப்பப்பட்டு, உன் ஆலைகள் இரசம் புரண்டிருக்கும்.

௰௧ ¶ *என் மகனே, நீ கர்த்தருடைய தண்டனையை அற்பமாய் எண்ணாதிரு; அவர் அதட்டுதலை வெறுத்திராதே.
*எபி. ௰௨. ௫, ௬.

௰௨ ஏனெனில், *தாம் சிநேகிக்கிறவனைக் கர்த்தர் கடிந்துகொண்டு, மகன்மேலே தகப்பனைப்போலே பிரியமாயிருக்கிறார்.
*வெளி. ௩. ௰௯.

௰௩ ¶ ஞானத்தைக் கண்டுபிடிக்கிற மனுஷனும், உணர்வைப் பெறுகிற மனுஷனும் பாக்கியவான்கள்.

௰௪ ஏனெனில் *வெள்ளியின் வியாபாரத்தைப்பார்க்கிலும் அதின் வியாபாரமும், அபரஞ்சியைப்பார்க்கிலும் அதின் வரத்தும் நல்லது. *வாக். ௮. ௰, ௰௧.

௰௫ முத்துக்களைப்பார்க்கிலும் அது விலையேறப்பெற்றது; நீ இச்சிக்கத்தக்கவைகள் எல்லாம் அதற்கு நிகரல்ல.

௰௬ அதின் வலதுகையில் நீடித்த ஆயுசும், அதின் இடதுகையில் ஐசுவரியமும், கனமுமுண்டு.

௰௭ அதின் வழிகள் இனிமையான வழிகளும், அதின் பாதைகளெல்லாம் சமாதானமுந்தானே.

௰௮ அதைப் பிடிக்கிறவர்களுக்கு அது சீவவிருட்சமாம்; அதைப் பற்றியிருக்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௰௯ கர்த்தர் ஞானத்தினாலே பூமியை அஸ்திவாரப்படுத்தி, புத்தியினாலே வானங்களைப் படைத்தார்.

௨௰ அவருடைய அறிவினாலே ஆழங்கள் பிரிந்தன; அதனாலே ஆகாயம் பனியைத் தூற்றுகிறது.

௨௧ ¶ என் மகனே, இவைகள் உன் கண்களைவிட்டுப் பிரியவேண்டாம்; மெய்ஞ்ஞானத்தையும் நல்நினைவையும் கா.

௨௨ அப்போது அவைகள் உன் ஆத்துமாவுக்குச் சீவனும், உன் கழுத்துக்கு அந்தமுமாம்.

௨௩ அப்போது *உன் கால் இடறாமல் சுகமாய் உன் வழியில் நடப்பாய்.
*சங். ௯௧. ௰௧, ௰௨.

௨௪ நீ படுத்துக்கொண்டால் அருக்களியாமல் இருப்பாய்; உன் நித்திரை இன்பமாயிருக்கும்.* *௩மோ.௨௬.௬. சங். ௩. ௫: ௪.௯.

௨௫ அசுப்பான திகிலும், ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பும் வரும்போது அதற்குப் பயப்படாயாக.

௨௬ ஏனெனில் கர்த்தர் உன் நம்பிக்கையாயிருந்து, உன் காலைப் பிடிபடாதபடிக்குக் காப்பார்.

௨௭ ¶ நன்மைசெய்ய உன் கையில் அவகாசமிருக்கையில், அதற்குத் தக்கவர்களுக்கு அதை வழங்காதிராதே.

௨௮ உனக்கிருந்தும் உனக்கடுத்தவனுடனே நீ போய்த் திரும்ப வா; நாளைக்குத் தருகிறேன் என்னாதிரு.

௨௯ உனக்கடுத்தவன்மேல் பொல்லாப்பைப் பிணைக்காதிரு; உன்னோடே நம்பிக்கையாய்க் குடியிருக்கிறானே.

௩௰ ¶ ஒரு மனுஷன் உனக்குத் தீங்கு செய்யாதிருக்கையில் அவனோடே வீணாய் வழக்காடாதிரு.

௩௧ ¶ கொடுமையான மனுஷன்மேல் பொறா

ருமையாயிராதே; அவனுடைய வழிகளில் ஒன்றையும் தெரிந்துகொள்ளாதிரு.

௩௨ ஏனெனில் மார்க்கந்தப்பினவன் கர்த்தருக்கு அருவருப்பானவன்; ஆனால் செம்மையானவர்களோடே *அவருடைய இரகசியமிருக்கிறது. *சங். ௨௫. ௰௪.

௩௩ ஆகாதவனுடைய வீட்டில் கர்த்தருடைய சாபமிருக்கும்; ஆனால் நீதிமான்களின் வாசஸ்தலத்தை ஆசிர்வதிப்பார்.

௩௪ சக்கந்தக்காரரை அவர் சக்கந்தம்பண்ணி, சிறுமையானவர்களுக்கோ கிருபையை அளிப்பார்.

௩௫ ஞானமுள்ளவர்கள் கனத்தைச் சுதந்தரிப்பார்கள்; மதிகேடரோ கனஈனத்தை எடுப்பார்கள்.

## ௪. அதிகாரம்.

பிள்ளைகளே, நீங்கள் உணர்வை அறிவதற்குத் தகப்பன் புத்தியைக் கேட்டுக் கவனியுங்கள்.

௨ ஏனெனில் நற்போதகத்தை உங்களுக்குக் கொடுக்கிறேன்; என் உபதேசத்தை விடாதிருங்கள்.

௩ ஏனென்றால் நான் என் தகப்பனுக்கு இளம்பிராயமும்,என் தாய்க்குமுன்பாக ஒரே அருமையுமான பிள்ளையாயிருக்கையில்,

௪ அவர் இப்படி என்னை உபதேசித்து எனக்குச் சொன்னார்; என் வார்த்தைகளை உன் இருதயம் பிடித்திருப்பதாக; என் கற்பனைகளைக் கைக்கொள்; அப்போது பிழைப்பாய்.

௫ ¶ ஞானத்தையே சம்பாதி; உணர்வையே சம்பாதி; என் வாயின் சொற்களை மறவாமலும், விட்டுவிலகாமலுமிரு.

௬ அதை விடாயாக; அப்போது அது உன்னைத் தற்காக்கும்,அதைச் சிநேகிப்பாயாக; அப்போது அது உன்னைக் காப்பாற்றும்.

௭ *நீ ஞானத்தைச் சம்பாதிப்பதும், உன்னுடைய எல்லா ஆஸ்தியாலும் உணர்வைச் சம்பாதித்துக்கொள்வதும், ஞானத்தின் துவக்கம். *வாக். ௨௩. ௨௩.

௮ அதை உயர்த்திவை; அப்போது அது உன்னை உயர்த்தும்; நீ அதை அணைத்துக்கொண்டால் அது உன்னைக் கனமுள்ளவனாக்கும்.

௯ *அது உன் தலைக்கு நேற்றியான முடியைக் கொடுக்கும்; அது அலங்கார கிரீடத்தை உனக்களிக்கும். *வாக். ௧. ௯.

௰ என் மகனே என் வார்த்தைகளைக் கேட்டு ஏற்றுக்கொள்; அப்போது உன் ஆயுசின் வருஷங்கள் அதிகமாம்.

௰௧ ஞானத்தின் வழியிலே உனக்குப் போதிக்கிறேன்; செம்மைப்பாதைகளிலே உன்னை நடத்துகிறேன்.

௰௨ நீ அவைகளில் நடக்கிறபோது உன் நடைகளுக்கு இடுக்கண் உண்டாகுவதில்லை; நீ அவைகளில் ஓடினால் நீ இடறுவதுமில்லை.

௰௩ கல்வியைப் பிடித்திரு, அதை விடாதிரு, அதைக் கா; ஏனெனில் அதுவே உனக்குச் சீவன்.

௰௪ ¶ நீ ஆகாதவர்களின் பாதையில் பிரவேசியாமலும், பொல்லாதவர்களுடைய வழியில் நடவாமலும் இருப்பாயாக.

௰௫ அதை வெறு; அதிலே போகாதிரு; அதை விட்டுவிலகிக் கடந்துபோ.

௰௬ ஏனெனில் அவர்கள் பொல்லாப்புச் செய்தாலொழிய அவர்களுக்கு நித்திரை வராது; அவர்கள் இடறல் உண்டாக்காதிருந்தால் அவர்கள் தூக்கம் கலைந்துபோம்.

௰௭ ஏனெனில் ஆகாமியத்தின் அப்பத்தைப் புசித்து, கொடுமைகளின் இரசத்தைக் குடிக்கிறார்கள்.

௰௮ நீதிமான்களின் பாதையோவெனில் பட்டப்பகல்மட்டும் அதிகமதிகமாய் ஒளியாகிற பிரகாசமுள்ள வெளிச்சத்தைப் போலிருக்கிறது.

௰௯ ஆகாதவர்களின் வழி இருளைப்போலே இருக்கிறது; எதிலே இடறுவார்களென்றறியார்கள்.

௨௰ என் மகனே, என் வார்த்தைகளைக் கவனி, என் வசனங்களுக்கு உன் செவியைச் சாய்.

௨௧ அவைகள் உன் கண்களை விட்டுப் பிரியாதிருப்பதாக; அவைகளை உன் இருதயத்துக்குள்ளே காத்துக்கொள்.

௨௨ ஏனெனில் அவைகளைக் கண்டுபிடிக்கிறவர்களுக்கு அவைகள் சீவனும், அவர்கள் சதைக்கெல்லாம் ஔஷதமுமாய் இருக்கிறது.

௨௩ எல்லாக் காவலைப்பார்க்கிலும் உன் இருதயத்தைக் கா; ஏனெனில், அதிலிருந்து, சீவன் பரவும்.

௨௪ வாயின் தாறுமாறுகளை உன்னைவிட்டு அகற்றி, உதடுகளின் வழுவுதலை உனக்குத் தூரப்படுத்து.

௨௫ உன் கண்கள் நேராய் நோக்கி, உன் இமைகள் உனக்குமுன்னே செம்மையாய் இருப்பதாக.

௨௬ உன் கால்களின் நடையைச் சீர்தூக்கிப்பார்; உன் வழிகளெல்லாம் நிலைவரமாய் இருப்பதாக.

௨௭ வலதுபுறமாகிலும், இடதுபுறமாகிலும் சாயாயாக; உன் காலைப் பொல்லாப்புக்கு விலக்கு.* *௫ மோ. ௫. ௩௨.

## ௫. அதிகாரம்.

என் மகனே, நல் நினைவுகளை நீ வைத்திருக்கிறதற்கும், உன்னுதடுகள் அறிவைக் கற்கிறதற்குமாக,

௨ என் ஞானத்தைக் கவனித்து, என் புத்திக்கு உன் செவியைச் சாய்.

௩ ¶ ஏனெனில் பரஸ்திரியின் உதடுகள் தேன்கூடொழுகலாகவும், அவள் வாய் எண்ணெயைப்பார்க்கிலும் மிருதுவாகவுமிருக்கின்றன.

௪ ஆனால் அவள் கடைசிக்காரியம் எட்டிமரத்தைப்போலே கசப்பும், இருபுறமும் கருக்குள்ள பட்டயம்போலக் கூர்மையுமாயிருக்கிறது.

௫ *அவள் காலடிகள் சாவுக்கு இறங்கி, அவள் காலடிகள் நரகத்தைப் பற்றிப்போம். *வாக். ௨. ௰௮.

௬ நீ சீவனின் பாதையைச் சிந்தியாதபடிக்கு அவள் நடைகள் மாறிமாறி உனக்குத் தெரியாதவைகளாயிருக்கின்றன.

௭ இப்போதும் பிள்ளைகளே எனக்குச் செவிகொடுத்து, என் வாயின் வசனங்களை விட்டுப் பிரியாதிருங்கள்.

௮ நீ உன் முக்கியத்தை வேற்றுமையானவர்களுக்கும், உன் ஆயுசின் வருஷங்களைக் கொடூரருக்கும் கொடாதபடிக்கும்,

௯ அந்நியர் உன் ஆஸ்தியால் திருப்தியாக உன் பிரயாசங்கள் பிறத்தியானுடைய வீட்டுக்குள் விழாதபடிக்கும்,

௰ நீ உன் பிற்காலத்தில் உன் மாம்சமும், உன் சதையும் உருவழிந்திருக்கும்போது,

௰௧ நான் என் போதகரின் சொல் கேளாமலும், என்னை உபதேசித்தவர்களுக்கு என் செவியைச் சாய்க்காமலும்,

௰௨ எத்தனையாய்ப் புத்தியைப் பகைத்தேன்; எத்தனையாய் என் இருதயம் கடிந்துகொள்ளுதலை அசட்டைபண்ணிற்றென்றும்,

௰௩ சபைக்குள்ளேயும், சங்கத்துக்குள்ளேயும், நான் கொஞ்சங்குறைய எல்லாப் பொல்லாப்புக்கும் உள்ளானேனென்றும் அலறுதபடிக்கும்,

௰௪ உன் வழியை அவளுக்குத் தூரப்படுத்து; அவள் வீட்டின் வாசலைக் கிட்டாதிரு.

௰௫ ¶ உன்னுடைய கிணற்றின் தண்ணீரையும், உன்னுடைய துரவிலிருந்து சுரக்கிற சலங்களையும் குடி.

௰௬ உன்னுடைய ஊற்றுகள் வெளியிலும், உன் வாய்க்கால்கள் வீதிகளிலும் பாய்வதாக.

௰௭ அவைகள் உன்னோடேகூட அந்நியருடையதுமாயிராமல், உன்னுடையதாய் மாத்திரம் இருப்பதாக.

௰௮ உன்னுடைய ஊற்றுக்கண் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கக்கடவது; உன்னுடைய இளவயதின் பெண்சாதியால் மகிழ்ந்துகொள்.

௰௯ அவளே நேசிக்கப்படத்தக்க பெண்மானும், அழகான காட்டாடுமானவள்; அவளுடைய நேசம் உன்னைச் சகல காலமும் ஆற்றுவதாக; அவளுடைய சிநேகத்தால் எப்போதும் மயங்கியிருப்பாயாக.

௨௰ என் மகனே, நீ பரஸ்திரீயின்மேல் மயங்கித்திரிந்து, வேற்றுப்பெண்ணின் மடியைத் தழுவியிருப்பானேன்?

௨௧ ஏனெனில் மனுஷனுடைய வழிகள் கர்த்தருடைய கண்களுக்குமுன்பாக இருக்கின்றன; அவன் பாதைகளை எல்லாம் அவர் சீர்தூக்கிப்பார்க்கிறார்.

௨௨ *ஆகாதவனை அவனுடைய அக்கிரமங்கள் பிடித்துக்கொள்ளும்; தன் பாவத்தின் கண்ணிகளில் சிக்கப்படுவான். *வாக். ௨. ௮.

௨௩ அவன் புத்தி கேளாததினாலே மடிந்து, தன் திரளான பயித்தியத்தினாலே வழி பிசகிப்போவான்.

## ௬. அதிகாரம்.

என் மகனே, *நீ உன் சிநேகிதனுக்காகப் பிணைப்பட்டு, அந்நியனுக்கு உன் கையைக் கொடுத்து, *வாக். ௰௧. ௰௫, ௰௭, ௰௮.

௨ உன் வாயின் சொற்களால் சிக்குண்டு, உன் வாயின் சொற்களால் பிடிபட்டிருந்தால்,

௩ இப்போது ஒன்றுசெய்; என் மகனே, உன்னைத் தப்புவித்துக்கொள்; ஏனெனில் உனக்கடுத்தவன் கையிலே அகப்பட்டாய்; போய், உன் சிநேகிதனை வருந்தித் துருசுபண்ணு.

௪ உன் கண்களுக்குநித்திரையையும்,உன் இமைகளுக்குஉறக்கத்தையும்கொடாதிரு.

௫ வெளிமானும் குருவியும் வேட்டைக்காரர் கைக்குத் தப்புவித்துக்கொள்வது போல உன்னைத் தப்புவித்துக்கொள்.

௬ ¶ சோம்பேறியே, எறும்பண்டைக்குப் போய், அதின் வழிகளைப்பார்த்து ஞானமடை.

௭ அதற்குப் பிரபுவும் தலைவனும் அதிகாரியும் இல்லாதிருந்தாலும்,

௮ *உஷ்ணகாலத்திலே தன் ஆகாரத்தைச் சம்பாதித்து, அறுப்பிலே தன் போசனத்தைச் சேர்க்கும். *வாக். ௩௰. ௨௫.

௯ சோம்பேறியே, எந்தமட்டும் சயனிப்பாய்? எப்போது உன் தூக்கத்தை விட்டெழுந்திருப்பாய்?

௰ *இன்னம் கொஞ்சம் தூக்கங்களும், இன்னம் கொஞ்சம் உறக்கங்களும், சயனிப்புக்கு இன்னம் கொஞ்சம் கைகட்டிக்கொள்ளுதலும் உண்டானால்,
*வாக். ௨௰. ௰௩: ௨௪. ௩௩, ௩௪.

௰௧ அப்போது உன் தரித்திரம் வழிப்போக்கனைப்போலவும், உன் குறைச்சல் ஆயுதம் அணிந்தவனைப்போலவும் வரும்.

௰௨ பேலியாளின் மனுஷனும் அக்கிரமக்காரனுமானவன்வாய்ப்புரட்டனாய்நடந்து,

௰௩ தன் கண்களால் சைகைகாட்டி, தன் கால்களால் பேசி, தன் விரல்களால் போதிக்கிறான்.

௰௪ அவன் இருதயத்திலே திரியாவரங்கள் இருக்கின்றன; எந்தக்காலத்திலும் பொல்லாப்பைப் பிணைத்து, வழக்குகளை உண்டுபண்ணுகிறான்.

௰௫ ஆகையால், அகப்பாய் அவன் ஆபத்துவரும்; சடுதியிலே குணமாக்குதலுக்கு இடமில்லாமல் நொறுக்கப்படுவான்.

௰௬ ¶ ஆறு காரியங்களைக் கர்த்தர் பகைக்கிறார்; ஏழும் அவருடைய ஆத்துமாவுக்கு அருவருப்பானவைகள்; அவையாவன:

௰௭ *மேட்டிமையான கண்களும், பொய் நாக்கும், குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தும் கைகளும், *வாக். ௨௧. ௪.

௰௮ அக்கிரம யோசனைகளைப் பிணைக்கும் இருதயமும் பொல்லாப்பைச் செய்யத் தீவிரமாய் ஓடும் கால்களும்,

௰௯ பொய்களை ஊதுகிற கள்ளச்சாட்சியும், சகோதரருக்குள்ளே வழக்குகளை உண்டுபண்ணுகிறவனும்தானே.

௨௰ *என் மகனே, நீ உன் தகப்பனுடைய கற்பனையைக் கைக்கொண்டு உன் தாயின் போதகத்தை நெகிழாதிரு. *வாக். ௧. ௮.

௨௧ *அவைகளை எப்போதும் உன் இருதயத்தின்மேல் கட்டி, அவைகளை உன் கழுத்திலே பூணு. *வாக். ௩. ௩.

௨௨ *நீ நடந்துகொண்டிருக்கையில் அது உன்னை நடத்தும்; நீ படுத்துக்கொண்டிருக்கையில் அது உன்னைக் காப்பாற்றும், நீ விழிக்கையில் அது உன்னோடேசம்பாஷிக்கும். *வாக். ௩. ௨௩, ௨௪.

௨௩ ஏனெனில் *உன்னைப் பொல்லாத ஸ்திரீக்கும், வேற்றுநாவின் இச்சகங்களுக்கும் விலக்கிக்காப்பதற்கு, *வாக். ௨. ௰௬, ௰௭.

௨௪ கற்பனையே விளக்கும், போதகமே வெளிச்சமும், புத்திசொல்லும் கடிந்துகொள்ளுதல்களே சீவவழியுமாம்.

௨௫ உன் இருதயத்திலே அவள் அழகை இச்சியாதிரு; அவள் தன் கண் இமைகளால் உன்னைப் பிடிக்கவொட்டாதிரு.

௨௬ ஏனெனில் வேசிஸ்திரீயின் முகாந்தரத்தினாலே ஒரு அப்பத்துணிக்கையை இரக்கிறதற்கு வரும்; விபசாரி விலையேறப்பெற்ற ஆத்துமாவை வேட்டையாடுகிறாள்.

௨௭ யாவன் ஒருவன் தன் வஸ்திரங்கள் வேகாமல், தன் மடியிலே நெருப்பை வைத்துக்கொள்ளுவானோ?

௨௮ யாவன் ஒருவன் தன் கால்கள் சுடாமல் தழலின்மேல் நடப்பானோ?

௨௯ தனக்கு அடுத்தவனுடைய பெண்சாதியினிடத்தில் பிரவேசிக்கிறவன் அப்படியிருக்கிறான்; அவளைத் தொடுகிற ஒருவனும் ஆக்கினைக்குத் தப்பான்.

௩௰ திருடன் தன் ஆத்துமாவை திரப்பப் பசியினாலே திருடினதின்நிமித்தம் அவனை இகழ்ச்சிபண்ணார்கள்.

௩௧ அவன் கண்டுபிடிக்கப்பட்டால் ஏழத்தனை செலுத்துவான்; தன் வீட்டின் ஆஸ்தியெல்லாம் கொடுப்பான்.

௩௨ ஒரு ஸ்திரீயோடே விபசாரம்பண்ணுகிறவனோ மதிகெட்டவன்; அப்படிச்செய்கிறவன் தன் ஆத்துமாவைக் கெடுக்கிறவன்.

௩௩ வாதையும் இலச்சையும் அடைகிறான்; அவன் நிந்தை குலையாது.

௩௪ ஏனெனில் புருஷனுடைய மூர்க்கம் வயிராக்கியமாயிருக்கின்றது; அவன் குரோதத்தைத் தீர்க்கும் நாளிலே தப்பவிடான்.

௩௫ எந்த மீட்பையும் பாரான், நீ காணிக்கையைப் பெருக்கினாலும் சம்மதியான்.

## ௭. அதிகாரம்.

என் மகனே, நீ என் வார்த்தைகளைக் காத்து, என் கற்பனைகளை உன்னிடத்திலே பத்திரப்படுத்து.

௨ என் கற்பனைகளையும், என் போதகத்தையும் உன் கண்களின் கறுப்புவிழியைப்போலே கா; அப்போது பிழைப்பாய்.

௩ *அவைகளை உன் விரல்களில் கட்டி; அவைகளை உன் இருதயத்தின் பலகையில் எழுது. *வாக். ௬. ௨௧.

௪ *உன்னை இச்சகவார்த்தைகளுள்ள அந்நியளாயிருக்கிற பரஸ்திரீக்கு விலக்கிக் காப்பதற்காக, *வாக். ௨. ௰௬, ௰௭; ௬. ௨௪.

௫ ஞானத்துடனே, நீ என் சகோதரியென்றுசொல்லி, உணர்வை இனத்தாரென்று அழை.

௬ ¶ ஏனெனில் நான் என் வீட்டின் பலகணியில் நின்று என் கிராதிகளின்வழியாய்,

௭ நான் பேதைகளைப் பார்த்துக்கொண்டு, குமாரருக்குள் ஒரு வாலிபனைக் கவனித்தேன்.

௮ அவன் மாலை மயங்குகிற அந்திமானேரத்திலே இராவின் அந்தகாரத்திலும் இருட்டிலும்,

௯ அவளிருக்கும் சந்துக்கடுத்த வீதியே போய், அவள் வீட்டுவழியாய் உலாவினான்.

௰ அப்போது இதோ வேசியின் ஆடையா

பரணம்தரித்த மனத்தந்திரமான ஒரு ஸ்திரி அவனைச் சந்தித்தாள்.

௰௧ அவள் அமளிக்காரியும், அடங்காதவளுமானவள்; அவள் கால்கள் அவளுடைய வீட்டிலே தரிக்கிறதில்லை.

௰௨ இப்போது வெளியிலும், சற்றுநேரத்திலே வீதிகளிலுமிருந்து எல்லாச் சந்திலும் பதிவிருக்கிறாள்.

௰௩ அவள் இவனைப் பிடித்து, இவனை முத்தமிட்டு, முகம் நாணாமல் இவனோடே சொன்னதாவது:

௰௪ தோத்திரப்பலிகள் என்மேலிருந்தன; இன்று என் பொருத்தனைகளைச் செலுத்தினேன்.

௰௫ ஆனபடியினாலே உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு, உன் முகத்தைக் கருத்தாய்த் தேடினேன், உன்னைக் கண்டுபிடித்தேன்.

௰௬ என் கட்டிலைச் சமுக்காளங்களாலும், எகிப்துதேசத்துச் சித்திரம்தீர்ந்த புடைவைகளாலும் சிங்காரித்தேன்.

௰௭ என் படுக்கையை வெள்ளைப்போளத்தாலும், சந்தனத்தாலும், கருவாப்பட்டையாலும் வாசனைகட்டினேன்.

௰௮ விடியற்காலம்மட்டும் சம்போகமாயிருப்போம்; சிநேகங்களால் பூரிப்பாவோம், வா.

௰௯ ஏனென்றால் புருஷன் வீட்டிலே இல்லை; தூரபயணம் போனான்.

௨௰ பணமுடிப்பைத் தன் கையிலே கொண்டுபோனான்; திட்டம்பண்ணின நாளிலே வீட்டுக்கு வருவானென்று சொல்லி,

௨௧ தன் திரளான போதனையாலே அவனை இணக்கிக்கொண்டு, தன் உதடுகளின் இச்சகத்தாலே அவனை ஏவினாள்.

௨௨ உடனே அவன் ஒரு மாடு அடிக்கப்படும் தலத்திற்கும், ஒரு பயித்தியக்காரன் விலங்குண்ணப்பட்டவனாய்த் தண்டனைக்கும் போகிறதுபோலவும்,

௨௩ ஒரு குருவி தன் சீவனுக்கு வருகிறதென்றறியாமல் கண்ணிக்குத் தீவிரிக்கிறதுபோலவும், அவள் பிறகாலே அவன் இரலைப் பிளக்கும்மட்டும் போனான்.

௨௪ ¶ இப்போதும் பிள்ளைகளே, என்னைக் கேட்டு, என் வாயின் வார்த்தைகளைக் கவனியுங்கள்.

௨௫ உன் இருதயம் அவள் வழிகளுக்குச் சாயவேண்டாம்; அவள் பாதைகளில் மோசம்போகாயாக.

௨௬ ஏனெனில் அநேகரைக் காயப்படுத்தி விழப்பண்ணினாள், அவளால் கொல்லப்பட்ட யாவரும் திரளான கூட்டம்.*

*வாக்.௰௮.௰௯.

௨௭ அவள் வீடு மரணஅறைகளுக்கு இறங்குகிற நரகவழிகளாயிருக்கிறது.

## அ. அதிகாரம்.

ஞானம்* கூப்பிடாதோ? உணர்வு தன் சத்தத்தைக் காட்டாதோ? *வாக். க.௨௰, ௨௧.

௨ அது வழிக்கு அருகான மேடைகளின் முனையிலும், நால்ச்சந்திகளிலும் நிற்கிறது.

௩ அது ஊர்வாசல்களின் ஓரத்திலும், பட்டண ஒலிமுகத்திலும், உட்பிரவேசிக்கிற வாசல் நடைகளிலும் சத்தமிட்டுச் சொல்லுகிறதாவது:

௪ மனுஷரே, உங்களை நோக்கிக் கூப்பிடுகிறேன்; என் சத்தம் மனுப்புத்திரருக்குத் தொனிக்கும்.

௫ பேதைகளே, விளுவிலே உணர்வாகுங்கள்; மூடரே, மனதிலே உணர்வாகுங்கள்.

௬ கேளுங்கள், ஏனென்றால் மேம்பாடான காரியங்களைப் பேசுவேன்; நிதானங்களைப் பகர என் உதடுகளைத் திறப்பேன்.

௭ ஏனெனில் என் வாய் சத்தியத்தை விளம்பும்; ஆகாமியம் என் உதடுகளுக்கு அருவருப்பானது.

௮ என் வாக்கு வசனங்களெல்லாம் நீதியானவைகள்; *அவைகளில் புரட்டும், திரியாவரமும் இல்லை. *ஏசா.௪௫.௯.

௯ அவைகளெல்லாம் உணருகிறவனுக்கு

நேரும், கண்டடைகிறவனுக்குச் செம்மையுமானவைகள்.

௰ *வெள்ளியையல்ல, நான், சொல்லுகிற புத்தியையும், தெரிந்துகொள்ளப்பட்ட பொன்னைப்பார்க்கிலும் அறிவையும் ஏற்றுக்கொள்ளுங்கள். *வாக். ௩. ௰௪, ௰௫.

௰௧ ஏனெனில் முத்துக்களைப்பார்க்கிலும் ஞானமே நல்லது; இச்சிக்கப்படத்தக்கவைகளெல்லாம் அதற்கு நிகரல்ல.

௰௨ ¶ ஞானமாகிய நான் விவேகத்தோடே வாசம்பண்ணி, நற்சிந்தனைகளுள்ள அறிவைக் கண்டடைந்திருக்கிறேன்.

௰௩ பொல்லாப்பைப் பகைக்கிறது கர்த்தருக்குப் பயப்படுதல்; பெருமையையும், அகந்தையையும், பொல்லாத வழியையும், புரட்டுகளுள்ள வாயையும் பகைக்கிறேன்.

௰௪ ஆலோசனையும், மெய்ஞ்ஞானமும் என்னுடையது; நானே உணர்வு; வல்லமை என்னுடையது.

௰௫ என்னாலே இராசாக்கள் அரசாண்டு, தலைவர் நீதியைத் திட்டப்படுத்துகிறார்கள்.

௰௬ என்னாலே அதிகாரிகளும், பிரபுக்களும், பூமியினுடைய எல்லா நியாயாதிபதிகளும் அதிகாரம் பண்ணுகிறார்கள்.

௰௭ *என்னைச் சிநேகிக்கிறவர்களை நான் சிநேகிக்கிறேன்; காலமே என்னைத் தேடுகிறவர்கள் என்னைக் கண்டுபிடிப்பார்கள். *யோவா. ௰௪. ௨௧.

௰௮ ஐசுவரியமும், கனமும், நிலைநிற்கிற ஆஸ்தியும், நீதியும் என்னிடத்தில் இருக்கின்றன.

௰௯ *பொன்னையும் அபரஞ்சியையும்பார்க்கிலும் என்னுடைய பலனும், தெரிந்துகொள்ளப்பட்ட வெள்ளியைப்பார்க்கிலும் என்னுடைய வரத்தும் நல்லது. *வாக். ௩. ௰௪.

௨௰ என்னைச் சிநேகிக்கிறவர்களை மெய்ப்பொருளைச் சுதந்தரிக்கப்பண்ணுவதற்கும், அவர்கள் பொக்கிஷங்களை நிரப்புவதற்கும்,

௨௧ நீதியின் வழியிலும், நியாயபாதைகளுக்குள்ளும் நடத்துகிறேன்.

௨௨ ¶ கர்த்தர் அப்போதே தம்முடைய கிரியைகளுக்குமுன் என்னைத் தமது வழியின் *ஆதியாகக்கொண்டிருந்தார். *வெளி. ௩. ௰௪.

௨௩ பூமிக்கு முன்னுன ஆதிமுதலும், அநாதியுமாய் அபிஷேகம்பண்ணப்பட்டேன்.

௨௪ ஆழங்களும் தண்ணீர்கள் புரளுகிற ஊற்றுகளும் உண்டாகாததற்குமுன்னே செனிப்பிக்கப்பட்டேன்.

௨௫ பர்வதங்கள் நாட்டப்படாததற்குமுன்னும், குன்றுகளுக்குமுன்னும்,

௨௬ அவர் பூமியையும், அதின் வெளிகளையும், பூச்சக்கர மண்களின் முதலையும் உண்டாக்காததற்குமுன்னும் செனிப்பிக்கப்பட்டேன்.

௨௭ அவர் வானங்களைப் படைக்கையில் நான் அங்கே இருந்தேன், அவர் ஆழத்தின் மேற்புறத்தை வட்டணிக்கையிலும்,

௨௮ அவர் உயர மேகங்களை உறுதிப்படுத்துகையிலும், ஆழத்தின் ஊற்றுகளைப் பலப்படுத்துகையிலும்,

௨௯ *தண்ணீர்கள் தமது வாக்கை மீறாதபடிக்கு, அவர் சமுத்திரத்திற்கு அதின் எல்லைப்பிரமாணத்தை வைக்கையிலும், அவர் பூமியின் அஸ்திபாரங்களைத் திட்டப்படுத்துகையிலும்,
*யோபு. ௩௮. ௰,௰௧. சங். ௱௪. ௯.

௩௰ நான் அவரண்டையிலே *செல்வனுமாய், நித்தம் அவருடைய மனமகிழ்ச்சியுமாயிருந்து, எப்போதும் அவருக்குமுன்பாகச் சிமானித்து, *யோவா. ௧. ௰௮.

௩௧ அவருடைய பூச்சக்கரத்திலே சந்தோஷித்துக்கொண்டிருந்தேன்; *என் மனமகிழ்ச்சி மனுப்புத்திரரோடு இருக்கிறது. *உ. மோ. ௩௩. ௩.

௩௨ ¶ இப்போதும் பிள்ளைகளே, என்னைக் கேளுங்கள்; என் வழிகளைக் காத்துநடக்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௩௩ புத்தியைத் தள்ளிவிடாமல், அதைக் கேட்டு ஞானமடையுங்கள்.

௩௪ என் வாசல்ப்படிகளில் நித்தம் காத்து, என் கதவுகளின் நிலைகளருகே காவல்பண்ணத்தக்கவிதமாய் எனக்குச் செவிகொடுக்கிற மனுஷன் பாக்கியவான்.

௩௫ ஏனெனில் *என்னைக் கண்டுபிடிக்கிறவன் ஜீவனைக் கண்டுபிடித்து, கர்த்தரிடத்தில் பிரியம் பெறுவான். *௧ யோ. ௫. ௰௨.

௩௬ ஆனால் எனக்கு விரோதமாய்ப் பாவம் செய்கிறவன் தன் ஆத்துமாவைச் சேதப்படுத்துகிறான்; என்னைப் பகைக்கிற யாவரும் மரணத்தைச் சிநேகிக்கிறார்கள் என்கிறது.

## ௯. அதிகாரம்.

உன்னத ஞானம் தன் வீட்டைக் கட்டி, தன் ஏழு தூண்களைச் சித்திரங்கொத்தி,

௨ தன் கொழுத்த செந்துக்களை அடித்து, தன் திராட்சப்பழ இரசத்தை வார்த்து வைத்து, தன்பந்தியை ஆயத்தமும்பண்ணி,

௩ தன் பணிவிடைக்காரிகளை அனுப்பி, எவன் பேதையோ அவன் இவ்விடத்திற்குத் திரும்புவானாகவென்றுசொல்லச்சொல்லி,

௪ பட்டணத்துப் பிரதான மேடைகளின் மேல்நின்று கூப்பிட்டு, மதியில்லாதவர்களுடனே சொல்லுகிறதாவது:

௫ நீங்கள் வந்து, என் அப்பத்திலே புசித்து, நான் வார்த்துவைத்த திராட்சப்பழ இரசத்திலே குடியுங்கள்.

௬ நீங்கள் பிழைக்கும்படிக்குப் பேதைமைகளைவிட்டு, உணர்வின் வழியிலே நடவுங்கள்.

௭ சரசக்காரனை அதட்டுகிறவன் தனக்குக் கனஈனத்தைத் தேடிக்கொள்ளுகிறான்; ஆகாதவனைக் கடிந்துகொள்ளுகிறவன் தன்னைக் கறைப்படுத்துகிறான்.

௮ சரசக்காரன் உன்னைப் பகையாதபடிக்கு அவனைக் கடிந்துகொள்ளாதிரு; ஞானமுள்ளவனைக் கடிந்துகொள், அவன் உன்னைச் சிநேகிப்பான்.

௯ ஞானமுள்ளவனுக்குப் புத்தியை வழங்கு, அதிக ஞானமடைவான்; நீதிமானுக்கு அறிவுசொல்; உபதேசத்தில் அதிகப்படுவான்.

௰ *கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தின் துவக்கம், பரிசுத்தரின் அறிவு உணர்வுள்ளது. *வாக். ௧. ௭. சங். ௱௰௧. ௰.

௰௧ ஏனெனில் என்னாலே உன் நாள்கள் நீடித்து, உனக்கு ஆயுசின் வருஷங்கள் வர்த்திக்கும்.

௰௨ நீ ஞானியாயிருந்தால் உனக்காக ஞானியாயிருப்பாய்; நீ சரசக்காரனேயானால் நீயே அதைச் சுமப்பாயென்கிறது.

௰௩ ¶ பயித்திய ஸ்திரி *அமளிக்காரியும், ஒன்றும் அறியாத நின்மூடியுமாயிருக்கிறாள். *வாக். ௭. ௰௧.

௰௪ தங்கள் பாதங்களில் செம்மையாய் நடக்கிற வழிப்போக்கரை அழைக்க,

௰௫ அவள் பட்டணத்தின் மேடைகளிலுள்ள தன் வீட்டுவாசற்படியில் ஒரு ஆசனத்தின்மேல் உளுக்காந்து,

௰௬ எவன் பேதையோ, அவன் இவ்விடத்திற்குத் திரும்புவானாகவென்று சொல்லி, மதியில்லாதவனுடனே,

௰௭ *திருட்டுத் தண்ணீர்கள் தித்திப்பும், அந்தரங்கமான அப்பம் இன்பமுமாயிருக்கிறதென்றாள். *வாக். ௨௰. ௰௭.

௰௮ ஆனால் *அவ்விடத்திலே மரித்தவர்களுண்டென்றும், அவளால் அழைக்கப்பட்டுப்போனவர்கள் நரக பாதாளங்களில் கிடக்கிறார்களென்றும் அறியான்.

*வாக். ௭. ௨௬, ௨௭.

## ௰. அதிகாரம்.

சாலோமோனின் வாக்கியங்கள்; *ஞானமுள்ள மகன் தகப்பனைச் சந்தோஷிப்பிக்கிறான்; †பயித்தியமுள்ள மகனோ தன் தாய்க்குச் சஞ்சலமாயிருக்கிறான்.

*வாக். ௰௫. ௨௰. †வாக். ௰௭. ௨௫.

௨ ஆகாமியப் பொக்கிஷங்கள் உதவாது;

நீதியோ மரணத்திற்குத் தப்புவிக்கும்.

௩ நீதிமானின் ஆத்துமாவைக் கர்த்தர் பட்டினியாய் வையார்; ஆகாதவர்களின் தீவினையையோ அகற்றிவிடுவார்.

௪ வஞ்சனைக்கையால் வேலைசெய்கிறவன் ஏழையாகிறான், சுறுசுறுப்புள்ளவர்களின் கையோ ஐசுவரியமாக்குகிறது.

௫ வசந்தகாலத்திலே சேர்க்கிறவன் புத்தியுள்ள மகன்; அறுப்பிலே தூங்குகிறவன் இலச்சையையுண்டாக்குகிற மகன்.

௬ நீதிமானின் சிரசுக்கு ஆசீர்வாதங்கள் உண்டாம்; ஆனால் ஆகாதவர்களின் வாயைக் கொடுமை மூடும்.

௭ நீதிமானின் பேர் ஆசீர்வாதமாக இருக்கும்; ஆனால் ஆகாதவர்களின்பேர் அழுகிப்போம்.

௮ மனதில் ஞானமுள்ளவன் கற்பனைகளை ஏற்றுக்கொள்ளுகிறான்; ஆனால் பயித்திய உதடன் சிக்கிக்கொள்ளுகிறான்.

௯ உத்தமமாய் நடக்கிறவன் பத்திரமாய் நடக்கிறான்; தன் வழிகளைக் கோணலாக்குகிறவனே அறியப்படுவான்.

௰ *கண்சாடை காட்டுகிறவன் நோவு உண்டாக்குகிறான்; பயித்திய உதடன் சிக்கிக்கொள்ளுவான். *வாக். ௬. ௰௩.

௰௧ *நீதிமானின் வாய் சீவ ஊற்றாயிருக்கிறது: ஆனால் ஆகாதவர்களின் வாயைக் கொடுமை மூடும். *சங். ௩௭. ௩௰.

௰௨ பகை வழக்குகளை எழுப்பும்; *சிநேகமோ சகல மீறுதல்களையும் மூடும்.
*௧ பே. ௪. ௮.

௰௩ உணர்வுள்ளவனுடைய உதடுகளில் காணப்படுகிறது ஞானம்; மதிகெட்டவனுடைய முதுகுக்கு ஏற்றது மிலாறு.

௰௪ ¶ ஞானிகள் அறிவை அடக்குகிறார்கள்; ஆனால் பயித்தியக்காரனுடைய வாய்க்குக் கலங்கல் சமீபத்திருக்கும்.

௰௫ ஐசுவரியவானின் அரணான பட்டணம் அவன் ஆஸ்தி; ஏழைகளுடைய கலங்கல் அவர்கள் தரித்திரம்.

௰௬ நீதிமானுடைய செய்கை சீவனுக்கும், ஆகாதவனுடைய வரத்து பாவத்திற்குமாம்.

௰௭ கல்வியைக் காத்துநடக்கிறவன் சீவனுக்குப்போம் வழியிலுள்ளவன்; அதட்டுதலை விட்டு விலகுகிறவனோ மோசம்போக்குகிறவன்.

௰௮ பகையை மறைக்கிறவன் பொய் உதடன்; அவதூறு உண்டாக்குகிறவன் மதிகேடன்.

௰௯ வார்த்தைகளின் திரட்சியில் மீறுதலற்றிராது; தன் உதடுகளை அடக்குகிறவனோ புத்திமான்.

௨௰ நீதிமானின் நாவு தெரிந்துகொள்ளப்பட்ட வெள்ளி; ஆகாதவர்களின் நெஞ்சு அற்பவிலையானது.

௨௧ நீதிமானின் உதடுகள் அநேகரைமேய்க்கும்; பயித்தியக்காரரோ மதியில்லாமையினால் மாளுவார்கள்.

௨௨ கர்த்தரின் ஆசீர்வாதமே ஐசுவரியம் அடையப்பண்ணும்; அதனோடே வேதனையையும் கூட்டார்.

௨௩ தீவினை செய்கிறது பயித்தியக்காரனுக்கு ஒரு விளையாட்டு; உணர்வுள்ள மனிதனுக்கோ ஞானமுண்டு.

௨௪ ஆகாதவன் பயப்படுகிறதே அவனுக்கு வரும்; நீதிமான்கள் விரும்புகிறதே அவர்களுக்குக் கொடுக்கப்படும்.

௨௫ புசல் கடந்துபோகிறதுபோல ஆகாதவன் இல்லாதேபோகிறான்; நீதிமானோ நித்திய அஸ்திபாரமுள்ளவன்.

௨௬ காடி பல்லுகளுக்கும் புகை கண்களுக்கும் எப்படியிருக்கிறதோ, அப்படிச் சோம்பேறி தன்னை அனுப்புகிறவர்களுக்கு இருக்கிறான்.

௨௭ கர்த்தருக்குப் பயப்படுதல் ஆயுசின் நாள்களைப் பெருகப்பண்ணும்; *ஆகாதவர்களின் வயதுகளோ குறுகப்படும்.
*வாக். ௩. ௨: ௯. ௰௧.

௨௮ நீதிமான்களின் நம்பிக்கை மகிழ்ச்சி

யாகும்; ஆகாதவர்களின் பார்த்திருக்குத லோ அழியும்.

உ௯ கர்த்தரின் வழி உத்தமனுக்கு அரண்; அக்கிரமக்காரருக்கோ கலக்கம்.

௩௰ நீதிமான் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை; ஆகாதவர்களோ பூமியில் வாசமாயிருப்பதில்லை.

௩௧ நீதிமானின் வாய் ஞானத்தை வெளிப்படுத்தும்; மாறுபாடுகளுள்ள நாவோ அறுப்புண்டுபோம்.

௩௨ நீதிமானின் உதடுகள் பிரியமானதைப் பேச அறியும்; ஆகாதவர்களின் வாயோ மாறுபாடுகளுள்ளது.

## ௰௧. அதிகாரம்.

*கள்ளத்தராசு கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கிறது; சுமுத்திரையான படிக்கல்லோ அவருக்குப் பிரியம். *வாக். ௰௬. ௰௧: ௨௰. ௰–௨௩.

௨ அகந்தை வந்தால் இலச்சையும் வரும், ஆனால் தாழ்மையானவர்களோடே ஞானமிருக்கும்.

௩ செம்மையானவர்களின் உத்தமம் அவர்களை நடத்தும்; துரோகிகளின் தாறுமாறோ அவர்களைப் பாழ்க்கடிக்கும்.

௪ *கோபாக்கினையின் நாளிலே ஆஸ்தி உதவாது; நீதியோ மரணத்திற்குத் தப்புவிக்கும். *வாக். ௰. ௨.

௫ உத்தமனின் நீதி அவன் வழியைச் செம்மையாக்கும்; ஆகாதவனோ தன் ஆகாமியத்தாலே விழுவான்.

௬ செம்மையானவர்களின் நீதி அவர்களைத் தப்புவிக்கும்; துரோகிகளோ தங்கள் தீவினையிலே பிடிபடுவார்கள்.

௭ ஆகாத மனிதன் சாகையில் அவன் பார்த்துக்கொள்ளுதல் அழியும்; *அக்கிரமக்காரரின் நம்பிக்கை கெட்டுப்போம். *வாக். ௰. ௨௮.

௮ நீதிமான் இக்கட்டுக்கு நீங்கலாக்கப்படுகிறான்; *அவன் தலத்திலே ஆகாதவன் வருகிறான். *வாக். ௨௧. ௰௮.

௯ மாயக்காரன் தனக்கு அடுத்தவனை வாயினாலே கெடுக்கிறான்; நீதிமானோ அறிவினால் தப்புகிறான்.

௰ நீதிமான்கள் நன்றாயிருந்தால் பட்டணம் களிகூரும்; ஆகாதவர்கள் அழிந்தால் கெம்பீரமுண்டு.

௰௧ செம்மையானவர்களின் ஆசீர்வாதத்தினால் பட்டணம் உயரும்; ஆகாதவர்களின் வாயினால் அது இடியும்.

௰௨ மதிகெட்டவன் தனக்கடுத்தவனை இலச்சைபண்ணுகிறான்; உணர்வுள்ள மனிதனோ பேசாதிருக்கிறான்.

௰௩ *அவதூறுபண்ணித் திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குகிறான்; ஆவியில் உண்மையுள்ளவனோ காரியத்தை அடக்குகிறான். *வாக். ௨௰. ௰௯.

௰௪ *நல்ல யோசனைகளில்லாததினால் சனம் தாழ்ந்து விழும்; அநேகம் ஆலோசனைக்காரரிருக்கிறதினாலோ சுகமுண்டு. *வாக். ௰௫. ௨௨.

௰௫ அந்நியனுக்காகப் பிணைப்படுகிறவன் நன்றாய் நொறுங்குண்பான்; கைபோட்டுக் கொள்ளுதலைப் பகைக்கிறவனோ சுகமாயிருப்பான்.

௰௬ பலவந்தர் ஐசுவரியத்தைப் பத்திரமாய்க் காப்பதுபோல, இலக்கணப்பெண்சாதி மாணியம் காக்கிறாள்.

௰௭ தயையுள்ள மனிதன் தன் ஆத்துமாவுக்கு நன்மைசெய்கிறான்; கரூரனோ தன் மாம்சத்தை அலைக்கழிக்கிறான்.

௰௮ ஆகாதவன் விருதா வேலையைச்செய்கிறான்; நீதியை விதைக்கிறவனோ உத்தமபலனை அடைவான்.

௰௯ நீதி சீவனுக்கு உள்ப்படுத்துவதுபோலப்பொல்லாப்பைப் பின்தொடருகிறவன் தன் மரணத்திற்கு ஏகுகிறான்.

௨௰ திரியாவரமான இருதயத்தார் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள்; உத்தமமார்க்கத்தாரோ அவருக்குப்பிரியமானவர்கள்

உக பொல்லாதவன் கையோடே கைகோத்தாலும் ஆக்கினைக்குத் தப்பான்; நீதிமான்களின் வித்தோ விடுவிக்கப்படும்.

உஉ மதிகெட்டு நடக்கிற ஸ்திரியின் அழகு பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்குச் சமானம்.

உ௩ நீதிமான்களின் ஆசை நன்மையே; ஆகாதவர்களின் காத்திருக்குதல் கோபத்தோடிருக்கும்.

உ௪ வாரியிறைத்தும் அதிகமுண்டாயிருக்கிறவர்களுமுண்டு; நிதானம் தப்பிப் பிசினித்தனம் பண்ணியும் தாழ்ச்சியையே அடைகிறவர்களுமுண்டு.

உ௫ ஆசீர்வதிக்கிற ஆத்துமா கொழுத்துப்போம்; எவன் தண்ணீர் பாய்ச்சுகிறானோ அவனுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படும்.

உ௬ தானியத்தைக் கட்டிவைக்கிறவனைச் சனம் சபிக்கும்; விற்கிறவனுடைய தலைக்கு ஆசீர்வாதமுண்டாம்.

உஎ நன்மையைக் கருத்தாய்த் தேடுகிறவன் பிரியம் தேடிக்கொள்ளுகிறான்; *தீமையைத் தேடுகிறவனுக்கோ அதுவே வரும். *சங். எ. ௰எ.

உ அ தன் ஐசுவரியத்தை நம்புகிறவன் விழுவான்; *நீதிமான்களோ துளிரைப்போலச் செழிப்பார்கள். *சங். ௯உ. ௰.

உ௯ தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச் சுதந்தரிப்பான்; பயித்தியக்காரன் ஞானமனமுள்ளவனுக்கு அடிமையாயிருப்பான்.

௩௰ நீதிமானின் பலன் ஜீவவிருட்சம்; ஆத்துமங்களை ஆதாயப்படுத்திக்கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன்.

௩க இதோ *நீதிமானுக்குப் பூமியில் சரிக்கட்டப்படுமே; ஆகாதவனுக்கும், பாவிக்கும் எத்தனை அதிகம். *க பே. ௪. ௰எ, ௰அ.

## ௰உ. அதிகாரம்.

*தண்டனையைச் சிநேகிக்கிறவன் அறிவைச் சிநேகிக்கிறவன்; கடிந்துகொள்ளுதலைப் பகைக்கிறவனோ மிருகத்தைப்போலிருப்பான். *வாக். ௰௩. ௰அ.

உ நல்லவன் கர்த்தரிடத்திலே பிரியம் பெறுவான்; ஆனால் தீவினைகளுள்ள மனிதனை அவர் ஆகாதவனாகத் தீர்ப்பார்.

௩ ஆகாமியத்தாலே மனுஷன் நிலைவரப்படான்; நீதிமான்களின் வேரோ அசையாதிருக்கும்.

௪ *திறமையுள்ள ஸ்திரி தன் புருஷனுக்குக் கிரீடமாயிருக்கிறாள்; இலச்சைக்காரியோ அவனுக்கு எலும்புருக்கியைப்போலிருக்கிறாள். *வாக். ௩க. ௰.

௫ நீதிமான்களின் நினைவுகள் நியாயம்; ஆகாதவர்களின் யோசனைகள் சூது.

௬ ஆகாதவர்களின் வார்த்தைகள் *இரத்தம்சிந்தப் பதிவிருப்பதற்கிருக்கும்; ஆனால் செம்மையானவர்களை அவர்கள் வாய் தப்புவிக்கும். *வாக். க. ௰க.

எ ஆகாதவர்கள் கவிழ்ந்து இல்லாதே போவார்கள்; ஆனால் நீதிமான்களின் வீடு நிற்கும்.

அ தன் புத்திக்குத்தக்கதாய் மனுஷன் புகழப்படுவான்; ஆனால் அக்கிரமநெஞ்சன் இகழ்ச்சிக்குள்ளாவான்.

௯ தன்னைத்தான் கனம்பண்ணி அப்பத்தாழ்ச்சியாயிருக்கிறவனைப்பார்க்கிலும், பணிவிடைக்காரருள்ளவனாகிய கனமற்றவன் வாசி.

௰ நீதிமான் தன் மிருகஜீவனை விசாரிக்கிறான்; ஆனால் ஆகாதவர்களின் இருதயம் கரூரமானது.

௰க *தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் அப்பத்தால் திருப்தியாவான்; வீணரைப் பின்பற்றுகிறவனோ மதியற்றவன். *வாக். உ௮. ௰௯.

௰உ ஆகாதவன் தீதுக்குள்ப்படுத்தும் வலையை நாட்டுகிறான்; ஆனால் நீதிமான்களின் வேர் கனிகொடுக்கும்.

௰௩ உதடுகளின் துரோகத்தில் பொல்லாக்கண்ணி இருக்கும்; நீதிமானோ நெருக்கத்துக்கு வெளியாவான்.

௰௪ *தன்தன் வாயின் நற்கனியினால் அவனவன் நன்மையாய்த் திருப்தியாவான்; அவனவன் கைகளின் உபகாரமும் அவனவனுக்குத் திரும்பும். *வாக். ௰௩. ௨.

௰௫ பயித்தியக்காரன் வழி அவனுடைய பார்வைக்குச் செம்மை; ஆனால் ஆலோசனையைக் கேட்கிறவன் ஞானமுள்ளவன்.

௰௬ பயித்தியக்காரனுடைய தாங்கல் அந்நாளிலேதானே அறியப்படும்; இகழ்ச்சியை மூடுகிறவனோ விவேகி.

௰௭ சத்தியவாசகன் நீதியாய் அறிவிப்பான்; பொய்ச்சாட்சிக்காரனோ தந்திரமாய் அறிவிப்பான்.

௰௮ பட்டையக் குத்துகள்போலப் பேசுகிறவர்களுமுண்டு; ஞானமுள்ளவர்களின் நாவோ ஔஷதம்.

௰௯ சத்திய உதடு என்றென்றைக்கும், பொய் நாவோ ஒரு நிமிஷமாத்திரமும் நிற்கும்.

௨௰ தீங்கைப் பிணைக்கிறவர்களின் இருதயத்தில் இருக்கிறது கபடம்; சமாதானத்துக்கு உசாவுகிறவர்களுக்குண்டாகிறதோ மகிழ்ச்சி.

௨௰௧ *நீதிமானுக்கு ஒரு அவகேடும் வராது; ஆகாதவர்களோ பொல்லாப்பால் நிறையப்படுவார்கள். *சங். ௯௨. ௰.

௨௰௨ *கள்ளவுதடுகள் கர்த்தருக்கு அருவருப்பானவைகள்; உண்மையை நடப்பிக்கிறவர்களோ அவருக்குப் பிரியம். *வாக். ௬. ௰௬, ௰௭.

௨௰௩ விவேகமுள்ள மனுஷன் அறிவை அடக்குகிறான்; *நிர்மூடரின் நெஞ்சோ பயித்தியத்தைப் பிரசங்கிக்கும். *வாக். ௰௩. ௰௬.

௨௰௪ *சாக்கிரதையுள்ளவர்களின் கை ஆளும்; வஞ்சனைக்கையோ அடிமைப்படும். *வாக். ௰. ௪.

௨௰௫ மனுஷன் இருதயத்தில் இருக்கும் கவலை அதை ஒடுக்கும்; நல்ல வார்த்தையோ அதை மகிழ்ச்சியாக்கும்.

௨௰௬ நீதிமான் தனக்கு அடுத்தவனிலும் மேன்மையாயிருக்கிறான்; ஆனால் ஆகாதவர்களை அவர்களுடைய வழி மோசம்போக்கும்.

௨௰௭ அசடன் தான் வேட்டையாடினதைப் பொரிப்பதில்லை; சாக்கிரதையுள்ளவனுக்கோ விலையேறப்பெற்ற ஆஸ்தி அகப்படும்.

௨௰௮ நீதியின் பாதையில் சீவன் உண்டு; மார்க்கமான வழியில் சாவில்லை.

## ௰௩. அதிகாரம்.

ஞானமுள்ள மகன் தகப்பன் புத்தியைக் கேட்கிறான்; சரசக்காரனோ அதட்டுதலைக் கேளான்.

௨ *தன்தன் வாயின் நற்கனியினாலே அவனவன் நன்மையைப் புசிப்பான்; துரோகிகளின் ஆத்துமாவோ கொடுமையைப் புசிக்கும். *வாக். ௰௮. ௨௰.

௩ தன் வாயைப் பத்திரம்பண்ணுகிறவன் தன் ஆத்துமாவைத் தற்காக்கிறான்; *தன் உதடுகளை அகன்றதாக்குகிறவனுக்கோ கலக்கம் வரும். *வாக். ௰௮. ௭.

௪ சோம்பேறியின் ஆத்துமா இச்சித்தாலும் ஒன்றும் வராது; *சாக்கிரதையுள்ளவர்களின் ஆத்துமாவோ புஷ்டியாகும். *வாக். ௨௰. ௰௩.

௫ *நீதிமான் பொய்ப்பேச்சைப் பகைக்கிறான்; ஆகாதவனோ வெட்கமும் இலச்சையும் உண்டாக்குகிறான். *சங். ௱௰௯. ௱௬௩.

௬ நீதி உத்தமமார்க்கத்தானைத் தற்காக்கும்; ஆகாமியமோ பாவியைக் கவிழ்த்துவிடும்.

௭ ஒன்றுமில்லாமல் தங்களை ஐசுவரியவான்களாய்ப் பாராட்டுகிறவர்களுமுண்டு; திரளான ஆஸ்தி இருந்தும் தங்களைத் தரித்திரராய்ப் பாராட்டுகிறவர்களுமுண்டு.

௮ மனுஷனுடைய ஐசுவரியம் அவன் பிராணனை மீட்கிறதுண்டு; ஆகிலும் தரித்திரன் சிறுமாறுனதைக் கேளாதிருக்கிறான்.

௯ நீதிமான்களின் வெளிச்சம் சந்தோஷிப்பிக்கும்; *ஆகாதவர்களின் தீபமோ அணைந்துபோகும். *வாக். ௨௪. ௨௰.

௰ அகந்தையாலேமாத்திரம் வாது பிறக்கும்; யோசனை கேட்கிறவர்களிடத்திலோ ஞானமுண்டு.

௰௧ மாயையாலே தேடின ஆஸ்தி குறைந்துபோம்; கைப்பாடாய்ச் சேர்க்கிறவனோ அதைப் பெருகப்பண்ணுவான்.

௰௨ நெடுங்காலமாய்க் காத்திருக்குதல் இருதயத்தை இளைக்கப்பண்ணும்; விரும்பினது வந்தபோதோ ஜீவவிருட்சம்போலிருக்கும்.

௰௩ வசனத்தை அசட்டைபண்ணுகிறவன் தன்னாலே கெட்டுப்போகிறான்; கற்பனைக்குப் பயப்படுகிறவனோ பலன் அடைவான்.

௰௪ ஞானியின் போதகம் *மரணக்கண்ணிகளை விலக்குவதற்கான ஜீவ ஊற்றாயிருக்கிறது. *வாக். ௰௩. ௨௭.

௰௫ நற்புத்தி தயை உண்டாக்கும்; துரோகிகளின் வழியோ கரடுமுரடுமானது.

௰௬ விவேகியாயிருக்கிறவனெல்லாம் அறிவோடே செய்கிறான்; மின்மூடனோ தன் பயித்தியத்தை விரித்துக்காண்பிக்கிறான்.

௰௭ ஆகாத தூதன் தீதிலே விழுவான்; உண்மையுள்ள தானாபதியோ ஔஷதம்.

௰௮ புத்தியைத் தள்ளிப்போடுகிறவனுக்குத் தரித்திரமும் கனஈனமும் வரும்; கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ கனமடைவான்.

௰௯ வாஞ்சை நிறைவேறுதல் ஆத்துமாவுக்கு இனிதாயிருக்கும்; பொல்லாப்பை விலகுதல் மூடருக்கு அருவருப்பாயிருக்கும்.

௨௰ ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞானமடைவான்; மூடனுக்குத் தோழனாயிருக்கிறவனோ நொறுங்குண்பான்.

௨௧ பாவிகளைத் தீமை தொடரும்; நீதிமான்களுக்கோ நன்மை பலனாக வரும்.

௨௨ நல்லவன் தன் பிள்ளைகளின் பிள்ளைகளைச் சுதந்தரமடையப்பண்ணுகிறான்; பாவியின் ஆஸ்தியோ *நீதிமானுக்கு வைக்கப்படும். *யோபு. ௨௭. ௰௬, ௰௭.

௨௩ ஏழைகளின் வயல் மிகுந்த ஆகாரத்தை விளைவிக்கும், ஆனால் நியாயமில்லாமையால் அழிகிறவர்களுமுண்டு.

௨௪ தன் மிலாறைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான்; அவனைச் சிநேகிக்கிறவனோ அவனை ஏற்கனவே தண்டிப்பான்.

௨௫ நீதிமான் தன் ஆத்துமா திருப்தியாகச் சாப்பிடுவான்; ஆகாதவர்களின் வயிறோ தாழ்ச்சி அடையும்.

## ௰௪. அதிகாரம்.

ஞானமுள்ள எந்தப் பெண்சாதியும் தன் வீட்டைக் கட்டுகிறாள்; பயித்தியமுள்ளவளோ அதைத் தன் கைகளால் இடிக்கிறாள்.

௨ தன் நிதானத்திலே நடக்கிறவன் கர்த்தருக்குப் பயப்படுகிறான்; தன் வழிகளில் தாறுமாறானவனோ அவரை அசட்டைபண்ணுகிறான்.

௩ அகந்தைக்கான மிலாறு மூடன் வாயிலேதான் இருக்கிறது; ஞானமுள்ளவர்களையோ அவர்களுடைய உதடுகள் காப்பாற்றும்.

௪ எருதுகளில்லாமையால் களஞ்சியம் வெறுமையாயிருக்கும்; காளைகளின் பெலத்தினாலோ மிகுந்த வரத்துண்டு.

௫ உண்மையுள்ள சாட்சிக்காரன் பொய் சொல்லான்; கள்ளச்சாட்சிக்காரனோ பொய்களை ஊதுகிறவன்.

௬ சரசக்காரன் ஞானத்தைத் தேடியும் கண்டுபிடியான்; உணர்வுள்ளவனுக்கோ அறிவு இலேசாய் வரும்.

௭ பயித்தியக்காரனுடைய முகத்துக்கு இடைந்துபோ; ஏனெனில் அறிவுள்ள உதடுகளை அங்கே காணாய்.

௮ தன் வழியைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறது விவேகியினுடைய ஞானம்; திரியாவரமோ மூடருடைய பயித்தியம்.

௯ குற்றத்துக்குப் பயித்தியக்காரர் ஆக

டிபம்பண்ணுகிறார்கள்; செம்மையானவர்களுக்குள்ளேயோ தயை இருக்கிறது.

௰ அவனவனுடைய ஆத்துமாவின் சஞ்சலத்தை அவனவனுடைய இருதயமே அறியும்; அவனவன் மகிழ்ச்சிக்கும் அந்நியன் உடந்தையல்ல.

௰௧ ஆகாதவர்களின் வீடு அழியும்; செம்மையானவர்களின் கூடாரமோ செழிக்கும்.

௰௨ *சில மனுஷருடைய பார்வைக்கு அவர்களுடைய வழி செம்மையாய்க் கண்டும், அதின் முடிவு மரணத்துக்குப் போகிற வழிகளாய் இருக்கும். *வாக். ௰௬. ௨௫.

௰௩ நகைப்பிலும் மனதுக்கு நோவுண்டாகும்; அதின்பிறகு சந்தோஷம் சஞ்சலமாகும்.

௰௪ பின்வாங்கும் இருதயமுள்ளவன் தன்னுடையவைகளாலும், நல்ல மனுஷன் தன் மார்க்கத்தாலும் திருப்தியாவான்.

௰௫ பேதை சகல வார்த்தையையும் நம்புகிறான்; விவேகியோ தன் நடையின்மேல் கவனமாயிருக்கிறான்.

௰௬ ஞானமுள்ளவன் பயந்து தீங்குக்கு விலகுகிறான்; மூடனோ சினந்துகொண்டு இடாரிக்கமாயிருக்கிறான்.

௰௭ *முன்கோபி மதிகேட்டைச் செய்வான்; தீவினைகளுள்ள மனுஷன் பகைக்கப்படுவான். *வாக். ௰௨. ௰௬.

௰௮ பேதைகள் பயித்தியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறார்கள்; விவேகிகளோ அறிவின் கிரீடத்தைத் தரித்துக்கொள்ளுகிறார்கள்.

௰௯ பொல்லாதவர்கள் நல்லவர்களுக்கு முன்பாகவும், ஆகாதவர்கள் நீதிமானுடைய வாசற்படியிலும் குனிவதுண்டு.

௨௰ *தரித்திரன் தனக்கடுத்தவனாலும் பகைக்கப்படுகிறான்; ஐசுவரியமுள்ளவர்களின் சிநேகிதரோ அநேகர். *வாக். ௰௯. ௪-௭.

௨௧ தனக்கடுத்தவனை அசட்டைபண்ணுகிறவன் பாவம்செய்கிறான்; *சிறுமையானவர்களுக்கு இரங்குகிறவனோ பாக்கியம் அடைவான். *சங். ௪௧. ௧.

௨௨ தீமைக்கு எத்தனம்பண்ணுகிறவர்கள் தப்பிதம் செய்கிறார்களல்லவோ? நன்மைக்கு எத்தனம்பண்ணுகிறவர்களுக்கோ கிருபையும் உண்மையுமுண்டு.

௨௩ சகல *பிரயாசத்தினாலும் பிரயோசனமுண்டு; உதடுகளின் வசனிப்பால்குறைச்சல் வருகிறது. *வாக். ௰. ௪; ௰௨. ௨௪.

௨௪ ஞானமுள்ளவர்களின் ஐசுவரியம்அவர்களுக்குக் கிரீடம்; மூடரின் பயித்தியம் பயித்தியமே.

௨௫ உண்மையுள்ள சாட்சிக்காரன் ஆத்துமாவை விடுவிக்கிறான்; கபடச்சாட்சிக்காரனோ பொய்களை ஊதிவிடுகிறான்.

௨௬ கர்த்தருக்குப் பயப்படுகிறதினாலே *பெலத்த திடன்உண்டு; அவர் பிள்ளைகளுக்கும் அடைக்கலமிருக்கும். *வாக்.௰௮.௰.

௨௭ கர்த்தருக்குப் பயப்படுதல் மரணக் கண்ணிகளைவிட்டு விலகுவதற்காகச் சீவ ஊற்றாயிருக்கிறது.

௨௮ சனத்திரட்சி இராசாவின் மகத்துவம்; சனக்குறைவு தலைவரின் முறிவு.

௨௯ *நீண்ட சாந்தமுள்ளவன் மகா புத்திமான்; முன்கோபியோ பயித்தியத்தைத் தெரியக்காண்பிக்கிறான். *வாக். ௰௬. ௰௧.

௩௰ சொஸ்தமனம் உடலின் சீவன்; பொறாமையோ எலும்புருக்கி.

௩௧ *தரித்திரனை ஒடுக்குகிறவன் அவனை உண்டாக்கினவரை நிந்தைசெய்கிறான்; எளியவனுக்கு இரங்குகிறவனோ அவரைக் கனம்பண்ணுகிறான். *வாக். ௰௭. ௫.

௩௨ ஆகாதவன் தன் பொல்லாப்பினாலே தள்ளுண்பான்; நீதிமானோ தன் மரணத்திலே திடனாயிருக்கிறான்.

௩௩ உணர்வுள்ளவனுடைய இருதயத்தில் ஞானம் தங்கியிருந்து, மூடரின் நடுவே விளங்கும்.

௩௪ நீதி சாதியை உயர்த்தும்; பாவமோ சனசதளங்களின் இகழ்ச்சி.

௩௫ விவேகமுள்ள ஊழியக்காரன்மேல்

இராசாவின் பிரியமும், இலச்சை உண்டாக்குகிறவன்மேல் அவன் மூர்க்கமும் இருக்கும்.

## ௰௫. அதிகாரம்.

மெதுவான பிரதியுத்தாரம் உக்கிரத்தைத் திருப்பும்; நோகப்பண்ணும் வார்த்தையோ கோபத்தைக் கிளப்பும்.

௨ ஞானிகள் நாவு அறிவை நன்றாய்க் காண்பிக்கும்; மூடரின் வாயோ *பயித்தியத்தை ஊற்றும். *வாக். ௰௩. ௰௪.

௩ எவ்விடத்திலும் கர்த்தருடைய கண்களிருந்து பொல்லாதவர்களையும், நல்லவர்களையும் நோக்கிப்பார்க்கின்றன.

௪ *நாவின் ஆரோக்கியம் சீவவிருட்சம்; அதிலுள்ள தாறுமாறோ ஆவிக்கு நொறுங்குதல். *வாக். ௰௨. ௰௮.

௫ பயித்தியக்காரன் தன் தகப்பன் புத்தியை அசட்டைபண்ணுகிறான்; கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ விவேகியானவன்.

௬ *நீதிமானின் வீட்டிலே வெகு சத்துவமிருக்கும்; ஆகாதவர்களின் வரத்திலோ கலக்கமுண்டு. *வாக். ௩. ௩௩.

௭ ஞானமுள்ளவர்களின் உதடுகள் அறிவை இறைக்கும்; மூடரின் இருதயம் அப்படி அல்ல.

௮ *ஆகாதவர்களின் பலி கர்த்தருக்கு அருவருப்பு; செம்மையானவர்களின் செபமோ அவருக்குப் பிரியம். *வாக். ௨௧. ௨௭.

௯ ஆகாதவனுடைய வழி கர்த்தருக்கு அருவருப்பு; நீதியைப் பின்தொடருகிறவனையோ அவர் சிநேகிக்கிறார்.

௰ பாதையை விட்டுப்போகிறவனுக்குப் புத்திமதி விதனமாயிருக்கும்; கடிந்துகொள்ளுதலைப் பகைக்கிறவன் சாவான்.

௰௧ *பாதாளமும், நரகமும் கர்த்தரின் முன்பாக இருக்கின்றனவே; மனுப்புத்திரன் இருதயங்கள் எத்தனை அதிகம். *யோபு. ௨௬. ௬.

௰௨ சரசக்காரன் தன்னைக் கடிந்துகொள்ளுகிறவனைச் சிநேகியான்; ஞானிகளண்டைக்கு அவன் போகான்.

௰௩ *மகிழ்ச்சியுள்ள இருதயம் முகத்தைச் செழிப்பாக்கும்; இருதயத்தின் நோவினாலே ஆவி முறிந்துபோகும். *வாக். ௰௭. ௨௨.

௰௪ உணர்வுள்ளவனுடைய இருதயம் அறிவைத்தேடும்; மூடரின் வாயோ பயித்தியத்தை மேயும்.

௰௫ சிறுமைப்பட்டவனுடைய நாள்களெல்லாம் தீங்குள்ளவைகள்; *மன இரம்மியமோ நித்திய விருந்து. *௧ திமோ. ௬. ௬.

௰௬ அமளியோடிருக்கும் பெரும் பொக்கிஷத்தைப்பார்க்கிலும் கர்த்தருக்குப் பயப்படுதலோடிருக்கும் கொஞ்சமானது வாசி.

௰௭ *பகையோடிருக்கும் கொழுத்த எருதின்கறியைப்பார்க்கிலும் சிநேகத்தோடிருக்கும் இலைக்கறி வாசி. *வாக். ௰௭. ௧.

௰௮ உக்கிரமுள்ள மனுஷன் சண்டைகொளுவுகிறான்; நீண்டசாந்தமுள்ளவனோ சண்டையை அமர்த்துகிறான்.

௰௯ *சோம்பேறியின் வழி முள்வேலியாய் இருக்கிறது; செம்மையானவர்களின் பாதையோ நிரவப்பட்டதாயிருக்கிறது. *வாக். ௨௪. ௩௰. ௩௧.

௨௰ *ஞானமுள்ள மகன் தகப்பனைப் பூரிப்பாக்குகிறான்; பயித்திய மனுஷனோ தன் தாயை அசட்டைபண்ணுகிறான். *வாக். ௰. ௧: ௰௭. ௨௫.

௨௧ பயித்தியம் மதியற்றவனுக்குச் சந்தோஷம்; உணர்வுள்ள மனுஷனோ தன் நடக்கையைச் செம்மைப்படுத்துகிறான்.

௨௨ *யோசனை இல்லாமையால் நினைவுகள் இசைகேடாம்; ஆனால் அநேகம் ஆலோசனைக்காரரால் உறுதியுண்டாம். *வாக். ௰௧. ௰௪.

௨௩ மனுஷனுக்குத் தன் வாய்மொழியினாலே மகிழ்ச்சியுண்டாம்; *ஏற்றகாலத்திலே சொன்ன வார்த்தை எத்தனை நலமாயிருக்கும். *வாக். ௨௫. ௰௧.

௨௪ தாழவிருக்கும் நரகத்தைவிட்டு விலகும்படிக்கு, விவேகிக்குச் சிவவழி உயரப்போகும்.

௨௫ *அகந்தைக்காரரின் வீட்டைக் கர்த்தர் பிடுங்கி, விதவையின் எல்லையை நிலைப்படுத்துவார். *சங். ௱௪௬. ௯.

௨௬ பொல்லாதவனுடைய நினைவுகள் கர்த்தருக்கு அருவருப்பாய் இருக்கின்றன; சுத்தவான்களின் வார்த்தைகளோ இன்பமானவைகள்.

௨௭ பொருளாசைக்காரன் தன் வீட்டைக் கலைக்கிறான்; பரிதானங்களைப் பகைக்கிறவனோ பிழைத்திருக்கிறான்.

௨௮ நீதிமானின் இருதயம் பிரதியுத்தரஞ்சொல்ல யோசிக்கும்; ஆகாதவர்களின் வாயோ பொல்லாவிசேஷங்களைப் பொழியும்.

௨௯ ஆகாதவர்களுக்குக் கர்த்தர் தூரமாயிருக்கிறார்; நீதிமான்களின் செபத்தையோ கேட்கிறார்.

௩௰ கண்களின் வெளிச்சம் இருதயத்தைப் பூரிப்பாக்கும்; நல்ல செய்தி எலும்புகளைப் புஷ்டியாக்கும்.

௩௧ சீவனின் கடிந்துகொள்ளுதலைக் கேட்கும் காது ஞானமுள்ளவர்களுக்குள் தாபரிக்கும்.

௩௨ புத்தியைத் தள்ளிவிடுகிறவன் தன் ஆத்துமாவை வெறுக்கிறான்; கடிந்துகொள்ளுதலைக் கேட்கிறவனோ ஞானமடைவான்.

௩௩ கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தைப் போதிக்கும்; *மகிமைக்கு முன் தாழ்மையுண்டு. *வாக். ௰௮. ௰௨.

## ௰௬. அதிகாரம்.

மனதின் யோசனைகள் மனுஷனுடையது; *நாவின் பிரதியுத்தாரம் கர்த்தராலிருக்கும். *எரே. ௰. ௨௩.

௨ *மனுஷனுடைய வழிகளெல்லாம் அவன் பார்வைக்குச் சுத்தமாயிருக்கின்றன; ஆனால் கர்த்தர் ஆவிகளை நிறுக்கிறார். *வாக். ௨. ௨.

௩ உன் செய்கைகளைக் கர்த்தருக்குச் சாட்டிவிடு, அப்போது உன் யோசனைகள் நிலைவரப்படும்.

௪ கர்த்தர் அதினதின் இலக்குக்குச் சகலத்தையும், தீங்குநாளுக்குப் பொல்லாதவனையுங்கூட உண்டாக்கினார்.

௫ *மனமேட்டிமையானவனெல்லாம் கர்த்தருக்கு அருவருப்பானவனாயிருக்கிறான்; அவன் கையோடே கைகோத்தாலும் ஆக்கினைக்குத் தப்பான். *லூக். ௰௬. ௰௫.

௬ கிருபையினாலும், உண்மையினாலும் அக்கிரமம் மூடப்படும்; ஆனால் கர்த்தருக்குப் பயப்படுகிறதினால் பொல்லாப்பைவிட்டு விலகவேண்டும்.

௭ ஒரு மனுஷனுடைய வழிகளின்மேல் கர்த்தர் பிரியமாய் இருந்தால், அவர் அவன் சத்துருக்களையும் அவனோடே சமாதானமாக்குவார்.

௮ *நியாயமில்லாத திரளான வரத்துகளைப் பார்க்கிலும் நீதியோடிருக்கும் கொஞ்ச வரத்து வாசி. *சங். ௩௭. ௰௬.

௯ மனுஷனுடைய இருதயம் தன் வழியை யோசிக்கும்; ஆனால் கர்த்தரே அவன் நடையை உறுதியாக்குகிறவர்.

௰ இராசாவுடைய உதடுகளிலே ஞானதிருஷ்டியுண்டு; அவன் வாய் நியாயத்திலே நீதிதப்பிச் சொல்லாது.

௰௧ *சுமுத்திரையான கயிற்றுக்கோலும், தராசும் கர்த்தருடையது; பையிலுள்ள படிக்கற்களெல்லாம் அவருடைய செய்கை. *வாக். ௰௧. ௧.

௰௨ ஆகாமியம் செய்கிறது இராசாக்களுக்கு அருவருப்பாயிருக்கும்; ஏனெனில் நீதியால் இராசாசனம் உறுதிப்படுத்தப்படும்.

௰௩ நீதியுள்ள உதடுகள் இராசாக்களுக்குப் பிரியம்; நிதானமாய்ப் பேசுகிறவனை இராசா சிநேகிப்பான்.

௰௪ இராசாவின் உக்கிரம் மரணதூதர்களைப்போல இருக்கும்; ஆனால் ஞானமுள்ள

மனுஷன் அதை ஆற்றுவான்.

௰௫ இராசாவினுடைய முகக்களை உயிர்ப்பிக்கும்; அவன் தயை பின்மாரி பெய்கிற மேகத்தைப்போலிருக்கும்.

௰௬ *அபரஞ்சியைப்பார்க்கிலும் ஞானத்தைச் சம்பாதிக்கிறது எத்தனை நலமும், வெள்ளியைப்பார்க்கிலும் உணர்வைச் சம்பாதிக்கிறது எத்தனை மேன்மையுமாயிருக்கிறது. *வாக். ௩. ௰௪: ௮. ௰, ௰௯. சங். ௰௯. ௰௧.

௰௭ பொல்லாப்பைவிட்டு விலகுதலே செம்மையானவர்களின் சமனான பாதை; தன் வழியைக் கவனித்திருக்கிறவன் தன் ஆத்துமாவைத் தற்காக்கிறான்.

௰௮ நொறுங்குதலுக்கு முன்னானது அகந்தை, விழுதலுக்கு முன்னானது மனமேட்டிமை.

௰௯ *அகந்தைக்காரரோடே கொள்ளையைப் பங்கிட்டுக்கொள்வதைப் பார்க்கிலும், சிறுமையானவர்களோடே மனத்தாழ்மையாயிருக்கிறது நலம். *வாக். ௰௮. ௰௨.

௨௰ வசனத்தின்மேல் சிந்தனையை வைக்கிறவன் நன்மையைக் கண்டடைவான்; கர்த்தனை நம்புகிறவன் பாக்கியவான்.

௨௧ இருதயத்தில் ஞானமுள்ளவன் புத்திமான் என்னப்படுவான்; உதடுகளின் இன்பம் உபதேசத்தைப் பெருகப்பண்ணும்.

௨௨ புத்தி தன்னை உடையவர்களுக்குச் சீவ ஊற்றாயிருக்கிறது; பயித்தியக்காரரின் கல்வியோ பயித்தியம்.

௨௩ ஞானியின் இருதயம் அவன் வாயைப் புத்தியுள்ளதாக்கி, அவன் உதடுகளில் உபதேசத்தைப் பெருகப்பண்ணும்.

௨௪ இன்பமான வார்த்தைகள் தேன்கூடாகவும், ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஔஷதமுமாயிருக்கின்றன.

௨௫ *மனுஷனுடைய பார்வைக்குச் செம்மையாய்க் கண்டும், முடிவிலே மரணத்திற்குக் கொண்டுபோகிறதாகிய வழியுண்டு. *வாக். ௰௪. ௰௨.

௨௬ உழைக்கிற ஆத்துமா தனக்கு உழைக்கிறான்; ஏனெனில் அவன் வாய் அவனைத் தீவிரிக்கும்.

௨௭ *பேலியாளின் மனுஷன் தீங்கை எத்தனம்பண்ணுகிறான்; அவன் உதடுகளிலிருக்கிறது எரிக்கும் அக்கினியைப்போலிருக்கும். *வாக். ௬. ௰௨, ௰௪.

௨௮ மாறுபாடுகளுள்ள மனுஷன் வழக்கை உண்டுபண்ணுகிறான்; கோள்க்காரன் பிரதான சிநேகிதனையும் பிரியப்பண்ணுவான்.

௨௯ கொடுமையான மனுஷன் தனக்கடுத்தவனுக்கு ஆசைபதம் காட்டி, அவனை நலமல்லாத வழியில் நடக்கப்பண்ணுகிறான்.

௩௰ திரியாவரங்களை யோசிக்கத் தன் கண்களை மூடுகிறான்; தன் உதடுகளை அவன் அசைக்கும்போது பொல்லாப்பைச் செய்யத்தீர்ந்தது.

௩௧ *நரைமயிர் அலங்காரமான கிரீடம்; நீதியின்வழியில் அது கிடைக்கும். *வாக். ௨௰. ௨௯.

௩௨ பெலவானைப்பார்க்கிலும் நீண்ட சாந்தமுள்ளவனும், ஒரு பட்டணத்தைப் பிடிக்கிறவனைப்பார்க்கிலும் தன் ஆவியை ஆண்டுகொள்ளுகிறவனும் வாசி.

௩௩ சீட்டு மடியில் போடப்படும்; ஆனால் அதின் நியாயமெல்லாம் கர்த்தரால் வரும்.

## ௰௭. அதிகாரம்.

சண்டையோடே *கூடிய கொழுத்த ஆகாரங்கள் வீடுநிறைய இருந்தாலும் அவைகளைப்பார்க்கிலும் அமரிக்கையோடே சாப்படும் கறியில்லாத துணிக்கை தாவிலே. *வாக். ௰௫. ௰௭.

௨ புத்தியுள்ள வேலைக்காரன் இலச்சை உண்டாக்குகிற குமாரனை ஆண்டு, சகோதரர் நடுவில் சுதந்தரப்பங்கை அடைவான்.

௩ வெள்ளிக்குப் புடமும், பொன்னுக்குக் குகையும், இருதயங்களைச் சோதிக்கிறவரோ கர்த்தர்.

௪ பொல்லாதவன் அக்கிரம உதட்டைக் கவனிக்கிறான்; கள்ளன் கேடுபாடுள்ள நாவுக்குச் செவிகொடுக்கிறான்.

௫ *ஏழையைப் பரியாசம்பண்ணுகிறவன் அவனை உண்டாக்கினவரை நிந்தைப்படுத்துகிறான்: ஆபத்துக்கு அக்களிக்கிறவன் ஆக்கினைக்குத் தப்பான். *வாக். ௰௪. ௩௧.

௬ பிள்ளைகளின் பிள்ளைகள் முதிர்ந்தவயதுள்ளவர்களின் கிரீடம்; பிள்ளைகளின் சிங்காரமோ அவர்களின் பிதாக்கள்.

௭ மேன்மையானவைகளைப் பேசும் உதடு பயித்தியக்காரனுக்கு அடுத்ததல்ல; பிரபுக்கோ பொய் உதடு எப்படி அடுக்கும்.

௮ பரிதானம் அதை வாங்குகிறவர்களின் பார்வைக்கு நேற்றியான இரத்தினமாயிருக்கிறது; *அது நோக்கும் திசையெல்லாம் காரியம் வாய்க்கும். *வாக். ௰௮. ௰௬.

௯ மீறுதலை மூடிப்போடுகிறவன் சிநேகத்தை நாடுகிறான்; காரியத்தைக் கிண்டிக் கிளப்புகிறவனோ பிரதான சிநேகிதனையும் பிரியப்பண்ணுவான்.

௰ மூடனை நூறடி அடிப்பதைப்பார்க்கிலும், உணர்வுள்ளவனுக்கு அதட்டுதலே அதிகமாய் உறைக்கும்.

௰௧ பொல்லாதவன் கலகத்தையே தேடுகிறான்; ஆனால் கொடூர தூதன் அவனுக்கு விரோதமாக அனுப்பப்படுவான்.

௰௨ தன் பயித்தியத்தோடிருக்கிற மூடனுக்கு அல்ல, குட்டிகளைப் பறிகொடுத்த கரடிக்கே மனுஷன் எதிர்ப்படட்டும்.

௰௩ நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டுகிறவனுடைய வீட்டைத் தீமை விட்டுப் பிரியாது.

௰௪ சண்டைக்குக் காரணமாயிருக்கிறவன் தண்ணீர் மதகைத் திறக்கிறவனுக்குச் சரி; ஆகையாலே போர் கலவாததற்குமுன் வாதாட்டத்தை நெகிழ்.

௰௫ *ஆகாதவனை நீதிமானாகவும், நீதிமானை ஆகாதவனாகவும் தீர்க்கிற இருவரும் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள்.
*ஏசா. ௫. ௨௩.

௰௬ மூடன் மதியில்லாதவனாயிருக்கையில், ஞானத்தைக்கொள்ள அவன் கையிலே ரொக்கம் என்னத்திற்கு?

௰௭ சிநேகிதன் எல்லாக்காலத்திலும் சிநேகிப்பான்; இடுக்கணுக்கு உதவுகிற சகோதரனோ இன்னம் பிறக்கவேண்டும்.

௰௮ தனக்கடுத்தவன் முன்பாகப் *பிணைப்பட்டுக் கைபோடுகிறவன் புத்தித்தாழ்ச்சியான மனுஷன். *வாக். ௰௧. ௰௫.

௰௯ வாதுப்பிரியன், பாதகப்பிரியன்; தன் வாசலை உயர்த்துகிறவன் இடிதலைத் தேடுகிறான்.

௨௰ திரியாவர இருதயத்தான் நன்மையைக் கண்டடைவதில்லை; புரட்டுநாவுள்ளவன் தீமையிலே விழுவான்.

௨௧ மூடனைப் பெறுகிறவன் தனக்குச் சஞ்சலமாக அவனைப் பெறுகிறான்; பயித்தியக்காரனுடைய தகப்பன் மகிழான்.

௨௨ *மகிழ்ச்சியுள்ள இருதயம் ஔஷதம்போலாகும்; முறிந்த ஆவியோ எலும்புகளை உலரப்பண்ணும். *வாக். ௰௫. ௰௩, ௰௫.

௨௩ ஆகாதவன் நியாயவழியைப் புரட்டமடியிலுள்ள பரிதானத்தை வாங்குகிறான்.

௨௪ ஞானம் உணர்வுள்ளவனுடைய முகத்தின் முன் இருக்கிறது; மூடனுடைய கண்களோ பூமியின் கடையாந்தரங்களில் திரிகின்றன.

௨௫ *மூடனான குமாரன் தன் தகப்பனுக்குச் சலிப்பும், தன்னைப் பெற்றவளுக்குக் கசப்புமானவன். *வாக். ௰௫. ௨௰.

௨௬ நீதிமானைக்கூடத் தெண்டம்பிடிக்கிறதும், பிரபுக்கள் நிதானத்தைச் செய்கிறவனை அடிக்கிறதும் நல்லதல்ல.

௨௭ *அறிவாளி தன் வார்த்தைகளை அடக்குகிறான்; உணர்வுள்ள மனுஷன் குளிர்ந்த குணமுள்ளவன். *யாக். ௧. ௰௯.

௨௮ பயித்தியக்காரனும் மவுனமாயிருந்தால் ஞானமுள்ளவனென்றும், தன் உதடு

களை மூடுகிறவன் புத்திமானென்றும் எண்ணப்படுவான்.

## ௰அ. அதிகாரம்.

பிரிந்துபோகிறவன் தன் இச்சையின்படி செய்யப்பார்க்கிறான்; எல்லா மெய்ஞ்ஞானத்தோடும் கைகலக்கிறான்.

௨ மூடன் உணர்வையல்ல தன் இருதயம் திறந்துகிடக்குதலை விரும்புகிறான்.

௩ ஆகாதவன் வருகையில், அசங்கதமும் கனஈனத்தோடேகூடிய நிந்தையும் வரும்.

௪ மனுஷனுடைய வாயின் வசனங்கள் *ஆழமான தண்ணீர்களாயிருக்கும்; ஞானத்தின் ஊற்றே பாய்கிற ஆறும்.
*வாக். உ௯. ரு.

ரு நீதிமானை *நியாயத்திலே தோற்கடிக்க ஆகாதவனுடைய முகமாட்டத்தைப் பார்க்கிறது நல்லதல்ல. *ரு மோ. ௧. ௰எ.

௬ மூடனுடைய உதடுகள் சண்டைக்குட்படும்; அவன் வாய் அடிகளைவரவழைக்கும்.

எ மூடனுடைய வாய் அவனுக்குக் கேடு; அவன் உதடுகள் அவன் ஆத்துமாவுக்குக் கண்ணி.

அ *முணுமுணுப்புக்காரரின் வார்த்தைகள் பரியாச வார்த்தைகளைப்போல இருக்கும்; ஆனால் அவைகள் வயிற்றுக்குள் இறங்கும். *வாக். உ௰. உஉ.

௯ தன் வேலையில் அசதியானவன் அழிம்பனுடைய சகோதரன்.

௰ *கர்த்தரின் நாமம் அரணான துருக்கம்; அதிலே நீதிமான் ஓடிப் பத்திரமாயிருக்கிறான். *வாக். ௰௪. உ௬. சங். ௬௧. ௪.

௰௧ *ஐசுவரியவானுடைய ஆஸ்தி அவனுக்கு அவன் தோற்றலின்படி அரணான பட்டணமும், உயர்ந்த மதிலுமாயிருக்கும். *வாக். ௰. ௰ரு.

௰உ *நொறுங்குதலுக்குமுன் மனுஷனுடைய இருதயம் மேட்டிமையாகும்; மகிமைக்குமுன் காண்கிறதோ தாழ்மை. *வாக். ௰௬. ௰அ. மத். உ௩. ௰உ.

௰௩ ஒருவன் கேளாததற்குமுன் பிரதியுத்தாரம் சொன்னால் அவனுக்கு அது பயித்தியமும் வெட்கமுமாயிருக்கும்.

௰௪ *மனுஷனுடைய ஆவி அவன் வியாதியைத் தாங்கும்; முறிந்த ஆவியையோ யார் தாங்குவான். *வாக். ௰ரு. ௰௩.

௰ரு உணர்வுள்ளவனுடைய இருதயம் அறிவைச்சம்பாதிக்கும்; ஞானமுள்ளவர்களின் செவி அறிவையே தேடும்.

௰௬ மனுஷனுடைய காணிக்கை அவனுக்கு வழியுண்டாக்கி, அவனைப் பெரியோர்களுக்குமுன்பாக வரப்பண்ணும்.

௰எ நீதிமான்முதல் தன்னோடே வழக்காடுகிறான்; பிறகு அவனுக்கடுத்தவன் வந்தால் அவனையும் விசாரித்து ஆராய்கிறான்.

௰அ சீலிபோடுதல் வழக்குகளை ஓயப்பண்ணி, பலவான்களின் நடுவே சிக்கறுக்கும்.

௰௯ அரணான பட்டணத்தைப்பார்க்கிலும் அநியாயம் அநுபவித்த சகோதரன் கெட்டியாயிருக்கிறான்; அப்படிப்பட்ட வழக்குகள் கோட்டைத் தாழ்ப்பாளுக்குச் சரி.

உ௰ தன்தன் வாயின் கனியால் அவனவனுடைய வயிறு நிரப்பப்படும்; தன்தன் உதடுகளின் வரத்தினாலே அவனவன் திருப்தியாவான்.

உ௧ மரணமும், சீவனும் *நாவின் அதிகாரத்திலிருக்கும்; அதைச் சிநேகிக்கிறவன் அதின் கனியைப் புசிப்பான். *வாக்.௰௩.௩.

உஉ *பெண்சாதியைக் கண்டடைகிறவன் நற்காரியத்தைக் கண்டடைந்தான்; கர்த்தரால் ஒரு தயையை வரப்பற்றிக்கொண்டான். *வாக். ௰௯. ௰௪: ௩௧. ௰.

உ௩ தரித்திரன் கெஞ்சிப் பேசுகிறான்; ஐசுவரியவான் கடுமி மறுஉத்தரவு கொடுக்கிறான்.

உ௪ சிநேகிதருக்கு உண்மையான மனுஷன் உறவு கட்டப்படத்தக்கவன்; *சகோதரனிலும் அதிக தொந்தமாய்ச் சிநேகிப்பவருண்டு. *வாக். உஎ. ௰.

## ௰௯. அதிகாரம்.

மூடனாகிய *திரியாவர உதடனைப்பார்க்கிலும், தன் உத்தமத்தில் நடக்கிற தரித்திரனே வாசி. *வாக். உ௮. ௬.

உ அறிவில்லாத ஆத்துமா நல்லதல்ல, கால் துரிதக்காரன் தப்பிநடக்கிறான்.

௩ மனுஷனுடைய பயித்தியம் அவன் வழியைத் தாறுமாறாக்கும்; பிறகு கர்த்தருக்கு விரோதமாய் அவன் இருதயம் தாங்கலாயிருக்கும்.

௪ *ஆஸ்தி அநேகம் சிநேகிதரைச் சேர்க்கும்; தரித்திரனோ தன் சிநேகிதனால் நெகிழப்படுவான். *வாக். ௰௪. உ௰.

௫ *கள்ளச்சாட்சி ஆக்கினையில்லாதிருப்பதில்லை; பொய்களை ஊதுகிறவன் தப்பான். *உ மோ. ௰௯. ௰௮—உ௰.

௬ உதாரனுடைய முகத்திற்குமுன்பாக அநேகர் வருந்துகிறார்கள், கொடைகொடுக்கிறவனுக்கு எவனும் சிநேகிதன்.

௭ தரித்திரனுடைய சகோதரரெல்லாரும் அவனைப் பகைக்கிறார்களே; எத்தனை அதிகமாய் அவன் சிநேகிதர் அவனுக்குத் தூரமாவார்கள்; அவர்கள் கொடுத்த வார்த்தைகளைத் தொடருகிறான், ஆனால் அவைகள் வெறுமை.

௮ ஞானத்தைத் தேடிக்கொள்ளுகிறவன் தன் ஆத்துமாவைச் சிநேகிக்கிறான்; உணர்வைக் காக்கிறவனுக்கு நன்மை கிடைக்கும்.

௯ *கள்ளச்சாட்சிக்காரன் ஆக்கினைக்குத் தப்பான்; பொய்களை ஊதுகிறவன் அழிவான். *வாக். உ௧. உ௮.

௰ மூடனுக்குச் செல்வம் அடாது; பின்னை அடிமை பிரபுக்களை ஆளுவது எப்படி அடுக்கும்.

௰௧ மனுஷனுடைய புத்தி அவனைச் சாந்தனாக்கும்; மீறுதலைப் பாராமல்போகிறது அவனுக்கு மகிமை.

௰உ *இராசாவின் சினம் சிங்கத்தின் கெர்ச்சிப்புக்கும், அவன் தயை பூண்டுகள்மேல் பெய்யும் பனிக்கும் சமானம்.
*வாக். உ௰. உ.

௰௩ மூடனாகிய மகன் தன் தகப்பனுக்குச் சாலத்துக்கமாயிருக்கிறான்; *பெண்சாதியின் சண்டைகள் ஓயாத ஒழுக்கு.
*வாக். உ௭. ௰௫.

௰௪ வீடும், ஆஸ்தியும், பிதாக்கள் வைக்கும் சுதந்தரம்; *புத்தியுள்ள பெண்சாதியோ கர்த்தரால் கொடுக்கப்படுகிறாள்.
*வாக். ௰௮. உஉ.

௰௫ சோம்பல் தூங்கிவிழப்பண்ணும், *அசதியான ஆத்துமா பட்டினியாயிருக்கும். *வாக். ௰. ௪.

௰௬ கற்பனையைக் காக்கிறவன் தன் ஆத்துமாவைக் காக்கிறான்; அதின் வழிகளுக்கு அசட்டையாய் இருக்கிறவனோ சாவான்.

௰௭ *ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன்கொடுக்கிறான்; அவனுடைய உபகாரத்தை இவர் அவனுக்குப் பதில் கொடுப்பார். *மத். ௰. ௪உ. உ௫. ௩௰. லூக். ௬. ௩௮.

௰௮ நம்பிக்கை இருக்கும்மட்டும் *உன் மகனைத் தண்டி; ஆனால் அவனைக் கொல்ல உன் ஆத்துமாவை எழும்பவொட்டாதே.
*எபே. ௬. ௪.

௰௯ மகா உக்கிரமன் ஆக்கினை அடைவான்; நீ அவனைத் தப்பவிட்டாலோ இனி அப்புறம் அவனைத் தண்டிக்கலாம்.

உ௰ உன் கடைசி நாள்களில் நீ ஞானமுள்ளவனாயிருப்பதற்கு ஆலோசனையைக் கேட்டுப் போதகத்தை ஏற்றுக்கொள்.

உ௧ வெகு நினைவுகள் மனுஷனுடைய இருதயத்திலிருக்கும்; ஆனால் *கர்த்தரின் யோசனையே நிற்கும். *வாக். உ௧. ௩௰.

உஉ நன்மைசெய்ய மனுஷனுக்கிருக்கும் ஆசையே தயை; பொய்யுள்ள மனுஷனைப் பார்க்கிலும் தரித்திரன் வாசி.

உ௩ கர்த்தருக்குப் பயப்படுதல் மனுஷனைச் சீவனுக்குள்ளாக்கும், அவன் திருப்தி அடைந்தவனாய் இராத்தங்குவான்; பொல்

லாப்பு அவனை அணுகாது.

உச *சோம்பேறி தன் கையைக் கலத்திலே போட்டுவிட்டு, அதைத் தன் வாயண்டைக்குத் திரும்ப எடுக்காதிருக்கிறான். *வாக். உகூ. ௰௫.

உ௫ *சக்கந்தக்காரனை அடி, அப்போது பேதை விவேகமுள்ளவனாவான்; உணர்வுள்ளவனைக் கடிந்துகொள், அறிவை உணர்வான். *வாக். உக. ௰க.

உகூ வெட்கமும் இலச்சையும் உண்டாக்குகிற மகன் தகப்பனைப் பாழ்க்கடிக்கிறவனும், தாயைப் பறக்கடிக்கிறவனுமாயிருக்கிறான்.

உஎ என் மகனே, புத்தியைக் கேளாமல் விட்டுவிட்டாயாகில், அறிவின் வசனங்களைவிட்டு வழிதப்பத்தான் அப்படிச் செய்வாய்.

உஅ பேலியாளின் மனுஷனாகிய சாட்சிக்காரன் நியாயத்தை நிஸ்காரம்பண்ணுகிறான்; ஆகாதவர்களின் வாய் அக்கிரமத்தை விழுங்கும்.

உகூ சக்கந்தக்காரருக்கு நியாயத்தீர்ப்புகளும், மூடரின் முதுகுக்கு அடிகளும் ஆயத்தமாயிருக்கின்றன.

## உ௰. அதிகாரம்.

மதுபானம் சக்கந்தமுள்ளதும், லொட்டி அமளியுள்ளதுமாயிருக்கின்றன; அதிலே மயங்குகிற எவனும் ஞானியாவதில்லை.

உ இராசாவின் உறுக்குதல் சிங்கக்குட்டியின் கெர்ச்சிப்புக்குச் சரி; அவனுக்குக் கோபமுண்டாக்குகிறவன் தன் சிவனுக்குத் துரோகம் செய்கிறான்.

ங வழக்கை விலகியிருக்கிறது மனுஷனுக்குக் கனம்; ஆனால் பயித்தியக்காரன் எவனும் அதிலே கலந்துபோகிறான்.

ச சோம்பேறி குளிருகிறதென்று உழாதிருக்கிறான்; அறுப்பிலே வேண்டுமென்பான், அப்போது ஒன்றுமில்லை.

௫ மனுஷனுடைய இருதயத்திலிருக்கும் யோசனை ஆழமான தண்ணீர்கள்; உணர்வுள்ள மனுஷனோ அதை மொண்டெடுப்பான்.

கூ மனுஷரின் ஏராளத்தில் அவனவன் தன் தயையைக் கூறுகிறான்; ஆனால் நல்னுண்மையான மனுஷனைக் கண்டுபிடிப்பவன் யார்?

எ நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான்; அவனுக்குப் பிறகு *அவன் பிள்ளைகள் பாக்கியவான்கள். *சங். ௱௰உ. உ.

அ நியாயாசனத்தில் உளுக்காந்திருக்கிற இராசா தன் கண்களினால் சகல பொல்லாப்பையும் சிதறப்பண்ணுகிறான்.

கூ *என் இருதயத்தை நான் சுத்தமாக்கித் தீர்ந்தது; என் பாவமறத் துப்புரவானேனென்று சொல்பவன் யார்? *உரோ. எ. உ௰.

௰ *விதம்விதமான படிக்கல்லும், விதம்விதமான மரக்காலும் இரண்டும் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கும். *௫ மோ. உ௫. ௰ங, ௰ச.

௰க ஒரு பிள்ளையின் செய்கை சுத்தமும், செம்மையுமாயிருக்குமோவென்று அதின் கிரியைகளாலும் அறியப்படும்.

௰உ கேட்கிற காதும், காண்கிற கண்ணுமான இவ்விரண்டையும் கர்த்தர் உண்டாக்கினார்.

௰ங நீ ஏழையாகாதபடிக்குத் *தூக்கத்தைச் சிநேகியாதிரு; உன் கண்களைத் திற, அப்போது அப்பத்தால் திருப்தியாவாய். *வாக். கூ. கூ, ௰.

௰ச கொள்ளுகிறவன் ஆகாது ஆகாதென்கிறான்; கொண்டுபோனபின் மெய்ச்சிக்கொள்ளுகிறான்.

௰௫ பொன்னும், திரளான முத்துகளுமுண்டு; அறிவுள்ள உதடுகளோ விலையேறப்பெற்ற ஆபரணம்.

௰கூ *அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனுடைய வஸ்திரத்தை எடுத்துக்கொள்; பிறத்தியானுக்காக அவன் கையில் அடகு வாங்கு. *வாக். உஎ. ௰ங.

௰எ வஞ்சனை அப்பம் மனுஷனுக்கு இன்பம்; பிற்பாடோவெனில், அவன் வாய் பருக்கைக் கல்லுகளால் நிறையப்படும்.

௰அ நினைவுகள் யோசனைகளால் திடப்பட்டுப்போகும்; *நல்விவேகமாய் யுத்தம் பண்ணு. *வாக். உச. ௬.

௰௯ *தூற்றிக்கொண்டு திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குவான்; புத்தியில்லாத உதடனோடே கலவாதிரு. *வாக்.௰௧.௰௩.

௨௰ *தன் தகப்பனையும், தாயையும் தூஷணிக்கிறவனுடைய தீபம் காரிருட்டிலே அவிந்துபோகும். *உ மோ. ௨௧. ௰எ.

௨௧ துவக்கத்திலே தீவிரமாய்ப் பிடித்த சுதந்தரம் பிற்காலத்திலே ஆசீர்வாதமற்றிருக்கும்.

௨௨ *தீமைக்குச் சரிக்கட்டுவேனென்னாதே, கர்த்தருக்குக் காத்திரு; அவர் உனக்கு இரட்சிப்புண்டாக்குவார். *வாக். உச. ௨௯. உரோ. ௰௨. ௰௯.

௨௩ *விதம்விதமான படிக்கல் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கும்; கள்ளத்தராசு நல்லதல்ல. *௰. வச.

௨௪ கர்த்தராலே மனுஷனுடைய நடைகள் வாய்க்கும்; மனுஷன்தானே தன் வழியை உணர்வதேது?

௨௫ பரிசுத்தமானதை விழுங்கி, நியமங்களைப் பண்ணினபின் சிந்தித்துப்பார்க்கிறது மனுஷனுக்குக் கண்ணியாயிருக்கும்.

௨௬ ஞானமுள்ள இராசா ஆகாதவர்களைச் சிதறடித்து, அவர்கள்மேல் உருளையை உருளப்பண்ணுவான்.

௨எ மனுஷனுடைய ஆத்துமா கர்த்தர் தந்த தீபமாயிருந்து, வயிற்றின் உள்ளுக்குள்ளானவைகளை எல்லாம் ஆராயும்.

௨அ தயையும், உண்மையும் இராசாவைத் தற்காக்கும்; *தயையினாலே தன் ஆசனத்தை நிற்கப்பண்ணுவான். *வாக். ௰௯. ௰௨.

௨௯ வாலிபரின் அலங்காரம் அவர்கள் வீரியம்; *முதிர்ந்த வயதானவர்களின் கனம் அவர்கள் நரை. *வாக். ௰௯. ௩௧.

௩௰ காயமான தழும்புகளும், உள்வயிறுமட்டும் உறைக்கும் அடிகளும் பொல்லாதவனை அழுக்கறத் துடைக்கும்.

## ௨௧. அதிகாரம்.

இராசாவின் இருதயம் கர்த்தரின் கையிலே நீர்க்கால்களைப்போலிருக்கிறது; தமக்குச் சித்தமானவை எல்லாவற்றிற்கும் நேராக அதை வளைப்பார்.

௨ *மனுஷனுடைய வழி எல்லாம் அவன் பார்வைக்குச் செம்மையானது; ஆனால் கர்த்தர் இருதயங்களை நிறுக்கிறார். *வாக். ௰௯. ௨.

௩ பலியைப்பார்க்கிலும், நீதிநியாயஞ்செய்தலே கர்த்தருக்குப் பிரியம்.

௪ கண்களின் மேட்டிமையும், இருதய உப்புதலுமென்ற பொல்லாருடைய விளக்குப் பாவமே.

௫ சாக்கிரதையுள்ளவனுடைய நினைவுகள் பிரயோசனத்துக்கே, பதறுகிறவனெல்லாம் குறைச்சலுக்கே.

௬ கள்ளநாவினாலே பொக்கிஷங்களைச் சம்பாதிக்குதல் சாவைத் தேடுகிறவர்களுடைய பறக்கடிக்கப்படுகிற மாயை.

எ ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பு அவர்களைத் திடுக்கிடப்பண்ணப்போம்; ஏனெனில் நியாயம்செய்ய மனதில்லாதிருக்கிறார்கள்.

அ அப்படிக்கொத்த மனுஷனுடைய வழி மகா மாறுபாடும் வேற்றுமையுமாயிருக்கிறது; சுத்தவானுடைய கிரியையோ செம்மையாய் இருக்கிறது.

௯ சண்டைக்காரியாகிய பெண்சாதியோடே ஒரு வீட்டிலே கூடிக் கலந்திருப்பதைப்பார்க்கிலும், வீட்டின்மீதில் ஒரு மூலையிலே தங்கியிருக்கிறதே தாவிளை.

௰ ஆகாதவனுடைய ஆத்துமாபொல்லாப்பை இச்சிக்கும்; அவன் கண்களில் அவனுக்கடுத்தவனுக்கு இரக்கம் கிடையாது.

௰௧ *சக்கந்தக்காரனைத் தண்டிக்கும்போ

து பேதை ஞானமடைவான்; ஞானமுள்ளவனைப் போதித்தால் அறிவைக் கற்றடைவான். *வாக். ௰௯. ௨௫.

௰௨ ஆகாதவர்களைப் பராபரன் தீங்கிற் கவிழப்பண்ணுகையில், நீதிமான் ஆகாதவனுடைய வீட்டைச் சிந்தனையோடே பார்க்கிறான்.

௰௩ தன் செவியை ஏழையின் கூக்குரலுக்கு விலக அடைத்துக்கொள்ளுகிறவன் தானும் கேட்கப்படாமல் கூப்பிடுவான்.

௰௪ அந்தரங்கமான காணிக்கை கோபத்தையும், மடியிலுள்ள பரிதானம் வலு உக்கிரத்தையும் அமர்த்தும்.

௰௫ நியாயஞ்செய்வது நீதிமானுக்குச் சந்தோஷமும், அக்கிரமக்காரருக்கோ கலக்கமுமாயிருக்கிறது.

௰௬ புத்தியின் வழியைத் தப்பி நடக்கிற மனுஷன் செத்தவர்களின் கூட்டத்திலே தாபரிப்பான்.

௰௭ *சந்தோஷத்தைச் சிநேகிக்கிறவன் தாழ்ச்சியை அடையப்போகிற மனுஷன்; மதுபானத்தையும் தயிலத்தையும் சிநேகிக்கிறவன் ஐசுவரியவானாவதில்லை.
*லூக். ௰௬. ௰௯, ௰௪.

௰௮ *நீதிமானுக்கு மீட்பாக ஆகாதவனும், செம்மையானவனுக்குப் பதிலாகத் துரோகியும் இருப்பான். *வாக். ௰௧. ௮.

௰௯ *சண்டைக்காரியும், கோபக்காரியுமான பெண்சாதியோடே குடியிருப்பதைப்பார்க்கிலும் வனாந்தரத்திலே குடியிருப்பது நலம். *வாக். ௨௫. ௨௪.

௨௰ வேண்டுமென்ற பொக்கிஷமும், கொழுப்பும் ஞானமுள்ளவனுடைய வாசஸ்தலத்திலுண்டு; பயித்தியக்காரனோ அதை விழுங்கிவிடுகிறான்.

௨௧ நீதியையும், தயையையும் பின்தொடருகிறவன் சீவனையும், நீதியையும், மகிமையையும் கண்டடைவான்.

௨௨ வீரியவான்களின் பட்டணத்தை ஞானமுள்ளவன் ஏறிப்பிடித்து, அது நம்பியிருந்த அரணை இடிக்கிறான்.

௨௩ தன் வாயையும், தன் நாவையும் காக்கிறவன் தன் ஆத்துமாவை இடுக்கண்களுக்கு விலக்கமாய்க் காக்கிறான்.

௨௪ அகந்தையான சினத்தோடே எல்லாஞ்செய்கிற இடும்புள்ள அகந்தைக்காரரின் பேர் ஆகாமியர்.

௨௫ சோம்பேறியின் இச்சை அவனைச் சாகப்பண்ணும்; ஏனெனில் அவன் கைகள் வேலைசெய்யமாட்டோமென்கின்றன.

௨௬ அவன் நாள்தோறும் இச்சித்துக் கொண்டே இருக்கிறான்; நீதிமானோ பிசினித்தனம்பண்ணாமல் கொடுப்பான்.

௨௭ *ஆகாதவர்களின் பலி அருவருப்பானது, அவன் அதைத் தீவினையோடே செலுத்தினாலோ எத்தனை அதிகம்?
*ஏசா. ௧. ௰௧.

௨௮ பொய்ச்சாட்சிக்காரன் கெட்டுப்போவான்; செவிகொடுக்கிற மனுஷனோ என்றைக்கும் பேசத்தக்கவன்.

௨௯ ஆகாத மனுஷன் தன் முகத்தை அழுத்தமாக்குகிறான்; செம்மையானவனோ தன் வழியை உறுதிபண்ணுகிறான்.

௩௰ கர்த்தருக்கு எதிரான ஞானமுமில்லை, உணர்வுமில்லை, ஆலோசனையுமில்லை.

௩௧ குதிரை யுத்தநாளுக்கு ஆயத்தம்பண்ணப்படும்; ஆனால் இரட்சித்தல் கர்த்தருடையது.

## ௨௨. அதிகாரம்.

திரளான ஐசுவரியத்தைப்பார்க்கிலும், *நற்கீர்த்தியே தெரிந்துகொள்ளப்படத்தக்கது; வெள்ளியையும் பொன்னையும்பார்க்கிலும் தயையே நலம். *பிர. ௭. ௧.

௨ *ஐசுவரியவானும் தரித்திரனும், ஒருவருக்கொருவர் எதிர்ப்படுகிறார்கள்; அவர்களனைவரையும் உண்டாக்கினவர் கர்த்தர்.
*வாக். ௨௭. ௰௨.

௩ *விவேகமுள்ளவன் தீங்கைக்கண்டு ம

றைகிறான்; பேதைகளோ நெடுகப்போய்ச் சேதமடைகிறார்கள். *வாக். உசு. ௰௬.

௪ தாழ்மைக்கும், கர்த்தருக்குப் பயப்படுதலுக்கும் வரும்பலன் ஐசுவரியமும், மகிமையும், ஜீவனுந்தானே.

௫ திரியாவரனுடைய வழியில் முள்ளுகளும், கண்ணிகளும் இருக்கும்; தன் ஆத்துமாவைக் காக்கிறவன் அவைகளுக்குத் தூரமாய் விலகிப்போவான்.

௬ வாலிபன் நடக்கவேண்டிய வழியிலே அவனை உட்படுத்து; அப்போது அவன் கிழவனாயும் அதை விடாதிருப்பான்.

௭ ஐசுவரியவான் தரித்திரரை ஆளுகிறான்; கடன்வாங்கினவன் கடன்கொடுத்த மனுஷனுக்கு அடிமை.

௮ அநியாயத்தை விதைக்கிறவன் வருத்தத்தை அறுப்பான்; அவனுடைய உக்கிரத்தின் மிலாறு ஒழியும்.

௯ நற்கண்ணனே ஆசீர்வதிக்கப்படுவான்; ஏனெனில் தன் அப்பத்தில் ஏழைக்குக் கொடுக்கிறான்.

௰ சக்கந்தக்காரனைத் துரத்திவிடு; அப்போது வாது நீங்கி, வழக்கும் கனவீனமும் ஓய்ந்துபோம்.

௰௧ *சுத்த இருதயத்தைச் சிநேகிக்கிறவனுடைய உதடுகள் இன்பமானவைகள்; இராசா அவன் சிநேகிதன். *சங். ௱௧. ௬.

௰௨ கர்த்தருடைய கண்கள் அறிவைத் தற்காக்கும்; துரோகிகளின் வார்த்தைகளையோ அவர் தடுமாற்றமாக்குகிறார்.

௰௩ *வெளியிலே சிங்கமிருக்குமென்றும், வீதிகளில் கொலையுண்பேனென்றும் சோம்பேறி சொல்லுகிறான். *வாக். உசு. ௰௩.

௰௪ *பரஸ்திரிகளின் வாய் ஆழமான படுகுழி; கர்த்தருடைய சினத்துக்கு ஏதுவானவன் அதிலே விழுகிறான். *வாக். உ௩. உ௭.

௰௫ பயித்தியம் வாலிபன் நெஞ்சுடனே ஒட்டியிருக்கும்; அதைத் தண்டிப்பின் மிலாறு அவனைவிட்டு அகற்றும்.

௰௬ தனக்கு அதிகம் உண்டாகத் தரித்திரனை ஒடுக்குகிறவன் குறைச்சலுண்டாகவே ஐசுவரியவானுக்குக் கொடுப்பான்.

௰௭ ¶ உன் செவியைச் சாய்த்து, ஞானிகளின் வார்த்தைகளைக் கேட்டு, உன் இருதயத்தை என் அறிவின்மேல் வை.

௰௮ ஏனெனில் நீ அவைகளை உன் உள்ளத்திலே காத்தால் இன்பமாயிருக்கும்; அவைகள் உன் உதடுகளின்மேல் ஏகமாய் நிலைத்திருக்கும்.

௰௯ உன் நம்பிக்கை கர்த்தரின்மேல் இருப்பதற்காக உனக்கு ஆம், உனக்குத்தானே இன்றைத்தினம் அவைகளைத் தெரியப்படுத்துகிறேன்.

உ௰ உனக்குச் சத்தியவார்த்தைகளின் நிதானத்தைத் தெரியக்காட்டவும், நீ உன்னை அனுப்பினவர்களுக்குச் சத்தியவார்த்தைகளைக் கொண்டுபோய் மறுமொழி சொல்லவுமாக,

உ௧ உனக்கு நான் ஆலோசனைகளிலும், அறிவிலும் மகா பிரதானமானவைகளை எழுதினதில்லையோ?

உ௨ ¶ ஏழையை அவன் ஏழையானபடியினாலே கொள்ளையிடாதே; சிறுமையானவனை வாசலில் நொறுக்காதே.

உ௩ *ஏனெனில் கர்த்தர் அவர்கள் வழக்கை வழக்காடி, அவர்களைக் கொள்ளையிடுகிறவர்களின் ஆத்துமாவைக் கொள்ளையிடுவார். *உ மோ. உ௨. உ௨, உ௩.

உ௪ ¶ கோபக்காரனுக்குத் தோழனாகாதே; உக்கிரமுள்ள மனுஷனோடே நடவாதே.

உ௫ நீ அவன் வழிகளைப் படிக்காமலும், உன் ஆத்துமாவுக்குக் கண்ணியை வருவிக்காமலும் இருக்கத்தானே.

உ௬ ¶ *கைபோட்டுக் கடன்களுக்காகப் பிணைப்படுகிறவர்களில் ஒருவனாயிராதே. *வாக். ௰௧. ௰௫: ௰௭. ௰௮.

உ௭ செலுத்த உனக்கில்லாதிருந்தால், உன் கீழிருக்கும் உன் மெத்தையை அவர்கள் ஏன் எடுத்துக்கொள்ளவேண்டும்.

உ௮ *உன் பிதாக்கள் உண்டுபண்ணின பூ

ருவ எல்லையை ஒத்திக்கட்டாதே.
*வாக். ௨௩. ௰. ௫ மோ. ௨௭. ௰௭.

௨௯ ¶ தன் கிரியையில் சுறுசுறுப்புள்ளவனைக் கண்டாயோ? அவன் நீசருக்குமுன்பாக நில்லாமல் இராசாக்களுக்குமுன்பாக நிற்பான்.

## ௨௩. அதிகாரம்.

நீ ஒரு துரையோடே அசனம்பண்ண உட்கார்ந்தால், உனக்குமுன்பாக இருக்கிறவன் யாரென்று நற்சிந்தையாயிரு.

௨ நீ போசனப்பிரியனாயிருந்தால், உன் தொண்டையில் கத்தியை வைத்திரு.

௩ அவனுடைய உருசிவர்க்கங்களை இச்சியாதே; ஏனெனில் அது கள்ளப்போசனம்.

௪ ¶ *ஐசுவரியவானாகவேண்டுமென்று உழைக்காதே; அதற்கான உன்னுடைய விருனைவை விட்டுவிடு. *௧ தீமோ. ௬. ௯.

௫ உன் கண்களை அதின்மேல் பறக்க விடுவாயோ? அது இல்லாதேபோகிறதே, ஏனெனில் அது தனக்குக் கழுகைப்போல செட்டைகளை உண்டுபண்ணவேபண்ணி ஆகாயமாய்ப் பறந்துபோம்.

௬ வன்கண்ணனுடைய அப்பத்தைப் புசியாமலும், அவன் உருசிவர்க்கங்களை இச்சியாமலும் இரு.

௭ ஏனெனில் தன் மனதில் எப்படிக்கொத்த சிந்தையாயிருக்கிறானோ அப்படிக்கொத்தவனாய் அவன் உன்னுடனே புசித்துக்குடி என்பான்; அவன் இருதயமோ உன்னோடிராது.

௮ நீ சாப்பிட்ட உன் துணிக்கையை வாந்திபண்ணி, உன் இன்பவார்த்தைகளை இழந்துபோவாய்.

௯ ¶ மூடனுடைய செவிகள்கேட்கப் பேசாதே; ஏனெனில் உன் வசனங்களின் புத்தியை அசட்டைபண்ணுவான்.

௰ *பூருவ எல்லையை ஒத்திக்கட்டாமலும், திக்கற்றவர்களின் நிலங்களில் உட்படாமலுமிரு. *வாக். ௨௨. ௨௮.

௰௧ ஏனெனில் அவர்களை மீட்பவர் வல்லவர்; இவர் அவர்கள் வழக்கை உன்னோடே வழக்காடுவார்.

௰௨ உன் இருதயத்தைக் கடிந்துகொள்ளுதலுக்கும், உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் உள்ளாக்கு.

௰௩ *வாலிபனைத் தண்டியாமலே இராதே; ஏனெனில் நீ மிலாற்றினால் அவனை அடிக்கிறதினாலே சாகான். *வாக். ௨௯. ௰௫.

௰௪ நீ மிலாற்றினாலே அவனை அடிக்கையால் அவன் ஆத்துமாவை நரகத்திற்குத் தப்புவிப்பாய்.

௰௫ *என் மகனே, உன் இருதயம் ஞானமடைந்தால், என்னிலே என் இருதயமும் மகிழும். *வாக். ௨௭. ௰௧.

௰௬ உன் உதடுகள் நிதானங்களைப் பேசினால் என் உள்ளிந்திரியங்களும் களிகூரும்.

௰௭ உன் இருதயம் பாவிகள்மேல் பொறாமை அடையாதிருப்பதாக; அதைவிட நாள்தோறும் கர்த்தருக்குப் பயப்படுதலிலே இரு.

௰௮ ஏனெனில் பிற்காலம் வரும்; உன் பார்த்துக்கொள்ளுதல் அவத்தமாவதில்லை.

௰௯ ¶ என் மகனே, நீ கேட்டு ஞானமடைந்து, உன் இருதயத்தை வழிக்குள்ளாக்கிவிடு.

௨௰ *மதுக் குடியரிலும், மாம்சப் பெருந்தீனிக்காரரிலும் ஒருவனாயிராதே.
*லூக். ௨௧. ௩௪. உரோ. ௰௩. ௰௩.

௨௧ ஏனெனில் குடியனும், பெருந்தீனிக்காரனுமானவன் தரித்திரனாவான்; தூக்கல் கந்தைகளைத் தரிப்பிக்கும்.

௨௨ ¶ நீ உன்னைப் பெற்ற உன் தகப்பன் சொல்கேட்டு, முதுமையாகிய உன் தாயை அசட்டைபண்ணாதிரு.

௨௩ சத்தியத்தையும், ஞானம் புத்தி உணர்வையும்கொள்: அவைகளை விற்காதே.

௨௪ நீதிமானுடைய தகப்பன் மிகவும் களிகூருவான்; ஞானியைப் பெற்றவன் அவனாலே மகிழ்வான்.

உரு உன் தகப்பனும் உன் தாயும் மகிழக்கடவார்கள்; உன்னைப் பெற்றவள் களிகூருவாளாக.

உசு ¶ என் மகனே, உன் இருதயத்தை எனக்குத்தா; உன் கண்கள் என் வழிகளின் மேல் பிரியமாவதாக.

உஎ ஏனெனில் வேசி *ஆழமான படுகுழியும், அந்நிய ஸ்திரி இடுக்குத்துரவுமாய் இருக்கிறாள். *வாக். உஉ. ௰௪.

உஅ அவளும் கொள்ளைக்காரனைப்போலப் பதிவிருந்து, மனுஷரில் பாதகரை அதிகமாக்குகிறாள்.

உகூ ¶ யாருக்கு ஐயோ? யாருக்கு ஐயோ? யாருக்குச் சண்டைகள்? யாருக்கு விசாரம்? யாருக்கு முகாந்தரமில்லாத காயங்கள்? யாருக்கு இரத்தங்கலந்த கண்களுமுண்டாயிருக்கும்?

௩௰ மது இருக்கும் இடத்திலே தங்கித்தரிக்கிறவர்களுக்கும், லொட்டியைத் தேடப்போகிறவர்களுக்கும்தானே.

௩௧ நீ மது நல்வர்ணமென்றும், பாத்திரத்திலே தன் உருவைக் காண்பிக்குமென்றும், மெதுவாய் இறங்குமென்றும் பாராதே.

௩௨ அதின்பிறகு அது பாம்பைப்போலக் கடித்து, கட்டுவிரியனைப்போலத் தீண்டும்.

௩௩ உன் கண்கள் பரஸ்திரிகளை நோக்கி, உன் இருதயம் மாறுபாடுகளைப் பேசும்.

௩௪ நீ நடுக்கடலிலே சயனித்திருக்கிறவனைப்போலும், பாய்மரத்தட்டிலே படுத்திருக்கிறவனைப்போலும் இருப்பாய்.

௩௫ என்னை அடித்தார்கள்; எனக்கு நோவில்லை; என்னைக் குட்டினார்கள்; எனக்குச் சுரணையில்லை; *நான் அதை அப்புறம் தொடர்ந்து தேட எப்போது விழிப்பேனென்பாய். *ஏசா. ௫௬. ௰உ.

## உச. அதிகாரம்.

பொல்லாத *மனுஷர்மேல் பொறாமையாகாதே; அவர்களோடிருக்க ஆசையுமாய் இராதே. *வாக். உ௩. ௰எ.

உ ஏனெனில், அவர்கள் இருதயம் பாழ்க்கடிப்பை யோசித்து, *அவர்கள் உதடுகள் தீவினையைப் பேசும். *சங். ௰. எ.

௩ வீடு ஞானத்தால் கட்டப்பட்டு, விவேகத்தால் நிலைநிறுத்தப்படும்.

௪ அறிவினாலே அறைகள் சகலவித அருமையும் விருப்பமுமான ஆஸ்தியால் நிரப்பப்படும்.

௫ ¶ ஞானமுள்ள மனுஷன் பெலனுள்ளவன்; அறிவுள்ள மனுஷன் தன் திராணியை உரமாக்கிக்கொள்ளுகிறான்.

௬ ஏனெனில் நல்விவேகத்தாலே நீ உனக்கு வாய்க்க யுத்தம்பண்ணுவாயாக; அநேகம் ஆலோசனைக்காரரால் செயமாகும்.

எ ¶ *மூடனுக்கு ஞானமெல்லாம் எட்டாத உயர்ச்சியாய் இருக்கிறது; வாசலில் தன் வாயைத் திறவான். *வாக். ௰௪. ௰௪; உ௰. ௰௩.

அ தீங்குசெய்ய நினைக்கிறவனைத் தீவினைக்காரன் என்பார்கள்.

௯ பயித்தியச்செயல் பாவம்தான்; சரசக்காரனே மனுஷருக்கு அருவருப்பானவன்.

௰ நெருக்கத்தின் நாளில் இளக்கரித்துப்போனாயானால் உன் திராணி கொஞ்சமாயிருக்கும்.

௰௧ ¶ *மரணத்திற்கு இழுப்புண்கிறவர்களையும், கொலைக்குக் கொண்டுபோகப்படுகிறவர்களையும் அதற்கு விலக்க உன்னாலே கூடுமானால் அவர்களை விடுவி. *சங்.அஉ.௪.

௰உ இதோ அவனை அறியோமென்றாயாகில், *இருதயங்களை நிறுக்கிறவர் அதை உணராரோ? உன் ஆத்துமாவைக் கவனிக்கிறவர் அதை அறியாரோ? அவர் மனுஷனுக்கு அவன் செய்கைக்குத்தக்கதாய்ச் சரிக்கட்டாரோ? *எரே. ௰எ. ௰.

௰௩ ¶ என் மகனே, தேனைச்சாப்பிடு; ஏனெனில் அது நல்லது; தேன்கூட்டொழுகல் உன் வாய்க்கு இன்பருசியாய் இருக்கும்.

௰௪ அப்படியே *ஞானத்தை உன் ஆத்துமாவுக்கானதென்று அறிந்துகொள்; அதைக்

கண்டுபிடித்தால் அது பிற்காலத்தில் உதவும்; உன் பார்த்துக்கொள்ளுதல் அவத்தமாவதுமில்லை. *சங். ௰௯. ௰௧.

௰௫ நீ ஆகாதவனாய் நீதிமானின் வாசஸ்தலத்திற்குப் பதிவிராதே; அவன் படுக்கையைப் பாழ்க்கடிக்காதே.

௰௬ ஏனெனில் *நீதிமான் ஏழுதரம் விழுந்தும் எழுந்திருப்பான்: ஆகாதவர்களோ தீங்கிலே இடறுண்டு கிடப்பார்கள்.
*யோபு. ௫. ௰௯. சங். ௩௪. ௨௰.

௰௭ *உன் சத்துரு விழுகிறபோது சந்தோஷியாதே; அவன் இடறுண்டு போகிறபோது உன் இருதயம் களிகூராதிருப்பதாக.
*யோபு. ௩௧. ௨௯.

௰௮ கர்த்தர் கண்டு, அது அவர் பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கையால், அவர் தமது கோபத்தை அவனைவிட்டுத் திருப்பிவிடாதபடிக்குத்தானே.

௰௯ *பொல்லாதவர்கள்மேல் எரிச்சலாகாதிரு; ஆகாதவர்கள்மேல் பொறுமையாகாதிரு. *சங். ௩௭. ௧.

௨௰ ஏனெனில் பொல்லாதவனுக்கு நல்முடிவில்லை; *ஆகாதவர்களின் விளக்கு அவியும். *வாக். ௰௩. ௯.

௨௧ ¶ என் மகனே, *கர்த்தருக்கும் இராசாவுக்கும் பயந்து நட; பின்னபேதகரோடே கலவாதிரு. *௧ பே. ௨. ௰௭.

௨௨ ஏனெனில் அசுப்பிலே இவர்களுடைய ஆபத்து எழும்பும்; இவர்கள் இருவரின் சங்காரத்தை அறிந்தவன் யார்?

௨௩ ¶ பின்னையும்ஞானமுள்ளவர்களுக்குப் புத்திமதிகள் என்னவெனில், நியாயத்திலே முகதாட்சிணியம் நல்லதல்ல.

௨௪ ஆகாதவனுக்கு நீதிமானென்று சொல்லுகிறவனைச் சனங்கள் சபிப்பார்கள்; சனசதனங்கள் அவனை வெறுப்பார்கள்.

௨௫ அவனைக் கடிந்துகொள்ளுகிறவர்களின்மேல் பிரியமுண்டாம்; இவர்கள்மேல் நன்மையின் ஆசீர்வாதம் வரும்.

௨௬ ¶ செம்மையான மறுஉத்தரவு சொல்லுகிறவன் உதடுகளை முத்தஞ்செய்கிறவனுக்குச் சரி.

௨௭ நீ வெளியிலுள்ள உன் வேலையைச் சேகரமாக்கி, வயலிலுள்ள அதை உனக்குப் பணிக்காய் வை; பிறகு உன் வீட்டைக் கட்டு.

௨௮ ¶ வீணாய் நீ உனக்கடுத்தவனுக்கு விரோதமாகச் சாட்சியாகாதிரு; உன் உதடுகளால் நீ பயிற்றுவிக்காமலும் இரு.

௨௯ *எனக்கு எப்படிச் செய்தானோ அப்படி அவனுக்குச் செய்வேன், அவனவனுக்கு அவன் கிரியைக்குத்தக்கதாய்ச் சரிக்கட்டுவேனென்னாதே. *வாக். ௨௰. ௨௨.

௩௰ ¶ நான் சோம்பற்காரன் வயலையும், மதியில்லா மனுஷனுடைய திராட்சத்தோட்டத்தையும் கடந்துவந்தேன்.

௩௧ இதோ அவை எல்லாம் முட்காடுமாய் அதின் தரை காஞ்சொறிகளால் மூடப்பட்டு, அதின் கற்சுவர் இடிந்ததுமாய்க் கிடந்தன.

௩௨ நான் அதைக்கண்டு, என் சிந்தையை அதின்மேல் வைத்து, அதைப்பார்த்துப் புத்தியைக் கற்றுக்கொண்டேன்.

௩௩ *இன்னம் கொஞ்சம் தூக்கங்களும் இன்னம் கொஞ்சம் உறக்கங்களும், சயனிப்புக்கு இன்னம் கொஞ்சம் கைகட்டிக்கொள்ளுதலுமோ? *வாக். ௬. ௰, ௰௧.

௩௪ அப்படியானால் உன் தரித்திரம் வழிப்போக்கனைப்போலவும், உன் குறைச்சல்கள் ஆயுதமணிந்தவனைப்போலவும் வரும்.

## ௨௫. அதிகாரம்.

இவைகளும் சாலோமோனின் வாக்கியங்கள்; இவைகளை யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின் மனுஷர் பேர்த்தெழுதிச் சேர்த்தார்கள்.

௨ காரியத்தைப் புதைபொருளாக்குதல் பராபரனுடைய மேன்மை: காரியத்தை ஆராய்தல் இராசாக்களுடைய மேன்மை.

௩ வானத்தின் உயரத்திற்கும், பூமியின் ஆ

முத்திற்கும், இராசாக்களின் இருதயங்களுக்கும் ஆராய்தலில்லை.

ச வெள்ளியில் இருக்கிற மஷ்டுகளை நீக்கிவிடு, அப்போது தட்டானாலே நல்ல உடைமை பிறக்கும்.

ரு இராசாவுக்குமுன்பாக இருக்கிற ஆகாதவனை நீக்கிவிடு; அப்போது அவன் ஆசனம் *நீதியாலே நிலைக்கும். *வாக். ௰௬.௰௨.

௬ ¶ இராசாவுக்குமுன்பாகச் சிலாக்கியம் பண்ணாதே; பெரியோர்களின் இடத்திலும் நில்லாதே.

எ *ஏனெனில் உன் கண்கள் பார்த்துக்கொண்டிருந்த பிரபுக்குமுன்பாக அவர் உன்னைத் தாழ்த்துவதைப்பார்க்கிலும், இங்கே ஏறிவா என்று உன்னோடே சொல்வதே நல்லது. *லூக். ௰௪. ௮-௰௧.

அ ¶ கடைசியில் உனக்கு அடுத்தவன் உன்னை வெட்கப்படுத்தும்போது, நீ என்ன செய்யலாமென்று நினையாதபடிக்கு வழக்காடத் தீவிரமாய்ப் புறப்படாதிரு.

௯ நீ உனக்கு அடுத்தவனோடே உன் வழக்கை வழக்காடியும் மற்றவனுடைய இரகசியத்தை வெளியாக்காதே.

௰ கேட்கிறவன் உன்னை, உன் அவதூறு திரும்பாதபடியாய் நிந்திக்காமலிருக்கத்தானே.

௰௧ ¶ தன்தன் சமயத்திலே *சொல்லப்பட்டவார்த்தை வெள்ளித்தட்டுகளில் வைக்கப்பட்ட பொன்னிறக் கொஞ்சிப்பழங்களுக்கு ஒப்பானது. வாக். ௰௫. ௨௩.

௰௨ கேட்கிற செவிக்கி ஞானமாய்க் கடிந்துகொண்டு சொல்லுகிறவன் பொற்கடுக்கனுக்கும், அபரஞ்சிப் பூஷணத்திற்கும் சரி.

௰௩ கோடைகாலிலே உறைந்த மழையின் குளிர்ச்சி எப்படியிருக்கிறதோ, அப்படி உண்மையுள்ள தாதுபதி தன்னை அனுப்பினவர்களுக்கிருந்து தன் எசமானன்களின் ஆத்துமாவைக் குளிரப்பண்ணுகிறான்.

௰௪ கள்ள வாக்குத்தத்தங்களைப்பண்ணிப் பெருமைபாராட்டுகிற மனுஷன் மழையில்லாத மேகங்களுக்கும் காற்றுக்கும் சரி.

௰௫ நீண்ட சாந்தத்தினால் பிரபு சம்மதமாக்கப்படுவான்; *மெத்தனவான நாவு எலும்பை நொறுக்கும். *வாக். ௰௫. ௧.

௰௬ தேனைக் கண்டுபிடித்தாயானால், நீ அதினாலே திருப்தியாகி, அதை வாந்திபண்ணாதபடிக்கு உனக்குப் போந்தமட்டாய்ச் சாப்பிடு.

௰௭ உனக்கடுத்தவன் உன்மேல் வெறுப்பாகி, உன்னைப் பகையாதபடிக்கு, உன் காலை அவன் வீட்டில் மிச்சமாய்ப் போகவொட்டாதிரு.

௰௮ தனக்கடுத்தவன்மேல் பொய்ச்சாட்சி சொல்லுகிற மனுஷன் சுத்தியலுக்கும், பட்டையத்துக்கும், கூர்மையான அம்புக்கும் சரி.

௰௯ இடுக்கணின்நாளிலே துரோகியை நம்புதல் உடைந்த பல்லுக்கும், தள்ளாடுகிற காலுக்கும் சரி.

௨௰ தீங்கநுபவிக்கிற இருதயத்திற்குப் பாட்டுகளைப் பாடுகிறவன் குளிர்நாளிலே வஸ்திரத்தைக் களைகிறவனைப்போலவும், வெடியுப்பின்மேல் வார்த்த காடியைப் போலவும் இருக்கிறான்.

௨௧ உன் *பகைஞனுக்குப் பசியிருந்தால் அவனுக்கு அப்பம் சாப்பிடக்கொடு; அவனுக்குத் தாகமிருந்தால் அவனுக்குத் தண்ணீர் குடிக்கக்கொடு. *மத். ரு. ௪௪. உரோ. ௰௨. ௨௰, ௨௧.

௨௨ ஏனெனில் அப்படி அவன் தலையின் மீதில் நீ எரிகிற கரிகளைக் குவிப்பாய்; கர்த்தரும் உனக்கு இடளிப்பார்.

௨௩ வாடைக்காற்று மலழையையும் புறணி நாவு கோபமுகத்தையும் பிறப்பிக்கும்.

௨௪ *சண்டைக்காரியோடேகூட ஓர் வீட்டிலே குடியிருப்பதைப்பார்க்கிலும், வீட்டின்மீதில் ஒரு மூலையில் தங்குகிறதே நலம். *வாக். ௨௧. ௯.

௨௫ தூரதேசத்திலிருந்து வருகிற நற்

செய்தி விடாய்த்த ஆத்துமாவிற்குக் கிடைக்கும் குளிர்ந்த தண்ணீருக்குச் சரி.

உகூ ஆகாதவனுக்குமுன்பாகத் தள்ளாடுகிற நீதிமான் கலங்கின ஊற்றுக்கும், கெட்டுப்போன சுனைக்கும் சரி.

உஎ மிச்சமாய்த் தேனைச் சாப்பிடுகிறது நல்லதல்ல; ஞானகாரியங்களின் மகிமையை ஆராய்கிறதோ மகிமை.

உஅ தன் ஆவியை அடக்காத மனுஷன் மதிலில்லாத இடிதல் பட்டணத்துக்குச் சரி.

## உகூ. அதிகாரம்.

வசந்தகாலத்திலே உறைந்த மழையும், அறுப்பிலே மாரியும் ஒவ்வாததுபோல மூடனுக்கு மகிமையும் ஒவ்வாதிருக்கும்.

உ குருவி அலைந்து, காட்டுப்புறா பறந்து போகிறதுபோலே முகாந்தரமில்லாமல் இட்ட சாபம் வராதேபோகிறது.

ங குதிரைக்குச் சவுக்கும், கழுதைக்குக் கடிவாளமும், மூடரின் முதுகுக்கு மிலாறும் ஆனது.

ச *நீயும் மூடனுக்கு ஒப்பாகாதபடிக்கு, அவன் பயித்தியத்தின்படி அவனுக்கு மறுஉத்தரவு சொல்லாதிரு. *வாக். ம. மக.

ரு மூடன் தன் பார்வைக்கு ஞானியாயிராதபடிக்கு, அவன் பயித்தியத்தின்படி அவனுக்கு மறுஉத்தரவு சொல்லாதிரு.

சு மூடன் கையிலே செய்தி அனுப்புகிறவன் தன் கால்களைத் தறித்து நஷ்டத்தைக் குடிக்கிறான்.

எ நொண்டியின் கால்கள் குந்திக்குந்தி நடக்குமாப்போலே மூடரின் வாயிலுள்ள உவமைச்சொல்லும் குந்தும்.

அ மூடனுக்குக் கனம்கொடுக்கிறவன் கவணிலே கல்லைவைக்கிறவனைப்போல இருக்கிறான்.

கூ மூடர்வாயிலுள்ள பழமொழி வெறியன் கையிலே அகப்பட்ட முள்.

ம பெலத்தவன் அனைவரையும் நோகப்பண்ணி மூடனையும் வேலைகொள்ளுகிறான்; மீறிநடக்கிறவர்களையும் வேலைகொள்ளுகிறான்.

மக *தன் பயித்தியத்திலே மறுபடியும் உள்ளாகிற மூடன் தான் கக்கினதற்குத் திரும்புகிற நாயைப்போல இருக்கிறவன். *உ பே. உ. உஉ.

மஉ *தன் பார்வைக்கு ஞானியாகிய மனுஷனைக் கண்டாயே, அவனைப்பார்க்கிலும் மூடன்மேலே அதிக நம்பிக்கையிருக்கலாம். *உரோ. மஉ. மஎ.

மங ¶ வழியிலே துஷ்ட சிங்கம் இருக்குமென்றும், நடுவீதிகளிலே சிங்கம் இருக்குமென்றும் சோம்பேறி சொல்லுவான்.* *வாக். உஉ. மங.

மச கதவு தன் முளையிலே ஆடுமாப்போலே, சோம்பேறி தன் படுக்கையிலிருக்கிறான்.

மரு *சோம்பேறி தன் கையைக் கலத்திலே போட்டுவிட்டு, அதைத் தன் வாய்க்குத் திரும்ப எடுக்க விடாய்க்கிறான். *வாக். மகூ. உச.

மசு புத்தியுள்ள மறுஉத்தரவு சொல்லுகிற ஏழுபேரைப்பார்க்கிலும் சோம்பேறி தன் பார்வைக்கு ஞானமுள்ளவன்.

மஎ ¶ வழிநடந்து, தனக்கு அடாத வழக்குக்கு உள்பட்டு, உக்கிரமாகிறவன், ஒரு நாயின் காதுகளைப் பிடிக்கிறவனைப்போல இருக்கிறான்.

மஅ விளையாடுகிறவனைப்போலே காண்பித்து, நெருப்புகளையும், அம்புகளையும், சாவுக்கினமானவைகளையும் எறிகிறவன் எப்படியிருக்கிறானோ,

மகூ அப்படியே தனக்கடுத்தவனை வஞ்சித்து, நான் பரியாசமல்லவோ பண்ணினேனென்று சொல்லுகிற மனுஷனும் இருக்கிறான்.

உம ¶ விறகில்லாமல் நெருப்பு அவியும்; பின்புறணிக்காரன் இல்லாமல் சண்டை அடங்கும்.

உக கரிகள் தழலுக்கும், விறகு நெருப்புக்

கும் இனமானதுபோல, வழக்குக்காரன் சண்டையை மூட்டுகிறதற்கு இனமானவன்.

உஉ *பின்புறணிக்காரன் வார்த்தைகள் பரிபாசச்சொற்களைப்போலிருக்கும்; ஆனால் அவைகள் வயிற்றுக்குள்ளிறங்கும்.
*வாக். ௰அ. அ.

உங ¶ இருதயம் பொல்லாததாகியும், நேசத்தைக் காண்பிக்கிற உதடுகள் கலப்பிடமான வெள்ளிப்பூச்சு மூடிய ஓட்டுக்குச் சரி.

உச பகைஞன் தன் உதடுகளாலே வேறே காண்பித்தும் தன் உள்ளத்திலே கபடம் வைக்கிறான்.

உரு அவன் தன் சத்தத்தைத் தயையாக்கினாலும் அவனை நம்பாதிரு; ஏனெனில் ஏழு அருவருப்புகள் அவன் இருதயத்திலிருக்கும்.

உசு ¶ அவன் பகை கபடமாய் மறைக்கப்பட்டிருக்கிறது; ஆனால் சபையிலே அவன் பொல்லாங்கு வெளிப்படும்.

உஎ *படுகுழி வெட்டுகிறவன் அதிலே விழுவான்; கல்லைப் புரட்டுகிறவன்மேலே தானே அது திரும்பும். *சங். எ. ௰சு. பிர. ௰. அ.

உஅ கள்ளநா தன்னாலே உபத்திரவப்படுகிறவர்களைப் பகைக்கும்; இச்சகவாய் இடறுதலை உண்டுபண்ணும்.

## உஎ. அதிகாரம்.

நாளைத்தினத்தைத்தொட்டுப் *பெருமை பாராட்டாதே; ஏனெனில் ஒருநாள் பிறப்பிப்பதை அறியாய். *யாக். ச. ௰ங, ௰ச.

உ உன் வாயல்ல பிறத்தியானும், உன் உதடுகளல்ல அந்நியனுமே உன்னைப் புகழட்டும்.

ங கல் கனமும், மணல் பாரமுமாமே; பயித்தியக்காரனுடைய சினமோ, அவ்விரண்டிலும் பாரமாயிருக்கிறது.

ச உக்கிரம் கரேமும், கோபம் பிரளயமுமாயிருக்கிறது; ஆனால் எரிச்சலின்முன் நிற்பவன் யார்.

ரு மாயமான சிநேகத்தைப்பார்க்கிலும், வெளியரங்கமான அதட்டுதல் தாவிலை.

சு *சிநேகிதனுடைய அடிகள் உண்மையுள்ளவைகள்; ஆனால் பகைஞனுடைய முத்திகள் வேண்டாமென்னப்படத்தக்கவைகள். *சங். ௱சக. ரு.

எ திருப்தியான ஆத்துமா தேன் கூட்டையும் மிதிக்கும்; பசியுள்ள ஆத்துமாவுக்கோ கசப்பெல்லாம் தித்திப்பாயிருக்கும்.

அ தன் கூட்டைவிட்டு அலையும் குருவி எப்படியிருக்கிறதோ, அப்படித் தன்தானத்தைவிட்டு அலைகிற மனுஷன் இருக்கிறான்.

கூ பரிமளதயிலமும், சுகந்த புகையும் இருதயத்தைச் சந்தோஷிப்பிக்கிறதுபோல, ஒருவனுடைய சிநேகிதனது இன்பம் உட்கருத்தான யோசனையினால் அவனைச் சந்தோஷிப்பிக்கும்.

௰ உன் சிநேகிதனையும், உன் தகப்பனுடைய சிநேகிதனையும் விடாதே; *உன் ஆபத்தின் நாளில் உன் சகோதரன் வீட்டிலே போகாமலும் இரு; தூரமான சகோதரனைப் பார்க்கிலும் சமீபமான அயலான் வாசி.
*வாக். ௰எ. ௰எ: ௰அ. உச.

௰க என் மகனே, என்னை நிந்திக்கிறவனுக்குச் சொல்லத்தக்க மறுஉத்தரவு எனக்குண்டாக, நீ ஞானம் அடைந்து, *என் இருதயத்தைச் சந்தோஷப்படுத்து.
*வாக். உங. ௰ரு.

௰உ *விவேகமுள்ளவன் தீங்கைக்கண்டு மறைகிறான்; பேதைகளோ நெடுகப்போய்ச் சேதமடைகிறார்கள். *வாக். உஉ. ங.

௰ங *அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனுடைய வஸ்திரத்தை எடுத்துக்கொள்; பிறத்தியாளுக்காக அவன் கையில் அடகுவாங்கு. *வாக். உ௰. ௰சு.

௰ச காலமே எழுந்து, மகா சத்தத்தோடே தனக்கடுத்தவனை ஆசீர்வதிக்கிறவனுக்கு அது சபிக்குதலாக எண்ணப்படும்.

௰ரு *அடைமழைநாளில் ஓயாத ஒழுக்

கும், சண்டைக்காரியான ஸ்திரீயும் ஒன்றுக்கொன்று சரி. *வாக். ௰௯. ௰௩.

௰௬ அவளை ஒளிக்கிறவன் காற்றை அடக்கி, தன் வலதுகையிலே எண்ணெயைப் பிடிப்பான்.

௰௭ இரும்பை இரும்பு கருக்கிடும்; அப்படியே மனுஷன் தனக்கடுத்தவனுடைய முகத்தைக் கருக்கிடுகிறான்.

௰௮ அத்திமரத்தைக் காக்கிறவன் அதின் கனியைப் புசிப்பான்; தன் எசமானைக் காக்கிறவன் கனம் அடைவான்.

௰௯ தண்ணீரில் முகங்களுக்கு முகங்கள் ஒத்திருக்குமாப்போலே,மனுஷனுக்கு மனுஷன் இருதயம் ஒத்திருக்கும்.

௨௰ பாதாளமும், அழிவும் திருப்தியாகிறதில்லை; *மனுஷனுடைய கண்கள் திருப்தியாகிறதும் இல்லை. *பிர. ௧. ௮.

௨௰௧ வெள்ளிக்குப் புடமும், பொன்னுக்குக் குகையும், மனுஷனுக்கு அவனுக்குண்டாம் புகழ்ச்சியும் சோதனை.

௨௰௨ நீ உலக்கையாலே பயித்தியக்காரனை உரலில் நொய்க்குள்ளே நொய்யாகக் குத்தினாலும் அவன் பயித்தியம் அவனைவிட்டுப் பிரியாது.

௨௰௩ ¶ உன் ஆடுகளின் இருப்பை நன்றாய் அறிந்துகொள்; மந்தைகளின்மேல் உன் கவனத்தை வை.

௨௰௪ ஏனெனில் ஆஸ்தி என்றைக்கும் நிற்காது; கிரீடம் தலைமுறைதலைமுறையாக இருக்குமோ?

௨௰௫ புல்முளைத்துப் பச்சைகள் காணப்படும்போது, மலைகளின் பூண்டுகள் சேர்க்கப்படலாமே.

௨௰௬ ஆட்டுக்குட்டிகள் உனக்கு உடுப்பையும், கடாக்கள் வயலைச் சம்பாதிக்கும் விலையையும் கொடுக்கும்.

௨௰௭ வெள்ளாடுகளுடைய பால் உன் ஆகாரத்துக்கும், உன் வீட்டாரின் ஆகாரத்துக்கும், உன் வேலைக்காரிகளின் பிழைப்புக்கும் போதும்.

## ௨௮. அதிகாரம்.

ஆகாதவர்கள் தொடருவார் ஒருவரும் இல்லாமல் *ஓடிப்போகிறார்கள்; நீதிமான்களோ சிங்கத்தைப்போலே திடனாயிருக்கிறார்கள். *௩ மோ. ௨௬. ௩௬.

௨ தேசத்தின் மீறுதலினாலே அதின் அதிகாரிகள் அநேகராயிருக்கிறார்கள்; உணர்வும் அறிவுமுள்ள மனுஷனாலோ நற்சீர் நீடிக்கும்.

௩ ஏழைகளை ஒடுக்குகிற தரித்திரன் ஆகாரம் விளையாதபடிக்கு வெள்ளம் அடிக்கப்பண்ணுகிற மழைக்குச் சமானம்.

௪ நியாயப்பிரமாணத்தை விடுகிறவர்கள் ஆகாதவனைப் புகழ்கிறார்கள்; நியாயப்பிரமாணத்தைக் காக்கிறவர்களோ அவர்களோடே போராடுகிறார்கள்.

௫ பொல்லாத மனுஷர் நியாயத்தை உணரார்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்களோ சகலத்தையும் உணருகிறார்கள்.

௬ *இருவழித் திரியாவரக்காரனாகிய ஐசுவரியவானைப்பார்க்கிலும், தன் உத்தமத்திலே நடக்கிற தரித்திரனே வாசி. *வாக். ௰௯. ௧.

௭ நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளுகிறவன் உணர்வுள்ள மகன்; பெருந்தீனிக்காரருக்குத் தோழனானவனோ தன் தகப்பனை அவமானப்படுத்துகிறான்.

௮ அநியாய வட்டியினாலும், ஆதாயத்தினாலும் தன் ஆஸ்தியைப் பெருகப்பண்ணுகிறவன் தரித்திரருக்கு இரங்குகிறவனுக்கு அதைச் சேர்க்கிறான்.

௯ வேதத்தைக் கேளாதபடிக்குத் தன் செவியை விலக்குகிறவனுடைய ஜெபமும் அருவருப்பு.

௰ செம்மையானவர்களைப் பொல்லாத வழிக்கு உள்ளாக்கி மோசம்போக்குகிறவன் தன் படுகுழியிலேதானே விழுவான்; உத்தமரோ நன்மையைச் சுதந்தரிப்பார்கள்.

௰௧ ஐசுவரியமுள்ள மனுஷன் தன் பார்வைக்கு ஞானமுள்ளவன்; உணர்வுள்ள தரித்திரனோ அவனை ஆராய்ந்துகொள்ளுவான்.

௰௨ *நீதிமான்கள் களிகூரும்போது மகா சிங்காரமாயிருக்கும்; ஆகாதவர்கள் எழும்பும்போதோ மனுஷன் தென்படுகிறது அரிது. *வாக். ௨௯. ௨.

௰௩ *தன் மீறுதல்களை மறைக்கிறவன் சீர்படுகிறதில்லை; அவைகளை அறிக்கையிட்டு விட்டுவிடுகிறவனோ இரக்கம்பெறுவான். *௧ யோ. ௧. ௮, ௯.

௰௪ எப்போதும் பயந்திருக்கிறவன் பாக்கியவான்; தன் நெஞ்சைக் கடினப்படுத்துகிறவனோ தீங்கிலே விழுவான்.

௰௫ ஏழைச் சனத்தை ஆளுகிற ஆகாதனை கெர்ச்சிக்கிற சிங்கத்துக்கும், சுற்றித்திரிகிற கரடிக்கும் சமானம்.

௰௬ தலைவன் உணர்வுத்தாழ்ச்சியாயிருந்தால், இடுக்கண்களைச் செய்வது மிகுதி; பொருளாசையைப் பகைக்கிறவன் நீடித்தநாள் இருப்பான்.

௰௭ ஒரு ஆத்துமாவின் இரத்தப்பழிக்காக ஒடுக்கப்படுகிற மனுஷன் குழியில் ஒதுங்க ஓடிவந்தால் அவனை ஆதரிக்கவேண்டாம்.

௰௮ உத்தமமாய் நடக்கிறவன் இரட்சிக்கப்படுவான்; இருவழித்திரியாவரனோ ஒன்றிலே விழுவான்.

௰௯ *தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் அப்பத்தாலே திருப்தியாவான்; வீணரைப் பின்பற்றுகிறவனோ தரித்திரத்தைத் திருப்தியாய் அடைவான். *வாக். ௰௨. ௰௧.

௨௰ நல் உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதங்களோடே இருப்பான்; *ஐசுவரியவானாகிறதற்குத் தீவிரிக்கிறவனோ ஆக்கினைக்குத் தப்பான். *வாக். ௨௰. ௨௧.

௨௧ முகதாட்சிணியம் நல்லதல்ல; ஒரு அப்பத்துணிக்கையின் நிமித்தமும் அப்படிக்கொத்த மனுஷன் அநியாயம்செய்வான்.

௨௨ வன்கண்ணன் ஆஸ்தியை அடையப் பதறிக் குறைச்சல் தனக்கு வருமென்று அறியாதிருக்கிறான்.

௨௩ நாவினால் இச்சகம் பேசுகிறவனைப் பார்க்கிலும், ஒரு மனுஷனைக் கடிந்துகொள்ளுகிறவனுக்கே பிறகு தயை கிடைக்கும்.

௨௪ தன் தகப்பனையும், தன் தாயையும் கொள்ளையிட்டு, அது துரோகமல்லவென்பவன் பாழ்க்கடிக்கிற மனுஷனுக்குத் தோழன்.

௨௫ பெருநெஞ்சன் வழக்கைக் கொளுவுகிறான்; கர்த்தரை நம்புகிறவனோ புஷ்டியடைவான்.

௨௬ தன் இருதயத்தை நம்புகிறவன் மூடன்; ஞானத்திலே நடக்கிறவனோ தப்புவான்.

௨௭ *தரித்திரனுக்குக் கொடுக்கிறவனே தாழ்ச்சியடையான்: தன் கண்களை விலக்குகிறவனுக்கோ வெகு சாபங்கள் வரும். *௫ மோ. ௰௫. ௰.

௨௮ ஆகாதவர்கள் எழும்பும்போது மனுஷன் ஒளிக்கிறான்; அவர்கள் அழியும்போதோ நீதிமான்கள் பெருகுகிறார்கள்.

## ௨௯. அதிகாரம்.

வெகுவாய் அதட்டப்பட்டும் தன் பிடரியைக் கடினப்படுத்துகிற மனுஷன் சடிதியிலும், குணமாக்குதல் இல்லாமலும் நொறுங்குண்பான்.

௨ *நீதிமான்கள் பெருகினால் சனம் மகிழும்; ஆகாதவன் ஆளும்போதோ சனம் தவிக்கும். *வாக். ௰௧. ௰.

௩ ஞானத்தைச் சிநேகிக்கிற மனுஷன் தன் தகப்பனை மகிழப்பண்ணுகிறான்; வேசிகளோடே தொந்திப்பானவனோ ஆஸ்தியை அழிக்கிறான்.

௪ நியாயத்தாலே இராசா தேசத்தை நிலைநிறுத்துகிறான்; பரிதானப்பிரியனோ அதைக் கவிழ்க்கிறான்.

௫ தனக்கடுத்தவனுக்கு இச்சகம்பேசுகிற

மனுஷன் அவன் காலடிகளுக்கு வலையை விரிக்கிறவன்.

௬ பொல்லாத மனுஷனுடைய துரோகத்திலே கண்ணியிருக்கிறது; நீதிமானோ கெம்பீரித்து மகிழுகிறான்.

௭ நீதிமான் ஏழைகளின் நியாயத்தை அறிந்துகொள்ளுகிறான்; ஆகாதவன் அறிவை உணரான்.

௮ சரசக்காரராகிய மனுஷர் ஊரிலே கலகத்தை எடுத்துவிடுகிறார்கள், ஞானிகளோ கோபத்தை விலக்குகிறார்கள்.

௯ பயித்தியக்காரனோடே வழக்காடுகிற ஞானமுள்ள மனுஷன் சினந்தாலும், சிரித்தாலும் இளைப்பாறுதலில்லை.

௰ இரத்தப்பிரியர் உத்தமனைப் பகைக்கிறார்கள்; செம்மையானவர்களோ அவன் ஆத்துமாவை விசாரிக்கிறார்கள்.

௰௧ மூடன் தன் ஆவியையெல்லாம் வெளிப்படுத்துகிறான்; ஞானியோ அதைப் பின்னுக்கு அடக்குகிறான்.

௰௨ துரை பொய்விசேஷத்தைக் கவனிக்கிறவனானால் அவன் ஊழியக்காரர் எல்லாரும் ஆகாதவர்கள்.

௰௩ *தரித்திரனும், தந்திரக்காரனும் ஒருவருக்கொருவர் எதிர்ப்படுகிறார்கள்; இவர்கள் இருவர் கண்களுக்கும் கர்த்தர் வெளிச்சம் கொடுக்கிறார். *வாக். ௨௨. ௨.

௰௪ ஏழைகளை உண்மையாய் நியாயம் விசாரிக்கிற இராசாவின் ஆசனம் என்றும் திடனாயிருக்கும்.

௰௫ மிலாறும், கடிந்துகொள்ளுதலும் ஞானமடைவிக்கும்; தன் இச்சையாய் விடப்பட்ட வாலிபனோ தாயை வெட்கப்படுத்துகிறான்.

௰௬ ஆகாதவர்கள் பெருகினால் மீறுதல் பெருகும்; ஆனால் நீதிமான்கள் அவர்கள் விழுதலில் சரிக்குச்சரிக்கட்டுதலைக் காண்பார்கள்.

௰௭ *உன் மகனைத் தண்டி; அப்போது அவன் உன்னை முசிப்பாறப்பண்ணி, உன் ஆத்துமாவுக்குப் பரிபூரண செல்வத்தை உண்டாக்குவான். *வாக். ௰௯. ௨௪.

௰௮ தீர்க்கதரிசனம் இல்லாமையால் சனம் சீர்கெட்டுப்போம்; வேதத்தைக் காக்கிறவனோ பாக்கியவான்.

௰௯ வார்த்தைகளினாலே அடிமை அடங்கான்; ஏனெனில் அவைகளை உணர்ந்தும் மறு உத்தரவு சொல்லான்.

௨௰ *தன் வார்த்தைகளில் பதறுகிற மனுஷனைக் கண்டாயே; அவனைப்பார்க்கிலும் மூடன்மேலே அதிக நம்பிக்கை இருக்கலாம். *யாக். ௧. ௰௯, ௨௰.

௨௧ தன் அடிமைக்கு ஒருவன் சிறுவயது துவக்கி இளக்காரம் கொடுத்தால், அவன் கடைசியிலே தன்னைக் குமாரனாகப் பாராட்டுவான்.

௨௨ கோபக்காரன் வழக்கைக் கொளுவுகிறான்; மூர்க்கன் பெரும்பாதகன்.

௨௩ *மனுஷன் அகந்தை அவனைத் தாழ்த்தும்; மனத்தாழ்மையானவனோ கனமடைவான். *மத். ௨௩. ௰௨.

௨௪ திருடனோடே பங்கிட்டுக்கொள்ளுகிறவன் தன் ஆத்துமாவைப் பகைக்கிறான்; அவன் சபிக்குதலைக் கேள்விப்பட்டாலும் அறிவிக்காதிருப்பான்.

௨௫ மனுஷனுக்குப் பயப்படுகிற திகில் கண்ணியை உண்டாக்கும்; கர்த்தரை நம்புகிறவனோ உயர்ந்த அடைக்கலத்திலே வைக்கப்படுவான்.

௨௬ அநேகர் ஆளுகிறவனுடைய முகதரிசனையைத் தேடுகிறார்கள்; ஆனால் அவனவனுடைய நியாயம் கர்த்தராலே தீரும்.

௨௭ *நீதிமான்களுக்கு அநியாயக்காரன் அருவருப்பானவன்; ஆகாதவனுக்குச் செம்மைமார்க்கத்தானும் அருவருப்பானவன். *கலா. ௬. ௰௪.

## ௩௰. அதிகாரம்.

யாக்கோபின் குமாரனாகிய ஆகூர் என்ற புருஷன் இத்தியேலுக்கு வசனித்து, இத்தி

யேலுக்கும் உக்காலுக்கும் உரைத்த உபதேசவார்த்தைகள்.

௨ ¶ நானே எவனைப்பார்க்கிலும் அறிவீனன், எனக்கு மனுஷரின் புத்தியில்லை.

௩ நான் ஞானத்தைக் கற்றதுமில்லை, பரிசுத்தவான்களின் அறிவையோ அறியேன்.

௪ *பரமண்டலங்களுக்கு ஏறி இறங்குகிறவர் யார்? காற்றைத் தமது கைப்பிடிகளில் அடக்குகிறவர் யார்? தண்ணீர்களை வஸ்திரத்திலே கட்டினவர் யார்? பூமியின் எல்லைகளை எல்லாம் ஸ்தாபித்தவர் யார் அவருடைய நாமமென்ன? அவருடைய குமாரன் நாமமென்ன? அதை அறிவாயோ?

*யோவா. ௩. ௰௩.

௫ *பராபரனுடைய வசனமெல்லாம் புடமிடப்பட்டவைகள்; தம்மை அண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு அவர் கேடயமானவர். *சங். ௰௨. ௭.

௬ அவர் உன்னை உதம்பாதபடிக்கும், நீ பொய்யனாய்க் கண்டுபிடிக்கப்படாதபடிக்கும் *அவருடைய வசனங்களோடு ஒன்றும் கூட்டாதிரு. *௫ மோ. ௪. ௨. வெளி. ௨௨. ௰௮, ௰௯.

௭ ¶ இரண்டு மனு உம்மிடத்திலே கேட்கிறேன்; நான் சாகும்பரியந்தமும் அவைகளை எனக்கு அல்லத்தட்டீராக.

௮ மாயையையும், பொய்வசனிப்பையும் எனக்குத் தூரமாக்கும்; தரித்திரத்தையும் ஐசுவரியத்தையும் எனக்குக் கொடீராக.

௯ நான் பரிபூரணம் அடைகிறதினால் மறுதலித்து, கர்த்தர் யாரென்று சொல்லாதபடிக்கும், தரித்திரப்படுகிறதினாலே திருடி என் பராபரனுடைய நாமத்தை அவமானமாக்காதபடிக்கும் என் படியை எனக்கு அளந்து போஷியும்.

௰ ¶ வேலைக்காரன் உன்னைச் சபிக்காதபடிக்கும், நீ நேரஸ்தனாகாதபடிக்கும், அவனை அவன் எசமானனிடத்திலே அவதூறு பண்ணாயாக.

௰௧ தன் தகப்பனைச் சபித்து, தன் தாயை ஆசீர்வதிக்காமல் போகிற சந்ததியுண்டு.

௰௨ தன்னுள்ளம் அறக்கழுவப்படாதிருந்தும் தன் பார்வைக்குச் சுத்தமான சந்ததியுண்டு.

௰௩ ஒரு சந்ததியுண்டு; அதின் கண்கள் எத்தனை மேட்டிமையும், அதின் இமைகள் எத்தனை நெருப்புமாயிருக்கின்றன.

௰௪ தேசத்தில் சிறுமையானவர்களையும் மனுஷரில் எளியவர்களையும்பட்சிப்பதற்குப் பல்லுகள் பட்டையங்களும், கடைவாய்ப் பற்கள் கத்திகளுமாயிருக்கிறசந்ததியுண்டு.

௰௫ அட்டலடைக்கு தா, தா, என்ற இரண்டு குமாரத்திகளுண்டு; திருப்தியாகாத மூன்றுண்டு; போதுமென்னாத நாலுமுண்டு.

௰௬ அவையாவன: பாதாளமும், மலட்டுக்கர்ப்பமும், தண்ணீர்போதுமென்றிராத பூமியும்தானே; அக்கினி போதுமென்கிறதும் இல்லை.

௰௭ ¶ தகப்பனைப் பரியாசம்பண்ணித் தாய்க்குக் கீழ்ப்படிய அசட்டையாயிருக்கிற கண்ணை நதியின் காக்கைகள் பிடுங்கிக் கழுகின் குஞ்சுகள் தின்னும்.

௰௮ எனக்கு மிஞ்சின ஆச்சரியமானவைகள் மூன்றுண்டு; நான் அறியாதிருக்கிற நாலுமுண்டு.

௰௯ அவையாவன: ஆகாயத்திலே கழுகினுடைய வழியும், கல்மலையின்மேலே பாம்பினுடைய வழியும், நடுக்கடலிலே கப்பலினுடைய வழியும், ஒரு கன்னிகையை நாடிய மனுஷனுடைய வழியும்தானே.

௨௰ அப்படியே விபசாரஸ்திரியின் வழியுமிருக்கிறது; அவள் தின்று தன் வாயைத் துடைத்து, நான் அக்கிரமம் செய்ததில்லையென்பாள்.

௨௧ ¶ மூன்றின் நிமித்தம் தேசம் கலக்கமாகிறது; நாலின் நிமித்தம் அது தாளமாட்டாது.

௨௨ அரசாளுகிற அடிமையின்நிமித்தமும், அப்பத்தாலே திருப்தியான பயித்தியக்காரன்நிமித்தமும்,

௨௩ பகைக்கப்பட்டிருந்த புருஷனுக்கு வாழ்க்கைப்பட்ட ஸ்திரியின்நிமித்தமும், தன் ஆண்டைச்சிக்குச் சுதந்தரியுமான அடிமைப்பெண்ணின்நிமித்தமுந்தானே.

௨௪ பூமியில் சிறியவைகளாயிருந்தும் மகா ஞானமுள்ளவைகளாய் இருக்கிறவைகள் நாலுண்டு.

௨௫ அவையாவன: *பலஇனச்சாதியாய் இருந்தும்,வசந்தகாலத்திலே தங்கள் ஆகாரத்தைச் சம்பாதிக்கிற எறும்புகளும்,

*வாக். ௬. ௬: ௭. ௮.

௨௬ சத்துவமற்ற சாதியாயிருந்தும், தங்கள் வீட்டைக் கல்மலையிலே தோண்டிவைக்கும் குழி முசல்களும்,

௨௭ இராசா அற்றிருந்தும் ஏகமாய் வரிசையாகப் புறப்படுகிற வெட்டுக்கிளிகளும்,

௨௮ தன் கைகளினாலே பின்னியும், அரசர் அரமனைகளிலிருக்கிற சிலந்திப்பூச்சியும்தானே.

௨௯ ¶ விநோதமாய் அடிவைத்து நடக்கிற மூன்றுண்டு; விநோத நடையுள்ளவைகள் நாலுண்டு.

௩௰ அவையாவன: மிருகங்களில் சவுரியமானதும் ஒன்றுக்கும் பின்னிடையாததுமாகிய சிங்கமும்,

௩௧ வேகமுஸ்திதான குதிரையும், வெள்ளாட்டுக்கடாவும், யாரும் எதிர்க்கமாட்டாத இராசாவும்தானே.

௩௨ ¶ நீ மேட்டிமையானதினால் பயித்தியம் செய்ததும், அதின்மேல் நினைவாயிருக்கிறதுமுண்டானால் *கையினாலே வாயை மூடியிரு. *யோபு. ௩௯. ௩௩–௩௫.

௩௩ ஏனெனில் பாலைக்கடைதல் வெண்ணெயைப் பிறப்பிக்கும்; மூக்கைப் பிசைதல் இரத்தத்தைப் பிறப்பிக்கும்; கோபத்தைக் கிண்டுதல் சண்டையைப் பிறப்பிக்கும்.

## ௩௰௧. அதிகாரம்.

*இராசாவாகிய லேமுவேலுக்கடுத்த வசனங்கள்; அவன் தாய் அவனுக்குப் போதித்த உபதேசம்.*

௨ ஆ என் குமாரனே, ஆ என் கர்ப்பத்தின் குமாரனே, ஆ என் பொருத்தனைகளின் குமாரனே.

௩ *பெண்சாதிகளுக்கு உன் பலத்தையும், இராசாக்களைக் கெடுக்கும் காரியங்களுக்கு உன் வழிகளையும் கொடாயாக.

*௫ மோ. ௰௭. ௰௭.

௪ ¶ இராசாக்களுக்கு மதுபானம் வேண்டாம், லேமுவேலே, இராசாக்களுக்கு அது வேண்டாம்; தலைவருக்கு லொட்டிப்பிரியம் வேண்டாம்.

௫ குடித்துப் பிரமாணத்தை மறந்து சிறுமையான யாவருடைய நியாயத்தையும் புரட்டாதபடிக்குத்தானே.

௬ மடிந்துபோகிறவனுக்கு லொட்டியையும் மனம்கசந்தவர்களுக்கு மதுவையும் கொடுங்கள்.

௭ அப்படிக்கொத்தவன் குடித்துத் தன் எளிமையை மறந்து தன் வருத்தத்தை அப்புறம் நினையாதிருக்கட்டும்.

௮ ¶ ஊமையனுக்காகவும் மடியப்போகிற அனைவரின் நியாயத்துக்காகவும் உன் வாயைத் திற.

௯ உன் வாயைத் திறந்து, நீதியாய் நியாயந்தீர்த்து, சிறுமையும் எளிமையுமானவனுக்கு நியாயம்செய்.

௰ ¶ *குணசாலியான பெண்சாதியைக் கண்டுபிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்களைப்பார்க்கிலும் உயர்ந்தது.

*வாக். ௰௨. ௪: ௰௮. ௨௨.

௰௧ அவள் புருஷன் இருதயம் அவளை நம்பும்; உடைமை உற்பத்தி அவனுக்குக் குறைபடாது.

௰௨ அவள் உயிரோடிருக்கிற எல்லா நாள்களிலும் அவனுக்குத் தீமையையல்ல நன்மையையே செய்கிறாள்.

௰௩ ஆட்டுமயிரையும் சணலையும் தேடி, விருப்பமான கைகளால் வேலைசெய்கிறாள்.

௰௪ அவள் வியாபாரக்கப்பல்களைப்போலிருக்கிறாள்; தூரத்திலிருந்து தன் பிழைப்பை வரப்பண்ணுகிறாள்.

௰௫ இருட்டோடே எழுந்து தன் வீட்டுக்கு ஆகாரமும், தன் வேலைக்காரிகளுக்குப் படியும் கொடுக்கிறாள்.

௰௬ ஒரு வயலை விசாரித்து அதை வாங்குகிறாள்; தன் கைகளின் பலனால் திராட்சத்தோட்டத்தை நாட்டுகிறாள்.

௰௭ தன்னைப் பலத்தால் இடைக்கட்டிக்கொண்டு, தன் புயங்களை உரமாக்குகிறாள்.

௰௮ தன் வியாபாரம் நல்லதென்று உணருகிறாள்: அவள் விளக்கு இராவில் அணையாது.

௰௯ தன் கைகளை இராட்டினத்துக்கு நீட்டுவாள்; அவள் விரல்கள் கதிரைப்பிடிக்கும்.

௨௰ தன் கையைச் சிறுமையானவனுக்கு விரித்து; தன் கரங்களை எளியவனண்டைக்கு நீட்டுகிறாள்.

௨௧ தன் வீட்டாரின்நிமித்தம் குளிருக்குப பயப்படாள்; ஏனெனில் அவள் வீட்டாரனைவருக்கும் இரட்டைப்புரா உடுப்பிருக்கிறது.

௨௨ சமுக்காளங்களைத் தனக்கு உண்டுபண்ணுகிறாள்; நல்ல புடவையும், இரத்தாம்பரமும் அவள் உடுப்பு.

௨௩ அவள் புருஷன் வாசல்களில் தேசத்து மூப்பர்களோடே உளுக்கார்ந்திருக்கையில் பேர்பெற்றவனாயிருக்கிறான்.

௨௪ மெல்லிய புடவையை உண்டுபண்ணி விற்றுப்போட்டு, கச்சைகளை வர்த்தகருக்குக் கொடுத்துவிடுகிறாள்.

௨௫ அவள் உடை பலனும் அலங்காரமுமாயிருக்கிறது; வரும் நாளுக்சென்று திடனாயிருக்கிறாள்.

௨௬ தன் வாயை ஞானத்தோடே திறக்கிறாள்; தயையுள்ள போதகம் அவள் நாவின் மேலிருக்கிறது.

௨௭ அவள் சோம்பலின் அப்பத்தைப் புசியாமல், தன் வீட்டுக்காரியம் எப்படி நடக்குமென்று கண்ணோக்கமாயிருக்கிறாள்.

௨௮ அவள் பிள்ளைகள் எழும்பி அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்; அவள் புருஷனும் அவளைப் புகழுகிறான்.

௨௯ அநேகம் பெண்கள் சாக்கிரதையைக் காண்பிக்கிறார்கள்; நீயோ அவர்களெல்லாருக்கும் மேற்பட்டவளென்று அவளைப் புகழுகிறான்.

௩௰ இச்சகம் கள்ளத்தனமும், அழகு மாயையுமாய் இருக்கின்றன; கர்த்தருக்குப் பயப்படுகிற பெண்சாதியே புகழப்படுவாள்.

௩௧ அவளுக்கு அவள் கைகளின் பலனைக் கொடுங்கள்; வாசல்களில் அவள் செய்கைகளின்நிமித்தம் அவளைப் புகழக்கடவார்கள்.

---

# பிரசங்கியின் புஸ்தகம்.

---

## ௧. அதிகாரம்.

தாவீதின் குமாரனும் எருசலேமின் இராசாவுமாகிய பிரசங்கியின் வார்த்தைகள்.

௨ ஆ எத்தனையான மாயை என்று பிரசங்கி சொல்லுகிறான்; ஆ எத்தனையான மாயை, எல்லாம் மாயையே.

௩ *சூரியன்கீழே வருத்தப்படுகிற தன்னுடைய எல்லா வருத்தத்தினாலும் மனுஷனுக்கு லாபமென்ன? *பிர. ௨. ௨௨.

௪ ஒரு சந்ததி போகிறது; வேறொரு சந்

ததி வருகிறது; பூமியோ என்றைக்கும் நிற்கிறது.

௫ சூரியன் உதிக்கிறதும், சூரியன் அஸ்தமிக்கிறதும், தான் உதித்த தன்னிடத்துக்கே திரும்பத் தீவிரிக்கிறதுமாயிருக்கிறது.

௬ காற்றுத் தெற்கே போய், வடக்கையும் சுற்றிச் சூழ்ந்து சூழ்ந்துபோகிறது; தான் சுற்றின இடங்களுக்கே காற்றுத் திரும்பவும் வரும்.

௭ எல்லா ஆறுகளும் சமுத்திரத்தில் ஓடியும் சமுத்திரம் நிரம்பாது; முன் தாங்கள் ஓடின இடத்துக்கே ஆறுகள் அங்கே மறுபடியும் ஓடத் திரும்பும்.

௮ எல்லாக் காரியங்களும் யாரும் சொல்லிமுடியாத இளைப்புள்ளவைகள்; காண்கிறதினாலே கண் திருப்தியாகிறதில்லை; கேட்கிறதினாலே செவி நிரப்பப்படுகிறதுமில்லை.

௯ ¶ முன் இருந்ததே இனியிருப்பது; முன்செய்யப்பட்டதே இனிச் செய்யப்படுவது; சூரியன் கீழே நூதனமானதொன்றுமில்லை.

௰ இதைப் பார்; இது புதுமை என்று சொல்லப்படத்தக்ககாரியம் ஒன்றுண்டோ? நமக்கு முந்தின பூர்வகாலங்களில் தானும் இருந்ததே.

௰௧ முந்தினவைகளின் ஞாபகம்மாத்திரமில்லை; அப்படியே பிந்தினவைகளின் ஞாபகமும் இனிமேலிருப்பவர்களுக்கு இல்லாதிருக்கும்.

௰௨ ¶ பிரசங்கியாகிய நான் எருசலேமிலே இஸ்ரவேலின்மேல் இராசாவாயிருந்து,

௰௩ வானத்தின்கீழே செய்யப்படுகிறதை எல்லாம் ஞானமாய் விசாரிக்கிறதற்கும், ஆராய்கிறதற்கும் என் இருதயத்தைப் பிரயோகம்பண்ணினேன்; இந்த ஆகாத தொல்லையைப் பராபரன் மனுப்புத்திரருக்கு அதிலே அடிபடும்படிக்குக் கட்டளையிட்டார்.

௰௪ ¶ சூரியன்கீழே செய்யப்படுகிற எல்லாக் கிரியைகளையும் பார்த்தேன்; இதோ யாவும் மாயையும், ஆவியை அரித்துவிடுகிறதுமாயிருக்கின்றன.

௰௫ *கோணலானது செம்மையாகமாட்டாது; குறைவானது எண்ணிமுடியாததுமாய் இருக்கிறது. *பிர. ௭. ௰௩.

௰௬ இதோ எருசலேமில் எனக்குமுன்னிருந்த எல்லாரையும்பார்க்கிலும் நான் பெருகி, ஞானத்தில் அதிகப்பட்டவனானேன்; என் இருதயம் மிகுந்த ஞானத்தையும், அறிவையும் கண்டதென்று நான் என் நெஞ்சுடனே சொல்லி,

௰௭ என் இருதயத்தை ஞானத்தை அறிகிறதற்கும், பயித்தியத்தையும் மதியீனத்தையும் அறிகிறதற்கும் பிரயோகம்பண்ணினேன்; ஆனால் இதுவும் ஆவியை அரிக்கிறதென்றறிந்தேன்.

௰௮ ஏனெனில் திரளான ஞானத்திலே திரளான சலிப்புண்டு; அறிவு பெருத்தவன் நோவு பெருத்தவன்.

## ௨. அதிகாரம்.

நான் என் இருதயத்திலே, *இப்போதும் வா, உன்னைச் சந்தோஷத்தினாலே சோதித்துப்பார்ப்பேன்; நன்மை அநுபவி என்றேன்; ஆனால் இதோ அதுவும் மாயையாய் இருந்தது. *லூக். ௰௨. ௰௯.

௨ நான் நகைப்பைப்பார்த்து நீ பயித்தியமாயிருக்கிறாயென்றும், சந்தோஷத்தைப் பார்த்து அது என்ன செயலென்றும் சொன்னேன்.

௩ ¶ வானத்தின்கீழே உயிரோடிருக்கிற நாள்வரையிலே மனுப்புத்திரருடைய எந்தச் செய்கை அவர்களுக்கு வாசியாயிருக்குமென்று நான் பார்க்குமளவும் நான் என் மாம்சத்தை மதுபானத்தினால் ஆற்றிக்கொண்டிருக்கவும், என் இருதயத்தை ஞானத்திலேதானே நடத்திவருகிறவனாக அவமதியையும் பிடிக்கவும் என் நெஞ்சிலே வகைபார்த்தேன்.

௪ என் கிரியைகளைப் பெரியவைகளாக்கினேன்; எனக்கு வீடுகளைக் கட்டினேன்;

எனக்குத் திராட்சத்தோட்டங்களை நாட்டினேன்.

ரு எனக்குத் தோட்டங்களையும் சிங்காரவனங்களையும் உண்டாக்கி, அவைகளில் சகலவகைக் கனிவிருட்சங்களையும் நாட்டினேன்.

சு மரங்கள் பயிராகும் தோப்பை நீர்ப்பாய்ச்சலாக்க எனக்குத் தண்ணீர்க் குளங்களை உண்டுபண்ணினேன்.

எ வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் சம்பாதித்தேன்; வீட்டுப்பிள்ளைகள் எனக்கு இருந்தன; எருசலேமில் எனக்கு முன்னிருந்த அனைவரைப்பார்க்கிலும் எனக்கு ஆடுமாடுகளுடைய திரளான ஆஸ்தி இருந்தது.

அ எனக்கு வெள்ளியையும், பொன்னையும், இராச சம்பத்தையும், மாகாணங்களின் சம்பத்தையும் சேர்த்தேன்; எனக்குக் கீதக்காரரையும், கீதக்காரிகளையும், மனுப்புத்திரரின் செல்வங்களையும், வாத்தியத்தையும், வாத்தியமுட்டுகளையும் சம்பாதித்தேன்.

கூ *எனக்கு முன் எருசலேமில் இருந்த அனைவரைப்பார்க்கிலும் நான் பெருகி அதிகப்பட்டேன்; என் ஞானமும் என்னோடே தரித்திருந்தது. *க இரா. ம. உகூ. ஹ.

ம என் கண்கள் எதை ஆசைப்பட்டாலும் அதை நான் அவைகளுக்குத் தடைபண்ணினதில்லை; என் இருதயத்திற்கு ஒரு சந்தோஷத்தையும் நான் வேண்டாமென்று விலக்கினதில்லை; ஏனெனில் என் இருதயம் என்னுடைய எல்லாப் பிரயாசத்தினாலும் சந்தோஷமாயிருந்தது; இதுவே என்னுடைய எல்லாப் பிரயாசத்தினாலும் எனக்கு வந்த பங்காயிருந்தது.

மக என் கைகள் செய்த என்னுடைய எல்லாக் கிரியைகளையும் செய்கிறதற்காக நான் பட்ட எல்லாப் பிரயாசத்தையும் நான் கண்ணோக்கினேன்; இதோ எல்லாம் மாயையும், ஆவியை அரிக்கிறதுமாயிருந்தன; சூரியன்கீழே இலாபமில்லை.

மஉ பின்பு நான் ஞானம் என்னவென்றும், பயித்தியமும் அவமதியும் என்னவென்றும் பார்க்கிறதற்குத் திரும்பினேன்; ஏனெனில் இராசாவுக்குப் பிற்பாடு வரப்போகிற மனுஷன் என்னசெய்வான், வாடிக்கையாய்ச் செய்யப்படுவதைத்தானே.

மங இருளைப்பார்க்கிலும் வெளிச்சம் வாசியாயிருக்கிறதுபோல அவமதியைப்பார்க்கிலும் ஞானம் வாசியாயிருக்கிறதென்கிறதைத்தான் நான் கண்டேன்.

மச ஞானியின் கண்கள் அவன் சிரசிலிருக்கின்றன; மூடனோ இருளிலே நடக்கிறான்; ஆகிலும் அவர்களெல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்குமென்கிறதையும் நான் அறிந்தேன்.

மரு ஆகையால் நான் என் இருதயத்திலே மூடனுக்குச் சம்பவிக்கிறபிரகாரமாக எனக்கும் சம்பவிக்குமே; பின்னை ஏன் நான் அப்போது அதிக ஞானமடைந்தேனென்று சொல்லி, என் இருதயத்திலே அதுவும் மாயை என்றேன்.

மசு ஏனெனில் மூடனைப்பார்க்கிலும் ஞானியை அதிகமாய் நினைக்கும் நினைப்பு என்றைக்குமில்லை; இப்போது இருக்கிறவை எல்லாம் வரும் நாள்களில் மறக்கப்பட்டவையாயிருக்கும்; ஏனெனில் ஞானி எப்படிச் சாகிறான்? மூடனைப்போலேதானே.

மஎ ஆகையால் இப்படிப்பட்ட சீவனைப் பகைத்தேன்; ஏனெனில் சூரியன்கீழே செய்யப்படும் கிரியை எனக்கு விசனமாயிற்று; அதேனென்றால் எல்லாம் மாயையும், ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.

மஅ சூரியன்கீழே நான் பட்ட என் பிரயாசத்தை எல்லாம் நான் பகைத்தேன்; ஏனெனில் *எனக்குப்பிறகு இருக்கும் மனுஷனுக்கு அதை நான் பின்வைத்துப்போகவேண்டும். *சங். சகூ. எ.

மகூ அவன் ஞானமுள்ளவனாயிருப்பானோ, அவமதியாயிருப்பானோ என்கிறதை யார்

அறிவார்? ஆகிலும் நான் சூரியன்கீழே பிரயாசப்பட்டதும், நான் ஞானமாய்ச் செய்து வந்ததுமான என் வேலைக்கெல்லாம் அதிகாரியாயிருப்பான்; இதுவும் மாயை.

௨௰ ¶ ஆகையால் என் இருதயம் சூரியன்கீழே நான் பட்ட எல்லாப் பிரயாசத்தின்மேலுள்ள ஆசையைவிட்டுவிட வகை பார்த்தேன்.

௨௧ ஏனெனில் ஒரு மனுஷனுமுண்டு; அவனுடைய வேலை ஞானமும், அறிவுமுள்ளதும், செம்மையுமாயிருக்கிறது; ஆகிலும் அதில் பிரயாசப்படாதிருந்த வேறொருவனுக்கு அவன் அதைச் சொந்தமாகக் கொடுத்துவிடவேண்டியது; இதுவும் மாயையும், மகா தீதுமாயிருக்கிறது.

௨௨ ஏனெனில் அப்படியே மனுஷன் சூரியன்கீழே படுகிற தன்னுடைய எல்லாப் பிரயாசத்தினாலும், தன்னுடைய இருதயத்தின் அரிப்பினாலும் அவனுக்கு என்ன இருக்கும்?

௨௩ அவன் நாள்களெல்லாம் நோவுகளோடும் அவன் தொல்லை சலிப்போடுமிருக்கின்றனவே; இராத்திரியிலும் அவன் மனது இளைப்பாறுகிறதில்லையே, இதுவும் மாயைதானே.

௨௪ ஆகையால் மனுஷன் புசித்துக்குடித்து, தன் பிரயாசத்திலே தன் நெஞ்சுக்கு நன்மைகாட்டுவதல்லவோ அவனுக்கு வாசி? இதுவுமோ பராபரனுடைய கரத்திலிருந்து வரவேண்டியது என்று நான் கண்டேன்.

௨௫ ஏனெனில் என்னைப்பார்க்கிலும் நன்றாய்ச் சாப்பிடுபவன் யாவன்? என்னைப் பார்க்கிலும் துருசாய்ச் சம்பாதிப்பவனும் யாவன்?

௨௬ ஏனெனில் தமக்குமுன்பாக நல்லவனாயிருக்கிற மனுஷனுக்கு அவர் ஞானத்தையும், அறிவையும், மகிழ்ச்சியையும் கட்டளையிடுகிறார்; பாவஞ்செய்கிறவனுக்கோவென்றால் பராபரனுக்குமுன்பாக *நல்லவனாயிருக்கிறவன் வசமாய் வைத்துவிட்டுப்போகக் கூட்டிச்சேர்க்கும் தொல்லையைக் கட்டளையிடுகிறார்; இதுவும் மாயையும் ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது. *வாக். ௨௮. ௮. யோபு. ௨௭. ௰௬, ௰௭.

## ௩. அதிகாரம்.

சகலத்துக்கும் ஒரு சொந்தவேளையும், வானத்தின் கீழிருக்கிற சகல விருப்பத்துக்கும் ஒரு காலமுமிருக்கும்.

௨ பிறக்கிற காலமுமுண்டு; இறக்கிற காலமுமுண்டு; நாட்டுகிறகாலமுமுண்டு; நாட்டப்பட்டதைப் பிடுங்குகிற காலமுமுண்டு.

௩ கொல்லுகிற காலமுமுண்டு, குணமாக்குகிறகாலமுமுண்டு; இடிக்கிறகாலமுமுண்டு, கட்டுகிறகாலமுமுண்டு.

௪ அழுகிறகாலமுமுண்டு, நகைக்கிற காலமுமுண்டு; புலம்புகிற காலமுமுண்டு, துள்ளுகிறகாலமுமுண்டு.

௫ கற்களைச் சிதறடிக்கிற காலமுமுண்டு, கற்களைச் சேர்க்கிற காலமுமுண்டு; அரவணைக்கிற காலமுமுண்டு; அரவணைக்காமல் தூரமாக்குகிற காலமுமுண்டு.

௬ தேடுகிற காலமுமுண்டு; இழக்கிற காலமுமுண்டு; காக்கிற காலமுமுண்டு; எறிந்துவிடுகிற காலமுமுண்டு.

௭ கிழிக்கிற காலமுமுண்டு, தைக்கிற காலமுமுண்டு; மவுனமாயிருக்கிற காலமுமுண்டு, பேசுகிற காலமுமுண்டு.

௮ சிநேகிக்கிற காலமுமுண்டு, பகைக்கிற காலமுமுண்டு; யுத்தகாலமுமுண்டு, சமாதானகாலமுமுண்டு.

௯ ¶ * வருத்தப்பட்டுச் செய்கிறதினாலே செய்கிறவனுக்கு இலாபமென்ன?
*பிர. ௧. ௩.

௰ பராபரன் மனுப்புத்திரருக்கு அடிப்படக் கட்டளையிட்ட தொல்லையைக் கண்டேன்.

௰௧ எல்லாவற்றையும் அதினதின் காலத்திலே நேர்த்தியாகச் செய்துவருகிறார்; நித்தி

யத்தின் உணர்வையும் அவர்கள் இருதயத்திலே கொடுத்தார்; அது இல்லாவிட்டால் மனுஷன் பராபரன் ஆதிமுதல்கொண்டு முடிவுமட்டாகச் செய்யும் கிரியையைக் கண்டுபிடியான்.

௰௨ மகிழ்ச்சியாயிருப்பதும், தாங்கள் உயிரோடிருக்கையில் நன்றுசெய்வதுமேயல்லாமல் வேறொரு நன்மையும் அவைகளால் இல்லையென்றறிந்தேன்.

௰௩ ஆனால் மனுஷன் எவனாகிலும் சரி, புசித்துக்குடித்துத் தன்னுடைய எல்லா வருத்தத்திலும் நன்மையை அநுபவிப்பதும் பராபரனுடைய ஈவு.

௰௪ பராபரன் என்னென்ன செய்கிறாரோ அதுவே என்றும் நிற்குமென்றறிவேன்; மனுஷர் அதனோடே கூட்டவும் கூடாது, அதிலே குறைக்கவும் கூடாது; அவர்கள் தமக்குமுன்பாகப் பயந்திருக்கும்படிக்குப் பராபரன் இப்படிச் செய்கிறார்.

௰௫ இப்போதும் நடக்கிறது முன்னும் நடந்தது; நடக்கப்போகிறதும் முந்தானே நடந்தது; ஆனால் துன்பப்பட்டவனுடைய நியாயத்தைப் பராபரன் விசாரிப்பார்.

௰௬ ¶ பின்னையும் சூரியன்கீழே நான் ஆகாமியமுள்ள நியாயஸ்தலத்தையும், ஆகாமியமுள்ள நீதிஸ்தலத்தையும் கண்டேன்.

௰௭ ஆனால் நான் என் இருதயத்திலே நீதிமானையும் ஆகாதவனையும் பராபரன் நியாயந்தீர்ப்பார்; ஏனெனில் சகல விருப்பத்தையும், சகல செய்கையையும் நியாயந் தீர்க்குங்காலம் அங்கே என்றேன்.

௰௮ ¶ பராபரன் மனுப்புத்திரரை வீம்பறத் துலக்குகிறதும், தங்கள் நிலமைக்குத் தாங்கள் மிருகங்களைப்போலே இருக்கிறதை அவர்கள் காண்கிறதும் அவர்கள் காரியத்துக்கு ஒத்ததென்று நான் என் இருதயத்திலே சொன்னேன்.

௰௯ ஏனெனில், மனுப்புத்திரருக்குச் சம்பவிக்கிறதும், மிருகங்களுக்குச் சம்பவிக்கிறதும், அவர்களுக்கும் இவைகளுக்கும் ஏகமாய்ச் சம்பவிக்கிறது; இது சாகிறது போல அவனும் சாகிறான்; சீவனுக்கெல்லாம் ஏக சுவாசமிருக்கிறது; மிருகத்தைப் பார்க்கிலும் மனுஷனுக்கு மேன்மை இல்லையே; ஏனென்றால் சகலமும் மாயை.

௨௰ சகலமும் ஒரே இடத்துக்குப் போகின்றன; சகலமும் மண்ணிலுண்டாகி, சகலமும் மண்ணுக்குத் திரும்பும்.

௨௧ உயர ஏறுகிறதாகிய மனுப்புத்திரரின் ஆவியையும், தாழத் தரையில் இறங்குகிறவைகளாகிய மிருகங்களின் ஆவியையும் அறிந்துகொண்டிருக்கிறவன் யாவன்?

௨௨ இப்போதும் மனுஷன் தன் செய்கைகளில் மகிழ்ச்சியாயிருக்கும் நன்மையையல்லாமல் வேறே நன்மை அவைகளால் இல்லை என்று கண்டேன்; இதுவே அவன் பங்கு; ஏனென்றால் தனக்குப் பின் இருப்பதைக் காண்பதற்கு அதனைத் திரும்ப வரப் பண்ணுபவன் யாவன்?

## ௪. அதிகாரம்.

நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழ்ச் செய்யப்படுகிற ஒடுக்குதல்களை எல்லாம் நோக்கினேன்; இதோ, ஒடுக்கப்பட்டவர்களின் கண்ணீரைக் கண்டேன்; அவர்களைத் தேற்றுவாருமில்லை; அவர்களை ஒடுக்குகிறவர்களின் கை பலவந்தம் செய்துகொண்டேயிருந்தும் அவர்களைத் தேற்றுவாரில்லை.

௨ ஆனதுகொண்டு இன்னம் உயிரோடிருந்து பிழைக்கிறவர்களைப்பார்க்கிலும், முன்தானே காலம்பண்ணி மரித்தவர்களையே நான் பாக்கியவான்களென்றேன்.

௩ இவ்விருதிறத்தாரைப்பார்க்கிலும், இன்னம் உண்டாகாதவனும் வாசி; அவன் சூரியன்கீழ்ச் செய்யப்படும் துர்ச்செய்கையைக் கண்டதில்லை.

௪ ¶ எல்லாப் பிரயாசமும் சட்டமானது; எல்லாக் கிரியையும் மனுஷன்மேல் அவனுக்கடுத்தவனுடையபொறாமையை வரப்

பண்ணுமென்கிறதையும் நான் கண்டேன்; இதுவும் மாயையும், ஆவியை அரிக்கிறது மாயிருக்கிறது.

௫ மூடன் தன் கைகளைக் கட்டிக்கொண்டு தன் சதையைத் தின்கிறான்.

௬ *வருத்தத்தோடும், ஆவியின் அரிப்போடும், இரண்டு கைப்பிடியும் நிறையக்கொண்டிருக்குதலைப்பார்க்கிலும் அமைதலோடே ஒரு கைப்பிடி நிறையக்கொண்டிருக்குதலே வாசி. *வாக். ௰௫. ௰௬.

௭ நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழே வேறொரு மாயையைக் கண்டேன்.

௮ ஒண்டிக்காரன் இருக்கிறான், உடனாளி இல்லை; அவனுக்குப் பிள்ளையும் சகோதரனுமில்லை; என்றாலும் அவன் பிரயாசத்திற்கு முடிவில்லை; அவன் கண்கள் ஐசுவரியத்தால் திருப்தியாகிறதுமில்லை; நான் யாருக்குப் பிரயாசப்பட்டு, என் ஆத்துமாவை நன்மையில்லாமல் குறைவோடே வைக்கிறேனென்று அவன் சிந்திக்கிறதுமில்லை; இதுவும் மாயை, இதுவும் பொல்லாத தொல்லை.

௯ ஒண்டிக்காரனைப்பார்க்கிலும் ஒரு சோடே வாசி; அவர்களுக்கு அவர்கள் வருத்தத்திலே நல்ல பலனுண்டாம்.

௰ ஏனெனில் ஒருவன் விழுந்தால் அவனை அவன் உடனாளி எடுத்துவிடுவான்; ஆனால் விழுகிற ஒண்டிக்காரனுக்கு ஐயோ, ஏனெனில் அவனை எடுப்பதற்குத் துணை இல்லை.

௰௧ இரண்டுபேராய்ப் படுத்துக்கொண்டிருந்தால் அவர்களுக்கு அனலுண்டாம்; ஒருவனுக்கு அனலுண்டாவது எப்படி?

௰௨ ஒருவன்மேல் யாவனொருவன் மேற்பலனாய் வந்தால், இரண்டுபேரானவர்கள் அவனுக்கு எதிரே நிற்கலாம்; முப்புரிநூல் சீக்கிரமாய் அறாது.

௰௩ ¶ இனிப் புத்திகேட்க அறியாத கிழவனும், மூடனுமாகிய இராசாவைப்பார்க்கிலும் ஏழையும், ஞானியுமாகிய இளைஞனே வாசி.

௰௪ ஏனெனில் அரசாளச் சிறைச்சாலையிலிருந்து புறப்படுவாருமுண்டு; இராசாங்கத்தில் பிறந்து, ஏழையாவாருமுண்டு.

௰௫ சூரியன்கீழ்ச் சீவனுள்ள அனைவரும் இராசாவின் பட்டத்தில் வந்து நிலைக்கப்போகிற பிள்ளையோடே மனது இசைவாயிருக்கிறதைக் கண்டேன்.

௰௬ அவர்களுக்குமுன் அப்படிச் செய்த சகல சனங்களின் இலக்கத்துக்கு முடிவில்லை; இனி இருப்பவர்கள் இவன்மேலும் பிரியம் வைக்காதேபோவார்கள்.

௰௭ ஆகையால் இதுவும் மாயையும், ஆவியை அரிப்பதுமாயிருக்கிறது.

## ௫. அதிகாரம்.

நீ பராபரனுடைய வீட்டுக்குப் போகிறபோது, உன் காலைக் காத்து, மூடரைப்போலப் பலியை இடுவதைப்பார்க்கிலும் கேட்கிறதற்குச் சேர்; ஏனெனில் அவர்கள் பொல்லாப்பைச் செய்வதற்காக அறியாதவர்களாய் இருக்கிறார்கள்.

௨ நீ பராபரனுக்கு முன்பாக வசனத்தை ஊற்ற வாய் பதறுகிறவனாய் இராதிரு; உன் இருதயம் தீவிரித்திருக்கவும் வேண்டாம்; ஏனெனில் பராபரன் பரமண்டலங்களிலிருக்கிறவர்; நீயோ பூமியிலிருக்கிறவன்; ஆகையால் உன் வார்த்தைகள் மட்டாயிருப்பதாக.

௩ ஏனெனில் தொல்லையின் திரட்சியிலே சொப்பனம் பிறக்கிறதுபோலே வார்த்தைகளின் திரட்சியிலே மூடனில் சத்தம் பிறக்கும்.

௪ *நீ பராபரனுக்குப் பொருத்தனை சொல்லிக்கொண்டால் அதைச் செலுத்தத் தாமதியாதிரு; ஏனெனில் மூடரின்மேல் அவருக்கு விருப்பமில்லை; நீ நேர்ந்துகொண்டதைச் செலுத்து. *௪ மோ. ௩௰. ௩. ௫ மோ. ௨௩. ௨௧, ௨௩.

௫ நீ நேர்ந்துகொண்டும் செலுத்தாதே போகிறதைப்பார்க்கிலும் நேர்ந்துகொள்

ளாதிருக்கிறது தானே.

௬ உன் மாம்சத்தைப் பாவத்திற்குள்ளாக உன் வாயைக் கொடாதிரு; அது புத்திப் பிசகாயிருக்கிறதென்று தூதனுக்கு முன்பாகச் சொல்லாமலுமிரு; பராபரன் உன் சத்தத்தினாலே கோபமாகி, உன் கைகளின் கிரியையை அழிப்பானேன்?

௭ ஏனென்றால் அநேக *சொப்பனங்களில் மாயைகள் உண்டாயிருக்கும், அநேக வார்த்தைகளிலும் அப்படித்தான்; ஆகையால் பராபரனுக்குப் பயந்திரு.

*வாக். ௰. ௰௬.

௮ ¶ ஒரு சீமையில் ஏழைகள் ஒடுக்கப்படுகிறதையும், நியாயமும் நீதியும் கொள்ளையாய்ப் போகிறதையும் கண்டாயானால், அப்படிப்பட்ட செயலினாலே பிரமிக்காதிரு; ஏனெனில் உயர்ந்தவன்மேலே உயர்ந்தவன் காவலாளியாயிருக்கிறான்; இவர்கள் மேல் உயர்ந்தவருமுண்டு.

௯ எல்லாவற்றிலும் இவரே பூமியினுடைய இலாபமானவர்; இவர் பயிர்நிலத்துக்கும் இராசா.

௰ ¶ பணப்பிரியன் பணத்திருப்தியடையான்; எவன் ஏராளத்தைச் சிநேகிக்கிறானோ அவன் வரத்தினால் திருப்தியாவதில்லை; இதுவும் மாயை.

௰௧ பொருள் பெருகினால் அதைத் தின்கிறவர்களும் பெருகுகிறார்கள்; அதின் எசமான்கள் அதைத் தங்கள் கண்களினாலே பார்க்கிறதேயல்லாமல் அவர்களுக்கு அதினால் இருக்கும் பிரயோசனமென்ன?

௰௨ வேலைசெய்கிறவன் கொஞ்சம் சாப்பிட்டாலும், நிரம்பச் சாப்பிட்டாலும் அவன் நித்திரை இன்பமானது; ஐசுவரியவானின் திருப்தியோ அவனைத் தூங்கவொட்டாது.

௰௩ சூரியன்கீழே நான் கண்ட இளைப்புள்ள வேறொரு தீங்குமுண்டு; ஐசுவரியம் தன் எசமான்களாலே அவர்களுக்கே தீமையாகக் காக்கப்படுதல்தானே.

௰௪ ஏனெனில் அந்த ஐசுவரியம் விக்கினமான தொல்லைகளினாலே அழிகிறதுண்டு; அப்படியே அவன் புத்திரனைப் பெற்றிருந்தும் இவன் கையில் ஒன்றுமில்லாதிருக்கும்.

௰௫ அவன் எப்படித் தன் தாயின் கர்ப்பத்திலிருந்து புறப்பட்டானோ, அப்படி அவன் வந்தபடி திரும்ப *நிருவாணமாய்ப் போவான்; அவன் தன் பிரயாசத்தில் ஒன்றையும் தன் கையிலே எடுத்துப்போவதில்லை. *யோபு. ௧. ௨௧. சங். ௪. ௰௭. ௧ திமோ. ௬. ௭.

௰௬ அவன் வந்தபிரகாரமாகத் தானே போகிறானென்கிறதும் இளைப்புள்ள தீங்கு; பின்னை அவன் காற்றுக்குப் பிரயாசப்பட்டதினாலே அவனுக்கு என்ன இலாபம்?

௰௭ தன் நாள்களிலெல்லாம் இருளிலும் சாப்பிட்டு, மெத்தவும் சலித்துக்கொண்டு, நோயும் கடுமையும் அடைந்திருக்கிறான்.

௰௮ ¶ *இதோ உயிரோடிருக்கத் தனக்குப் பராபரன் கட்டளையிட்ட தன் நாள்வரையிலே மனுஷன் புசிக்கிறதும், குடிக்கிறதும், தான் சூரியன்கீழ்ப் பிரயாசப்படுகிற தன் பிரயாசம் அனைத்திலும் நன்மை அநுபவிக்கிறதும் நேர்த்தியான நல்லகாரியம் என்கிறதை நான் கண்டேன்; ஏனெனில் இது அவன் பங்கு. *பிர. ௩. ௨௨.

௰௯ எந்த மனுஷனுக்காகிலும் பராபரன் ஐசுவரியத்தையும், சம்பத்தையும் கொடுத்து, அதிலே சாப்பிடவும், தன் பங்கை எடுக்கவும், தன் பிரயாசத்திலே மகிழ்ச்சியாயிருக்கவும், அவனுக்கு அதிகாரமும் அளித்தால் அது பராபரனுடைய ஈவு.

௨௰ ஏனெனில் பராபரன் அவன் இருதயத்தின் மகிழ்ச்சியால் அவனுக்கு மறு உத்தரவு அருளிச்செய்கிறபடியினாலே, அவன் தன் சீவனுடைய நாள்களை அத்தனையாய் நினையான்.

## ௬. அதிகாரம்.

சூரியன்கீழ் நான் கண்ட ஒரு தீங்கிருக்கிறது; அது மனுஷரிடத்தில் வெகுவாய்க் காணப்படுகிறது.

௨ அதாவது: மனுஷனிருக்கிறான்; அவனுக்குப் பராபரன் ஐசுவரியமும் ஆஸ்தியும் கனமும் கொடுத்தார்; அவன் என்ன இச்சித்தாலும் அவை எல்லாம் அவன் ஆத்துமாவுக்குத் தாழ்ச்சியில்லாமலிருக்கின்றன; என்றாலும், அவைகளிலே சாப்பிடுகிறதற்குப் பராபரன் அவனுக்கு அதிகாரத்தைக் கட்டளையிட்டதில்லை; அந்நிய மனுஷனே அதைச் சாப்பிடுகிறான்; இதுவும் மாயையும் பொல்லாத நோயுமாமே.

௩ ஒரு மனுஷன் நூறு பிள்ளைகளைப் பெற்றாலும், அநேகம் வருஷம் உயிரோடிருந்தாலும், அவன் ஆயுசின் நாள்கள் பெருகிப்போனாலும், அவன் ஆத்துமா நன்மையால் திருப்தியடையாமலும், அவனுக்குப் பிரேதக்கல்லறைமுதலாயில்லாமலும் போயிற்றேயாகில், அவனைப்பார்க்கிலும் கர்ப்பம் விழுந்துபோகிற பிண்டம் வாசி என்பேன்.

௪ ஏனெனில் இது பாழிலே வந்து இருளிலே போகிறது; இதின்பேர் இருளால் மூடப்படும்.

௫ இது சூரியனைக் கண்டதுமில்லை, அறிந்ததுமில்லை, அவனைப்பார்க்கிலும் இதற்கு ஒய்வு இருக்கிறது.

௬ அவன் நன்மைகாணாமல் இராயிரம் வருஷம் பிழைத்திருந்தும், எல்லாரும் ஒரே இடத்திற்குப் போகிறதில்லையோ?

௭ ¶ மனுஷனுடைய பிரயாசமெல்லாம் அவன் வாய்க்குத்தானே; ஆனால் அவன் மனது நிரம்பாது.

௮ மற்றப்படி மூடனைப்பார்க்கிலும் ஞானிக்கும், சீவனுள்ளோருக்கும் முன்பாக நடக்க அறிந்த ஏழைக்கும் உண்டான மேன்மையென்ன?

௯ ஆசை அலைந்து தேடுகிறதைப்பார்க்கிலும் கண்கள் பார்த்திருக்கிறதே வாசி; அதுவும் மாயையும் ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.

௰ ¶ ஒருவன் எப்படிக்கொத்தவனானாலும் முதல் தானே அவன்பேர் இன்னதென்று சொல்லப்பட்டது; அவன் மனுஷனென்று தெரிந்திருக்கும்; அவன் தன்னிலும் பலத்தவரோடே வழக்காடமாட்டான்.

௰௧ மாயையைப் பெருகப்பண்ணுகிற திரளான வர்த்தமானங்கள் உண்டாயிருக்கையால் மனுஷனுக்கு என்ன இலாபம்?

௰௨ ஏனெனில், மனுஷன் உயிரோடிருந்து *நிழலைப்போலே போகிற தன் மாயையினுடைய நாள்வலாயாகிய இச்சீவனிலே அவனுக்கு எது நலமாயிருக்கிறதென்று அறிந்தவன் யாவன்? ஏனென்றால் தனக்குப் பின்பு சூரியன்கீழ்ச் சம்பவிப்பதேதென்று மனுஷனுக்கு அறிவிப்பவன் யாவன்?

*சங். ௩௯. ௭.

## ௭. அதிகாரம்.

நல்ல தயிலத்தைப்பார்க்கிலும் *நற்கீர்த்தியும், ஒருவனுடைய செனனநாளைப்பார்க்கிலும் மரணநாளும் வாசி. *வாக். ௨௨. ௧.

௨ விருந்துவீட்டுக்குப் போகிறதைப்பார்க்கிலும் துக்கவீட்டுக்குப் போவதே வாசி; ஏனென்றால், இதிலே எல்லா மனுஷரின் முடிவு காணப்படுகிறபடியினாலே இதை உயிரோடிருக்கிறவன் தன் மனதிலே வைக்கலாம்.

௩ நகைப்பைப்பார்க்கிலும் *சலிப்பு நல்லது; ஏனெனில் முகத்தின் துக்கத்திலே இருதயம் குணப்படும். *மத். ௫. ௪.

௪ ஞானிகளின் இருதயம் துக்கவீட்டிலும், மூடரின் இருதயம் சந்தோஷவீட்டிலும் இருக்கிறது.

௫ ¶ ஒருவன் மூடரின் பாட்டைக் கேட்பதைப்பார்க்கிலும், ஞானியின் அதட்டுதலைக் கேட்பதே நலம்.

௬ ஏனெனில் பானையின்கீழ் எரிகிற முள்

ருக்களின் படபடப்பு எப்படிப்பட்டதோ அப்படியே மூடனுடைய நகைப்பிருக்கிறது; இதுவும் மாயை.

௭ ¶ இடுக்கண் செய்தல் ஞானியைப் பயித்தியப்படுத்தும்; பரிதானம் இருதயத்தைக் கெடுக்கும்.

௮ ஒரு காரியத்தின் துவக்கத்தைப்பார்க்கிலும் அதின் முடிவு வாசி; மனமேட்டிமையானவனைப்பார்க்கிலும் மனது சாந்தமானவன் வாசி.

௯ *சினமடைய உன் ஆவியிலே தீவிரிக்காதிரு; ஏனெனில் சினம் மூடரின் மார்பிலே தங்கும். *யாக். ௧. ௰௯.

௰ இந்நாள்களைப்பார்க்கிலும் முன்நாள்கள் வாசியாயிருந்தது என்னவென்று சொல்லாதிரு; ஏனெனில் நீ இப்படிக் கேட்பது ஞானத்தோடேகூடியதல்ல.

௰௧ ¶ சுதந்தரத்தோடே ஞானமே நல்லது; சூரியனைக் காண்கிறவர்களுக்கு இதினாலே பிரயோசனமுண்டு.

௰௨ ஏனெனில் ஞானத்தின் நிழலிலிருக்கிறது திரவியத்தின் நிழலிலிருக்கிறதற்குச் சரி; ஞானம் தன்னுடையவர்களை உயிர்ப்பிக்கிறது அறிவினுடைய மேன்மையாயிருக்கிறது.

௰௩ ¶ பராபரனுடைய செயலையே நோக்கு; ஏனெனில் அவர் கோணலாக்குகிறதை யார் செம்மையாக்கலாம்?

௰௪ நீ நல்ல நாளிலே நன்மை அநுபவித்திரு; ஆனால் தீங்குநாளையும் நோக்கிப்பார்; தனக்குப்பிற்பாடு இருப்பதொன்றையும் மனுஷன் கண்டுபிடியாதபடிக்கு அதனோடே இதையும் பராபரன் உண்டாக்கினார்.

௰௫ ¶ இவை எல்லாவற்றையும் என் மாயையின் நாள்களிலே கண்டேன்; *தன் நீதியிலே கெட்டுப்போகிற நீதிமானுமுண்டு; தன் பொல்லாப்பிலே நீடித்திருக்கிற ஆகாதவனுமுண்டு. *பிர. ௮. ௰௪.

௰௬ மிஞ்சின நீதிமானாயிராதே; உன்னை அதிகமான ஞானியுமாக்காதே; உன்னை நீ ஏன் பாழ்க்கடிக்கவேண்டும்?

௰௭ மெத்த ஆகாதவனும் பயித்தியக்காரனுமாயிராதே; உன் காலத்திற்கு முன்னே நீ ஏன் சாகவேண்டும்.

௰௮ நீ இதைப் பிடித்திருப்பதும், நீ இதைக் கைவிடாதிருப்பதும் நல்லது; ஏனெனில் பராபரனுக்குப் பயப்படுகிறவன் அவைகளுக்கெல்லாம் நீங்கிப்போவான்.

௰௯ ¶ ஞானம் ஞானியைப் பட்டணத்திலிருக்கிற பத்து அதிபதிகளிலும் பலவானாக்கும்.

௨௰ *ஏனென்றால் ஒரு பாவமும்செய்யாமல் நன்மையையே செய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை. *௧ இரா. ௮. ௪௬. வாக். ௨௰. ௯.

௨௧ ¶ சொல்லப்படுகிற எல்லா வார்த்தைகள்மேலும் உன் இருதயத்தை வைக்காதே; உன் வேலைக்காரன் உன்னைச் சபித்தாலும் அதை நீ கேளாதிருக்கும்படிக்குத்தானே.

௨௨ ஏனெனில் அநேகந்தரம் நீயும் பிறரைச் சபித்தாயென்று உன் மனது போந்த பிரகாரமாக அறிந்திருக்கும்.

௨௩ இவையெல்லாம் நியாயமாய்ச் சோதித்துப்பார்த்தேன்; ஞானமடைவேனென்று நான் சொல்லியும் அது எனக்குத் தூரமாயிருந்தது.

௨௪ தூரமும், மகா ஆழமுமாயிருக்கிறதைக் கண்டுபிடிப்பவன் யாவன்?

௨௫ ¶ ஞானத்தையும் திட்டமான நிதானத்தையும் அறியவும், ஆராயவும், தேடவும், *மதிகேட்டின் ஆகாமியத்தையும் புத்திமயக்கங்களின் பயித்தியத்தையும் அறியவும் நான் என் இருதயத்தாலே சுற்றித்திரிந்தேன். *பிர. ௧. ௰௭.

௨௬ நெஞ்சு கண்ணிகளும் வலைகளும், கைகள் கட்டுகளுமாயிருக்கிற ஸ்திரி *சாவிலும் கசப்பென்று கண்டேன்; பராபரனுக்குமுன்பாகச் சற்குணனாயிருக்கிறவன் அவளுக்குத் தப்புவான், †பாவியோ அவளால் பிடிபடுவான்.

*வாக். ௫. ௩. ௪. †வாக். ௨௨. ௰௪.

௨௭ இதோ இதைக் கண்டுபிடித்தேனென்று பிரசங்கி சொல்லுகிறான்; திட்டமான நிதானத்தைக் கண்டுபிடிப்பதற்கு ஒவ்வொன்றாய்ப் பார்த்தேன்.

௨௮ அதை என் ஆத்துமா இன்னம் தேடுகிறது; அதை நான் இன்னம் கண்டுபிடித்ததில்லை; ஆயிரம்பேரில் ஒரு மனுஷனைக் கண்டேன்; ஆனால் இவர்களெல்லாரிலும் ஒரு ஸ்திரியை நான் கண்டதில்லை.

௨௯ இதோ பராபரன் மனுஷனைச் செம்மையானவனாக உண்டாக்கினார் என்கிறதைமாத்திரம் கண்டுபிடித்தேன்; இவர்களோ அநேகம் உபாயதந்திரங்களைத் தேடினார்கள்.

## ௮. அதிகாரம்.

ஞானிக்கு ஒத்தவன் யாவன்? காரியத்தின் வியார்த்தியை அறிந்தவனுக்கு ஒத்தவன் யாவன்? மனுஷனுடைய ஞானம் அவன் முகத்தை வெளிச்சமாக்கும்; அதினால் அவன் முகத்தின் துஷ்டம் மாறும்.

௨ ¶ *இராசாவின் கட்டளையைக் கவனித்து நடவென்று நான் உன்னை எச்சரிக்கிறேன்; இதை நீ பராபரனுக்கிட்ட ஆணையின்படியே செய். *வாக். ௨௪. ௨௧.

௩ நீ அவன் முகப்பார்வையால் கலங்காதபடிக்கு நட; பொல்லாத காரியத்திலே நில்லாதே; ஏனெனில் தனக்குச் சித்தமாயிருக்கிறவை எல்லாவற்றையும் செய்வான்.

௪ இராசாவின் வார்த்தை எல்லாம் அதிகாரமுள்ளது; என்னசெய்கிறீர் என்று அவனோடே யாவன் சொல்லுவான்?

௫ ¶ *கற்பனையைக் கைக்கொள்ளுகிறவன் துர்க்காரியத்தைக் கண்டறிவதில்லை; ஞானியின் இருதயம் காலத்தையும் நியாயத்தையும் அறியும். *உரோ. ௰௩. ௩.

௬ *ஏனெனில் எல்லா விருப்பத்துக்கும் காலமும் நியாயமுமுண்டு; ஏனென்றால் மனுஷன்மேலிருக்கிற அவனுடைய தீங்கு திரளானது. *பிர. ௩. ௧.

௭ என்ன சம்பவிக்குமென்று அறியானே; சம்பவிக்கும் காலத்தையோ அவனுக்கு அறிவிப்பவன் யாவன்?

௮ ¶ ஆவியை விடாதிருக்கத் தன் ஆவியின்மேலே மனுஷன் அதிபதியல்ல; மரணநாளின்மேல் அவனுக்கு ஆளுகையுமில்லை; அந்தப் போருக்கு நீங்குதலுமில்லை; ஆகாமியம் தன்னுடையவர்களை விடுவிப்பதுமில்லை.

௯ ¶ சூரியன் கீழ்ச் செய்யப்படும் எல்லாக் கிரியையின்மேலும் நான் என் இருதயத்தை வைத்து, இவையெல்லாம் கண்டேன்; மனுஷனை மனுஷன் தனக்குத் தீமையாக ஆளுகிற காலமுமுண்டு.

௰ அந்தப்படி ஆகாதவர்கள் அடக்கம்பண்ணப்படுகிறதையும் கண்டேன்; அதற்குச் சனங்கள் வந்தார்கள்; அதற்குப் பரிசுத்தஸ்தலத்திலிருந்து நடந்துபோகிறவர்களும் உண்டாயிருந்தார்கள்; நீதஞ்செய்கிறவர்களோ ஊரிலே மறக்கப்பட்டார்கள்; இதுவும் மாயை.

௰௧ துர்க்கிரியைக்குத்தக்க நியாயத்தீர்ப்புச் சீக்கிரம் நடவாதபடியால், மனுப்புத்திரரின் இருதயம் அவர்களுக்குள்ளே பொல்லாப்பைச் செய்ய நிறையப்படும்.

௰௨ பாவி நூறுதரம் பொல்லாப்பைச் செய்து நீடித்திருந்தாலும் *பராபரனுக்குப் பயந்து, அவருடைய முகத்துக்கு முன்பாக அஞ்சுதலாயிருக்கிறவர்களே நன்றாயிருப்பார்களென்று நான் அறிவேன்,
*சங். ௩௭. ௯. மு.

௰௩ ஆனால் ஆகாதவன் நன்றாயிருப்பதில்லை; அவன் நாள் நீடித்திருப்பதுமில்லை; ஒரு நிழலைப்போலிருப்பான்; ஏனெனில் அவன் பராபரனுக்குமுன்பாக அஞ்சுதலில்லாதிருக்கிறான்.

௰௪ ¶ பூமியின்மேல் நடக்கிற வேறொரு மாயையுமுண்டு; அதாவது: நீதிமான்களுண்டு; ஆகாதவர்களின் செய்கைக்கு வருவது

போல அவர்களுக்கு வரும்; ஆகாதவர்களு முண்டு; நீதிமான்களின் செய்கைக்கு வருவதுபோல அவர்களுக்கு வரும்; இதுவும் மாயை என்கிறேன்.

௰௫ ஆகையால் நான் மகிழ்ச்சியைப் புகழ்ந்திருக்கிறேன்; ஏனெனில் *புசிப்பதும், குடிப்பதும், மகிழ்வதுமேயல்லாமல் வேறொரு நன்மையும் சூரியன்கீழே இருக்கிறவைகளால் மனுஷனுக்கில்லை; பராபரன் அவனுக்குச் சூரியன்கீழ்க் கட்டளையிட்ட அவன் சீவனின் நாள்களில் அவனுக்கு அவன் பிரயாசத்தினால் சேருகிறது அதுவே. *பிர. ௨. ௨௪: ௩. ௰௨, ௨௨.

௰௬ ¶ நான் ஞானத்தை அறிகிறதின்மேலும், மனுஷன் இரவும்பகலும் தன் கண்களில் நித்திரையும் காணாதிருக்கத்தக்கவிதமாய்ப் பூமியிலுண்டாயிருக்கிற தொல்லையைப் பார்க்கிறதின்மேலும் என் இருதயத்தை வைத்தபோது,

௰௭ சூரியன்கீழ்ச் செய்யப்படும் செய்கையை மனுஷன் கண்டுபிடிக்கமாட்டானென்கிறதைப் பராபரனுடைய செயலை எல்லாம் நோக்குகையில் கண்டேன்; அதைத் தேட மனுஷன் எத்தனை பிரயாசப்பட்டாலும் கண்டுபிடியான்; தனக்கும் அறியப்படுமென்று ஞானி சொல்லியும் அவனும் அதைக் கண்டுபிடிக்கமாட்டான்.

## ௯. அதிகாரம்.

அதேனென்றால் இவைகளை எல்லாம் நான் என் மனதிலே வைத்து, இவைகளை எல்லாம் வகையறுக்கப்பார்த்தேனே; என்னவெனில் நீதிமான்களும், ஞானிகளும், அவர்கள் கிரியைகளும் பராபரனுடைய கையிலிருந்தாலும், அவர்களுக்கு முன்பாக இருக்கிறவை எல்லாவற்றிலும் சிநேகமாகிலும் பகையென்கிலும் மனுஷனுக்குத் தெரியாதென்பதைத்தானே.

௨ சம்பவிக்கிற யாவும் எல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கும்; நீதிமானுக்கும் ஆகாதவனுக்கும், நற்குணமும் சுத்தமுமாயிருக்கிறவனுக்கும், அசுத்தமாயிருக்கிறவனுக்கும், பலியிடுகிறவனுக்கும் பலியிடாதவனுக்கும், நல்லவனுக்கும் பாவிக்கும், ஆணையிடுகிறவனுக்கும் ஆணைக்குப் பயப்படுகிறவனுக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறது.

௩ எல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறதும், மனுப்புத்திரரின் இருதயம் பொல்லாப்பினாலும் நிறைந்திருக்கிறதும், அவர்கள் உயிரோடிருக்கிற நாள்களில் அவர்கள் இருதயத்தில் பயித்தியங்களிருக்கிறதும், பிற்பாடு அவர்கள் செத்தவர்களண்டைக்குப் போகிறதும், சூரியன்கீழ் நடக்கிற எல்லாவற்றிலும் விசேஷித்த தீங்குதானே.

௪ ஏனெனில் இதற்கு நீங்கலாய்ப் பிரிக்கப்படுகிறவன் யாவன்? உயிரோடிருக்கிற அனைவரிடத்திலுமோ இன்னம் நம்பிக்கையுண்டு; ஏனென்றால் செத்த சிங்கத்தைப் பார்க்கிலும் உயிரோடிருக்கிற நாய் வாசி.

௫ உயிரோடிருக்கிறவர்கள் தாங்கள் மரிப்பதை அறிவார்களே; மரித்தவர்கள் ஒன்றுமறியார்கள்; அப்புறம் அவர்களுக்கு இலாபமுமில்லை; ஏனென்றால் அவர்கள்பேர் மறக்கப்பட்டிருக்கிறது.

௬ அவர்கள் சிநேகமும், அவர்கள் பகையும், அவர்கள் வைராக்கியமும் அழிந்து தீர்ந்தன; சூரியன்கீழே செய்யப்படுகிறதொன்றிலும் அவர்களுக்கு இனி என்றைக்கும் பங்கில்லை.

௭ ¶ நீ போய் *உன் அப்பத்தை மகிழ்ச்சியுடனே புசித்து, உன் திராட்சப்பழஇரசத்தை நற்குண இருதயத்துடனே குடி; ஏனெனில் பராபரன் உன் கிரியைகளுக்குப் பிரியப்பட்டிருக்கிறார். *பிர. ௨. ௨௪.

௮ எல்லாக்காலத்திலும் உன் வஸ்திரங்கள் வெளுத்தவைகளும், உன் தலையின்மேல் எண்ணெய் குறைபடாததுமாயிருக்கட்டும்.

௯ பராபரன் உனக்குச் சூரியன்கீழ் உன் மாயையின் நாள்களுக்கெல்லாம் கட்டளையிட்டு, நீ சிநேகித்துமிருக்கிற *உன் பெண்சாதியோடே உன் மாயையான சீவனின் நாள்களிலெல்லாம் சீவனை அநுபவி; ஏனெனில் இச்சீவனிலும் நீ சூரியன்கீழ்ப்படுகிற உன் வருத்தத்திலும் அதுவே உன் பங்கு. *வாக். ௫. ௰௮.

௰ செய்ய உன் கைக்கு நேரிடுகிறவை எல்லாவற்றையும் உன் பலத்தோடேசெய்; ஏனெனில் நீ போகப்போகிற பாதாளத்திலே செய்கையும், வித்தையும், அறிவும், ஞானமுமில்லை.

௰௧ ¶ நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழ்க் கண்டதேதெனில், ஓடுகிறதற்கு வேகமுள்ளவர்களின் வேகமும், யுத்தத்திற்குச் சவுரியவான்களின் சவுரியமும் போதாது; பிழைப்புக்கு ஞானமுள்ளவர்களின் ஞானமும் போதாது; ஐசுவரியமும் அடைகிறதற்குப் புத்திமான்களின் புத்தியும் போதாது; கிருபை அடைகிறதற்கு அறிவாளிகளின் அறிவும் போதாது; அவர்களெல்லாருக்கும் வேளையும், தேவச்செயலும் நேரிடவேண்டுமென்பதுதானே.

௰௨ தன் காலத்தையும் மனுஷன் அறியானே; மச்சங்கள் பொல்லாத வலையில் அகப்படுகிறதுபோலவும், குருவிகள் கண்ணியில் பிடிபடுகிறதுபோலவும் மனுப்புத்திரர் பொல்லாத காலத்திலே கண்ணி அசுப்பாய் அவர்கள்மேலே விழும்போது, அவைகளைப்போலே சிக்கப்படுகிறார்கள்.

௰௩ ¶ சூரியன்கீழ் ஞானமுண்டென்கிறதையும் கண்டேன்; அதுவே என் பார்வைக்குப் பெரியது.

௰௪ ஒரு சிறிய பட்டணமிருந்தது; அதிலுள்ள மனுஷர் கொஞ்சம்; அதின்மேல் ஒரு பெரிய இராசாவந்து, அதை வளைந்துகொண்டு, அதற்கு எதிராகப் பெரிய கொத்தளங்களைக் கட்டினான்.

௰௫ ஆனால் ஞானமுள்ள ஒரு ஏழைமனுஷன் அதில் காணப்பட்டான்; அவன் அந்தப் பட்டணத்தைத் தன் ஞானத்தினாலே விடுவித்தான்; ஒருவனும் அந்த ஏழைமனுஷனை நினைத்திருந்ததில்லை.

௰௬ ஆகையால் ஏழையின் ஞானம் அசட்டைபண்ணப்பட்டு, அவன் வார்த்தைகள் கேட்கப்படாமற்போனாலும் *வீரியத்தைப்பார்க்கிலும் ஞானமே நலமென்றேன்.
*பிர. ௭. ௨௰. வாக். ௨௧. ௨௨: ௨௪. ௫.

௰௭ ¶ மூடருடைய அதிபதியின் கூக்குரலைப்பார்க்கிலும், ஞானிகளுடைய வார்த்தைகளே அமரிக்கையோடே கேட்கப்படத்தக்கவைகள்.

௰௮ யுத்த ஆயுதங்களைப்பார்க்கிலும் ஞானமே நலம்; ஒரே பாவியோவென்றால் திரளான நன்மையைக் கெடுப்பான்.

## ௰. அதிகாரம்.

செத்த இக்கள் தயிலக்காரனுடைய பரிமளதயிலத்தை நாறவும் கெட்டுப்போகவும்பண்ணும்; கொஞ்சம் பயித்தியம் ஞானத்திலும் கனத்திலும் பிரபலமானவனை அப்படியே செய்யும்.

௨ ¶ ஞானியின் இருதயம் அவன் வலதுபக்கத்திலும், மூடனுடைய இருதயமோ அவன் இடதுபக்கத்திலும் இருக்கின்றன.

௩ மூடன், வழியிலே நடந்தாலும் மதிகெட்டவனாயிருக்கிறான்; தான் பயித்தியக்காரனாய் இருக்கிறதை எல்லாருக்கும் சொல்லுகிறான்.

௪ ¶ துரையின் கோபம் உன்மேல் எழும்பினால் உன் தானத்தைவிட்டு விலகாதே; ஏனெனில் தாழ்தல் பெரிய குற்றங்களை அமர்த்திவிடும்.

௫ அதிபதியினிடத்திலிருந்து உண்டாகும் தப்பிதமாகிய ஒரு தீங்கிருக்கிறது; அதைச் சூரியன்கீழ்க் கண்டேன்.

௬ பயித்தியக்காரன் மகா உயரங்களில் வைக்கப்படுகிறான்; சீமான்களோ தாழ உட்கார்ந்திருக்கிறார்கள்.

௭ வேலைக்காரர் குதிரைகள்மேல் இருக்கிறதையும், பிரபுக்கள் வேலைக்காரரைப்போலத் தரையிலே நடக்கிறதையும் கண்டேன்.

௮ ¶ *படுகுழியை வெட்டுகிறவன் அதிலே விழுவான்; அடைப்பைப் பிடுங்குகிறவனைப் பாம்பு கடிக்கும். *வாக். ௨௬. ௨௭.

௯ கல்லுகளைப் பேர்த்து எடுக்கிறவன் அவைகளால் நோயடைகிறான்; மரங்களைப் பிடுங்குகிறவன் அவைகளால் மோசப்படுகிறான்.

௰ ஒருவன் இருப்பு ஆயுதத்தை மழுக்கிவிட்டபோது அதின் கருக்கைத் தீட்டாதே போனால் அதிக பெலனாய் உழைக்கவேண்டியது; ஆகையால், ஒரு காரியத்தைச் செவ்வையாய்ச் செய்கிறதற்கு ஞானமே பிரதானம்.

௰௧ ¶ தடைகட்டப்படாமல் பாம்பு கடித்தால் வாய்ச்சாலகனாலே பிரயோசனம் இல்லை.

௰௨ ஞானியினுடைய வாய்விசேஷங்கள் இன்பமாய் இருக்கின்றன; மூடனுடைய உதடுகளோ அவனைத்தானே விழுங்கும்.

௰௩ அவன் வாய்விசேஷங்களின் துவக்கம் அவமதியும், அவன் வாக்கின் முடிவு பொல்லாத பயித்தியமுந்தானே.

௰௪ மூடன் மிகுதியாய்ப் பேசுகிறான்; ஆகிலும் நடப்பது ஏதென்கிறதை மனுஷன் அறியான்; தனக்குப் பிற்பாடு நடப்பதை அவனுக்கு அறிவிப்பவன் யாவன்?

௰௫ ஊருக்குப்போக வழியை அறியாததினாலே மூடரின் பிரயாசம் அவர்களை இளைக்கப்பண்ணும்.

௰௬ ¶ *இராசா இளைஞனுமாய்ப் பிரபுக்கள் அதிகாலமே உண்கிறவர்களுமாயிருக்கப்பட்ட தேசமே, உனக்கையோ! *ஏசா. ௩. ௪.

௰௭ இராசா தலைவர் புத்திரனுமாய், பிரபுக்கள் வெறி எடுக்கவல்ல, பெலன்கொள்ள ஏற்றவேளையில் உண்கிறவர்களுமாய் இருக்கப்பட்ட தேசமே, நீ பாக்கியமுள்ளது!

௰௮ ¶ மகா சோம்பலினாலே மேல்மச்சு ஒழுக்காகும்; கைகளின் நெகிழ்வினாலே வீடு ஒழுக்காகும்.

௰௯ விளையாட்டுக்கு விருந்துகளைப்பண்ணுகிறார்கள்; மதுபானம் ஜீவனைச் சந்தோஷமாக்கும்; பணமே அதற்கு எல்லாம் நிருவாகம்பண்ணும்.

௨௰ உன் மனதிலும் *இராசாவைச் சபிக்காதே; உன் சயன அறையிலும் ஐசுவரியவானைச் சபிக்காதே; ஏனெனில் ஆகாயத்துப் பறவைகள் அந்தச் சத்தத்தைக்கொண்டுபோம்; செட்டைகளுள்ளவைகள் செய்தியைப்போய் அறிவிக்கும். *௨ மோ. ௨௨. ௨௮.

## ௰௧. அதிகாரம்.

உன் ஆகாரத்தைத் தண்ணீர்கள்மேல் போகவிடு; ஏனெனில் வெகுநாளுக்குப்பிறகு அதின் பலனைக் காண்பாய்.

௨ *ஏழுபேருக்கும், எட்டுப்பேருக்குங் கூடப் பங்குகொடு; ஏனெனில் பூமியின்மேல் என்ன தீங்கு வருமோ என்றறியாய். *லூக். ௰௬. ௯.

௩ மேகங்கள் நிறைந்திருந்தால் மழையைப் பூமியின்மேல் பொழியும்; மரம் அப்போது தென்திசையாய் விழுந்தாலும், வடதிசையாய் விழுந்தாலும், விழுந்த இடத்திலே மரமிருக்கும்.

௪ காற்றைக் கவனிக்கிறவன் *விதைப்பதில்லை, மேகங்களை நோக்குகிறவன் அறுப்பதுமில்லை. *௨ கொரி. ௯. ௬.

௫ *காற்றின்வழி ஏதென்றும், கர்ப்பவதியின் வயிற்றில் †எலும்புகள் உருவாகும் விதம் ஏதென்றும், நீ அறியாதிருக்கிறதுபோல, எல்லாவற்றையும் செய்கிற பராபரனுடைய செயலையும் அறியாய்.

*யோபு. ௩. ௮. †சங். ௱௩௯. ௰௩–௰௬.

௬ காலமே உன் விதையை விதை; அந்திநேரத்திலும் உன் கையை நெகிழவொட்டாதே; ஏனெனில் எது வாய்க்கும்? அது வாய்க்குமோ? இது வாய்க்குமோ? இரண்

டும் சரிநயமாய் வருமோ? என்கிறதை அறியாய்.

௭ ¶ வெளிச்சம் இன்பமும் சூரியனைக் காண்கிறது கண்களுக்குப் பிரியமுமாமே.

௮ ஆனால் மனுஷன் வெகுவருஷம் உயிரோடிருந்து, அவைகளிலெல்லாம் மகிழ்ச்சியாயிருந்தாலும், இருளின் நாள்களையும் நினைக்கவேண்டும்; ஏனெனில் அவைகள் அநேகமாயிருக்கும்; வந்து சம்பவித்தவையெல்லாம் மாயை.

௯ ¶ வாலிபனே, உன் இளமையிலே சந்தோஷப்படு; உன் வாலிப நாள்களிலே உன் இருதயம் உன்னைப் பூரிப்பாக்கட்டும்; உன் நெஞ்சின் வழிகளிலும், உன் கண்களின் தோற்றுதல்களிலும் நட; ஆனால் *இவைகள் எல்லாவற்றின்நிமித்தமும் பராபரன் உன்னை நியாயத்திலே கொண்டுவந்து நிறுத்துவாரென்றறி. *பிர. ௰௨. ௰௪.

௰ நீ ஆகாதகுணத்தை உன் இருதயத்தைவிட்டு அகற்றிப் பொல்லாப்பை உன் மாம்சத்தைவிட்டு நீங்கப்பண்ணு; ஏனெனில் இளவயதும் வாலிபமும் மாயை.

## ௰௨. அதிகாரம்.

தீங்குநாள்கள் வராததற்குமுன்னும், எனக்குப் பிரியமானவைகளல்லவென்று நீ சொல்லும் வருஷங்கள் சேராததற்குமுன்னும்,

௨ சூரியனும், வெளிச்சமும், சந்திரனும், நட்சத்திரங்களும் அந்தகாரப்படாததற்குமுன்னும், மேகங்கள் மழைக்குப்பிறகு திரும்பத்திரும்ப வராததற்குமுன்னும், நீ உன் சிருஷ்டிகரை உன் வாலிபத்தின் நாள்களில் நினை.

௩ ஏனெனில் அப்போது வீட்டுக்காவலாளிகள் தள்ளாடிப் பெலசாலிகள் கூனிப்போய், எந்திரக்கற்கள் கொஞ்சமானதினால் ஓய்ந்து, பலகணிகளால் பார்க்கிறவைகள் இருண்டு,

௪ எந்திரச்சத்தம் தாழ்ந்ததினால் தெருவாசலின் கதவுகள் அடைபட்டு, குருவியின் கூவுதலுக்கு எழுந்திருக்கிறதுண்டாய், கீதவாத்தியத்திற்கு ஆனவைகளெல்லாம் அடங்கிப்போம்.

௫ மேட்டுக்காகப் பயமுண்டாகி, வழியிலே திகில்கள் காணும்; வாதுமைமரம் பூப்பூக்கும்; வெட்டுக்கிளி சுமைசுமத்தப்பட்டிருக்கும்; பசித்தீபனமும் அற்றுப்போம்; ஏனெனில் மனுஷன் தன்னுடைய நித்தியவளவுக்குப் போகிறான்; அவன்நிமித்தமாய்ப் புலம்புகிறவர்கள் வீதியிலே திரிவார்கள்.

௬ ஆகையால் வெள்ளிக்கயிறு விட்டுப்போய், பொற்கிண்ணி நசுங்கி, ஊற்றின்மேல் சால் உடைந்து, துரவண்டையில் உருளை நொறுங்குண்டு,

௭ இந்தப்படி *மண்ணானது பூமிக்குத் திரும்பி, ஆவி தன்னைத்தந்த பராபரன் அண்டைக்கு மறுபடியும் போகாததற்குமுன்னே அவரை உன் வாலிபத்திலே நினை.
*௧ மோ. ௩. ௰௯.

௮ ¶ ஆ எத்தனையான மாயையென்று பிரசங்கிசொல்லுகிறான்; எல்லாம் மாயையே.

௯ பிரசங்கி ஞானியாயிருந்ததுமல்லாமல், அவன் சனத்துக்கும் அறிவைப் போதித்து, கவனமாய்க் கேட்டு ஆராய்ந்து, *அநேகம் வாக்கியங்களை வகையாக்கி சேர்த்தான்.
*௧ இரா. ௪. ௩௧, ௩௨.

௰ இதமான வார்த்தைகளைக் கண்டுபிடிக்கப் பிரசங்கி வகைதேடினான்; எழுதினது செம்மையும், சத்தியவசனங்களுமாயிருக்கின்றன.

௰௧ ஞானிகளின் வசனங்கள் கூட்டங்களின் முதலாளிகளால் தைக்க அடிக்கப்பட்ட கூர்களாகவும், ஆணிகளாகவுமிருக்கின்றன; *ஒரே மேய்ப்பராலே அவைகள் அளிக்கப்பட்டன. *சங். ௨௩. ௧. எசே. ௩௪. ௨௩.

௰௨ *என் மகனே, இப்படிக்கொத்தவைகளுக்கு மிஞ்சினதற்கு எச்சரிக்கையாக

யிரு; அநேகம் புஸ்தகங்களை உண்டுபண்ணுகிறதற்கு முடிவில்லை; திரளான படிப்பு மாம்சத்திற்குப் பிரயாசம். *உ தீமோ. ங. ௰௪, ௰௫.

௰௩ ¶ வசனத்தின் கடைத்தொகையையெல்லாம் கேட்போமாக; *பராபரனுக்குப் பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள்; ஏனெனில் இதுவே எல்லா மனுஷர்மேலும் விழுந்த கடன்.
*உ மோ. ௰. ௰௨, ௰௪.

௰௪ அதேனென்றால் *சகல கிரியையையும், அந்தரங்கமானவை எல்லாவற்றையுங்கூட, அது நன்மையானாலும் தீமையானாலும், பராபரன் நியாயத்திலே கொண்டுவருவார். *பிர. ௰௧. ௯. க கொரி. ச. ரு. உ கொரி. ரு. ௰.

# சாலோமோனின் உன்னதப்பாட்டு.

## க. அதிகாரம்.

சாலோமோன் பாடின உன்னதமான பாட்டு.

உ ¶ தமது வாயின் முத்தங்களில் ஒன்றால் என்னை முத்தமிடக்கடவார்; ஏனெனில் திராட்சப்பழ இரசத்தைப்பார்க்கிலும் உம்முடைய நேசங்கள் இன்பமாயிருக்கும்.

ங உம்முடைய பரிமளதயிலங்கள் வாசனைக்கு இன்பமானவைகள்; உம்முடைய நாமம் ஊற்றுண்ட பரிமளதயிலமாயிருக்கிறது; ஆனதுகொண்டு கன்னிகைகள் உம்மைச் சிநேகிக்கிறார்கள்.

ச *என்னை இழும், உமக்குப் பின்னாலே ஓடிவோம்; இராசா என்னைத் தம்முடைய அறைகளில் அழைத்துப்போனாராகில் †உமக்குள் களிகூர்ந்து சந்தோஷப்படுவோம்; திராட்சப்பழஇரசத்தைப்பார்க்கிலும், உம்முடைய நேசங்களையே நினைப்போம்; செம்மையானவர்கள் உம்மைச் சிநேகிக்கிறார்கள். *எரே. ௩௧. ௩. யோவா. ௰௨. ௩௨. †க பே. க. அ, ௯. வெளி. ௰௯. எ.

ரு ¶ எருசலேமின் குமாரத்திகளே, நான் கேதாரியரின் கூடாரங்களைப்போலவும், சாலோமோனின் சமுக்காளங்களைப்போலவும், கறுப்பும் அழகுமாயிருக்கிறேன்.

௬ நான் கறுப்பென்று என்னைப் பாராதிருங்கள்; ஏனெனில் வெய்யில் என்மேல் பட்டது; என் தாயின் பிள்ளைகள் என்மேல் கோபமாயிருந்து, என்னைத் திராட்சத்தோட்டங்களின் காவற்காரியாக வைத்தார்கள்; எனக்கு இருக்கிற *என்னுடைய திராட்சத்தோட்டத்தைக் காவாதேபோனேன்.
*ஓசே. உ. ௰௪, ௰௫.

எ ¶ என் ஆத்துமா சிநேகிக்கிறவரே, எங்கே மந்தையை மேய்த்து, எங்கே அதை மத்தியானத்தில் மடக்குகிறீரென்று எனக்கு அறிவியும்; நான் உம்முடைய தோழரின் மந்தைகளிடத்தில் ஒதுக்கைத் தேடுகிறவளைப்போல இருக்கவேண்டியதென்ன?

அ ¶ ஸ்திரிகளில் ரூபவதியே, அதை அறியாயாகில், நீ புறப்பட்டு மந்தையின் அடிகளைத் தொடர்ந்துபோய், மேய்ப்பர்களின் கூடாரங்களண்டையில் உன் ஆட்டுக்குட்டிகளை மேய்.

௯ *என் சிநேகிதியே, பார்வோனுடைய இரதங்களில் பூண்டிருக்கிற பரிகள் பவிஞ்சுக்கு உன்னை ஒப்பிடுகிறேன்.
*யோவா. ௰௫. ௰௪, ௰௫.

௰ *ஆபரணதிகள் பூண்ட உன் கன்னங்களும், ஆரங்கள் பூண்டிருக்கிற உன் கழுத்தும் அழகாயிருக்கின்றன. *சங். ச௫. ௰.

௰௧ வெள்ளிப்பொட்டுகளுள்ள பொன் ஆபரணங்களை உனக்குப் பண்ணுவோம்.

௰௨ ¶ *இராசா தமது பந்தியிலிருக்கும் தனிலும் என்னுடைய நர்துத்தயிலம் தன் வாசனையை வீசும். *வெளி. ௩. ௨௰.

௰௩ என் நேசர் எனக்கு என் ஸ்தனங்களின் நடுவே *தரிக்கிற வெள்ளைப்போளச் செடியின் செண்டானவர். *௨ தீமோ. ௨. ௮.

௰௪ என் நேசர் எனக்கு எங்கேதியூர்த் திராட்சத்தோட்டங்களில்முளைக்கும்கொப்பேர் செடியின் குலையானவர்.

௰௫ ¶ இதோ என் சிநேகிதியே, நீ ரூபவதி; இதோ நீ ரூபவதி; உன் கண்கள் *புறாக்களின் கண்களானவை. *மத். ௰. ௰௬.

௰௬ இதோ என் நேசரே, நீர் ரூபமுள்ளவர்; நீர் உச்சிதமுமானவர்; நம்முடைய மஞ்சம் துளிர்க்கிறதுமாயிருக்கிறது.

௰௭ நம்முடைய வீடுகளின் உத்திரங்கள் கேதுருக்கள்; நம்முடைய நடை தேவதாரி மரங்கள்.

## ௨. அதிகாரம்.

நான் சாரோன் வெளியின் பூவும், பள்ளத்தாக்குகளின் லீலியாளுமானவள்.

௨ முள்ளுகளுக்குள்ளே லீலியாபுஷ்பம் எப்படியிருக்கிறதோ, அப்படிக் குமாரத்திகளுக்குள்ளே என் சிநேகிதியிருக்கிறாள்.

௩ ¶ காட்டுமரங்களுக்குள்ளே கொஞ்சிமரம் எப்படியிருக்கிறதோ, அப்படிக் குமாரருக்குள்ளே என் நேசரிருக்கிறார்; அதின் நிழலிலே வாஞ்சையாய் உளுக்காருகிறேன்; அதின் கனி என் ருசிக்கு *மதுரமாயிருக்கிறது. *சங். ௩௪. ௯: ௱௰௯. ௱௩.

௪ என்னைத் *திராட்சப்பழஇரசத்தின் வீட்டிலே அழைத்துப்போகிறார்; என்மேல் பறக்கிற அவருடைய கொடி †சிநேகம்.
*வாக். ௯. ௧—௫. †உரோ. ௮. ௩௭, ௩௯

௫ திராட்சப்பழ இரசமுள்ள பாத்திரங்களால் என்னை ஆதரித்துக் கொஞ்சிப்பழங்களால் என்னை ஆற்றுங்கள்; ஏனெனில் *சிநேகத்தால் வியாதியாயிருக்கிறேன்.
*உன். ௫. ௮. பிலி. ௧. ௨௩.

௬ *அவர் இடதுகரம் என் தலையின்கீழிருப்பதாக; அவர் வலதுகரம் என்னை அணைப்பதாக. *உன். ௮. ௩.

௭ ¶ *எருசலேமின் குமாரத்திகளே, சிநேகிதிக்கு மனதாகும்மட்டும் நீங்கள் அவளை விழிக்கப்பண்ணாமலும் எழுப்பாமலும் இருக்க உங்களை வெளிமான்கள்மேலும் வெளியின் மரைகள்மேலும் ஆணையிடுகிறேன். *உன். ௩. ௫.

௮ *இது என் நேசருடைய சத்தம்; இதோ அவர் மலைகளின்மேல் குதித்தும், மேடுகளின்மேலே துள்ளியும் வருகிறார்.
*யோவா. ௰. ௩, ௪: ௰௪. ௰௮.

௯ ¶ என் நேசர் *வெளிமானுக்கு, அல்லது மரைகளின் குட்டிக்கு ஒப்பாயிருக்கிறார்; இதோ, அவர் எங்கள் சுவருக்குப் புறம்பே நின்று பலகணிகளால் பார்த்து, கிராதிகளால் செழித்தமுகம் காண்பிக்கிறார்.
*உன். ௮. ௰௪.

௰ என் நேசர் மறுஉத்தரவு விளம்பி, எனக்குச் சொல்லுகிறதாவது: *என் சிநேகிதியே, என் ரூபவதியே, எழுந்திருந்து வா.
*உன். ௧. ௰௫: ௪. ௧.

௰௧ ஏனெனில் இதோ, மாரிகாலம் சென்று மழைவிட்டுத் தீர்ந்துபோயிற்று.

௰௨ புஷ்பங்கள் பூமியில் காணப்படுகின்றன; குருவிகள் கூவுங்காலம்சேர்ந்தது, காட்டுப்புறாவின் சத்தம் நமது தேசத்தில் கேட்கப்படுகிறது.

௰௩ *அத்திமரம் தன் காய்களைக் காய்த்து, திராட்சச்செடிகள் பூப்பூத்து, வாசனை பரிமளிக்கிறது; என் சிநேகிதியே எழுந்துவா; என் ரூபவதியே வா. *மத். ௨௪. ௩௨.

௰௪ கல்மலையின் வெடிப்புகளிலும், செங்குத்தின் ஒதுக்கிலும் தங்குகிற என் புறாவே, உன் உருவை எனக்குக் காண்பி; *உன் சத்தத்தை எனக்குக் கேட்கப்பண்ணு; ஏனெனில் உன் சத்தம் இன்பமும், உன் உருவம்

அழகுமாயிருக்கிறது. *சங். ௫௰. ௰௪. ௰௫: ௯௪௭. ௧.

௰௫ ¶ *திராட்சத்தோட்டங்களைக் கெடுக்கிற நரிகளையும், குழிநரிகளையும், நமக்குப் பிடியுங்கள்; ஏனெனில் நம்முடைய திராட்சத்தோட்டங்கள் பூவும் பிஞ்சுமுள்ளவைகளென்கிறார். *மத். ௭. ௰௫. ௨ பே. ௨. ௧, ௨. ௧ யோ. ௪. ௧.

௰௬ *லீலியா புஷ்பங்களில் மேய்கிற என் நேசர் என்னுடையவர், நான் †அவருடையவளுமாயிருக்கிறேன். *உன். ௬. ௨. †உரோ. ௰௪. ௮.

௰௭ என் நேசரே, பகல் குளிர்ச்சியாகி, நிழல்கள் அற்றுப்போயிருக்குமளவும் நீர் திரும்பி, குன்றும் பிளப்புமான கல்மலைகளில் குதித்துவாரும்; *கலைமானுக்கு அல்லது மரைகளின் குட்டிக்குச் சமானமாயிரும். *உன். ௮. ௰௪.

## ௩. அதிகாரம்.

என் ஆத்துமா சிநேகிக்கிறவரை இராத்திரிகாலங்களில் என் படுக்கையிலே தேடினேன்; அவரைத் தேடினேன்; *ஆனால் அவரைக் காணாதேபோனேன். *உன். ௫. ௬.

௨ ஆகையால் எழுந்து, பட்டணத்திலே தெருக்களிலும் வீதிகளிலும் திரிந்து, என் ஆத்துமா சிநேகிக்கிறவரைத் தேடுவேனென்றேன்; அவரைத் தேடினேன்; ஆனால் அவரைக் காணாதேபோனேன்.

௩ பட்டணத்திலே திரிகிற காவற்காரர் என்னைக் கண்டார்கள்; என் ஆத்துமா சிநேகிக்கிறவரைக் கண்டீர்களோ என்றேன்.

௪ கொஞ்சந்தூரம் அவர்களைவிட்டுக் கடந்தபோதே என் ஆத்துமா சிநேகிக்கிறவரை நான் கண்டேன்; அவரை நான் என் தாயின் வீட்டிலும், என்னைப் பெற்றவளின் அறையிலும் கொண்டுவந்து விடும்மட்டும், *விடாமல் பற்றிக்கொள்வேன். *௧ மோ. ௩௨. ௨௬.

௫ ¶ எருசலேமின் *குமாரத்திகளே, சிநேகிக்கு மனதாகுமளவும் நீங்கள் அவளை விழிக்கப்பண்ணாமலும் எழுப்பாமலுமிருக்க, உங்களை வெளிமான்களின்மேலும், வெளியின் மரைகள்மேலும் ஆணையிடுகிறேன். *உன். ௨. ௭: ௮. ௪.

௬ ¶ வெள்ளைப்போளமும், தூபமும் கடைக்காரனுடைய சகலவித தூளுமான வாசனையை வீசிப் *புகையின் தூண்களைப்போலே †வனாந்தரத்திலிருந்து எழும்புகிற இவர் யார்? *வெளி. ௮. ௪. †உன். ௮. ௫.

௭ இதோ சலோமோனுடைய மஞ்சம்; இஸ்ரவேலின் சவுரியவான்களின் அறுபது சவுரியவான்கள் அதைச் சுற்றிலும் நிற்கிறார்கள்.

௮ இவர்களெல்லாரும் பட்டயம்பிடித்து யுத்தத்திற்குப் பழகினவர்களாயிருக்கிறார்கள்; இராக்காலங்களுடைய பயத்தின் நிமித்தம் அவனவனுடைய பட்டயம் அவனவன் அரையிலிருக்கிறது.

௯ சாலோமோன் இராசா தமக்கு லீபனோனுடைய மரங்களால் ஒரு இரதத்தைப் பண்ணுவித்தார்.

௰ அதின் தூண்களை வெள்ளியாலும், அதின் ஆதாரத்தைப் பொன்னினாலும், அதின் ஆசனத்தை இரத்தாம்பரத்தாலும் பண்ணுவித்தார்; அதின் உட்புறம் எருசலேமுடைய குமாரத்திகளின்நிமித்தம் சிநேகமென்றதளவரிசைப்படுத்தியிருக்கிறது.

௰௧ சீயோன் குமாரத்திகளே, நீங்கள் புறப்பட்டு இராசாவாகிய சாலோமோனின் கலியாண நாளிலும், அவர் மனமகிழ்ச்சியின் நாளிலும், அவருடைய தாயார் அவருக்குச் சூட்டின முடியோடிருக்கிற அவரை நோக்கிப்பாருங்கள்.

## ௪. அதிகாரம்.

இதோ *என் சிநேகிதியே, நீ ரூபவதி; இதோ நீ ரூபவதி; உன் கூந்தலின்நடுவே உன் கண்கள் புறாக்களின் கண்களாயிருக்கின்றன; உன் தலைமயிர் கீலேயாத் பருவதத்

தில் தழைமேயும் வெள்ளாடுகளின் மந்தையைப்போலிருக்கிறது. *உன். ௧. ௰௫.

௨ *உன் பற்கள் மயிர்கத்தரிக்கப்பட்டபின் குளிப்பாட்டப்பட்டு, கரையேறுகிறவைகளும், ஒன்றாகிலும் மலடாயிராமல் எல்லாம் இரட்டைக் குட்டியுள்ளவைகளுமான ஆடுகளின் மந்தையைப்போலிருக்கின்றன. *உன். ௬. ௫.

௩ உன் உதடுகள் சிவப்புநூலுக்குச் சமானமும், உன் வசனிப்பு இன்பமுமாயிருக்கின்றன; *உன் கூந்தலின்நடுவே உன் கன்னங்கள் மாதளங்கனி வெடிப்புப்போலாயின. *உன். ௬. ௬.

௪ *உன் கழுத்து ஆயுதவீடாகக் கட்டப்பட்ட தாவீதின் துருக்கத்தைப்போலிருக்கிறது; ஆயிரம் பரிசைகள் அதிலே தூக்கியிருக்கின்றன; அவைகளெல்லாம் பராக்கிரமசாலிகளின் கேடகங்கள். *உன். ௭. ௪.

௫ *உன் இரண்டு ஸ்தனங்கள் லீலியாபுஷ்பங்களில் மேய்கிற வெளிமானின் இரண்டு இரட்டைக்குட்டிகளுக்குச் சமானமாயிருக்கின்றன. *உன். ௭. ௩.

௬ பகல் குளிர்ச்சியாகி, நிழல்கள் அற்றுப்போயிருக்குமளவும், நான் *வெள்ளைப்போள மலையிலும், குங்கிலியத்தின் மேட்டிலும் போயிருப்பேன். *உன். ௨. ௰௭.

௭ என் சிநேகிதியே, நீ முழுவதும் சவுந்தரியமாயிருக்கிறாய்; *உன்னில் கறையில்லை. *எபே. ௫. ௨௭.

௮ ¶ என்னோடே லீபனோனிலிருந்து வா; மணவாட்டியே, என்னோடே லீபனோனிலிருந்து வருவாயாக; சிங்கங்களின் தாபரங்களும், சிவிங்கிகளின் பருவதங்களுமாகிய அமானாவின் கொடுமுடியிலும், சேனீர், எர்மோன் என்ற மலைகளின் கொடுமுடியிலுமிருந்து கண்ணோக்கி *வருவாயாக. *சங். ௪௫. ௰௧, ௰௨.

௯ என் இருதயத்தைக் கட்டிக்கொண்டாய்; என் சகோதரியே, மணவாட்டியே, உன் கண்களில் ஒன்றாலும், உன் கழுத்திலுள்ள ஒரு சரப்பணியினாலும் என் இருதயத்தைக் கட்டிக்கொண்டாய்.

௰ உன் நேசங்கள் எத்தனை நேர்த்தியாய் இருக்கின்றன! என் சகோதரியே, மணவாட்டியே, திராட்சப்பழ இரசத்தைப்பார்க்கிலும் உன் நேசங்களும், சகல கந்தவர்க்கங்களைப்பார்க்கிலும் உன் பரிமளதயிலங்களின் வாசனையும் எத்தனை இன்பமாயிருக்கும்!

௰௧ மணவாட்டியே, உன் உதடுகள் தேன்கூட்டொழுகலாயிருக்கின்றன; தேனும் பாலும் உன் நாவின்கீழிருக்கின்றன; உன் வஸ்திரங்களின் வாசனை லீபனோனின் வாசனைக்குச்சமானம்.

௰௨ என் சகோதரியே, மணவாட்டியே, நீ அடைக்கப்பட்ட தோட்டமும் மறைவு கட்டப்பட்ட நீரூற்றும், முத்திரிக்கப்பட்ட கிணறுமாயிருக்கிறாய்.

௰௩ உன் தோட்டம் மாதளஞ்செடிகளும், அருமையான கனிமரங்களும், கோப்பேர்செடிகளும், நர்துச்செடிகளும்,

௰௪ நர்தும், குங்குமமும், வசம்பும், கருவாமரமும், குங்கிலியத்தின் சகலவித மரங்களும், வெள்ளைப்போளச்செடிகளும், சந்தனவிருட்சங்களும், கந்தவர்க்கச் செடிகளின் சகலவிதங்களுமுள்ள சிங்காரவனமாயிருக்கிறது.

௰௫ தோட்டங்களுக்கு நீரூற்றும், சீவனுள்ள தண்ணீரின் துரவும், லீபனோனிலிருந்து ஓடிவருகிற வாய்க்கால்களும் உண்டாயிருக்கின்றன.

௰௬ ¶ வாடையே, நீ எழும்பித் தென்றலே, நீ வந்து கந்தப்பிசின்கள் வடிய என் தோட்டத்திலே வீசு; என் நேசர் தம்முடைய தோட்டத்துக்கு வந்து, தமது அருமையான கனிகளில் *புசிப்பாராக. *வெளி. ௩. ௨௰.

## ௫. அதிகாரம்.

என் சகோதரியே, மணவாட்டியே, என் தோட்-

டத்துக்கு *வந்தேன்; என் வெள்ளைப்போளத்தை என் கந்தவர்க்கத்தோடுங்கூட அறுத்தேன்; என் தேன்கூட்டை என் தேனோடுங்கூடப் புசித்தேன்; என் திராட்சப்பழ இரசத்தை என் பாலோடுகூடக் குடித்தேன்; சிநேகிதரே, புசியுங்கள்; பிரியமானவர்களே, குடித்து மஸ்தாகுங்கள்.

*யோவா. ௰௪. உக.

௨ ¶ நான் நித்திரைபண்ணினேன்; என் நெஞ்சோ விழித்திருந்து, *கதவுதட்டுகிற என் நேசரின் சத்தத்தைக் கேட்டேன்; என் சகோதரியே, என் சிநேகிதியே, என் புறாவே, என் உத்தமியே, எனக்குத் திற; ஏனெனில் என் சிரசு பனியினாலும், என் மயிர்கள் இராவிற்பெய்யும் துளிகளினாலும் நிறைந்திருக்கின்றன என்றார்.

*வெளி. ௩. ௨௰.

௩ என் அங்கியைக் கழற்றினேன்; எப்படி அதைத் திரும்ப உடுப்பேன்? என் கால்களைக் கழுவினேன், எப்படி அவைகளைத் திரும்ப அழுக்காக்குவேன் என்றேன்.

௪ என் நேசர் தமது கரத்தைக் கதவின் துவாரத்திலே நீட்டினார்; அப்போது என் குடல்கள் அவர்நிமித்தம் அசைந்தன.

௫ என் நேசருக்குத் திறப்பதற்கு நான் எழுந்தேன்; என் கைகள் வெள்ளைப்போளமும், பூட்டின் கைப்பிடிகள்மேல் என் விரல்கள் மேல்தரவெள்ளைப்போளமுமாய் வடிந்தன.

௬ நான் என் நேசருக்குத் திறந்தேன்; ஆனால் என் நேசர் விலகிப்போயிருந்தார்; அவர் வசனித்ததினிமித்தம் என் ஆத்துமா என்னைவிட்டுப் போயிற்று; *அவரைத் தேடினேன், ஆனால் அவரைக் காணாதிருந்தேன்; அவரைக் கூப்பிட்டேன், ஆனால் அவர் எனக்கு மறுஉத்தரவுகொடுத்ததில்லை.

*உன். ௩. ௧, ௨.

௭ பட்டணத்தில் திரிகிற காவலாளர் என்னைக் கண்டு, என்னை அடித்து, என்னைக் காயப்படுத்தினார்கள்; அலங்கத்தின் காவற்காரர் என்மேலிருந்த என் முக்காட்டுச் சீலையை எடுத்துப்போனார்கள்.

௮ எருசலேமின் குமாரத்திகளே, என் நேசரைக் கண்டீர்களானால், *நான் சிநேகத்தால் வியாதியாயிருக்கிறேன் என்று அவருக்கு அறிவிக்க உங்களை ஆணையிடுகிறேன்.

*உன். ௨. ௫.

௯ ¶ வேறே நேசரைப்பார்க்கிலும், உன் நேசர் எப்படிக்கொத்தவர்? ஸ்திரிகளில் ரூபவதியே, நீ இப்படி எங்களை ஆணையிடுகிறதற்கு வேறே நேசரைப்பார்க்கிலும், உன் நேசர் எப்படிக்கொத்தவர்?

௰ என் நேசர் வெண்மையும், சிவப்புமானவர்; பதினாயிரம்பேர்களில் கொடியைப்போலிருக்கிறார்.

௰௧ அவருடைய சிரம் அபரஞ்சியான தங்கம்; அவர் மயிர்கள் சுருள் சுருளாகவும், காகத்தைப்போலக் கறுப்பாகவுமிருக்கின்றன.

௰௨ அவருடைய கண்கள் தண்ணீர் நதிகளின் ஓரத்திலே தங்கும் புறாக்களின் கண்களுக்கு ஒத்தவைகளும், பாலில் கழுவப்பட்டவைகளும், நேர்த்தியாய்ப் பதிந்தவைகளுமாயிருக்கின்றன.

௰௩ அவருடைய கன்னங்கள் சம்பாரப் பாத்திகளைப்போலவும், கந்தவகைச் செடிகளின் சிகரங்களைப்போலவும் இருக்கின்றன; *அவருடைய உதடுகள் லீலியா புஷ்பங்களைப்போலவும் இருந்து, மேன்தர வெள்ளைப்போளம் வடிகிறதுமாயிருக்கின்றன.

*சங். ௪௫. ௩.

௰௪ அவருடைய கரங்கள் தர்சீஸ் இரத்தினங்கள் பொருந்தின பொன் வளையில்களைப்போலவும், அவருடைய அங்கம் நீலக்கற்கள் இழைத்திருக்கிற சுத்தாங்கமான தந்தத்தைப்போலவும் இருக்கின்றன.

௰௫ அவருடைய தொடைகள் அபரஞ்சியாதாரங்களின்மேல் நிற்கிற வெண்கற்றூண்களைப்போல இருக்கின்றன; அவர் உருவம் லீபனோனின் சாயலும், கேதுருக்க

னைப்போலத் தெரிந்துகொள்ளப்பட்டதுமாயிருக்கின்றது.

௰௬ அவருடைய வாக்குச் சுத்த மதுரமும், அவரில் உள்ளவையெல்லாம் இச்சிக்கப்படத்தக்கவையுமாயிருக்கின்றன; இவ்வண்ணமாக என் நேசரிருக்கிறார்; எருசலேமின் குமாரத்திகளே, இவ்வண்ணமாக என் சிநேகிதரிருக்கிறார்.

## ௬. அதிகாரம்.

உன் நேசர் எங்கேபோனார்; ஸ்திரிகளில் ரூபவதியே, உன் நேசர் எவ்விடத்திற்குத் திரும்பினார்? உன்னோடேகூட நாங்களும் அவரைத் தேடுவோம்.

௨ ¶ தோட்டங்களில் மேயவும், லீலியா புஷ்பங்களை அறுக்கவும், என் நேசர் தமது தோட்டத்திற்கும், சம்பாரப் பாத்திகளுக்கும் இறங்கிப்போனார்.

௩ *நான் என் நேசருடையவள்; லீலியா புஷ்பங்களில் மேய்கிற என் நேசர் என்னுடையவர். *உன். ௨. ௰௬.

௪ ¶ என் சிநேகிதியே, நீ திற்சாபட்டணத்தைப்போல *அதிக ரூபமும், எருசலேமைப்போல வடிவமும், கொடிகள் பறக்கும் படைப்பவிஞ்சுகளைப்போலக் கெடியுமானவள். *உன். ௧. ௰௫: ௪, ௫. சங். ௪௫. ௰௨.

௫ உன் கண்களை என்னைவிட்டுத் திருப்பு; ஏனெனில் என்னைப் பலத்துப்பிடிக்கும்; *உன் அளகபாரம் கிலேயாத்துப் பர்வதத்திலே தழைமேயும் வெள்ளாடுகளின் மந்தையைப்போலிருக்கிறது. *உன். ௪. ௧—௩. மத். ௨௫. ௧.

௬ உன் பற்கள் குளிப்பாட்டப்பட்டுக் கரையேறுகிறவைகளும், ஒன்றாகிலும் மலடாயிராமல் இரட்டைக்குட்டி உள்ளவைகளுமான ஆடுகளின் மந்தையைப்போலிருக்கின்றன.

௭ உன் கூந்தலின்நடுவே உன் கன்னங்கள் மாதளங்கனி வெடிப்பைப்போலாயின.

௮ ¶ *இராசஸ்திரிகள் அறுபதும், வைப்பாட்டிகள் எண்பதுமுண்டு; குமரிகளுக்கு இலக்கமுமில்லை. *சங். ௪௫. ௰௫.

௯ ஒருத்தியோ என் புறாவும், என் உத்தமியுமாயிருக்கிறாள்; இவள் தன் தாய்க்கு ஒருத்தியானவள்; இவள் தன்னைப் பெற்றவளுக்குத் தெரிந்துகொள்ளப்பட்டவள்; குமாரத்திகள் அவளைப் பார்த்து, அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்; இராசஸ்திரிகளும் பலஸ்திரிகளும் அவளைப்பார்த்துப் புகழ்ந்தார்கள்.

௰ விடியற்கால வெளுப்பைப்போல எட்டிப்பார்த்து, சந்திரனைப்போல அழகும், சூரியனைப்போலத் துலக்கமும், கொடிகள் பறக்கும் படைப்பவிஞ்சுகளைப்போலக் கெடியுமாகிய இவள் யாரவள்?

௰௧ ¶ பள்ளத்தாக்கிலே முளைத்தவைகளைப் பார்க்கிறதற்கும், திராட்சச்செடி துளிர்விட்டு, மாதளஞ்செடிகள் பூப்பூக்குமோ என்று பார்க்கிறதற்கும் நொகெயிர்ச்செடித் தோட்டத்திற்கு இறங்கிவந்தேன்.

௰௨ நான் நினையாததற்குமுன் என் ஆத்துமா என்னை *என் மனப்பூர்வமான சனத்தின் இரதங்களுக்கு ஒப்பாக்கிற்று.
*சங். ௱௰. ௩.

௰௩ ¶ திரும்பு, திரும்பு, சூலமித்தியே, உன்னை நாங்கள் பார்க்கும்படிக்குத் திரும்பு, திரும்பு; சூலமித்தியில் என்னத்தைப் பார்க்கிறீர்கள்? அவள் இருபுறப் பாளயப்பவிஞ்சுக்குச் சமானம்.

## ௭. அதிகாரம்.

பிரபு *குமாரத்தியே, பாதஇரட்சைகளில் உன் நடைகள் எத்தனை அந்தமாயிருக்கின்றன; உன் இடைகளின் நெளிவுகள் சூத்திரக்காரரின் கைவேலையாகிய பூஷணங்களைப்போல இருக்கின்றன. *சங். ௪௫. ௰௩.

௨ உன் தொப்புள் பானங்குறையாத உருண்டைக் கலசம்போலவும், உன் வயிறு லீலியா புஷ்பங்களால் சூழப்பட்ட கோது

மை அம்பாரம்போலவும் இருக்கிறது.

௩ *உன் இரண்டு ஸ்தனங்கள் வெளிமானின் இரண்டு இரட்டைக்குட்டிகளுக்குச் சமானமாயிருக்கின்றன. *உன். ௪. ௫.

௪ உன் கழுத்து *தந்தத் துருக்கத்தைப் போலவும், உன் கண்கள் எஸ்போன் ஊரிலே பதராபீம் வாசலண்டையில் இருக்கிற குளங்களைப்போலவும், உன் மூக்கு தமஸ்குவின் திசையை நோக்கியிருக்கும் லீபனோனின் கோபுரத்தைப்போலவும் இருக்கிறது. *உன். ௪. ௪.

௫ உன்மீதிலுள்ள உன் சிரம் கர்மேலைப் போலவும், உன் சிரத்தின் மெல்லிய மயிர் இரத்தாம்பரப் பட்டைப்போலவும் இருக்கிறது; இராசா நடைகாவனங்களில் கட்டுண்டவரைப்போலத் தரித்துநின்று பார்க்கிறார்.

௬ மனமகிழ்ச்சிகளை உண்டாக்குகிற சிநேகிதியே, நீ எத்தனை ரூபமும், எத்தனை உச்சிதமுமாயிருக்கிறாய்!

௭ இந்த உன்னுடைய வளர்ச்சி பனைமரத்துக்கும், உன் ஸ்தனங்கள் திராட்சக்குலைகளுக்கும் ஒத்திருக்கின்றன.

௮ பனைமரத்தில் ஏறி அதின் மட்டைகளைப் பிடிப்பேன் என்றேன்; இப்போதும் உன் ஸ்தனங்கள் திராட்சச்செடியின் குலைகளைப் போலவும், உன் நாசியின் வாசனை கொளுஞ்சிப்பழங்களைப்போலவும்,

௯ உன் தொண்டை உன் நேசருக்குள் மெதுவாய் இறங்குகிறதும், உறங்குகிறவர்களின் உதடுகளைப் பேசப்பண்ணுகிறதுமான நல்ல திராட்சப்பழஇரசத்தைப்போலவும் இருக்கட்டுமே.

௰ ¶ *நான் என் நேசருடையவள், அவர் விருப்பம் என்மேலும் இருக்கிறது.
*உன். ௨. ௰௬: ௬. ௩.

௰௧ வாரும் என் நேசரே, வெளியிலே போய்க் கிராமங்களில் இராத்தங்குவோமாக.

௰௨ நாம் காலமே திராட்சத்தோட்டங்களுக்குப் போய், திராட்சச்செடி துளிர்த்து அதின் பூ மலருமோ என்றும், மாதளஞ்செடிகள் பூப்பூக்குமோ என்றும் பார்ப்போமாக; அங்கே என் நேச உச்சிதங்களை உமக்குத்தருவேன்.

௰௩ துதாயீம் வாசனைதரும், நம்முடைய வாசல்களண்டையிலே சகலவித அருமையான புதிய பழைய கனிகளும் உண்டு; என் நேசரே, உமக்கு அவைகளை வைத்தேன்.

## ௮. அதிகாரம்.

௧ நீர் எனக்கு என் தாயின் முலைகளை உண்ட சகோதரனைப்போல இருந்தால் தாவிளை; அப்போது உம்மை நான் வெளியிலே சந்தித்து முத்திகொடுப்பேன்; என்னை நிந்திக்கவும்மாட்டார்கள்.

௨ நீர் எனக்குப் போதிக்கும்படிக்கு உம்மை நான் கூட்டிக்கொண்டு, *என் தாயின் வீட்டுக்கு அழைத்துப்போவேன்; சம்பாரமிட்ட திராட்சப்பழஇரசத்தையும், என் மாதளம்பழங்களின் இரசத்தையும் உமக்குக் குடிக்கக்கொடுப்பேன். *உன். ௩. ௪.

௩ *அவர் இடதுகரம் என் தலையின்கீழ் இருப்பதாக; அவர் வலதுகரம் என்னை அணைப்பதாக. *உன். ௨. ௬.

௪ *எருசலேமின் குமாரத்திகளே, சிநேகிதிக்கு மனதாகுமளவும், நீங்கள் அவளை விழிக்கப்பண்ணாமலும், எழுப்பாமலுமிருக்க உங்களை ஆணையிடுகிறேன். *உன். ௨. ௭: ௩. ௫.

௫ வனாந்தரத்திலிருந்து எழும்பி, தன் நேசனைச் சார்ந்துகொள்ளுகிற இவள் யாவள்? கொளுஞ்சி மரத்தின்கீழே உம்மை எழுப்பினேன்; அங்கே உம்முடைய தாய் உம்மைப் பெற வாதைப்பட்டாள், அங்கே பெற வாதைப்பட்டு உம்மைப் பெற்றாள்.

௬ என்னை முத்திரையைப்போல உமது இருதயத்தின்மேலும், முத்திரையைப்போல உமது புயத்தின்மேலும் வையும்; ஏனெனில்

சிநேகம் மரணத்தைப்போல வல்லபமும் நேச வயிராக்கியம் பாதாளத்தைப்போலக் கெட்டியுமாய் இருக்கின்றன; அதின் தழல் அக்கினித்தழலும், கர்த்தரின் சுவாலையுமாய் இருக்கிறது.

எ *அநேகம் தண்ணீர்கள் இந்தச் சிநேகத்தை அவிக்கமாட்டாது; நதிகள் அதைத் தணிப்பதுமில்லை; ஒருவன் தன் வீட்டின் ஆஸ்தியை எல்லாம் இந்தச் சிநேகத்திற்குப் பதிலாகக் கொடுத்தாலும் அவனை மிகவும் அசட்டைபண்ணுவார்கள்.

*உரோ. அ. ௩௫. ழ.

அ ¶ நமக்குச் சிறிய சகோதரி இருக்கிறாள்; அவளுக்கு ஸ்தனங்கள் இல்லை; நம்முடைய சகோதரிக்காகப் பேசப்படும்நாளிலே அவளுக்கு என்னசெய்வோம்?

௯ அவள் மதிலானால் அவள்மேல் *வெள்ளிக் கோட்டையைக் கட்டுவோம்; அவள் கதவானால் கேதுருபலகைகளை அதற்கு இணைப்போம். *க கொரி. ௩. ௰௨, ௰௩.

௰ ¶ நான் மதிலும், என் ஸ்தனங்கள் கொம்மைகளுமாகையால், அவர் பார்வைக்குச் சமாதானம் பெற்றவளைப்போலானேன்.

௰௧ பாகால் ஆமோனிலே சாலோமோனுக்குத் திராட்சத்தோட்டம் உண்டாயிருந்தது; அந்தத் தோட்டத்தைக் காவலாளிகள் வசத்திலே அவனவன் ஆயிரம் வெள்ளிக்காசை அதின் பலனுக்குக்கொண்டுவரும்படிக்குக் கொடுத்தார்.

௰௨ என்னுடைய திராட்சத்தோட்டம் எனக்குமுன்பாக இருக்கும்; சாலோமோனே, உமக்கு அந்த ஆயிரமும், அதின் கனியைக் காக்கிறவர்களுக்கு இருநூறும் உண்டாம்.

௰௩ ¶ தோட்டங்களில் வாசமாயிருக்கிறவளே, தோழர் உன் சத்தத்தைக் கவனிக்கிறார்கள்; அதை நான் கேட்கட்டும்.

௰௪ என் நேசரே, *நீர் தீவிரித்துக்கொண்டு, கந்தவர்க்கங்களின் மலைகள்மேல் வெளிமானுக்கு, அல்லது மரைகளின் குட்டிக்கு ஒப்பாகும். *உன். ௨. ௰௭. வெளி. ௨௨. ௨௰.

# ஏசாயாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா யூதாவின் இராசாக்களாகிய உசியா, யோத்தாம், ஆகாஸ், எசேக்கியா என்றவர்களின் நாட்களில் யூதாவின்மேலும், எருசலேமின்மேலும் கண்ட தரிசனம்.

உ ¶ *வானங்களே, கேளுங்கள்; பூமியே, செவிகொடு; ஏனெனில் கர்த்தர் பேசுகிறார்; பிள்ளைகளை வளர்த்து உயர்த்தினேம்; ஆனால் அவர்கள் நம்மைவிட்டு மருளவிழுந்தார்கள். *டு மோ. ௩உ. க. சங். ௰௫.க-௪.

௩ மாடு தன் எசமானையும், கழுதை தன் ஆண்டவனின் முன்னணையையும் அறியும்; ஆனால் இஸ்ரவேல் அறிவில்லாமலும், நம்முடைய சனம் உணர்வில்லாமலும் இருக்கிறதென்கிறார்.

௪ ¶ ஐயோ பாவச்சாதியும், அக்கிரமத்தால் பாரம் சுமந்த சனமும், பொல்லாதவர்களின் வித்தும் கேடு உண்டாக்குகிற புத்திரருமாயிருக்கிறார்கள்; கர்த்தனைவிட்டு இஸ்ரவேலின் பரிசுத்தருக்குக் கோபமுண்டாக்கிப் பின்வாங்கிப்போனார்கள்.

௫ இனி ஏன் அடிக்கப்படுவீர்கள்; பின்னையும் அதிகமாய் விலகிப்போகிறீர்கள்; தலையெல்லாம் வியாதியும், இருதயமெல்லாம் பலட்சயமுமாய் இருக்கிறது.

௬ உள்ளங்கால்துவக்கித் தலைமட்டுக்கும் அவனில் சீழ்பிதுக்கப்படாமலும், கட்டப்படாமலும், எண்ணெயால் ஆற்றப்படாமலும் இருக்கிற காயமும், வீக்கமும், கொதிக்கிறஇரணமுமேயல்லாமல் ஒரு ஆரோக்கியமும் இல்லை.

௭ *உங்கள் தேசம் பாழாயிருக்கிறது; உங்கள் பட்டணங்கள் அக்கினியால் சுட்டுப்போடப்பட்டன; உங்கள் சீமையை மறுசாதியார் உங்கள் முகத்துக்குமுன்பாக அநுபவிக்கிறார்கள்; அது மறுசாதியாரால் கவிழ்க்கப்பட்டாற்போலப்பாழாய் இருக்கிறது. *டு மோ. உ௮. ௫க, ௫உ.

௮ சீயோன் குமாரத்தி திராட்சத்தோட்டத்திலுள்ள ஒரு குச்சைப்போலவும், வெள்ளரித்தோட்டத்திலுள்ள ஒரு குடிசையைப் போலவும் முற்றிக்கை போடப்பட்ட பட்டணத்தைப்போலவும் மீந்திருக்கிறாள்.

௯ *சேனைகளின் கர்த்தர் நமக்குக் கொஞ்சம் மீதியை வைக்காதிருந்தாரானால், நாம் †சோதோமைப்போலாகி, கொமோராவுக்கு ஒத்திருப்போம். *உரோ. ௯. உ௯. †க மோ. ௰௯. உ௪, உ௫.

௰ ¶ சோதோமின் தலைவர்களே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்; கொமோராவின் சனமே, நமது பராபரனுடைய வேதத்துக்குச் செவிகொடுங்கள்.

௰க *உங்கள் பலிகளின் திரள் நமக்கு என்னத்துக்கென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஆட்டுக்கடாக்களின் தகனங்களும், கொழுத்த மிருகங்களின் நெய்யும் நமக்கு அரோசிகமாயிருக்கின்றன; காளைகள் ஆட்டுக்குட்டிகள் கடாக்களுடைய இரத்தத்தின்மேல் நமக்குப் பிரியமில்லை. *ஏசா. ௬௬. ௩. வாக். உக. உ௭. எரே. ௬. உ௰: ௰௪. ௰உ. ஆமோ. ௫. உக-உ௩.

௰உ நீங்கள் நமது சந்நிதியிலே காணப்படவரும்போது, நம்முடைய பிராகாரங்களை இப்படி மிதிக்கவேண்டுமென்று உங்கள்

கைகளில் கேட்கிறவர் யார்.

௰௩ வீண் காணிக்கை இனிக் கொண்டுவராதிருங்கள்; தூபம்காட்டுதல் நமக்கு அருவருப்பாயிருக்கிறது; சபைகூடிவரவழைக்கப்படுகிற மாதப்பிறப்பிலும், ஓய்வுநாளிலும் அக்கிரமத்தோடே கூடிய ஆசரிப்பை இனிச் சகிக்கமாட்டோம்.

௰௪ உங்கள் மாதப்பிறப்புகளையும், உங்கள் பண்டிகைகளையும் நம்முடைய ஆத்துமா பகைக்கிறது; அவை நமக்கு வருத்தமாயிருக்கின்றன; அவைகளைச் சுமக்க வேசாறியிருக்கிறோம்.

௰௫ நீங்கள் *உங்கள் கைகளை விரித்தாலும், நம்முடைய கண்களை உங்களைவிட்டு மறைக்கிறோம்; நீங்கள் மிகுதியாய்ச் செபம்பண்ணினாலும் கேளோம்; ஏனெனில் உங்கள் கைகள் இரத்தத்தாலே நிறைந்திருக்கின்றன. *எரே. ௰௧. ௰௧.

௰௬ உங்களைக் கழுவிச் சுத்திகரியுங்கள்; *உங்கள் கிரியைகளின் பொல்லாப்பை நம்முடைய கண்களுக்கு மறைவாக அகற்றிவிட்டு, தீங்குசெய்தலைவிட்டு ஓயுங்கள். *சங். ௩௪. ௰௫. எசே. ௰௮. ௩௧.

௰௭ *நன்மைசெய்யப் படியுங்கள்; நியாயத்தைத் தேடுங்கள்; †ஒடுக்கப்பட்டவனைச் சீர்ப்படுத்தி, திக்கற்றவன் நியாயத்தையும், விதவையின் வழக்கையும் விசாரியுங்கள். *எரே. ௭. ௩. †சங். ௮௨. ௩.

௰௮ ¶ அப்போது வழக்காடுவோம் வாருங்கள்; *உங்கள் பாவங்கள் சிவேறென்றிருந்தாலும் உறைந்த மழையைப்போல வெண்மையாகும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப்போலாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார். *எசா. ௪௩. ௨௫: ௪௪. ௨௨. சங். ௫௧. ௯.

௰௯ நீங்கள் மனம்பொருந்திக் கேள்விகொடுத்தால், தேசத்தின் நன்மையைப் புசிப்பீர்கள்.

௨௰ மாட்டோமென்று எதிர்த்துநின்றீர்களேயாகில் பட்டையத்துக்கு இரையாவீர்கள்; ஏனெனில் கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று.

௨௧ ¶ உண்மையுள்ள பட்டணம் எப்படி வேசியாய்ப்போயிற்று! நியாயத்தால் நிறைந்திருந்தது; நீதி அதிலே வாசமாயிருந்தது; இப்போதோவெனில் அதின் குடிகள் *கொலைபாதகர். *மத். ௨௩. ௩௭.

௨௨ *உன் வெள்ளி களிம்பாயிற்று; உன் திராட்சப்பழஇரசம் தண்ணீர்க் கலப்பானது. *எசே. ௨௨. ௰௮.

௨௩ உன் பிரபுக்கள் முரடரும் திருடரின் தோழருமாய் இருக்கிறார்கள்; அவர்களில் எவனும் பரிதானத்தைச் சிநேகித்து, கைக்கூலிகளை நாடித் தொடருகிறான்; *திக்கற்றவனுடைய நியாயத்தை விசாரியார்கள்; விதவையின் வழக்கு அவர்களிடத்தில் ஏறுகிறதுமில்லை. *எரே. ௫. ௨௮.

௨௪ ¶ ஆகையால் சேனைகளின் கர்த்தரும், இஸ்ரவேலின் வல்லவருமாகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ஓகோ, நாம் நம்முடைய சத்துருக்களில் *கோபம்ஆறி, நம்முடைய பகைஞருக்கு நீதியைச் சரிக்கட்டுவோம். *௫ மோ. ௨௮. ௬௩.

௨௫ நாம் உனக்கு விரோதமாக நம்முடைய கையைத்திருப்பி, உன் களிம்பைச் சுத்தமாய்ப் புடமிட்டு, *உன் ஈயத்தையெல்லாம் நீக்கி, *மல். ௩. ௨, ௩.

௨௬ இப்படியே உன் நீதிக்காரரை முன் இருந்ததுபோலவும், உன் ஆலோசனைக்காரரை ஆதியில் இருந்ததுபோலவும் திரும்பக் கட்டளையிடுவோம்; அதின்பிறகு நீதியின் ஊரும், உண்மையுள்ள பட்டணமும் என்னப்படுவாய்.

௨௭ சீயோன் நியாயத்தாலும், அதிலே திரும்புகிறவர்கள் நீதியாலும் மீட்கப்படவேண்டும்.

௨௮ ஆனால் பாதகரும் பாவிகளும் ஏகமாய் நொறுங்குண்டு, கர்த்தரைவிட்டு அவர்கள் நிர்மூலமாவார்கள்.

௨௯ ஏனெனில் நீங்கள் விரும்பின கர்வா

விருட்சமரங்களினிமித்தம் *வெட்கப்படுவீர்கள்; நீங்கள் தெரிந்துகொண்ட தோப்புகளினிமித்தம் நாணமடைவீர்கள்.
*ஏசா. சஉ. ௰எ.

௩௰ ஏனென்றால் இலையுதிர்ந்த கர்வாலிவிருட்சத்தைப்போலும், தண்ணீர் இல்லாத தோப்பைப்போலும் இருப்பீர்கள்.

௩௧ பராக்கிரமன் சணற்கூளமும், அவன் கிரியை அக்கினிப் பொறியுமாகி, அவனும் இதுவும் ஏகமாய் அவிப்பாரில்லாமல் வெந்துபோவதுண்டு.

## உ. அதிகாரம்.

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா யூதாவின்மேலும், எருசலேமின்மேலும் வரக்கண்ட வர்த்தமானம்.

உ ¶ *கடைசி நாள்களில் சம்பவிப்பதேதெனில், கர்த்தருடைய வீட்டின் பருவதம் பருவதங்களின் கொடுமுடியாய்த் திடப்பட்டு, மேடுகளிலும் உயரும்; எல்லாச் சாதிகளும் அதற்கு ஓடி, *எரே. ௩. ௰எ. மீகா. ச. க, ௩.

௩ திரளான சனசதளங்கள் நடந்துவந்து, கர்த்தரின் பருவதத்துக்கும் யாக்கோபின் பராபரனுடைய வீட்டுக்கும் நாம் போய், அவர் தம்முடைய வழிகளை நமக்குப் போதிக்கவும், நாம் போய் அவர் பாதைகளில் நடக்கவும் ஏறுவோம் வாருங்கள் என்பார்கள்; ஏனெனில் *வேதம் சீயோனிலும், கர்த்தரின் வசனம் எருசலேமிலுமிருந்து புறப்படும். *சங். ௱௰. உ. லூக். உச. சஎ.

ச அவர் சாதிகளுக்குள் நியாயந்தீர்த்து, திரளான சனசதளங்களைக் கடிந்துகொள்ளுவார்; அப்பொழுது தங்கள் பட்டையங்களை மண்வெட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்; சாதிக்கு விரோதமாய்ச் சாதி பட்டையம் எடுப்பதில்லை, இனி யுத்தத்தைக் கற்பதுமில்லை.

ரு ¶ யாக்கோபின் வீட்டாரே, கர்த்தரின் வெளிச்சத்திலே நடப்போம் வாருங்கள்.

௬ ஆனால் யாக்கோபின் வீட்டாராகிய உம்முடைய சனத்தைக் கைநெகிழ்ந்தீர்; ஏனெனில் கிழக்குத்திசையாரின் போதகத்தால் நிறைந்து, பெலிஸ்தியரைப்போல நாட்பார்க்கிறவர்களாயிருந்து, அந்நியரின் புத்திரர்மேலே பிரியப்படுகிறார்கள்.

எ அவர்கள் தேசம் வெள்ளியினாலும், பொன்னினாலும் நிறைந்தது; அவர்கள் பொக்கிஷங்களுக்கு முடிவில்லை; அவர்கள் தேசம் குதிரைகளாலும் நிறைந்தது; அவர்கள் இரதங்களுக்கு முடிவுமில்லை.

அ அவர்கள் தேசம் விக்கிரகங்களாலும் நிறைந்திருக்கிறது; தங்கள் கைகளின் கிரியையையும், தங்கள் விரல்கள் உண்டுபண்ணினதையும் பணிந்துகொள்ளுகிறார்கள்.

௯ சிறியவனும் குனிகிறான், பெரியவனும் பணிகிறான்; ஆகையால் அவர்களுக்கு மன்னியாதிருப்பீர்.

௰ ¶ கர்த்தரின் பயங்கரத்தினாலும், அவர் முக்கியத்தின் மகத்துவத்தினாலும், நீ கல்மலையில் ஒதுங்கி மண்ணில் ஒளித்துக்கொள்.

௰௧ *நரரின் மேட்டிமையான கண்கள் தாழ்ந்து, மனுஷரின் வீறாப்பும் தணியும்; ஆனால் கர்த்தர் ஒருவரே அந்நாளிலே உயர்ந்திருப்பார். *ஏசா. ரு. ௰ரு.

௰உ ஏனெனில் தாழ்மையுண்டாகச் சேனைகளுடைய கர்த்தரின் நாள் பெருமையும், மேட்டிமையுமானவை எல்லாவற்றின் மேலும், உயர்ந்தவை எல்லாவற்றின்மேலும்,

௰௩ லீபனோனிலுள்ள உயரமும் ஓங்கலுமான எல்லாக் கேதுருக்களின்மேலும், பாசானிலுள்ள எல்லாக் கர்வாலிமரங்களின்மேலும்,

௰ச உயரமான எல்லாப் பர்வதங்களின் மேலும், மேட்டிமையான எல்லாக் குன்றுகளின்மேலும்,

௰ரு உயர்ந்த எல்லாக் கோபுரத்தின்மேலும், அரணான எல்லா மதிலின்மேலும்,

௰௬ தர்சீசின் கப்பல்கள் எல்லாவற்றின் மேலும், அருமையான எல்லாச் சித்திரங்களின்மேலும் வரும்.

௰௭ அப்போது நரரின் மேட்டிமை தாழ்ந்து, மனுஷரின் வீறாப்புத் தணியும்; ஆனால் கர்த்தர் ஒருவரே அந்நாளில் உயர்ந்திருப்பார்.

௰௮ விக்கிரகங்களோவெனில் கட்டோடே ஒழிந்துபோம்.

௰௯ பூமியைத் தத்தளிக்கப்பண்ணக் கர்த்தர் எழும்பும்போது, *அவர் பயங்கரத்தினாலும், அவர் மூக்கியத்தின் மகத்துவத்தினாலும், கன்மலைகளின் கெபிகளிலும், மண்ணின் குகைகளிலும் புகுந்துகொள்ளுவார்கள். *லூக். ௨௩. ௩௰.

௨௰ பூமியைத் தத்தளிக்கப்பண்ணக் கர்த்தர் எழும்பும் அந்நாளிலே அவர் பயங்கரத்தினாலும், அவர் மூக்கியத்தின் மகத்துவத்தினாலும், கன்மலைகளின் வெடிப்புகளிலும் குன்றுகளின் சந்துகளிலும் புகுந்துகொள்ளும்படிக்கு,

௨௧ மனுஷன் பணிந்துகொள்ளத் தனக்கு உண்டாக்கியிருந்த *தன் வெள்ளி விக்கிரகங்களையும், தன் பொன் விக்கிரகங்களையும், மூஞ்சூறுகளுக்கும், துரிஞ்சில்களுக்கும் எறிந்துவிடுவான். *ஏசா. ௩௰. ௨௨: ௩௧. ௭.

௨௨ மூக்கிலே சுவாசமுள்ள மனுஷனை நம்புவதை விட்டோயுங்கள்; ஏனென்றால் அவன் எம்மாத்திரமென்று எண்ணப்படலாம்.

## ௩. அதிகாரம்.

ஏனெனில் இதோ சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் ஆதரவுகோலையும், தடியையும், *அப்பமென்ற எல்லா ஆதரவுகோலையும், தண்ணீரென்ற எல்லா ஆதரவுகோலையும், ஏசே. ௪. ௰௬, ௰௭.

௨ பராக்கிரமசாலியையும், யுத்த வீரனையும், நியாயாதிபதியையும், தீர்க்கதரிசியையும், சாஸ்திரியையும், மூப்பனையும்,

௩ ஐம்பதுக்குச் சேர்வைக்காரனையும், கனமுகமானவனையும், ஆலோசனைசொல்லுகிறவனையும், தொழிலாளிகளில் ஞானமுள்ளவனையும், சாதுரியக்காரனையும், எருசலேமிலும் யூதாவிலுமிருந்து விலக்குவார்.

௪ அவர்களுக்கு இளைஞரைப் பிரபுக்களாகத் தருவோம் என்கிறார்; *பிள்ளைகள் அவர்களை ஆளுவார்கள். *பிர. ௰. ௰௬.

௫ சனம் ஒடுக்கப்படும்; ஒருவருக்கொருவரும், அடுத்தவருக்கு அடுத்தவரும் விரோதமாய் இருப்பார்கள்; கிழவனுக்கு இளைஞனும், கனமுடையவனுக்குக் கனவீனனும் இடும்புசெய்வான்.

௬ உனக்கு வஸ்திரம் இருக்கிறது, எங்கள் தலைவனாயிரு; கேட்டுக்கு இனமான இந்தக் காரியம் உன் கையின்கீழாவதாகவென்று அப்போது ஒருவன் தன் தகப்பன் வீட்டானாகிய தன் சகோதரனைப் பிடித்தால்,

௭ இவன் அந்நாளிலே கையை உயர எடுத்து, நான் இரணவயித்தியனாக இருக்கமாட்டேன்; என் வீட்டிலே அப்பமுமில்லை, வஸ்திரமுமில்லை; என்னைச் சனத்தின் தலைவனாக வைக்காதிருங்கள் என்பான்.

௮ ஏனெனில் எருசலேம் இடறி, யூதா விழுந்துபோம்; அதேனென்றால் அவர்கள் நாவும், அவர்கள் கிரியைகளும், கர்த்தருடைய மகிமையின் கண்களுக்கு எரிச்சல் உண்டாக்கத்தக்கவைகளாய் அவருக்கு விரோதமாயிருக்கின்றன.

௯ ¶ அவர்கள் முகங்களின் ஒட்டாரம் அவர்களுக்கு விரோதமாய்ச் சாட்சியிடும்; அவர்கள் சோதோம் ஊராரைப்போலே, தங்கள் பாவத்தை மறைக்காமல் கூறுகிறார்கள்; அவர்கள் ஆத்துமாவுக்கு ஐயோ! ஏனெனில் *தங்களுக்கே தீமையைக் கட்டிக்கொள்ளுகிறார்கள். *ஓசே. ௰௩. ௯.

௰ *நன்றாயிருப்பீர்களென்று நீதிமான்களுக்குச் சொல்லுங்கள்; ஏனெனில் தங்கள் கிரியைகளின் கனியைப் புசிப்பார்கள். *சங். ௧௨௮. ௨.

௰௧ பொல்லாத ஆகாமியக்காரனுக்கு ஐயோ! ஏனெனில் அவன் கைகளின் பலன் அவனுக்கு உண்டாகும்.

௰௨ ¶ பிள்ளைகள் நமது சனத்தின் வாதைக்காரராய் இருக்கிறார்கள்; ஸ்திரிகள் அதை ஆளுகிறார்கள்; நமது சனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னை மோசம்போக்கி, நீ நடக்கவேண்டின வழியை விழுங்குகிறார்கள்.

௰௩ கர்த்தர் வழக்காட எழுந்திருந்து, *சனசதள்ங்களை நியாயந்தீர்க்க நிற்கிறார்.
*சங். ௯. ௮, ௯.

௰௪ கர்த்தர் தமது சனத்தின் மூப்பரோடும், அதின் பிரபுக்களோடும் நியாயத்துக்குட் பிரவேசிப்பார்; ஏனெனில் நீங்களே இந்தத் திராட்சத்தோட்டத்தை மேய்ந்துவிட்டீர்கள்; சிறுமையானவனுடைய கொள்ளை உங்கள் வீடுகளில் இருக்கிறது.

௰௫ நீங்கள் நமது சனத்தை நொறுக்கிச் சிறுமையானவர்களின் முகத்தை நெறித்துவிடுகிறது என்னவென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.

௰௬ ¶ பின்னையும் கர்த்தர் சொல்லுகிறதாவது: சீயோனுடைய குமாரத்திகள் அகந்தையாயிருந்து, கழுத்தை நெறித்து நடந்து, கண்களால் மருட்டிப்பார்த்து, தத்தித்தத்தி நடந்து; தங்கள் கால்களில் பாடகங்களைப் போட்டுத் திரிகிறபடியினாலே,

௰௭ ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் உச்சந்தலையை மொட்டையாக்குவார்; கர்த்தர் அவர்கள் மானத்தை அம்மணமாக்குவார்.

௰௮ அந்நாளிலே ஆண்டவர் பாடகங்களின் சிங்காரத்தையும், சுட்டிகளையும், பிறைச்சிந்தாக்குகளையும்,

௰௯ ஆரங்களையும், சரிகளையும், மினுக்கு வஸ்திரங்களையும்,

௨௰ தலையின் ஆபரணதிகளையும், அல்தகடையங்களையும், சரடுகளையும், மார்க்கச்சைகளையும், உருவல்களையும்,

௨௧ மோதிரங்களையும், மூக்குத்திகளையும்,

௨௨ மாற்றுடைகளையும், சால்வைகளையும், போர்வைகளையும், குப்பிகளையும்,

௨௩ கண்ணாடிகளையும், மெல்லியபுடவைகளையும், குல்லாக்களையும், முக்காட்டுச்சல்லாக்களையும் விலக்குவார்.

௨௪ சம்பவிப்பது ஏதென்றால், சுகந்தவர்க்கத்துக்குப்பதிலாகத் துர்க்கந்தமும், கச்சைக்குப்பதிலாகப் பீறலும், மயிர்ச்சுருளுக்குப்பதிலாக மொட்டையும், தளதளப்பான வஸ்திரங்களுக்குப்பதிலாக இரட்டு உடுக்குதலும், அழகுக்குப்பதிலாகக் கருகிப்போகுதலுமிருக்கும்.

௨௫ உன் மனுஷர் யுத்தவெட்டினாலும், உன் பெலசாலிகள் படையிலும் விழுவார்கள்.

௨௬ அவளுடைய வாசல்கள் சஞ்சலமும், துக்கமுமாயிருக்கும்; அவள் வெறுமையாய்த் தரையில் உளுக்காருவாள் என்கிறார்.

## ௪. அதிகாரம்.

ஏழு ஸ்திரிகள் ஒரே புருஷனை அந்நாளில் பிடித்து, நாங்கள் எங்கள் அப்பத்தையே புசித்து, எங்கள் வஸ்திரங்களையே உடுப்போம்; எங்கள் நிந்தையை நீக்க உன்பேர் மாத்திரம் எங்கள்மேல் விளங்கட்டும் என்பார்கள்.

௨ இஸ்ரவேலில் தப்பினவர்களுக்கு அக்காலத்திலே கர்த்தருடைய *முளை சிங்காரமும், மகிமையும், பூமியின் கனி முக்கியமும், அலங்காரமுமாய் இருக்கும்.
*ஏசா. ௰௧. ௧. எரே. ௨௩. ௫.

௩ அப்போது சம்பவிப்பது ஏதெனில், ஆண்டவர் நியாயத்தின் ஆவியினாலும், சுத்திகரிப்பின் ஆவியினாலும், சீயோன் குமாரத்திகளின் ஊத்தையைக் கழுவி, எருசலேமின் இரத்தப்பழிகளை அதின் நடுவிலிருந்து நீக்கிவிட்டபோது,

௪ சீயோனில் மீந்து எருசலேமில் பின்

வைக்கப்பட்டிருக்கிறவன் பரிசுத்தனென்று அழைக்கப்படுவான்; எருசலேமில் சீவனுக்கென்று எழுதப்பட்டவனெல்லாந் தானே.

௫ அப்போது கர்த்தர் சீயோன் பருவதத்தினுடைய எல்லா வாசஸ்தலத்தின்மேலும் அதினுடைய சபைகளின்மேலும், பகலில் இருக்கும் மேகத்தையும், புகையையும், இரவிலே கொழுந்துவிட்டு எரியும் அக்கினியின் பிரகாசத்தையும் சிருட்டிப்பார்; ஏனெனில் மகிமையானவைகளின்மேலெல்லாம் மறைவு உண்டாயிருக்கும்.

௬ *பகலிலே வெயிலுக்கு நிழலாகவும், பெருவெள்ளத்துக்கும் மழைக்கும் அடைக்கலமாகவும், மறைவிடமாகவும் ஒரு கூடாரம் உண்டாயிருக்கும். *ஏசா. ௨௫. ௪.

## ௫. அதிகாரம்.

என் நேசருடைய திராட்சத்தோட்டத்தின்மேலே எனக்குப் பிரியமாயிருக்கிற அவருக்காக அவருடைய பாட்டைப் பாடுவேனாக; என் பிரியருக்கு மகா செழிப்பான மேட்டிலே *ஒரு திராட்சத்தோட்டம் இருக்கிறது. *மத். ௨௧. ௩௩-௪௧.

௨ அவர் அதை வேலி அடைத்து, அதைக் கல்பொறுக்கி, அதிலே நற்குல திராட்சச்செடிகளை நட்டு, அதின் நடுவில் ஒரு கோபுரத்தைக் கட்டி, அதிலே ஆலையையும் நாட்டி, அது நல்ல திராட்சப்பழங்களைத் தருமென்று காத்திருந்தார்; ஆனால், அது கசப்பான பழங்களைத் தந்தது.

௩ இப்போதும் எருசலேமின் குடிகளே யூதாவின் மனுஷரே, நமக்கும் நமது திராட்சத்தோட்டத்துக்கும் நியாயந்தீருங்கள்.

௪ நாம் நமது திராட்சத்தோட்டத்திற்காகச் செய்யாத எந்த வேலையை அதற்கு இனிச் செய்யலாம்; பின்னை நல்லதிராட்சப்பழங்களைத் தருமென்று நாம் காத்திருக்கும்போது, அது கசப்பான பழங்களைத் தந்தது என்ன?

௫ இப்போதும் நாம் நமது திராட்சத்தோட்டத்துக்குச் செய்வதை உங்களுக்கு அறிவிப்போமே; அது மேய்ந்துபோடப்படுவதற்காக அதின் வேலியை வாங்கிப்போடுவோம்; அது மிதியுண்பதற்காக அதின் அடைப்பைத் தகர்ப்போம்.

௬ அதைப் பாழாக்கிவிடுவோம்; அதின் கிளை நறுக்கப்படாமலும், களை கொத்தி எடுக்கப்படாமலும் போவதினால், முள்ளுச்செடியும், நெரிஞ்சிலும் முளைக்கும்; அதின்மேல் மழையை வருஷிக்கப்பண்ணாதபடிக்கு மேகங்களுக்குங் கற்பிப்போமென்கிறார்.

௭ ஆனால் சேனைகளுடைய கர்த்தரின் திராட்சத்தோட்டம் இஸ்ரவேலின் வீடும், அவர் மனமகிழ்ச்சியின் நாற்று யூதாவின் மனுஷருந்தானே; அவர் நியாயத்திற்குக் காத்திருந்தார்; ஆனால் இதோ சீர்கேடு; நீதிக்குக் காத்திருந்தார்; ஆனால் இதோ அலறுதல்.

௮ *நீங்கள்மாத்திரம் தேசத்தின் நடுவில் வாசமாயிருக்கும்படிக்கு இனி இடமில்லாமற்போகுமட்டும் வீட்டோடே வீட்டைச் சேர்த்து, வயலோடே வயலைச்சேரப்பண்ணுகிற உங்களுக்கு ஐயோ! *மீகா. ௨. ௨.

௯ அது சேனைகளின் கர்த்தராயிருக்கிற நம்முடைய செவிகளுக்குட்பட்டது; மெய்யாகவே அந்தத் திரளான வீடுகள் பாழாகி, பெரியவைகளும் நேர்த்தியானவைகளும் குடியில்லாமல் இருக்கும்.

௰ பத்தேர் நிலமாகிய திராட்சத்தோட்டம் ஒரே குருணிதரும்; ஒரு கலவிதை ஒரு குருணிதரும்.

௰௧ ¶ *கர்த்தரின் கிரியையை நோக்காமலும், அவர் கரங்களின் செய்கையைப் பாராமலும், லொட்டியை நத்த அதிகாலமே எழுந்து, இருட்டிப்போகுமளவும் மதுபானம் தங்களைச் சூடாக்கும்படியாய்த் தரித்திருந்து, *ஆமோ. ௬. ௫—௭.

௰௨ தங்கள் விருந்துகளில் சுரமண்டலத்தையும், தம்புருவையும், மேளத்தையும், நாகசுரத்தையும், மதுபானத்தையும் வைத்

இருக்கிறவர்களுக்கு ஐயோ!

௰௩ ¶ ஆனதுகொண்டு நமது சனம் அறிவில்லாமையினாலே சிறைப்பட்டுப்போகும்; அதில் கனமுள்ளவர்கள் பட்டினியினாலே தொய்வார்கள்; அதின் திரளான கும்பு தவனத்தால் நாவறண்டுபோகும்.

௰௪ ஆனதுகொண்டு அவர்கள் மகிமையும், அவர்கள் திரளும், அவர்கள் சந்தடியும், அவர்களிற் களிகூருகிறவர்களும் பாதாளத்தில் இறங்கிப்போக, அது தன் நெஞ்சை விரிவாக்கி, தன் வாயை ஆவென்று மட்டில்லாமல் திறந்தது.

௰௫ அப்படியே சிறியவனும் குனியப்பண்ணப்பட்டு, பெரியவனும் தாழ்ந்துபோவான்; மேட்டிமையானவர்களின் கண்கள் தாழும்.

௰௬ ஆனால் சேனைகளின் கர்த்தர் நியாயத்தீர்ப்பினால் உயர்ந்து, பரிசுத்த பராபரன் நீதியினாலே பரிசுத்தமுள்ளவராய் விளங்குவார்.

௰௭ அப்போது ஆட்டுக்குட்டிகள் தங்கள் வாடிக்கையாய்த் தொழுவத்திலே மேயும்; கொழுப்பானவர்களுக்கு இருந்து, பாழாய்ப்போனவைகளைப் பரதேசிகள் அநுபவிப்பார்கள்.

௰௮ ¶ மாயையின் கயிறுகளால் அக்கிரமத்தையும், வண்டில் வடங்களாலே பாவத்தையும் இழுத்துவந்து,

௰௯ அவர் தீவிரித்துச் சீக்கிரமாய் நாம் பார்க்கத் தமது கிரியையை நடப்பிக்கட்டுமென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் ஆலோசனையை நாம் அறியும்படிக்குச் சேர்ந்துவரட்டுமென்றும் சொல்லுகிறவர்களுக்கு ஐயோ!

௨௰ தீமையை நன்மையென்றும், நன்மையைத் தீமையென்றும் சொல்லி, இருளை வெளிச்சமும், வெளிச்சத்தை இருளுமாக்கி, கசப்பைத் தித்திப்பும், தித்திப்பைக் கசப்புமாக்குகிறவர்களுக்கு ஐயோ!

௨௧ *தங்கள் பார்வைக்கு ஞானிகளும், தங்கள் எண்ணத்துக்குப் புத்திமான்களுமாய் இருக்கிறவர்களுக்கு ஐயோ!

*வாக். ௯. ௭. உரோ. ௰௨. ௰௬.

௨௨ மதுவைக் குடிக்கப் பராக்கிரமரும், லொட்டியைக் கலந்துவைக்கப் பெலசாலிகளுமாயிருந்து,

௨௩ *குற்றவாளியைப் பரிதானத்தின் நிமித்தம் குற்றமற்றவனாக்கி, நீதிமான்களின் நியாயத்தை அவர்களைவிட்டு விலக்குகிறவர்களுக்கு ஐயோ! *வாக். ௰௭. ௰௫.

௨௪ ¶ இதினிமித்தமாக அக்கினிச் சுவாலை வைக்கோலைப் பட்சிக்குமாப்போலும், செத்தை நெருப்புக்கு இரையாகித் தணியுமாப்போலும், அவர்கள் வேர் வாடி, அவர்கள் துளிர் தூசியைப்போலப் பறந்துபோம்; ஏனெனில் சேனைகளுடைய கர்த்தரின் வேதத்தை வெறுத்து, இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் வசனத்தை அசட்டைபண்ணினார்கள்.

௨௫ ஆகையால் கர்த்தருடைய கோபம் தமது சனத்துக்கு விரோதமாய் மூண்டது; அவர் தமது கையை அதற்கு விரோதமாக நீட்டி, பர்வதங்கள் அதிரத்தக்கவிதமாகவும், அவர்கள் பிணங்கள் நடுவீதிகளில் குப்பைபோலாகத்தக்கவிதமாகவும் அதை அடித்துப்போட்டார்; *இதிலே எல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது.

*ஏசா. ௯. ௰௨: ௰௭. ௨௧: ௰. ௪.

௨௬ ¶ அவர் தூரத்திலுள்ள சாதியாருக்கு ஒரு கொடியை ஏற்றி, அவர்களைப் பூமியின் கடையாந்தரங்களில் இருந்து அவர் பயில் காட்டி அழைப்பார்; அப்போது இதோ தீவிரமும் வேகமுமாய் வருவார்கள்.

௨௭ அவர்களில் விடாய்த்தவனும் இடறுகிறவனுமில்லை; தூங்குகிறவனும் உறங்குகிறவனுமில்லை; அவர்களில் ஒருவனுடைய இடுப்பின் கச்சை அவிழ்வதும், பாதரட்சைகளின் வார் அறுந்துபோவதும் இல்லை.

உ௮ அவர்கள் அம்புகள் கூர்மையும், அவர்கள் வில்லுகளெல்லாம் நாணேற்றினவைகளும், அவர்கள் குதிரைகளின் குளம்புகள் கற்பாறையாக எண்ணப்பட்டவைகளும், அவர்கள் உருளைகள் புசலுக்கு ஒத்தவைகளுமாயிருக்கும்.

உ௯ அவர்கள் கர்ச்சிப்பு துஷ்டசிங்கத்தினுடையது; சிங்கக்குட்டிகளைப்போலக் கர்ச்சித்து, உறுமி, இரையைப் பிடித்து, அதைத் தப்புவிக்கிறவன் இல்லாமல் எடுத்துப்போய்விடுவார்கள்.

௩௰ அவர்கள் அந்நாளிலே சமுத்திர இரைச்சலுக்குச் சரியாய் அதின்மேல் இரைவார்கள்; அப்போது தேசத்தைப் பார்த்தால், இதோ *அந்தகாரமும், வியாகுலமும் உண்டு; அதின் பாழ்க்கடிப்பின்மேல் வெளிச்சம் இருண்டிருக்கும். *ஏசா. ௮. உஉ.

## ௬. அதிகாரம்.

உசியா இராசா மரணம் அடைந்த வருஷத்திலே, *ஆண்டவர் உயரமும், உன்னதமுமான ஆசனத்தின்மேல் உளுக்காந்து இருக்கக்கண்டேன்; அவருடைய வஸ்திரத்தொங்கல்கள் தேவாலயத்தை நிரப்பின. *௨ நாளா. உ௬. உ௩. உ மோ. உ௪. ௰.

உ சேராபீன்கள் அவருக்கு மேலாக நின்றார்கள்; அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவ்வாறு செட்டைகளிருந்தன; அவனவன் இரண்டு செட்டைகளால் தன்தன் முகத்தை மூடி, இரண்டு செட்டைகளால் தங்கள் கால்களை மூடி, இரண்டு செட்டைகளால் பறந்து,

௩ ¶ சேனைகளுடைய கர்த்தர் *பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர், †பூமி அனைத்தும் அவர் மகிமையால் நிறைந்திருக்கிறதென்று ஒருவரோடே ஒருவர் கூப்பிட்டுச் சொன்னார்கள். *வெளி. ௪. ௮. †சங். ௭உ. ௰௯.

௪ ¶ வாசல்களின் நிலைகள் கூப்பிடுகிறவர்களின் சத்தத்தால் அசைந்து, *வீடு புகையினால் நிறைந்தது. *ஏசே. ௰. ௪.

௫ அப்போது நான், எனக்கு ஐயோ! ஏனென்றால் நான் அசுத்த உதடுகளுள்ள மனுஷனும், அசுத்த உதடுகளுள்ள சனத்தின் நடுவில் வாசமாயிருக்கிறவனுமாகையால் அதமாவேனே; ஏனெனில் சேனைகளுடைய கர்த்தராகிய இராசாவை என் கண்கள் கண்டனவென்றேன்.

௬ ஆனால் சேராபீன்களில் ஒருவன் பலிபீடத்தில் குறட்டால் எடுத்த ஒரு கட்டைநெருப்பைத் தன் கையிலே பிடித்திருந்து, என்னண்டைக்குப் பறந்துவந்து,

௭ அதினால் என் வாயைத் தொட்டு, இதோ, இது உன் உதடுகளைத் தொட்டதினால் உன் அக்கிரமம் நீங்கி, உன் பாவம் நிவிர்த்தியானதென்றான்.

௮ ¶ அதின்பிறகு, யாரை அனுப்புவோம்? யார் எங்கள் காரியமாய்ப் போவார் என்று உரைக்கிற ஆண்டவருடைய சத்தத்தைக் கேட்டேன்; அதற்கு நான், இதோ, அடியேன் இருக்கிறேன்; என்னை அனுப்புமென்றேன்.

௯ ¶ அப்போது அவர் சொன்னதாவது: நீ போய், இந்தச் சனத்துக்கு *நீங்கள் காதாரக்கேட்டும் உணராமலும், கண்ணாரக்கண்டும் அறியாமலும் இருங்களென்று சொல். *மத். ௰௩. ௰௪, ௰௫. மாற். ௪. ௰உ. லூக். ௮. ௰. அப். உ௮. உ௬—உ௭.

௰ இந்தச் சனம் தங்கள் கண்களினாலே காணாமலும், தங்கள் காதுகளினாலே கேளாமலும், தங்கள் இருதயத்தினால் உணர்ந்து மனந்திரும்பாமலும், நாம் அதை ஆரோக்கியமாக்காமலுமிருக்க, நீ *அதின் இருதயத்தை நிணத்ததாக்கி, அதின் காதுகளை மந்தப்படுத்தி, அதின் கண்களை மூடிப்போடு என்றார். *ஏசா. உ௯. ௰—௰உ. ௫ மோ. உ௮. உ௯. யோவா. ௰உ. ௪௰. உரோ. ௰௧. ௮.

௰௧ அப்போது, ஆண்டவரே, எதுமட்டும் என்றேன்; அவர் சொன்னதாவது: பட்டணங்கள் குடியில்லாமலும், வீடுகள் மனுஷசஞ்சாரமில்லாமலும் பாழாகி, பூமி

அவாந்தர வெளியாகுமட்டுந்தானே.

௰௨ ஏனெனில் கர்த்தர் மனுஷரைத் தூரமாக விலக்குவதினாலே, தேசத்தின் நடுமையம் மகா வெறுமையாக்கிவிடப்படும்.

௰௩ ¶ ஆகிலும் அதிலே இன்னம் பத்தில் ஒரு பங்கிருந்தும் அது திரும்ப நிர்மூலமாக்கப்படும்; கர்வாலியுமரமும் இச்சில மரமும் இலையற்றுப்போனபிற்பாடு அதின் அடிமரம் இருக்கிறதுபோலே, அவைகளின் அடிமரமும் இருந்து பரிசுத்த வித்தாயிருக்கும் என்றார்.

## ௭. அதிகாரம்.

உஸியாவினுடைய குமாரனாகிய யோத்தாமின் குமாரன் ஆகாசென்ற யூதாவுடைய இராசாவின் நாள்களிலே சம்பவித்தது ஏதென்றால், *ரேத்சீன் என்ற சூரியாவின் இராசாவும், ரெம்லியாவின் குமாரனாகிய பேக்காவென்ற இஸ்ரவேலுடைய இராசாவும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ணவந்தேறி, அதைப் பிடிக்கமாட்டாதேபோனார்கள். *௨ இரா. ௰௬. ௫.

௨ சூரியர் எப்பிராயீமைச் சார்ந்து இருக்கிறார்களென்று தாவீதின் வீட்டுக்கு அறிவிக்கப்பட்டபோது, அவன் இருதயமும் அவன் சனத்தின் இருதயமும் காட்டிலே மரங்கள் காற்றினாலே தத்தளிக்குமாப்போலே தத்தளித்தன.

௩ அப்போது கர்த்தர் ஏசாயாவுடனே சொன்னதாவது: இப்போது நீயும் உன் மகன் சேயார்யாசூபுமாய் வண்ணான் துறை வழியிலுள்ள மேற்குளத்து மதகின் கடைசிமட்டும் ஆகாசுக்கு எதிர்கொண்டுபோய்,

௪ நீ அவனுடனே சொல்லவேண்டியது ஏதெனில், நாம் யூதாவுக்கு விரோதமாய்ப் போயேறி, அதை இறுகப்பிடித்து, அதை நமக்குள்ளே பங்கிட்டுக்கொண்டு, தபேயாலின் குமாரனை அதில் இராசாவாக்கி, அரசாளப்பண்ணுவோமென்று,

௫ சூரியர் எப்பிராயீமோடும், ரெம்லியாவின் மகனோடும்கூட உனக்கு விரோதமாய்ப் பொல்லாத ஆலோசனையைப் பண்ணினதின்நிமித்தம்,

௬ நீ பயப்படாமல் அமர்ந்திருக்கப் பார்; புகைகிற இந்த இரண்டு அடிக்கொள்ளிகளாகிய சூரியரோடே வந்த ரேத்சீனும் ரெம்லியாவின் மகனும், எரிகிற கோபத்தின் நிமித்தம் உன் இருதயம் துவளவேண்டாம்.

௭ அது நிலைநிற்பதுமில்லை; அது அப்படியாவதுமில்லை என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௮ ஏனென்றால் சூரியாவின் தலைப்பட்டணம் தமஸ்குவும், தமஸ்குவின் தலைவன் ரேத்சீனும்தானே; இன்னம் அறுபத்தைந்து வருஷங்களிலே எப்பிராயீம் சனமாயிராதபடிக்கு நொறுக்கப்படும்.

௯ இப்போதோ எப்பிராயீமின் தலைப்பட்டணம் சமாரியாவும், சமாரியாவின் தலைவன் ரெம்லியாவின் மகனும்தானே; நீங்கள் விசுவாசியாதேபோனால் நிலைப்படமாட்டீர்களென்று சொல்லென்றார்.

௰ ¶ அப்புறம் கர்த்தர் ஆகாசைப்பார்த்துப் பேசி,

௰௧ உன் பராபரனாகிய கர்த்தரிடத்தில் ஒரு அடையாளத்தை உனக்குக் கேள்; அதைப் பாதாளத்திலேயானாலும், உயர உன்னதத்திலேயானாலுமிருந்து உண்டாகக் கேளென்று சொன்னார்.

௰௨ ஆகாசோவென்றால் அதை நான் கேளேன்; நான் கர்த்தரைப் பரிட்சைபாராதிருப்பேனென்றான்.

௰௩ அப்போது ஏசாயா சொன்னதாவது: இப்போதும் தாவீதின் வீட்டாரே, கேளுங்கள்; மனுஷரை விசனப்படுத்துகிறது உங்களுக்குக் கொஞ்சக்காரியமாய்க் காண்கிறதென்று என் பராபரனையும் விசனப்படுத்துகிறீர்களோ?

௰௪ ஆனதுகொண்டு ஆண்டவர் தாமாய் உங்களுக்கு ஒரு அடையாளத்தைக் கொடுப்பார்; *இதோ, ஒரு கன்னியாஸ்திரி கர்ப்

பவதியாகி ஒரு குமாரனைப்பெறுவாள்; அவருக்கு இம்மானுவேலென்று பேரிடுவாள். *மத். ௧. ௨௩. லூக். ௧. ௩௧.

௰௫ தீமையை வெறுத்து நன்மையைத் தெரிந்துகொள்ள அறியும் வயதுமட்டாக அவர் வெண்ணெயும் தேனும் சாப்பிடுவார்.

௰௬ இந்த இளைஞனேவெனில் தீமையை வெறுக்கவும், நன்மையைத் தெரிந்துகொள்ளவும் அறிகிறதற்குமுன்னே நீர் அருவருக்கிற தேசம் அதின் இரண்டு இராசாக்களால் விடப்பட்டதாயிருக்கும்.

௰௭ ¶ ஆனால் எப்பிராயீம் யூதாவைவிட்டுப் பிரிந்தநாள்துவக்கி வராதிருக்கிற நாள்களைக் கர்த்தர் உம்முடையமேலும், உம்முடைய சனத்தின்மேலும், உம்முடைய பிதாவுடைய வீட்டின்மேலும், அசூரியாவின் இராசாவினாலே வரப்பண்ணுவார்.

௰௮ பின்னையும் சம்பவிப்பதாவது: கர்த்தர் எகிப்தினுடைய நதிகளின் கடையாந்தரத்தில் ஈக்களையும், அசூரியா தேசத்திலிருக்கும் தேன்பூச்சிகளையும் பயில்போட்டு அழைப்பார்.

௰௯ அவைகள் வந்து ஏகமாய் வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலும், கல்மலைகளின் வெடிப்புகளிலும், எல்லா முள்ளுக்காடுகளிலும், எல்லாச் சாலைகளிலும் தங்கும்.

௨௰ அக்காலத்திலே ஆண்டவர் *கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியாகிய நதிக்கு அக்கரையான அசூரியாவின் இராசாவினாலே சிரசையும், கால்களின் மயிரையும் சிரைப்பித்து, தாடியையும் வாங்கிப்போடுவிப்பார். *எசா. ௰. ௫.

௨௧ அக்காலத்தில் ஒருவன் ஒரு கிடாரியையும், இரண்டு ஆடுகளையும் வளர்த்தால்,

௨௨ அவன் அவைகள் பரிபூரணமாய்ப் பால் கறக்கிறபடியினாலே வெண்ணெயைச் சாப்பிடுவதுண்டு; தேசத்தின் நடுவில் மீதியாயிருப்பவனெல்லாம் வெண்ணெயையும் தேனையுமே சாப்பிடுவான்.

௨௩ பின்னையும் சம்பவிப்பது ஏதெனில், ஆயிரம் வெள்ளிக்காசு பெறும் ஆயிரம் திராட்சச்செடியிருந்த நிலமெல்லாம் முள்ளுச்செடியும் நெரிஞ்சிலுமாம்.

௨௪ அம்புகளையும், வில்லையும் பிடித்து அங்கே போகவேண்டியதாயிருக்கும்; ஏனெனில் தேசம் அனைத்தும் முள்ளுச்செடியும் நெரிஞ்சிலுமாயிருக்கும்.

௨௫ குந்தாலியாலே கொத்தப்படுகிற எல்லா மலைகளும் உண்டே; அங்கே முள்ளுச்செடிகளுக்கும், நெரிஞ்சில்களுக்கும் பயப்படுவதினால் போகக்கூடாதபடியினாலே, அது மாடுகளை ஓட்டிவிடுவதற்கும், ஆடுகள் மிதிப்பதற்குமான இடமாயிருக்குமென்றான்.

## ௮. அதிகாரம்.

பின்னையும் கர்த்தர் என்னுடனே ஒரு பெரிய கடிதாசிச் சுருளை எடுத்துக்கொண்டு, மனுஷன் எழுதுகிறபிரகாரமாய் அதிலே கொள்ளைக்குக் கடுகி, சூறைக்குத் தீவிரிப்பான் என்று எழுதென்றார்.

௨ அப்போது நான் உண்மையுள்ள சாட்சி மனுஷராயிருக்கிற ஆசாரியனாகிய உரியாவையும், எபெரெகியாவின் குமாரனாகிய சகரியாவையும் அதற்குச் சாட்சியாக வைத்துக்கொண்டேன்.

௩ நான் தீர்க்கதரிசியானவளண்டைக்குச் சேர்ந்தபோது, அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்றாள்; அப்போது கர்த்தர் என்னுடனே, கொள்ளைக்குக் கடுகி, சூறைக்குத் தீவிரிப்பான் என்றபேரை அவனுக்கு இடு.

௪ ஏனெனில் இந்தப் பாலகன், என் அப்பா, என் அம்மா என்று கூப்பிட அறிகிறதற்குமுன்னே, தமஸ்குவின் ஆஸ்தியும், சமாரியாவின் கொள்ளையும், அசூரியாவின் இராசாவுக்குமுன்பாகக் கொண்டுபோகப்படுமென்றார்.

௫ ¶ கர்த்தர் அப்புறம் என்னோடே பேசத் தொடர்ந்து சொன்னதாவது:

௬ இந்தச் சனம் மெதுவாய் ஓடுகிற சீலோவாவின் தண்ணீர்களை அசட்டைபண்ணி, ரேத்சீனையும் ரெமலியாவின் குமாரனையுங் குறித்துச் சந்தோஷிக்கிறபடியினாலே,

௭ இதோ ஆண்டவர் அசூரியாவின் இராசாவும் அவனுடைய சகல ஆடம்பரமுமாகிய ஆற்றினுடைய வலுவும் திரளுமான தண்ணீர்களை அவர்கள்மேலே புரளப்பண்ணுவார்; அது அவர்களுடைய ஓடைகளெல்லாவற்றின்மேலும் புரண்டு, அவர்களுடைய எல்லாக் கரைகள்மேலும் போய்,

௮ யூதாவுக்குட்புகுந்து புரண்டு கடந்து, கழுத்துமட்டும் வருமென்றார்; *இம்மானுவேலே, அவன் செட்டைகளின் விரிவு உமது தேசத்தின் அகலத்தை நிரப்பும்.

*ஏசா. ௭. ௰௪.

௯ ¶ சனசதளங்களே, ஏகக் கூட்டமாகி *முறியுங்கள்; சகல தூரதேசத்தாரே, செவிகொடுங்கள்; இடைகட்டிக்கொண்டு முறியுங்கள்; இடைகட்டிக்கொண்டு முறியுங்கள். *௨ இரா. ௰௯. ௨௧.

௰ யோசனையை யோசியுங்கள், அது அவத்தமாகும்; வார்த்தையை வசனியுங்கள். அது நிற்காது; ஏனெனில் எங்களுடனே பராபரன் இருக்கிறார்.

௰௧ ஏனெனில் கர்த்தர் என்னுடனே பேசி, என் கையைத் திடப்படுத்தி, நான் இந்தச் சனத்தின் வழியிலே நடவாதபடிக்கு எனக்குப் புத்திசொல்லி விளம்பினதாவது:

௰௨ இந்தச் சனம் ஒப்பந்தமென்று சொல்லுகிறதை எல்லாம் நீங்கள் ஒப்பந்தமென்று சொல்லாமலும், அது பயப்படுகிற பயமாய் நீங்கள் பயப்படாமலும், தத்தளியாமலும்,

௰௩ சேனைகளின் கர்த்தரையே பரிசுத்தம்பண்ணுங்கள்; அவரே உங்கள் பயமும், அவரே உங்கள் தத்தளிப்புமாயிருப்பாராக.

௰௪ அவர் உங்களுக்குப் பரிசுத்தஸ்தலமும், இஸ்ரவேலின் இரண்டு வீடுகளுக்கோ *தடுக்கலின் கல்லும், இடறுதலின் கல்மலையும், எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும், கண்ணியுமாக இருப்பார்.

*ஏசா. ௨௮. ௰௬. ௨ரோ. ௯. ௩௩.

௰௫ அவர்களில் அநேகர் இடறிவிழுந்து நொறுங்கிச் சிக்குண்டு பிடிபடுவார்கள்.

௰௬ சாட்சியைக் கட்டிப்போடு; நம்முடைய சீஷருக்குள் இருக்கிற வேதத்தை முத்திரியென்றார்.

௰௭ ¶ யாக்கோபின் வீட்டுக்குத் தமது முகத்தை மறைக்கிற கர்த்தருக்கு நான் காத்து, அவருக்கு எதிர்பார்த்திருப்பேன்.

௰௮ *இதோ, நானும், கர்த்தர் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும் சீயோன்பருவதத்தில் வாசமான சேனைகளுடைய கர்த்தராலே இஸ்ரவேலில் அடையாளங்களாகவும், அற்புதங்களாகவும் இருக்கிறோம்.

*எபி. ௨. ௰௩.

௰௯ ¶ ஆனால் அவர்கள் உங்களுடனே அஞ்சனம்பார்க்கிறவர்களையும், முணுமுணென்று சத்தமிடுகிற குறிகாரரையும் கேளுங்களென்பார்கள்; சனம் தன் பராபரனைக் கேட்கவேண்டாமோ? உயிருள்ளவர்களுக்காகச் செத்தவர்களைக் கேட்கலாமோ?

௨௰ வேதத்தையும் சாட்சியையும் கவனிக்கவேண்டும்; இந்த வார்த்தையின்படியே அவர்கள் சொல்லாவிட்டால், அவர்களுக்கு விடியற்காலை வெளுப்பில்லை.

௨௧ இடுக்கண் அடைந்தவர்களும் பட்டினியுமாய்த் தேசத்தைத் தாண்டுவார்கள்; அவர்கள் பட்டினியாயிருக்கும்போது, மூர்க்கவெறியாகி, தங்கள் இராசாவையும் தங்கள் பராபரனையும் தூஷணிக்கிறவர்களாய் அண்ணாருவார்கள்.

௨௨ தேசத்தை நோக்கிப் பார்ப்பார்கள்; ஆனால் இதோ இக்கட்டும் இருட்டுமாம்: இடுக்கத்தால் இருளடைந்து, அந்தகாரத்திலே தள்ளுண்டு அலைவார்கள்.

## ௯. அதிகாரம்.

ஆகிலும் அவர் செபுலோன் தேசத்தையும், நவுதலி தேசத்தையும் இளப்பமாக்கின முந்தின காலத்து இடுக்கமாய் அது இருண்டிருப்பதில்லை; ஏனென்றால் அவர் *கடற்கரைவழியும், யோர்தான் நதியோரமுமான புறச்சாதியாருடைய கலிலேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே மகிமைப்படுத்துவார். *மத். ௪. ௰௫, ௰௬.

௨ ¶ *இருளில் நடக்கிற சனம் பெரிய வெளிச்சத்தைக் காணும்; மரணநிழலின் தேசத்தில் குடியிருக்கிறவர்களின்மேல் வெளிச்சம் பிரகாசிக்கும். *லூக். ௧. ௭௮, ௭௯.

௩ அந்தச் சாதியைத் திரளாக்கி, அதற்கு மகிழ்ச்சியைப் பெருகப்பண்ணுவீர்; அறுப்பில் மகிழ்கிறதுபோலவும், *கொள்ளையைப் பங்கிட்டுக்கொள்ளுகையில் களிகூருகிறதுபோலவும் உமக்குமுன்பாக மகிழ்வார்கள். *சங். ௱௰௯. ௱௬௨.

௪ ஏனெனில் அவர்கள் சுமையான நுகத்தடியையும், அவர்கள் தோளின் மிலாறையும், அவர்கள் ஆளோட்டியின் கோலையும், *மீதியானரின் நாள் நடபடிக்குச் சரியாய் முறித்துப்போட்டீர். *நியா. ௭. ௨௨.

௫ அதேனென்றால் அமளியாய் யுத்தம் பண்ணுகிற எல்லாப்படைமுஸ்தீதும் இரத்தங்களிலே புரண்ட உடுப்பும் சுட்டெரிக்கப்பட அக்கினிக்கு இரையாகும்.

௬ ¶ ஏனெனில் *நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார்; கர்த்தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும்; அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்லமையுள்ள பராபரன், நித்திய பிதா, சமாதானப் பிரபு என்னப்படும். *லூக். ௨. ௭—௰௧. யோவா. ௩. ௰௬.

௭ *தாவீதின் ஆசனத்தையும் அவனுடைய இராச்சியத்தையும் அவர் திடப்படுத்தி, அதை இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்திலும் நீதியிலும் நிலைப்படுத்தும்படிக்கு, அதை அவர் ஆளும் கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும், அதின்மேலுள்ள சமாதானத்துக்கும் முடிவில்லை; †சேனைகளுடைய கர்த்தரின் வைராக்கியம் அதைச் செய்யும். *லூக். ௧. ௩௨, ௩௩. †ஏசா. ௩௭. ௩௨. ௨ இரா. ௰௯. ௩௧.

௮ ¶ ஆண்டவர் யாக்கோபிலே ஒரு வார்த்தையை அனுப்பினார்; அது இஸ்ரவேலின்மேல் இறங்குகிறதாயிருக்கிறது.

௯ ¶ செங்கற்கள் இடிந்துபோயின; வெட்டின கற்களாலே திரும்பக் கட்டுவோம்; காட்டத்திமரங்கள் வெட்டிப்போடப்பட்டன; கேதுருமரங்களை அவைகளுக்கு மாற்றிவைப்போமென்று,

௰ அகந்தையும், மனப்பெருமையுமாய்ச் சொல்லுகிற எப்பிராயீமரும், சமாரியாவின் குடிகளுமாகிய எல்லாச் சனத்துக்கும் அது தெரியவரும்.

௰௧ என்னவெனில் கர்த்தர் ரேத்சீனுடைய சத்துருக்களை அவர்கள்மேல் உயர்த்தி, அவர்களுடைய மற்றச் சத்துருக்களை அவர்களோடே கூட்டிக்கலப்பார்.

௰௨ சூரியர் முன்புறத்திலும், பெலிஸ்தியர் பின்புறத்திலுமிருந்து வந்து, இஸ்ரவேலை முழு வாயாலும் பட்சிப்பார்கள்; *இதில் எல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினபடியிருக்கிறது. *ஏசா. ௫. ௨௫: ௰. ௪.

௰௩ ¶ ஏனெனில் இந்தச் சனம் தன்னை அடிக்கிறவரண்டைக்குத் திரும்பாது; சேனைகளுடைய கர்த்தரைத் தேடாதேபோகிறார்கள்.

௰௪ ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே தலையையும், வாலையும், கிளையையும், நாணலையும், ஒரேநாளிலே அறுப்பார்.

௰௫ *மூப்பனும், கனமுகமானவனும் தலை; பொய்ப்போதகம்பண்ணுகிற தீர்க்கதரிசி வால். *௨ இரா. ௰௭. ௯—௨௪.

௰௬ ஏனென்றால் *இந்தச் சனத்தை நடத்

குகிறவர்கள் எத்தரும், அவர்களால் நடத்தப்படுகிறவர்கள் விழுங்கப்படுகிறவர்களுமாய் இருக்கிறார்கள். *ஏசா. ௩. ௰௨. அக். ௬. ௩௬.

௰௭ ஆனபடியால், ஆண்டவர் அதின் இளைஞர்மேல் பிரியமாயிருப்பதுமில்லை; அதிலிருக்கிற தாய்தகப்பனில்லாதவர்கள்மேலும், விதவைகள்மேலும் இரங்குவதுமில்லை; ஏனெனில் அவர்கள் அனைவரும் மாயக்காரரும் பொல்லாதவர்களுமாயிருக்கிறார்கள்; எல்லா வாயும் பயித்தியம்பேசும்; *இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல், அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது. *௰௨. ௨௪.

௰௮ ¶ ஆகாமியமானது அக்கினியைப்போல எரிகிறபடியினாலே, அது முள்ளுச்செடியையும் நெரிஞ்சிலையும் பட்சித்து, சன்னபின்னலான காட்டைப் புகைதிரண்டெழும்பத்தக்கதாகக் கொளுத்தும்.

௰௯ சேனைகளுடைய கர்த்தரின் சினத்தால் தேசம் மந்தாரப்பட்டு, சனம் அக்கினிக்கு இரையாய்ப்போம்; ஒருவனும் தன் சகோதரனைத் தப்பவிடான்.

௨௰ வலதுபுறத்தில் அறுத்தாலும் பசித்திருப்பார்கள்; இடதுபுறத்திலே தின்றாலும் திருத்தியாவதில்லை; தன்தன் புயத்தின் மாம்சத்தை அவனவன் தின்பான்.

௨௧ எப்பிராயீமை மனாசேயும், மனாசேயை எப்பிராயீமுந்தானே; இவர்கள் ஏகமாய் யூதாவுக்கும் விரோதமாயிருப்பார்கள்; *இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கும். *ஏசா. ௰௨. ௰௭.

## ௰. அதிகாரம்.

ஏழைகளை வழக்கிலே தோற்கப்பண்ணவும், நம்முடைய சனத்தில் சிறுமையானவர்களின் நியாயத்தைப் பறிக்கவும், விதவைகளைச் சூறையிடவும், திக்கற்றவர்களைத் தாங்கள் கொள்ளையிடவுமாக,

௨ அக்கிரமப் பிரமாணங்களைத் தீர்மானிக்கிறவர்களுக்கும், பாரமானவைகளை எழுதுகிற வேதபாரகருக்கும் ஐயோ!

௩ விசாரிப்பின் நாளிலும், தூரத்திலிருந்து வருகிற பாழ்க்கடிப்பின் நாளிலும் நீங்கள் என்னசெய்வீர்கள்? யாரண்டையிலே ஒத்தாசைதேட ஓடுவீர்கள்? உங்கள் மகிமை கட்டுண்டவர்களின்கீழ் முடங்கிவிழாதபடிக்கு அதை எங்கே வைத்துப்போவீர்கள்?

௪ கொலைசெய்யப்பட்டவர்களுக்குள்ளும் விழுவார்கள்; இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல், அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கும்.

௫ ¶ நம்முடைய கோபத்தின் கோலாகிய *அசூரியருக்கு ஐயோ! அவர் கையிலிருக்கிறது நம்முடைய சினத்தின் மிலாறு. *ஏசா. ௩௬. ௧. ௨ இரா. ௰௯. ௰௩.

௬ நாம் அமார்க்கமான சாதிக்கு விரோதமாய் அவனை அனுப்பி, நம்முடைய கோபம்மூண்டிருக்கிற சனத்தின்மேல் அதைக் கொள்ளையிடவும், சூறையாடவும், அதை வீதிகளின் சேற்றைப்போல மிதித்துப்போடவும் அவனுக்குக் கட்டளைகொடுப்போம்.

௭ அவனோவெனில் அப்படிக்கொத்த எண்ணமும் அவன் இருதயம் அப்படிக்கொத்த நினைவுமாயிராமல், கொஞ்சமாயிராத சாதிகளை அழிக்கவும், சங்கரிக்கவும் தன் மனதிலே நினைவாயிருக்கிறான்.

௮ ¶ ஏனெனில் *என் பிரபுக்கள் அனைவரும் இராசாக்களல்லவோ? *ஏசா. ௩௬. ௪, ௨௰.

௯ கலனேபட்டணம் கரகேமிசைப்போலானதில்லையோ? ஆமாத்து அற்பாத்தைப்போலுமானதில்லையோ? சமாரியா தமஸ்குவைப்போலானதில்லையோவென்றும்,

௰ எருசலேமையும், சமாரியாவையும் பார்க்கிலும் விசேஷித்த சொரூபங்களுள்ள விக்கிரக இராச்சியங்களை என் கை கண்டுபிடித்ததுபோலவும்,

௰௧ நான் சமாரியாவுக்கும், அதின் விக்கிர

க்களுக்கும் செய்ததுபோலவும் எருசலேமுக்கும், அதின் விக்கிரகங்களுக்கும் செய்யேனோவென்றும் சொல்லுகிறான்.

௰௨ ஆனால் சம்பவிப்பதேதெனில், ஆண்டவர் சீயோன் பருவதத்திலும், எருசலேமிலும் தமது செயலை எல்லாம் முடித்திருக்கும்போது *அசூரிய இராசாவினுடைய பெருமையான நெஞ்சின் கனியையும், அவன் மேட்டிமையான கண்களின் சிறப்பையும் நாம் விசாரிப்போம் என்கிறார்.

*எசா. ௩௭. ௩௬. ௨ இரா. ௰௯. ௩௫.

௰௩ ¶ ஏனென்றால், அவன் சொல்லுகிறது: என் கையின் பெலத்தினாலும், என் ஞானத்தினாலும் இதைச் செய்தேன்; ஏனெனில், உணர்வுள்ளவனாய் இருக்கிறேன்; அதினாலே நான் சனசதனங்களின் எல்லைகளை வாங்கிவிட்டு, அவர்கள் உக்கிராணங்களைக் கொள்ளையிட்டு, வல்லவனைப்போலக் குடியானவர்களைத் தாழ்த்தினேன்.

௰௪ என் கை சனசதனங்களின் ஆஸ்தியை ஒரு குருவிக்கூட்டைப்போலக் கண்டுபிடித்தது; தனித்துவிடப்பட்ட முட்டைகள் வாரிக்கொள்ளப்படுவதுபோலே பூமியை எல்லாம் நான் வாரிக்கொண்டேன்; செட்டையை அசைத்தவர்களும், வாயைத் திறந்தவர்களும், குசுகுசென்று சீறினவர்களுமில்லை என்கிறான்.

௰௫ கோடாரி தன்னால் வெட்டுகிறவனுக்கு விரோதமாய் மேன்மைபாராட்டலாமோ? அல்லது வாள் தன்னை இழுக்கிறவனுக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டலாமோ? தடி தன்னை எடுக்கிறவர்களை அசைப்பதுபோலவும், மிலாறு நான் மரம் அல்லவென்று எழும்புமாப்போலவுந்தானே.

௰௬ ஆகையால் சேனைகளுடைய ஆண்டவராகிய கர்த்தர் அவனுடைய கொழுத்தவர்களில் இளைப்பை அனுப்பி, வேகிற அக்கினிக்கொத்த நெருப்பை அவன் மகிமையின்கீழ்க் கொளுத்துவார்.

௰௭ இஸ்ரவேலின் வெளிச்சமானவர் அக்கினியும், அதின் பரிசுத்தர் அக்கினிச்சுவாலையுமாகி எரிந்து, ஒரேநாளிலே அவனுடைய முள்ளுச்செடிகளையும், நெரிஞ்சில்களையும் பட்சித்து,

௰௮ அவனுடைய காட்டின் மகிமையையும், அவனுடைய பயிர்நிலத்தின் மகிமையையும், ஆத்துமாத்துவக்கிச் சதைபரியந்தமும் அழியப்பண்ணுவார்; கொடிபிடிக்கிறவன் களைத்து விழுந்தவண்ணமாய் அது இருக்கும்.

௰௯ அவனுடைய காட்டின் மீதியானமரங்கள் மட்டாயிருக்கும், ஒரு பயல் அவைகளை எண்ணி எழுதலாம்.

௨௰ ¶ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், இஸ்ரவேலில் மீதியானவர்களும் யாக்கோபுடைய வீட்டிலே தப்பினவர்களும் தங்களை அடித்தவனை இனிச் சார்ந்துகொள்ளாமல், இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரை உண்மையாகச் சார்ந்துகொள்ளுவார்கள்.

௨௧ மீதியாயிருப்பவர்கள், யாக்கோபிலே மீதியாயிருப்பவர்களே, வல்லமையுள்ள பராபரனண்டைக்குத் திரும்புவார்கள்.

௨௨ ஏனெனில் *இஸ்ரவேலே, உன்னுடைய சனம் சமுத்திரத்தின் மணலத்தனையாய் இருந்தாலும் அதில் மீதியாயிருப்பவர்களே திரும்புவார்கள்; அழிக்குதல் அறுதியாய்த் தீர்ந்திருக்கும்போது நீதி புரண்டுவரும். *உரோ. ௯. ௨௭, ௨௮.

௨௩ ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் தேசத்துக்குள் எங்கும் அறுதியான அழிக்குதலைச் செய்வார்.

௨௪ ¶ ஆகையால் சீயோனிலே வாசமாகிய நமது சனமே, உன்னைக் கோலாலடித்து, தன் தடியை எகிப்தியனைப்போல உன்மேல் ஓங்குகிற அசூரியனுக்குப் பயப்படாதிரு.

௨௫ ஏனெனில், இன்னம் மெத்தக் கொஞ்சப்போதிலே சினம் தீர்ந்திருக்கும்; அப்போது நம்முடைய கோபம் அவர்களைச்

சங்கரிக்கப்போகிறதென்று சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் விளம்புகிறார்.

உசு *ஓரேப் கல்மலையண்டையிலே மீதியானியர் வெட்டுண்டவண்ணமாய்ச் சேனைகளுடைய கர்த்தர் அவன்மேல் ஒரு சவுக்கை எழுப்பித் தமது கோலை எகிப்திலே கடலின்மேல் ஓங்கினதுபோலே ஓங்குவார். *நியா. எ. யசு. ம்ரு.

உஎ அந்நாளிலே அவன் சுமை உன் தோளிலும், அவன் நுகத்தடி உன் கழுத்திலுமிருந்து நீங்கும்; தயிலத்தால் நுகத்தடி கெட்டுப்போம்.

உஅ ¶ அவன் ஆயாத்துக்கு வந்து, மிக்ரோனைக்கடந்து, மிக்மாசிலே தன் படைமுஸ்திதுகளை வைத்துவைப்பான்.

உகூ கணவாயைத் தாண்டிக் கேபாவிலே பாளயம் இறங்குகிறார்கள்; ராமா அதிர்கிறது; சவுலின் ஊராகிய கிபேயா ஓடிப்போகிறது.

௩ய கல்லிம் குமாரத்தியே, உரத்துக் கூப்பிடு; சிறுமையான ஆனதோத்தே, லாயீசுக்கு நேராக உன் சத்தத்தை நீட்டிக் கூப்பிடு.

௩க மத்மேனா வலசைவாங்கும், கேபிமின் குடிகள், தப்பியோடக் கூட்டங்கூடுகிறார்கள்.

௩உ இன்னம் ஒருநாள் நோபிலே நிற்கிறதற்கிருந்து, தன் கையைச் சீயோன் குமாரத்தியின் பருவதத்துக்கும், எருசலேமின் மேட்டுக்கும் விரோதமாய் அசைப்பான்.

௩௩ ¶ ஆனால் இதோ, சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் *தோப்புகளை வலுமையாய்த் தறிப்பார்; ஓங்கிவளர்ந்தவைகள் வெட்டுண்டு மேட்டிமையானவைகள் தாழ்த்தப்படும். *ஏசா. ௩எ. ௩கூ.

௩ச அவர் காட்டின் அடர்த்தியைக் கோடரியினாலே துணிப்பார்; மகத்துவமானவராலே அந்த லீபனோன் விழும்.

## யக. அதிகாரம்.

வெட்டப்பட்ட இசாயின் *அடிமரத்திலிருந்து ஒரு துளிர் புறப்பட்டு, அவன் வேர்களிலிருந்து ஒரு கிளையெழும்பிக் கனிதரும். *ஏசா. ச. உ. எரே. உ௩. ரு. லூக். உ. ௩—யச.

உ இவர்மேலே கர்த்தருடைய ஆவியாகிய ஞானம், உணர்வென்றவைகளின் ஆவியும், ஆலோசனை, பெலனென்றவைகளின் ஆவியும், அறிவு, கர்த்தருக்குப் பயப்படுதல் என்றவைகளின் ஆவியுமானவர் தங்கியிருப்பார்.

௩ அவர் மூகந்துணருதல் கர்த்தருக்குப் பயப்படுதலோடே இருக்கும்; *அவர் தம்முடைய கண்களுடைய பார்வையின்படி நியாயந்தீர்க்காமலும், தம்முடைய காதுகளுடைய கேள்வியின்படி கடிந்துசொல்லாமலும், *யோபு. எ. உச.

ச ஏழைகளை நீதியாய் நியாயம்விசாரித்துப் பூமியில் சிறுமையானவர்களைச் செம்மையாய்க் கடிந்துகொண்டு, பூமியைத் *தமது வாக்கின் கோலால் அடித்து, தம்முடைய உதடுகளின் ஆவியால் ஆகாதவனைக் கொல்லுவார். ஏசா. சகூ. உ. உதெச. உ. அ. வெளி. யகூ. யரு.

ரு நீதி அவர் அரையின் கட்டும், சத்தியம் அவர் இடுப்பின் கச்சையுமாயிருக்கும்.

சூ ¶ அப்போது *ஓநாய் ஆட்டுக்குட்டியோடே தங்கி, சிவிங்கி வெள்ளாட்டுக்குட்டியோடே படுத்துக்கொள்ளும்; கன்றுக்குட்டியும், பாலசிங்கமும், காளையும் ஒரு சிறிய பயல் அவைகளை ஓட்டத்தக்கவிதமாய் ஒருமித்திருக்கும். *ஏசா. சுரு. உரு. ஓசே. உ. யஅ.

எ பசுமாடும், கரடியும் கூடமேய்ந்து, அவைகளின் குட்டிகள் ஒருமித்துப் படுத்திருக்கும்; சிங்கம் மாட்டைப்போலே வைக்கோலைத் தின்னும்.

அ முலைகுடிக்கிற குழந்தை விரியன் பாம்பு வளையின்மேல் விளையாடி, பாலகன் கட்டுவிரியன் புற்றிலே தன் கையைப் பாய்ச்சும்.

கூ தமது பரிசுத்த பருவதமெங்கும் தீமை

பண்ணுவாருமில்லை; கேடுசெய்வாருமில்லை; ஏனெனில் தண்ணீர்கள் கடல் ஆழத்தை மூடுவதுபோலப் பூமி கர்த்தரை அறிகிற அறிவினால் நிறைந்திருக்கும்.

௰ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், *சனசதனங்களுக்குக் கொடியாக நிற்கிற இசாயின் வேருக்காகச் சாதிகள் விசாரித்துக் கேட்பார்கள்; அவருடைய தாபரஸ்தலம் மகிமையாயிருக்கும். *உரோ. ௰௫. ௰௨.

௰௧ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், ஆண்டவர் அசூரியாவிலும், எகிப்திலும், பத்ரோசிலும், எத்தியோப்பியாவிலும், பெர்சியாவிலும், சினேயாரிலும், ஆமாத்திலும், சமுத்திரத்தின் தீவுகளிலும் தம்முடைய சனத்தின் மீதியானவர்களை வசப்படுத்திக்கொள்ளத் திரும்ப இரண்டாம்விசை தமது கரத்தை நீட்டி,

௰௨ சாதிகளுக்குக் கொடியேற்றி, இஸ்ரவேலிலே துரத்துண்டவர்களைச் சேர்த்து, யூதாவில் சிதற அடிக்கப்பட்டவர்களைப் பூமியின் நாலுதிசைகளிலுமிருந்து கூட்டுவார்.

௰௩ எப்பிராயீமின் பொறாமையும் நீங்கும்; யூதாவின் சத்துருக்களோவென்றால் சங்கரிக்கப்படுவார்கள்; எப்பிராயீம் யூதாவின்மேல் பொறாமையாயிராமலும், யூதா எப்பிராயீமை இறுகப்பிடியாமலும்,

௰௪ அவர்கள் மேற்கேயிருக்கிற பெலிஸ்தியருடைய தோளின்மேலே பாய்ந்து, இருவரும் ஏகமாய்க் கிழக்குத்திசையாரையும் கொள்ளையிட்டு, தங்கள் கைகளை ஏதோமின் மேலும், மோவாபின்மேலும் போடுவார்கள்; அம்மோன் புத்திரரும் அவர்களுக்குக் கீழ்ப்படிவார்கள்.

௰௫ எகிப்தின் சமுத்திரமுனையையும் கர்த்தர் சாபமிட்டு, நதியின்மேலே தமது கையைத் தம்முடைய கரத்தின் சத்துவத்தினாலே அசைத்து, அதைப் பாதஇரட்சைகள் நனையாமல் கடக்கப்பண்ணத்தக்கவிதமாய் ஏழாறுகளாக அடிப்பார்.

௰௬ அப்படியே இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து வந்தேறுகிற நாளில் அவர்களுக்குச் சம்பவித்ததுபோலே, அவருடைய சனத்தில் அசூரியாவிலே மீதியானவர்களுக்கு நடக்கத்தக்க வழியுண்டாயிருக்கும்.

## ௰௨. அதிகாரம்.

அக்காலத்திலே நீ சொல்வதாவது: கர்த்தாவே என்மேலே கோபமாயிருந்தீர்; ஆனால் உம்முடைய கோபம் திரும்பிற்று; என்னைத் தேற்றரவுபண்ணுகிறீர் என்கிறதினிமித்தம், தேவரீரைத் துதிக்கிறேன்.

௨ இதோ, *என் இரட்சிப்பின் பராபரன்; நான் அவரை நம்பிப் பயப்படாதிருப்பேன்; ஏனெனில் என் பெலனும், என் கீதமும் கர்த்தராகிய பராபரன்; அவர் எனக்கு இரட்சிப்பானவரென்பாய்.
*௨ மோ. ௰௫. ௨.

௩ நீங்கள் மகிழ்ச்சியோடே இரட்சிப்பின் ஊற்றுகளில் *தண்ணீர்களை மொண்டு.
*யோவா. ௭. ௩௭, ௩௮.

௪ அக்காலத்திலே சொல்வதாவது: கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நாமத்தைத் தொழுதுகொள்ளுங்கள்; சனசதனங்களுக்குள்ளே அவர் செய்கைகளை அறிவியுங்கள்; அவருடைய நாமம் உயர்ந்ததென்று பிரஸ்தாபம்பண்ணுங்கள்.

௫ *கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; ஏனெனில் மகத்துவமானதைச் செய்தார்; இது பூமி எங்கும் அறியப்படக்கடவதென்பீர்கள். *சங். ௬௭. ௭.

௬ சீயோனில் வாசமாயிருக்கிறவளே, நீ சத்தமிட்டுக் கெம்பீரி; ஏனெனில் இஸ்ரவேலின் பரிசுத்தர் உன் நடுவிலே பெரியவராயிருக்கிறார்.

## ௰௩. அதிகாரம்.

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா *பாபேலின்மேலே இறங்கக்கண்ட பாரம்.
*ஏசா. ௰௪. ௪. மீகா. ௨௧. ௧, ௰. எரே. ௫௰. ௧. ழி; ௫௧. ௧. ழி.

௨ ¶ ஓங்கியிருக்கிற பருவதத்தின்மேல் கொடியேற்றுங்கள்; சனங்கள் வர உரத்த சத்தமிடுங்கள்; அவர்கள் பிரபுக்களின் வாசல்களுக்குட் பிரவேசிப்பதற்குச் சாடை காட்டுங்கள்.

௩ நாம் பரிசுத்தமாக்கினவர்களுக்கு நாம் கட்டளைகொடுத்தோம்; நமது கோபத்தை நிறைவேற்ற நம்முடைய பராக்கிரமசாலிகளை அழைத்துமிருக்கிறோம்; அவர்கள் நமது மகத்துவத்தினாலே களிகூருகிறவர்களென்கிறார்.

௪ வெகு சனத்தின் சத்தத்துக்கொத்த திரளானவர்களின் இரைச்சலும், கூட்டப்பட்ட சாதிகளுடைய இராச்சியங்களின் அமளியான இலாச்சலும் மலைகளில் கேட்கப்படுகிறது; சேனைகளின் கர்த்தர் யுத்த இராணுவத்தை இலக்கம்பார்க்கிறார்.

௫ தேசத்தையெல்லாம் அழிக்க வானத்தின் அடியிலுள்ள தூரதேசத்திலிருந்து வருகிறார்கள்; கர்த்தரும் அவருடைய சினத்தின் பணிமுட்டுகளுந்தானே.

௬ அலறுங்கள்; ஏனெனில் கர்த்தரின் நாள் சமீபமாயிருக்கிறது; சர்வவல்லமையுள்ளவராலே அது பாழ்க்கடிப்பாய் வரும்.

௭ ஆனதினால் எல்லாக் கைகளும் நெகிழ்ந்து, எல்லா மனுஷரின் இருதயமும் கரைந்துபோம்.

௮ திகிலாயிருப்பார்கள்; வேதனைகளும், வாதைகளும் அவர்களைப் பிடிக்கும்; *பெறுகிறவளைப்போல வேதனைப்படுவார்கள்; ஒருவரையொருவர் பிரமித்துப் பார்ப்பார்கள்; அவர்கள் முகங்கள் நெருப்பான முகங்களாயிருக்கும். *ஏசா. ௨௧. ௩.

௯ இதோ தேசத்தைப் பாழ்க்கடித்துவிட்டு, அதின் பாவிகளை அதிலிருந்து அழிப்பதற்காகக் கர்த்தருடைய நாள் கரேமும், மூர்க்கமும், கோபஉக்கிரமுமாய் வருகிறது.

௰ ஏனெனில் வானங்களின் நட்சத்திரங்களும், அவைகளின் கிரகங்களும் தங்கள் ஒளியை விளங்கப்பண்ணாதிருக்கும்; *சூரியன் தன் உதயத்தில் இருண்டதும், சந்திரன் தன் ஒளியைக் காட்டாததுமாயிருக்கும். *ஏசே. ௩௨. ௭, ௮. யோவே. ௩. ௪, ௨௰. மத். ௨௪. ௨௯. மாற். ௰௩. ௨௪, ௨௫, லூக். ௨௧. ௨௫. வெளி. ௬. ௰௨, ௰௩.

௰௧ நாம் பூச்சக்கரத்திலே அதின் பொல்லாப்பையும், ஆகாதவர்களிடத்திலே அவர்கள் அக்கிரமத்தையும் விசாரித்து, அகந்தைக்காரரின் பெருமையை ஓயப்பண்ணி, பெலவந்தரின் இடும்பைத் தாழ்த்தி,

௰௨ புருஷனை அபரஞ்சியிலும், மனுஷரை ஓப்பீரின் தங்கத்திலும் அபூருவமாக்குவோம்.

௰௩ ஆகையால் சேனைகளுடைய கர்த்தரின் மூர்க்கத்தினால் அவருடைய கோப உக்கிரத்தின்நாளிலே பூமி தன்னிடத்தை விட்டு அசையும்படிக்கு வானத்தை அதிரப்பண்ணுவோம்.

௰௪ துரத்தப்பட்ட வெளிமானைப்போலும், யாரும் சேர்க்காத ஆட்டைப்போலும் இருப்பார்கள்; அவரவர் தங்கள் சனத்தண்டைக்குப்போக முகத்தைத் திருப்பி, அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள்.

௰௫ அகப்பட்டவன் எல்லாம் குத்துண்டு, சேர்ந்திருந்தவன் எல்லாம் பட்டயத்தால் விழுவான்.

௰௬ அவர்கள் குழந்தைகள் அவர்கள் கண்களுக்குமுன்பாகச் சிதைக்கப்படும்; அவர்கள் வீடுகள் கொள்ளையாய்ப் போம்; அவர்கள் பெண்சாதிகள் அவமானப்படுவார்கள்.

௰௭ ¶ இதோ, நாம் அவர்கள்மேல் மேதியரை எழுப்புவோம்; அவர்கள் வெள்ளியை எண்ணாமலும், பொன்னின்மேல் பிரியம் வைக்காமலும்,

௰௮ வில்லுகளால் இளைஞரைச் சதைத்துவிடுவார்கள்; அவர்கள் கர்ப்பக்கனியின்மேல் இரங்குவதுமில்லை; அவர்கள் கண் பிள்ளைகளைத் தப்பவிடுவதுமில்லை.

௰௯ அப்படியே இராச்சியங்களின் அலங்

காரமும், கல்தேயருடைய பெருமையின் முக்கியமுமாகிய பாபேல், பராபரன் *சோதோமையும், கொமோராவையும் கவிழ்த்ததுபோலே கவிழ்ந்துகிடக்கும்.

*எரே. ௪௯. ௰௮, ௰௫: ௫௯. ௪௰.

௨௰ என்றென்றைக்கும் அதிலே தங்கித் தரிப்பாருமில்லை; அங்கே அராபியன் கூடாரம்போடுவதுமில்லை; அங்கே மேய்ப்பர் மந்தையை மறிப்பதுமில்லை.

௨௧ *வனாந்தர ஜீவன்கள் அங்கே தங்கி, அவர்கள் வீடுகளை ஊளையிடுதல்களாலே நிரப்பும்; கோட்டான்கள் அங்கே தாபரிக்கும்; பேய்கள் அங்கே துள்ளும்.

*வெளி. ௰௮. ௨.

௨௨ அவர்கள் பாழான மாளிகைகளில் ஓரிகள் ஒன்றுக்கொன்று மறுஉத்தரவுகொடுக்கும்; வலுசர்ப்பங்கள் அவர்கள் செல்விக்கையான அரமனைகளில் கூடும்; அதின் காலம் சமீபித்து வரும்; அதின் நாள்கள் நீடித்திராதென்கிறார்.

## ௰௪. அதிகாரம்.

ஏனெனில் கர்த்தர் யாக்கோபுக்கு இரங்கி, இஸ்ரவேலை இன்னம் தெரிந்துகொண்டு, அவர்களை அவர்கள் தேசத்திலே தாபரிக்கப்பண்ணுவார்; மறுதேசத்தாரும் அவர்களுக்குச் சேர்க்கையாகி, யாக்கோபின் வீட்டோடே கூடிக்கொள்ளுவார்கள்.

௨ சனசதளங்கள் அவர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்களை அவர்கள் தானத்துக்கு அழைத்துவருவார்கள்; இஸ்ரவேல் வீட்டார் அவர்களைக் கர்த்தருடைய தேசத்திலே வேலைக்காரரும் வேலைக்காரிகளுமாகச் சுதந்தரித்துக்கொண்டு, தங்களைச் சிறையாக்கினவர்களைச் சிறையாக்கி, தங்களை ஒடுக்கினவர்களை ஆளுவார்கள்.

௩ கர்த்தர் உன் வாதையையும், உன் தத்தளிப்பையும், நீ அடிமையாக்கப்பட்டிருந்த கடின அடிமைத்தனத்தையும் நீக்கி உன்னை இளைப்பாறப்பண்ணும் அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால்,

௪ நீ பாபேலுடைய இராசாவின்மேலே ஏறிச் சொல்லும் வாக்கியமொழியாவது: ஒடுக்கினவன் என்னமாய் ஓய்ந்தான்? பொன்கோல் என்னமாய் ஒழிந்துபோனது?

௫ கர்த்தர் ஆகாதவர்களின் மிலாறையும், ஆண்டிருந்தவர்களின் செங்கோலையும் முறித்துவிட்டார்.

௬ ஓயாத அடியாய்ச் சனசதளங்களை உக்கிரமாய் அடித்து, சாதிகளைக்கோபமாய் ஆண்டிருந்தவன் தடுப்பாரில்லாமல் துன்பப்படுத்தப்படுகிறான்.

௭ பூமியனைத்தும் இளைப்பாறி அமர்ந்திருக்கிறது; கெம்பீரமாய் முழங்குகிறார்கள்.

௮ பாய்மரவிருட்சங்கள்தாமும், லீபனோனின் கேதுருக்களும், உன்நிமித்தம் சந்தோஷமாயிருந்து, நீ விழுந்துகிடக்கிறது முதற்கொண்டு எங்களை வெட்டி ஏறிவருவார் ஒருவரும் இல்லை என்கிறது.

௯ ¶ தாழ இருக்கிற நரகம் உன்நிமித்தம் அசைந்து, நீ வருமளவில் எதிர்கொண்டு, இராட்சதரையும், பூமியிலிருந்த எல்லாக் கடாக்களையும் உன்நிமித்தம் எழுப்பி, சாதிகளுடைய எல்லா இராசாக்களையும் தங்கள் ஆசனங்களிலிருந்து எழுந்திருக்கப்பண்ணும்.

௰ ¶ இவர்களெல்லாரும் பிரதியுத்தரமாக, நீயும் எங்களைப்போலப் பலட்சயமாகி, எங்களைப்போல ஆனாயோவென்று உன்னுடனே சொல்லுவார்கள்.

௰௧ உன் முக்கியமும், உன் தம்புருக்களின் முழக்கமும் நரகத்திலே தள்ளுண்டுபோயின; புழுக்கள் உன் கீழ்ப்போடப்பட்ட படுக்கையும், பூச்சிகள் உன் மூடுதுமாயிருக்கின்றன.

௰௨ அதிகாலத்தின் மகனாகிய விடிவெள்ளியே, நீ எப்படி வானத்திலிருந்து விழுந்தாய்? சாதிகளைப் பலஹீனப்படுத்தினவனே, எப்படித் தரையிலே விழ வெட்டப்பட்டாய்?

௰௩ *நான் வானத்துக்கு ஏறி, என் ஆசனத்

ளைதப் பராபரனுடைய நட்சத்திரங்களின் மேலாக உயர்த்தி, †வடபுறங்களிலுள்ள ஆராதனைக்கூட்டத்தின் பருவதத்திலே உளுக்காருவேன் என்றும், *௨ தெச. ௨. ௪. † சங். ௪௮. ௩.

௰௪ மேகங்களுடைய உயர்ந்த தலங்களின்மேலேறி, உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாய்.

௰௫ ஆனால் பாதாளப்புறங்களாகிய நரகத்திலே தள்ளுண்டாயே.

௰௬ உன்னைக் காண்கிறவர்கள் உன்னைக் கண்ணோக்கி, உன்மேல் நிந்தனை வைத்து, பூமியைத் தத்தளிக்கவும், இராச்சியங்களை அதிரவும்பண்ணினவனும்,

௰௭ பூச்சக்கரத்தை வனாந்தரமாக்கி, அதின் பட்டணங்களை அழித்துவிட்டு, தான் கட்டி வைத்தவர்களை ஊருக்குப்போக விடுதலை பாக்காதேபோனவனுமாகிய புருஷன் இவனோ என்பார்கள்.

௰௮ சாதிகளுடைய சகல இராசாக்களோவென்றால், அனைவரும் கனத்தோடே அவரவர் தங்கள் வீட்டிலே கிடக்கிறார்கள்.

௰௯ நீயோ அருவருப்பான கிளையைப்போலவும், பட்டயக் குத்தாய்க் கொலையுண்டவர்களின் உடுப்பைப்போலவும், ஒரு குழியின் கல்குவியலோடே கிடக்க இறைக்கப்பட்டவர்களைப்போலவும், மிதித்துவிடப்பட்ட பிணத்தைப்போலவும் உன் கல்லறைக்குப் புறம்பாய் எறிந்துவிடப்பட்டாய்.

௨௰ நீ அவர்களோடொத்து அடக்கம்பண்ணப்பட்டாய்; ஏனெனில் உன் தேசத்தைக் கெடுத்து உன் சனத்தைக் கொன்றுபோட்டாய்; பொல்லாதவருடைய வித்து என்றென்றைக்கும் பேர்கொள்ளுவதில்லை.

௨௧ அவன் பிள்ளைகள் எழும்பித் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு, பூச்சக்கரத்தைப் பட்டணங்களால் நிரப்பாதபடிக்கு அவர்களுக்கு அவர்கள் பிதாக்களுடைய அக்கிரமத்தினிமித்தம் வதையை ஆயத்தம்பண்ணுங்கள்.

௨௨ ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர் விளம்புகிறதாவது: நாம் அவர்கள்மேல் எழும்பி, பாபேலுடைய பேரையும், மீந்ததையும், குமாரனையும், பேரனையும் சங்கரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௩ நாம் அதை முள்ளம்பன்றிகளுடைய சுதந்தரமும் தண்ணீர்த்தடாகங்களுமாக்கி, அதை அழிப்பின் துடைப்பத்தினாலே பெருக்கிவிடுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் விளம்புகிறார்.

௨௪ ¶ நாம் நினைத்திருக்கிறபடியே நடக்கும்; நாம் நிருணயித்துக்கொண்டதே நிறைவேறி நிற்குமென்று சேனைகளுடைய கர்த்தர் ஆணைசத்தியம் பண்ணினார்.

௨௫ என்னவெனில், நாம் அசூரியனை நமது தேசத்திலே முறித்து, நம்முடைய பருவதங்களின்மேல் அவனை மிதித்துப்போடுவோம்; அப்போதவனுடைய நுகத்தடி அவர்கள்மேலிருந்து விலகி அவன் சுமை அவர்கள் தோளிலிருந்து நீங்கும்.

௨௬ இது தேசமனைத்தின்மேலும் நிருணயிக்கப்பட்ட யோசனையும், இது சகல சாதிகள்மேலும் நீட்டப்பட்டிருக்கிற கையுமாயிருக்கிறதென்றார்.

௨௭ ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர் இப்படி நிருணயித்துக்கொண்டார்; அதை அவத்தமாக்குபவன் யாவன்? அவருடைய கை நீட்டப்பட்டிருக்கிறது; அதைத் திருப்புபவன் யாவன்?

௨௮ ¶ *ஆகாஸ் இராசா மரணம் அடைந்த வருஷத்திலே உண்டான பாரமான காட்சியாவது: *௨ இரா. ௰௬. ௨௰.

௨௯ ¶ முழுப்பெலிஸ்தியாவே, உன்னை அடித்த கோல் உடைந்ததென்று அக்களிப்பாயிராதே; ஏனெனில் பாம்பின் வேரிலிருந்து கட்டுவிரியன் புறப்படும்; அதின் கனிபறக்கிற நெருப்புப் பாம்பாயிருக்கும்.

௩௰ ஆனாலுங்கொண்டு தரித்திரரின் தலை-

சன்கள் மேய்ந்து, எளியவர்கள் சுகமாய்ப் படுத்திருப்பார்கள்; ஏனெனில் பஞ்சத்தினாலே உன் வேரைச் சாகப்பண்ணுவோம், உன்னில் மீதியானவர்களையோ அவன் கொன்றுபோடுவான்.

௩௧ வாசலே அலறு; பட்டணமே கதறு; பெலிஸ்தியாவே நீ முழுதும் கரைந்துபோகிறாய்; ஏனெனில், வடக்கே இருந்து புகைக்காடாய் வருகிறான்; அவன் கூட்டங்களில் தனித்தவனில்லை.

௩௨ இப்போதும் இந்தச் சாதியின் தானாபதிகளுக்கு என்ன மறுஉத்தரவு சொல்லப்படும்? *கர்த்தர் சீயோனை அஸ்திபாரப்படுத்தினார்; அவருடைய சனத்தில் சிறுமையானவர்கள் அதிலே திடன்கொண்டு தங்குவார்கள் என்பதுதானே. *சங். ௮௭. ௧.

## ௰௫. அதிகாரம்.

மோவாபின்மேல் இறங்கும் பாரம்; *இரவிலே மோவாபின் ஆர்பட்டணம் பாழாக்கப்பட்டது, அது சங்காரமானது; இராவிலே மோவாபின் கிர்பட்டணம் பாழாக்கப்பட்டது, அது சங்காரமானது. *எரே. ௪௮. ௧. ௱. எசே. ௨௫. ௮-௰௧. செப். ௨. ௮, ௯.

௨ ஆனபடியால், அழும்படிக்குப் பாயித்துக்கும், தீபோனுக்கும், பாமோத்துக்கும் போய் ஏறுகிறார்கள்; நேபோவின்நிமித்தமும், மேதேபாவின்நிமித்தமும், மோவாபு அலறுகிறது; *அவர்களுடைய எல்லாத் தலைகளும் மொட்டையிட்டிருக்கும்; எல்லாத் தாடிகளும் கத்தரித்திருக்கும். *எரே. ௪௮. ௩௭.

௩ அதின் வீதிகளில் இரட்டைக் கட்டிக்கொண்டு, அதின் வீடுகளின்மேலும், அதின் தெருக்களிலும் எல்லாரும் அலறி, அழுகையில் இறங்கி இருக்கிறார்கள்.

௪ எஸ்போன் ஊராரும் எலெயாலே ஊராரும் கூக்குரலிடுகிறார்கள்; அவர்கள் சத்தம் யாகாஸ்மட்டும் கேட்கப்படுகிறது; ஆனபடியால் மோவாபின் ஆயுதப்பாடானவர்கள் கதறுகிறார்கள்; அவனவனுடைய ஆத்துமா அவனவனில் தீங்குபடுகிறதாயிருக்கிறது.

௫ என் *இருதயம் மோவாபின்நிமித்தம் கூவுகிறது; அதிலிருந்தோடிவருகிறவர்கள் மூன்றுவயதின் கிடாரியைப்போல அலைகிறார்கள்; லூகித்துக்கு ஏறுகிற வழியிலே அழுகையோடே ஏறுகிறார்களே; ஒரோனாயீமின் வழியிலும் குளறுட்டமான கூக்குரல் இடுகிறார்களே. *எரே. ௪௮. ௩௧, ௩௬.

௬ ஏனெனில் நிம்ரீமின் நீர்ப்பாய்ச்சல்கள் பாழாய்க் கிடக்கின்றன; அதினால் புல் உலர்ந்து, முளை அழிந்து, பச்சைசெயில்லாமல் போகிறது.

௭ ஆனபடியால் மீதியாகச் சேர்த்ததையும், அவர்கள் வைத்துவைத்ததையும் *அலரிகளின் ஆற்றுக்கப்பாலே எடுத்துப் போவார்கள். *சங். ௱௩௭. ௨.

௮ ஏனெனில் கூக்குரல் மோவாபின் எல்லையைச் சுற்றும்; எக்லாயிம்மட்டும் அதின் அலறுதலும், பெயேரேலிம்மட்டும் அதின் அலறுதலும் எட்டும்.

௯ அதேதெனில், தீமோனின் தண்ணீர்கள் இரத்தத்தால் நிறைந்திருக்கும்; ஏனென்றால், நாம் தீமோனின்மேல் அதிக கேடுகளைக் கட்டளையிட்டு, மோவாபிலே தப்பினவர்கள்மேலும், தேசத்தில் மீதியானவர்கள்மேலும் சிங்கத்தை வரப்பண்ணுவோம்.

## ௰௬. அதிகாரம்.

தேசாதிபதிக்குச் செலுத்தும் ஆட்டுக்குட்டிகளை நீங்கள் சேலாப்பட்டணந்துவக்கி வனாந்தரமட்டும் சேர்த்துச் சீயோன் குமாரத்தியின் பருவதத்துக்கு அனுப்புங்கள்.

௨ இல்லாவிட்டால் மோவாபின் குமாரத்திகள், கூட்டைவிட்டுத் துரத்தப்பட்டு அலைகிற குருவியைப்போலே அர்னோன் நதியின் துறைகளண்டையிலிருப்பார்கள்.

௩ நீ ஆலோசனைபண்ணி, நியாயஞ்செய்து, மத்தியான உருமத்திலே உன் நிழலை இரவைப்போலாக்கி, துரத்துண்டவர்களை

மறைத்து, ஓடிவருகிறவர்களைக் காட்டிக் கொடாதிரு.

௪ மோவாபே, துரத்துண்ட நம்முடைய வர்கள் உன்னிலே தங்கட்டும்; சங்கரிக்கி றவனுக்குத் தப்ப அவர்களுக்கு அடைக்க லமாயிரு; ஏனெனில், இறுகப்பிடிக்கிற வன் இல்லாதேபோவான்; சங்கரிப்பு ஒழி ந்துபோம்; மிதிக்கிறவர்கள் தேசத்தில் இரா தபடிக்கு அழிந்துபோவார்கள்.

௫ ஏனெனில், இராசாசனம் கிருபையோ டே உறுதிபண்ணப்படும்; தாவீதின் கூடா ரத்திலே நியாயாதிபதியாயிருந்து நியாயம் விசாரித்து நீதிக்குத் தீவிரிக்கிற *ஒருவர் அதின்மேல் உண்மையோடே உளுக்காரு வார். *ஏசா. ௯. ௬, ௭. லூக். ௧. ௩௩.

௬ ¶ *மிகவும்ஐய்யாரமானமோவாபின் பெ ருமையையும், அதின் மேட்டிமையையும், அதின் அகந்தையையும், அதின் உக்கிரத் தையும் கேட்டிருேம்; அதின் வீம்பு அது அப்படியல்லவென்கிறது.

*எரே. ௪௮. ௨௯. செப். ௨. ௮.

௭ ¶ ஆகையால், மோவாபியர் ஒருவரை யொருவர் பார்த்து அலறி எல்லாரும் ஏக மாய் அலறுவார்கள்; கிராரேசேத்தூரின் அஸ்திபாரங்கள் தகர்க்கப்பட்டனவே என் று அவைகளுக்காகப் பெருமூச்சு விடு வார்கள்.

௮ ஏனெனில் எஸ்போன் ஊர் வயல்கள் சத்தியற்றுப்போயின; சீப்மாவூர்த் திராட் சப் பயிருக்கோவென்றால், சாதிகளின் அ திபதிகள் அதின் நற்சாதிச்செடிகளை நறுக் கிப்போட்டு, யாசேர்மட்டும் சேர்ந்துவந்து, வனாந்தரத்தில் சுற்றித்திரிகிறார்கள்; அதின் கொடிகள் சிதறப்பட்டுக் கடலுக்கப்பாலே எறியுண்டுபோம்.

௯ ஆகையால் யாசேருக்காகவும், சிப்மா வூர்த் திராட்சப்பயிருக்காகவும் மிகவும் அழுகிறேன்; எஸ்போன் எலெயாலேயே, உனக்கு என் கண்ணீரைப் பாய்ச்சுகிறேன்; * உன் வசந்தகாலத்துக்காகவும், உன் அறுப்புக்காகவும் கொக்கரிக்கிற சந்தோஷசத்தம் விழுந்துபோனது.

௰ *சந்தோஷமும், களிப்பும் பயிர்வெளி யிலிருந்து வாங்கிப்போனது; திராட்சத் தோட்டங்களில் கெம்பீரிப்புமில்லை; ஆர்ப் பரிப்புமில்லை; மிதிக்கிறவன் ஆலைகளில் இரசத்தை மிதிப்பதில்லை; கொக்கரிப்பை ஓயப்பண்ணினேம். *எரே. ௪௮. ௩௩.

௰௧ *ஆகையால் என் குடல்கள் மோ வாபின்நிமித்தமும் என் உள்ளம் கிராரே சின்நிமித்தமும் சுரமண்டலத்தைப்போல முழங்குகிறது. *ஏசா. ௰௫. ௫. எரே. ௪௮. ௩௬.

௰௨ சம்பவிப்பதேதெனில் மோவாபியர் மேடைகளின்மேல் இளைப்படைந்தார்களெ ன்று காணப்படும்போது தங்கள் பரி சுத்தஸ்தலத்திலே பணியப் பிரவேசிப்பார் கள்; ஆனால் ஒன்றும் அடையமாட்டார் கள்.

௰௩ ¶ இதுவே கர்த்தர் அக்காலமுதல் மோவாபின்மேல் சொன்ன வார்த்தை.

௰௪ இப்போதும் கர்த்தர் உரைக்கிறதாவ து: ஒரு கூலிக்காரனுடைய வருஷங்களைப் போலொத்த மூன்றுவருஷங்களிலே மோ வாபின் மகிமை அந்த எல்லாப் பெரிய திரளோடுங்கூடச் சிறுத்துப்போம்; அதில் மீதியாயிருப்பதோ பெலத்திராமல் கொஞ் சமும் மட்டுமாயிருக்கும் என்கிறார்.

## ௰௭. அதிகாரம்.

தமஸ்குவினுடைய பாரம்; இதோ, *தமஸ் கு பட்டணமாய் இராதபடிக்குத் தள்ளப் பட்டு, இடிந்த மண்மேடாயிருக்கும்.

*எரே. ௪௯. ௨௩-௨௭. ஆமோ. ௧. ௩-௫.

௨ ஆரோவேரின் பட்டணங்கள் பாழாய் விடப்பட்டு, மந்தைகளின் வெளியாயிருக் கும்; அவைகள் அங்கே மிரட்டுவாரில்லா மலே படுக்கும்.

௩ அரண் எப்பிராயீமையும், இராசாங்கம் தமஸ்குவையும் விட்டொழியும்; சூரியாவில் மீதியாயிருப்பவர்கள் இஸ்ரவேல் புத்திரரு

டைய மகிமையின் சாயலாயிருப்பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௪ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதெனில், யாக்கோபின் மகிமை குறுகி, அவன் மாம்சத்தின் கொழுப்புக் கரைந்துபோம்.

௫ ஒருவன் ஓங்கின பயிரை அரிந்துகொண்டு, தன் புயத்தினால் கதிர்களை அறுத்து, ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே கதிர்களைச் சேர்க்குமாப்போலிருக்கும்.

௬ ஆனால் ஒலிவமரத்தை உலுப்பினபோது நுனிக்கொம்பிலே இரண்டுமூன்று காய்களும், காய்க்கிற அதின் கிளைகளில் நாலைந்து காய்களும் மீதியாயிருக்குமாப்போலே, அதிலே பின் அறுப்பு கொஞ்சம் மீதியாய் இருக்குமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

௭ ¶ அக்காலத்திலே மனுஷன் தன் கைகளின் கிரியையாகிய பீடங்களை நோக்காமலும், தன் விரல்கள் உண்டுபண்ணினதையும், தோப்புகளையும், சிலைகளையும் நோக்காமலும்,

௮ தன்னை உண்டாக்கினவரை நோக்குவான்; அவன் கண்கள் இஸ்ரவேலின் பரிசுத்தரை நோக்கிக்கொண்டிருக்கும்.

௯ அக்காலத்திலே அவர்களுடைய பெலனான பட்டணங்கள் இஸ்ரவேல் புத்திரருக்குப் பின்வைக்கப்பட்டுப்போன தழையின் மீதியைப்போலவும், நுனிக்கொம்பின் மீதியைப்போலவும் இருந்து, பாழாய்க்கிடக்கும்.

௰ ஏனெனில் உன் பலனின் கன்மலையை நீ நினையாமல், உன் இரட்சிப்பின் பராபரனை மறந்தாய்; ஆனபடியால் நீ நேர்த்தியான நாற்றுகளை நட்டும், அந்நியதேசத்துக் கன்றுகளை வைத்தும்,

௰௧ பகல்காலத்திலே உன் நாற்றை வளரவும், காலமே உன் விதையை முளைக்கவும் பண்ணியும், பலனைக் கைவசமாக்கிக்கொள்ளும் நாளிலே அறுப்பு ஒரு போரும், நோயான வேதனையுமாயிருக்கும்.

௰௨ ¶ ஐயோ! கடல்கள் கொந்தளிக்குமாப்போலே கொந்தளிக்கிற அநேகம் ஜனசதளங்களின் திரளும், பலத்த தண்ணீர்கள் இரைவதுபோலே இரைகிற சனக்கூட்டங்களின் அமளியுமுண்டு.

௰௩ சனக்கூட்டங்கள் திரளான தண்ணீர்கள் இரையுமாப்போலே இரையும்; ஆனால் *அவனை அதட்டுவார்; அப்போது பருவதங்களிலே காற்றுக்கொண்டுபோம்; பதரைப்போலவும், பெருங்காற்றில் அகப்பட்ட துரும்பைப்போலவும் தூரத்திலே ஓடி, துரத்தப்படுவான்.

*ஏசா. ௩௭. ௩௬. ழி.

௰௪ சாயங்காலத்திலே இதோ கலக்கமுண்டு; ஆனால் விடியற்காலம் ஆகாததற்கு முன்னே அவனில்லை, இது நம்மைக் கொள்ளையாடுகிறவர்களின் பங்கும், நம்மைச் சூறையாடுகிறவர்களின் வீதமுமாயிருக்கும்.

## ௰௮. அதிகாரம்.

எத்தியோப்பியாவின் ஆறுகளுக்கு அக்கரையிலே நிழல் இருபுறமாகத் திரும்புகிறதும்,

௨ கடலிலே தானாபதிகளை அனுப்பி, தண்ணீர்களின்மேல் மூங்கில் தோணிகளிலே போகிறதுமாகிய தேசத்தின் சனத்துக்கு ஐயோ! வேகமான தூதர்களே, நீண்ட ஓமாய்க் குடியிருக்கிறதும், மயிர் சிரைக்கப்பட்டதுமாகிய சாதியண்டைக்கும், உண்டானதுமுதற்கொண்டு இதுவரைக்கும் கேடியாயிருந்ததும், அளவிடப்படுவதும், மிதிக்கப்படுவதும், ஆறுகள் புரண்டு தேசத்தைப் பாழ்க்கடிப்பதுமான சாதியாகிய சனத்தண்டைக்கும் போங்கள்.

௩ பூச்சக்கரத்தில் வாசமாயிருக்கிறவர்களும், தேசத்துக் குடிகளுமாகிய நீங்களெல்லாரும் பருவதங்களில் கொடியேற்றப்படும்போது பார்த்து, எக்காளம் ஊதப்படும்போது கேட்பீர்கள்.

௪ ஏனெனில், நாம் அமர்ந்திருந்து வெளிச்சத்தின்மேலே காணும் காந்தியுள்ள காங்கையைப்போலவும், அறுப்புக்காலத்தின் வெயிலிலே பனிமேகத்தைப்போலவும் நமது வாசஸ்தலத்திலிருந்து கண்ணோக்குவோமென்கிறதாய்க் கர்த்தர் என்னுடனே சொன்னார்.

௫ ஏனெனில், அறுப்புக்குமுன்னே பூப்பூத்துத் தீர்ந்து காய்க்கிற திராட்சக்காய்கள் பிஞ்சாயிருக்கும்போதே, அவர் அரிவாள்களினாலே, கப்புக்கவர்களை அறுத்துக் கொடிகளையரிந்து வாங்கிப்போடுவார்.

௬ அவைகள் ஏகமாய்ப் பருவதங்களின் பட்சிகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் விடப்படும்; பட்சிகள் அதின்மேல் கோடைகாலத்துக்கும், பூமியின் மிருகங்களெல்லாம் அதின்மேல் மாரிகாலத்துக்கும் தங்கும்.

௭ அக்காலத்திலே நீண்டகரையோரமாய்க் குடியிருக்கிறதும், மயிர் சிரைக்கப்பட்டதும், உண்டானதுமுதற்கொண்டு கெடியாயிருந்ததுமான சனமும், அளவிடப்பட்டதும், மிதிக்கப்பட்டதும், ஆறுகள் புரண்டு தேசத்தைப் பாழ்க்கடித்ததுமான சாதியும், சேனைகளுடைய கர்த்தரின் நாமம் தங்கும் தலமாகிய சீயோன் பருவதத்தண்டையில், *சேனைகளுடைய கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவரப்படும். *சங்.௬௮.௩௨.

## ௰௯. அதிகாரம்.

௧ எகிப்தினுடைய பாரம்; *இதோ, கர்த்தர் வேகமான மேகத்தின்மேல் ஏறி எகிப்துக்கு வருவார்; அப்போது எகிப்தின் †விக்கிரகங்கள் அவருக்குமுன்பாக அலைசந்து, எகிப்தின் இருதயம் அவர்கள் உள்ளத்திலே கரைந்துபோம். *எரே. ௪௬. ௨. மு. எசே. ௨௯. ௧. மு: ௩௰. ௧. மு. †௨ மோ. ௰௨. ௰௨.

௨ சகோதரனோடே சகோதரனும், சிநேகிதனோடே சிநேகிதனும், பட்டணத்தோடே பட்டணமும், இராச்சியத்தோடே இராச்சியமும் யுத்தம்பண்ணும்படியாய், எகிப்தியரை எகிப்தியரோடே போர்கலக்கப்பண்ணுவோம்.

௩ அதினால் எகிப்தியருடைய ஆவி அவர்களுக்குள் வெறுமையாகும்; அவர்கள் ஆலோசனையை முழுகிப்போகப்பண்ணுவோம்; அப்போது விக்கிரகங்களையும், மந்திரவாதிகளையும், சன்னதக்காரர்களையும், குறிசொல்லுகிறவர்களையும் தேடுவார்கள்.

௪ ஆனால் எகிப்தியரைக் கடினமான அதிபதிகளின் கைக்குள் அடைப்போம்; கரே இராசா அவர்களை ஆளுவானென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௫ அப்போது கடலின் தண்ணீர்கள் குறைந்து, நதி வற்றி வறண்டுபோம்.

௬ ஆறுகளை விட்டுவிடுவார்கள்; அரணிப்பான அகழிகள் குறுகி வற்றிப்போம், கொறுக்கையும் நாணலும் வாடும்.

௭ நதியண்டையிலும், நதியோரத்திலும் இருக்கிற மடலுள்ள செடிகளும், நதியருகே விதைக்கப்பட்ட யாவும் உலர்ந்துபோம்; அது பறக்கடிக்கப்பட்டு இல்லாதேபோம்.

௮ மீன்பிடிக்கிறவர்கள் பெருமூச்சுவிட்டு, நதியிலே தூண்டில்போடுகிற யாவரும் துக்கித்து, தண்ணீர்களின்மேல் வலைகளை வீசுகிறவர்கள் சலித்துப்போவார்கள்.

௯ மெல்லிய சணல்வேலைகளைச் செய்து சல்லாக்களை நெய்கிறவர்கள் நாணுவார்கள்.

௰ மீன் வளர்க்கிற குளங்களைக் கூலிக்குக் கட்டுகிற அணைவருடைய அணைக்கட்டுகளும் நசுங்குண்டுபோம்.

௰௧ ¶ சோவான்பட்டணத்தின் பிரபுக்கள் பயித்தியக்காரர்தானே; பார்வோனுடைய ஞானமுள்ள ஆலோசனைக்காரரின் ஆலோசனை மதியற்றுப்போனது; நான் ஞானிகளின் பிள்ளை, நான் பூருவ இராசாக்களின் புத்திரனென்று பார்வோனுடனே எப்படிச் சொல்லுகிறீர்கள்?

௰௨ இப்போதும் உன்னுடைய ஞானிகள் எங்கே? சேனைகளின் கர்த்தர் எகிப்தின் மேலே பண்ணின யோசனையை அவர்கள் உனக்கு அறிவிக்கட்டுமே; அல்லது தாங்கள் அறிந்துகொள்ளட்டும்.

௰௩ சோவான் ஊர்ப் பிரபுக்கள் பயித்தியக்காரரானார்கள்; நோப்பூர்ப் பிரபுக்கள் மோசம்போய், எகிப்தையும் அதின் கோத்திரங்களுடைய தலைவனையும் வழிதப்பப் பண்ணுகிறார்கள்.

௰௪ *கர்த்தர் அதின் நடுவில் தாறுமாறுகளின் ஆவியை ஊற்றினார்; ஆனதுகொண்டு வெறித்தவன் வாந்திபண்ணுகையில் திசைகெட்டுத்திரிகிறதுபோலே அவர்கள் எகிப்தை அதின் எல்லாச் செய்கையிலும் திசைகெட்டுத் திரியப்பண்ணுகிறார்கள்.

*௧ இரா. ௨௨. ௨௩.

௰௫ *தலையும், வாலும், கிளையும், நாணலும் என்றவர்கள் செய்யும் வேலை எகிப்துக்கு உதவாத வேலையாயிருக்கும்.

*ஏசா. ௯. ௰௪, ௰௫.

௰௬ அக்காலத்திலே எகிப்தியர் பெண்சாதிகளைப்போலிருந்து, சேனைகளின் கர்த்தர் தங்கள்மேல் அசைக்கும் கையசைவினாலே தத்தளித்து, அருக்களிப்பார்கள்.

௰௭ யூதாவின் தேசம் எகிப்தியருக்குத் தத்தளிப்பு உண்டாக்குகிறதாயிருக்கும்; தனக்குள் அதை நினைக்கிறவனெல்லாம், சேனைகளின் கர்த்தர் தங்களுக்கு விரோதமாக நிருணயித்துக்கொண்ட ஆலோசனையினிமித்தம் திடுக்கிடுவான்.

௰௮ அக்காலத்திலே கானான்பாஷையைப் பேசி, சேனைகளின் கர்த்தருக்கு ஆணையிடுகிற ஐந்து பட்டணங்கள் எகிப்துதேசத்திலிருக்கும்; ஒன்று நிர்மூலமான பட்டணம் என்னப்படும்.

௰௯ அக்காலத்திலே எகிப்துதேசத்தின் நடுவிலே கர்த்தருக்கு ஒரு பீடமும், அதின் எல்லையருகே கர்த்தருக்கொரு தூணும் உண்டாயிருக்கும்.

௨௰ அது எகிப்துதேசத்திலே சேனைகளின் கர்த்தருக்கு அடையாளமும் சாட்சியுமாயிருக்கும்; ஏனெனில், ஒடுக்குகிறவர்களினிமித்தம் அவர்கள் கர்த்தரைநோக்கிக் கூப்பிடுவார்கள்; அப்போது அவர்களுக்கு ஒரு இரட்சகனையும், ஒரு பெலவானையும் அனுப்பி அவர்களை விடுவிப்பார்.

௨௧ அப்போது கர்த்தர் எகிப்தியருக்கு அறியப்படுவார்; எகிப்தியர் கர்த்தரை அக்காலத்திலே அறிந்து *அவருக்குப் பலிகளோடும், காணிக்கைகளோடும் ஆராதனைசெய்து, கர்த்தருக்குப் பொருத்தனைகளைப்பண்ணி, அவைகளைச் செலுத்துவார்கள்.

*மல். ௧. ௰௧.

௨௨ கர்த்தர் எகிப்தியரை வாதையினாலே அடிப்பார்; அதை அடித்தும் குணமாக்குவார்; அவர்கள் கர்த்தரண்டைக்கு மனந்திரும்புவார்கள்; அப்போது அவர்கள் விண்ணப்பத்தைக்கேட்டு, அவர்களைக் குணமாக்குவார்.

௨௩ அக்காலத்திலே எகிப்திலிருந்து அசூரியாவுக்குப் போகிற பாதை உண்டாயிருக்கும்; அசூரியர் எகிப்திலும், எகிப்தியர் அசூரியாவிலும் வந்து, எகிப்தியர் அசூரியரோடுங்கூடத் தேவாராதனை செய்வார்கள்.

௨௪ அக்காலத்திலே பூமியின் நடுவிலிருக்கும் ஆசீர்வாதத்தினாலே இஸ்ரவேல் எகிப்தோடும் அசூரியாவோடும் மூன்றாவதாயிருக்கும்.

௨௫ அவர்களைச் சேனைகளுடைய கர்த்தர் ஆசீர்வதித்து, எகிப்தியராகிய நமது சனமும், அசூரியராகிய நம்முடைய கரங்களின் கிரியையும், இஸ்ரவேலராகிய நமது சுதந்தரமும் ஆசீர்வதிக்கப்பட்டது என்பார்.

## ௨௰. அதிகாரம்.

தர்த்தான் அசூரியாவின் *இராசாவாகிய சர்கோனாலே அனுப்பப்பட்டு, அஸ்தோத்துக்கு வந்து, அஸ்தோத்தின்மேல் யுத்தம் பண்ணி, அதைப்பிடித்த வருஷமாகிற அக்

காலத்திலே, *உ இரா. ம்அ. ம்எ.

உ கர்த்தர் ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவைக்கொண்டு பேசி, நீ போய் உன் அரையின்மேலிருக்கிற இரட்டை அவிழ்த்து, உன் கால்களிலிருக்கிற பாதஇரட்சைகளைக் கழற்று என்றார்; அப்படியே அவன் செய்து, அம்மணமும், வெறுங்காலுமாய் நடந்தான்.

௩ அப்போது கர்த்தர் உரைத்ததாவது: எகிப்தின்மேலும் எத்தியோப்பியாவின்மேலும் வரும் மூன்றுவருஷத்துக் காரியங்களுக்கு அடையாளமும், அற்புதமுமாக நம்முடைய ஊழியக்காரனாகிய ஏசாயா அம்மணமும், வெறுங்காலுமாய் நடக்கிறதுபோலே,

௪ அசூரியாவின் இராசா தான் சிறைபிடிக்கப்போகிற எகிப்தியரையும், தான் குடிவிலக்கப்போகிற எத்தியோப்பியரையும், இளைஞரையும், கிழவரையும் அம்மணமாகவும், வெறுங்காலாகவும், எகிப்தியரின் வெட்கத்துக்குத் திறந்த இருப்பிடமாகவும் கொண்டுபோவான்.

௫ அப்போது இந்தக் கரைதுறைக்குடிகள் தாங்கள் நம்பியிருந்த எத்தியோப்பியாவைத்தொட்டும், தாங்கள் பெருமைபாராட்டின எகிப்தைத்தொட்டும் கலங்கி வெட்கி,

௬ இதோ அசூரிய இராசாவின் முகத்துக்குத் தப்பும்படிக்கு நாங்கள் நம்பி, சகாயத்துக்கென்று ஓடிவந்து அண்டினவன் இப்படியானானே; நாங்கள் எப்படி விடுவிக்கப்படுவோம் என்று அக்காலத்திலே சொல்லுவார்கள் என்றார்.

## உக. அதிகாரம்.

*கடற்புறமான வனாந்தரத்தினுடைய பாரம்; சுழல்காற்றுகள் தெற்குத்தேசத்திலெழும்பிக் கடந்துவருமாப்போலே, பயங்கரமான தேசமாகிய வனாந்தரத்திலிருந்து வருகிறான்.*

உ கடினதரிசனம் எனக்கு அறிவிக்கப்பட்டது; துரோகி துரோகம்பண்ணி, பாழ்க்கடிக்கிறவன் பாழ்க்கடித்துக்கொண்டே இருக்கிறான்; பெர்சியனே எழும்பு; மேதியனே முற்றிக்கைபோடு; அதினால் உண்டான தவிப்பையெல்லாம் ஓயப்பண்ணுகிறேம்.

௩ ஆகையால், என் இடுப்பு மகா வேதனையால் நிறைந்திருக்கிறது; பிள்ளைப்பெறுகிறவளின் வாதைகளுக்கு ஒத்த வாதைகள் என்னைப் பிடித்தன; கேட்கிறதினாலே மடங்கி, காண்கிறதினாலே கலங்குகிறேன்.

௪ என் இருதயம் திகைக்கிறது; திகில் என்னைத் திடுக்கிடப்பண்ணுகிறது; *அது எனக்கு விருப்பமான இராஇருளை எனக்கு நடுக்கமுள்ளதாக்கிற்று. *தானி. ரு. க, ௬.

௫ பந்தியை ஆயத்தம்பண்ணுதலும், சாமங்காக்குதலும், புசித்துக்குடிக்குதலும் உண்டு; பிரபுக்களே, எழுந்து பரிசைகளைப் பூசுங்கள்.

௬ ஏனெனில் ஆண்டவர் என்னுடனே, நீ போய், காண்பதை அறிவிக்கும் சாமக்காரனை வை என்றார்.

௭ அவன் ஒரு இரதத்தையும், சோடுசோடான குதிரைவீரரையும், சோடுசோடாகக் கழுதைகளின்மேலும் ஒட்டகங்களின்மேலும் ஏறிவருகிறவர்களையும் கண்டு மிகுந்த கவனமாய்க் கவனித்துக்கொண்டே இருந்து,

௮ ஆண்டவரே, நான் என் காவலிலே பகலில் எப்போதும் நின்று, நான் இராக்காலங்கள் முழுதும் என் சாமத்திலே தரித்திருக்கிறேன் என்று சிங்கச் சத்தமாய்க் கூப்பிடுகிறான்.

௯ இப்போதும் இதோ, ஒரு சோடு குதிரை பூண்ட இரதத்தின்மேல் ஏறிஇருக்கிற ஒரு மனுஷன் வந்து, *பாபேல் விழுந்தது, விழுந்தது; அதின் விக்கிரகதேவர்களை எல்லாம் தரையோடே மோதி உடைத்தார் என்று பிரதி உத்தாரமாகச் சொல்லுகிறான்.

*எரே. ருக. அ. வெளி. ம்ச. அ: ம்அ.உ.

௰ என் போரடித்தானியமே, என் களத்தின் கோதுமையே, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தராலே நான் கேள்வியானதை உங்களுக்கு அறிவித்தேன்.

௰௧ ¶ தூமாவினுடைய பாரம்; சேயீரிலிருந்து என்னை நோக்கி, சாமங்காக்கிறவனே, இராத்திரியிலே நடந்த செய்தி என்ன? சாமங்காக்கிறவனே, இரவுபோகிற செய்தி என்ன? என்று கூப்பிடுகிறார்கள்.

௰௨ விடியற்காலம் வந்திருந்தும் இராவாய் இருக்கிறது; நீங்கள் கேட்க மனதானால் திரும்பிவந்து கேளுங்கள் என்று சாமங்காக்கிறவன் சொல்லுகிறான்.

௰௩ ¶ அராபியாவின்மேல் சுமரும் பாரம்; தெதானியராகிய பயணக்கூட்டங்களே, அராபியாவில் இராத்தங்குவீர்கள்.

௰௪ தேமத்தேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமாய் இருக்கிறவர்களுக்குத் தண்ணீரை எதிராகக் கொண்டுபோய், வலசைவருகிறவர்களுக்கு அவர்களுடைய அப்பத்தைக் கொடுக்க நேரிட்டுப்போங்கள்.

௰௫ ஏனென்றால் பட்டயங்களுக்கும், உருவினபட்டையத்துக்கும், நான் ஏற்றின வில்லுக்கும், கன யுத்தத்துக்கும் தப்ப வலசைவருகிறார்கள்.

௰௬ ஏனெனில் *ஆண்டவர் என்னுடனே சொன்னதாவது: ஒரு கூலிக்காரனுடைய வருஷங்களைப்போல ஒத்த ஒரே வருஷத்திலே கேதாருடைய மகிமை எல்லாம் அற்றுப்போய், *ஏசா. ௰௬. ௰௪.

௰௭ கேதார் புத்திரருடைய பலத்த வில்க்காரரின் தொகையில் மீதியானவர்கள் கொஞ்சப்பேராய் இருப்பார்கள் என்றார்; இதை இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைத்தார்.

## ௨௨. அதிகாரம்.

தரிசனப்பள்ளத்தாக்கின் பாரம்; உன்னில் உள்ளவர்கள் எல்லாரும் வீடுகளின் மேல் ஏறுவதற்கு உனக்கு இப்போது வந்தது என்ன?

௨ களிகூர்ந்திருந்த பட்டணமே, நீ அமளிகளால் நிறைந்து கலங்கின ஊராகும்; உன்னில் கொலையுண்டவர்கள் பட்டையத்தால் கொலையுண்டதில்லை; யுத்தத்தில் செத்ததும் இல்லை.

௩ உன் அதிபதிகள் எல்லாரும் ஏகமாய் ஓடி அலைந்து வில்க்காரரால் கட்டுண்கிறார்கள்; உன்னில் அகப்பட்ட யாவரும் தூரத்துக்கு ஓடியும் ஏகமாய்க் கட்டுண்கிறார்கள்.

௪ ஆகையால், என்னைவிட்டுக் கண்ணைத் திருப்புங்கள்; *மனங்கசந்து அழுவேன்; என் சனமாகிய குமாரத்தியினுடைய பாழாகுதலின்நிமித்தம் எனக்கு ஆறுதலைச் சொல்ல நெருங்காதிருங்கள் என்கிறேன். *எரே. ௯. ௧.

௫ ஏனென்றால் சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவராலே தரிசனப்பள்ளத்தாக்கிலே அமளியும், மிதியுண்குதலும், கலக்கமுமான நாளாய் இருக்கிறது; அலங்கத்தைத் தகர்த்து, பருவதத்துக்கு நேரே ஆர்ப்பரிக்கும் நாள்தானே.

௬ பெர்சியன் அப்பருத்தூணியை எடுத்து, இரதங்களோடும் மனுஷரோடும் இராவுத்தரோடும் வருகிறான்; அலங்கம் கேடகங்கள் அற்றுப்போம்.

௭ மகா வடிவான உன் பள்ளத்தாக்குகள் இரதங்களால் நிறையப்படுவது உண்டு; குதிரைக்காரரா வாசல்கள்மட்டும் நிறுத்தவார்கள்.

௮ அவன் யூதாவின் மறைவை வாங்கிப்போடுவான்; அந்நாளிலே காட்டுமர வீட்டின் ஆயுதச்சாலையை நோக்குவாய்.

௯ நீங்கள் தாவீதுடைய பட்டணத்தின் இடிதல்களை மிகுதியானவைகள் என்று கண்டு, கீழ்க்குளத் தண்ணீர்களைச் சேர்த்து,

௰ எருசலேமின் வீடுகளை எண்ணி, அலங்கத்தை அரணிப்பாக்கும்படிக்கு வீடுகளை

இடித்து,

௧௧ இரண்டு மதில்களுக்கு நடுவே பழைய குளத் தண்ணீர்களுக்கு ஒரு அகழை உண்டுபண்ணுவீர்கள்; ஆனால் அதைச் செய்கிறவரை நீங்கள் நோக்காமலும், அதை ஏற்படுத்தித் தூரத்திலிருந்து வரப்பண்ணுகிறவரைக் கவனிக்காமலும் போகிறீர்கள்.

௧௨ சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் அக்காலத்திலே அழுகையையும், புலம்பலையும், மொட்டையிடுதலையும், இரட்டு உடுக்குதலையும் வரவழைப்பார்.

௧௩ இப்போதோவெனில் *இதோ சந்தோஷமும் களிப்பும், மாடுகளைக் கொல்லுகிறதும், ஆடுகளை அடிக்கிறதும், இறைச்சியைச் சாப்பிடுகிறதும், மதுவைக் குடிக்கிறதும், புசித்துக்குடிப்போம்; ஏனெனில், நாளைச் சாவோம் என்று சொல்லுகிறதும் உண்டு. *௧ கொரி. ௧௫. ௩௨.

௧௪ அது சேனைகளின் கர்த்தராகிய நம்முடைய செவிகளுக்கு வெளியரங்கமாய் இருக்கிறது; மெய்யாகவே நீங்கள் சாகுமட்டும் இந்த அக்கிரமம் உங்களுக்கு நிவிர்த்தியாவதில்லை என்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௧௫ ¶ சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் உரைத்ததாவது: நீ வீட்டு விசாரிப்புள்ள இந்தப் பொக்கிஷக்காரனாகிய செப்னா அண்டைக்குப்போய்ச் சொல்லவேண்டியது ஏதெனில்,

௧௬ தன் கல்லறையை உயர்ந்ததலத்திலே வெட்டி, கல்மலையிலே தனக்கு வாசஸ்தலத்தைத் தோண்டுகிறவனைப்போலே நீ உனக்கு இங்கே கல்லறையை வெட்டும்படிக்கு உனக்கு இங்கே இருப்பது என்ன? அல்லது உனக்கு இங்கே இருப்பவர்கள் யார்?

௧௭ இதோ, பலவான் ஒருவனைத் துரத்துகிறவண்ணமாகக் கர்த்தர் உன்னைத் துரத்திவிட்டு, உன்னை மூடவே மூடுவார்.

௧௮ ஒருவன் ஒரு உண்டையை உருட்டுமாப்போலே உன்னை அகலமும் விசாலமுமான தேசத்திலே உருட்டவே உருட்டுவார்; அங்கே சாவாய்; அங்கே உன் மகிமையின் இரதங்கள் உன் ஆண்டவனுடைய வீட்டுக்கு இகழ்ச்சியாக இருக்கும்.

௧௯ உன்னை உன் நிலையைவிட்டுப் பறக்கடிப்போம்; உன் தானத்திலிருந்து உன்னைப் பிடுங்கிப்போடுவான்.

௨௰ அந்நாளிலே சம்பவிப்பதாவது: *இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கீம் என்ற நம்முடைய ஊழியக்காரனை நாம் அழைத்து, *ஏசா. ௩௬. ௩.

௨௧ உன் வஸ்திரத்தை அவனுக்கு உடுத்து, உன் கச்சையால் அவனைத் திடனாகக் கட்டி, உன் அதிகாரத்தை அவன் கையிலே கொடுப்போம்; அவன் எருசலேமின் குடிகளுக்கும், யூதாவின் வீட்டுக்கும் தகப்பனாய் இருப்பான்.

௨௨ தாவீதுடைய வீட்டின் திறவுகோலை அவன் தோளின்மேல் வைப்போம்; அவன் *யாரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறந்து, யாரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டுவான். *வெளி. ௩. ௭.

௨௩ அவனை உறுதியான இடத்திலே ஆணியாகக் கடாவுவோம்; அவன் தன் தகப்பன் வீட்டுக்குக்கனமான ஆசனமாகஇருப்பான்.

௨௪ அதின்மேல் அவன் தகப்பன் வீட்டாராகிய பிள்ளைகள் பேரன்மார்களுடைய மகிமை அனைத்தையும், குடிக்கிற பாத்திரங்கள் முதல்கொண்டு சகல தம்புருமுட்டுகள்மட்டும் இருக்கிற சகல சிறுபாத்திரங்களையும் தூக்கிப்போடுவார்கள்.

௨௫ உறுதியான இடத்தில் கடாவப்பட்டு இருந்த ஆணி அந்நாளிலே பிடுங்கப்பட்டு, வெட்டுண்டு விழும்; அப்போது அதின்மேல் இருந்த சுமை அறுந்துபோகும் என்று சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார்; இதைக் கர்த்தரே உரைக்கிறார் என்று சொல் என்றார்.

## ௨௩. அதிகாரம்.

தீருவினுடைய பாரம்; தர்சீஸ் கப்பல்களின் மனுஷரே, அலறுங்கள்; அது வீடு இல்லாதபடிக்கும், வருவார் இல்லாதபடிக்கும் *பாழாக்கப்பட்டது; கித்தீம்தேசத்திலிருந்து இந்தச் செய்தி அவருக்கு வெளிப்படுகிறது. *எரே. ௪௭. ௨. ழி: ௪௮. ௨. ழி: ௨௭. ௧. ழி: ௨௮. ௧. ழி. சகரி. ௯. ௨–௪.

௨ தீவுக்குடிகளே, மவுனமாகுங்கள்; சீதோனின் வர்த்தகர் சமுத்திரத்திலே யாத்திரைபண்ணி, உன்னை நிரப்பினார்கள்.

௩ சீகோர் நதியின் மிகுந்த நீர்ப்பாய்ச்சல்களால் விளையும் பயிர்வகைகளும், ஆற்றங்கரையின் அறுப்பும் உன் வரத்தாய் இருந்தன; நீ ஜாதிகளின் சந்தையாய் இருந்தாய்.

௪ சீதோனே, வெட்கப்படு; ஏனெனில், நான் இனிக் கர்ப்பவேதனைப்படுகிறதும் இல்லை; பெறுகிறதும் இல்லை; இளைஞரை ஆளாக்குகிறதும் இல்லை; கன்னியாஸ்திரிகளை வளர்க்கிறதும் இல்லை என்று சமுத்திரக்கோட்டையான கடல்துறை சொல்லுகிறது.

௫ எகிப்தின் செய்தி கேட்கப்பட்டதினால் நோய் உண்டானதுபோலே, தீருவின் செய்தி கேட்கப்படுவதினாலும் உண்டாம்.

௬ கரைதுறைக் குடிகளே, நீங்கள் தர்சீஸ்மட்டும் புறப்பட்டுப்போய் அலறுங்கள்.

௭ பூர்வ நாள்கள்முதல் துவக்கங்கொண்டு களிகூர்ந்திருந்த உங்கள் பட்டணம் இதுவோ? பரதேசம்போக இதின் குடிகளுடைய கால்கள் இவர்களைத் தூரமாய்க் கொண்டுபோம்.

௮ கிரீடம் தரித்துக்கொண்டிருக்கிற தீருவுக்கு விரோதமாக இதைச் சோதித்துத் தீர்த்தவர் யார்? அதின் வர்த்தகர் பிரபுக்களும், அதின் வியாபாரிகள் தேசத்தில் கனமுள்ளவர்களும் ஆமே.

௯ எல்லாச் சிறப்பின் அகந்தையையும் குலைத்து, தேசத்திலே கனமுள்ள யாவரையும் கனவீனமாக்குவதற்காகச் சேனைகளின் கர்த்தரே இதை யோசித்துத் தீர்த்தார்.

௰ தர்சீசின் குமாரத்தியே, ஒரு ஆற்றைக் கடக்குமாப்போலே உன் தேசத்தைக் கடந்துபோ, கட்டும் கச்சை இனி இல்லை.

௰௧ தமது கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி, இராச்சியங்களைக் குலுங்கப்பண்ணுகிறார்; கானானின் அரண்களை அழிக்கக் கர்த்தர் அதற்கு விரோதமாகக் கட்டளைகொடுத்து,

௰௨ ஒடுங்குண்ட கன்னியாகிய சீதோன் குமாரத்தியே, இனிக் களிகூர்ந்துகொண்டிராய்; எழுந்திருந்து கித்தீமுக்குப் புறப்பட்டுப் போ; அங்கேயும் உனக்கு இளைப்பாறுதல் இல்லையென்றார்.

௰௩ அதோ கல்தேயருடைய தேசம்; அந்தச் சனம் முன்னிருந்ததில்லை; அசூர் என்றவன் வனாந்தரத்தாருக்காக அதின் அஸ்திபாரத்தை ஏற்படுத்தினான்; இப்படித் தங்கள் துருக்கங்களை எடுப்பித்து, தங்கள் அரமனைகளைக் கட்டினார்கள்; அழிவுசெய்ய அதையே குறித்தார்.

௰௪ தர்சீஸ் கப்பல்களின் மனுஷரே, அலறுங்கள்; ஏனெனில், உங்கள் அரண் பாழாக்கப்பட்டது.

௰௫ ¶ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதென்றால், தீரு ஒரு இராசாவுடைய நாள்களின்படி எழுபது வருஷம் மறக்கப்பட்டிருக்கும்; ஆனால் எழுபது வருஷங்களின் முடிவிலே தீருவின் சம்மதி ஒரு வேசியின் பாடலுக்குச் சமானமாய் இருக்கும்.

௰௬ மறக்கப்பட்ட வேசியே, சுரமண்டலத்தை எடுத்து ஊரிலே சுற்றித்திரி; நீ நினைக்கப்படும்படிக்கு அதை நன்றாய் வாசித்து மெத்தவும் பாடு.

௰௭ ஏனெனில் சம்பவிப்பது ஏதென்றால் எழுபது வருஷங்களின் முடிவிலே கர்த்தர் தீருவைச் சந்திப்பார்; அப்போது அது தன் பணையத்துக்குத் திரும்பிவந்து, பூச்சக்

கரத்தின்மேல் உள்ள பூமியின் இராச்சியங்களோடு எல்லாம் வேசித்தனம்பண்ணும்.

௰அ அதின் வியாபாரமும், அதின் பணையமும் கர்த்தருக்குப் பரிசுத்தமாய் இருக்கும்; அது பொக்கிஷமாய்ச் சேர்க்கப்படுவதும் இல்லை; அடைத்துவைக்கப்படுவதும் இல்லை; கர்த்தருக்குமுன்பாக வாசமாயிருக்கிறவர்கள் திருப்தியாகச் சாப்பிடத்தக்கதாகவும் அவர்களுக்கு உரப்பான வஸ்திரந் தரிப்புண்டாகவும் அதின் வியாபாரம் அவர்களைச் சேரும்.

## உச. அதிகாரம்.

இதோ கர்த்தர் தேசத்தை வெறுமையும், பாழுமாக்கி அதின் உருவை மாறுபாடாக்கிப்போட்டு, அதின் குடிகளைச் சிதற அடிப்பார்.

௨ அப்போது *சனத்துக்கும் ஆசாரியனுக்கும், வேலைக்காரனுக்கும் அவன் எசமானனுக்கும், வேலைக்காரிக்கும் அவள் நாச்சியாருக்கும், †கொண்டவனுக்கும் விற்றவனுக்கும், கடன்கொடுத்தவனுக்கும் கடன் வாங்கினவனுக்கும், வட்டி வாங்கினவனுக்கும் வட்டிகொடுத்தவனுக்கும் சரியாக நடக்கும். *ஓசே. ச. கூ. †எசே. எ. ௰௨,௰௩.

௩ தேசம் முழுதும் வெறுமையாகி, முழுதும் கொள்ளையாகும்; ஏனெனில் கர்த்தர் இந்த வார்த்தையைச் சொன்னார்.

௪ தேசம் புலம்பி வாடும்; பூமி சத்துவமற்று வாடிப்போகும்; தேசத்துச் சனத்திலே உயர்ந்தவர்கள் பெலஇனர் ஆவார்கள்.

௫ பூமி தன் குடிகளின்கீழ்த் தீட்டுப்பட்டு இருக்கிறது; ஏனெனில், நியாயப்பிரமாணங்களை மீறி, கட்டளையை மாறுபாடாக்கி, நித்திய உடம்படிக்கையை முறித்தார்கள்.

௬ இதின்நிமித்தமே தேசத்தின் குடிகள் பாழ்க்கடிக்கப்படத்தக்கவிதமாய்ச் சாபம் தேசத்தைப் பட்சிக்கும்; இதின்நிமித்தமே கொஞ்சப்பேர் மீதியாகத்தக்கவிதமாய்த் *தேசத்தின் குடிகள் வெந்துபோவார்கள். *ஏசா. கூ. ௰௯; ௰. ௰௬.

௭ திராட்சப்பழஇரசம் துக்கம்கொண்டாடும்; திராட்சச்செடி வாடும்; மனக்களிப்பாய் இருந்தவர்கள் எல்லாரும் பெருமூச்சு விடுவார்கள்.

௮ *மேளங்களின் சந்தோஷம் ஓய்ந்து, களிகூருகிறவர்களின் சந்தடி தீர்ந்து, சுரமண்டலக்களிப்பு நின்றுபோம். *எரே. எ. ௩௪; ௰௬. கூ; உ௫. ௰.

௯ பாடலோடே திராட்சப்பழஇரசம் குடியார்கள்; மது தன்னைக் குடிக்கிறவர்களுக்குக் கசக்கும்.

௰ வெறுமையாய்ப்போன பட்டணம் தகர்ந்து, உள்ளே பிரவேசிக்கக்கூடாதபடிக்கு எல்லா வீடுகளும் அடைபட்டுக்கிடக்கும்.

௰௧ கொடிமுந்திரிகை இரசத்துக்கென்று வீதிகளிலே கூக்குரல் உண்டு; எல்லாச் சந்தோஷமும் இருண்டு, தேசத்தின் மகிழ்ச்சி போய்விடும்.

௰௨ பட்டணத்தில் மீதியாயிருப்பது அழிவு; வாசல்கள் பாழாய்க்கிடக்க இடிக்கப்படும்.

௰௩ ஆனால் ஒலிவமரத்தை உலுக்கி, கொடிமுந்திரிகைப்பழங்களை அறுத்துத் தீர்ந்தபோது, பின்னறுப்புக் கொஞ்சம் இருக்குமாப்போலே தேசத்துக்குள்ளும், இந்தச் சனசதளங்களின் நடுவிலும் இருக்கும்.

௰௪ இவர்கள் தங்கள் சத்தத்தை உயர்த்திக் கெம்பீரிப்பார்கள்; சமுத்திரத்திலிருந்து கர்த்தருடைய முக்கியத்தின்நிமித்தம் ஆர்ப்பரிப்பார்கள்.

௰௫ ஆகையால் கர்த்தரைக் கெபிகளிலும், இஸ்ரவேலுடைய பராபரனாகிய கர்த்தரின் நாமத்தைச் சமுத்திரத்தீவுகளிலும் மகிமைப்படுத்துங்கள்.

௰௬ ¶ நீதிபரனுக்கு மகிமை என்று பூமியின் கடையாந்தரத்திலிருந்து பாடும் கீதங்களைக் கேட்கிறோம்; நானோவெனில் இளைத்திருக்கிறேன், இளைத்திருக்கிறேன்; எனக்கு

ஐயோ! துரோகிகள் துரோகம்பண்ணுகிறார்கள்; துரோகிகள் மிகுதியாய்த் துரோகம் பண்ணுகிறார்கள் என்கிறேன்.

௰௭ தேசக்குடிகளே, *திகிலும், படுகுழியும், கண்ணியும் உங்களுக்கு வரும்.
*எரே. ௪௮. ௪௩, ௪௪.

௰௮ சம்பவிப்பது ஏதென்றால், திகிலின் சத்தத்தை விலக ஓடுகிறவன் *படுகுழியிலே விழுவான்; படுகுழியிலிருந்து ஏறுகிறவனோ கண்ணியிலே பிடிபடுவான்; ஏனெனில், உயர இருக்கும் மதகுகள் திறவுண்டு பூமியின் அஸ்திபாரங்கள் குலுங்கும்.
*ஆமோ. ௫. ௰௯.

௰௯ தேசம் நொறுங்கவே நொறுங்கும்; தேசம் கிழியவே கிழியும்; தேசம் அசையவே அசையும்.

௨௰ வெறித்தவனைப்போலத் தேசம் தளம்பவே தளம்பி, ஒரு குடிலைப்போலே பேர்ந்துப்போடப்படும்; அதின் பாதகம் அதின்மேலே பாரமாய் இருக்கையால், அது அப்புறம் எழுந்திருக்காமல் விழுந்துபோம்.

௨௧ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதெனில், கர்த்தர் உயர இருக்கிற உயரமான சேனையையும், பூமியின்மேல் இருக்கிற பூமியின் இராசாக்களையும் விசாரிப்பார்.

௨௨ அவர்கள் கெபியில் ஏகமாய்க் கட்டுண்டவர்களாகச் சேர்ந்து, காவலில் அடைக்கப்பட்டு, அநேகநாள் சென்றபிற்பாடு விசாரிக்கப்படுவார்கள்.

௨௩ அப்போது சேனைகளின் கர்த்தர் சீயோன் பருவதத்திலும், எருசலேமிலும் ஆளுகையால், *சந்திரன் நாணிச் சூரியன் கூச்சம் அடையும்; அவருடைய மூப்பர்களுக்குமுன்பாக மகிமை உண்டாயிருக்கும்.
*ஏசா. ௰௩. ௰. யோவே. ௩. ௪, ௫. லூக். ௨௧. ௨௫.

## ௨௫. அதிகாரம்.

கர்த்தாவே, தேவரீர் என் பராபரனாய் இருக்கிறீர்; உம்மை உயர்த்தி, உமது நாமத்தைத் துதிப்பேன்; ஏனெனில் அதிசயங்களைச் செய்தீர்; உம்முடைய தூரத்து யோசனைகள் சத்தியமும் உறுதியும் ஆனவைகள்.

௨ ஏனெனில் *பட்டணத்தை மண்மேடும், அரணான புரியை இடிந்துகிடக்கிற அழிவும், அந்நியரின் அரமனையை ஊர் அல்லாததும், என்றைக்கும் கட்டப்படாததுமான தலமும் ஆக்கிப்போட்டீர்.
*ஏசா. ௨௧. ௯: ௨௩. ௰௩. வெளி. ௰௪. ௮: ௰௮. ௨.

௩ ஆகையால் பலத்த சனம் உம்மை மகிமைப்படுத்திப் பலவந்தரான சாதிகளின் பட்டணங்கள் உமக்குப் பயப்படும்.

௪ ஏனெனில் பலவந்தரின் சீறல் மதிலை மோதி அடிக்கிற பெருவெள்ளத்தைப்போல இருக்கையில், நீர் நீசனுக்குப் பலனும், நெருக்கப்படுகிற எளியவனுக்குத் திடனும், *பெருவெள்ளத்துக்குத் தப்பும் அடைக்கலமும், வெயிலுக்கு ஒதுங்கும் நிழலும் ஆனீர். *ஏசா. ௪. ௬.

௫ அந்நியரின் உக்கிரம், வறட்சியான இடத்தின் காங்கையைப்போல இருக்கையில் அதைத் தணியப்பண்ணுகிறீர்; மேகத்தின் நிழலினால் வெயில் தாழுமாப்போலே பலவந்தரின் கூவுதல் தாழ்த்தப்படும்.

௬ எல்லாச் சனசதளங்களுக்கும் சேனைகளையுடைய கர்த்தர் இந்தப் பருவதத்திலே ஊன்களுள்ளடைய கொழுப்புகளாகிய *கொழுப்புகளின் விருந்தையும், தெளிவாக்கப்பட்ட திராட்சப்பழ இரசங்களின் விருந்தையும்பண்ணி, *மத். ௨௨. ௪. லூக். ௰௪. ௰௬, ௰௭.

௭ எல்லாச் சனசதளங்கள்மேலும் உள்ள முகமுக்காட்டையும், எல்லாச் சாதிகளையும் மூடி இருக்கிற மூடலையும் இந்தப் பருவதத்திலே விழுங்குவார்.

௮ *அவர் மரணத்தைச் செயமாக விழுங்குவார்; கர்த்தராகிய பராபரன் †எல்லா

முகங்களிலும் உள்ள கண்ணீரை அறத்து
டைத்துத் தமது சனத்தின் நிந்தையைப்
பூமி எங்கும் இராதபடிக்கு நீக்கிவிடுவார்;
ஏனெனில், கர்த்தர் இதைச் சொன்னார்.
*க கொரி. ௰௫. ௫௪, ௫௫. உ தீமோ க. ௰.
†வெளி. எ. ௰எ.

௯ இதோ, நம்முடைய பராபரன் இவர்
தானே; இவருக்காகக் காத்திருந்தோம்,
இவர் நம்மை இரட்சிக்கிறார்; இவரே நாம்
காத்திருந்த கர்த்தர்; அவருடைய இரட்சி
ப்பினாலே களிகூர்ந்து மகிழுவோமாக என்
று அக்காலத்திலே சொல்லப்படும்.

௰ ஏனெனில் கர்த்தருடைய கரம் இந்தப்
பருவதத்திலே தங்கிக்கொண்டிருக்கும்;
மோவாப்போவெனில், வைக்கோலின் கூ
ளம்; எருநிலத்திலே மசிக்கப்படுமாப்போ
லே அவர்கீழே மசிக்கப்படும்.

௰க நீந்துகிறவன் நீந்துவதற்காகக் கைகளை
விரிக்குமாப்போலே அவர் தம்முடைய
கைகளை அவர்கள் நடுவிலே விரித்து, அவர்
கள் பெருமையையும், அவர்கள் கைகளின்
சதிசர்ப்பனைகளையும்கூடத் தாழ்த்திவிட்டு,

௰உ உன் மதில்களுடைய உயர்ந்த அர
ணைப் பணிவாக்கித் தாழ்த்தித் தரையிலே
தூளாக அழிப்பார்.

## உ௬. அதிகாரம்.

அக்காலத்திலே யூததேசத்தில் பாடப்ப
டும் பாட்டாவது: *பலத்த பட்டணம்
நமக்கு இருக்கிறது; இரட்சிப்பையே ம
தில்களும், அரணும் ஆக்கினார். *சங். ௪௬.
இக௲.அஎ.க:௱௨௫.உ.வாக்.௰௪.௰. மத்.௰௬.௰௪.

உ உண்மையைக் கைக்கொண்டுவருகிற
நீதியுள்ள சாதி உள்ளே பிரவேசிப்பதற்
காக *வாசல்களைத் திறவுங்கள்.
*சங். ௱௰௮. ௰௯, உ௰.

௩ சமாதானத்தை, சமாதானத்தையே காப்
பீரென்கிறது ஊன்றப்பட்ட நினைவாய் இரு
க்கிறது; ஏனெனில் உம்மை நம்பிக்கொண்
டு இருக்கிறார்கள்.

௪ என்றைக்கும் கர்த்தரை நம்புங்கள்;
ஏனெனில் கர்த்தராகிய பராபரனுக்குள்
ளே நித்திய கல்மலையின் உறுதி இருக்கும்.

௫ ஏனென்றால், அவர் *உயரத்திலே வாச
மாய் இருக்கிறவர்களையும், உயர்ந்த பட்ட
ணத்தையும் பணிவாக்கி, அதைத் தாழ்த்
துவார்; அவர் அதைத் தரைமட்டாகத்
தாழ்த்தி, அது மண்ணாகுமட்டும் இடியப்
பண்ணுவார். *ஏசா. உ௫. உ.

௬ கால்கள் அதை மிதிக்கும்; சிறுமையா
னவர்களின் கால்களும், நீசரின் அடிகளும்
தானே.

எ நீதிமானுடைய பாதை மகா செம்மை
யாய் இருக்கிறது; நீதிமானுடைய நடை
யைச் செம்மையாக நிறுக்கிறீர்.

அ கர்த்தாவே உம்முடைய நியாயத்தீர்ப்
புகளின் பாதையிலே உமக்குக் காத்திருக்
கிறோம்; உமது நாமமும், உமது நினைப்பும்
ஆத்துமாவின் வாஞ்சையாய் இருக்கிறது.

௯ என் ஆத்துமா இராவிலே உம்மை வாஞ்
சிக்கிறது; எனக்குள் இருக்கிற என் ஆவி
யால் அதிகாலத்திலும் உம்மைத் தேடுகி
றேன்; ஏனெனில், உம்முடைய நியாயத்
தீர்ப்புகள் தேசத்தில் நடக்கும்போது பூச்
சக்கரக்குடிகள் நீதியைப் படிக்கிறார்கள்.

௰ ஆகாதவனுக்குக் கிருபைசெய்யப்பட்
டாலும் நீதியைப் படியான்; நல்ல நிதான
மான தேசத்தில் முதலாய் அநியாயம்செய்
து கர்த்தருடைய மகத்துவத்தைக் கவனி
யாதேபோகிறான்.

௰க கர்த்தாவே, உமது கரம் உயர்ந்து
இருந்தாலும் அதைக் காணாதிருக்கிறார்கள்;
ஆனால் சனத்துக்காக உமக்கு இருக்கும்
பட்சவயிராக்கியத்தைக் கண்டு வெட்கு
வார்கள்; அக்கினி உம்முடைய சத்துருக்
களைப் பட்சிக்கும்.

௰உ கர்த்தாவே, எங்களுக்குச் சமாதானத்
தைக் கட்டளையிடுவீர்; ஏனெனில் எங்கள்
எல்லா வேலைகளையும் எங்களுக்காக நடத்
திவருகிறீரே.

௰௩ எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை அல்லாத வேறே ஆண்டவன்மார் எங்களை ஆண்டார்கள்; ஆனால் உம்மை மாத்திரம் சார்ந்து உம்முடைய நாமத்தை நினைத்துக்கொண்டிருக்கிறோம்.

௰௪ செத்தவர்கள் உயிருக்குத் திரும்பார்கள்; மாண்ட இராட்சதர் திரும்ப எழுந்திரார்கள்; அப்படி நீர் அவர்களை விசாரித்து, சங்கரித்து, அவர்கள் பேரை எல்லாம் அழியப்பண்ணினீர்.

௰௫ இந்தச் சாதியோடே கூட்டினீர்; கர்த்தாவே, இந்தச் சாதியோடே கூட்டி மகிமைப்பட்டீர்; பூமியின் எல்லாக் கடையாந்தரங்கள்மட்டும் வந்து எட்டினீரே.

௰௬ கர்த்தாவே, *நெருக்கத்தில் உம்மைத் தேடுகிறார்கள்; உம்முடைய தண்டனை அவர்கள்மேலிருக்கையில் அந்தரங்க வேண்டுதலை ஊற்றுகிறார்கள்.
*சங். ௰௮. ௭: ௭௭. ௪.

௰௭ கர்த்தாவே, பேறுகாலம் சமீபித்திருக்கையில் *வேதனைப்பட்டு, தன் வாதைகளிலே கூப்பிடுகிற கர்ப்பவதியைப்போலே உமக்குமுன்பாக இருக்கிறோம்.
*யோவா. ௰௬. ௨௧.

௰௮ *நாங்கள் கர்ப்பமாயிருந்து வாதைப்பட்டு, காற்றைப் பெற்றவர்களைப்போல இருக்கிறோம்; தேசத்துக்கு இரட்சிப்புச் செய்யமாட்டாதிருக்கிறோம்; பூச்சக்கரக் குடிகள் விழுகிறதுமில்லை. *மீகா. ௫. ௨, ௩: ௰௨. ௧, ௨.

௰௯ மரித்த உம்முடையவர்கள் என் சவத்தோடுங்கூடப் பிழைத்து எழுந்திருப்பார்கள்; *மண்ணிலே தங்கி இருக்கிறவர்களே, விழித்துக் கெம்பீரியுங்கள்; ஏனெனில் உம்முடைய பனி பூண்டுகளின் பனியைப்போல இருக்கும்; ஆனால் இராட்சதரைப் பூமி தள்ளிவிடும்.
*வெளி. ௨௰. ௪—௬.

௨௰ என் சனமே, நீ போய் உன் அறைகளுக்குள்ளே பிரவேசித்து, *உனக்குப் பின்னாக உன் கதவுகளைப்பூட்டிச் சினம் கடந்து போகுமட்டும் கொஞ்சநிமிஷம் ஒளித்துக் கொள். *௧ மோ. ௭. ௰௬. ௨ மோ. ௰௨. ௨௨, ௨௩.

௨௧ ஏனெனில் இதோ, பூமியினுடைய குடிகளின் அக்கிரமத்தினிமித்தம் அவர்களை விசாரிக்கும்படிக்குக் *கர்த்தர் தம்முடைய தானத்திலிருந்து புறப்படுவார்; அப்போது பூமி தன் இரத்தப்பழிகளைத் திறந்து காண்பித்து, தன்னிலே கொலைசெய்யப்பட்டவர்களை இனி மூடாதிருக்கும்.
*மீகா. ௧. ௩—௫.

## ௨௭. அதிகாரம்.

அக்காலத்திலே கர்த்தர் *நீண்ட பாம்பாகிய துஷ்டமிருகத்தையும், கோணலான பாம்பாகிய துஷ்டமிருகத்தையும் கடினமும், பெரிதும், பலத்ததுமான தமது பட்டயத்தால் விசாரித்து, சமுத்திரத்தில் இருக்கிற வலுசர்ப்பத்தைக் கொன்றுபோடுவார். *வெளி. ௰௨. ௯: ௰௯. ௨௰, ௨௧.

௨ அக்காலத்திலே நல்ல திராட்சப்பழ இரசத்தைத்தரும் திராட்சத்தோட்டம் உண்டாயிருக்கும்; அதின்மேலே ஒருவர்க்கு ஒருவர் பாடுங்கள்.

௩ கர்த்தராகிய நாம் அதைக் காத்து, அதற்கு அடிக்கடி தண்ணீர்ப்பாய்ச்சி, யாரும் அதைச் சேதப்படுத்தாதபடிக்கு அதை இரவும்பகலும் காப்பாற்றுவோம்.

௪ உக்கிரம் நமக்கு இல்லை; யாவனாகிலும் முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமாய் நம்மோடே யுத்தத்துக்குட்பட்டானேயானால், நாம் அதின்மேல் வந்து, அதை ஏகமாய்க் கொளுத்திவிடுவோம்.

௫ அல்லவென்றால், அவன் நம்முடைய பெலனைப்பற்றிக்கொண்டு, நம்மோடே ஒப்புரவாகவே வேண்டும்; நம்மோடே ஒப்புரவாகவே வேண்டும்.

௬ ¶ யாக்கோபு வேர்பற்றி, இஸ்ரவேல் *பூத்துக் காய்த்துப் பூச்சக்கரத்தைப் பல

னால் நிரப்பும் நாள்கள் வரும். *சங். ௭௨. ௰௬.

௭ அவர் அவனை அடிக்கும் அடியாய் இவனை அடிக்கிறாரோ? அவர்கள் கொல்லப்படும் கொலையாய் இவன் கொல்லப்படுகிறானோ?

௮ தேவரீர் சனத்தைத் துரத்திவிடுகையில் *மட்டாய் அதனோடே வழக்காடுகிறீர்; கொண்டல்காற்றடிக்கிற நாளிலே, தம்முடைய பலத்த காத்தினால் அதை விலக்கிவிடுகிறார். *எரே. ௯௰. ௰௧.

௯ ஆகையால், அதனோடே யாக்கோபின் அக்கிரமம் நிக்கிரகம்பண்ணப்படும்; தோப்புகளும், சிலைகளும் இனி நிற்காதபடிக்கு அவர்கள் பலிபீடங்களின் கல்லுகளை எல்லாம் சிதற அடிக்கப்பட்ட சுண்ணாம்புக் கல்லுகளாக்கி விடும்போது, அவர்களுடைய பாவத்தை அவர் அகற்றுவாரென்பதே அதினால் எல்லாம் உண்டாகும் பலன்.

௰ அது ஏதெனில், *அரணான பட்டணம் அவாந்தரையாகும்; அந்த வாசஸ்தலம் தள்ளுண்டு வனாந்தரத்தைப்போல விட்டுவிடப்பட்டதாய் இருக்கும்; கன்றுக்குட்டிகள் அங்கே மேய்ந்து, அங்கே படுத்துக்கொண்டு, அதின் தழைகளைப் பட்சிக்கும். *எரே. ௪௯. ௩௩.

௰௧ அதின் கொப்புகள் உலர்ந்திருக்கும்போது ஒடிந்துபோம்; ஸ்திரிகள் வந்து அவைகளைக் கொளுத்திவிடுவார்கள்; ஏனெனில், அது உணர்வுள்ள சனமல்ல; ஆனபடியால், அதை உண்டாக்கினவர் அதற்கு இரங்காமலும், அதை உருவாக்கினவர் அதற்குக் கிருபைசெய்யாமலும் இருப்பார்.

௰௨ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதெனில், கர்த்தர் ஆற்றங்கரையின் வினைவு துவக்கி எகிப்தின் நதிமட்டும் போரடிப்பார்; ஆனால் இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் ஒருவர் ஒருவராய்ச் சேர்த்துக்கொள்ளப்படுவீர்கள்.

௰௩ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதெனில் பெரிய எக்காளத்தொனி உண்டாம்; அப்போது அசூரியதேசத்திலே சிதற அடிக்கப்பட்டவர்களும், எகிப்துதேசத்திலே துரத்திவிடப்பட்டவர்களும் வந்து, எருசலேமில்உள்ள பரிசுத்த பருவதத்திலே கர்த்தரைப் பணிந்துகொள்ளுவார்கள்.

## உ௮. அதிகாரம்.

எப்பிராயீமுடைய வெறியரின் பெருமையான கிரீடத்துக்கும், மதுபான லாகிரியாய் இருக்கிறவர்களுடைய செழிப்பான பள்ளத்தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள அலங்கார சோடிப்பான வாடிய பூவுக்கும் ஐயோ!

௨ இதோ, பெலனும் வல்லமையுமான ஒருவன் ஆண்டவருக்கு இருக்கிறான்; அவன் கல்மழை வெள்ளமாகவும், சங்காரப் புசலாகவும், புரண்டுவருகிற கன தண்ணீர்களின் வெள்ளமாகவும் வந்து, கையினாலே அதைத் தரையிலே தள்ளிவிடுவான்.

௩ எப்பிராயீமுடைய வெறியரின் முக்கிய கிரீடம் கால்களால் மிதித்துப்போடப்படும்.

௪ செழிப்பான பள்ளத்தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள அலங்கார சோடிப்பின் வாடிய பூ பருவகாலத்துக்குமுன் பழுத்ததும், காண்கிறவன் பார்த்து, அது இன்னம் தன் கையில்இருக்கையில் விழுங்குகிறதுமான முதல்கனியைப்போல இருக்கும்.

௫ ¶ அக்காலத்திலே சேனைகளின் கர்த்தர் தமது சனத்தில் மீதியானவர்களுக்கு மகிமையான கிரீடமாகவும், அலங்காரமுடியாகவும்,

௬ நியாயம் விசாரிக்கிறதற்கு உட்கார்ந்திருக்கிறவனுக்கு நியாயத்தின் ஆவியாகவும், யுத்தத்தை அதின் வாசல்மட்டும் திருப்புகிறவர்களின் பராக்கிரமமாகவும் இருப்பார்.

௭ ஆனால் இவர்கள் மதுபானத்தால் திசைகெட்டு, லொட்டியினால் வழிதப்பிப்போ

றார்கள்; ஆசாரியனும் தீர்க்கதரிசியும் லொட்டியினால் நிலைகெட்டு, மதுபானத்தால் அமிழ்ந்து, லொட்டியினால் வழிதப்பித் தீர்க்கதரிசனத்தில் மோசம்போய்,நியாயம் தீர்க்கிறதிலே இடறுகிறார்கள்.

௮ ஏனெனில், எல்லாப் பந்திகளும் சுத்த இடமில்லாதபடிக்கு வாந்தியினாலும், தீட்டினாலும் நிறைந்திருக்கின்றன.

௯ ¶ இனியாருக்கு அறிவைப் போதிப்பார்? கேட்டதை யாருக்குத் தெளிவிப்பார்? *பால் மறந்தவர்களுக்கும், முலைமறக்கப் பண்ணப்பட்டவர்களுக்குமே.

*மத். ௰௧. ௨௫.

௰ ஏனெனில் கற்பனையின்மேல் கற்பனையும், கற்பனையின்மேல் கற்பனையும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், இங்கே கொஞ்சமும், அங்கே கொஞ்சமும் என்கிறார்கள்.

௰௧ ஆகையால் பரியாச உதட்டினாலும், *வேற்றுப்பாஷையினாலும் இந்தச் சனத்தோடே பேசுவார். *௧ கொரி. ௰௪. ௨௧.

௰௨ *இதுவே நீங்கள் இளைத்தவனை இளைப்பாறப்பண்ணத்தக்க இளைப்பாறுதல்; இதுவே சாங்கோபாங்கம் அடைதலென்று அவர்களோடே அவர் சொன்னாலும் கேட்கமாட்டோமென்கிறார்கள்.

*மத். ௰௧. ௨௮, ௨௯.

௰௩ ஆனதுகொண்டு அவர்கள் போய், *பின்னிட்டு விழுந்து, நொறுங்கும்படிக்கும், சிக்குண்டு பிடிபடும்படிக்கும், கர்த்தருடைய வார்த்தை அவர்களுக்குக் கற்பனையின்மேல் கற்பனையும், கற்பனையின்மேல் கற்பனையும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், இங்கே கொஞ்சமும், அங்கே கொஞ்சமும் என்கிறதாக இருக்கும். *ஏசா. ௮. ௰௫.

௰௪ ¶ ஆகையால், எருசலேமில் இருக்கிற இந்தச் சனத்தை ஆளுகிற சக்கந்தக்காரரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௰௫ நாங்கள் மரணத்தோடே உடம்படிக்கையையும், நரகத்தோடே ஒப்பந்தத்தையும் பண்ணினோம்; வாதை பெருவெள்ளமாய்ப் புரண்டுவந்தாலும் எங்களை அணுகாது; ஏனெனில், நாங்கள் பொய்யை எங்களுக்கு அடைக்கலமாக்கி,மாயையின் மறைவிலே வந்து அடைந்தோம் என்கிறீர்களே.

௰௬ ஆகையினாலே கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: *இதோ உத்தமும் விளங்கினதும், விலையேறப்பெற்றதும்,திட அஸ்திவாரப்பட்டதுமான கோடிக்கல்லாகிய கல்லை நாம் சீயோனிலே வைக்கிறோம்; விசுவாசிக்கிறவன் பதறான்.

*௧ பே. ௨. ௬.

௰௭ நாம் நியாயத்தை நூலும், நீதியைத் தூக்கும் ஆக்குவோம்; ஆனால் பொய்யென்ற அடைக்கலத்தைக் கல்மழை பறக்கடித்து, அந்த மறைவைத் தண்ணீர்வெள்ளம் அடித்துக்கொண்டுபோகும்.

௰௮ அப்படியே உங்களுக்கு மரணத்தோடு இருக்கிற உடம்படிக்கை விருதாவாகி, உங்களுக்கு நரகத்தோடு இருக்கிற ஒப்பந்தம் நிற்காதேபோம்; வாதை பெருவெள்ளமாய்ப் புரண்டுவரும்போது அதின்மேல் [illegible]கப்பட்டுக் கசங்குவீர்கள்.

௰௯ அது புரண்டுவந்ததுமுதல் உங்களை அடித்துக்கொண்டுபோம்;ஏனெனில்,அது காலைமாறும் இரவிலும் பகலிலும் புரண்டுவரும்; கேட்டதின் உணர்வை உண்டாக்கும்படிக்கு அலைச்சலே உண்டாயிருக்கும்.

௨௰ ஏனெனில் படுக்கை நீட்டிக்கொள்ளக்கூடாத குறுகலும், மூடுசீலை மூடிக்கொள்ளக்கூடாத அகலக்கட்டையுமாயிருக்கும்.

௨௧ ஏனெனில், தமது அந்நிய கிரியையாகிய தமது கிரியையைச் செய்யவும், தமது வேற்றுவேலையாகிய தமது வேலையை நடப்பிக்கவும். கர்த்தர் *பெராத்சீம் மலையிலே செய்ததுபோல எழும்பி, †கிபெயோனின் பள்ளத்தாக்கில் இருந்ததுபோலே சினந்திருப்பார். *௨ சாமு. ௫. ௨௰. †யோசு. ௰. ௰, ௰௨.

உஉ இப்போதும் உங்கள் கட்டுகள் பலத்துப்போகாதபடிக்குப் பரிகாசம் பண்ணாதிருங்கள்; ஏனெனில், தேசம் அனைத்தின் மேலும் நிருணயம்பண்ணப்பட்டிருக்கிற சங்காரத்தின் செய்தியைச் சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவராலே கேள்விப்பட்டிருக்கிறேன்.

உங ¶ செவிகொடுத்து என் சத்தத்தைக் கேளுங்கள்; நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள்.

உச உழுகிறவன் நாள்தோறும் உழுது, விதைக்கிறதற்காகத் தன் நிலத்தைக் கொத்திப் பரம்படிக்கிறது உண்டோ?

உரு அவன் அதை மேலே நிரவினபிற்பாடு அதின் அதின் எல்லையில் உளுந்தைத் தெளித்துச் சீரகத்தைத் தூவி, மேல்தரமான கோதுமையையும் நியமிக்கப்பட்ட வால் கோதுமையையும், கம்பையும் விதைத்துப் போடுகிறான் அல்லவோ?

உசா அப்படி அவர்களுடைய பராபரன் அவர்களை நியாயமட்டாய்த் தண்டித்து, அவர்களை உபதேசிப்பார்.

உஎ ஏனெனில், உளுந்து தூலத்தாலே போரடிக்கப்படுகிறதில்லை; சீரகத்தின்மேல் வண்டிலின் உருளை சுற்றவிடப்படுகிறதுமில்லை; உளுந்து கோலினாலும், சீரகம் மிலாறினாலும் அடிக்கப்படும்.

உஅ போசனம் ஆகும்படியாக அது மசிக்கப்படும்; ஆகையால், எப்போதும் அவன் அதைப் போரடிக்கிறதும் இல்லை; அவன் தன் வண்டிலின் உருளையால் அதை நசுக்குகிறதும், அல்லது தன் குதிரைகளால் அதை நொறுக்குகிறதும் இல்லை.

உகூ இதுவும் சேனைகளுடைய கர்த்தராலே புறப்பட்ட விசேஷம்; அவர் *ஆச்சரியமான ஆலோசனையும், பெருத்த ஞானத்தின் செயலும் உள்ளவர். *எரே. ஙஉ. ௰கூ.

## உகூ. அதிகாரம்.

தாவீது பாளயம் இறங்கின பட்டணமாகிய வலுசிங்கமே, வலுசிங்கமே, உனக்கு ஐயோ! வருஷத்துக்கு வருஷம் பண்டிகையின் பலிகள் பலியிடப்பட்டாலும்,

உ வலுசிங்கத்துக்கு இடுக்கம் உண்டாக்குவோம்; அப்போது துக்கிப்பும் சலிப்பும் உண்டாகி, இந்தப்பட்டணம் நமக்குச் சிங்கத்தைப்போலத்தான் இருக்கும்.

ங ஏனெனில், *உன்னைச்சூழப் பாளயம்இறங்கி, உன்னைத் தெற்றிகளால் முற்றிக்கைபோட்டு, உனக்கு விரோதமாகக் கொத்தளங்களை எழுப்புவோம்.

*லூக். ௰கூ. சங, சச: உக. உ௰.

ச அப்போது நீ தாழ்ந்துபோய்த் தரையிலிருந்து பேசுவாய்; உன் பேச்சுப் பணிந்ததாய் மண்ணிலிருந்து புறப்பட்டு, உன் சத்தம் அஞ்சனம்பார்க்கிறவனுடைய சத்தத்தைப்போலத் தரையிலிருந்து முணுமுணுத்து, உன் பேச்சு மண்ணிலிருந்து கசுகுசென்றதாக இருக்கும்.

ரு உன்மேல் வருகிற அந்நியரின் திரள் பொடித்தூளத்தனையாகவும், பலவந்தரின் திரள் பறந்துவரும் பதர்களத்தனையாகவும் இருக்கும்; அது *அசுப்பும் தீவிரமுமாய்ச் சம்பவிக்கும். *மத். உச. உஎ.

சா இடிகளினாலும், பூமி அதிர்தலினாலும், மகா இரைச்சலினாலும், பெருங்காற்றினாலும், புசலினாலும், பட்சிக்கிற அக்கினிச் சுவாலையினாலும் சேனைகளின் கர்த்தராலே விசாரிக்கப்படுவாய்.

எ ஆனாலும் வலுசிங்கத்தின்மேல் யுத்தம் பண்ணுகிற சகல சாதிகளுடைய திரளும், அதின்மேலும் அதின் அரண்மேலும் யுத்தம்பண்ணி, அதை இடுக்கண் செய்கிற அனைவரும் இராத்தரிசனையாகிய சொப்பனத்தைக்காண்கிறவர்க்கு ஒப்பாயிருப்பார்கள்.

அ பசியாயிருக்கிறவன் இதோ புசிக்கிறேன் என்று சொப்பனம் காண்கிறதற்கு அது ஒத்ததாய் இருக்கும்; அவன் விழிக்கையில் அவன் ஆத்துமா வெறுமையாய் இருக்கும்; அல்லது தாகமாயிருக்கிறவன்,

இதோ குடிக்கிறேன் என்று சொப்பனம் காண்கிறதற்கு ஒத்ததுமாய் இருக்கும்; அவன் விழிக்கையில், இதோ அவன் விடாய்த்தே இருக்கிறான்; அவன் ஆத்துமா தவனத்தோடேதானே இருக்கும்; அப்படியே சீயோன் பருவதத்துக்கு விரோதமாக யுத்தம்பண்ணுகிற சகல சாதிகளுடைய திரளுக்கும் இருக்கும்.

௯ ¶ தரித்துநின்று திகையுங்கள்; பிரமித்துக் கூப்பிடுங்கள்; வெறித்து இருக்கிறார்கள், ஆனால் மதுபானத்தால் அல்ல; தள்ளம்பாறுகிறார்கள், ஆனால் லொட்டியினால் அல்ல.

௰ ஏனெனில் *கர்த்தர் உங்கள்மேலே கனநித்திரையின் ஆவியை ஊற்றி, உங்கள் கண்களை அடைத்து, தீர்க்கதரிசிகளையும், உங்கள் தலைவரையும், ஞானதிருஷ்டிக்காரரையும் முக்காடு போட்டார். *உரோ. ௰௧. ௮.

௰௧ ஆனதுகொண்டு தரிசனம் எல்லாம் உங்களுக்கு முத்திரிக்கப்பட்ட புஸ்தகத்தின் வசனங்களைப்போல இருக்கும்; அதை வாசிக்க அறிந்திருக்கிற ஒருவனுக்கு அதைக் கொடுத்து, நீ இதை வாசி என்றால், அவன் இது எனக்குக் கூடாது, ஏனென்றால் அது முத்திரித்து இருக்கிறது என்பான்.

௰௨ அல்லது வாசிக்க அறியாதவனுக்குப் புஸ்தகத்தைக் கொடுத்து, நீ இதை வாசி என்கிறதைப்போலும் இருக்கும்; அவன் எனக்கு வாசிக்கத் தெரியாது என்பான்.

௰௩ ¶ *இந்தச் சனம் தங்கள் வாயினால் நம்மண்டைக்குச் சேர்ந்து, தங்கள் உதடுகளினாலே நம்மைக் கனம்பண்ணியும், அவர்கள் இருதயம் நமக்குத் தூரமாய் விலகி இருக்கிறபடியினாலும், அவர்கள் நமக்குப் பயந்திருக்குதல் மனுஷருடைய கற்பனையின் உபதேசிக்குதலாய் இருக்கிறபடியினாலும், *மத். ௰௫. ௭-௯. மாற். ௭. ௬, ௭.

௰௪ இதோ *அவர்கள் ஞானிகளின் ஞானம் கெட்டு, அவர்கள் விவேகிகளின் உணர்வு மறைந்துபோகத்தக்க மகா அதிசயமும் ஆச்சரியமுமான பிரகாரமாக நாம் இந்தச் சனத்தை நடப்பித்துக்கொண்டே இருப்போம் என்று ஆண்டவர் சொல்லுகிறார். *௧ கொரி. ௧. ௰௯, ௨௰.

௰௫ ¶ தங்கள் ஆலோசனையைக் கர்த்தருக்கு மறைவாக்கும்படிக்கு ஆழமாய் ஒளித்து, தங்கள் கிரியைகளை அந்தகாரத்தில் நடப்பித்து, *எங்களைக் காண்கிறவர் யார்? எங்களை அறிகிறவர் யார்? என்கிறவர்களுக்கு ஐயோ! *சங். ௯௪. ௭.

௰௬ எத்தனை மாறுபாடாய் இருக்கிறீர்கள்? குயவன் களிமண்ணுக்குச் சரியாக எண்ணப்படுவானோ? உண்டாக்கப்பட்டது தன்னை உண்டாக்கினவனைக்குறித்து அவர் என்னை உண்டாக்கினதில்லை என்றும், உருவாக்கப்பட்டது தன்னை உருவாக்கினவரைக்குறித்து அவர் உணரார் என்றும் சொல்லத்தகுமோ?

௰௭ ¶ இன்னம் கொஞ்சப்பொழுதிலே லீபனோன் *வயல்வெளியாக மாறுவதும், வயல்வெளி காடாக எண்ணப்படுவதும் இல்லையோ? *ஏசா. ௩௨. ௰௫.

௰௮ அக்காலத்திலே *செவிடர் புஸ்தகத்தின் வசனங்களைக் கேட்பார்கள்; குருடரின் கண்கள் இருளுக்கும், அந்தகாரத்துக்கும் நீங்கலாகிப் பார்வையடையும்.
*மத். ௰௧. ௫.

௰௯ சிறுமையானவர்கள் கர்த்தருக்குள் மகிழ்ந்துகொண்டேயிருந்து மனுஷரில் ஏழைகள் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள்ளே களிகூருவார்கள்.

௨௰ ஏனெனில், பலவந்தன் அற்று, சக்கந்தக்காரன் இல்லாதேபோவான்.

௨௧ வசனத்திலே மனுஷனைப் பாவியாக்கி, *வாசலிலே தங்களைக் கடிந்துகொள்ளுகிறவனுக்குக் கண்ணியை வைத்து, நீதிமானை அந்தரத்திலே துரத்துகிற அக்கிரமச் செய்கையின் சுறுசுறுப்புக்காரர் அனைவரும் சங்கரிக்கப்படுவார்கள். *ஆமோ. ௫. ௰.

௨௨ ¶ ஆகையால், ஆபிரகாமை மீட்டுக் கொண்ட கர்த்தர் யாக்கோபின் வீட்டாருக்குச் சொல்லுகிறதாவது: இனி யாக்கோபு வெட்கப்படுவதில்லை; இனி அவன் முகம் செத்துப்போவதுமில்லை.

௨௩ ஏனெனில் நம்முடைய கரங்களின் செயலாகிய தன் பிள்ளைகளை அவன் தன் நடுவிலே காணும்பொழுது, நம்முடைய நாமத்தைப் பரிசுத்தம் ஆக்குவார்கள்; யாக்கோபின் பரிசுத்தரை அவர்கள் பரிசுத்தம் ஆக்கி இஸ்ரவேலின் பராபரனுக்குப் பயப்படுவார்கள்.

௨௪ மோசம்போன ஆவியாய் இருந்தவர்கள் உணர்வுள்ள அறிவை அடைந்து, முறுமுறுப்புக்காரர் உபதேசம் கற்றுக்கொள்ளுவார்கள்.

## ௩௰. அதிகாரம்.

பாவத்தின்மேலே பாவத்தைக் கூட்டும்படிக்கு நம்மை அல்லாமல் ஆலோசனை பண்ணி, நமது ஆவியை அல்லாமலே தங்களை மூடிக்கொள்ளப் பார்க்கிறவர்களும்,

௨ பார்வோனின் பலத்தினாலே பலக்கவும் எகிப்தினுடைய நிழலில் ஒதுங்கவும்வேண்டும் என்று நம்முடைய வாக்கைக் கேளாமல், எகிப்தில் இறங்கிப்போகிறவர்களுமாகிய *முரட்டாட்டமான பிள்ளைகளுக்கு ஐயோ! என்று கர்த்தர் சொல்லுகிறார்.

*ஏசா. ௧. ௨.

௩ ஏனெனில், உங்களுக்குப் பார்வோனுடைய பெலன் வெட்கமாகவும், எகிப்தினுடைய நிழலொதுக்கு இலச்சையாகவும் இருக்கும்.

௪ அவர்கள் பிரபுக்கள் சோவானிலே போய், அவர்கள் தானாபதிகள் ஆனேஸ்மட்டும் சேருகிறார்கள்.

௫ ஆனால் தங்களுக்குச் சகாயத்துக்கும் பிரயோசனத்துக்கும் அல்ல, வெட்கத்துக்கும் நிந்தைக்குமே உதவும் சனத்தினாலே அனைவரும் வெட்கப்படுவார்கள்.

௬ தெற்கே போகிற மிருகஜீவன்களின்நிமித்தம் சுமரும் பாரமாவது: துஷ்டசிங்கமும், கிழச்சிங்கமும், பறக்கிற காலகோடி விஷமும் வருகிறதும், நெருக்கமும் இடுக்கமும் அடைவிக்கிறதுமான தேசத்துக்கு, அவர்கள் கழுதை மறிகளுடைய முதுகின்மேல் தங்கள் ஆஸ்திகளையும், ஒட்டகங்களுடைய முதுகின்மேலே தங்கள் பொக்கிஷங்களையும், தங்களுக்கு உதவாத சனத்தண்டைக்கு ஏற்றிக்கொண்டுபோகிறார்கள்.

௭ ஏனெனில், எகிப்தியர் சகாயம்பண்ணுவது மாயையும் வீணுமாய் இருக்கும்; ஆகையால், *இராகாப்புடைய மனுஷர் சும்மா இருப்பார்களென்று அதற்காகக் கூறுகிறோம். *சங். அ௭. ௪: அ௯. ௰௧.

௮ ¶ இப்போதும், இது பிற்காலத்துக்கும் என்றென்றைக்கும் இருக்கும்படிக்கு, நீ போய், இதை அவர்களுக்குமுன்பாக ஒரு பலகையில் எழுதி, ஒரு புஸ்தகத்திலே வரை.

௯ ஏனெனில், இவர்கள் கலகமுள்ள சனமும், புளுகுகிற பிள்ளைகளும், கர்த்தருடைய வேதத்தைக் கேட்க மனதில்லாதபுத்திரருமாய் இருக்கிறார்கள்.

௰ அவர்கள் பார்க்கிறவர்களுடனே, நீங்கள் பார்க்கவேண்டாம் என்றும், ஞானதிருஷ்டியுள்ளவர்களுடனே, நீங்கள் எங்களுக்கு நிதானமான தரிசனமாய்த் தரிசனம் சொல்லாமல், எங்களுக்கு இதமான சொற்களை உலாத்து, எத்துவாதத்தமாய்த் திஷ்டியுங்கள் என்றும்,

௰௧ நீங்கள் வழியைவிட்டு, பாதையை விலகி, இஸ்ரவேலின் பரிசுத்தரை எங்கள் முன்பாக இராமல் ஓயப்பண்ணுங்கள் என்றும் சொல்லுகிறார்கள்.

௰௨ ஆனதுகொண்டு நீங்கள் இந்த வார்த்தையை வெறுத்து, இடுக்கமும் தாறுமாறும் செய்கிறதை நம்பி, அதைச் சார்ந்துகொள்ளுகிறபடியினாலே,

௰௩ இந்த அக்கிரமம் உங்களுக்கு, உயர்ந்த சுவரில் விழப் பிதுங்குகிறதும், அசுப்பாய் ஒரு நிமிஷத்தில் இடியப்போகிறதுமான வெடிப்பைப்போல இருக்கும் என்று இஸ்ரவேலின் பரிசுத்தர் சொல்லுகிறார்.

௰௪ அவர்களைத் தப்பவிடாமல், நொறுக்கப்பட்ட குயவர் பாண்டத்தினுடைய உடைதலுக்குச்சரியாய் அவர்களை உடைப்பார்; நொறுங்கின துண்டுகளில், அடுப்பிலே நெருப்பு எடுக்கிறதற்கு, அல்லது ஒரு பள்ளத்திலே தண்ணீர் மொள்ளுகிறதற்கு ஒரு ஓடாகிலும் அகப்படாதேபோம்.

௰௫ ஏனெனில் மனந்திரும்பி அமர்ந்து இருந்தீர்களானால் இரட்சிக்கப்படுவீர்கள்; அமரிக்கையிலும், நம்பிக்கையிலும் *உங்கள் பெலன் இருக்கும்என்று இஸ்ரவேலின் பரிசுத்தராய் இருக்கிற கர்த்தரான பராபரன் சொன்னார்; †ஆனால் நீங்கள் அப்படிச் செய்ய மனதாய் இராமல்,

*சங். ௩௭. ௫: ௨ கொரி. ௰௨. ௯, ௰. †மத். ௨௩. ௩௭.

௰௬ அப்படியல்ல, குதிரைகளின்மேல் ஏறி ஓடிப்போவோம் என்கிறீர்கள்; ஆனதுகொண்டு ஓடிப்போவீர்கள்; வேகமான வாகனங்களின்மேல் ஏறிப்போவோம் என்கிறீர்கள்; ஆனதுகொண்டு உங்களைத் துரத்துகிறவர்கள் வேகமாய் இருப்பார்கள்.

௰௭ *நீங்கள் உச்சிமலையின்மேல் ஒரு பாய்மரத்தைப்போலவும், மேட்டின்மேல் ஒரு கொடியைப்போலவும் மீந்து இருக்குமட்டாக †ஒருவனுடைய உதம்புதலினால் ஆயிரம்பேரும், ஐந்துபேருடைய உறுமுதலினால் அனைவரும் ஓடிப்போவீர்கள்.

*சங். ௰௭. ௯. †௫ மோ. ௩௨. ௩௰.

௰௮ ஆனால் உங்களுக்கு இரங்குவதற்காகத்தானே, கர்த்தர் காத்திருந்து உங்கள்மேல் மனது உருகுவதற்காகத்தானே உயருவார்; ஏனெனில் கர்த்தர் நியாயத்தின் பராபரனாய் இருக்கிறார்; *அவருக்குக் காத்திருக்கிற அனைவரும் பாக்கியவான்கள்.

*எரே. ௰௭. ௭.



௰௯ ¶ ஏனெனில், சீயோனிலும் எருசலேமிலும் சனம் வாசமாய் இருப்பதன்றி; அழுதுகொண்டே இராய்; உன் கூப்பிடுதலின் சத்தத்துக்கு அவர் உன்மேல் இரங்கவே இரங்கி, அதைக் கேட்டவுடனே, உனக்கு மறுஉத்தரவு கொடுப்பார்.

௨௰ ஏனெனில், ஆண்டவர் உங்களுக்கு நெருக்கத்தின் அப்பத்தையும், ஒடுக்கத்தின் தண்ணீரையும் கொடுத்திருக்கிறார்; ஆனால் இனி உன் போதகர்கள் பறந்துபோவதில்லை; உன் கண்கள் உன் போதகர்களைக் காண்கிறவைகளாய் இருக்கும்.

௨௧ ¶ நீங்கள் வலதுபுறமாக, அல்லது இடதுபுறமாக விலகும்போது, வழி இதுவே; இதிலே நடவுங்கள் என்று உனக்குப் பின்னாலே சொல்லும் வார்த்தையை உன் காதுகள் கேட்கும்.

௨௨ உன் வெள்ளிச் சுரூபங்களின் பூச்சையும், உன் பொன்வார்ப்பான உன் ஆட ஆபரணத்தையும் தீட்டாக எண்ணி, அவைகளைத் தீட்டானதைப்போலச் சிதற எறிந்து, அதைச் சீ! போ என்பாய்.

௨௩ அப்போது நீ நிலத்தில் விதைக்கும் உன் விதைக்கு அவர் மழையையும், நிலத்தின் பலனாகிய ஆகாரத்தையும் கொடுப்பார்; அது கொழுப்பும் புஷ்டியுமாய் இருக்கும்; அக்காலத்திலே உன் ஆடுமாடுகள் விஸ்தாரமான மேய்ச்சலுள்ள நிலத்திலே மேய்ந்து,

௨௪ நிலத்தை உழுகிற எருதுகளும் கழுதைமறிகளும், முறத்தாலும் தூற்றுக்கூடையாலும் புடைக்கப்பட்ட உருசியுள்ள கப்பிகளைத் தின்னும்.

௨௫ கோபுரங்கள் விழும் பெரிய கொலையின் நாளிலே, உயரமான சகல மலையின்மேலும், உயர்ச்சியான சகல மேட்டின்மேலும் ஆறுகளும், வாய்க்கால்களும் உண்டாய்,

௨௬ கர்த்தர் தமது சனத்தின் நொறுங்குதலைக் கட்டி, அதின் அடிக்காயத்தைக் குணமாக்

ரும் நாளிலே, சந்திரனுடைய வெளிச்சம் சூரியனுடைய வெளிச்சத்தைப்போலவும், சூரியனுடைய வெளிச்சம் ஏழத்தனையாய் ஏழு பகல்களின் வெளிச்சத்தைப்போலவும் இருக்கும்.

௨௭ ¶ இதோ கர்த்தருடைய நாமம் தூரத்திலிருந்து வரும்; அவருடைய கோபம் எரிகிறதும், பாரம் கனக்கிறதுமாய் இருக்கும்; அவருடைய உதடுகள் சினத்தால் நிறைந்தவைகள்; அவருடைய நாவு பட்சிக்கிற அக்கினியைப்போல இருக்கும்.

௨௮ மாயைக்கான சல்லடையிலே சாதிகளை அரிக்கும்படிக்கு அவர் ஊதும் சுவாசம் கழுத்துமட்டும் எட்டுகிற ஆற்றின் வெள்ளத்தைப்போலவும், சனசதளங்களுடைய தாடைகளிலே போட்டு, அலைவகளை அலைக்கழிக்கிற கடிவாளத்தைப்போலவும் இருக்கும்.

௨௯ பண்டிகை ஆசரிக்கப்படுகிற இராத்திரியிலே பாடுகிறதற்குச் சரியான பாட்டும், கர்த்தருடைய பருவதமாகிய இஸ்ரவேலின் கன்மலையண்டைக்குப்போக நாகசுரத்தோடே நடந்துவருகிறதற்குச் சரியான மனமகிழ்ச்சியும் உங்களுக்கு இருக்கும்.

௩௰ கர்த்தர் *தமது சத்தத்தின் பிரஸ்தாபத்தைக் கேட்கப்பண்ணி, கோபத்தின் சினத்தினாலும், பட்சிக்கிற அக்கினிச்சுவாலையினாலும் இடி, பெருவெள்ளம், கல்மழையினாலும் தமது புயத்தின் இறங்குதலைத் தெரிவிப்பார். *சங். ௨௯. ௩: ௭௬. ௯—௰௧.

௩௧ ஏனெனில், மிலாறினால் அடித்த அசூர் கர்த்தருடைய சத்தத்தினாலே நொறுங்குண்பான்.

௩௨ சம்பவிப்பது ஏதென்றால், உறுதிப்பெலனான கோலுக்கு விரோதமாக வலிய யுத்தங்களால் யுத்தம்பண்ணப்பட்டபிற்பாடு, அது கடந்துவந்த இடங்களில் எல்லாம் கர்த்தர் அவைகளுக்கு இளைப்பாறுதல் கொடுத்தபடியினாலே, மேளங்களாலும், சுரமண்டலங்களாலும் கொண்டாடப்படும்.

௩௩ ஏனெனில், அக்கினிப்பள்ளம் நேற்றே ஆயத்தமாய் இருக்கிறது; இராசாவுக்கும் அது சேகரமாய் இருக்கிறது; அதை ஆழமும் அகலமுமாக்கினார்; அதின் வேகுதலுக்கு அக்கினியும், விறகுகளும் மிகுதியாய் இருக்கின்றன; கர்த்தரின் சுவாசம் கந்தகத்தீயைப்போல அதைக் கொளுத்தும்.

## ௩௰௧. அதிகாரம்.

சகாயம் அடைய இஸ்ரவேலுடைய பரிசுத்தரைச் சார்ந்துகொள்ளாமலும், கர்த்தரைத் தேடாமலும், எகிப்துக்கு இறங்கிப்போய், குதிரைகளைச் சார்ந்து, இரதங்களை அவைகள் திரளானவையென்றும், இராவுத்தரை அவர்கள் மகா பலசாலிகள் என்றும் நம்பியிருக்கிறவர்களுக்கு ஐயோ!

௨ அவருமோ என்றால் ஞானமுள்ளவர்; அவர் தம்முடைய வார்த்தைகளை மறுக்காமல், தீங்கை வரப்பண்ணி, தீமைசெய்கிறவர்களின் வீட்டுக்கும், அக்கிரமக்காரரின் சகாயத்துக்கும் விரோதமாக எழும்புவார்.

௩ ஏனெனில், எகிப்தியர் தெய்வம் அல்ல, மனுஷர்தானே; அவர்களுடைய குதிரைகள் ஆவி அல்ல, மாம்சந்தானே; கர்த்தர் தமது கரத்தை நீட்டுவார்; அப்போது சகாயம் செய்கிறவனும் இடறி, சகாயம் செய்வித்துக்கொள்ளுகிறவனும் விழுந்து, அனைவரும் ஏகமாய் அழிந்துபோவார்கள்.

௪ ஏனென்றால், கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: சிங்கமும் சிங்கக்குட்டியும் தங்கள் இரையின்மேலே கர்ச்சித்து, தங்களுக்கு விரோதமாய்க் கூப்பிடுகிற திரளான மேய்ப்பரின் சத்தத்தினாலே கலங்காமலும், அவர்கள் அமளியினாலே தாழாமலும் இருக்கிறதுபோலே, *சேனைகளின் கர்த்தர் சீயோனின் பருவதத்துக்காகவும், அதின் மேட்டுக்காகவும் யுத்தம்பண்ண இறங்குவார். *௨ இரா. ௰௯. ௩௫.

௫ பறந்து காக்கிற பட்சிகளைப்போலே சேனைகளின் கர்த்தர் எருசலேமின்மேல் ஆதரவாக இருப்பார்; *அவர் அதைக் காப்

பார்த்துத் தப்பப்பண்ணுவார்; அவர் கடந்து வந்து அதை விடுவிப்பார்.
*௨ மோ. ௰௨. ௨—௰௩.

௬ ¶ இஸ்ரவேலின் புத்திரர் திரப்புரண்டு விட்டுவிட்ட அவரண்டைக்கு நீங்கள் திரும்புங்கள்.

௭ ஏனெனில் பாவமாக உங்கள் கைகள் உங்களுக்குச் செய்திருந்த தம்தம் வெள்ளி விக்கிரகங்களையும், தம்தம் பொன் விக்கிரகங்களையும் அவரவர் அக்காலத்திலே *வெறுப்பார்கள். *ஏசா. ௨. ௨௰: ௩௰. ௨௨.

௮ வீரனுடைய பட்டயம் அல்லாத பட்டயத்தாலே அசூர் விழுவான்; நீசனுடைய பட்டயம் அல்லாத பட்டயமே அவனைப் பட்சிக்கும்; அவன் பட்டயத்துக்குத் தப்ப ஓடுவான்; அவன் வாலிபர் கலக்குபோவார்கள்.

௯ அவர்களுடைய கன்மலை பயத்தினால் ஒழிந்துபோம்; அவர்களுடைய பிரபுக்கள் கொடியைக் கண்டு கலங்குவார்கள் என்கிறதை, சீயோனில் நெருப்பையும் எருசலேமில் அடுப்பையுமுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩௰௨. அதிகாரம்.

இதோ *நீதியாக ஒரு இராசா அரசாளுவார்; பிரபுக்களும் நியாயமாகத் துரைத்தனம்பண்ணுவார்கள். *சங். ௪௫. ௭, ௮. எரே. ௨௩. ௫: ௩௩. ௰௫, ௰௬. சகரி. ௯. ௯.

௨ அவர் *காற்றுக்கு ஒதுக்காகவும், பெருவெள்ளத்துக்கு மறைவிடமாகவும், வறண்ட நிலத்துக்கு வாய்க்கால்களாகவும், விடாய்த்த பூமிக்குப் பெருங்கன்மலையின் நிழலாகவும் இருப்பார். *ஏசா. ௨௫. ௪.

௩ அப்போது காண்கிறவர்களின் கண்கள் திரும்பிப்பார்ப்பதில்லை; கேட்கிறவர்களின் செவிகள் கவனித்தேயிருக்கும்.

௪ பதறுகிறவர்களின் இருதயம் அறிவு உண்டாக உணர்ந்து, தெற்றுவாயருடைய நாக்கு மகா தெளிவாய்ப் பேசத் தீவிரித்திருக்கும்.

௫ இனி மூடன் சற்குணன் என்னப்படுவதுமில்லை; பிசினித்தனக்காரன் உதாரன் என்று சொல்லப்படுவதுமில்லை.

௬ ஏனென்றால் மூடன் மாயம்பண்ணுவதற்கும், கர்த்தருக்கு விரோதமாய்த் தப்பிதம் பேசுவதற்கும், பசியுள்ள ஆத்துமாவை வெறுமையாக வைத்து, தாகமுள்ளவனுக்குத் தாகம் அடங்காதேபோகப்பண்ணுவதற்குமாகப் *பயித்தியத்தைப் பேசுகிறான்; அவன் இருதயம் அக்கிரமத்தை நடப்பிக்கும். *வாக். ௰௫. ௨.

௭ பிசினித்தனக்காரனுடைய எத்தனங்களும் பொல்லாதவைகள்; தரித்திரன் நியாயமாய்ப் பேசும்போது அவன் கள்ளவார்த்தைகளாலே சிறுமையானவர்களைக் கெடுப்பதற்காகத் தீவினைகளை யோசிக்கிறான்.

௮ சற்குணனோ சற்குணமானவைகளை யோசிக்கிறான்; சற்குணமானவைகளிலே நிலைத்தும் இருக்கிறான்.

௯ ¶ சுகசீவியாயிருக்கிற ஸ்திரீகளே, எழுந்திருந்து என் சத்தத்தைக் கேளுங்கள்; நிர்விசாரமான குமாரத்திகளே, என் வசனத்துக்குச் செவிகொடுங்கள்.

௰ நிர்விசாரிகளே, வருஷத்துக்கு அதிகமான நாள்களாய்த் தத்தளிப்பீர்கள்; ஏனெனில் திராட்சம் பலன் அற்றுப்போய், அறுப்பு வராதேபோம்.

௰௧ சுகசீவிகளே, நடுங்குங்கள்; நிர்விசாரிகளே, தத்தளியுங்கள்; உடையைக் களைந்து உரிந்துபோட்டு அரையில் இரட்டைக் கட்டிக்கொள்ளுங்கள்.

௰௨ விருப்பமான வயல்களினிமித்தமும், கனிதந்திருந்த திராட்சச்செடிகளினிமித்தமும் மார்படித்துப் புலம்புவார்கள்.

௰௩ என் சனத்தினுடைய பூமியின்மேலும், களிகூர்ந்திருந்த பட்டணத்தினுடைய எல்லாச் சந்தோஷவீடுகளின்மேலும்கூட, முள்ளுச்செடியும் முள்ளுக்காடும் முளைக்கும்.

௰௪ ஏனெனில் அரமனை பாழாய்விடப்

பட்டு, ஊரின் சந்தடி விட்டுப்போய், மேடும், துருக்கமும், என்றைக்கும் காட்டுக்கழுதைகளின் சந்தோஷமும், மந்தைகளின் மேய்ச்சலுமான குகைகளாய் இருக்கும்.

௰௫ *நம்முடையமேல் உன்னதத்திலிருந்து ஆவி ஊற்றப்படுமட்டுந்தானே; அப்போது †வனாந்தரம் பயிர்நிலமாகி, பயிர்நிலம் காடாக எண்ணப்படும். *ஏசே. ௩௯. ௨௯. †யோவா. ௩. ௧.

௰௬ வனாந்தரத்திலே நியாயம் வாசமாய் இருந்து, பயிர்நிலத்திலே நீதி தங்கித்தரிக்கும்.

௰௭ நீதியின் செய்கை சமாதானமும், நீதியின் பலன் நித்தியகாலமாய் அமரிக்கையும், சுகமுமாய் இருக்கும்.

௰௮ என் சனம் சமாதான தாபரத்திலும், பத்திராசஸ்தலங்களிலும், சாங்கோபாங்கமாய்த் தங்கும் இடங்களிலும் குடியிருக்கும்.

௰௯ ஆனால் காட்டிடங்களிலே கல்மழை பெய்யும் அந்தப் பட்டணம் மகா தாழ்வாய்த் தாழ்ந்துபோம்.

௨௰ தண்ணீர்களுடைய ஓரங்களில் எங்கும் மாடுகளையும், கழுதைகளையும் போக விட்டு விதைவிதைக்கிற நீங்கள் பாக்கியவான்கள்.

## ௩௩. அதிகாரம்.

பாழ்க்கடிக்கப்படாதிருந்தும் பாழ்க்கடிக்கிறவனும், உனக்குத் துரோகம்பண்ணாதிருக்கிறவர்களுக்குத் துரோகம்பண்ணுகிறவனுமாகிய உனக்கு ஐயோ! நீ பாழ்க்கடித்து முடிந்தபின்பு *பாழ்க்கடிக்கப்படுவாய்; நீ துரோகம்பண்ணித் தீர்ந்தபின்பு †உனக்குத் துரோகம்பண்ணுவார்கள். *ஏசா. ௩௭. ௩௬. †ஏசா. ௩௭. ௩௮.

௨ ¶ கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும்; உமக்குக் காத்திருக்கிறோம்; தேவரீர் காலையில் அவர்கள் புயமும், இக்கட்டுக்காலத்தில் எங்கள் இரட்சிப்புமாய் இரும்.

௩ அமளியின் சத்தத்தினாலே சனசதளங்கள் அலைந்தோடி, *நீர் உயருகிறதினாலே சாதிகள் சிதற அடிக்கப்படுகிறார்கள். *சங். ௬௮. ௨.

௪ ¶ பச்சைக்கிளிகள் சேர்க்குமாப்போலே உங்கள் கொள்ளை சேர்க்கப்படும்; வெட்டுக்கிளிகள் குதித்துத் திரியுமாப்போலே அதின்மேலே குதித்துத் திரிவதுண்டு.

௫ கர்த்தர் உயர்ந்தவர்; ஏனெனில் உன்னதத்தில் வாசமாய் இருக்கிறார்; சீயோனை நியாயத்தினாலும், நீதியினாலும் நிரப்புகிறார்.

௬ பலத்த இரட்சிப்புகளும், ஞானமும், அறிவும், உன் காலங்களுடைய உறுதியாய் இருக்கும்; கர்த்தருக்குப் பயப்படுதலே அதின் பொக்கிஷம்.

௭ ¶ இதோ அவர்கள் தானாபதிகள் வெளியிலே அலறுகிறார்கள்; சமாதானத்துக்கு அனுப்பப்பட்டவர்கள் மனங்கசந்து அழுகிறார்கள்.

௮ பாதைகள் பாழாயின; வழிகளில் நடப்பு ஓய்ந்தது; உடம்படிக்கையை அவத்தமாக்குகிறான்; ஊர்களை இகழ்ச்சிபண்ணுகிறான்; மனுஷனை எண்ணாதேபோகிறான்.

௯ பூமி துக்கித்து விடாய்த்திருக்கிறது; லீபனோன் வெட்கி வாடுகிறது; சாரோன் வனாந்தரத்துக்கு ஒப்பாகிறது; பாசானும், கர்மேலும் பாழ்க்கடிக்கப்படுகிறது.

௰ ¶ இப்போது எழுந்திருப்போம்; இப்போது உயர்வோம்; இப்போது உயர எழும்புவோம் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ *செத்தையைக் கர்ப்பம்தரித்துத் தாளடியைப் பெறுவீர்கள்; உங்கள் ஆவி அக்கினியைப்போல உங்களையே பட்சிக்கும். *சங். ௭. ௰௪.

௰௨ உன் சனசதளங்கள் சுண்ணாம்பு சுடப்படுகிறதற்கு ஒப்பாகி, வெட்டுண்ட முள்ளுச்செடிகளைப்போலே தீயில் எரிக்கப்படுவார்கள்.

௰௩ ¶ தூரத்தாரே, நாம் செய்கிறதைக் கே

றுங்கள்: சமீபத்தாரே, நமது பராக்கிரமத்தை அறியுங்கள் என்கிறார்.

௰௪ சீயோனில் இருக்கிற பாவிகள் திகைக்கிறார்கள்; மாயக்காரரை நடுக்கம் பிடிக்கிறது. நம்மில் பட்சிக்கும் அக்கினிக்கு முன்பாகத் தரித்திருப்பவன் யாவன்? நம்மில் நித்தியதழலுக்கு முன்பாகத் தாபரிப்பவன் யாவன்? என்கிறார்கள்.

௰௫ ¶ *நீதியாய் நடந்து, செம்மையானவைகளைப்பேசி, இடுக்கண்செய்தலின் ஆதாயத்தை வெறுத்து, பரிதானங்களைப்பிடிக்காதபடிக்குத் தன் கைகளை உதறி, இரத்த யோசனைகளைக் கேளாதபடிக்குத் தன் செவியை அடைத்து, பொல்லாப்பைக் காணாதபடிக்குத் தன் கண்களை மூடுகிறானே.
*சங். ௰௫. ௨. ஞ: ௨௪. ௪. ௫. ஞ. மத். ௫. ௫-௮.

௰௬ அவன் உயரங்களில் வாசம்பண்ணுவான்; கல்மலைகளின் அரண்கள் அவனுடைய உயர்ந்த அடைக்கலம்; அவன் அப்பம் அவனுக்குக் கொடுக்கப்படும்; அவன் தண்ணீர் அவனுக்கு நிசமாய் இருக்கும்.

௰௭ உன் கண்கள் இராசாவை *அவருடைய சவுந்தரியத்திலே கண்டு, தேசத்தைத் தூர எல்லைகளுள்ளது என்று பார்க்கும். *சங். ௪௫. ௩, ௪.

௰௮ ¶ வேதபாரகன் எங்கே? *நிறுத்துப் பார்த்தவன் எங்கே? கோபுரங்களை எண்ணினவன் எங்கே? என்று உன் இருதயம் திகைப்புடன் தியானிக்கும்.
*௧ கொரி. ௧. ௨௰.

௰௯ கேட்கக்கூடாதபடிக்கு அடக்கமான உதடும், உணரக்கூடாதபடிக்கு ஒருவிதமான நாவுமுள்ள ஓட்டாரமான சனத்தை இனிக் காணாய்.

௨௰ *நம்முடைய ஆசரிப்பின் பட்டணமாகிய சீயோனை நோக்கிப்பார்; உன் கண்கள் எருசலேமை அமரிக்கையான தாபரமாகவும், பேர்க்கப்படாத கூடாரமாகவும் காணும்; இனி அதின் கூர்ச்சுகள் என்றைக்கும் பிடுங்கப்படுவதும் இல்லை; அதின் கயிறுகளில் ஒன்றும் அறுந்துபோவதும் இல்லை.
*சங். ௱௨௨. ௩-௭. வெளி. ௨௧. ௩.

௨௧ ஏனென்றால் அங்கே கர்த்தர் நமக்கு மகிமையுள்ளவராய் இருப்பார்; அது மகா அகலமான நதிகளும், ஆறுகளுமுள்ள தலமாய் இருக்கும்; வலிக்கிற படவு அங்கே ஓடுவதும் இல்லை; பெரியகப்பல் அங்கே கடந்துவருவதும் இல்லை.

௨௨ ஏனெனில் *கர்த்தர் நம்முடைய நியாயாதிபதியும், கர்த்தர் நம்முடைய நியாயநெறியாளனும், கர்த்தர் நம்முடைய இராசாவுமானவர்; அவர் நம்மை இரட்சிப்பார்.
*உரோ. ௮. ௩௩, ௩௪.

௨௩ ¶ உன் கயிறுகள் தளர்ந்துபோம்; அப்படியே அவைகள் தங்கள் பாய்மரத்தைக் கெட்டிப்படுத்தவும், பாயை விரிக்கவுமாட்டாது; அப்போது திரளான கொள்ளையுடைமை பங்கிடப்படும்; சப்பாணிகள் முதலாய்க் கொள்ளையாடுவார்கள்.

௨௪ வியாதிப்பட்டு இருக்கிறேன் என்று குடியானவன் ஒருவனும் சொல்வதில்லை; அதில் வாசமாய் இருக்கிற சனத்தின் அக்கிரமம் மன்னிக்கப்பட்டிருக்கும்.

## ௩௰௪. அதிகாரம்.

சாதிகளே, கேட்கிறதற்குக் கிட்டிவாருங்கள்; சனசதளங்களே, கவனியுங்கள்; பூமியும் அதின் நிறைவும், பூச்சக்கரமும் அதினுடைய எல்லாப்பிறப்பும் கேட்கக்கடவது.

௨ ஏனெனில் கர்த்தருக்கு எல்லாச் சாதிகளின்மேலும் *கடுங்கோபமும், அவைகளுடைய †எல்லாச் சேனையின்மேலும் உக்கிரமும் இருக்கின்றது; அவைகளைச் சங்காரத்துக்கு நியமித்து, கொலைக்கு ஒப்புக்கொடுக்கிறார். *வெளி. ௯. ௰௭. †வெளி. ௰௯. ௰௯.

௩ அவர்களிலே கொலைசெய்யப்பட்டவர்கள் எறியுண்டு கிடப்பார்கள்; அவர்கள் பிரேதங்களுடைய நாற்றம் கிளம்பிப்போம்; அவர்கள் *இரத்தத்தினாலே மலைகள் கரையும். *வெளி. ௰௪. ௨௰.

௪ *வானத்தின் சேனையெல்லாம் வாடி, வானங்கள் புஸ்தகச்சுருளைப்போலச் சுருட்டப்பட்டு, அவைகளின் சேனையெல்லாம் இலைகள் திராட்சச்செடியிலிருந்து உதிருமாப்போலவும், அத்திமரத்தின் காய்கள் உதிருமாப்போலவும் உதிர்ந்துவிழும். *வெளி. ௬. ௰௩. ௴.

௫ ஏனெனில், வானங்களில் நம்முடைய பட்டயம் வெறித்தது; இதோ, *ஏதோமின்மேலும், நாம் சங்காரத்துக்கு நியமித்த சனத்தின்மேலும், அது நியாயஞ்செய்ய இறங்கும். *ஏசா. ௬௩. ௧. ௴.

௬ கர்த்தருடைய பட்டயம் இரத்தத்தால் நிறைந்தது, ஆட்டுக்குட்டிகள் கடாக்களுடைய இரத்தத்தின் கொழுப்பினாலும், ஆட்டுக்கடாக்களுடைய குண்டிக்காய்களின் கொழுப்பினாலும் நிணத்ததுமாம்; ஏனெனில், போத்சறாவிலே கர்த்தருக்குப் பலியிடுதலும், ஏதோம் தேசத்திலே பெரிய கொலைசெய்தலும் உண்டு.

௭ அப்போது அவைகளோடேகூடக் காண்டாமிருகங்களும், வலுவான எருதுகளோடேகூடக் காளைகளும் இறங்கிமடியும்; அவர்கள் தேசம் இரத்தப்பாய்ச்சலாகி, அவர்கள் மண் நிணத்தினாலே கொழுக்கும்.

௮ ஏனெனில் சீயோனுடைய வழக்கின் நிமித்தம் அது கர்த்தர் *நீதியைச் சரிக்கட்டுகிற நாளும், பதிலுக்குக் கொடுக்கிற வருஷமுமாய் இருக்கும். *ஏசா. ௬௩. ௪. சங். ௱௪௯. ௭. ௴. எரே. ௫௧. ௬.

௯ *அதின் ஆறுகள் பிசினாகவும், அதின் மண் கந்தகமாகவும் மாறி, அதின் நிலம் எரிகிற கிசிலாய்ப்போம். *ஏசா. ௰௩. ௰௯.

௰ இரவும்பகலும் அது அவியாது; *அதின் புகை என்றென்றைக்கும் எழும்பும்; தலைமுறைதலைமுறையாக அது பாழாய் இருக்கும்; சதாகாலம் சதாகாலமாக அதை யாரும் கடந்துபோவதில்லை. *வெளி. ௰௪. ௰௧; ௰௯. ௩.

௰௧ *நாரையும் முள்ளம்பன்றியும் அதைச் சுதந்தரிக்கும்; ஆந்தையும் காக்கையும் அதிலே குடியிருக்கும்; அதின்மேல் வெட்டவெளியின் நூலையும், வெறுமையின் தூக்கையும் பிடிப்பார். *ஏசா. ௰௩. ௨௧, ௨௨. செப். ௨. ௰௪, ௰௫. வெளி. ௰௮. ௨.

௰௨ அதின் மேற்குலத்தாரை இராச்சியபாரத்துக்கு அழைத்தால், அங்கே அவர்களில் யாரும் இல்லை; அதின் பிரபுக்கள் அனைவரும் ஒன்றும் இல்லை.

௰௩ அதின் அரமனைகளில் முள்ளுச்செடிகளும், அதின் கோட்டைகளிலே காஞ்சொறிகளும், முள்ளுப்பூண்டுகளும் முளைக்கும்; அது வலுசர்ப்பங்களின் தாபரமும், கோட்டான்களின் கொல்லையுமாய் இருக்கும்.

௰௪ அங்கே வனாந்தர சீவன்களும் ஓரிகளும் ஒன்றுக்கொன்று சந்தித்து, பேயைப் பேய் கூப்பிடும்; அங்கே இராக்குருவிகளும் தங்கி, தங்கள் தாவைக் கண்டடையும்.

௰௫ அங்கே வல்லூறு கூடுகட்டி, முட்டையிட்டு, குஞ்சுபொரித்து, தன் நிழலிலே கூட்டிக்கொள்ளும்; அங்கே கூளிகளும் சோடுசோடாகச் சேரும்.

௰௬ ¶ கர்த்தருடைய புஸ்தகத்திலே தேடி வாசியுங்கள்; இவைகளில் ஒன்றும் குறையாதிருப்பதில்லை; இதுவும் அதுவும் காணாதிருப்பதில்லை; ஏனெனில், அவர் தமது வாயினாலே அதைக் கற்பித்தார்; அவருடைய ஆவியே அவைகளைச் சேர்க்கும்.

௰௭ அவரே அவைகளுக்குச் சீட்டுபோடுகிறார்; அவருடைய கையே அதை அவைகளுக்கு அளவுநூலாய்ப் பகிர்ந்துகொடுக்கும்; அவைகள் என்றைக்கும் அதைச் சுதந்தரித்துத் தலைமுறை தலைமுறையாக அதிலே சஞ்சரித்து இருக்கும்.

## ௩௫. அதிகாரம்.

வனாந்தரமும் வறண்ட பூமியும் மகிழ்ந்து, கடுவெளி களித்து, புஷ்பத்தைப்போலே செழிக்கும்.

௨ அது செழிக்கவே செழிப்பதுமல்லா

மல் பூரிப்பும், கெம்பீரமுமாய்க் களிக்கும்; *லீபனோனின் மகிமையும், கர்மேல், சாரோன் என்றவைகளின் அலங்காரமும் அதற்குக் கொடுக்கப்படும்; அவர்கள் கர்த்தருடைய மகிமையையும், நமது பராபரனுடைய முக்கியத்தையும் காண்பார்கள்.
*ஏசா. ௬௰. ௰௩. யோவா. ௧. ௰௪.

௩ *தெகிழ்ந்த கைகளைத் திடப்படுத்தி, தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்துங்கள். *எபி. ௰௨. ௰௨.

௪ மனங்கலங்கினவர்களுடனே: நீங்கள் பயப்படாதிருங்கள்; திடன்கொள்ளுங்கள்; இதோ, உங்கள் பராபரன் நீதியைச் சரிக்கட்டவும், பராபரன் பதிலுக்குக் கொடுக்கவும் வருவார்; அவர் வந்து உங்களை இரட்சிப்பார் என்று சொல்லுங்கள்.

௫ அப்போது *குருடரின் கண்கள் திறக்கப்பட்டு, செவிடரின் செவிகள் திறவுண்டுபோகும். *ஏசா. ௨௯. ௭: ௩௨. ௰௮: ௪௨, ௭: ௪௨. ௬, ௭. மத். ௰௧. ௫.

௬ அப்போது சப்பாணி மானைப்போலக் குதிப்பான்; ஊமையன் நாவும் கெம்பீரிக்கும்; ஏனெனில், வனாந்தரத்திலே *தண்ணீர்களும், கடுவெளியிலே ஆறுகளும் பிரிந்து ஓடும். *யோவா. ௭. ௩௮, ௩௯.

௭ வெட்டாந்தரை தண்ணீர்த்தடாகமும், வறண்டதலம் நீரூற்றுகளுமாகும்; வலிய சர்ப்பங்கள் தாபரித்துக் கிடந்த இடங்களிலே புல்லும், கொறுக்கைகளும், நாணலும் உண்டாயிருக்கும்.

௮ அங்கே *உயர்ந்த பாதையும் வழியும் இருக்கும்; அது பரிசுத்தவழி என்னப்படும்; தீட்டுள்ளவன் அதிலே நடந்துவருவதில்லை; யார் அந்த வழிகளிலே நடக்கிறார்களோ அவர்கள் புத்தியீனராய் இருந்தாலும் திசைகெட்டுப்போவதில்லை.
*யோவா. ௰௪. ௬.

௯ அங்கே சிங்கம் இல்லை; துஷ்டமிருகம் அதில் ஏறுவதும் இல்லை; அங்கே காணப்படுவதும் இல்லை; மீட்கப்பட்டவர்களே அங்கே நடப்பார்கள்.

௰ *கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கெம்பீரத்தோடே சீயோனுக்கு வருவார்கள்; நித்தியமகிழ்ச்சி அவர்கள் தலையின்மேல் இருக்கும்; †சந்தோஷமும் மகிழ்ச்சியும் அவர்களைத் தொடர்ந்துபிடிக்கும்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம். *ஏசா. ௫௧. ௰௧: ௬௨. ௰௨. †ஏசா. ௬௫. ௰௯. வெளி. ௨௧. ௪.

## ௩௰௬. அதிகாரம்.

ஏசேக்கியா இராசாவின் பதினாலாம் வருஷத்திலே சம்பவித்தது ஏதென்றால், *அசீரியாவின் இராசாவாகிய சன்கேரிப் யூதாவில் இருக்கிற அரணான சகல பட்டணங்களுக்கும் விரோதமாய் வந்தேறி, அவைகளைப் பிடித்தான். *௨ இரா. ௰௮. ௰௩. ௵.

௨ அப்போது அசீரியாவின் இராசா இலாகீசிலிருந்து இரப்சாக்கேயை கன இராணுவத்தோடே எருசலேமுக்கு ஏசேக்கியா இராசாவண்டைக்கு அனுப்பினான்; அவன் வண்ணார்துறையின் வழியிலுள்ள மேல்குளத்து மதகு அண்டையிலே நின்றான்.

௩ அப்போது *இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கீம் என்ற அரமனை விசாரிப்புக்காரனும், செப்னா என்ற சம்பிரதியும், ஆசாப்பின் குமாரனாகிய யோவாகென்ற கணக்கனும் அவன் அண்டையிலே புறப்பட்டுப்போனார்கள். *ஏசா. ௨௨. ௨௰, ௨௧.

௪ ¶ இரப்சாக்கே அவர்களோடே சொன்னதாவது: அசீரியாவின் இராசாவாகிய பெரிய அரசனானவர் உரைக்கிறதும், நீங்கள் ஏசேக்கியாவுக்குச் சொல்லவேண்டியதும் ஏதெனில், நீ நம்பியிருக்கிற இந்த நம்பிக்கை ஏது?

௫ இது உதடுகளின் வசனிப்புமாத்திரந்தான் என்கிறேன்; யுத்தத்துக்கு யோசனையும் பெலனும் வேண்டுமே; இப்போதும் என்னைவிட்டுப் புரண்டு விழுந்ததற்கு நீ யாரை நம்பியிருக்கிறாய்?

௬ இதோ, எகிப்தென்கிற அந்த முறிக்கப்பட்ட நாணல்கோலை நம்புகிறாய்; அதின்மேல் ஒருவன் சாய்ந்தால், அது அவன் உள்ளங்கையிலே பட்டு உருவிப்போம்; அப்படி எகிப்தின் இராசாவாகிய பார்வோன் தன்னை நம்புகிற யாவருக்கும் இருக்கிறான்.

௭ நீ என்னுடனே, எங்கள் பராபரனாகிய கர்த்தரை நம்புகிறோம் என்றாயேயாகில், அவருடைய மேடைகளையும், அவருடைய பலிபீடங்களையும் அல்லவோ எசேக்கியா தள்ளிவிட்டு, யூதாவோடேயும், எருசலேமியரோடேயும் இந்தப் பலிபீடத்தின்முன் பணியுங்கள் என்றானே.

௮ இப்போதும் உனக்கு இரண்டாயிரம் குதிரைகளைக் கொடுப்பேன்; நீ அவைகள் மேல் ஏறத்தக்கவர்களை உனக்குச் சம்பாதிக்கமாட்டுவாயோ என்று அசூரியாவின் இராசாவாகிய என் ஆண்டவனோடே நீ சபதம் கூறு.

௯ பின்னை எப்படி நீ என் ஆண்டவனுடைய ஊழியக்காரரில் ஒரே ஒரு தலைவனுடைய முகத்தைத் திருப்புவாய்? இரதங்களும், குதிரைக்காரரும் வருவார்கள் என்று எகிப்தியனையோ நம்பிக்கொள்ளுகிறாய்?

௰ இப்போதும் கர்த்தரை அல்லாமல் இந்தத் தேசத்தின்மேலே அதை அழிக்கவந்து எதிரேனோ? இந்தத் தேசத்தின்மேலே போயேறி, அதை அழி என்று கர்த்தர் என்னோடே சொன்னார் என்று சொன்னான்.

௰௧ ¶ அப்போது எலியாக்கீமும், செப்னாவும், யோவாக்கும், இரப்சாக்கேயுடனே, உம்முடைய ஊழியக்காரரோடே சூரியபாஷையிலே பேசுமே; அதை நாங்கள் அறிந்தவர்கள்; அலங்கத்தில் இருக்கிற சனத்தின் செவிகளிலே பட எங்களோடே யூதபாஷையிலே பேசிராக என்றார்கள்.

௰௨ இரப்சாக்கேயோ என்றால், உங்களோடேகூடத் தங்கள் கஷ்டத்தைத் தின்னவும், தங்கள் நீரைக் குடிக்கவும், அலங்கத்திலே தங்கி இருக்கிற புருஷரண்டைக்கே அல்லாமல் உன் ஆண்டவன் அண்டைக்கும், உன் அண்டைக்கும், என் ஆண்டவன் என்னை இந்த வார்த்தைகளைப் பேச அனுப்பினாரோ என்று சொல்லி,

௰௩ இரப்சாக்கே நின்றுகொண்டு, யூதபாஷையிலே மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னதாவது: அசூரியாவின் இராசாவாகிய பெரிய அரசனுடைய வார்த்தைகளைக் கேளுங்கள்.

௰௪ எசேக்கியா உங்களை எத்தவொட்டாதிருங்கள்; ஏனெனில், உங்களைத் தப்புவிக்கமாட்டான்.

௰௫ கர்த்தர் நம்மைத் தப்பவே தப்பப்பண்ணுவார்; இந்தப்பட்டணம் அசூரியா இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை என்று எசேக்கியா உங்களைக் கர்த்தரை நம்பப்பண்ண ஒட்டாதிருங்கள் என்று இராசா சொல்லுகிறார்.

௰௬ ¶ எசேக்கியாவின் சொல்லைக் கேளாதிருங்கள்; ஏனெனில், அசூரியாவின் இராசா உரைக்கிறதாவது: நீங்கள் நம்மோடே இராசியாகி, நம்மண்டையிலே புறப்பட்டு,

௰௭ நாம் வந்து, உங்களை உங்கள் தேசத்தைப்போல இருக்கிற தானியமும், திராட்சப்பழஇரசமுமுள்ள தேசமும், அப்பமும் திராட்சத்தோட்டங்களுமுள்ள தேசமுமாகிய சீமையிலே அழைத்துக்கொண்டுபோகுமளவும், அவர்அவர் தம் திராட்சச்செடியின் கனியையும், தம் அத்திமரத்தின் கனியையும் புசித்து, அவர்அவர் தம் கிணற்றின் தண்ணீரைக் குடியுங்கள்.

௰௮ கர்த்தர் நம்மைத் தப்புவிப்பார் என்று எசேக்கியா உங்களை மோசம்போக்கவேண்டாம்; *சாதிகளுடைய தேவர்களில் அவர் அவர் தங்கள் தேசத்தை அசூரியா இராசாவின் கைக்குத் தப்புவித்தது உண்டோ?

*எசா. ௰. ௮; ௰௧. ௯; ௰௨. ௰௩.

௰௯ அமாத், அர்பாத் பட்டணங்களின் தேவர்கள் எங்கே? செப்பர்வாயீமின் தேவர்கள் எங்கே? சமாரியாவை நமது கைக்

ருத்தப்புவிப்பார் உண்டாயிருந்தார்களோ?

௨௰ கர்த்தர் எருசலேமை நம்முடைய கைக்குத் தப்புவிப்பார் என்னத்தக்கதாக, இந்தத் தேசங்களுடைய எல்லாத் தேவர்களிலும் தங்கள் தேசத்தை நம்முடைய கைக்குத் தப்புவித்தவர் யார் என்கிறான் என்று சொன்னார்.

௨௧ ஆனால் அவர்கள் அவனுக்கு ஒரு வார்த்தையையும் பிரதியுத்தரமாகச் சொல்லாமல் மவுனமாய் இருந்தார்கள்; ஏனெனில் மறுஉத்தரவு சொல்லாதிருங்கள் என்பது இராசாவின் கட்டளையாய் இருந்தது.

௨௨ ¶ அப்போது இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கீம் என்ற அரமனை விசாரிப்புக்காரனும், செப்னா என்ற சம்பிரதியும், ஆசாப்பின் குமாரனாகிய யோவாகென்ற கணக்கனும், வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டவர்களாய் எசேக்கியா அண்டைக்குவந்து, அவனுக்கு மறுஉத்தரவாக இரப்சாக்கேயின் வார்த்தைகளை அறிவித்தார்கள்.

## ௩௰௭. அதிகாரம்.

இராசாவாகிய *எசேக்கியா இதைக்கேட்டபோது சம்பவித்தது ஏதென்றால், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்து, இரட்டு உடுத்துக்கொண்டு, கர்த்தருடைய வீட்டுக்குள்ளே பிரவேசித்து,

*௨ இரா. ௰௯. ௧. மு.

௨ ¶ அரமனை விசாரிப்புக்காரனாகிய எலியாக்கீமையும், சம்பிரதியாகிய செப்னாவையும், ஆசாரியர்களுடைய மூப்பர்களையும் ஆமோத்சின் குமாரனாகிய எசாயா என்ற தீர்க்கதரிசி அண்டைக்கு இரட்டு உடுத்தவர்களாக அனுப்பினான்.

௩ அவர்கள் அவனுடனே: இந்தநாள் நெருக்கமும், சிறுமாறும், தூஷணமும் அநுபவிக்கிற நாளாமே; ஏனெனில், பிள்ளைகள் பேறுநோக்கச் சமீபித்தன; ஆனால் பெறப் பெலன் இல்லை.

௪ சீவனுள்ள பராபரனை நிந்திக்கவும், உன் பராபரனாகிய கர்த்தர் கேட்டிருக்கிற வார்த்தைகளாலே சிறுமைபண்ணவும், அசூரியாவின் இராசாவாகிய தன் ஆண்டவனால் அனுப்பப்பட்ட இரப்சாக்கே சொன்ன வார்த்தைகளை உன் பராபரனாகிய கர்த்தர் கேட்பாராக்கும்; ஆகையால், இன்னும் மீதியாய் வைக்கப்பட்டவர்களுக்காக விண்ணப்பம் செய்வாயாக என்று எசேக்கியா சொல்லச்சொன்னார் என்று,

௫ ¶ எசேக்கியா இராசாவின் ஊழியக்காரர் எசாயா அண்டையிலே வந்து சொன்னார்கள்.

௬ அப்போது எசாயா அவர்களுடனே, அசூரியாவுடைய இராசவின் ஊழியக்காரர் நம்மைத் தூஷணித்ததும் நீ கேட்டதுமான வார்த்தைகளினாலே பயப்படாதே.

௭ இதோ, அவன் ஒரு செய்தியைக்கேட்டு, தன் தேசத்துக்குத் திரும்புவதற்கான ஆவியை நாம் அவனுக்குள்ளே கொடுத்து, அவனை அவனுடைய தேசத்திலே பட்டயத்தால் விழுந்துபோகப் பண்ணுவோம் என்று கர்த்தர் உரைக்கிறார் என்கிறதை உங்கள் ஆண்டவனோடே சொல்லுங்கள் என்றான்.

௮ ¶ இரப்சாக்கே திரும்பிப்போய், அசூரியாவின் இராசா இலாகீசைவிட்டுப் புறப்பட்டான் என்று கேட்டு, அவன் லிப்னாவுக்கு விரோதமாக யுத்தம்பண்ணக் கண்டான்.

௯ ஆனால் எத்தியோப்பியாவின் இராசாவாகிய திர்ஹாக்கா உம்மோடு யுத்தம்பண்ணப் புறப்பட்டான் என்று செய்தியைக் கேட்டான்; அதைக் கேட்டபோது அவன் எசேக்கியா அண்டைக்குத் தானுபதிகளை அனுப்பிச் சொன்னதாவது:

௰ நீங்கள் யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவுக்குச் சொல்லவேண்டியது ஏதெனில், எருசலேம் அசூரியாவுடைய இராசாவின்கையில் ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை என்று நீ நம்பியிருக்கிற உன் தேவன் உன்னை எத்தவொட்டாதே.

௧௧ இதோ, அசூரியாவின் இராசாக்கள் எல்லாத் தேசங்களுக்கும், அவைகளைச் சங்கரிக்கும்படிக்குச் செய்ததை நீ கேட்டாயே; நீ தப்புவாயோ?

௧௨ என் பிதாக்கள் அழித்துவிட்ட கோசானும், ஆரானும், ரேத்சேப்பும், தேலாசாரில் இருந்த ஏதேனின் புத்திரருமென்ற சாதிகளை அவர்களுடைய தேவர்கள் தப்புவித்ததுண்டோ?

௧௩ ஆமாத்தின் இராசாவும், அர்பாத்தின் இராசாவும், செப்பர்வாயீம், ஏனா, இவா, பட்டணங்களின் இராசாவும் எங்கே என்று சொல்லுங்கள் என்றான்.

௧௪ ¶ ஏசேக்கியா தாலுபதிகளின் கையிலே நிருபங்களை வாங்கி அவைகளை வாசித்தான்; பிற்பாடு ஏசேக்கியா கர்த்தருடைய வீட்டுக்குப் போயேறி அவைகளைக் கர்த்தருக்குமுன்பாக விரித்து,

௧௫ கர்த்தரைநோக்கிப் பண்ணின விண்ணப்பமாவது:

௧௬ சேனைகளின் கர்த்தாவே, கேருபீன்களின்மேல் வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின் பராபரனே, தேவரீர் ஒருவரே பூமியின் இராச்சியங்களுக்கு எல்லாம் தெய்வமானவர்; தேவரீர் வானத்தையும் பூமியையும் உண்டாக்கினீர்.

௧௭ கர்த்தாவே, உமது செவியைச் சாய்த்துக்கேளும்; கர்த்தாவே, நீர் உம்முடைய கண்களைத் திறந்துபார்த்து, சன்கேரிப் சீவனுள்ள பராபரனை நிந்திக்கும்படிக்கு அனுப்பின எல்லா வார்த்தைகளையும் கேளும்.

௧௮ மெய்தான், கர்த்தாவே, அசூரியாவின் இராசாக்கள் எல்லாத் தேசங்களையும், அவைகளின் நாட்டையும் பாழ்க்கடித்து,

௧௯ அவைகளின் தேவர்களை நெருப்பிலே போட்டார்கள்; ஏனெனில், அவைகள் தேவர்களாய் இராமல் மனுஷர் கைகளின் வேலையாகிய மரமும் கல்லுமாய் இருந்தன; ஆகையால் அவைகளை நிர்த்தூளியாக்கினார்கள்.

௨௰ இப்போதும் எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் ஒருவரே கர்த்தர் என்று பூமியின் இராச்சியங்கள் எல்லாம் அறியும்படிக்கு, தேவரீர் எங்களை அவன் கைக்கு நீங்கலாக்கி இரட்சியும் என்று ஏசேக்கியா விண்ணப்பம்பண்ணினான்.

௨௧ ¶ அப்போது ஆமோத்தின் குமாரனாகிய ஏசாயா, ஏசேக்கியாவுக்குச்சொல்லியனுப்பினதாவது: இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறது ஏதெனில், நீ அசூரியாவின் இராசாவாகிய சன்கேரிப்பின்நிமித்தம் நம்மைநோக்கி விண்ணப்பம்பண்ணினையே.

௨௨ ¶ அவனைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிற வசனமாவது: சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி உன்னை இகழ்ந்து, உன்னை ஆகடியம்பண்ணுகிறாள்; எருசலேம் குமாரத்தி உன் பின்னாலே தலையைத் துலுக்குகிறாள்.

௨௩ யாரை நிந்தித்துத் தூஷணித்தாய்? யாருக்கு விரோதமாய்ச் சத்தத்தை உயர்த்தினாய்? நீ இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோதமாக அல்லவோ உன் கண்களை மேட்டிமையாய் நெறித்தாய்?

௨௪ உன் ஊழியக்காரரைக்கொண்டு நீ ஆண்டவரை நிந்தித்து, என் இரதங்களின் திரளினாலே நான் லீபனோனின் பக்கங்களாகிய மலைகளின் உயரத்தில் ஏறினேன்; அதின் ஓங்கலான கேதுருக்களையும், தெரிந்துகொள்ளப்பட்ட பாய்மரவிருட்சங்களையும் நான் வெட்டி, அதின் கடைசி உயரமாகிய அதின் செழுமையான காடுமட்டும் வருவேன் என்றும்,

௨௫ நான் ஊற்றுகளை வெட்டித் தண்ணீர்களைக் குடித்தேன்; என் உள்ளங்கால்களின் அடியினாலே எகிப்தின் ஆறுகளை எல்லாம் வறளவும்பண்ணினேன் என்றும் சொன்னாய்.

௨௬ நாம் வெகுகாலத்துக்குமுன் அதைச் செப்பனிட்டுப் பூருவநாள்களில் முதற்

கொண்டு அதைச் செய்ய யோசித்து இருக்கிறோம் என்று நீ கேட்டதில்லையோ? இப்போது நீ அரணான பட்டணங்களைப் பாழான மண்மேடுகள் ஆக்குகிறவனாயிருக்க அதை வரப்பண்ணினோம்.

உஎ அதினாலே அவைகளின் குடிகள் கைவிளைத்தவர்களாய்க் கலங்கி வெட்கப்பட்டு, வெளியின் பூண்டுக்கும், பச்சையான முளைக்கும், வீடுகளின்மேல் முளைத்த புல்லுக்கும், ஓங்கிவளராததற்குமுன் தீய்ந்துபோன பயிருக்கும் சமானமானார்கள்.

உஅ ஆனால் உன் இருப்பையும், உன் புறப்படுதலையும், உன் வருகையையும், நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளிக்கிறதையும் அறிவோம்.

உகூ ஆனதுகொண்டு நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளித்து, உன் ஆங்காரம் நம்முடைய செவிகளில் ஏறினபடியினாலே, நாம் நம்முடைய துறட்டை உன் மூக்கிலும், நம்முடைய கடிவாளத்தை உன் உதடுகளிலும் போட்டு, நீ வந்தவழியே உன்னைத் திருப்பிக்கொண்டு போவோம் என்பது தானே.

௩௰ ¶ உனக்கோவெனில் அடையாளமாய் இருப்பதாவது: இந்த வருஷத்திலே தப்பிப் பயிராகிறதையும் இரண்டாம் வருஷத்திலே அதினால் விளைகிறதையும் சாப்பிடு; மூன்றும் வருஷத்திலோ விதைத்து, அறுத்து, திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளின் கனிகளைச் சாப்பிடுங்கள்.

௩௧ யூதாவின் வீட்டாரிலே தப்பி மீதியானவர்கள் அப்புறம் தாழ வேர்பற்றி உயரக் கனிகொடுப்பார்கள்.

௩௨ ஏனெனில், மீதியானவர்கள் எருசலேமிலும், தப்பினவர்கள் சீயோன் பருவதத்திலுமிருந்து புறப்படுவார்கள்; *சேனைகளுடைய கர்த்தரின் வயிராக்கியம் அதைச் செய்யும். *ஏசா. ௯. ௭.

௩௩ ¶ ஆகையாலே கர்த்தர் அசூரியாவின் இராசாவைக்குறித்து உரைக்கிறதாவது: அவன் இந்தப்பட்டணமட்டும் வருவதும் இல்லை; அங்கே அம்பை எய்வதும் இல்லை; அதற்குமுன் கேடகத்தோடே வருவதும் இல்லை; அதற்கு விரோதமாய்க் கொத்தளம் போடுவதும் இல்லை.

௩௪ அவன் இந்தப் பட்டணத்துக்குள் பிரவேசியாமல் தான் வந்தவழியே திரும்பிப்போவான்.

௩௫ ஏனெனில் நம்முடைய நிமித்தமாகவும், நம்முடைய தாசனாகிய தாவீதின் நிமித்தமாகவும், நாம் இந்தப் பட்டணத்தை இரட்சிக்கும்படிக்கு அதற்கு ஆதரவாய் இருப்போம் என்கிறதைக் கர்த்தர் உரைக்கிறார் என்று சொல்லி அனுப்பினான்.

௩௬ ¶ அப்போது *கர்த்தருடைய தூதன் புறப்பட்டு, அசூரியரின் பாளயத்தில் நூற்றெண்பத்தையாயிரம்பேரைச் சங்கரித்தான்; அவர்கள் அதிகாலமே எழுந்திருக்கும்போது, இதோ, எல்லாரும் செத்தசவங்களாய்க் கிடந்தார்கள். *ஏசா.௰.௩௪. ௨ இரா. ௰௯. ௩௫.

௩௭ அப்போது அசூரியாவின் இராசாவாகிய சனகேரிப் பயணப்பட்டுத் திரும்பிக்கொண்டுபோய், நினிவேயில் இருந்துவிட்டான்.

௩௮ பிறகு சம்பவித்தது ஏதெனில், அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் வீட்டில் பணிந்துகொள்ளுகிறபோது அவன் குமாரராகிய அதிரமேலேகும் சரேத்சேரும் அவனைப் பட்டையத்தாலே வெட்டிப்போட்டு, ஆரராத் தேசத்துக்குத் தப்பி ஓடிப்போனார்கள்; அவன் குமாரனாகிய ஏசர்காதோன் அவன் பட்டத்துக்கு வந்து அரசாண்டான்.

## ௩௮. அதிகாரம்.

அந்நாள்களில் *எசேக்கியா சாகத்தக்கதான வியாதிப்பட்டிருந்தான். அப்போது ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா என்ற தீர்க்கதரிசி அவனண்டைக்கு வந்து, அவனுடனே: உன் வீட்டுக்குப் பண்ணவேண்

டிய திட்டங்களைக் கட்டளைபண்ணு; ஏனெனில், நீ பிழைக்காமல் மரிப்பாய் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.
*௨ இரா. ௨௰. ௧. மு.

௨ அப்போது எசேக்கியா தன் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பி, கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணி,

௩ ஆ கர்த்தாவே, நான் உமக்குமுன்பாக உண்மையும் மன உத்தமமுமாய் நடந்துகொண்டு, உமது பார்வைக்கு நலமானதைச் செய்தேன் என்கிறதை நினையுமே என்று, எசேக்கியா மகா அழுகையாய் மிகுதியும் அழுதான்.

௪ அப்போது ஏசாயாவுக்கு உண்டான கர்த்தருடைய வார்த்தையாவது:

௫ நீ போய் எசேக்கியாவுடனே சொல்லவேண்டியது: உன் தகப்பனாகிய தாவீதின் பராபரனாய் இருக்கிற கர்த்தர் சொல்லுகிறது ஏதெனில், உன் விண்ணப்பத்தைக் கேட்டோம்; உன் கண்ணீரைக் கண்டோம்; இதோ, நாம் உன் நாள்களோடே பதினைந்து வருஷங்களைக் கூட்டி,

௬ அசூரியா இராசாவின் கைக்கு உன்னையும், இந்தப் பட்டணத்தையும் தப்புவித்து, இந்தப் பட்டணத்துக்கு ஆதரவாக இருப்போம்.

௭ இதோ, நாம் ஆகாசுடைய சூரியகடிகாரத்தில் வரிக்குவரி இறங்கின நிழலைப் பத்துவரி பின்னிட்டுத் திருப்புவோம் என்றார்.

௮ நாம் சொன்ன இந்த வார்த்தையின்படி கர்த்தர் செய்வார் என்கிறதற்கு இது கர்த்தரால் உனக்கு அடையாளமாய் இருக்குமென்று சொல் என்றார்; அப்படியே கடிகாரத்தில் இறங்கியிருந்த சூரியநிழல் பத்துவரி திரும்பிற்று.

௯ ¶ யூதாவின் இராசாவாகிய எசேக்கியா வியாதியாகித் தன் வியாதியும் நீங்கிச் சொஸ்தமானபோது எழுதிவைத்ததாவது:

௰ ¶ என் குறையாயுசின் வருஷங்களுக்குச் சேராமல் பாதாள வாசல்களுக்குட்படுவேன் என்று நான் என் நாள்கள் அறுப்புண்கிறபோது சொன்னேன்.

௰௧ கர்த்தரை, கர்த்தரையே நான் இனி உயிரோடிருக்கிறவர்களின் தேசத்திலே தரிசிப்பதில்லை; நான் இனிப் பூலோக குடிகளோடு இருந்து மனுஷரைக் காண்பதில்லை.

௰௨ என் ஆயுசு மேய்ப்பனுடைய கூடாரத்தைப்போல என்னைவிட்டுப் பெயர்ந்துபோகிறது; நெய்கிறவன் பாவை அறுக்கிறதுபோல என் சீவனை அறுக்கக் கொடுக்கிறேன்; என்னை நூற்பாவிலிருந்து அறுத்துவிடுகிறார்; இன்று இரவிற்குள்ளே என்னை முடிவு அடையப்பண்ணுவீர்.

௰௩ விடியற்காலத்தோடு என் எண்ணம் சரியாயிற்று; சிங்கத்தைப்போல என் எலும்புகளை எல்லாம் நொறுக்குவார்; இன்று இரவுக்குள்ளே என்னை முடிவு அடையப்பண்ணுவீர் என்று சொல்லி,

௰௪ நமுட்டலடைப்போலும், தகைவில்லான் குருவியைப்போலும் கீச்சென்று கூவினேன்; *புறாவைப்போலப் புலம்பினேன்; என் கண்கள் உயரப்பார்க்கிறதினாலே பூத்துப்போயின; கர்த்தாவே, ஒடுங்கிப்போகிறேன்; எனக்காக மேற்போட்டுக்கொள்ளும் என்றேன். *ஏசா. ௫௯. ௰௧.

௰௫ ¶ நான் என்ன சொல்லுவேன்? அவர் எனக்கு உத்தரவுகொடுத்தார்; அந்தப்பிரகாரமும் செய்தார்; என் ஆத்துமாவின் கசப்பை என் ஆயுசின் வருஷங்களிலெல்லாம் நினைத்து நடந்துகொள்ளுவேன்.

௰௬ ஆண்டவரே, அதினால் பிழைக்கிறார்கள்; அதில் முழுதும் என் ஆவியின் சீவன் இருக்கிறது; என்னைச் சொஸ்தப்படவும் பிழைக்கவும்பண்ணினீர்.

௰௭ இதோ, சமாதானத்துக்குப் பதிலாக எனக்கு மகா கசப்புவந்திருந்தது; தேவரீரோ என் ஆத்துமாவை அழிவின் குழிக்கு விலக்கி அரவணைத்தீர்; ஏனெனில் என் பாவங்களை எல்லாம் உமது முதுகுக்குப்பின்னாக எறிந்துவிட்டீர்.

௧௮ அது ஏனென்றால், பாதாளம் உம்மைத் துதிப்பதும், மரணம் உம்மைப் போற்றுவதும் இல்லை; குழியில் இறங்குகிறவர்கள் உம்முடைய சத்தியத்தைத் தியானிக்கிறதில்லை.

௧௯ உயிரோடிருக்கிறவன், உயிரோடிருக்கிறவனே, உம்மை நான் இன்று செய்கிறதுபோலே துதிப்பான்; தகப்பன் பிள்ளைகளுக்கு உமது சத்தியத்தை அறிவிப்பான்.

௨௰ கர்த்தர் என்னை இரட்சிக்கவந்தார்; ஆகையால் எங்கள் சீவனுடைய எல்லா நாள்களிலும் கர்த்தருடைய வீட்டிலே என் கீதவாத்தியங்களை வாசிப்போமென்று எழுதி வைத்தான்.

௨௧ ¶ அத்திப்பழக் குழம்பை எடுத்து வந்து, எரிபந்தப் பருவின்மேலே பற்றுப் போடுங்கள்; அப்போது பிழைப்பார் என்று ஏசாயா சொல்லியிருந்தான்.

௨௨ அப்போது எசேக்கியா: நான் கர்த்தருடைய வீட்டுக்குப் போயேறுவதற்கு அடையாளம் என்ன என்று கேட்டிருந்தான்.

## ௩௯. அதிகாரம்.

அக்காலத்திலே *பாலாதானுடைய குமாரனாகிய மெரோதாக் பாலாதான் என்ற பாபேலின் இராசா, எசேக்கியா வியாதிப்பட்டு ஆரோக்கியமானதைக் கேட்டு, அவனண்டைக்குக் காகிதங்களையும் வெகுமானத்தையும் அனுப்பினான். *௨ இரா. ௨௰. ௨௰. மு.

௨ அவர்கள்மேலே எசேக்கியா சந்தோஷப்பட்டு, அவர்களுக்குத் தன் பொக்கிஷசாலையையும், வெள்ளியையும், பொன்னையும், கந்தவர்க்கங்களையும், நல்ல பரிமளதயிலத்தையும், தன் ஆயுதசாலை அனைத்தையும், தன் பொக்கிஷங்களில் உள்ளவை எல்லாவற்றையும் காண்பித்தான்; தன் வீட்டிலும், தன்னுடைய எல்லா இராச்சியத்திலும், எசேக்கியா அவர்களுக்குக் காண்பியாத பொருள் இல்லை.

௩ ¶ அப்போது ஏசாயா தீர்க்கதரிசி எசேக்கியா இராசாவண்டைக்கு வந்து அவனுடனே: அந்த மனுஷர் என்ன சொன்னார்கள்? எங்கேயிருந்து உம்மண்டைக்கு வந்தார்கள்? என்றான். அதற்கு எசேக்கியா: பாபேல் என்கிற தூரதேசத்திலிருந்து என்னண்டைக்கு வந்தார்கள் என்றான்.

௪ அப்போது அவன், உம்முடைய வீட்டிலே என்னத்தைக் கண்டார்கள்? என்றான். அதற்கு எசேக்கியா: என் வீட்டில் உள்ளவை எல்லாவற்றையும் கண்டார்கள்; என் பொக்கிஷங்களில் நான் அவர்களுக்குக் காண்பியாத பொருள் இல்லை என்றான்.

௫ அப்போது ஏசாயா எசேக்கியாவுடனே சொன்னதாவது: சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தையைக் கேளும்.

௬ இதோ, நாள்கள் வரும்; அப்போது உன் வீட்டில் உள்ளதிலும், உன் பிதாக்கள் இந்நாள்வரைக்கும் சேர்த்ததிலும் ஒன்றும் மீதியாய் வைக்கப்படாமல் எல்லாம் பாபேலுக்குக் கொண்டுபோகப்படும்.

௭ நீ பெறப்போகிற உன் சந்தானமாகிய உன் குமாரரிலும் சிலரைப் பாபேலுடைய இராசாவின் அரமனையிலே பிரதானிகளாய் இருக்க எடுப்பார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.

௮ அப்போது எசேக்கியா ஏசாயாவுடனே நீ சொன்ன கர்த்தருடைய வார்த்தை நல்லதே என்று சொல்லி, என் நாள்களிலாகிலும் சமாதானமும் உண்மையும் இருக்குமே என்றான்.

## ௪௰. அதிகாரம்.

நீங்கள் நமது சனத்தை ஆற்றுங்கள், தேற்றுங்கள்.

௨ நீங்கள் எருசலேமுடனே பட்சமாய்ப் பேசி, அதின் போர் முடிந்தது என்றும், அதின் அக்கிரமம் நிவிர்த்தியாக்கப்பட்டது என்றும், அது தன்னுடைய எல்லாப் பாவங்களின்நிமித்தம் கர்த்தரின் கையில் இரட்டிப்பாய் அடைந்து தீர்ந்தது என்றும்,

அதற்குக் கூறுங்கள் என்றும் உங்கள் பரா பரன் சொல்லுகிறார்.

௩ *வனாந்தரத்திலே கர்த்தருடைய வழியை ஆயத்தப்படுத்துங்கள், நம்முடைய பராபரனுக்கு அந்தரவெளியிலே பாதையைச் செவ்வைபண்ணுங்கள் என்றும்,
*மத். ௩. ௩. மாற். ௧. ௩. லூக். ௩. ௪-௬. யோவா. ௧. ௨௩.

௪ பள்ளம் எல்லாம் உயர்த்தப்பட்டு, சகல மலையும் குன்றும் தாழ்த்தப்பட்டு, கோணலானது செவ்வையாகி, கரடுமுரடானவைகள் சமனாகக்கடவன என்றும்,

௫ கர்த்தரின் மகிமை வெளியரங்கமாகும்; அதை எல்லா மாம்சமும் ஏகமாய்க் காணும்; ஏனெனில் கர்த்தரின் வாக்கு அதை உரைத்தது என்றும், கூப்பிடுகிற சத்தம் உண்டாயிற்று.

௬ கூப்பிடு என்று ஒரு சத்தம் உண்டாயிற்று; என்னத்தைக் கூப்பிட்டுச் சொல்லுவேன் என்கிறான்; *எல்லா மாம்சமும் புல்லைப்போலும், அதின் மேன்மை எல்லாம் வெளியின் பூவைப்போலும் இருக்கின்றன.
*யோபு. ௰௪. ௨. சங். ௯௰. ரு: ௱௩. ௰௫, ௰௬. ௧ பே. ௧. ௨௪, ௨௫.

௭ கர்த்தரின் ஆவி அதின்மேல் ஊதும்போது, புல் உலர்ந்து, பூ உதிரும்; சனமே புல்.

௮ புல் உலர்ந்து பூ உதிரும்; *நம்முடைய பராபரனுடைய வசனமோ என்றென்றைக்கும் நிற்கும் என்பதையே என்று உரைக்கும். *லூக். ௨௧. ௩௩.

௯ ¶ சீயோன் என்ற சுவிசேஷகியே, நீ உயர்ந்த பருவதத்தில் ஏறு; எருசலேம் என்ற சுவிசேஷகியே, உன் சத்தத்தைப் பலத்தோடே உயர்த்து; பயப்படாமல் அதை உயர்த்தி, யூதாவின் பட்டணங்களுடனே, இதோ, உங்கள் பராபரன் என்று சொல்.

௰ இதோ, கர்த்தராகிய ஆண்டவர் பெலவானுக்கு விரோதமாய் வருகிறார்; அவர் கைப்புயம் அவனை ஆண்டுகொள்ளும்; இதோ, *அவருடைய பலன் அவரோடுங்கூட வருகிறது; அவருடைய பலபாகம் அவருடைய முகத்துக்குமுன்பாகப் போகிறது. *ஏசா. ௬௨. ௰௧.

௰௧ *மேய்ப்பனைப்போலத் தமது மந்தையை மேய்ப்பார்; ஆட்டுக்குட்டிகளைத் தமது புயத்திலே சேர்த்து, தமது மடியிலே சுமந்து, கறவல் ஆடுகளை †மெதுவாய் நடத்துவார். *சங். ௨௩. ௧. ஏசே. ௩௪. ௨௩. யோவா. ௰. ௰௧. †ஏசா. ௪௯. ௰.

௰௨ தண்ணீர்களைத் தன் கைப்பிடியால் அளந்து, வானங்களைச் சாண் அளவாகத் திட்டம்பார்த்து, பூமியின் மண்ணை மரக்காலால் அளந்து, பருவதங்களைக் கயிற்றுக்கோலாலும், மேடுகளைத் தராசாலும் நிறுத்தவன் யாவன்?

௰௩ *கர்த்தருடைய ஆவியைத் திட்டப்படுத்தி, அவருக்கு ஆலோசனைக்காரனாய், அவருக்கு அறிவு உண்டாக்கினவன் யாவன்?
*உரோ. ௰௧. ௩௪. ௧ கொரி. ௨. ௰௬.

௰௪ தமக்கு உணர்வு உண்டாக்கவும், தம்மை நியாயவழியிலே உபதேசிக்கவும், தமக்கு அறிவைக் கற்றுக்கொடுக்கவும், தமக்கு விவேகங்களின் வழியை அறிவிக்கவும், அவர் யாரோடே ஆலோசனை பண்ணிக்கொண்டார்?

௰௫ இதோ, சாதிகள் ஏற்றச்சாலிலே தொங்கும் துளியாகவும், தராசிலே படிந்த தூசியாகவும் எண்ணப்பட்டிருக்கிறார்கள்; இதோ, தீவுகளை ஒரு அணுவைப்போலே தூக்குகிறார்.

௰௬ லீபனோன் நெருப்புக்கும் போதாது, அதின் மிருகசீவன்கள் தகனபலிக்கும் போதாது.

௰௭ சகல சாதிகளும் அவருக்குமுன்பாக *ஒன்றும் இல்லாததுபோல இருந்து, ஏதுமற்றதிலும் கடையாகவும் வெறுமையாகவும் அவரால் எண்ணப்படுகிறார்கள்.
*ஏசா. ௩௬. ௬.

௰௮ ¶ இப்படி இருக்கையில், பராபரனை

*யாருக்குச் சாயலாக்குவீர்கள்? அல்லது எந்தச் சாயலை அவருக்கு ஒப்பிடுவீர்கள்? *ஏசா. ௬௬. ௯.

௧௯ *கன்னான் ஒரு சுரூபத்தை வார்க்கிறான், தட்டான் பொன்தகட்டால் அதை மூடி அதற்கு வெள்ளிச் சங்கிலிகளைப் பொருத்தவைக்கிறான். *ஏசா. ௪௪. ௰௨, ௰௩.

௨௰ அதற்குக் கொடுக்க வகையில்லாதவன் உளுத்துப்போகாத மரத்தைத் தெரிந்துகொண்டு, அசையாத ஒரு சுரூபத்தைச் செப்பனிட விவேகமுள்ள ஒரு தச்சனைத் தனக்குத் தேடுகிறான்.

௨௧ நீங்கள் அறிந்ததில்லையோ? நீங்கள் கேட்டதில்லையோ? உங்களுக்கு ஆதிமுதலாய் அறிவிக்கப்பட்டதில்லையோ? பூமி அஸ்திபாரப்பட்டதை உணராதிருக்கிறீர்களோ?

௨௨ அவர் பூமியினுடைய உண்டையின் மீதில் உளுக்காந்திருக்கிறவர்; அதின் குடிகள் வெட்டுக்கிளிகளைப்போல இருக்கிறார்கள்; அவர் *வானங்களை மெல்லிய பாவாடையைப்போலப் பரப்பி, குடியிருக்கிறவர்களுக்கு அவைகளைக் கூடாரத்தைப்போல விரிக்கிறவர். *ஏசா. ௪௰. ௨௩. சங். ௱௪. ௨.

௨௩ அவர் தலைவர்களை மாயையாக்கிவிட்டு, பூமியின் நியாயாதிபதிகளை அவாந்தரமாக்குகிறவர்.

௨௪ அவர்கள் திரும்ப நாட்டப்படுவதும் இல்லை; விதைக்கப்படுவதுமில்லை; வெட்டப்பட்ட அவர்களுடைய அடிமரம் திரும்பத் தரையிலே வேர்விடுவதும் இல்லை; அவர்கள்மேல் அவர் ஊதவே பட்டுப்போவார்கள்; பெருங்காற்று அவர்களை ஒரு துரும்பைப்போல அடித்துக்கொண்டுபோகும்.

௨௫ ¶ பின்னை நம்மை யாருக்கு ஒப்பான சாயலாக்குவீர்கள் என்று பரிசுத்தர் சொல்லுகிறார்.

௨௬ உங்கள் கண்களை உயர ஏடுத்துப்பாருங்கள்; இவைகளைச் சிருஷ்டித்தவர் யார்? அவர் அவைகளின் சேனையை இலக்கத்திட்டமாகப் புறப்படப்பண்ணி, அவைகளை எல்லாம் பேர்பேராக அழைக்கிறவராமே; *அவருடைய வலிய சத்துவங்களாலும், அவர் வல்லமையிலே பெலத்தவராய் இருக்கிறதினாலும் அவைகளில் ஒன்றும் குறைவுபடாதேபோகும். *சங். ௱௪௭. ௪.

௨௭ ¶ யாக்கோபே, இஸ்ரவேலே, என் வழி கர்த்தருக்கு மறைவாயிற்று என்றும், என் நியாயம் என் பராபரனைச் சேராமல் போகிறது என்றும், நீ சொல்லுவானேன்.

௨௮ *பூமியின் கடையாந்தரங்களைச் சிருஷ்டித்த கர்த்தராகிய நித்திய பராபரன், இளைக்காமலும் விடாய்க்காமலும் இருக்கிறார் என்று நீ அறியாயோ? நீ கேட்டதில்லையோ? அவருடைய உணர்வுக்கு ஆராய்தல் இல்லை. *ஏசா. ௪௨. ௯: ௪௯. ௰௨.

௨௯ இளைத்தவனுக்கு அவர் பெலன் கொடுத்து, சத்துவமற்றவனுக்குப் பெலனைப் பெருகப்பண்ணுகிறார்.

௩௰ இளைஞர் இளைத்து விடாய்க்கிறார்கள், வாலிபரும் இடறி விழுவார்கள்.

௩௧ கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து கழுகுகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள்; அவர்கள் ஓடியும் விடாய்க்கார்கள் நடந்தும் இளைக்கார்கள்.

## ௪௧. அதிகாரம்.

தீவுகளே, நமக்குமுன்பாக மவுனமாகுங்கள்; சனசதளங்கள் தங்கள் பெலனைப் புதிதாக்கிக்கொண்டு, சமீபித்துவந்து, பிற்பாடு பேசக்கடவார்கள்; ஒருமிக்க நியாயத்திலே சேருவோம்.

௨ ¶ நீதியாய்த் தமது காலடியிலே வர, கிழக்கிலிருந்து ஒருவனை எழுப்பி அழைத்தவர் யார்? *அவனுக்குமுன்பாகச் சாதிகளை ஒப்புக்கொடுத்து, அவனை இராசாக்களுக்கு ஆண்டவனாக்கி, இவர்களை அவன் பட்டயத்துக்குத் தூசியும், அவன் வில்லுக்குச் சிதற அடிக்கப்பட்ட தாளடியுமாக்கி, *எஸ்ரா. ௧. ௨.

௩ அவன் இவர்களைத் துரத்தவும், தன் கால்கள் வராதிருந்த பாதையிலே சமாதானத்தோடே நடக்கவும் பண்ணுகிறவர் யார்?

௪ அதை நடப்பித்துச் செய்து, ஆதிமுதல் கொண்டு தலைமுறைகளை வரவழைத்துக் கொண்டிருக்கிறவர் யார்? *முந்தினவராய் இருக்கிற கர்த்தராகிய நாம்தாமே; பிந்தினவர்களோடும் இருப்பவராகிய நாம்தாமே.
*ஏசா. ௪௪. ௬: ௪௮. ௧௨. வெளி. ௧. ௧௭: ௨௨. ௧௩.

௫ ¶ தீவுகள் அதைக்கண்டு பயப்படும், பூமியின் கடையாந்தரங்கள் நடுங்கும்; அவர்கள் சேர்ந்துவந்து,

௬ ஒருவனுக்கு ஒருவன் ஒத்தாசைசெய்து சகோதரனோடே சகோதரன் பலப்படுவேன் என்று சொல்லுகிறான்.

௭ சூத்திரக்காரன் தட்டானையும், சுத்தியலாலே மெல்லிசாய்த் தட்டுகிறவன் அடைகலின்மேல் அடிக்கிறவனையும் தயிரியப்படுத்தி, இசைவு நல்லதென்று சொல்லி, அதை அசையாதபடிக்கு ஆணிகளாலே கெட்டிபாக்குகிறான்.

௮ ¶ ஆனால் *நம்முடைய தாசனாகிய இஸ்ரவேலே, நாம் தெரிந்துகொண்ட யாக்கோபே, நம்முடைய †சிநேகிதனான ஆபிரகாமின் வித்தே, *லூக். ௧. ௫௪. † ௨ நாளா. ௨௰. ௭. யாக். ௨. ௨௩.

௯ நாம் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து, உன்னை எடுத்து, அதின் எல்லைகளிலிருந்து அழைத்துவந்து: நீ நம்முடைய தாசன், உன்னை நாம் வெறுக்காமல் உன்னைத் தெரிந்துகொண்டோம்என்றுநாம் சொன்னோமே.

௰ *பயப்படாதிரு; ஏனெனில், நாம் உன்னுடனே இருக்கிறோம்; திகையாதிரு; ஏனெனில், நாம் உன் பராபரன்; நாம் உன்னைப் பலப்படுத்தி உனக்குச் சகாயம்பண்ணுகிறவரும், உன்னை நமது நீதியின் வலதுகரத்தினாலே தாங்குகிறவருமாய் இருக்கிறோம். *ஏசா. ௪௩. ௧.

௧௧ இதோ, உன்மேல் எரிச்சலாய் இருக்கிற யாவரும் வெட்கி இலச்சை அடைவார்கள்; உன்னோடே வழக்காடுகிற மனுஷர் மாயையாகி அழிவார்கள்.

௧௨ உன்னோடே போராடினவர்களைத் தேடிக் *காணாதிருப்பாய்; உன்னோடு யுத்தம் பண்ணின மனுஷர் ஒன்றுமில்லாததும், மாயையும் ஆவார்கள். *சங். ௩௭. ௩௬.

௧௩ ஏனெனில், உன் பராபரனாய் இருக்கிற கர்த்தராகிய நாம் உன் வலதுகையைப் பிடித்து, உன்னுடனே: பயப்படாதே, நாம் உனக்கு ஒத்தாசைசெய்கிறோம் என்கிறோம்.

௧௪ யாக்கோபென்ற பூச்சியே, இஸ்ரவேலின் *சிறியகூட்டமே, பயப்படாதே, நாம் உனக்கு ஒத்தாசைசெய்கிறோம் என்று கர்த்தரும் இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய †உன் மீட்பரானவர் உரைக்கிறார்.
*லூக். ௧௨. ௩௨. †ஏசா. ௪௩. ௩.

௧௫ இதோ, போர் அடிக்கிறதற்கு நாம் உன்னைப் புதிதும் கூர்மையுமான பற்களுள்ள தளவாடங்கள் ஆக்குகிறோம்; நீ பருவதங்களை மிதித்து நொறுக்கி, மேடுகளைப் பதருக்கு ஒப்பாக்கிவிடுவாய்.

௧௬ அவைகளைத் தூற்றுவாய்; அப்போது காற்று அவைகளைக் கொண்டுபோய், புசல் அவைகளைப் பறக்கடிக்கும்; நீயோவெனில் கர்த்தருக்குள்ளே களிகூர்ந்து, இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள் மேன்மைபாராட்டிக் கொண்டிருப்பாய்.

௧௭ ¶ சிறுமையானவர்களும் ஏழைகளும் தண்ணீரைத் தேடுகிறார்கள், ஆனால் இல்லாதிருக்கும்; அவர்கள் நாவு தாகத்தால் வறளும்; கர்த்தராகிய நாம் அவர்களுக்குக் கேள்விகொடுத்து, இஸ்ரவேலின் பராபரனாகிய நாம் அவர்களைக் கைவிடாதிருப்போம்.

௧௮ *நாம் உயர்ந்த நிலங்களில் ஆறுகளையும், பள்ளத்தாக்குகளின் நடுவே ஊற்றுகளையும் திறந்து, வனாந்தரத்தைத் தண்ணீர்த் தடாகமும், வறண்ட பூமியைத் தண்ணீர்க் கேணிகளும் ஆக்கி, *ஏசா. ௩௫. ௭: ௪௪. ௩.

௧௯ வனாந்தரத்திலே கேதுருமரங்களையும்,

சித்திம் மரங்களையும், மிருதுச்செடிகளையும், ஒலிவமரங்களையும் கட்டளையிட்டு, அவாந்தரவெளியிலே தேவதாரி விருட்சங்களையும், பிசின்மரங்களையும், புன்னைமரங்களையும் கூட உண்டுபண்ணுவோம்.

௨௰ கர்த்தருடைய கரம் அதைச் செய்தது என்றும், இஸ்ரவேலின் பரிசுத்தர் அதைப் படைத்தார் என்றும் யாவரும் கண்டு அறிந்து, நிதானித்து உணரும்படியாகத்தானே.

௨௧ ¶ உங்கள் வழக்கைக் கொண்டுவாருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; உங்கள் பெலப்படியான நியாயங்களைச் சேரப்பண்ணுங்கள் என்று யாக்கோபின் இராசா சொல்லுகிறார்.

௨௨ அவர்கள் அவைகளைச் சேரப்பண்ணி, சம்பவிக்கப்போகிறவைகளை நமக்கு அறிவிக்கட்டும்; அவைகள் முதற்சம்பவிப்பவைகள் ஏதென்று சொல்லி, நாம் நம்முடைய மனதை அவைகளின்மேல் வைத்து, அவைகளின் முடிவையும் அறியும்படிக்கு நமக்கு அறிவிக்கட்டும்; அல்லது வரும்காரியங்களை நமக்குக் கேட்கப்பண்ணட்டும்.

௨௩ பின்வரும் காரியங்களை நமக்கு அறிவியுங்கள்; அப்போது நீங்கள் தேவர்கள் என்று அறிவோம்; அல்லவென்று நன்மை தீமை ஏதாகிலும் செய்யுங்கள்; அப்போது நாம் திகைத்து ஏகமாய்க் கூடி அதைப் பார்ப்போம்.

௨௪ இதோ, நீங்கள் ஒன்றுமில்லாததிலும் கடையாய் இருக்கிறீர்கள்; உங்கள் செயல் ஏதுமற்றதற்கும் தாழ்ச்சியானது; உங்களைத் தெரிந்துகொள்ளுகிறவன் அருவருப்பானவன்.

௨௫ ¶ ஒருவனை வடக்கேயிருந்து எழும்பப்பண்ணுகிறோம்; அவன் சூரியோதயத்திலிருந்து வருவான்; அவன் நமது நாமத்தைப் பிரஸ்தாபமாக்குவான்; அவன் வந்து அதிகாரிகளைச் சேற்றைப்போலவும், குயவன் களிமண்ணை மிதியிடுகிறதுபோலவும் மிதிப்பான்.

௨௬ ஆதிமுதற்கொண்டு, அல்லது முற்காலமுதற்கொண்டு அதை நாம் அறியும்படியாகவும், நாம் அவனை நீதிமான் என்று சொல்லத்தக்கவிதமாகவும் அறிவித்தவன் யாவன்? அறிவிக்கிறவன் ஒருவனும் இல்லையே; கேட்கப்பண்ணுகிறவனும் இல்லை; உங்கள் வார்த்தைகளைக் கேள்விப்படுகிறவனும் இல்லையே.

௨௭ நாமே முதல்முதல்; இதோ, இதோ, என்று சீயோனுக்குச் சொல்லி, எருசலேமுக்குச் சுவிசேஷகனைக் கொடுக்கிறோம்.

௨௮ நாம் பார்த்தோம்; ஆனால் அவர்களில் அறிவிக்கிறவன் ஒருவனுமில்லை; அவர்களிலே நாம் கேட்குங்காரியத்துக்குப் பிரதியுத்தாரம் கொடுக்கத்தக்க ஒரு ஆலோசனைக்காரனும் இல்லை.

௨௯ இதோ, அவர்கள் எல்லாரும் மாயை; அவர்கள் கிரியைகள் ஒன்றுமில்லை; வார்க்கப்பட்ட அவர்களுடைய சுரூபங்கள் *காற்றும் வெறுமையுந்தானே. *சங். ௯. ௫. எரே. ௰. ௩—௰௪.

## ௪௨. அதிகாரம்.

இதோ, நாம் தெரிந்துகொண்டவரும் *நமது ஆத்துமா பிரியமாய் இருக்கிறவரும், நாம் ஆதரிக்கிறவருமாகிய †நம்முடைய பணிவிடைக்காரன்; ‡நம்முடைய ஆவியை அவர்மேல் வைக்கிறோம்; அவர் சாதிகளுக்கு நியாயத்தை வெளிப்படுத்துவார். *மத். ௩. ௰௭: ௰௭. ௫. எபே. ௧. ௬. †மத். ௰௨. ௰௮—௨௧. ‡ஏசா. ௰௧. ௨.

௨ அவர் கூப்பிடாமலும், சத்தத்தை உயர்த்தாமலும், தம்முடைய சத்தத்தை வீதியிலே கேட்கப்பண்ணாமலும் இருப்பார்.

௩ அவர் நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கி எரிகிற திரியை அவிக்காமலும், நியாயத்தை உண்மையாக வெளிப்படுத்துவார்.

௪ அவர் நியாயத்தைப் பூமியிலே நிலைப்படுத்துமட்டும், இளக்கரிப்பதில்லை; பதறுவதும் இல்லை; அவருடைய உபதேசத்துக்

குத் தீவுகள் காத்திருக்கும்.

௫ ¶ வானங்களைச் சிருஷ்டித்து, அவைகளை விரித்து, பூமியையும் அதிலே பிறக்கிறவைகளையும் பரப்பினவரும், அதில் இருக்கிற சனத்துக்குச் சுவாசத்தையும், அதிலே நடமாடுகிறவர்களுக்கு ஆவியையும் கொடுக்கிறவருமான கர்த்தராகிய பராபரன் சொல்லுகிறதாவது:

௬ நீர் குருட்டுக்கண்களைத் திறக்கவும், கட்டுண்டவர்களைக் காவலிலும், இருளில் உளுக்காந்திருக்கிறவர்களைச் சிறைச்சாலையிலுமிருந்து புறப்படப்பண்ணவும்,

௭ கர்த்தராகிய நாம் உம்மை நீதியாய் அழைத்து, உம்முடைய கையைப் பிடித்துக்கொண்டு, உம்மைத் தற்காத்து, உம்மைச் சனத்தின் உடம்படிக்கையாகவும், *சாதிகளின் வெளிச்சமாகவும் வைக்கிறோம். *ஏசா. ௪௯. ௬. லூக். ௨. ௩௰, ௩௧.

௮ நாம் கர்த்தர், இது நமது நாமம்; *நாம் நமது மகிமையை வேறொருவனுக்கும், நமது துதியை விக்கிரகங்களுக்கும் கொடோம். *ஏசா. ௪௮. ௰௧.

௯ முந்தினகாரியங்கள் இதோ, வந்தனவே, புதியவைகளையும் நாமே அறிவிக்கிறவர்; அவைகள் தோன்றுதற்குமுன்னே, அவைகளை உங்களுக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௰ ¶ *கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள்; சமுத்திரத்துக்கு இறங்கிப்போகிறவர்களும், அதிலுள்ளவை அனைத்தும், தீவுகளும், அவைகளின் குடிகளும், பூமியின் கடையாந்தரத்திலிருந்து அவருடைய துதியைப் பாடுவதாக. *சங். ௩௩. ௩.

௰௧ வனாந்தரமும், அதின் ஊர்களும், கேதாரியர் குடியிருக்கிற கிராமங்களும் சத்தத்தை உயர்த்தக்கடவன; கல்மலைகளிலே குடியிருக்கிறவர்கள் கெம்பீரித்து, பருவதங்களின் கொடுமுடியிலிருந்து ஆர்ப்பரிப்பார்களாக.

௰௨ கர்த்தருக்கு மகிமையைச் செலுத்தி, அவர் துதியைத் தீவுகளில் அறிவிப்பார்களாக.

௰௩ *கர்த்தர் பராக்கிரமசாலியைப்போலப் புறப்பட்டு, யுத்த சேவகனைப்போல எரிச்சலை எழும்பப்பண்ணி, தொனித்துக் கர்ச்சித்து, தம்முடைய சத்துருக்களை மேற்கொள்ளுவார். *சங். ௨௪. ௮: ௪௫. ௩.

௰௪ வெகுகாலமாய் மவுனமாய் இருந்தோம்; சும்மா இருந்து நமக்குள்ளே அடக்கிக்கொண்டோம்; இப்போது நாம் பிள்ளைப் பெறுகிறவளைப்போலக் கூப்பிட்டு, அவர்களைப் பாழாக்கவும் விழுங்கவும் போகிறோம்.

௰௫ நாம் பருவதங்களையும் மேடுகளையும் பாழாக்கி, அவைகளின் பயிர்வகையை எல்லாம் வாடப்பண்ணி, ஆறுகளைத் திட்டுகள் ஆக்கி, ஏரிகளை வற்றிப்போகப்பண்ணி,

௰௬ குருடரை அவர்கள் அறியாத வழியிலே நடத்தி, அவர்களுக்குத் தெரியாத பாதைகளிலே அவர்களை அழைத்துக்கொண்டு வந்து, அவர்களுக்குமுன்பாக இருளை வெளிச்சமும், கோணல்களைச் செம்மையும் ஆக்குவோம்; இந்தக் காரியங்களை நாம் அவர்களுக்குச் செய்து, அவர்களைக் கைவிடாதிருப்போம்.

௰௭ ஆனால் விக்கிரகங்களை நம்பி, வார்க்கப்பட்ட சுரூபங்களுடனே, நீங்கள் எங்கள் தேவர்கள் என்று சொல்லுகிறவர்கள் *பின்னிடைந்து, மிகவும் வெட்கப்படுவார்கள். *சங். ௯. ௰௧.

௰௮ ¶ *செவிடரே, கேளுங்கள்; †குருடரே, நீங்கள் காணும்படிக்கு நோக்கிப்பாருங்கள். *யோவா. ௮. ௪௭. †யோவா. ௯. ௪௰. ௨ கொரி. ௪. ௪.

௰௯ *நம்முடைய தாசனையே அல்லாமல் யார் அத்தனை குருடனும், நாம் அனுப்புகிற தூதனையே அல்லாமல் யார் அத்தனை செவிடனுமாய் இருக்கிறான்? உத்தமனைப்போலக் குருடனானவன் யாவன்? கர்த்தருடைய ஊழியக்காரனைப்போல அந்தகனு

னவன் யாவன்? *மத். ௰௩. ௰௪: உ௯. ௰௯: ௰௯. உ௯.

உ௰ நீ அநேகங்களைக் கண்டும் கைக்கொள்ளாய், அவனுக்குச் செவிகளைத் திறந்தாலும் கேளாதேபோகிறான்.

உ௧ கர்த்தர் தமது நீதியினிமித்தமாக அவன்மேல் பிரியம்வைத்திருந்தார்; அவனை வேதத்தினாலே பெரியவனாக்கி, முக்கியப்படுத்தினார்.

உ௨ அவனோவெனில் கொள்ளையும், சூறையுமாய்ப்போகிற சனம்; அவர்கள் அனைவரும் கெபிகளிலே சிக்குண்டு, காவல் அறைகளில் அடைக்கப்படுவார்கள்; தப்புவிப்பார் இல்லாமலே கொள்ளையாகி, திரும்ப விட்டுவிடு என்பார் இல்லாமல் சூறையாவார்கள்.

உ௩ *உங்களில் இதற்குச் செவிகொடுத்துப் பின்வருகிறதைக் கவனித்துக் கேட்கிறவன் யாவன்? *லூக். ௰௯. ௪உ.

உ௪ யாக்கோபைச் சூறையிட்டு இஸ்ரவேலைக் கொள்ளைக்காரருக்கு ஒப்புக்கொடுக்கிறவன் யாவன்? நாம் பாவம்செய்து விரோதித்த கர்த்தர் அல்லவோ? ஏனெனில், அவருடைய வழிகளில் நடக்க மனதாய் இராமலும், அவருடைய வேதத்துக்குச் செவிகொடாமலும் போனார்கள்.

உ௫ அவர் இவர்கள்மேலே தமது கோபத்தின் உக்கிரத்தையும், யுத்தத்தின் வலிமையையும் ஊற்றி, அவர்களைச் சூழ அக்கினிச் சுவாலைகளைக் கொளுத்தியிருந்தாலும், அறிவு இல்லாதேபோனார்கள்; அவர் இவர்களை வேகப்பண்ணியிருந்தாலும், அதை மனதிலே வைக்காதேபோனார்கள்.

## ௪௩. அதிகாரம்.

இப்போதும் யாக்கோபே, உன்னைச் சிருஷ்டித்தவரும், இஸ்ரவேலே, உன்னை உருவாக்கினவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: *பயப்படாதிரு; ஏனெனில் உன்னை மீட்டுக்கொண்டோம்; உன்னைப் பேர்சொல்லி அழைத்தோம்; நீ நம்முடையவன். *ஏசா. ௪௧. ௰: ௪௪. உ.

உ *நீ தண்ணீர்களைக் கடக்கும்போது நாம் உன்னோடே இருக்கிறோம்; நீ ஆறுகளைக் கடக்கும்போது அலைகள் உன்மேல் புரளுவதில்லை; நீ அக்கினியைக் கடக்கும்போது வேகாதிருப்பாய்; அக்கினிச்சுவாலை உன்னைக் கொளுத்துவதில்லை. *சங். ௬௬. ௰உ.

௩ ஏனெனில், நாம் இஸ்ரவேலின் பரிசுத்தரும் உன் இரட்சகருமாய் இருக்கிற உன் பராபரனாகிய கர்த்தர்; உன்னை மீட்கும்பொருளாக எகிப்தையும், உனக்குப் பதிலாக எத்தியோப்பியாவையும் சேபாவையும் ஒப்புக்கொடுத்தோம்.

௪ நீ நம்முடைய பார்வைக்கு அருமையானபடியினாலே கனம்பெற்றாய்; நாம் உன்னைச் சிநேகித்தபடியினாலே உனக்குப் பதிலாக மனுஷர்களையும், உன் ஆத்துமாவுக்குப் பதிலாகச் சனசதளங்களையும் ஒப்புக்கொடுப்போம்.

௫ பயப்படாதிரு; ஏனென்றால், நாம் உன்னோடே இருக்கிறோம்; நாம் உன் வித்தைக் கிழக்கிலிருந்து வரப்பண்ணி, உன்னை மேற்கிலும் இருந்து கூட்டிச்சேர்ப்போம்.

௬ நாம் வடக்குடனே தா என்றும், தெற்குடனே வைத்திராதே என்றும் சொல்லி, தூரத்திலிருந்து நம்முடைய குமாரரையும், பூமியின் கடையாந்தரத்திலிருந்து நம்முடைய குமாரத்திகளையும்,

௭ நமது நாமந்தரிக்கப்பட்டு, நாம் நம்முடைய மகிமைக்கென்று சிருஷ்டித்து, உருவாக்கி, படைத்த யாவையும் கொண்டுவாவென்போம்.

௮ ¶ கண்களிருந்தும் காணாதிருக்கிற சனத்தையும், காதுகளிருந்தும் செவிடரானவர்களையும் புறப்பட்டு வரப்பண்ணுங்கள்.

௯ சகல சாதிகளும் ஏகமாய்ச் சேர்ந்துகொண்டு, சகல சனசதளங்களும் கூடிவரட்டும்; *இதை அறிவித்து, முதற்சம்ப

விக்கும் காரியங்களை நமக்குக் கேட்கப்பண்ணத்தக்கவன் யாவன்? கேட்டு மெய்யென்று சொல்லப்படக்கூடும்படிக்கு, அவர்கள் தங்கள் சாட்சிகளைக் கொண்டுவந்து நிதானக்காரராய் விளங்கட்டும்.*ஏசா. ௪௧. ௨௯.

௰ ¶ நாமே அவரென்று நீங்கள் அறிந்து, நம்மைவிசுவாசித்துஉணர்ந்துகொள்ளும்படிக்கு, நீங்களும் *நாம் தெரிந்துகொண்ட நம்முடைய தாசருமாய் இருக்கிறீர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; †நமக்குமுன் ஏற்பட்டதேவனில்லை;நமக்குப்பின் இருப்பதுமில்லை. *ஏசா. ௪௧. ௮. †ஏசா. ௪௪. ௮.

௰௧ நாம், *நாமே கர்த்தர்; நம்மையல்லாமல் இரட்சகரில்லை. *ஏசே. ௰௩. ௪.

௰௨ நாமே அறிவித்து, இரட்சித்து, அதைக் கேட்கப்பண்ணுகிறோம்; உங்களில் அப்படிச் செய்யத்தக்க அந்நியதேவனில்லை; நாமேபராபரன்என்கிறதற்குநீங்கள்நம்முடைய சாட்சிகளென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௩ *நாள் உண்டாகாததற்குமுன்னும் நாமே இருக்கிறோம்; நம்முடைய கைக்குத் தப்புவிக்கத்தக்கவனில்லை; †நாம் நடப்பிப்பதைத் திருப்புபவன் யாவன்?
*சங். ௯௰. ௨. †ஏசா. ௰௪. ௨௭.

௰௪ ¶ உங்களுக்காக நாம் தாழ்ப்பாள் அரண்களையெல்லாம் இடிந்து விழப்பண்ணவும், கல்தேயரைப் படவுகளில் உள்ப்பட்டு அலறப்பண்ணவுந்தக்கவர்களைப் பாபேலுக்கு அனுப்பினோமென்று, உங்கள் மீட்பரும், இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫ நாமே உங்கள் பரிசுத்தராகிய கர்த்தரும், இஸ்ரவேலின் சிருஷ்டிகரும், உங்கள் இராசாவுமானவர்.

௰௬ ¶ சமுத்திரத்திலே *வழியையும், வல்லமையான தண்ணீர்களிலே பாதையையும் கட்டளையிட்டு, *௨ திமோ. ௰௪. ௨௧. ஹி.

௰௭ இரதங்களையும், குதிரைகளையும், இராணுவத்தையும், பெலனையும், வரவிட்டு, அவைகள் எழுந்திராதபடிக்கு ஒருமித்து விழுந்துகிடக்கவும், ஒரு திரி அவியுமாப்போல அவை அணைந்துபோகவும்பண்ணின கர்த்தர் சொல்லுகிறதாவது:

௰௮ முந்தினவைகளை நினையாதிருங்கள்; பூருவமானவைகளைச் சிந்தியாதிருங்கள்.

௰௯ இதோ, *நாம் புதுக்காரியத்தைச் செய்வோம்; இனி அது தோன்றும்; நீங்கள் அதை அறியப்போவதில்லையோ? நாம் வனாந்தரத்திலே வழியையும், அவாந்தரவெளியிலே ஆறுகளையும் உண்டாக்குவோம்.
*எரே. ௩௧. ௩௯.

௨௰ நாம் தெரிந்துகொண்டநமதுசனத்தின் தாகத்துக்கு *வனாந்தரத்திலே தண்ணீர்களையும் அவாந்தரவெளியிலேஆறுகளையும் உண்டாக்குவதினால், வெளியின் மிருகங்களும் வல்லமையுள்ள பாம்புகளும், கோட்டான் குஞ்சுகளும் நம்மைக் கனம்பண்ணும்.
*ஏசா. ௪௧. ௰௮.

௨௧ இந்தச் சனத்தை நமக்கென்று ஏற்படுத்தினோம்; இவர்கள் நமது துதியைச் சொல்லிவருவார்கள்.

௨௨ ¶ ஆனால், யாக்கோபே, நீ நம்மை நோக்கிக் கூப்பிட்டதில்லை; இஸ்ரவேலே, அதைவிட நீ நம்மை விதனப்படுத்தினாய்.

௨௩ நீ நமக்கு உன் ஆடுகளின் தகனபலிகளைச் செலுத்தினதில்லை; நீ நம்மை உன் பலிகளாலே கனம்பண்ணினதுமில்லை; காணிக்கைகளைச் செலுத்த நாம் உன்னைப் பிரயாசப்படுத்தாமலும், தூபங்காட்ட உன்னை வருத்தப்படுத்தாமலும் இருந்தோம்.

௨௪ நீ நமக்குப் பணங்களால் சுகந்த பட்டையைக் கொள்ளாமலும், உன் பலிகளின் கொழுப்பினாலே நம்மை நிரப்பாமலும், உன் பாவங்களினாலே நம்மைப் பிரயாசப்படுத்தி, உன் அக்கிரமங்களினாலே, நம்மை வருந்தப்படுத்தினாய்.

௨௫ *நாம், நாமே உன் மீறுதல்களை நம்முடையநிமித்தமாகக் கொலைக்கிறோம்; உன் பாவங்களை நினையாமலும் இருப்போம்.
*ஏசா. ௪௪. ௨௨. ஏசே. ௩௯. ௨௨.

௨௬ நாம் ஒருவர்க்கு ஒருவர் வழக்காடும்படியாக நமக்கு நினைப்பூட்டு; நீ நீதிவிளங்கும்படியாக விவரித்துச் சொல்.

௨௭ உன் ஆதிதகப்பன் பாவஞ்செய்தான்; உனக்கு முன்னின்று பேசுகிறவர்களும் நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினார்கள்.

௨௮ ஆகையால், நாம் பரிசுத்தஸ்தலத்தின் தலைவர்களைப் பரிசுத்தக் கொலைச்சலாக்கி, யாக்கோபைச் சங்காரத்துக்கும், இஸ்ரவேலைத் தூஷணங்களுக்கும் ஒப்புக்கொடுப்போம்.

## ௪௪. அதிகாரம்.

இப்போதும், *நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலே, கேள். *ஏசா. ௪௧. ௮: ௪௩. ௰.

௨ *உன்னை உண்டாக்கினவரும், உன்னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவரும், உனக்கு ஒத்தாசை செய்கிறவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நாம் தெரிந்துகொண்ட உத்தமனே, †பயப்படாதிரு. *௫மோ. ௩௨. ௧௫. †ஏசா. ௪௧. ௰, ௰௪: ௪௩. ௧-௫.

௩ ஏனெனில், *தாகமுள்ளவன்மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின்மேல் ஆறுகளையும் ஊற்றுவோம்; நம்முடைய ஆவியை உன் வித்தின்மேலும், நம்முடைய ஆசீர்வாதத்தை உன் சந்தானத்தின்மேலும் ஊற்றுவோம். *யோவா. ௩. ௧: ௭. ௩௮.

௪ அதினாலே புல்லின் நடுவே *நீர்க்கால்களின் ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப்போலே வளருவார்கள். *சங். ௧. ௩.

௫ இவனும், நான் கர்த்தருடையவன் என்பான்; அவனும், யாக்கோபின்பேராய் அழைக்கப்படுவான்; அவனும் தான் கர்த்தருடையவனென்று தன் கையெழுத்துப்போட்டு, இஸ்ரவேலின் நாமத்தைத் தரித்துக்கொள்ளுவான்.

௬ ¶ *நாம் முந்தினவரும், நாம் பிந்தினவருந்தானே; நம்மைத்தவிரத் தேவன் இல்லையென்று இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தரும், சேனைகளின் கர்த்தராகிய அவனுடைய மீட்பரும் சொல்லுகிறார். *ஏசா. ௪௧. ௪: ௪௮. ௰௨. வெளி. ௧. ௮: ௨௨. ௰௩.

௭ நித்திய சனத்தை நாம் தாபித்ததுமுதற்கொண்டு, நம்மைப்போல எதையாகிலும் வரவழைத்து, இன்னின்னதை முன் அறிவித்து, நமக்குமுன்னே வரிசையாக நிறுத்தத்தக்கவன் யாவன்? *பின்னடிச் செய்திகளையும் வருங்காரியங்களையும் தங்களுக்கு அவர்கள் அறிவிக்கட்டும். *ஏசா. ௪௧. ௨௨, ௨௩.

௮ நீங்கள் கலங்காமலும், ஐயப்படாமலும் இருங்கள்; நாம் அதுமுதற்கொண்டு அதை உனக்குக் கேட்கப்பண்ணினதும், முன்னறிவித்ததும் இல்லையோ என்பதற்கு நீங்கள் நம்முடைய சாட்சிகள்? *நம்மைத்தவிர ஒரு தேவனுண்டோ? வேறொரு கன்மலையுமில்லையே; ஒருவனையும் அறியோம். *௫மோ. ௪. ௩௯.

௯ சுரூபங்களை உருவாக்குகிற யாவரும் மாயைதானே; அவர்களால் இச்சிக்கப்பட்ட காரியங்கள் ஒன்றுக்கும் உதவாது; தங்களுக்கு வெட்கமாக அவர்கள்தானே, அவைகள் ஒன்றும் காணாமலும், ஒன்றும் அறியாமலும் இருக்குமென்று அவைகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறார்கள்.

௰ ஒன்றுக்கும் உதவாத தேவனை உருவாக்கிச் சுரூபத்தை வார்க்கிறவன் எப்படித்தொத்தவன்?

௰௧ இதோ, அவனுடைய கூட்டாளிகளெல்லாம் வெட்குவார்கள்; ஏனெனில், தொழிலாளிகள் நரசிவன்கள்தானே; அவர்கள் எல்லாரும் கூடிக்கொண்டு நிற்கட்டும்; அவர்கள் ஏகமாய்த் திகைத்து வெட்கப்படுவார்கள்.

௰௨ ¶ *கொல்லன் இரும்பைக் குறட்டால் இடுக்கி, தழலிலே வேகவைத்து, சுத்தியல்

னால் அதை உருவேற்படுத்தி, தன் புயத்தின் பலத்தினாலே அதைச் செப்பனிடுகிறான்; பெலனற்றுப்போகுமட்டும் பட்டினியுமாயிருக்கிறான்; இளைத்துப்போகுமட்டும் தண்ணீர் குடியாமலுமிருக்கிறான்.

*ஏசா. ௪௰. ௰௯-௨௰: ௪௧. ௭. எரே. ௰. ௩-௫.

௰௩ தச்சன் நூல்பிடித்து, மட்டப்பலகைபால் மரத்துக்குக் குறிபோட்டு, அதைக் கோணங்கோணமாகப் பிடித்து, கவராசத்தால் அதை ஊன்றி, அது வீட்டிலே வாசமாயிருப்பதற்காக அதை ஒரு புருஷனுடைய சாயலும், ஒரு மனுஷனுடைய உருவமும் ஆக்குகிறான்.

௰௪ அவன் தனக்குக் கேதுருக்களை வெட்டப்போகிறபோது, ஒரு புங்கமரத்தை, அல்லது ஒரு கர்வாலியுமரத்தைத் தெரிந்துகொண்டு, காட்டுமரங்களிலே பலக்க அதைத் தனக்கு வளர்க்கிறான்; அல்லது அசோகமரத்தை, மழை அதைப் பயிராக்கும்படிக்கு நாட்டுகிறான்.

௰௫ மனுஷனுக்கு அவைகள் அடுப்புக்காகும்போது, அவன் அவைகளில் எடுத்துக் குளிர்காய்ந்துகொள்ளுகிறான்; நெருப்பைமூட்டி அப்பமும் சுடுகிறான்; என்றாலும், ஒரு தேவனையும் உண்டுபண்ணி, அதைப் பணிந்து, ஒரு சுரூபத்தை அதினாலே செப்பனிட்டு, அதை வணங்குகிறான்.

௰௬ அதில் ஒருபங்கை அடுப்பில் எரிக்கிறான்; ஒரு பங்கினால் இறைச்சியைச் சமைத்து, புசித்து, பொரியலைப் பொரித்து, திருத்தியாகி, குளிருங்காய்ந்துகொண்டு, ஆகா, அனலானேன்; நெருப்பைக் கண்டேனென்று சொல்லி,

௰௭ அதின் மீதியான பங்கைத் தேவனாகவும், தனக்குச் சுரூபமாகவும்செப்பனிட்டு, அதற்குமுன் விழுந்து, அதை வணங்கி: என்னை விடுவி; ஏனெனில், நீ என் தேவனென்று அதை நோக்கி விண்ணப்பஞ்செய்கிறான்.

௰௮ அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்; ஏனென்றால் காணாதபடிக்கு அவர்கள் கண்களும், உணராதபடிக்கு அவர்கள் இருதயமும், பூசப்பூசப்பட்டு இருக்கின்றன.

௰௯ அதிலே பாதியை அடுப்பில் எரித்தேன்; அதினுடைய தழலின்மேல் அப்பத்தையும் சுட்டு, இறைச்சியையும் பொரித்துப் புசித்தேன்; அதின் மீதியான பங்கை நான் அருவருப்பாக்குவேனோ? ஒரு மரத்தின் துண்டை வணங்குவேனோ என்று சொல்ல, அவன் தன் மனதுக்குள்ளே தோன்றவில்லை; அம்மாத்திரம் அறிவும் சொரணையுமில்லை.

௨௰ அவன் சாம்பலிலே மேய்கிறான்; அவனுடைய இருதயம் அவனைப் புரட்டிவிட்டது; அவன் தன் ஆத்துமாவைத் தப்புவிக்காமலும், என் வலதுகையிலே மோசமல்லவோ இருக்கிறதென்று சொல்லாமலுமிருக்கிறான்.

௨௧ ¶ யாக்கோபே, இஸ்ரவேலே, இவைகளை நினை; ஏனெனில், *நீ நம்முடைய தாசன்; உன்னை உருவாக்கினோம்; நீ நம்முடைய தாசன்; இஸ்ரவேலே, நீ நம்மால் மறக்கப்படுவதில்லை. *உ. வச.

௨௨ உன் மீறுதல்களை *மந்தாரத்தைப்போலவும், உன் பாவங்களை மேகத்தைப்போலவும் நிக்கிரகம்பண்ணுகிறோம்; நம்மண்டைக்குத் திரும்பு; ஏனெனில், உன்னை மீட்டுக்கொண்டோம். *ஏசா. ௧. ௰௮. ௪௩. ௨௫.

௨௩ ¶ *வானங்களே, கெம்பீரியுங்கள்; ஏனெனில், கர்த்தர் அதைச்செய்தார்; பூதலமான தாழ்விடங்களே, ஆர்ப்பரியுங்கள்; பருவதங்களே, காடே, காட்டிலுள்ள சகல மரங்களே, கெம்பீரமாய் முழங்குங்கள்; ஏனெனில், கர்த்தர் யாக்கோபை மீட்டு, இஸ்ரவேலில் மகிமைப்படுகிறார்.

*ஏசா. ௪௯. ௰௩. சங். ககூ. க, உ.

௨௪ ¶ உன் மீட்பரும் உன்னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவருமான கர்த்தர் சொல்லுகிறதாவது: நாமே எல்லாவற்

றையும் செய்கிற கர்த்தர்; நாம் ஒருவராய் வானங்களை விரித்து, நாமாய்ப் பூமியைப் பரப்பினவர்.

௨௫ நாம் கட்டுக்கதைக்காரரின் குறிகளை அவத்தமாக்கி, குறிசொல்லுகிறவர்களை நின் மூடராக்கி, ஞானிகளைப் பின்னிடத்திருப்பி, அவர்கள் அறிவைப் பயித்தியமாகப்பண்ணுகிறவர்.

௨௬ நாம் நம்முடைய ஊழியக்காரரின் வார்த்தையை நிலைப்படுத்தி, நம்முடைய தானாபதிகளின் ஆலோசனையை நிறைவேற்றி, குடியேறுவாயென்று எருசலேமுக்கும், கட்டப்படுவீர்களென்று யூதாவின் பட்டணங்களுக்கும் சொல்லி, அவைகளின் பாழான தலங்களை எடுப்பிப்பவர்.

௨௭ நாம் ஆழத்துடனே, வற்றிப்போ; உன் நதிகளை வெட்டாந்தரை ஆக்குவோமென்று சொல்லுகிறவர்.

௨௮ கோரேசைக்குறித்து; அவன் நம்முடைய மேய்ப்பன்; அவன் எருசலேமுக்குக் கட்டப்படு என்றும் தேவாலயத்துக்கு அஸ்திபாரப்படு என்றும், சொல்லி, நமக்குப் பிரியமானதையெல்லாம் நிறைவேற்றுவானென்று நாம் சொல்லுகிறவர்.

## ௪௫. அதிகாரம்.

கர்த்தராகிய நாம் அபிஷேகம்பண்ணுவித்த *கோரேசுக்குமுன்பாகச் சாதிகளைக் கீழ்ப்படுத்தி, இராசாக்களின் இடைகளைக் கட்டவிழ்க்கும்படிக்கும், அவனுக்குமுன்பாக வாசல்கள் பூட்டப்படாதிருக்க, கதவுகளைத் திறந்துவைக்கும்படிக்கும், அவனை அவன் வலதுகையைப் பிடித்துக்கொண்டு, அவனுக்குச் சொல்லுகிறதாவது:

*ஏசா. ௪௪. ௨௮.

௨ நாம் உனக்குமுன்பாக நடந்து, கோணலானவைகளைச் செவ்வையாக்குவோம்.

௩ உன்னைப் பேர்சொல்லி அழைக்கிற இஸ்ரவேலின் பராபரனாகிய நாமே கர்த்தரென்று நீ அறியும்படிக்கு, நாம் நம்முடைய தாசனாகிய யாக்கோபின் நிமித்தமும், நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலின்நிமித்தமும், வெண்கலக்கதவுகளை உடைத்து, இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்து, அந்தகாரத்தில் இருக்கிற பொக்கிஷங்களையும் ஒளிக்கப்பட்டிருக்கிற புதையல்களையும் உனக்குக் கொடுப்போம்.

௪ அதற்காக நாம் உன்னைப் பேர்சொல்லி அழைத்து, நீ நம்மை அறியாதிருக்கையில் உனக்கு நாமம் தரித்தோம்.

௫ *நாமே கர்த்தர், வேறொருவர் இல்லை; நம்மைத்தவிரத் தேவனில்லை.

*௫ மோ. ௩௨. ௩௯.

௬ நம்மைத்தவிர ஒருவருமில்லையென்பது சூரியன் உதிக்கிற திசையும், அது அஸ்தமிக்கிற திசையுந்துவக்கி அறியப்படும்படிக்கு நாம் உன்னை, நீ நம்மை அறியாதிருக்கையில் இடைக்கட்டினோம்; நாமே கர்த்தர், வேறொருவரில்லை.

௭ வெளிச்சத்தையும் உருவேற்படுத்தி, இருளையும் சிருஷ்டித்து, சுகவாழ்வையும் உண்டுபண்ணி, *துன்பத்தையும் படைப்பிக்கிறவர் நாமே; கர்த்தராகிய நாமே இவைகளையெல்லாம் செய்கிறவர்.

*ஆமோ. ௩. ௬.

௮ ¶ வானங்களே, உயர இருந்து சொரியுங்கள்; ஆகாயமண்டலங்கள் *நீதியைப் பொழியக்கடவன; பூமி திறவுண்டு, இரட்சிப்பின் கனியைத்தந்து, நீதியுங்கூட விளைவதாக; கர்த்தராகிய நாம் இவைகளைச் சிருஷ்டிக்கிறோம். *ஒசே. ௰. ௰௨.

௯ ¶ மண்ணோடுகளோடொத்த ஓடாயிருந்தும், தன்னை உருவாக்கினவரோடே வழக்காடுகிறவனுக்கு ஐயோ! *களிமண் தன்னை உருவாக்கினவனுடனேஎன்னசெய்கிறாயென்றும் உன் கிரியைக்கான கைகள் இல்லையென்றும் சொல்லுமோ? *உரோ.௯.௨௰.

௰ தகப்பனோடே ஏன் சனிப்பித்தாயென்றும், தாயோடே, ஏன் பெற்றாயென்றும் சொல்லுகிறவனுக்கு ஐயோ!

௰௧ ¶ இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரும் அதை உருவாக்கினவரும் சொல்லுகிறதாவது: வருங்காரியங்களைக்குறித்து நம்மைக் கேட்கிறீர்கள்; நம்முடைய பிள்ளைகளுக்காகவும், நம்முடைய கரங்களின் கிரியைக்காகவும் நமக்குத் திட்டம் கற்பிப்பீர்களோ?

௰௨ *நாம் பூமியை உண்டுபண்ணி, நாமே அதின்மேல் இருக்கிற மனுஷனைச் சிருஷ்டித்தோம்; நம்முடைய கரங்கள் வானங்களை விரித்தன; அவைகளின் சேனைக்கெல்லாம் நாம் கற்பித்தோம். *ஏசா. ௪௰. ௨௬.

௰௩ நாம் நீதியாக அவனை எழுப்புகிறோம்; அவன் வழிகளையெல்லாம் செவ்வையாக்குவோம்; *அவன் நம்முடைய பட்டணத்தைக் கட்டி, சிறைப்பட்டுப்போன நம்முடையவர்களைக் கிரயமில்லாமலும், பரிதானமில்லாமலும் விடுதலையாக்குவானென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
*௧. வச. ௨ நாளா. ௩௬. ௨௨. எஸ். ௧. ௧. ழு.

௰௪ ¶ எகிப்தின் பிரயாசமும், எத்தியோப்பியரின் வர்த்தக இலாபமும், நெடிய ஆள்களாகிய சபேயரின் வர்த்தக இலாபமும் உன்னண்டைக்குத் தாண்டிவந்து, உன்னுடையதாகும்; அவர்கள் உன் பிறகே சென்று, விலங்குகளில் நடந்துவந்து, உனக்குள்ளேதானே பராபரன் இருக்கிறார், அவரையல்லாமல் வேறே தேவன் இல்லையென்று, உன்னைப்பணிந்துகொண்டு, உன்னைநோக்கி விண்ணப்பம்பண்ணுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫ இஸ்ரவேலின் பராபரனும் இரட்சகருமாகிய தேவரீர் மெய்யாகவே *மறைவான பராபரனாயிருக்கிறீர். *சங். ௪௪. ௨௪. உரோ. ௰௧. ௩௩, ௩௪.

௰௬ சுரூபங்களை உண்டுபண்ணுகிற அனைவரும் நாணி, இலச்சையும் அடைந்து, ஏகமாய் வெட்கப்பட்டுப்போவார்கள்.

௰௭ இஸ்ரவேலோவெனில், கர்த்தராலே நித்திய இரட்சிப்பாக இரட்சிக்கப்படும்; நீங்கள் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் நாணாமலும், வெட்கப்படாமலும் இருப்பீர்கள்.

௰௮ ¶ ஏனெனில், வானங்களைச் சிருஷ்டித்து, பூமியையும் வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல் அதைக் குடியிருப்பாகச் செப்பனிட்டுப் படைத்து, அதை உருவேற்படுத்தின பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: *நாமே கர்த்தர் வேறொருவரில்லை. *௫. வச.

௰௯ நாம் அந்தரங்கத்திலும், பூமியின் அந்தகாரமான இடத்திலும் பேசினதில்லை; நாம் யாக்கோபின் வித்துக்கு விருதாவாக நம்மைத் தேடுங்களென்று சொன்னதுமில்லை; நாம் நீதியைப் பேசி, நிதானங்களை அறிவிக்கிற கர்த்தர்.

௨௰ சாதிகளிலே தப்பினவர்களே, *கூடிக்கொண்டு வாருங்கள்; ஏகமாய்ச் சேருங்கள்; தங்கள் சுரூபங்களின் மரத்தைச் சுமந்து, இரட்சிக்கமாட்டாத தேவனைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் அறிவில்லாதிருக்கிறார்கள். *ஏசா. ௪௩. ௯.

௨௧ நீங்கள் அறிவிக்கும்படிக்குச் சேர்ந்து, ஏகமாய் யோசனையும்பண்ணுங்கள்; இதைப் பூருவகாலமுதற்கொண்டு கேட்கப்பண்ணி, அப்போதுதுவக்கி அதை அறிவித்தவர் யார்? கர்த்தராகிய நாமல்லவோ? நீதிபரனும், இரட்சகருமாகிய நம்மையல்லாமல் வேறே தேவனே இல்லை; நம்மைத்தவிர வேறொருவருமில்லை.

௨௨ *பூமியின் எல்லா எல்லைகளே, நம்மை நேரிட்டு நோக்குங்கள்; அப்போது இரட்சிக்கப்படுவீர்கள்; ஏனென்றால், நாமே பராபரன், வேறொருவருமில்லை. *௧தீமோ. ௨. ௩, ௪.

௨௩ *நமக்கு முழங்கால் யாவும் முடங்கி, கர்த்தருக்குள்மாத்திரம் எனக்கு நீதிகளும் பெலனும் உண்டென்று, நாவு யாவும் சத்தியம்பண்ணவேண்டுமென்று, நம்மைக்கொண்டு நாம் ஆணையிட்டோம்; இந்த

யான வார்த்தை நமது வாயிலிருந்து புறப்பட்டது; அது மாறுவதும் இல்லையென்கிறார். *பிலி. ௨. ௰, ௰௧.

௨௪ அப்படிக்கொத்தவர்கள் அவரண்டைக்குவந்து சேருவார்கள்; ஆனால், அவருக்கு விரோதமாய் எரிகிற யாவரும் வெட்கப்படுவார்கள்.

௨௫ இஸ்ரவேலின் வித்தாகிய யாவரும் கர்த்தருக்குள் நீதிமான்களாகிமேன்மைபாராட்டுவார்கள்.

## ௪௬. அதிகாரம்.

பேல் குனிந்து, நேபோ மடங்கிப்போம்; அவர்களுடைய விக்கிரகங்கள் சீவன்களுக்கும், மிருகங்களுக்கும் சுமையாகும்; மூட்டைகளாகிய உங்கள் சுமைகள் இளைப்பான சீவன்களுக்குப் பாரமாம்.

௨ ஏகமாய் மடங்கிக் குனியும்; மூட்டையாகாதபடிக்கு அவைகள் தப்பமாட்டாது; அவைகள்தாமே சிறைப்பட்டுப்போம்.

௩ ¶ தாயின் வயிற்றிலேதுவக்கி நம்மாலே ஏந்தப்பட்டு, தாயின் கர்ப்பத்திலேதுவக்கிச் சுமக்கப்பட்டவர்களாகிய யாக்கோபின் வீட்டாரே, இஸ்ரவேலின் வீட்டில் மீதியாகிய சகல சனங்களே, நம்மைக் கேளுங்கள்.

௪ *உங்கள் முதிர்ந்த வயதுமட்டுக்கும் நாம் அவரே; நரைமட்டுக்கும் நாம் சுமப்போம்; நாம் அப்படிச்செய்துவந்தோம், இனிமேலும் நாம் எடுப்போம், நாம் சுமப்போம், தப்பவிடுவிப்போம். *சங். ௭௧. ௰௮.

௫ ¶ யாருக்கு *நம்மைச் சாயலும், சமானமுமாக்கி, யாருக்கு நாம் சாயலாகும்படிக்கு நம்மை ஒப்பிடுவீர்கள்? *சங். ௪௰. ௰.

௬ *பையிலிருக்கிற பொன்னைச் செலவழித்து, வெள்ளியைத் தராசில் நிறுத்துத்தட்டானுடனே கூலிபொருந்திக்கொள்ளுகிறார்கள்; அவன் அதைத் தேவனுக்குகிறான்; அதை வணங்கிப் பணிந்துகொள்ளுகிறார்கள். *ஏசா. ௪௧. ௭: ௪௪. ௯-௨௰.

௭ அதைத் தோளின்மேல் எடுத்து, அதைச் சுமந்து, அதை அதின் தானத்திலே வைக்கிறார்கள்; அங்கே நிற்கும்; தன் இடத்தைவிட்டு அசையாது; ஒருவன் அதை நோக்கிக் கூப்பிட்டால், அது மறுஉத்தரவு கொடுக்கிறதுமில்லை; அவன் இக்கட்டை நீக்கி, அவனை இரட்சிக்கிறதுமில்லை.

௮ ¶ இதை நினைத்து உங்களைத் திடப்படுத்திக்கொள்ளுங்கள்; பாதகரே, இதை மனதிலே வையுங்கள்.

௯ முந்திப் பூருவகாலம்துவக்கி நடந்தவைகளை நினையுங்கள்; ஏனெனில் *நாமே பராபரன், வேறொரு தேவனில்லை; நமக்கு ஒத்தது ஒன்றுமில்லை. *ஏசா. ௪௫. ௫.

௰ நாம் பிற்காரியத்தை ஆதிமுதற்கொண்டும், இன்னம் செய்யப்படாதவைகளைப் பூருவகாலமுதற்கொண்டும் அறிவித்து, *நம்முடைய ஆலோசனை நிற்குமென்றும், நமக்குச் சித்தமானவைகளையெல்லாம் செய்வோமென்றும் சொல்லி, *சங். ௩௩. ௰௧. வாக். ௰௯. ௨௧: ௨௧. ௩௰.

௰௧ உராஞ்சுகிற ஒரு பட்சியைக் கிழக்கிலும், நம்முடைய ஆலோசனையின் மனுஷனைத் தூரதேசத்திலுமிருந்து வரவழைக்கிறவராய் இருக்கிறோம்; அதைச் சொன்னோம். அதை வரவும்பண்ணுவோம்; அதைத் திட்டம்பண்ணினோம், அதைச் செய்துமிருப்போம்.

௰௨ ¶ முரட்டிருதயத்தாரே, நீதிக்குத் தூரமானவர்களே, நம்மைக் கேளுங்கள்.

௰௩ நம்முடைய நீதியைச் சமீபிக்கப்பண்ணுகிறோம், அது தூரமாயிருப்பதில்லை; நமது இரட்சிப்புத் தாமதிப்பதுமில்லை. நாம் சீயோனிலே இரட்சிப்பையும், இஸ்ரவேலுக்கு நமது மகிமையையும் கட்டளையிடுவோம்.

## ௪௭. அதிகாரம்.

பாபேல் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியே, நீ இறங்கி, *மண்ணிலே உளுக்காரு;

கல்தேயரின் குமாரத்தியே, தரையிலே உட்காரு; இனி இராசாசனமில்லை; ஏனெனில் நீ அப்புறம் செருக்குக்காரியும், சுக செல்வியுமென்று அழைக்கப்படுவதில்லை.
*ஏசா. ௨௬. ௫.

௨ ஏந்திரத்தை வாங்கி மாவரை; உன் கூந்தலை விரித்துவிடு; வெறுங்காலும் அம்மணத்தொடையுமாய் ஆறுகளைக் கடந்துபோ.

௩ *உன் நிருவாணம் திறக்கப்படும்; உன் இலச்சை காணப்பட்டுப்போம்; ஒருவனையும் பாராமல் நீதியைச் சரிக்கட்டுவோம். *நாகூ. ௩. ௫.

௪ ¶ எங்கள் மீட்பருடைய நாமம் இஸ்ரவேலின் பரிசுத்தராகிய சேனைகளுடைய கர்த்தரென்பது.

௫ கல்தேயரின் குமாரத்தியே, நீ மவுனமாய் உட்கார்ந்து, இருளுக்குள்ப்பிரவேசி; ஏனெனில், இனி இராச்சியங்களுடைய நாச்சியாரென்று அழைக்கப்படாய்.

௬ நாம் நமது சனத்தின்மேல் கடுங்கோபமடைந்து, நமது சுதந்தரத்தைப் பரிசுத்தக்கொலைச்சலாக்கி, அவர்களை உன் கையில் ஒப்புக்கொடுத்தோம்; நீயோவெனில், அவர்களுக்காக இரக்கம்வைக்காமல் முதிர்ந்தவயதுள்ளவர்களின்மேல் உன் நுகத்தடியை மகா பாரமாக்கி,

௭ *என்றென்றைக்கும் நாச்சியாராய் இருப்பேனென்று சொல்லி, இந்தக்காரியங்களை இதுவரைக்கும் உன் மனதிலே வைக்காமலும், அதின் முடிவை நினையாமலும் போனாய். *வெளி. ௰௮. ௭.

௮ இப்போதும் சுகமாயிருந்து, நான்தானே என்னைத்தவிர யாருமில்லை, நான் விதவையாய் உட்காராமலும், சந்தான சேதத்தை அறியாமலும் இருப்பேனென்று உன் இருதயத்திலே சொல்லுகிற செல்வியே, நாம் சொல்வதைக் கேள்.

௯ சந்தானசேதமும், விதவையிருப்பும், இவ்விரண்டும் உனக்கு அசுப்பிலே *ஒரே நாளிலே வரும்; உன் திரளான சூனியங்களினிமித்தமும், உன் தம்பனங்களின் மகா வெகுத்துவத்தினிமித்தமும் அவைகள் நிறைவாய் உன்மேலே வரும்.
*வெளி. ௰௮. ௮.

௰ ஏனெனில், உன் பொல்லாப்பிலே நீ திடநம்பிக்கையாயிருந்து, என்னைப்பார்க்கிறவர் இல்லையென்றாய்; உன் ஞானமும் உன் அறிவுமே உன்னைப் புரட்டின; ஆகையால் உன் இருதயத்திலே நான்தானே, என்னைத்தவிர யாருமில்லையென்றாய்.

௰௧ ஆனபடியால் எங்கேயிருந்து உதித்ததென்று நீ அறியாத ஒரு பொல்லாப்பு உன்மேல் வந்து, நீ நிவிர்த்தியாக்கமாட்டாத ஒரு விக்கினம் உன்மேல் விழுந்து, நீ அறியாதபடிக்கு அசுப்பிலே உண்டாகும் பாழ்க்கடிப்பு உன்மேல் வரும்.

௰௨ இப்போதும் இலாபம் அடையமாட்டுவாயோவென்றும், உன்னைப் பலப்படுத்துவாயோவென்றும், நீ உன் சிறுவயதுதுவக்கிப் பிரயாசப்பட்ட உன் தம்பனங்களிலும், உன் திரளான சூனியங்களிலும் நீ நில்.

௰௩ உன் திரளான யோசனைகளிலே வேசாறினையே; இப்போதும் *வானத்தைக் கவனித்து, நட்சத்திரங்களை நோக்கி, அமாவாசைகளைப் பார்த்துக் கணிக்கிறவர்கள் எழும்பி, உன்மேல் வருகிறவைகளுக்கு உன்னை விலக்கி இரட்சிக்கட்டும்.
*தானி. ௨. ௨.

௰௪ இதோ, தாளடிகளைப்போல இருப்பார்கள்; நெருப்பு அவர்களைச் சுட்டெரிக்கும்; தங்கள் பிராணனையே அவர்கள் அக்கினிச் சுவாலையின் கைக்குத் தப்புவிப்பதில்லை; அது குளிர்காயும் தழல்அல்ல; அது எதிரே உட்காரத்தக்க அடுப்புமல்ல.

௰௫ அப்படி உன் சிறுவயதுதுவக்கி நீ பிரயாசப்பட்ட உன் வியாபாரிகள் உனக்கு இருப்பார்கள்; அவரவர் தங்கள் போக்கிலேபோய் அலைவார்கள்; உன்னை இரட்சிப்பாரில்லை.

## ௪௮. அதிகாரம்.

இஸ்ரவேலென்றபேராய் அழைக்கப்பட்டு, யூதாவின் நீரூற்றிலிருந்து சுரந்தவர்களும், கர்த்தருடைய நாமத்தின்மேல் ஆணையிட்டு, இஸ்ரவேலுடைய பராபரனை நினைத்தும், அதை உண்மையும் நீதியுமாய்ச் செய்யாதவர்களும்.

௨ பரிசுத்த பட்டணத்தாரின்பேரைத் தரித்துக்கொண்டு, சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இஸ்ரவேலுடைய பராபரன்மேல் ஊன்றிக்கொள்ளுகிறவர்களுமாகிய யாக்கோபின் வீட்டாரே, கேளுங்கள்,

௩ முன் நடந்தவைகளை அதற்குமுன் அறிவித்தோம்; நமது வாயிலிருந்து பிறந்தது; அவைகளைக் கேட்கவும்பண்ணினோம்; அப்படியே அசுப்பிலே செய்தோம்; அப்படி வந்ததே.

௪ *நீ கடினமுள்ளவனென்றும், உன் பிடரி இருப்பு நரம்பும், உன் நெற்றி வெண்கலமுமென்றும் அறிந்திருக்கிறோம்.
*எரே. ௫. ௩. ஏசே. ௨. ௪.

௫ ஆகையால், என் விக்கிரகம் அவைகளைச் செய்ததென்றும், என் சுருபமும் நான் வார்ப்பித்ததும் அவைகளைக் கட்டளையிட்டனவென்றும் நீ சொல்லாதபடிக்கு, நாம் அதற்குமுன் அவைகளை உனக்கு முன்னறிவித்து, அவைகள் வராததற்குமுன்னே உனக்குக் கேட்கப்பண்ணினோம்.

௬ அவைகளைக் கேட்டாயே, அவைகளையெல்லாம் பார்; இப்போது நீங்களுமல்லவோ அவைகளை அறிவிக்கத்தகும்; இதுமுதல் புதியவைகளானவைகளையும் நீ அறிந்திராமல், வைத்துவைக்கப்பட்டவைகளையும் உனக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௭ அவைகள் ஆதிமுதற்கொண்டு அல்ல, இப்போது சிருஷ்டிக்கப்பட்டன; இதோ, அவைகளை அறிவேனென்று நீ சொல்லாதபடிக்கு, இந்நாள்களுக்குமுன்னே நீ அவைகளைக் கேட்டிருந்ததில்லை.

௮ நீ கேட்டதுமில்லை, அறிந்ததுமில்லை; அதுமுதல் உன் செவி திறந்துபோனதுமில்லை; ஏனெனில் நீ துரோகம்பண்ணுவதையும், நீ தாயின் கர்ப்பந்துவக்கி மீறுகிறவனென்று அழைக்கப்பட்டதையும் அறிந்திருந்தோம்.

௯ நமது நாமத்தின்நிமித்தம் நம்முடைய கோபத்தைத் தாமதிக்கப்பண்ணினோம்; உன்னைச் சங்கரிக்காதபடிக்கு நாம் நமது புகழ்ச்சியின்நிமித்தம் உனக்காகப் பொறுத்தும் இருப்போம்.

௰ இதோ, உன்னைப் புடமிடுகிறோம்; ஆனால் வெள்ளியைப்போலல்ல; சிறுமையின் குகையிலே உன்னைத் தெரிந்துகொள்ளப்பட்டவனாக்குகிறோம்.

௰௧ நம்முடையநிமித்தம், நம்முடையநிமித்தமே அதைச் செய்வோம்; ஏனெனில், எப்படி நமது நாமத்தின் பரிசுத்தம் கெலைக்கப்படலாம்; *நமது மகிமையை வேறொருத்தனுக்குக் கொடோம். *ஏசா. ௪௨. ௮.

௰௨ ¶ யாக்கோபே, நாம் அழைத்திருக்கிற இஸ்ரவேலே, நமக்குச் செவிகொடு, நாம் அவரே; *நாம் முந்தினவரும், நாம் பிந்தினவருந்தானே. *ஏசா. ௪௧. ௪: ௪௪. ௬.

௰௩ நம்முடைய கரமே பூமியை அஸ்திபாரப்படுத்தி, நம்முடைய வலதுகை வானங்களை அளவிட்டது; நாம் அவைகளைக் கூப்பிட, அனைத்தும் நிற்கும்.

௰௪ நீங்கள் எல்லாரும் கூடிவந்து கேளுங்கள்; *கர்த்தர் சிநேகித்திருக்கிறவன் அவருக்குச் சித்தமானதைப் பாபேலிலே செய்வான்; அவன் புயம் கல்தேயரின்மேல் இருக்கும் என்பவைகளை இவர்களில் அறிவித்தவன் யாவன்? *ஏசா. ௪௪. ௨௮.

௰௫ நாம், நாமே அதைச் சொன்னோம், நாம் அவனை அழைக்கிறவருமாய் இருக்கிறோம்; அவனை வரப்பண்ணுவோம்; அவன் வழி வாய்க்கிறதுமாயிருக்கும்.

௰௬ ¶ நம்மண்டையில் சேர்ந்து, நாம் சொல்வதைக் கேளுங்கள்; நாம் ஆதிமு

தற்கொண்டு அந்தரங்கத்திலே பேசினதில்லை; அது உண்டாகும் காலந்துவக்கி அங்கே நாம் இருந்தோம்; இப்போதோவெனில், கர்த்தராகிய ஆண்டவரும், அவருடைய ஆவியும் நம்மை அனுப்புகிறார்.

௰௭ இஸ்ரவேலின் பரிசுத்தராயிருக்கிற உன் மீட்பரான கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் பிரயோசனமாயிருக்கிறதை உனக்குப் போதித்து, *நீ நடக்கவேண்டிய வழியில் உன்னை நடத்துகிற உன் பராபரனாகிய கர்த்தர். *சங். ௩௨. ௮.

௰௮ *ஆ நம்முடைய கற்பனைகளைக் கவனித்தாயானால் நாவிளே; அப்போது உன் சமாதானம் நதியதத்தனையும், உன் நீதி சமுத்திரத்தின் அலைகளத்தனையுமாய் இருக்கும். *சங். ௮௧. ௰௪. ஹ.

௰௯ அப்போது உன் வித்து மணலத்தனையும், உன் கர்ப்பப்பிறப்புகள் அதின் பொடிக்கல்லுகளத்தனையுமாய் இருக்கும்; அப்போது அதின்பேர் நம்மைவிட்டு அறுப்புண்ணாமலும், அழிக்கப்படாமலும் இருக்கும்.

௨௰ ¶ *பாபேலிலிருந்து புறப்படுங்கள்; கல்தேயரைவிட்டுக் கெம்பீரசத்தமாய் ஓடிவாருங்கள்; இதை அறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள்; இதைப் பூமியின் கடையாந்தரமட்டும் வெளிப்படுத்துங்கள்; கர்த்தர் தம்முடைய அடியானாகிய யாக்கோபை மீட்டுக்கொண்டாரென்று சொல்லுங்கள் என்கிறார். *எரே. ௫௰. ௮. வெளி. ௰௮. ௪.

௨௰௧ *அவர் இவர்களை வனாந்தரங்களில் நடத்தும்போது, இவர்களுக்குத் தாகதவனமாயிராது; தண்ணீர்களைக் கல்மலையிலிருந்து இவர்களுக்குச் சுரக்கப்பண்ணி, தண்ணீர்கள் ஓடிவரக் கல்மலையைப் பிளப்பார். *௨ மோ. ௰௭. ௬.

௨௰௨ *ஆகாதவர்களுக்கோ சமாதானமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௫௭. ௨௧.

## ௪௯. அதிகாரம்.

தீவுகளே, நமக்குக் கேள்விகொடுங்கள்; தூரத்திலிருக்கிற சனசதளங்களே, கவனியுங்கள்; கர்த்தர் நம்மைத் தாயின் கர்ப்பத்திலேதுவக்கி அழைத்து, நான் என் தாயின் குடல்களில் இருக்கையில் என் நாமத்தைப் பிரஸ்தாபப்படுத்தினார்.

௨ *அவர் என் வாயைக் கூர்மையான பட்டையமாக்கி, தம்முடைய கரத்தின் நிழலினால் என்னை மறைத்து, என்னைத் துலக்கமான அம்பாக்கி, என்னைத் தம்முடைய அம்பறாத்தூணியிலே மூடிவைத்தார். *வெளி. ௧. ௰௬.

௩ நம்முடனே: நீரே *நம்முடைய ஊழியக்காரன்; இஸ்ரவேல் நாம் மகிமைப்படும் சாதியென்றார். *ஏசா. ௪௨. ௧.

௪ நாமோவென்றால் சொன்னதாவது: விருதாவாய் உழைக்கிறோம், வீணும் அவத்தமுமாய் நம்முடைய பெலனைச் செலவழிக்கிறோம்; ஆகிலும் நம்முடைய நியாயம் கர்த்தரிடத்திலும், நம்முடைய பலன் நம்முடைய பராபரனிடத்திலும் இருக்கிறதென்றோம்.

௫ இப்போதும் நம்மைத் தாயின் கர்ப்பத்திலேதுவக்கித் தமக்கு ஊழியக்காரனாக உருவேற்படுத்தின கர்த்தர், யாக்கோபைத் தம்மண்டைக்குத் திருப்பச்சொல்லுகிறார்; ஆனால் இஸ்ரவேல் சேராதேபோகிறது; ஆகிலும் கர்த்தருடைய பார்வையில் கனம் அடைவோம்; நம்முடைய பராபரன் நம்முடைய பெலனாயிருப்பார்.

௬ யாக்கோபின் கோத்திரங்களை நிமிர்த்தவும், இஸ்ரவேலில் மீந்துவைக்கப்பட்டவர்களைத் திருப்பவும், நீர் நமக்கு ஊழியக்காரனாயிருக்கிறது கொஞ்சக்காரியமாயிருக்கிறது; நீர் பூமியின் கடைசிபரியந்தமும் நமது இரட்சிப்பாயிருக்க, உம்மைச் *சாதிகளின் வெளிச்சமாகவும் வைத்தோமென்கிறார். *ஏசா. ௪௨. ௬, ௭. லூக். ௨. ௩௰, ௩௨. அப். ௰௩. ௪௭.

எ ¶ சத்தியமுள்ள கர்த்தரினிமித்தமும், உம்மைத் தெரிந்துகொண்ட இஸ்ரவேலுடைய பரிசுத்தரினிமித்தமும், இராசாக்கள் கண்டு எழுந்திருந்து, பிரபுக்கள் பணிந்துகொள்ளுவார்களென்று, இஸ்ரவேலின் மீட்பரும் அதின் பரிசுத்தருமாகிய கர்த்தர், சாதியால் அருவருக்கப்பட்டவரும் அதிகாரிகளின் பணிவிடைக்காரனுமான அசட்டைபண்ணப்பட்ட ஆத்துமாவுக்குச் சொல்லுகிறார்.

அ கர்த்தர் சொல்லுகிறதாவது: *பிரியமான காலத்தில் உம்முடைய வேண்டுதலைக் கேட்டு, இரட்சிப்பின் நாளிலே உமக்கு ஒத்தாசைபண்ணுகிறோம்; நீர் பூமியை நிமிர்த்தி, பாழாய்க்கிடக்கிற சுதந்தரங்களைச் சுதந்தரிக்கப்பண்ணவும், *௨ கொரி. ௬. ௨.

௯ கட்டுண்டவர்களுடனே, புறப்படுங்களென்றும், இருளில் இருக்கிறவர்களுடனே வெளிப்படுங்களென்றும் சொல்லவும், நாம் உம்மைக் காப்பாற்றி உம்மைச் சனத்தின் உடம்படிக்கையாகக் கட்டளையிடுவோம்; அவர்கள் வழிகளோரமாய் மேய்வார்கள்; சகல மேடுகளிலும் அவர்களுக்கு மேய்ச்சல் உண்டாயிருக்கும்.

௰ *அவர்கள் பசியாயிருப்பதுமில்லை; தாகமாயிருப்பதுமில்லை; உஷ்ணமாகிலும், வெயிலாகிலும் அவர்கள்மேல் படுவதுமில்லை; ஏனெனில் அவர்களுக்கு இரங்குகிறவர் அவர்களை நடத்தி, அவர்களை நீரூற்றுகளண்டைக்குக் கொண்டுபோய் விடுவார். *சங். ௨௩. ௧. ௩. ஏசா. ௩௧. ௯. வெளி. எ. ௰௬: ௰௭. ௰எ.

௰௧ *நம்முடைய பருவதங்களை எல்லாம் வழிகளாக்குவோம்; நம்முடைய பாதைகள் உயர்த்தப்பட்டவைகளுமாயிருக்கும். *ஏசா. ௪௰. ௪.

௰௨ இதோ, இவர்கள் தூரத்திலும், அதோ, அவர்கள் வடக்கிலும், மேற்கிலும், அவர்கள் சீனீம்தேசத்திலுமிருந்து வருவார்களென்கிறார்.

௰௩ ¶ *வானங்களே, கெம்பீரியுங்கள்; பூமியே, களிகூரு; பருவதங்களே, கெம்பீரமாய் முழங்குங்கள்; ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தைத் தேற்றரவுபண்ணினார்; சிறுமைப்பட்டிருக்கிற தம்முடையவர்கள்மேல் இரக்கமாயிருப்பார். *ஏசா. ௪௪. ௨௩.

௰௪ ¶ சீயோனோவென்றால், கர்த்தர் என்னைக் கைவிட்டார், ஆண்டவர் *என்னை மறந்தாரென்கிறது. *ஏசா. ௫௪. ௬-அ.

௰௫ ஒரு ஸ்திரி தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கு இரங்காதபடிக்கு, தன் பாலகனை மறப்பாளோ? அப்படிப்பட்டவள் அவைகளை மறந்தாலும் நாம் உன்னை மறப்பதில்லை.

௰௬ இதோ, உள்ளங்கைகளில் உன்னைப் பதித்தோம்; *உன் மதில்கள்நிமித்தம் நமக்குமுன்பாக இருக்கின்றன. *சங். ௫௪. ௨௰.

௰எ உன் குமாரர் தீவிரித்து வருவார்கள்; உன்னை நிர்மூலமாக்கினவர்களும், உன்னைப் பாழ்க்கடித்தவர்களும் உன்னைவிட்டுப் புறப்பட்டுப்போவார்கள்.

௰அ *உன் கண்களை ஏறெடுத்துச் சுற்றிலும் பார்; இவர்கள் எல்லாரும் கூட்டப்பட்டு உன்னண்டைக்கு வருகிறார்கள்; நீ இவர்களை எல்லாம் ஆபரணமாகத் தரித்து, ஒரு மணவாட்டியைப்போல, இவர்களை உடையாகக் கட்டிக்கொள்ளுவாயென்கிறதை, நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தர் உரைக்கிறார். *ஏசா.௬௰.௪.

௰௯ ஏனெனில், உன்னுடைய வனாந்தரங்களும், பாழான உன்னுடைய தானங்களும், நிர்மூலமான உன்னுடைய தேசமுமே இனிக்குடிகளின் திரளினாலே உனக்கு நெருக்கமாயிருக்கும்; உன்னை விழுங்கினவர்களோவெனில் தூரமாவார்கள்.

௨௰ இடம் எனக்கு நெருக்கமாயிருக்கிறது; நான் குடியிருக்கும்படிக்கு ஒற்றியிருவென்று, உனக்கு உண்டாயிருக்கப்போகிற பிள்ளைகளற்றிருந்த உன் காதுகள் கேட்கச் சொல்லுவதுண்டு.

௨௧ நீ உன் இருதயத்திலே: இவர்களை எனக்குப் பிறப்பித்தவர் யார்? நான் பிள்ளைகளற்றும், தனித்தும், சிறைப்பட்டும், நிலையற்றும் இருந்தேனே; இவர்களை எனக்கு வளர்த்தவர் யார்? இதோ, நான் ஒண்டியாய் விடப்பட்டிருந்தேனே; இவர்கள் எங்கேயிருந்தவர்கள்? என்பாய்.

௨௨ ¶ இதோ, சாதிகளுக்கு நேராக நமது கரத்தை உயர்த்தி, சனசதனங்களுக்கு நேராக நமது கொடியை ஏற்றுவோம்; அப்போது உன் குமாரரைக் கொடுங்கைகளில் ஏந்திக்கொண்டு வருவார்கள்; உன் குமாரத்திகள் தோள்களின்மேல் எடுத்துவரப்படுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௩ *இராசாக்கள் உன்னை வளர்க்கிறவர்களும், அவர்கள் நாயகிகள் உன் தாதிகளுமாயிருப்பார்கள்; †தரையிலே முகங்குப்புற விழுந்து, உன்னைப் பணிந்து, உன் கால்களின் தூளை நக்குவார்கள்; நாம் கர்த்தர், நமக்குக் காத்திருக்கிறவர்கள் வெட்கிப்போவதில்லை என்கிறதை அப்போது அறிந்துகொள்ளுவாய். *ஏசா. ௬௰. ௰௬. †சங். ௨௰. ௯.

௨௪ ¶ பராக்கிரமன் கையிலே கொள்ளையுடைமை பறிக்கப்படக்கூடுமோ? அல்லது நீதியாய்ச் சிறைப்பட்டுப்போனவர்கள் விடுவிக்கப்படக்கூடுமோ?

௨௫ இப்போதும் இதோ, *பராக்கிரமன் சிறைப்படுத்தினவர்களும் பறிக்கப்படுவார்கள்; பலவந்தன் கொள்ளையிட்டதும் விடுவிக்கப்படும்; உன்னோடு வழக்காடுகிறவர்களோடே †நாம் வழக்காடி, உன் பிள்ளைகளை நாம் இரட்சித்துக்கொண்டு, *லூக். ௰௧. ௨௨. †சங். ௩௫. ௧.

௨௬ *உன்னை ஒடுக்கினவர்களுடைய மாம்சத்தை அவர்களுக்கே தின்னக்கொடுப்போம்; மதுபானத்தால் வெறியாகுமாப்போலே தங்களுடைய இரத்தத்தினாலே வெறியாவார்கள்; கர்த்தரும் யாக்கோபிலே வல்லவருமாகிய நாம் உன் இரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கிறதை மாம்சமெல்லாம் அறிந்துகொள்ளுமென்று கர்த்தர் சொல்லுகிறார். *வெளி. ௰௬. ௬.

## ௫௰. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் உங்கள் தாயை அனுப்பிவிட்டோமென்று அவளுக்குக் கொடுத்த தள்ளுதலின்சீட்டு எங்கே? அல்லது நாம் கடன்பட்ட எவனுக்கு உங்களை விற்றுப்போட்டோம்? *இதோ, உங்கள் அக்கிரமங்களினிமித்தம் விற்றுப்போடப்பட்டீர்கள்; உங்கள் பாதகங்களினிமித்தம் உங்கள் தாய் அனுப்பிவிடப்பட்டாள். *மத். ௰௬. ௭.

௨ நாம் வந்தபோது ஒருவனுமில்லாமலும், நாம் கூப்பிட்டபோது, மறுஉத்தரவு கொடுக்கிற ஒருவனும் இல்லாமலும் போனதேது? *மீட்கக்கூடாதபடிக்கு நம்முடைய கை குறுகிற்றோ? விடுவிக்கிறதற்கு நம்மிலே பெலன் இல்லாமல் போயிற்றோ? இதோ, நமது உதம்புதலினாலே நாம் கடலை வறளப்பண்ணி, நதிகளை வெட்டாந்தரையாக்கிப்போடுகிறோம்; அவைகளின் மீன், தண்ணீரில்லாமல் தாகத்தால் செத்து நாற்றமெடுக்கும்படியாகத்தானே. *ஏசா. ௫௯. ௧. ௪ மோ. ௰௧. ௨௩.

௩ நாம் வானங்களுக்குக் காரிருளை உடுத்தி, இரட்டை அவைகளின் மூடுசீலையாக்குகிறோம்.

௪ ¶ இளைப்பானவனோடே நாம் சமயத்திலே வார்த்தைசொல்ல அறியும்படிக்கு, கர்த்தராகிய ஆண்டவர் நமக்குக் கல்விமான்களின் நாவைத் தந்தார்; *காலைமாறு நம்மை எழுப்புகிறார்; கற்றுக்கொள்ளுகிறவர்களைப்போலே கேட்கும்படிக்கு நமக்குச் செவியை எழுப்புகிறார். *மத். ௰௧. ௨௮, ௨௯.

௫ கர்த்தராகிய ஆண்டவர் நமக்குச் செவியைத்திறந்தார்; நாம்முரண்டுத்தனம்பண்ணுகிறவரும் அல்ல; நாம்பின்வாங்கிவிலகோம்.

௬ *நம்முடைய முதுகை அடிக்கிறவர்களுக்கும், நம்முடைய தாடைகளை மயிரைப் பிடுங்குகிறவர்களுக்கும் ஒப்புக்கொடுத்தோம்; நம்முடைய முகத்தை அவமானங்களுக்கும், உமிழ்நீருக்கும் மறையோம்.
*மத். உ௬. ௬எ, ௬அ. யோவா. ௰௬. க.

எ ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் நமக்குத் துணைசெய்கிறார்; ஆகையால் நாம் வெட்கப்படோம்; ஆனதுகொண்டு நம்முடைய முகத்தைக் கற்பாறையாக வைத்தோம்; ஏனெனில், நாம் வெட்கிப்போவதில்லை என்று அறிவோம்.

அ நம்மை நீதிவிளங்கப்பண்ணுகிறவர் சமீபமாய் இருக்கிறார்; யார் நம்மோடே வழக்காடுவார்? கூடிக்கொண்டு நிற்போம், யார் நம்முடைய எதிராளி? அவன் நம்மண்டை சேரட்டும்.

௯ இதோ, கர்த்தராகிய ஆண்டவர் நமக்குத் துணைசெய்கிறார்; நம்முடையமேலே குற்றம் சுமத்துபவர் யார்? இதோ, அவர்கள் எல்லாரும் ஒரு வஸ்திரத்தைப்போலப் பழசாவார்கள்; பொட்டு அவர்களை அழிக்கும்.

௰ ¶ உங்களில் எவன் கர்த்தருக்குப் பயந்து, அவருடைய ஊழியக்காரனுடைய சொல்லைக்கேட்டு, தனக்கு வெளிச்சமில்லாததினால் இருட்டிலே நடக்கிறானோ, அவன் கர்த்தருடைய நாமத்தை நம்பி, தன் பராபரனைச் சார்ந்துகொள்ளக்கடவன்.

௰௧ இதோ, நெருப்பைக் கொளுத்தி, அக்கினிப்பொறிகளால் அரைக்கட்டிக்கொண்டிருக்கிற நீங்கள் அனைவரும், உங்கள் நெருப்பின் தீயிலும் நீங்கள் மூட்டின அக்கினிச்சுவாலைகளிலும் நடவுங்கள்; நம்முடைய கரத்தினாலே இது உங்களுக்கு உண்டாகும்; வேதனையிலே கிடப்பீர்கள்.

## ருக. அதிகாரம்.

நீதியைத் தொடர்ந்து, கர்த்தனைத் தேடுகிற நீங்கள் நம்முடைய சொல்லைக் கேளுங்கள்; *நீங்கள் வெட்டி எடுக்கப்பட்ட கல்மலையையும், †நீங்கள் தோண்டி எடுக்கப்பட்ட துரவின் குழியையும் நோக்கிப்பாருங்கள். *உரோ. ௬. ௰௬-உக. †எபி. ௰க. ௰க.

உ உங்கள் தகப்பனாகிய ஆபிரகாமையும், உங்களைப் பெற்ற சாராளையும் நோக்கிப்பாருங்கள்; ஏனென்றால், அவன் ஒருத்தனாய் இருக்கையில் *நாம் அவனை அழைத்து, அவனை ஆசீர்வதித்து, அவனைப் பெருகப்பண்ணினோம். *க மோ. ௰உ. க, ங.

ங அதேதெனில், கர்த்தர் சீயோனைத் தேற்றரவுபண்ணுவார்; அவர் அதின் பாழ்த்தலங்களை எல்லாம் தேற்றரவுபண்ணி, அதின் வனாந்தரத்தை ஏதேனைப்போலவும், அதின் அந்தர வெளியைக் கர்த்தரின் தோட்டத்தைப்போலவும் ஆக்குவார்; சந்தோஷமும், மகிழ்ச்சியும், துதியும், கீதசத்தமும் அதில் உண்டாயிருக்கும்.

௪ ¶ நம்முடைய சனமே, நம்மைக் கவனியுங்கள்; நம்முடைய சனசதனமே, நமக்குச் செவிகொடுங்கள்; ஏனெனில், வேதம் நம்மிலிருந்து வெளிப்படும்; நம்முடைய நியாயத்தைச் சனசதனங்களின் வெளிச்சமாக வீசப்பண்ணுவோம்.

ரு நமது நீதி சமீபித்திருக்கிறது; நமது இரட்சிப்பு வெளிப்படும்; நம்முடைய புயங்கள் சனசதனங்களை நியாயந்தீர்க்கும்; தீவுகள் நமக்குக் காத்திருந்து, நம்முடைய புயத்தின்மேல் நம்பிக்கையாய் இருக்கும்.

௬ உங்கள் கண்களை வானத்துக்கு ஏறெடுத்து, தாழ இருக்கிற பூமியையும் நோக்கிப்பாருங்கள்; ஏனெனில், *வானம் புகையைப்போல உருவழிந்து, பூமி வஸ்திரத்தைப்போலப் பழசாய்ப்போம்; அதின் குடிகளும் அப்படியே சாவார்கள்; நம்முடைய இரட்சிப்போவென்றால், என்றென்றைக்கும் இருக்கும்; நம்முடைய நீதி முறிந்துபோவதில்லை. *சங். ௱உ. உ௬. லூக். உக. ௩௩.

எ ¶ நீதியை அறிந்தவர்களே, *நமது சொல்லைக் கேளுங்கள்; நம்முடைய வேதத்தைத்

இருதயத்திலே தரித்திருக்கிற சனமே,†மனுஷரின் நிந்தனைக்குப் பயப்படாமலும், அவர்கள் தூஷணங்களாலே கலங்காமலும் இருங்கள். *சங். ௩௭. ௩௧. †மத். ௫. ௰௧.

௮ ஏனென்றால், பொட்டு அவர்களை வஸ்திரங்களைப்போலே அரித்து, பூச்சி அவர்களை ஆட்டுமயிரைப்போலே சதைத்துப்போடும்; நம்முடைய நீதியோவென்றால் என்றென்றைக்கும்,நம்முடைய இரட்சிப்பு தலைமுறை தலைமுறைகளாகவும் இருக்கும்.

௯ ¶ எழும்பு, எழும்பு, பெலன்கொள்; கர்த்தரின் புயமே, முந்தின நாள்களுக்கும் பூருவதலைமுறைகளுக்கும் ஒத்தபடி எழும்பு; *இராகாப்பைத் துண்டித்ததும் †முதலையை வதைத்ததும் நீதானல்லவோ?

*௨ மோ. ௰௪. ௨௫. †ஏசே. ௨௯. ௩.

௰ மகா ஆழத்தின் தண்ணீர்களாகிய சமுத்திரத்தை வறண்டுபோகப்பண்ணினதும், மீட்கப்பட்டவர்கள் கடந்துபோகக் கடலின் பள்ளங்களை வழியாக்கினதும் நீதானல்லவோ?

௰௧ அப்படியே *கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கெம்பீரத்தோடே சீயோனுக்கு வருவார்கள்; நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்மேல் இருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியும் அவர்களைப் பிடிக்கும்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்.

*ஏசா. ௩௫. ௰.

௰௨ நாம், நாமே உங்களைத் தேற்றரவுபண்ணுகிறவர்; *சாகப்போகிற மனுஷனுக்கும், புல்லுக்கொப்பாகிற மனுஷபுத்திரனுக்கும் பயப்படுகிறதற்கும், *சங். ௱௰௮. ௬. மத். ௰. ௨௮.

௰௩ வானங்களை விரித்துப் பூமியை அஸ்திபாரப்படுத்தி, உன்னை உண்டாக்கின கர்த்தரை மறக்கிறதற்கும் நீ யார்? இடுக்கண் செய்கிறவன் அழிக்க ஆயத்தமாகிறபோது, நீ அவனுடைய உக்கிரத்துக்கு நித்தம் எந்நாளும் அருக்களிப்பானேன்? இடுக்கண் செய்பவனுடைய உக்கிரம் எங்கே?

௰௪ பரதேசியாய்ப்போகிறவன் தீவிரமாய் விடுதலையாவான்; அவன் கெபியிலே சாவதுமில்லை; அவனுடைய அப்பம் அவனுக்குக் குறைபடுவதுமில்லை.

௰௫ ஏனெனில், நாமே சமுத்திரத்தை அதின் அலைகள் கொந்தளிக்கத்தக்கவிதமாகக் குலுக்குகிற சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள உன் பராபரனாகிய கர்த்தர்.

௰௬ நாம் வானத்தை நாட்டி, பூமியை அஸ்திபாரப்படுத்தி, சீயோனுடனே, நீ நம்முடைய சனமென்று சொல்வதற்காக, நாம் நம்முடைய வார்த்தையை உன் வாயிலே கொடுத்து, நம்முடைய கரத்தின் நிழலினால் உன்னை மறைக்கிறோம்.

௰௭ ¶ எழும்பு, எழும்பு, கர்த்தருடைய உக்கிரத்தின் பாத்திரத்தை அவர் கையில் வாங்கிக் குடித்திருக்கிற எருசலேமே, எழும்பு, *தத்தளிப்பினுடைய பாத்திரத்தின் வண்டல்களைக் குடித்து உறிஞ்சினாய்.

*சங். ௬௰. ௫.

௰௮ அவள் பெற்ற எல்லாக் குமாரரிலும் அவளை மெதுவாய் நடத்துவாருமில்லை; அவள் வளர்த்த எல்லாக் குமாரரிலும் அவளைக் கைகொடுத்து அழைப்பாரும் இல்லை.

௰௯ இவ்விரண்டும் உனக்குச் சம்பவித்தன; உனக்குப் பரதபிக்கத்தக்கவன் யாவன்? பாழ்க்கடிப்பும், நொறுக்குதலும், பஞ்சமும், பட்டயமும் வந்தன; யாரைக்கொண்டு உன்னைத் தேற்றரவுபண்ணுவோம்?

௨௰ ¶ உன் குமாரர் மூர்ச்சித்து விழுந்தார்கள்; அவர்கள், வலையிலே சிக்குண்ட கலைமானைப்போலே, எல்லா வீதிகளின் முனையிலும் கர்த்தருடைய உக்கிரத்தினாலும், உன் பராபரனுடைய உதம்புதலினாலும் நிறைந்தவர்களாய்க் கிடக்கிறார்கள்.

௨௧ ஆனதுகொண்டு சிறுமைப்பட்டவளே, மதுபானம் இல்லாமல் வெறிகொண்டவளே, நீ கேள்.

௨௨ கர்த்தராகிய உன் ஆண்டவரும் தம்

முடைய சனத்துக்காக வழக்காடப்போகிற உன் பராபரனுமானவர் சொல்லுகிறதாவது: இதோ, தத்தளிப்பின் பாத்திரத்தை உன் கையிலே வாங்கிப்போடுகிறோம்; இனி, நம்முடைய உக்கிரத்தினுடைய பாத்திரத்தின் வண்டல்களை நீ குடிப்பதில்லை.

உ௩ *கடந்துபோகிறவர்களுக்கு நீ உன் முதுகைத் தரையும், தெருவும்ஆக்கும்படியாக, உன் ஆத்துமாவுடனே: நாங்கள் கடந்துபோகும்படிக்குக் குனியென்று சொல்லி, உன்னைச் சஞ்சலப்படுத்தினவர்களின் கையிலே அதைக் கொடுப்போம் என்கிறார்.

*சங். ௱உ௯. ௩.

## ௫௨. அதிகாரம்.

எழும்பு, எழும்பு, சீயோனே, உன் பெலனைத்தரித்துக்கொள்; பரிசுத்த பட்டணமாகிய எருசலேமே, உன் அலங்கார வஸ்திரங்களைத் தரித்துக்கொள்; ஏனெனில், சுன்னத்தில்லாதவனும் அசுத்தனும் இனி உனக்குள் வருவதில்லை.

உ தூளை உதறிப்போட்டு எழுந்திரு; எருசலேமே, உளுக்காரு; சிறைப்பட்டுப்போன சீயோன் குமாரத்தியே, உன் கழுத்தின் கட்டுகளை அவிழ்த்துவிடு.

௩ ¶ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: இலவசமாய் விற்கப்பட்டீர்கள், பணங்கொடாமலும் மீட்கப்படுவீர்கள்.

௪ ஏனென்றால் முந்தி நம்முடைய சனம் பரதேசியாய்த் தங்க எகிப்துக்கு இறங்கிப் போயிருந்தது; அசூரியனும் முகாந்தரமில்லாமல் அதை ஒடுக்கிப்போட்டானென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௫ இப்போதும், நமக்கு இங்கே என்ன இருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், நம்முடைய சனம் சும்மா கொண்டுபோகப்பட்டது; அதை ஆளுகிறவர்கள் அதை அலறப்பண்ணுகிறார்கள்; நித்தம் எந்நாளும் *நம்முடைய நாமம் தூஷணிக்கப்படுகிறது. *ஏசே. ௩௬. உ௰. உரோ. உ. உ௪.

௬ இதின்நிமித்தம், இதின்நிமித்தமே, நம்முடைய சனம் அக்காலத்திலே நம்முடைய நாமத்தை அறியும்; ஏனெனில் இதைச் சொல்லுகிறவர் நாமே; இதோ, இங்கே இருக்கிறோமென்று கர்த்தர் விளம்புகிறார்.

௭ ¶ *சமாதானத்தைக் கூறி, நற்காரியத்தைச் சுவிசேஷமாய் அறிவித்து, இரட்சிப்பைக் கூறி, சீயோனுடனே: உன் பராபரன் இராசரிகம்பண்ணுகிறாரென்று சொல்லுகிற சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின் மேல் எத்தனை அந்தமானவைகள்.

*நாகூ. உ. க. உரோ. ௰. ௰௫.

௮ உன் சாமக்காரருடைய சத்தம் கேட்கப்படும்; அவர்கள் சத்தத்தை உயர்த்தி ஏகமாய்க் கெம்பீரிக்கிறார்கள்; ஏனென்றால், கர்த்தர் சீயோனைத் திரும்பிவரப்பண்ணும் போது, அதைக் கண்ணாரக் காண்பார்கள்.

௯ எருசலேமின் பாழ்ந்தலங்களே, முழங்கி ஏகமாய்க் கெம்பீரியுங்கள்; ஏனெனில், கர்த்தர் தம்முடைய சனத்தைத் தேற்றரவு பண்ணி, எருசலேமை மீட்டார்.

௰ எல்லாச் சாதிகளின் கண்களுக்குமுன்பாகவும் கர்த்தர் தம்முடைய பரிசுத்த புயத்தை வெளிப்படுத்துவார்; *பூமியின் எல்லைகளெல்லாம் நமது பராபரனுடைய இரட்சிப்பைக்காணும். *சங். ௯௮. ௩, ௪.

௰௧ ¶ அகன்று, அகன்று, *அவ்விடம்விட்டுப்புறப்படுங்கள்; அசுத்தமானதைத் தொடாதிருங்கள்; கர்த்தருடைய பாண்டங்களைச் சுமக்கிறவர்களே, அதின் நடுவிலிருந்து புறப்பட்டு உங்களைச் சுத்திகரியுங்கள்.

*௨ கொரி. ௬. ௰௭. வெளி. ௰௮. ௪.

௰௨ ஏனெனில், நீங்கள் தீவிரித்துப் புறப்படுவதில்லை; நீங்கள் ஓடிப்போகிறவர்களாய் நடப்பதுமில்லை; ஏனென்றால் கர்த்தர் உங்கள் முன் நடப்பார்; இஸ்ரவேலின் பராபரன் உங்கள் பின்புறத்தையும் காப்பார்.

௰௩ ¶ இதோ, நம்முடைய ஊழியக்காரன்

ஞானமாய் நடந்துகொண்டு, *உயர்த்தப்பட்டு, மேன்மையும், மகா உன்னதமுமாய் இருப்பார். *பிலி. ௨. ௯—௰௧.

௰௪ மனுஷனைப்பார்க்கிலும் அவருடைய முகப்பார்வையும், மனுப்புத்திரரைப்பார்க்கிலும் அவருடைய ரூபமும், *இத்தனை அந்தக்கேடு அடைந்தபடியினாலே, அநேகர் உம்முடையபேரில் எப்படிப் பிரமிப்பார்களோ, *ஏசா. ௫௩. ௩.

௰௫ அப்படி அநேகம் சாதிகள்மேலும் *அவர் தெளிப்பார்; அவருக்காக இராசாக்கள் தங்கள் வாயை மூடுவார்கள்; ஏனெனில், †எவர்களுக்கு விவரிக்கப்படாதிருந்ததோ அவர்கள் காண்பார்கள்; எவர்களுக்குக் கேள்விப்படாதிருந்ததோ அவர்கள் உணர்வார்கள். *எபி. ௯. ௰௩, ௰௪: ௰௨. ௨௪. ௧பே. ௧. ௧, ௨. †ஏசா.௫௫.௧.உரோ.௰௫.௨௧.

## ௫௩. அதிகாரம்.

எங்களாலே கேள்விப்பட்டதை விசுவாசித்தவன் யாவன்? *கர்த்தருடைய புயம் யாருக்கு வெளிப்பட்டது? *யோவா. ௰௨. ௩௮. உரோ. ௰. ௰௬.

௨ கிளையைப்போலவும், வறண்ட பூமியிலிருந்து துளிர்க்கிற வேரைப்போலவும், அவனுக்குமுன்பாக எழும்புகிறார்; அவருக்கு உருவமுமில்லை; மகத்துவமுமில்லை; நாம் அவரைப் பார்த்தபோது நாம் அவரை இச்சிக்கத்தக்க உருவம் அவருக்கு இல்லாதிருந்தது.

௩ *அவர் அசட்டைபண்ணப்பட்டவரும், மனுஷரில் ஈனமானவரும், வேதனைகளுள்ளவரும், பலஈனத்தை அறிந்தவருமாய் இருந்தார்; அவரைவிட்டு முகங்களை மறைத்துக்கொள்ளலாயிற்று; அவர் அசட்டைபண்ணப்பட்டிருந்தார்; அவரை எண்ணாதேபோனோம். *ஏசா. ௪௯. ௭: ௫௨. ௰௪. சங். ௨௨. ௭, ௮. யோவா. ௭. ௪௮.

௪ மெய்யாகவே *நம்முடைய பலஈனங்களை அவர் எடுத்துக்கொண்டு, நம்முடைய நோவுகளைச் சுமந்தார்; நாமோவெனில், அவர் பராபரனால் அடிபட்டு ஒடுங்குண்டவராய் வாதிக்கப்பட்டாரென்று எண்ணினோம். *மத். ௮. ௰௭.

௫ ஆனால் அவர் *நம்முடைய மீறுதல்களின்நிமித்தம் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களின்நிமித்தம் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேலிறங்கிற்று; †அவருடைய தழும்புகளாலே குணமாகிறோம். *உரோ. ௪. ௨௫. †௧பே. ௨. ௨௪.

௬ நாம் எல்லாரும் *ஆடுகளைப்போல வழிதப்பித் திரிந்து, அவரவர்பாட்டிலே தம்தம் வழியை நோக்கிப்போனோம்; கர்த்தரோவென்றால், †நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார். *௧பே ௨. ௨௫. †யோவா. ௧. ௨௯. ௨கொரி. ௫. ௨௧.

௭ கடன் கேட்கப்பட்டபோது அவரே ஒடுக்கப்பட்டார்; ஆனால், *தம்முடைய வாயை அவர் திறந்ததில்லை; †அவர் ஒரு ஆட்டுக்குட்டியைப்போல அடிக்கப்படக் கொண்டுபோகப்பட்டு, தன்னை மயிர்கத்திரிக்கிறவனுக்குமுன்பாகச் சத்தமற்றிருக்கிற ஆட்டைப்போலேதம்முடைய வாயைத்திறவாதிருந்தார். *மத். ௨௬. ௬௨, ௬௩: ௨௭. ௰௨, ௰௪. †அப். ௮. ௩௨, ௩௩.

௮ *அவர் இடுக்கணிலும் நியாயத்தீர்ப்பிலுமிருந்து எடுக்கப்பட்டார்; அவருடைய ஆயுசை எண்ணுபவன்யாவன்? ஏனெனில், சீவனுள்ளோருடைய தேசத்திலிருந்து வெட்டிப்போடப்பட்டார்; என் சனத்தினுடைய மீறுதலினாலே அவருக்கு அந்த வாதை உண்டாயிற்று. *மத். ௮. ௧.

௯ ஆகாதவர்களோடே அவருடைய பிரேதக்குழியை நியமித்தார்கள்; ஆனால் ஐசுவரியவானோடே தம்முடைய மரணத்தில் இருந்தார்; ஏனென்றால், அவர் கொடுமைசெய்ததில்லை; *அவர் வாயிலே வஞ்சனை இருந்ததுமில்லை. *மத்.௨௭.௫௭-௬௰. ௧பே.௨.௨௨.

ம கர்த்தரோவென்றால், அவரை நொறுக்க விருப்பமாயிருந்து, அவரைப் பலட்சய மாக்கினார்; அவருடைய ஆத்துமா தன்னைக் குற்றம்போக்கும்பலியாக ஒப்புக்கொடுத்த பின், அவர் *வித்தைக் கண்டு, நீடிய நாளா யிருப்பார்; கர்த்தருக்கு விருப்பமானது அவர்கையால் வாய்க்கும். *சங். உஉ. கூக, கூஉ.

மக தமது ஆத்தும வருத்தத்தின் பலனை அவர் கண்டு திருத்தியாவார்; நம்முடைய ஊழியக்காரனாகிய நீதிபரர் அநேகரைத் தமது அறிவினாலே நீதிமான்களாக்குவார்; ஏனெனில், அவர்களுடைய அக்கிரமங்களை அவர் சுமந்துகொள்ளுகிறார்.

மஉ ஆனபடியினாலே, அவர் தம்முடைய ஆத்துமாவை மரணத்திலூற்றி, *பாதகரில் ஒருவராக எண்ணப்பட்டு, அநேகரானவர்களின் பாவத்தைத் தாமே சுமந்து, †பாதகருக்காக வேண்டிக்கொண்டதற்கு இடாக அநேகரை அவருக்குப் பங்காகக் கொடுப்போம்; பலவான்களை அவர் தமக்குக் கொள்ளையாகப் பங்கிட்டுக்கொள்ளுவார்.

*மாற். மரு. உஅ. †லூக். உங. கூஎ: உங. கூஉ.

## ருச. அதிகாரம்.

பிள்ளைப்பெறாத மலடியே,கெம்பீரித்துப் பாடு; கர்ப்பவேதனைப்படாதவளே, கெம்பீரமாய் முழங்கிச் சந்தோஷசத்தமிடு; *ஏனெனில்வாழ்க்கைப்பட்டவளுடைய பிள்ளைகளைப்பார்க்கிலும், †அவாந்தரமானவளுடைய பிள்ளைகள் அதிகமென்று கர்த்தர் சொல்லுகிறார். *கலா. ச. உஎ. †யோவா. க. மக—மங.

உ உன் கூடாரத்தின் இடத்தை விசாலமாக்கு; உன் வாசஸ்தலங்களின் திரைகள் விரிவாகட்டும்; தடைசெய்யாதிரு; உன் கயிறுகளை நீளமாக்கி, உன் கூர்ச்சுகளை உறுதிப்படுத்து.

ங ஏனெனில், வலது இடதுபுறமாகவும் இடங்கொண்டு பெருகுவாய்; உன் வித்தானவர்கள் சாதிகளைச் சுதந்தரித்துக்கொண்டு, பாழாய்க்கிடந்த பட்டணங்களைக் குடியேற்றுவிப்பார்கள்.

ச பயப்படாதிரு; ஏனெனில், நீ வெட்கிப் போவதில்லை; நாணாதிரு; ஏனெனில், நீ இலச்சைஅடைவதில்லை; உன் வாலிபத்தின் வெட்கத்தை நீ மறந்து, உன் விதவையிருப்பின் நிந்தையை இனி நினையாதிருப்பாய்.

டு ஏனெனில், உன்னை உண்டாக்கின சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ளவர் *உன் பத்தாவும், சர்வபூமியினுடைய பராபரன் என்னப்படப்போகிற இஸ்ரவேலின் பரிசுத்தர் உன் மீட்பருமாயிருக்கிறார்.

*ஓசே. உ. மகூ.

சூ அதேதெனில்,தள்ளிவிடப்பட்டவளும் மனம்நொந்தவளுமான ஸ்திரியைப்போல இருக்கிற உன்னைக் கர்த்தர் அழைத்தார்; நீ புறக்கணிக்கப்பட்டிருந்தும், இளவயது ஸ்திரியாய் இருக்கிறாயென்று உன் பராபரன் சொல்லுகிறார்.

எ கொஞ்ச நிமிஷம் உன்னைக் கைவிட்டோம்; *ஆனால் மகா உருக்க இரக்கங்களால் உன்னைச் சேர்ப்போம்.

*சங். கூம. கூ.

அ கொஞ்சப்போதான கோபத்தியிலே நம்முடைய முகத்தை ஒரு நிமிஷம் உனக்கு மறைத்தோம்; ஆனால் நித்தியகிருபையாய் உனக்கு இரங்குவோமென்று கர்த்தராகிய உன் மீட்பர் சொல்லுகிறார்.

கூ ஏனெனில் இது நமக்கு நோவாவின் சலங்களைப்போலிருக்கும்; நோவாவின் சலங்கள் இனிப் பூமியின்மேலே புரளுவதில்லை என்று நாம் *ஆணையிட்டதுபோலே, உன்மேல் நாம் கோபமாவதில்லையென்றும், உன்னை நாம் உதம்புவதில்லையென்றும் ஆணையிட்டோம். *கமோ. கூ. மக. எபி. கூ. மஎ.

ம ஏனெனில் பருவதங்கள் விலகி, குன்றுகள் சாய்ந்தாலும் *நம்முடைய கிருபை உன்னைவிட்டு விலகாமலும், நம்முடைய சமாதானத்தின் உடம்படிக்கை சாயாமலும் இருக்குமென்று உன்மேல் மனதுருகிற

கர்த்தர் சொல்லுகிறார். *சங். ௱௩. ௰௭,௰௮.

௰௧ சிறுமையானவளே, புசல்களில் அடிபட்டவளே, தேற்றரவற்றவளே, இதோ, *நாம் உன் கல்லுகளை மினுக்காக வைத்து, நீலக்கல்லுகளை உன் அஸ்திபாரமாக்கி,

*வெளி. ௨௧. ௰௯.

௰௨ உன் பலகணிகளைப் பளிங்கும், உன் வாசல்களை மாணிக்கக்கல்லுகளும், உன் எல்லைகளையெல்லாம் உச்சிதமான கல்லுகளுமாக்குவோம்.

௰௩ *உன் பிள்ளைகளெல்லாம் கர்த்தராலே போதிக்கப்பட்டிருப்பார்கள்; உன் பிள்ளைகளுடைய †சமாதானம் பெருத்திருக்கும். *யோவா. ௬. ௪௫. †உரோ. ௫. ௧.

௰௪ நீதியினாலே திடப்படுவாய்; இடுக்கணுக்கு நீங்கித் தூரமாகு; ஏனெனில், பயப்படாதிருப்பாய்; கலங்கலுக்குத் தூரமாகு; ஏனெனில், அது உன்னை அணுகுவதில்லை.

௰௫ இதோ, உன்மேலே கூட்டங்கூடினால் அது நம்மாலே கூடுகிற கூட்டமல்ல; எவர்கள் உனக்கு விரோதமாய்க் கூடுகிறார்களோ, அவர்கள் உன் நிமித்தமாக விழுவார்கள்.

௰௬ இதோ, கரிநெருப்பை ஊதி, தன் கிரியைக்கான ஆயுதத்தை உண்டுபண்ணுகிற கொல்லனையும் நாம் சிருஷ்டித்தோம்; அதைக் கெடுத்து நிக்கிரகமாக்குகிறவனையும் நாம் சிருஷ்டித்தோம்.

௰௭ உனக்கு விரோதமாய் உருவாக்கப்படும் ஆயுதமெல்லாம் வாய்க்காதேபோம்; உனக்கு விரோதமாய் நியாயத்தில் எழும்பும் எந்த நாவையும் நீ குற்றப்படுத்துவாய்; இது கர்த்தருடைய ஊழியக்காரரின் சுதந்தரமும், நம்மாலுண்டான அவர்களுடைய நீதியுமாய் இருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௫௫. அதிகாரம்.

ஓய், *தாகமாயிருக்கிற நீங்கள் எல்லாரும் தண்ணீர்களண்டைக்கு வாருங்கள், பணமில்லாதவர்களே, நீங்கள் வந்து, கொண்டு சாப்பிடுங்கள்; நீங்கள் வந்து, பணமுமின்றி விலையுமின்றித் திராட்சப்பழ இரசமும் பாலும் கொள்ளுங்கள்.

*யோவா. ௭. ௩௭, ௩௮. வெளி. ௨௨. ௰௭.

௨ நீங்கள் அப்பமல்லாததிலே பணத்தையும், திருத்தியாக்காததிலே உங்கள் பிரயாசத்தையும்செலவழிப்பானேன்? நீங்கள் நமக்குச் செவிகொடுக்கவே கொடுத்து, நலமானதைச் சாப்பிடுங்கள்; அப்போது *உங்கள் ஆத்துமா கொழுப்பானதினாலே மகிழ்ச்சியாயிருக்கும். *மல். ௪. ௨.

௩ உங்கள் செவியைச் சாய்த்து, நம்மண்டைக்கு வாருங்கள்; கேளுங்கள், அப்போது உங்கள் ஆத்துமா பிழைக்கும்; ஏனெனில், *தாவீதின் நிச்சயமான கிருபைகளை உங்களுக்கு நித்திய உடம்படிக்கையாய் உடம்படிக்கை பண்ணுவோம்.

*௨ சாமு. ௭.௰௨. சங்.௮௯.௩,௫. அப்.௰௩.௩௪.

௪ இதோ, அவரைச் சனக்கூட்டங்களுக்குச் சாட்சியாகவும், சனசதளங்களுக்குத் தலைவராகவும், அதிகாரியாகவும் கொடுத்தோம்.

௫ இதோ, நீ அறியாதிருந்த சாதியை வரவழைப்பாய்; உன்னை அறியாதிருந்த சாதி உன் பராபரனாகிய கர்த்தரின் நிமித்தமும், இஸ்ரவேலருடைய பரிசுத்தரின் நிமித்தமும் உன்னண்டைக்கு ஓடிவரும்; ஏனெனில், உன்னை மேன்மைப்படுத்தினார்.

௬ ¶ கர்த்தர் கண்டுபிடிக்கப்படுகையில் அவரைத் தேடுங்கள்; அவர் சமீபமாய் இருக்கையில்அவரைநோக்கிக்கூப்பிடுங்கள்.

௭ *ஆகாதவன் தன் வழியையும், அக்கிரமக்காரன் தன் நினைவுகளையும் விட்டு, கர்த்தரண்டைக்கு மனந்திரும்பக்கடவன்; அப்போது அவன்மேல் மனதுருகுவார்; நம்முடைய பராபரனண்டைக்கே மனந்திரும்பக்கடவன்; ஏனெனில், †அவர் மன்னிக்கிறதற்குத் தயை பெருத்திருக்கிறார்.

*ஏசா.௰௪.௩௰,௩௧: ௩௩.௰௧. †சங்.௱௩௰.௪.

அ ஏனெனில், நம்முடைய நினைவுகள் உங்கள் நினைவுகள் அல்ல; உங்கள் வழிகள் நம்முடைய வழிகளும் அல்லவென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯ ஏனென்றால், பூமியைப்பார்க்க வானங்கள் எப்படி உயர்ந்திருக்கின்றனவோ, அப்படி உங்கள் வழிகளைப்பார்க்க நம்முடைய வழிகளும், உங்கள் நினைவுகளைப்பார்க்க நம்முடைய நினைவுகளும் உயர்ந்திருக்கும்.

௰ அதேனென்றால், மாரியும் உறைந்தமழையும் வானத்திலிருந்து இறங்கி, அவ்விடத்துக்குத் திரும்பாமல் பூமியையே நனைத்து, அதை முளைகிளம்பவும் விளையவும் பண்ணி, விதைக்கிறவனுக்கு விதையையும், சாப்பிடுகிறவனுக்கு ஆகாரத்தையும் எப்படிக் கொடுக்கிறதோ,

௰க அப்படி நம்முடைய வாயிலிருந்து புறப்படும் வசனமும் இருக்கும்; அது வெறுமையாய் நம்மண்டைக்குத் திரும்பாமல், அது நாம் விரும்புகிறதைச் செய்து, நாம் அதை அனுப்பின காரியம் ஆகும்படியாக வாய்க்கும்.

௰உ அதேனெனில், நீங்கள் மகிழ்ச்சியாய்ப் புறப்பட்டு, சமாதானமாய்க் கொண்டுபோகப்படுவீர்கள்; பருவதங்களும் மேடுகளும் உங்களுக்குமுன்பாகக் கெம்பீரமாய் முழங்கி, வெளியின் மரங்களெல்லாம் கைகொட்டும்.

௰௩ முட்செடிக்குப் பதிலாகத் தேவதாரி விருட்சம் முளைக்கும்; காஞ்சொறிக்குப்பதிலாக மிருதுச்செடி எழும்பும்; அது கர்த்தருக்குக் கீர்த்தியாகவும், நிர்மூலமாகாத நித்திய அடையாளமாகவும் இருக்கும்.

## ருசு. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் நியாயத்தைக் கைக்கொண்டு நீதியைச் செய்யுங்கள்; ஏனெனில் நம்முடைய இரட்சிப்பு வரவும், நம்முடைய நீதி வெளிப்படவும் சமீபித்திருக்கிறது.

உ இப்படிச் செய்கிற மனுஷனும், இதைப் பற்றிக்கொண்டிருந்து, ஓய்வுநாளைப் பரிசுத்தக் கொலைச்சல் ஆக்காதபடிக்குக் காத்து, ஒரு பொல்லாப்பையும் செய்யாதபடிக்குத் தன் கையைக் காத்துக்கொண்டிருக்கிற மனுப்புத்திரனும் பாக்கியவான்.

௩ ¶ கர்த்தரைச்சேர்ந்த அந்நிய புத்திரனும், கர்த்தர் என்னைத் தம்முடைய சனத்தைவிட்டுப் பிரிக்கவே பிரித்துப்போடுவாரென்று சொல்லானாக; அண்ணகனும், இதோ, நான் பட்டமரமென்று சொல்லானாக.

௪ ஏனெனில், நம்முடைய ஓய்வுநாள்களைக் காத்து, நமக்கு இதமியமாயிருக்கிறதைத் தெரிந்துகொண்டு, நம்முடைய உடம்படிக்கையைப் பிடித்திருக்கிற அண்ணகர்களைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது:

௫ நாம் குமாரரைப்பார்க்கிலும், குமாரத்திகளைப்பார்க்கிலும், அவர்களுக்கு நம்முடைய வீட்டிலும் நம்முடைய மதில்களுக்குள்ளும் நல்ல இடத்தையும் கீர்த்தியையும் கட்டளையிடுவோம்; அழிந்துபோகாதிருக்கும் நித்தியகீர்த்தியை அப்படிக்கொத்தவனுக்குக் கட்டளையிடுவோம்.

௬ கர்த்தரைச் சேவிக்கவும், கர்த்தருடைய நாமத்தைச் சிநேகிக்கவும், அவருக்கு ஊழியக்காரராய் இருக்கவும், அவரைச்சேர்ந்து ஓய்வுநாளைப் பரிசுத்தக்கொலைச்சல் ஆக்காதபடிக்குக் காத்து, நம்முடைய உடம்படிக்கையைப் பிடித்திருக்கிற அந்நிய புத்திரர் அனைவரையும்,

எ நாம் *நம்முடைய பரிசுத்த பருவதத்துக்குக் கொண்டுவந்து, அவர்களை நம்முடைய செபவீட்டிலே மகிழப்பண்ணுவோம்; அவர்களுடைய சர்வாங்கதகனங்களும், அவர்களுடைய பலிகளும், நம்முடைய பலிபீடத்தின்மேல் அங்கிகரிக்கப்பட்டிருக்கும்; ஏனெனில், †நம்முடைய வீடு சகல சனசதளங்களுக்குமான செபத்

தின் வீடு என்னப்படும். *எபி. ௰௨.௨௨,௨௪. †௧ இரா. ௮. ௪௧, ௪௩. மத். ௨௧. ௰௩. மாற். ௰௧. ௰௭. லூக். ௰௯. ௪௬.

௮ இஸ்ரவேல் சனத்தில் தள்ளுண்டவர்களைச் சேர்க்கிற கர்த்தராகிய ஆண்டவர், அதிலே சேர்க்கப்பட்டவர்களை அல்லாமல் இன்னம் நாம் அதனோடே சேர்ப்போமென்கிறார்.

௯ ¶ காட்டிலே இருக்கிற சகல மிருகங்களே, சகல காட்டுமிருகங்களே, பட்சிப்பதற்கு வாருங்கள்.

௰ அதின் சாமக்காரர் எல்லாரும் ஒன்றும் அறியாத குருடர்; அவர்களெல்லாரும் குரைக்கமாட்டாத ஊமையான நாய்கள்; அவர்கள் தூக்கக்கலக்கமாகி, பேசிச் சயனித்திருந்து, உறக்கத்தைச் சிநேகிக்கிறவர்கள்.

௰௧ அவர்கள் திருப்தியடைய அறியாத வலு ஆசையுள்ள நாய்களும், அவர்கள் உணர அறியாத மேய்ப்பருந்தானே; அவர்கள் அனைவரும் தங்கள்தங்கள் வழியையும், அவரவர் தம்தம் மூலையிலிருந்து *தம்தம் பொழிவையும் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். *எரே. ௯. ௰௩, ௰௪.

௰௨ வாருங்கள், மதுபானத்தைக் கொண்டுவருவேன்; லொட்டி குடிப்போம், *நாளைத்தினம் இன்றைத்தினம்போலவும், இன்னம் மகா அதிகமாகவும் இருக்கும் என்பார்கள். *வாக். ௨௩. ௩௫.

## ௫௭. அதிகாரம்.

நீதிமான் மடிந்துபோகிறான்; *ஆனால் ஒருவரும் அதை மனதிலே வைக்கிறதில்லை; சன்மார்க்கர் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள்; ஆனால் தீங்குவராததற்கு முன்னே நீதிமான் எடுத்துக்கொள்ளப்படுகிறான் என்பதைச் சிந்திப்பார் இல்லை. *மீகா. ௨. ௨.

௨ நேராய் நடந்தவர்கள் சமாதானத்துக்குட்பிரவேசித்து, தங்கள் படுக்கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

௩ ¶ ஆனால் நாள்பார்க்கிறவளின் பிள்ளைகளே, விபசாரனுக்கும் வேசிக்கும் வித்தானவர்களே, நீங்கள் இங்கே கிட்டிவாருங்கள்.

௪ யார்மேலே சிமாளிக்கிறீர்கள்? யார்மேல் வாயை விஸ்தாரமாய்த் திறந்து, நாக்கை அளாவுகிறீர்கள்? நீங்கள் துரோகப்பிள்ளைகளும், கள்ளத்தன வித்தாருமல்லவோ?

௫ நீங்கள் *பச்சையான சகல மரத்தின் கீழும், விக்கிரகதேவர்களோடே மோக அக்கினியாய் வெந்து, பள்ளத்தாக்குகளிலே பிள்ளைகளைக் கல்மலை வெடிப்புகளின் கீழ்க் கொன்றுபோடுகிறவர்கள். *எரே. ௨. ௨௪: ௩. ௰௩.

௬ பள்ளத்தாக்குகளிலுள்ள மெருகான சிலைகளிடத்தில் உன் பங்கு இருக்கிறது; அவைகள், அவைகளே உன்னுடையவீதம்; அவைகளுக்கு நீ ஊற்றுதலையும் ஊற்றி, காணிக்கையையும் செலுத்துகிறாய்; இவைகளின்மேல் பிரியப்படுவோமோ?

௭ நீ மேட்டிமையும் உயரமுமான பருவதங்களின்மேல் உன் மஞ்சத்தை வைக்கிறாய்; அங்கேயும் பலியிட ஏறுகிறாய்.

௮ கதவுகளுக்கும் நிலைகளுக்கும் பின்னாக உன் நினைப்படையாளங்களை வைக்கிறாய்; ஏனெனில் நீ நம்மைவிட்டு வேறே பேர்களுக்குத் திறப்பாக்கி, ஏற உன் மஞ்சத்தை அகலமாக்கி, அவர்களோடே உடம்படிக்கையாகிறாய்; அவர்களுடைய மஞ்சத்தைக் காண்கிற எல்லா இடத்திலும் அதைச் சிநேகிக்கிறாய்.

௯ நீ இராசாவுக்குக் காணிக்கையாக எண்ணெயைக் கொண்டுபோகிறாய்; உன் பரிமளதயிலங்களைத் திரளாக்கி, உன் தானாபதிகளைத் தூரத்துக்கு அனுப்பி, உன்னைப் பாதாளமட்டும் தாழ்த்துகிறாய்.

௰ உன் மார்க்கத்தின் விஸ்தாரத்தில் உழன்றறுக்கிறாய்; அது விருதாவென்று நீ சொல்லுகிறதில்லை; உன் கைக்கான பிழைப்பைக் கண்டுபிடித்தாய்; ஆகையால் நீ வேசாறல்படுகிறதில்லை.

௰௧ நீ யாருக்கு ஐயமும் பயமுமாயிருக்கிறாய்; நீ பொய்சொல்லுகிறாயே; நீ நம்மை நினையாமலும், உன் மனதிலே வைக்காமலும் போகிறாயே; நாம் வெகுகாலமாய் மவுனமாயிருந்தோமல்லவோ? ஆகையால் நமக்குப் பயப்படாதேபோகிறாய்.

௰௨ உனக்கு உதவாதிருக்கும் உன் நீதியையும் உன் கிரியைகளையும் நாம் அறியப்படுத்துவோம்.

௰௩ நீ கூப்பிடும்போது உன் கூட்டங்கள் உன்னைத் தப்புவிக்கட்டும்; ஆனால் காற்று அவைகளை எல்லாம் பறக்கடித்து, மாயை அவைகளைக் கொண்டுபோம்; நம்மை நம்பியிருக்கிறவனோ தேசத்தைச் சுதந்தரித்து, நமது பரிசுத்த பருவதத்திலே காணியாட்சிக்காரனாயிருப்பான்.

௰௪ *வழியை உயர்த்தி, உயர்த்தி, அதைச் செம்மைப்படுத்தி, இடறல்களை நம்முடைய சனத்தின் வழியிலிருந்து எடுத்துப் போடுங்கள் என்னப்படும். *ஏசா. ௬௨. ௰௧.

௰௫ ஏனெனில், *நித்தியவாசகரும் பரிசுத்தர் என்ற நாமமுள்ளவருமாகிய †உயரமும், உன்னதமுமானவர் சொல்லுகிறதாவது: பணிந்தவர்களின் ஆவியை உயிர்ப்பிக்கவும், நருங்குண்டவர்களின் இருதயத்தை உயிர்ப்பிக்கவும் நாமே உன்னதத்திலும், பரிசுத்தஸ்தலத்திலும், நருங்குண்ட பணிந்த ஆவியுள்ளவர்களிடத்திலும் வாசம்பண்ணுகிறோம். *ஏசா. ௬௬. ௧, ௨. †சங். ௱௰௩. ௫. ௬.

௰௬ ஏனென்றால், *நாம் சதாகாலமாய் வழக்காடுவதில்லை; நாம் என்றென்றைக்கும் கோபமாயிருப்பதுமில்லை; அதேனெனில், ஆவியும், நாம் உண்டுபண்ணின ஆத்துமாக்களும், நம்முடைய முகத்துக்கு முன்பாகத் தொய்ந்துபோவதாயிருக்கும். *சங். ௱௩. ௯.

௰௭ நாம் அவர்கள் *பொருளாசையினுடைய அக்கிரமத்தின்நிமித்தம் கடுங்கோபமாகி, அவர்களை அடித்தோம்; நாம் மறைந்து, கடுங்கோபமாயிருந்தோம்; ஆனால் தங்கள் மனம்போகிற போக்கிலே மாறுபாடாய் நடந்தார்கள். *ஏசா. ௫௬. ௨.

௰௮ அவர்கள் வழிகளை நாம் பார்த்து, அவர்களைக் குணமாக்குவோம்; அவர்களை நடத்தி, அவர்களுக்குத் திரும்ப ஆறுதல்களை அளிப்போம்; அவர்களிலே துக்கப்படுகிறவர்களுக்குத்தானே.

௰௯ *சமாதானம், சமாதானம் என்று தூரமாயிருக்கிறவர்களுக்கும் சமீபமாயிருக்கிறவர்களுக்கும் கூறும் உதடுகளின் பலனைச் சிருஷ்டிக்கிறோம்; அவர்களைக் குணமாக்குவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௫௨. ௭.

௨௰ ஆகாதவர்களோ கொந்தளிப்பான கடலைப்போல இருக்கிறார்கள்; ஏனென்றால், அது அமர்ந்திருக்கக்கூடாமல், அதின் சலங்கள் சேற்றையும் அழுக்கையும் கரையில் ஒதுக்குகின்றன.

௨௧ *ஆகாதவர்களுக்குச் சமாதானம் இல்லையென்று என் பராபரன் சொல்லுகிறார். *ஏசா. ௪௮. ௨௨.

## ருஅ. அதிகாரம்.

அடக்கிக்கொள்ளாமல் சத்தமாய்க் கூப்பிடு; நீ உன் சத்தத்தை எக்காளத்தைப் போல உயர்த்தி, நம்முடைய சனத்துக்கு அவர்கள் மீறுதல்களையும் யாக்கோபின் வீட்டாருக்கு அவர்கள் பாவங்களையும் அறிவி.

௨ அவர்களோவென்றால், நீதியைச் செய்துவருகிறதும், தங்கள் பராபரனுடைய நியாயத்தைத விடாததுமான சாதியைப் போல நம்மைத் தினந்தினம் தேடி, நம்முடைய வழிகளை அறிய விரும்பி, நாங்கள் உபவாசம்பண்ணுகையில் நீர் அதைப் பாராமலும், நாங்கள் எங்கள் ஆத்துமாக்களை ஒடுக்குகையில், நீர் அதை அறியாமலும் போகிறதேதென்று நம்மிடத்திலே நீதிநியாயத்தைக்கேட்டு, பராபரன் கிட்டிச்சேரவேண்டுமென்று விரும்புகிறார்கள்.

௩ ¶ இதோ, நீங்கள் உபவாசிக்கும்நாளிலே இச்சைக்கானதைக் கண்டுபிடித்து, உங்கள் கடன்களை எல்லாம்தண்டுகிறீர்கள்.

௪ இதோ, வழக்குக்கும் வாதுக்கும் ஆகாமியமான குட்டுதலுக்குமாக உபவாசிக்கிறீர்கள்; நீங்கள் உங்கள் கூக்குரலை உயரத்திலே கேட்கப்பண்ணும்படியாய், இந்நாளில் உபவாசிக்குமாப்போலே உபவாசியாதிருப்பீர்களாக.

௫ மனுஷன் ஒருநாள் தன் ஆத்துமாவை ஒடுக்குகிறதும், *தன் தலையை நாணலைப்போலே மடக்கி, இரட்டையும் சாம்பலையும் கீழே போட்டுக்கொள்ளுகிறதும் †நாம் தெரிந்துகொள்ளும் உபவாசமாயிருக்குமோ? அதைத்தான் உபவாசமும் கர்த்தருக்குப் பொருந்தியநாளும் என்பாயோ?
*மத். ௬. ௰௬. †சகரி. ௭. ௫.

௬ நீ ஆகாமியத்தின் கட்டுகளை அவிழ்த்து, நுகத்தடியின் பிணையல்களை நெகிழ்த்து, நெரியலாயிருக்கிறவர்களை விடுதலையாக அனுப்பி, சகல நுகத்தடியையும் உடைத்துப்போட்டு,

௭ *பசியுள்ளவனுக்கு உன் அப்பத்தைப் பிட்டுக்கொடுத்து, துரத்துண்ட சிறுமையானவர்களை வீட்டிலே சேர்த்துக்கொண்டு, அம்மணமானவனைக் கண்டாயானால் அவனுக்கு வஸ்திரங்கொடுத்து, உன் மாம்சமானவனுக்கு உன்னை ஒளிக்காமலிருந்தால், அது அல்லவோ நாம் தெரிந்துகொள்ளுகிற உபவாசம். *எசே. ௰௮. ௭. மத். ௨௫. ௩௫.

௮ அப்போது உன் வெளிச்சம் விடியற்கால வெளுப்பைப்போலெழும்பி, உன் குணமாகுதல் சீக்கிரமாய்த் துளிர்த்து, உன் நீதி உன் முன்நடக்கும்; கர்த்தருடைய மகிமை உன் பின்புறத்தைக் காக்கும்.

௯ அப்போது கூப்பிடுவாய், கர்த்தர் மறுஉத்தரவு கொடுப்பார்; சத்தமிடுவாய், இதோ, நாம் இருக்கிறோமென்றும் சொல்லுவார்; நீ நுகத்தடியையும் விரல் நீட்டுதலையும் நிபச்சொல்லையும் உன் நடுவிலிருந்து அகற்றி,

௰ பசியுள்ளவனண்டைக்கு உன் ஆத்துமாவைச் சாய்த்துச் சிறுமைப்பட்ட ஆத்துமாவைத் திருத்தியாக்கினால், அப்போது *உன் வெளிச்சம் இருளில் உதித்து, உன் அந்தகாரம் மத்தியானத்தைப்போலாகும்.
*சங். ௱௰௨. ௪.

௰௧ அப்போது கர்த்தர் உன்னை நித்தம் நடத்தி, மகா வறட்சியான காலங்களில் உன் ஆத்துமாவைத் திருத்தியாக்கி, உன் எலும்புகளைப் புஷ்டியாக்குவார்; நீ நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போலேயும், சலங்கள் வற்றாத நீரூற்றைப்போலேயுமிருப்பாய். *ஏசா. ௬௧. ௪.

௰௨ சதாகாலமாய்ப் பாழாய்க்கிடந்த தலங்களை உன்னைத்தொட்டுக் கட்டுவார்கள்; தலைமுறைதலைமுறையாக இருக்கும் அஸ்திபாரங்களைப் போட்டு எழுப்புவாய்; திறப்பானதை அடைக்கிறவனென்றும், குடியிருக்கும்படியாகப் பாதைகளைத் திருத்துகிறவனென்றும் நீ அழைக்கப்படுவாய்.
*ஏசா. ௬௧. ௪.

௰௩ ¶ நீ நம்முடைய பரிசுத்தநாளிலே உனக்கு இச்சையானதைச் செய்யாதபடிக்கு, உன் காலை ஓய்வுநாளுக்கு இடைஞ்சலாய் விலக்கி, ஓய்வுநாளை மனமகிழ்ச்சியென்றும், கர்த்தருடைய பரிசுத்தநாளை மகிமையுள்ள நாளென்றும் சொல்லி, உன் வழிகளின்படி செய்யாமலும், உனக்கு இச்சையானதைக் கண்டுபிடிக்காமலும், உன் பேச்சைப்பேசாமலும், அதை மகிமையாக எண்ணினாயானால்,

௰௪ அப்போது கர்த்தரின்மேலே மனமகிழ்ச்சியாயிருப்பாய்; நாம் பூமியினுடைய உயரங்களின்மேல் உன்னை ஏறிப்போகவும்பண்ணி, உன் தகப்பனாகிய யாக்கோபுடைய சுதந்தரத்தால் உன்னைப் போஷிப்போம்; ஏனெனில், கர்த்தருடைய வாய் அதைச் சொல்லிற்று.

## ௫௯. அதிகாரம்.

இதோ, *இரட்சிக்கக்கூடாதபடிக்குக் கர்

த்தருடைய கை குறுகிப்போனதில்லை; கேட்கக்கூடாதபடிக்கு அவருடைய செவி மந்தமானதுமில்லை. *ஏசா. ௫௰. ௨. ௪ மோ. ௰௧. ௨௩.

௨ உங்கள் அக்கிரமங்களே உங்களுக்கும் உங்கள் பராபரனுக்கும் நடுவாகப் பிரிவினை உண்டாக்குகின்றன; உங்களைக் கேளாதபடிக்கு உங்கள் பாவங்களே *அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கின்றன. *மீகா. ௩. ௪.

௩ ஏனென்றால், *உங்கள் கைகள் இரத்தத்தாலும், உங்கள் விரல்கள் அக்கிரமத்தாலும் கறைப்பட்டிருக்கின்றன; உங்கள் உதடுகள் பொய்யைப்பேசி, உங்கள் நாவு நியாயக்கேட்டை வசனிக்கிறது. *ஏசா. ௧. ௰௫.

௪ ¶ நீதிக்காகக் கூப்பிடுகிறவனுமில்லை, சத்தியத்துக்காக நியாயம்சொல்லுகிறவனுமில்லை; மாயையை நம்பி, அவத்தமானதைப் பேசுகிறார்கள்; *தீவினையைக் கர்ப்பந்தரித்து, அக்கிரமத்தைப் பெறுகிறார்கள். *சங். ௭. ௰௪.

௫ கட்டுவிரியன் முட்டைகளை அடைகாத்து, சிலந்தியின் நெசவுகளை நெய்கிறார்கள்; அவர்களுடைய முட்டைகளைச் சாப்பிடுகிறவன் சாவான்; அவைகள் நெருக்கப்பட்டதேயானால் விரியன் புறப்படும்.

௬ அவர்கள் நெசவுகள் உடுப்புக்கானவைகள் அல்ல; தங்கள் கிரியைகளாலே தங்களை மூடமாட்டார்கள்; அவர்கள் கிரியைகள் அக்கிரமக் கிரியைகளானவைகள்; கொடுமையின் செய்கை அவர்கள் கைகளிலிருக்கிறது.

௭ அவர்கள் *கால்கள் பொல்லாப்புக்கு ஓடி, குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தத் தீவிரிக்கின்றன; அவர்கள் நினைவுகள் அக்கிரம நினைவுகளானவைகள்; பாழ்க்கடிப்பும் அழிவும் அவர்கள் வழிகளிலிருக்கின்றன. *உரோ. ௩. ௰௫.

௮ சமாதானத்தின் வழியை அறியார்கள்; அவர்கள் நடைகளில் நியாயமில்லை; தங்கள் பாதைகளைத் தங்களுக்குக் கோணலாக்கினார்கள்; அவைகளில் நடக்கிற ஒருவனும் சமாதானத்தை அறியான்.

௯ ¶ ஆனபடியால், நியாயம் எங்களுக்குத் தூரமாயிருக்கிறது; நீதி எங்களைத் தொடர்ந்துபிடிக்காது; வெளிச்சத்துக்குக் காத்திருந்தோம்; ஆனால் இதோ, இருள்; பிரகாசத்துக்குக் காத்திருந்தோம்; ஆனால் அந்தகாரத்திலே நடக்கிறோம்.

௰ *நாங்கள் குருடரைப்போலே சுவரைப்பிடித்து, கண்ணில்லாதவர்களைப்போலே தடவுகிறோம்; இராவிருளில் இடறுகிறதுபோலே மத்தியானத்திலே இடறுகிறோம்; செத்தவர்களைப்போலே பாழ்ந்தலங்களில் இருக்கிறோம். *௫ மோ. ௨௮. ௨௮, ௨௯.

௰௧ நாங்கள் அனைவரும் கரடிகளைப்போலே உறுமி, *புறாக்களைப்போலே கூவிக்கொண்டேயிருக்கிறோம்; நியாயத்துக்குக் காத்திருந்தோம், அதைக் காணோம்; இரட்சிப்புக்குக் காத்திருந்தோம், அது எங்களுக்குத் தூரமாயிற்று. *ஏசா. ௩௮. ௰௪. எசே. ௭. ௰௬.

௰௨ ¶ ஏனெனில், எங்கள் மீறுதல்கள் உமக்குமுன்பாக மிகுதியாயிருந்து, எங்கள் பாவங்கள் எங்களுக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகின்றன; ஏனெனில், எங்கள் மீறுதல்கள் எங்களுடனே இருக்கின்றன; எங்கள் அக்கிரமங்களை அறிந்திருக்கிறோம்.

௰௩ கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணுகிறதும், புளுகுகிறதும், எங்கள் பராபரனைவிட்டுப் பின்வாங்குகிறதும், ஒடுக்குதலாகவும் கலகமாகவும் பேசுகிறதும், கள்ளவார்த்தைகளைக் கர்ப்பந்தரித்து இருதயத்திலிருந்து புறப்படப்பண்ணுகிறதுமுண்டே.

௰௪ நியாயம் பின்னிட்டு அகன்றது; நீதி தூரமாக நிற்கிறது; ஏனெனில் சத்தியம் வீதியிலே இடறி, நிதானம் வந்து சேரமாட்டாதே போகிறது.

௰௫ ¶ சத்தியம் தள்ளுபடியாயிற்று; பொல்லாப்பைவிட்டு விலகுகிறவன் சூறையாகிறான்; இதைக் கர்த்தர் பார்த்து நியாயமில்லையென்று விதனப்பார்வையாகி,

௰௬ ஒருவருமில்லையென்று கண்டு, விண்ணப்பம்பண்ணுகிறவன் இல்லையென்று ஆச்சரியப்படுகிறார்; ஆனதுகொண்டு *அவருடைய புயமே அவருக்கு இரட்சிப்பாகி, அவருடைய நீதியே அவரைத் தாங்கும்.

*ஏசா. ௬௩. ௫.

௰௭ அவர் நீதியை மார்க்கவசமாக அணிந்து, இரட்சிப்பின் தலைச்சோட்டைத் தமது சிரசில் வைத்து, நீதிசரிக்கட்டுதலின் வஸ்திரங்களை உடுப்பாக உடுத்து, எரிச்சலைச் சால்வையாகப் போர்த்துக்கொள்ளுகிறார்.

௰௮ கிரியைகளுக்கு எப்படித் தருமோ, அப்படியே அவர் தம்முடைய சத்துருக்களுக்கு உக்கிரத்தைச் சரிக்கட்டி, தம்முடைய பகைஞருக்குத்தக்கதையும், தீவுகளுக்குத்தக்கதையும் சரிக்கட்டுவார்.

௰௯ அப்போது அஸ்தமிக்குந் திசைதுவக்கிக் கர்த்தரின் நாமத்துக்கும், சூரியனுதிக்கும் திசைதுவக்கி அவருடைய மகிமைக்கும் பயப்படுவார்கள்; வெள்ளப்பிரவாயமாய்ச் சத்துரு வரும்போது கர்த்தருடைய ஆவியானவர் அவனுக்கு விரோதமாகக் கொடியை ஏற்றுவார்.

௨௰ ¶ *சீயோனுக்கும், யாக்கோபிலே தங்கள் மீறுதலைவிட்டுத் திரும்புகிறவர்களுக்கும்மீட்கிறவர் வருவாரென்று கர்த்தர் சொல்லுகிறார். *உரோ. ௰௧. ௨௬.

௨௧ உம்முடையமேலிருக்கிற நம்முடைய ஆவியும், நாம் உமது வாயிலே வைத்த நம்முடைய வார்த்தைகளும், இதுமுதலாய் என்றென்றைக்கும் உமது வாயையும், உமது வித்தின் வாயையும், உமது வித்தினுடைய வித்தின் வாயையும் விட்டுப் பிரிவதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்; இது நமக்கு அவர்களோடிருக்கும் நம்முடைய உடம்படிக்கையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௬௰. அதிகாரம்.

நீ *எழும்பி வெளிச்சமாகு; ஏனெனில், உன் வெளிச்சம் வருகிறது; கர்த்தருடைய மகிமை உன்மேலே உதிக்கிறது.

*ஏசா. ௫௨. ௧.

௨ ஏனெனில், இதோ, இருள் பூமியையும், அந்தகாரம் சனசதனங்களையும் மூடும்; ஆனால் உன்மேலே கர்த்தர் உதிக்கிறார்; உன்மேலே அவருடைய மகிமை காணப்படும்.

௩ உன் வெளிச்சத்தண்டைக்குச் *சாதிகளும், உனக்கு உதிக்கிற ஒளியண்டைக்கு இராசாக்களும் நடந்துவருவார்கள்.

*ஏசா. ௪௯. ௬. வெளி. ௨௧. ௨௪.

௪ ¶ சுற்றிலும் *உன் கண்களை ஏறெடுத்துப்பார்; இவர்கள் எல்லாரும் கூட்டப்பட்டு வருகிறார்கள்; உன் குமாரர் தூரத்திலிருந்துவந்து, உன் குமாரத்திகள் உன் பக்கத்திலே வளர்க்கப்படுவார்கள்.

*ஏசா. ௪௯. ௰௮.

௫ அப்போது நீ அதைக்கண்டு ஓடிவருவாய்; உன் இருதயம் அதிசயப்பட்டு, விரிவாகும்; ஏனெனில், கடற்கரையின் திரளானகும்பு உன் வசமாகத் திரும்பி, சாதிகளின் பலத்த சேனை உன்னண்டைக்கு வரும்.

௬ ஒட்டகங்களின் ஏராளமும் மீதியான் ஏப்பாத்தேசங்களின் வேகமான ஒட்டைகளும் உன்னை மூடும்; *சேபாவிலிருந்து அனைவரும் வந்து, பொன்னையும் தூபவர்க்கத்தையும் கொண்டுவந்து, கர்த்தரின் துதிகளைச் சுவிசேஷமாய்ச் சொல்லுவார்கள்.

*சங். ௭௨. ௰.

௭ *கேதாரின் ஆடுகளெல்லாம் உன்னைச் சேர்ந்துகொண்டு, நெபயோத்தின் கடாக்கள் உன்னைச் சேவித்து, விருப்பமாக நமது பலிபீடத்தின்மேல் ஏறும்; நம்முடைய மகிமையின் வீட்டை மகிமையாக்குவோம்.

*ஏசா. ௪௨. ௰௧.

௮ ¶ மேகங்களைப்போலவும், தங்கள் பலகணித் துவாரங்களுக்குத் தீவிரிக்கிற புறுக்

களைப்போலவும் பறந்துவருகிற இவர்கள் யார்?

௯ ஏனெனில், தீவுகள் நமக்குக் காத்திருக்கும்; அவர் உன்னை மகிமைப்படுத்தினாரென்று உன் பிள்ளைகளையும், அவர்களோடேகூட அவர்கள் பொன்னையும், அவர்கள் வெள்ளியையும் உன் பராபரனாகிய கர்த்தரின் நாமத்துக்கென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தருக்கென்றும் தூரத்திலிருந்து கொண்டுவர முதலாகத் தர்ஷீசின் கப்பல்களும் நமக்குக் காத்திருக்கும்.

௰ அந்நியரின் புத்திரர் உன் மதில்களைக் கட்டி, அவர்களுடைய இராசாக்கள் *உன்னைச் சேவிப்பார்கள்; ஏனெனில், †நம்முடைய கடுங்கோபத்தில் உன்னை அடித்தோம்; ஆனால் நம்முடைய கிருபையினால் உனக்கு இரங்குகிறோம். *ஏசா. ௪௯. ௨௩. †ஏசா. ௫௪. ௭, ௮.

௰௧ உன்னண்டைக்குச் சாதிகளின் பலத்த சேனையைக் கொண்டுவரும்படிக்கும், அவர்களுடைய இராசாக்கள் அழைத்துவரப்படும்படிக்கும், *உன் வாசல்கள் இராவும் பகலும் பூட்டப்படாமல், நித்தம் திறந்திருக்கும். *வெளி. ௨௧. ௨௫.

௰௨ ஏனெனில், உன்னைச் சேவிக்காத சாதியும் இராச்சியமும் அழியும்; அப்படிக்கொத்த சாதிகள் பாழாகவே பாழாகும்.

௰௩ ¶ நம்முடைய பரிசுத்தஸ்தலத்தின் தானத்தைச் சிங்காரிக்கும்படிக்கு, *லீபனோனின் மகிமையும் தேவதாரிவிருட்சங்களும், பிசின்மரங்களும், புன்னைமரங்களுங்கூட உன்னண்டைக்குவரும்; அப்படி நம்முடைய பாதங்களின் தானத்தை மகிமைப்படுத்துவோம். *ஏசா. ௩௫. ௨.

௰௪ ¶ உன்னை ஒடுக்கினவர்களின் பிள்ளைகளும், உன்னண்டைக்குக் குனிந்துவந்து, உன்னை அசட்டைபண்ணின யாவரும் உன் உள்ளங்கால்களின் அருகே பணிந்து, உன்னைக் கர்த்தருடைய பட்டணமென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் சீயோனென்றும் அழைப்பார்கள்.

௰௫ *நீ நெகிழப்பட்டதும், பகைக்கப்பட்டதும், ஒருவரும் கடந்து நடவாததுமாய் இருந்ததற்குப்பதிலாக, உன்னை நித்தியமுக்கியமாகவும், தலைமுறைதலைமுறையாக இருக்கும் மகிழ்ச்சியாகவும் வைப்போம். *ஏசா. ௪௯. ௰௯.

௰௬ ¶ நீ சாதிகளின் பாலையும் உண்டு, *இராசாக்களின் முலைப்பாலையும் உண்டு, கர்த்தரும் யாக்கோபிலே வல்லவருமாகிய நாம் உன் இரட்சகரும், உன் மீட்பருமாயிருக்கிறதை அறிந்துகொள்வாய். *ஏசா. ௪௯. ௨௩.

௰௭ நாம் வெண்கலத்துக்குப் பதிலாகப் பொன்னை வரப்பண்ணி, இரும்புக்குப் பதிலாக வெள்ளியையும், மரங்களுக்குப்பதிலாக வெண்கலத்தையும், கல்லுகளுக்குப் பதிலாக இரும்பையும் வரப்பண்ணி, உன் கண்காணிகளைச் சமாதானமும், உன் தண்டல்காரரை நீதியுமுள்ளவர்களாக்குவோம்.

௰௮ இனிக் கொடுமை உன் தேசத்திலும், அழிப்பும் நொருக்குதலும் உன் எல்லைகளிலும் கேட்கப்படாது; *உன் மதில்களை இரட்சிப்பும், உன் வாசல்களைத் துதியுமென்று அழைப்பாய். *ஏசா. ௨௬. ௧.

௰௯ *இனிச் சூரியன் உனக்குப் பகலிலே வெளிச்சமாயிராமலும், சந்திரன் தன் வெளிச்சத்தால் உனக்குப் பிரகாசியாமலும், கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமும், உன் பராபரனே உன்னுடைய அலங்காரமுமாய் இருப்பார். *வெளி. ௨௧. ௨௩.

௨௰ உன் சூரியன் இனி அஸ்தமிப்பதுமில்லை; உன் சந்திரன் மறைவதுமில்லை; ஏனெனில், கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமாயிருப்பார்; உன் துக்கநாள்கள் முடிந்திருக்கும்.

௨௰௧ உன் சனமெல்லாம் நீதிமான்களும், என்றைக்கும் *பூமியின் சுதந்தரக்குடிகளும், †நாம் நட்ட கிளைகளும், நாம் மகிமைப்படும்படிக்கு நம்முடைய கரங்களின்

கிரியையுமாயிருப்பார்கள். *மத். ௫. ௫. †மத். ௰௫. ௰௩.

௨௨ சின்னவன் ஆயிரமும், சிறியவன் பலத்தசாதியும் ஆவான்; கர்த்தராகிய நாம் அதை அதின் காலத்திலே தீவிரமாக நடப்பிப்போம்.

## ௬௧. அதிகாரம்.

கர்த்தராகிய *பராபரனுடைய ஆவியானவர் என்மேல் இருக்கிறார்; ஏனெனில், †சிறுமையானவர்களுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கக் கர்த்தர் என்னை அபிஷேகம்பண்ணினார்; இருதயம் நருங்குண்டவர்களைக் காயங்கட்டவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், கட்டுண்டவர்களுக்குக் காவல் நீங்குதலையும் கூறவும், *லூக். ௪. ௰௭—௨௰. †மத். ௫. ௩.

௨ கர்த்தருடைய பிரியத்தின் வருஷத்தையும், நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டும் நாளையும் கூறவும், துயரப்பட்ட அனைவரையும் தேற்றரவுபண்ணவும், சீயோனிலே துயரப்பட்டவர்களைச் சீர்ப்படுத்தவும், அவர் என்னை அனுப்பினார்.

௩ அவர்களுக்குச் சாம்பலுக்குப்பதிலாகச் சிங்காரத்தையும், துயரத்துக்குப்பதிலாகச் சந்தோஷத்தின் எண்ணெயையும், ஒடுங்கின ஆவிக்குப்பதிலாகத் துதியின் உடையையும் கொடுப்பதற்கும், அவர்கள் கர்த்தர் தம்முடைய மகிமைக்கென்று நாட்டின நீதியின் விருட்சங்களென்னப்படுவதற்குமாகத்தானே.

௪ ¶ *அவர்கள் சதாகாலமாய்ப் பாழாய்க்கிடந்தவைகளைக் கட்டி, முந்தி நிர்மூலமானவைகளை எடுப்பித்து, தலைமுறைதலைமுறையாய் இடிந்துகிடந்த பாழான பட்டணங்களைப் புதியவைகளாய்க் கட்டுவார்கள். *ஏசா. ௫௮. ௰௨.

௫ மறுசாதியார் நின்றுகொண்டு உங்கள் மந்தைகளை மேய்த்து, அந்நியபுத்திரர் உங்கள் பண்ணையாள்களும், உங்கள் திராட்சத்தோட்டக்காரருமாய் இருப்பார்கள்.

௬ நீங்களோ *கர்த்தரின் ஆசாரியரென்று அழைக்கப்படுவீர்கள்; உங்களை நமது பராபரனுடைய ஊழியக்காரரென்பார்கள்; நீங்கள் சாதிகளின் ஆஸ்தியைப் புசித்து, அவர்கள் மகிமையாலே மேன்மைபாராட்டுவீர்கள். *௧ பே. ௨. ௯. வெளி. ௧. ௬; ௫. ௰.

௭ உங்கள் வெட்கத்துக்குப்பதிலாக இரண்டத்தனையாய் வரும்; இலச்சைக்குப்பதிலாகத் தங்கள் வீதத்திலே கெம்பீரிப்பார்கள்; அதினிமித்தம் தங்கள் தேசத்தில் இரட்டிப்பாகச் சுதந்தரிப்பார்கள்; நித்தியமகிழ்ச்சி அவர்களுக்கு உண்டாம்.

௮ ஏனெனில், *கர்த்தராகிய நாம் நியாயத்தைச் சிநேகித்து, தகனபலியிலே கொள்ளையைப் பகைக்கிறவர்; நாம் அவர்கள் கிரியையை உண்மையாக்கி, அவர்களோடே நித்திய உடம்படிக்கையைப் பண்ணுவோம். *ஏசா. ௫௪. ௰; ௫௫. ௩.

௯ அவர்கள் வித்து சாதிகளிலும், அவர்கள் சந்தானங்கள் சனசதளங்களின்நடுவிலும் அறியப்பட்டிருக்கும்; அவர்களைப்பார்க்கிற யாவரும் அவர்களைக் கர்த்தர் ஆசீர்வதித்த வித்தென்று அறிந்துகொள்வார்கள்.

௰ ¶ கர்த்தருக்குள் பூரிப்பாய் மகிழுகிறேன்; என் பராபரனுக்குள் என் ஆத்துமா களிகூர்ந்திருக்கிறது; ஏனெனில், மணவாளன் ஆசாரியனடைவாய்ச் சிங்காரித்துக்கொள்ளுகிறதற்கும், மணவாட்டி தன் ஆபரணங்களால் அலங்கரித்துக்கொள்ளுகிறதற்கும் ஒப்பாக, அவர் *இரட்சிப்பின் வஸ்திரங்களை எனக்கு உடுத்தி, நீதியின் சால்வையை எனக்குத் தரித்தார். *சங். ௪௫. ௰.

௰௧ ஏனெனில், பூமி தன் முளைகளைப் புறப்படப்பண்ணுமாப்போலவும், தோட்டம் தன்னில் விதைக்கப்பட்டவைகளை முளைப்பிக்குமாப்போலவும், கர்த்தராகிய ஆண்டவர் எல்லாச்சாதிகளுக்கும் முன்பாக நீதியையும் துதியையும் முளைக்கப்பண்ணுவார்.

## ௬௨. அதிகாரம்.

சீயோனின்நிமித்தமும் எருசலேமின்நிமித்தமும் நாம் மவுனப்படாமலும், அதின் நீதி பிரகாசத்தைப்போலும், அதின் இரட்சிப்பு எரிகிற தீவட்டிலயப்போலும் வெளிப்படுமட்டாக அமராமலுமிருப்போம்.

உ சாதிகள் உன் நீதியையும், சகல இராசாக்களும் உன் மகிமையையும் காண்பார்கள்; கர்த்தருடைய வாய் சொல்லும் *புது நாமமாய் அழைக்கப்படுவாய்.

*ஏசா. ௬௫. ௰௫.

௩ நீ கர்த்தருடைய கையில் அலங்காரமான கிரீடமும், உன் பராபரனுடைய கரத்தில் இராசமுடியுமாயிருப்பாய்.

௪ *நீ இனி நெகிழப்பட்டவள் என்னப்படாமலும், உன் தேசம் இனிப் பாழானதென்னப்படாமலும், இனி நாம் பிரியம் வைத்தவளென்றும், உன் தேசம் வாழ்க்கைப்பட்டதென்றும் அழைக்கப்படுவதுண்டு; ஏனெனில், கர்த்தர் உன்மேலே பிரியம்வைக்கிறார்; உன் தேசம் வாழ்க்கைப் படும். *ஏசா. ௬௰. ௰௫.

௫ ¶ ஏனெனில், வாலிபன் கன்னியாஸ்திரியை விவாகம்பண்ணுகிறதுபோல, உன் குமாரர் உன்னை விவாகம்பண்ணுவார்கள்; மணவாளன் மணவாட்டியின்மேல் மகிழ்ச்சியாயிருக்கிறதுபோல *உன் பராபரன் உன்மேல் மகிழ்ச்சியாயிருப்பார்.

*செப். ௩. ௰௭.

௬ ¶ எருசலேமே, உன் மதில்களின்மேலே பகல்முழுதும் இராமுழுதும் ஒருக்காலும் *மவுனமாயிராத சாமக்காரரைக் கட்டளையிடுகிறோம்; கர்த்தரைப் பிரஸ்தாபம்பண்ணுகிறவர்களே, உங்களில் அமரிக்கைஇல்லாதிருப்பதாக. *ஏசா. ௫௨. ௮.

௭ அவர் எருசலேமைத் திடப்படுத்தி, பூமியிலே *புகழ்ச்சியாய் வைக்குமட்டாக அவரை அமர்ந்திருக்கவொட்டாதிருங்கள்.

*ஏசா. ௬௧. ௰௧.

௮ *இனி நாம் உன் சத்துருக்களுக்கு உன் தானியத்தை ஆகாரமாகக் கொடோம்; நீ பிரயாசப்பட்ட உன் கொடிமுந்திரிகைப் பழஇரசத்தை அந்நிய புத்திரர் குடிப்பதுமில்லையென்று கர்த்தர் தமது வலதுகரத்தின்மேலும், தமது வல்லமையினுடைய புயத்தின்மேலும் ஆணையிட்டார்.

*ஏசா. ௬௫. ௨௧, ௨௨.

௯ அதைச் சேர்த்தவர்கள்தானே அதைப் புசித்துக் கர்த்தரைத் துதிப்பார்கள்; அதைக் கூட்டிவைத்தவர்கள்தானே அதை நமது பரிசுத்தஸ்தலத்தின் பிராகாரங்களிலே குடிப்பார்கள்.

௰ ¶ *வாசல்களால் பிரவேசியுங்கள்; பிரவேசியுங்கள்; சனத்துக்கு வழியைச் செவ்வைப்படுத்துங்கள்; பாதையை உயரமாய் உயர்த்துங்கள்; அதைக் கல்பொறுக்கி, சனசதனங்களுக்குக் கொடியேற்றுங்கள்.

*ஏசா. ௫௭. ௰௪. மத். ௨௮. ௰௯.

௰௧ *இதோ, உன் இரட்சிப்பு வருகிறது; இதோ, அவருடைய பலன் அவரோடே. அவருடைய கூலி அவர்முன்பாகவும் வருகிறதென்று நீங்கள் சீயோன் குமாரத்திக்குச் சொல்லுங்கள் என்பதை, இதோ, கர்த்தர் பூமியின் கடையாந்தரமட்டாகக் கூறுகிறார்.

*ஏசா. ௪௰. ௰. வெளி. ௨௨. ௰௨.

௰௨ அவர்களைப் பரிசுத்தசனமென்றும் கர்த்தரால் மீட்கப்பட்டவர்களென்றும் அழைப்பார்கள்; நீயோவெனில், தேடிக்கொள்ளப்பட்டதென்றும், *நெகிழப்படாத பட்டணமென்றும் அழைக்கப்படுவாய்.

*௧ பே. ௨. ௯.

## ௬௩. அதிகாரம்.

ஏதோமிலும் *அதிலுள்ள போஸ்றாப்பட்டணத்திலுமிருந்து †சாயந்திரப்பட்ட வஸ்திரங்களுடையவராகவும், மகத்துவமாய் உடுத்திருக்கிறவராகவும், தமது மகா சத்துவத்திலே நடந்தேறுகிறவராகவும், வருகிற இவர் யார்? நீதியாய்ப் பேசி இரட்சிக்க வல்

லவராகிய நாம்தாமே. *வெளி. ௰௯. ௰௫. †ஏசா. ௩௪. ௫, ௬.

௨ ¶ உம்முடைய உடுப்பு சிவப்பாகவும், உம்முடைய வஸ்திரங்கள் ஆலையை மிதிக்கிறவன் வஸ்திரங்களடைவாகவும் இருக்கிறதேது?

௩ *நாம் ஒருவராய் ஆலையை மிதித்தோம்; சனசதனங்களில் ஒருவரும் நம்மோடிருந்ததில்லை; நாம் நம்முடைய கோபத்திலே அவர்களை மிதித்து, நம்முடைய உக்கிரத்திலே அவர்களை நசுக்கிப்போட்டோம்; ஆனதுகொண்டு அவர்கள் இரத்தம் நமது வஸ்திரங்களின்மேலே தெறித்தது; நமது உடுப்பை எல்லாம் கறைப்படுத்திக்கொண்டோம். *வெளி. ௰௪. ௰௯, ௨௰.

௪ *ஏனெனில், நீதியைச் சரிக்கட்டும்நாள் நம்முடைய மனதிலிருந்தது; நம்முடையவர்களை மீட்கும் வருஷம் வந்திருந்தது. *ஏசா. ௩௪. ௮.

௫ *நாம் பார்த்தோம்; ஆனால் ஒத்தாசை செய்கிறவன் இல்லை; தாங்குகிறவன் இல்லை என்று ஆச்சரியப்பட்டோம்; ஆனதுகொண்டு நமது புயமே நமக்கு இரட்சிப்பாகி, நம்முடைய உக்கிரமே நம்மைத் தாங்கிற்று. *ஏசா. ௫௯. ௰௬, ௰௭.

௬ நாம் நமது கோபத்திலே சனசதனங்களை மிதித்துப்போட்டு, நம்முடைய உக்கிரத்தில் அவர்களை வெறியாக்கி, அவர்கள் சாரத்தைத் தரையில் இறங்கப்பண்ணினோம்.

௭ ¶ கர்த்தர் எங்களுக்குச் செய்தருளின எல்லாவற்றுக்கும் தக்கவிதமாகவும், அவர் தம்முடைய இரக்கங்களின்படியேயும், தம்முடைய திரளான தயவுகளின்படியேயும், இஸ்ரவேல் வீட்டாருக்குச் செய்த மகா நன்மைக்குத்தக்கவிதமாகவும், கர்த்தருடைய கிரியைகளையும், கர்த்தருடைய துதிகளையும் பிரஸ்தாபம்பண்ணுவேன்.

௮ ¶ ஏனெனில் அவர்கள் நம்முடைய சனந்தானென்றும், அவர்கள் கபடஞ்செய்யாதிருக்கப்போகிற பிள்ளைகளென்றுஞ் சொல்லி, அவர்களுக்கு இரட்சகரானார்.

௯ அவர்களுடைய எல்லா நெருக்கத்திலும் அவர் நெருக்கப்பட்டார்; ஆனதுகொண்டு அவருடைய முகத்தின் தூதனானவர் அவர்களை இரட்சித்தார்; அவர் *தமது அன்பினிமித்தமும், தமது பரிதாபத்தினிமித்தமும் அவர்களை மீட்டு, பூருவநாள்களிலெல்லாம் அவர்களைத் தூக்கிச் சுமந்துவந்தார். *௫ மோ. ௭. ௭-௮.

௰ அவர்களோ கலகம்பண்ணி, அவருடைய பரிசுத்தஆவிக்கு நோக நடந்தார்கள்; ஆகையால் அவர்களுக்குச் சத்துருவாய் மாறி, அவரே அவர்களுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணினார்.

௰௧ ¶ ஆகிலும் பூருவநாள்களையும், மோசேயையும், தம்முடைய சனத்தையும் நினைவுகூர்ந்தாரே; ஆனால் அவர்களையும், தமது மந்தையின் மேய்ப்பனையும் சமுத்திரத்திலிருந்து ஏறப்பண்ணினவர் இப்போது எங்கே?

௰௨ அவர்கள் நடுவிலே தம்முடைய பரிசுத்தஆவியை இருக்கக் கட்டளையிட்டு, அவர்களை மோசேயின் வலதுபக்கத்திலுள்ள தமது மகிமையின் புயத்தினாலே நடத்தி, தமக்கு நித்தியகீர்த்தியை உண்டாக்க அவர்களுக்குமுன்பாகத் தண்ணீர்களைப் பிளந்து,

௰௩ ஒரு குதிரை வனாந்தரவெளியிலே நடக்குமாப்போல அவர்களை ஆழங்களில் இடறுதபடிக்கு நடக்கப்பண்ணினவர் எங்கே?

௰௪ கர்த்தருடைய ஆவியானவர் அவர்களைப் பள்ளத்தாக்கிலே போய் இறங்குகிற மிருகஜீவன்களைப்போல இளைப்பாறப்பண்ணினார்; அப்படியே தேவரீர் உமக்கு மகிமையுள்ள கீர்த்தியை உண்டாக்க உம்முடைய சனத்தை நடத்தினீரே.

௰௫ ¶ *தேவரீர் பரமண்டலங்களிலிருந்து கண்ணோக்கி, உம்முடைய பரிசுத்தமும் உமது மகிமையுமான வாசஸ்தலத்திலிருந்

து பாரும்; உம்முடைய வயிராக்கியமும், உம்முடைய வல்லமைகளும் எங்கே? உம்முடைய குடல்களின் இரைதலும், உம்முடைய மன உருக்கமும் எனக்குமுன்பாகத் தன்னை அடக்கிக்கொள்ளுகிறதா?
*௫ மோ. ௨௬. ௰௫.

௰௬ தேவரீர் எங்கள் பிதாவாமே; ஏனெனில், ஆபிரகாம் எங்களை அறியான், இஸ்ரவேலுக்குக்கூட நாங்கள் அறியப்பட்டவர்களுமல்ல; கர்த்தாவே தேவரீர் எங்கள் பிதாவும், எங்கள் மீட்பருந்தானே; இது பூருவகாலமுதல் உம்முடைய நாமம்.

௰௭ கர்த்தாவே தேவரீர் எங்களை உம்முடைய வழிகளைத் தப்பிப்போகவிட்டு, எங்கள் இருதயத்தை உமக்குப் பயப்படாதபடிக்குக் கடினப்படுத்துவானேன்? உம்முடைய ஊழியக்காரரின்நிமித்தமும், உம்முடைய சுதந்தரமான கோத்திரங்களின்நிமித்தமும் திரும்பும்.

௰௮ உம்முடைய பரிசுத்த சனத்தைக் கொஞ்சக்குறையச் சுதந்தரமாக வசப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்; எங்கள் சத்துருக்கள் உம்முடைய பரிசுத்தஸ்தலத்தை *மிதித்துவிட்டார்கள். *ஏசா. ௬௪. ௰, ௰௧. சங். ௭௯. ௧.

௰௯ ஒருக்காலும் தேவரீர் ஆண்டுகொள்ளாதவர்களைப்போலும், உமது நாமம் விளங்காதவர்களைப்போலுமானோம்.

## ௬௪. அதிகாரம்.

ஆ உமது நாமத்தைச் சத்துருக்களுக்கு அறியப்பண்ணுவதற்கும், சாதிகள் உம்முடையசந்நிதிக்குமுன்தத்தளிப்பதற்குமாக,

௨ தேவரீர் வானங்களைக் கிழித்திறங்கி, உருக்குகிற அக்கினி எரியுமாப்போலவும், அக்கினி தண்ணீரைப் பொங்கப்பண்ணுமாப்போலவும், பருவதங்கள் உமக்குமுன்பாகக் கரைந்தால் தாவிளை.

௩ நாங்கள் வரப்பார்த்திராத பயங்கரமான காரியங்களைத் தேவரீர் செய்து இறங்குகிறபோது, உமக்குமுன்பாகப் பருவதங்கள் கரைந்ததுபோலேதானே.

௪ ¶ பராபரனே, *உமக்குக் காத்திருக்கிறவர்களுக்கு நீர் செய்பவைகளைத் தேவரீரே அல்லாமல், உலகத்தோற்றம்முதற்கொண்டு ஒருவரும் கேட்டதுமில்லை; செவியால் உணர்ந்ததுமில்லை; அவைகளைக் கண்டதுமில்லை. *௧ கொரி. ௨. ௯.

௫ மகிழ்ச்சியாய் நீதியைச் செய்கிறவர்களையும், உம்முடைய வழிகளில் உம்மை நினைக்கிறவர்களையும் சந்தித்தீர்; நாங்களோவென்றால், இதோ, அவைகளுக்கு விரோதமாகச் சதாகாலமும் பாவஞ்செய்தபடியினாலே, தேவரீர் கடுங்கோபம் அடைந்தீர்; இன்னம் தப்பியுமிருக்கிறோம்.

௬ ¶ ஆனால் நாங்கள் அனைவரும் தீட்டானவனைப்போல இருக்கிறோம்; எங்களுடைய நீதிகள் எல்லாம் தீட்டான வஸ்திரத்தைப்போலவும் இருக்கின்றன; நாங்கள் அனைவரும் *இலைகளைப்போல உதிருகிறோம்; எங்கள் அக்கிரமங்கள் காற்றைப்போல எங்களை அடித்துக்கொண்டுபோம்.
*சங். ௯௰. ௫, ௬.

௭ உமது நாமத்தைநோக்கிக் கூப்பிடுகிறவனும் *உம்மைப் பற்றிக்கொள்ளும்படிக்கு விழித்துக்கொள்ளுகிறவனுமில்லை; ஏனெனில் தேவரீர் உம்முடைய முகத்தை எங்களைவிட்டு மறைத்து, எங்களை எங்கள் அக்கிரமங்களின்நிமித்தம் கரையப்பண்ணுகிறீர். *சங். ௱௬. ௨௩.

௮ ¶ இப்போதும் கர்த்தாவே, தேவரீர் எங்களுடைய பிதா; நாங்கள் களிமண், தேவரீர் எங்களை உருவாக்குகிறவர்; நாங்கள் அனைவரும் உமது கரத்தின் கிரியைதானே.

௯ கர்த்தாவே, இத்தனையாய்க் கடுங்கோபம் வைத்துக்கொண்டிராமலும், *என்றைக்கும் அக்கிரமத்தை நினைத்துக்கொள்ளாமலும் இருப்பீராக; இதோ, நாங்கள் அனைவரும், உம்முடைய சனமென்று பாரும். *சங். ௭௯. ௮.

௰ உமது பரிசுத்த பட்டணங்கள் வனாந்தரமாயின; சீயோன் வனாந்தரமாயிற்று; எருசலேம் பாழாய்க்கிடக்கிறது.

௰௧ எங்கள் பிதாக்கள் உம்மைத் துதித்த எங்களுடைய பரிசுத்தமும், எங்கள் மகிமையுமான வீடு அக்கினிக்கு இரையாகி, இச்சிக்கப்படத்தக்க எங்களுடைய தாவரங்களெல்லாம் பாழாயின.

௰௨ கர்த்தாவே, இவைகள் இப்படியிருந்தும் அடக்கிக்கொண்டிருப்பீரோ? மவுனமாயிருந்து, இத்தனையாய் எங்களைச் சிறுமைப்படுத்துவீரோ?

## ௬௫. அதிகாரம்.

நமக்காக விசாரித்துக் கேளாதிருந்தவர்களாலே தேடப்பட்டோம்; நம்மைத் தேடாதிருந்தவர்களாலே கண்டுபிடிக்கப்பட்டோம்; *நம்முடைய நாமம் விளங்காதிருந்த சாதியுடனே, †இதோ, இங்கே இருக்கிறேம் என்கிறேம். *ஏசா. ௫௫. ௫. உரோ. ௰. ௨௰. †ஏசா. ௫௨. ௬.

௨ *நலமல்லாத வழியிலே தங்கள் நினைவுகளைப் பின்பற்றி நடக்கிற முரட்டாட்டமான சனத்தண்டைக்கு நாள்முழுதும் †நம்முடைய கைகளை நீட்டினேம். *எரே. ௭. ௨௪. †உரோ. ௰. ௨௧.

௩ நம்முடைய சந்நிதியிலே நித்தம் நமக்குக் கோபமுண்டாக்கி, தோப்புகளிலே பலியிட்டு, செங்கல்லுகளின்மேலே தூபங்காட்டி,

௪ பிரேதக்குழிகளண்டையில் உளுக்காந்து, பாழ்ந்தலங்களில் இராத்தங்கி, *பன்றியிறைச்சியைத் தின்று, தங்கள் பாத்திரங்களில் அருவருப்பான சீவன்களின் ஆணத்தை வைத்திருந்து, *ஏசா. ௬௬. ௰௭.

௫ நீ உன்மட்டிலிரு, என்னண்டைக்குச் சேராதிரு, உன்னைப்பார்க்கிலும் பரிசுத்தனாயிருக்கிறேன் என்கிற சனத்தண்டைக்குத்தானே; இவர்கள் நம்முடைய கோபத்திலே புகையும், நாளெல்லாம் எரிகிற அக்கினியுமாய் இருப்பார்கள்.

௬ இதோ, அது நமக்குமுன்பாக எழுதி இருக்கிறது; நாம் மவுனமாயிராமல் சரிக்குச் சரிக்கட்டுவோம்; அவர்கள் மடியிலே சரிக்கட்டுவோம்.

௭ உங்கள் அக்கிரமங்களுக்கும், மலைகளிலே தூபங்காட்டி, மேடைகளிலே நம்மை நிந்தித்த உங்கள் பிதாக்களுடைய அக்கிரமங்களுக்குங்கூடத்தானே; நாம் அவர்கள் முந்தின செய்கையின் பலனை அவர்கள் *மடியிலே அளப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். *கலா. ௬. ௭.

௮ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: ஒரு திராட்சக்குலையில் இரசம் காணப்படும்போது, அதை அழிக்காதிரு; ஏனெனில், அதிலே ஆசீர்வாதம் உண்டென்று சொல்லப்படுகிறபடி, நாம் நமது ஊழியக்காரரினிமித்தமாக அனைத்தையும் அழிக்காதபடிக்குச் செய்து,

௯ யாக்கோபிலிருந்து ஒரு வித்தையும், யூதாவிலிருந்து நம்முடைய பருவதங்களைச் சுதந்தரிப்பவனையும் எழும்பப்பண்ணுவோம்; நாம் தெரிந்துகொண்டவர்கள் அதைச் சுதந்தரித்துக்கொண்டு, நம்முடைய ஊழியக்காரர் அங்கே வாசம்பண்ணுவார்கள்.

௰ நம்மைத் தேடுகிற நமது சனத்துக்குச் சாரோன், ஆட்டுத் தொழுவமாகவும், *ஆகோரின் பள்ளத்தாக்கு, மாட்டுக்கிடையாகவும் இருக்கும். *யோவா. ௭. ௨௬.

௰௧ ¶ ஆனால் கர்த்தரைவிட்டு, நமது பரிசுத்த பருவதத்தை மறந்து, காத்தென்றதற்குப் பந்தியை ஆயத்தம்பண்ணி, மேனி என்றதற்கு ஊற்றுதலை நிறைய வார்க்கிறவர்களே,

௰௨ உங்களை நாம் பட்டையத்துக்கு எண்ணிக்கொடுப்போம்; நீங்கள் அனைவரும் கொலைப்படக் குனிவீர்கள்; ஏனென்றால், *நாம் கூப்பிட்டும் நீங்கள் மறு உத்தரவு சொல்லாமலும், நாம் பேசியும் நீங்கள் கேளாமலுமிருந்து, நம்முடைய பார்வைக்

குப் பொல்லாப்பானதைச்செய்து, நமக்குப் பிரியமாயிராததைத் தெரிந்துகொண்டீர்கள். *ஏசா. கூகூ. ச. வாக். க. உச. ஙி.

மக ஆனபடியினாலே கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, *நம்முடைய ஊழியக்காரர் புசிப்பார்கள்; நீங்களோ பசியாயிருப்பீர்கள்; இதோ, நம்முடைய ஊழியக்காரர் குடிப்பார்கள்; நீங்களோ தாகமாயிருப்பீர்கள்; இதோ, நம்முடைய ஊழியக்காரர் சந்தோஷப்படுவார்கள்; நீங்களோ வெட்கப்படுவீர்கள்.
*சங். உஉ. உஎ. மத். ரு. கூ.

மச இதோ, நம்முடைய ஊழியக்காரர் மனத்திடனாலே கெம்பீரிப்பார்கள்; நீங்களோ மனநோவினாலே கூப்பிட்டு, ஆவியின் முறிவினாலே அலறுவீர்கள்.

மரு நாம் தெரிந்துகொண்டவர்களுக்கு நீங்கள் உங்கள் நாமத்தைச் சாபப்பிரமாணமாகப் பின்வைத்துப்போவீர்கள்; ஏனெனில், கர்த்தராகிய ஆண்டவர் உன்னைக் கொன்றுபோட்டு, தம்முடைய ஊழியக்காரருக்கு *வேறே நாமத்தைத் தரிப்பார்.
*ஏசா. சூஉ. உ. வெளி. உ. மஎ.

மகூ ஆனதுகொண்டு பூமியிலே தன்னை ஆசீர்வதிக்கிறவன் சத்தியபராபரனுக்குள்ளே தன்னை ஆசீர்வதிப்பான்; பூமியிலே ஆணையிடுகிறவன் *சத்தியபராபரன்மேலே ஆணையிடுவான்; ஏனெனில், முந்தின இடுக்கண்கள் மறக்கப்பட்டு, அவைகள் நம்முடைய கண்களுக்கு மறைந்துபோய்விட்டன.
*எரே. ச. உ: மஉ. மகூ.

மஎ ¶ ஏனெனில், இதோ, *நாம்புது வானத்தையும், புதுப்பூமியையும் சிருஷ்டிக்கிறோம்; முந்தினவைகள் இனி நினைக்கப்படுவதுமில்லை; மனதிலே எழும்புவதுமில்லை.
*ஏசா. கூகூ. உஉ. உ பே. ங. மங. வெளி. உக. க.

மஅ நாம் சிருஷ்டிக்கிறதினாலே நீங்கள் என்றென்றைக்கும் மகிழ்ந்து களிகூர்ந்திருங்கள்; ஏனெனில், இதோ, எருசலேமைக் களிகூருதலுண்டாகவும், அதின் சனத்தை மகிழ்ச்சியுண்டாகவும் சிருஷ்டிக்கிறோம்.

மகூ நாம் எருசலேமின்மேல் களிகூர்ந்து, நமது சனத்தின்மேல் மகிழ்ச்சியாயிருப்போம்; அழுகையின் சத்தமும், கூக்குரலின் சத்தமும் அதில் இனிக் கேட்கப்படுவதில்லை.

உம அங்கே இனிக் கொஞ்சநாள்மட்டிருக்கும் பாலகனும், தன் நாள்களை நிறைவேற்றாத கிழவனும் உண்டாயிராமல், சாகிற வாலிபன் நூறுவயதுள்ளவனாயிருப்பான்; நூறுவயதுள்ளவனாகிய பாவியோ சபிக்கப்படுவான்.

உக வீடுகளைக் கட்டி, அவைகளில் குடியிருப்பார்கள்; *திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளின் கனியையும் புசிப்பார்கள். *ஏசா. சூஉ. அ, கூ.

உஉ *அவர்கள் கட்டுகிறதும், வேறொருவர் குடியிருக்கிறதும், அவர்கள் நாட்டுகிறதும், வேறொருவர் கனி புசிக்கிறதுமாயிருப்பதில்லை; ஏனெனில், விருட்சத்தின் நாள்களைப்போலே நமது சனத்தின்நாள்களிருக்கும்; நாம் தெரிந்துகொண்டவர்கள் தங்கள் கைகளின் கிரியைகளை, அவைகள் பழசாய்ப்போகுந்தனிலும் அநுபவிப்பார்கள். *உபா. உஅ. ஙம.

உங அவர்கள் விருதாவாக உழைப்பதில்லை; அவர்கள் கலங்கலாகப் பிள்ளைகளைப் பெறுவதுமில்லை; ஏனெனில், அவர்களும், அவர்களோடேகூட அவர்கள் சந்தானமும் கர்த்தராலே தெரிந்துகொள்ளப்பட்ட வித்தாயிருப்பார்கள்.

உச சம்பவிப்பது ஏதெனில், *அவர்கள் கூப்பிடுகிறதற்கு முன்னே நாம் மறு உத்தரவுகொடுப்போம்; அவர்கள் இன்னம் பேசுகையில் நாம் கேட்போம். *ஏசா. ஙம. மகூ: ருஅ. கூ. சங். ௱சரு. மஅ, மகூ. தானி. கூ. உம. உங. மத். கூ. அ.

உரு *ஓநாயும் ஆட்டுக்குட்டியும் ஒருமித்து மேயும்; சிங்கம் மாட்டைப்போலே

வைக்கோலைத் தின்னும்; †தூள், சர்ப்பத்தினுடைய போசனமாயிருக்கும்; நம்முடைய பரிசுத்தபருவதமெங்கும் தீங்குசெய்வதும் இல்லை, கேடுண்டாக்குவதும் இல்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*ஏசா. ௰௧. ௯. ௬. †௧ மோ. ௩. ௰௪.

## ௬௬. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: *பரமண்டலங்கள் நம்முடைய ஆசனமும், பூமி நம்முடைய பாதபடியுமாயிருக்கையில் நீங்கள் நமக்குக் கட்டும்வீடு எப்படிக்கொத்ததும், நாம் தாபரிக்கும் இடம் எப்படிக்கொத்ததுமாய் இருக்கும்? *௧ இரா. ௮. ௨௭. ௨ நாளா. ௬. ௰௮. மத். ௫. ௩௪, ௩௫. அப். ௭. ௪௮, ௪௯: ௰௭. ௨௪.

௨ நம்முடைய கரம் இவைகளெல்லாம் படைத்ததினால் இவைகள் எல்லாம் உண்டாயினவேயென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால் *சிறுமைப்பட்டு, ஆவியில் நொறுங்குண்டு, நமது வசனத்துக்கு நடுங்குகிறவனையே நோக்கிப்பார்ப்போம். *ஏசா. ௫௭. ௰௫. சங். ௩௪. ௰௮: ௫௧. ௰௭.

௩ *மாட்டைக் குரல்வளை அறுக்கிறவன் மனுஷனை வெட்டுகிறவனாகவும், ஆட்டைப்பலியிடுகிறவன் நாயைக் கழுத்தறுக்கிறவனாகவும், காணிக்கையைப் படைக்கிறவன் பன்றி இரத்தத்தைப் படைக்கிறவனாகவும், நினைப்புண்டாகத் தூபம்காட்டுகிறவன் விக்கிரகத்தைத் தோத்திரிக்கிறவனாகவும் இருக்கிறான்; இவர்களும் தங்களுடைய வழிகளைத் தெரிந்துகொள்ளுகிறார்கள்; இவர்களுடைய ஆத்துமா தங்கள் அருவருப்புகளின்மேலே விருப்பமுமாயிருக்கிறது. *எரே. ௬. ௨௰.

௪ நாமும் அவர்கள் பரியாசங்களுக்குத் தக்கதைத் தெரிந்துகொண்டு, அவர்களுக்குத்தக்க திகில்களை அவர்கள்மேல் வரப்பண்ணுவோம்; *நாம் கூப்பிட்டாலும், மறுஉத்தரவு கொடுக்கிறவனில்லாமலும், நாம் பேசினாலும் அவர்கள் கேளாமலும், அவர்கள் நமது பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, நாம் விரும்பாததைத் தெரிந்துகொண்டதினிமித்தமாகத்தானே. *ஏசா. ௬௫. ௰௨. வாக். ௧. ௨௪. நீ. எரே. ௭. ௰௩, ௰௪.

௫ ¶ கர்த்தருடைய வசனத்துக்கு நடுங்குகிறவர்களே, அவருடைய வார்த்தையைக் கேளுங்கள்; *உங்களைப் பகைத்து, நம்முடைய நாமத்தினிமித்தம் உங்களைத் தூரப்படுத்துகிற உங்கள் சகோதரர்: கர்த்தர் மகிமைப்படுவாராக என்கிறார்களே; ஆனால் அவர் உங்கள் சந்தோஷத்துக்காகக் காணப்படுவார்; அவர்களோ வெட்கப்படுவார்கள். *லூக். ௬. ௨௨.

௬ ¶ பட்டணத்திலிருந்து அமளியின் இரைச்சலும், தேவாலயத்திலிருந்து சத்தமும் கேட்கப்படும்; தம்முடைய சத்துருக்களுக்குச் சரிக்குச் சரிக்கட்டுகிற கர்த்தருடைய சத்தந்தானே.

௭ அம்பாயப்படாததற்குமுன் பெற்றாள்; அவளுக்கு வேதனை வராததற்குமுன் அவள் ஆண்பிள்ளையைப் பெற்றாள்.

௮ இப்படிக்கொத்ததைக் கேட்டது யார்? இப்படிக்கொத்ததைக்கண்டது யார்? ஒரே நாளிலே ஒரு தேசத்துக்குப் பிள்ளைப்பேறு வருமோ? ஒருமிக்க ஒரு சாதி பிறக்குமோ? சீயோனோவெனில், ஒருமிக்க வேதனைப்பட்டும்,தன்குமாரரைப்பெற்றுமிருக்கிறது.

௯ பெறப்பண்ணுகிறவராகிய நாம் பெறுவியாமல் இருப்போமோவென்று கர்த்தர் சொல்லுகிறார்; பிறக்கப்பண்ணுகிறவராகிய நாம் அடைபட்டிருப்போமோவென்று உன் பராபரன் சொல்லுகிறார்.

௰ ¶ எருசலேமைச் சிநேகிக்கிற நீங்களெல்லாரும் அதனோடேகூடச் சந்தோஷப்பட்டு, அதினாலே களிகூருங்கள்; அதினுடைய நிமித்தம் துக்கித்திருந்த நீங்கள் எல்லாரும் அதனோடேகூட மிகவும் மகிழுங்கள்.

௰௧ நீங்கள் அதினுடைய ஆறுதல்களின்

முலைப்பாலை உண்டு திருத்தியாகவும், நீங்கள் சூப்பிக்குடித்து, அதினுடைய மகிமையின் மினுக்கினால் மனமகிழ்ச்சியாகவுந் தானே.

௰௨ ¶ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் சமாதானத்தை ஒரு நதியைப்போலவும், சாதிகளின் மகிமையைப் புரண்டு ஓடுகிற ஆற்றைப்போலவும், அதினிடமாகப் பாய்ச்சுகிறோம்; *அப்பொழுது முலையுண்பீர்கள்; நீங்கள் கக்கத்திலே சுமக்கப்படுவீர்கள்; முழங்கால்களில் வைக்கப்பட்டு மனமகிழச்சியாக்கப்படுவீர்கள். *ஏசா. ௪௯. ௫, ௪: ௪௯. ௨௨: ௬௰. ௪: ௫. ௰௬.

௰௩ ஒருவனை அவன் தாய் தேற்றரவுபண்ணுமாப்போலே நாம் உங்களைத் தேற்றரவுபண்ணுவோம்; நீங்கள் எருசலேமைத் தொட்டுத் தேற்றப்படுவீர்கள்.

௰௪ நீங்கள் அதைக் காண்பீர்கள்; *உங்கள் இருதயம் மகிழ்ந்து, உங்கள் எலும்புகள் பச்சை முளையைப்போலச் செழிக்கும்; அப்பொழுது கர்த்தருடைய ஊழியக்காரரிடத்தில் அவருடைய கரமும், அவருடைய சத்துருக்களிடத்தில் அவருடைய சினமும் அறியப்படும். *ஏசா. ௩௫. ௰.

௰௫ ¶ ஏனெனில், இதோ, தம்முடைய கோபத்தை உக்கிரமாகவும், தம்முடைய உதம்புதலை *அக்கினிச்சுவாலைகளாகவும் மாறப்பண்ணக் கர்த்தர் அக்கினியோடே வருவார்; அவருடைய இரதங்கள் பெருங்காற்றைப்போல வரும். *ஏசா. ௩௰. ௩௰. சங். ௫௰. ௩. ௨ தெச. ௧. ௬, ௮. வெளி. ௰௮. ௮.

௰௬ ஏனெனில், கர்த்தர் அக்கினியாலும் *தமது பட்டையத்தாலும் எல்லா மாம்சத்தோடும் நியாயத்துக்குள்ப் பிரவேசிப்பார்; கர்த்தரால் கொலையுண்டவர்கள் அநேகராயிருப்பார்கள். *வெளி. ௰௬. ௨௧.

௰௭ ¶ தங்களைத்தானே பரிசுத்தமாக்குகிறவர்களும், *தோப்புகளின் நடுவிலே தங்களைத்தானே ஒருவர் பிறகாலே ஒருவராய்ச் சுத்திகரிக்கிறவர்களும், பன்றியிறைச்சியையும் அருவருப்பானதையும் எலிகளையும் சாப்பிடுகிறவர்களும், ஏகமாய்ச் சங்கரிக்கப்படுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௬௫. ௩, ௫.

௰௮ நாம் அவர்கள் கிரியைகளையும், அவர்கள் நினைவுகளையும் அறிவோம்; நாம் சகல சாதியாரையும், பாஷைக்காரரையும் கூட்டிச் சேர்க்கும் காலம் வரும்; இவர்கள் வந்து நம்முடைய மகிமையைக் காண்பார்கள்.

௰௯ நாம் அவர்களில் ஒரு அடையாளத்தைக் கட்டளையிட்டு, அவர்களிலே தப்பினவர்களை நம்முடைய கீர்த்தியைக் கேளாமலும், நம்முடைய மகிமையைக் காணாமலுமிருக்கிற சாதிகளின் தேசங்களாகிய தர்ஷீசுக்கும், வில்லுக்காரர் இருக்கிற பூலுக்கும், லூதுக்கும், தூபாலுக்கும், யாவானுக்கும் தூரத்திலுள்ள தீவுகளுக்கும் அனுப்புவோம்; அவர்கள் நமது மகிமையைச் சாதிகளுக்குள்ளே அறிவித்து,

௨௰ உங்களுடைய எல்லாச் சகோதரரையும், சகல சாதிகளிடத்திலுமிருந்து குதிரைகளின்மேலும், இரதங்களின்மேலும், குலாரி வண்டில்களின்மேலும், கோவேறுகழுதைகளின்மேலும், வேகமான ஒட்டகங்களின்மேலும், எருசலேமிலுள்ள நம்முடைய பரிசுத்த பருவதத்துக்குக் *கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவருவார்கள்; இஸ்ரவேல் புத்திரர் காணிக்கையைச் சுத்தமான பாத்திரங்களில் கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டுவருகிறதற்குச் சமானமாகத்தானே என்று கர்த்தர் சொல்லுகிறார். *உரோ. ௰௫. ௰௫.

௨௧ அவர்களிலும் சிலரை *ஆசாரியர்களாகவும், லேவியராகவும், எடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௬௧. ௬. ௧ பே. ௨. ௫.

உஉ ¶ ஏனெனில் நாம் படைக்கப்போகிற *புதுவானமும், புதுப்பூமியும் நமக்கு முன்பாக எப்படி நிற்கிறவைகளாயிருக்குமோ, அப்படி உங்கள் வித்தும், உங்கள் நாமமும் நிற்குமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. கூ௫. ௰எ.

உ௩ சம்பவிப்பது ஏதெனில், மாதத்துக்கு மாதமும், ஓய்வுநாளுக்கு ஓய்வுநாளும், எல்லா மாம்சமும் நமக்குமுன்பாகப் பணியவருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

உச அவர்கள் வெளியே போய் நமக்கு விரோதமாய், பாதகஞ்செய்த மனுஷருடைய பிரேதங்களைப் பார்ப்பார்கள்; ஏனெனில், *அவர்களுடைய பூச்சி சாகாமலும், அவர்களுடைய அக்கினி அவியாமலும் இருக்கும்; அவர்கள் எல்லா மாம்சத்துக்கும் அரோசிகமாய் இருப்பார்கள்.

*மாற். கூ. சச, சசு, சஅ.

# எரேமியாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

பென்யமீன் தேசத்து ஆனதோத்தூரில் உள்ள ஆசாரியர்களில் ஒருவனான இல்க்கியாவின் குமாரனாகிய எரேமியாவினுடைய வசனங்கள்:

உ ஆமோனுடைய குமாரனாகிய *யோசியாவென்ற யூதாவுடைய இராசாவின் நாள்களிலும், அவன் அரசாண்ட பதின்மூன்றும் வருஷத்திலும் இவனுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்று.

*உ இரா. உஉ. க. மு. உ நாளா. ௩ச. க. மு.

௩ அப்புறம் யோசியாவின் குமாரனாகிய *யோயாக்கீம் என்ற யூதாவுடைய இராசாவின் நாள்களிலும், யோசியாவின் குமாரனாகிய †சிதேக்கியாவென்ற யூதாவுடைய இராசாவின் பதினோராம் வருஷத்து முடிவுமட்டாகவும், ‡எருசலேம் ஊரார் ஐந்தாம் மாதத்தில் சிறைப்பட்டுப் போகுமட்டாகவும் அப்படி அவனுக்குண்டாயிற்று.

*உ இரா. உ௩. ௩௪. உ நாளா. ௩௬. ச. †உ இரா. உச. ௰எ. உ நாளா. ௩௬. ௰. ‡உ இரா. உ௫. அ.

ச ¶ கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாய் அவர் சொன்னதாவது:

௫ *நாம் உன்னைத் தாயின் வயிற்றில் உருவாக்காததற்குமுன்னே உன்னை அறிந்தோம்; நீ கர்ப்பத்திலிருந்து வெளியாகாததற்குமுன்னே நாம் உன்னைப் பரிசுத்தம் பண்ணி உன்னைச் சாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்டளையிட்டோம் என்றார்.

*கலா. க. ௰௫.

௬ ¶ அப்போது நான்: ஆ கர்த்தராகிய ஆண்டவரே, *இதோ, பேச அறியேன்; ஏனெனில், நான் இளந்தை என்றேன்.

*உ மோ. ச. ௰-௰உ: ௬. ௩௰.

எ *ஆனால் கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நான் இளந்தை என்று நீ சொல்லாமல், நாம் உன்னை அனுப்பப்போகிற எல்லாரிடத்திலும் நீ போய், நாம் உனக்குக் கற்பிப்பவைகளையெல்லாம் நீ பேசுவாயாக.

*ஏசே. க. ௰எ.

அ *நீ அவர்களுக்குப் பயப்படாயாக; ஏனெனில் உன்னை விடுவிக்கும்படிக்கு நாம் உன்னுடனே இருக்கிறோமென்று கர்த்தர் சொல்லி, *எரே. ௰௫. உ௰. ஏசா. சஉ. ௰.

௯ கர்த்தர் தமது கரத்தை நீட்டி, *என் வாயைத்தொட்டு: இதோ, †நம்முடைய வார்த்தைகளை உன் வாயிலே வைக்கிறோமென்றும், *ஏசா. ௬. ௭, எ. †ஏசா. ௫௧. ௬—௰: ௫௯. உக.

௰ ¶ பார், பிடுங்கவும், நிர்மூலமாக்கவும், அழிக்கவும், இடிக்கவும், கட்டவும், நாட்டவுமாக உன்னை நாம் இன்றைத்தினம் சாதிகளின்மேலும், இராச்சியங்களின்மேலும் திறத்துகிறோம் என்றும் கர்த்தர் என்னுடனே சொன்னார்.

௰௧ ¶ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்: எரேமியாவே, நீ என்ன காண்கிறாய் என்றார்; திவிரித்துக் காய்க்கிற மரத்தின் கிளையைக் காண்கிறேன் என்றேன்.

௰௨ அப்போது கர்த்தர் என்னுடனே: நன்றாய்க் கண்டாய்; ஏனெனில், நாம் நம்முடைய வார்த்தையின்மேலே அதை நிறைவேற்றும்படிக்குத் திவிரித்திருப்போம் என்றார்.

௰௩ கர்த்தருடைய வார்த்தை இரண்டாம் விசை எனக்கு உண்டாகி, அவர், நீ என்ன காண்கிறாய் என்றார்; பொங்குகிற பானையை நான் காண்கிறேன்; அதின் வாய் வடக்கேயிருந்து நோக்குகிறதென்றேன்.

௰௪ ¶ அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: *வடக்கேயிருந்து தீங்கு தேசத்தினுடைய குடிகளெல்லாரின்மேலும் பாயும். *எரே. ௪. ௬.

௰௫ ஏனெனில் இதோ, நாம் *வடதிசை இராச்சியங்களின் வம்சங்களை எல்லாம் கூப்பிடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; இவர்கள் வந்து அவனவன் தன்னுடைய ஆசனத்தை †எருசலேமின் ஒலிமுகவாசல்களிலும், அதினுடைய சுற்றுமதில்கள் எல்லாவற்றுக்கும் விரோதமாகவும், யூதாவினுடைய எல்லாப் பட்டணங்களுக்கும் விரோதமாகவும் வைப்பார்கள்.

*எரே. ௫. ௰௫: ௬. ௨௨: ௰. ௨௨. †எரே. ௩௯. ௪, ௫.

௰௬ அவர்கள் நம்மைவிட்டு வேற்றுத் தேவர்களுக்குத் தூபங்காட்டி, தங்கள் கைகளின் கிரியையைப் பணிந்துகொண்ட அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பின் நிமித்தம் நாம் நம்முடைய நியாயத்தீர்ப்புகளை அவர்களுக்குவிரோதமாகக்கூறுவோம்.

௰௭ ¶ ஆகையால் *நீ உன் அரையைக் கட்டிக்கொண்டு நின்று, நாம் உனக்குக் கற்பிப்பவைகளை எல்லாம் அவர்களுடனே சொல்; நாம் உன்னை அவர்களுக்குமுன்பாகக் கலங்கப்பண்ணாதபடிக்கு நீ அவர்கள் முகப்பார்வையாலே கலங்காதிரு.

*லூக். ௰௨. ௩௫. ௧ பே. ௧. ௰௩.

௰௮ ஏனெனில், இதோ, தேசமனைத்துக்கும், யூதாவின் இராசாக்களுக்கும், அதின் பிரபுக்களுக்கும், அதின் ஆசாரியர்களுக்கும், தேசத்தின் சனத்துக்கும், எதிராக நாம் உன்னை இன்றையத்தினம் *அரணிப்பான பட்டணமும், இருப்புத்தூணும், வெண்கல அலங்கமும் ஆக்குகிறோம்.

*எரே. ௬. ௨௭: ௰௫. ௨௰. எசே. ௩. ௮, ௯.

௰௯ அவர்கள் உனக்குவிரோதமாய் யுத்தம் பண்ணுவார்கள்; ஆனால் உன்னை மேற்கொள்ளாதிருப்பார்கள்; ஏனெனில் உன்னை விடுவிக்கும்படிக்கு நாம் உன்னுடனே இருக்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

## ௨. அதிகாரம்.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௨ நீ போய், எருசலேமின் செவிகளில் படக் கூப்பிட்டுச் சொல்லவேண்டியது: விதைக்கப்படாத தேசமாகிய வனாந்தரத்திலே நீ நம்முடைய பிறகாலே நடந்துவந்த உன் இளவயதின் பத்தியையும், உன் மணவியிருப்பின் நேசத்தையும், நினைத்திருக்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ இஸ்ரவேல் கர்த்தருக்குப் பரிசுத்தமும், அவருடைய வரத்தின் முதற்கனியுமாயிருந்தது; அதைப் பட்சித்த யாவரும் கோஷ்தர் ஆனார்கள்; பொல்லாப்பு இவர்கள்மேல் வந்ததென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪ ¶ யாக்கோபின் வீட்டாரே, இஸ்ரவேல் வீட்டினுடைய எல்லா வம்சங்களே, கர்த்

தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௫ கர்த்தர் சொல்லுகிறதாவது: எங்களை எகிப்துதேசத்திலிருந்து ஏறப்பண்ணினவரும், அந்தரவெளியும், பள்ளங்களுமான தேசமும், வறட்சியும், மரணநிழலுமான தேசமும், ஒருவனும் கடவாமலும் ஒரு மனுஷனும் குடியிராமலும் இருக்கிற தேசமுமான வனாந்தரத்தில் எங்களை நடத்தினவருமாகிய கர்த்தர் எங்கேயென்று உங்கள் பிதாக்கள் கேளாமல்,

௬ நம்மைவிட்டுத் தூரப்பட்டு, மாயையின் *பிறகாலே நடந்து, வீணராய்ப் போகிறதற்கு நம்மில் என்ன அநியாயத்தைக் கண்டுபிடித்தார்கள்? *மீகா. ௬. ௩.

௭ நாம் உங்களைப் பயிர்நிலமாகிய தேசத்துக்கு, அதின் கனியையும் நன்மையையும் சாப்பிடும்படிக்கு அழைத்துக்கொண்டு வந்தோம்; ஆனால் நீங்கள் அதற்குள்ப் பிரவேசித்து, நம்முடைய தேசத்தைத் தீட்டுப் படுத்தி, நம்முடைய சுதந்தரத்தை அருவருப்பாக்கிப்போட்டீர்கள்.

௮ ஆசாரியர்கள்: கர்த்தர் எங்கேயென்று சொல்லாமலும், *வேதத்தைப் படித்தவர்கள் நம்மை அறியாமலும் போய், மேய்ப்பர் நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினார்கள்; தீர்க்கதரிசிகள் பாகாலைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்சொல்லி உதவாதவைகளின் பிறகாலே நடந்தார்கள்.

*உரோ ௨. ௨௰, ௨௧.

௯ ¶ ஆனதுகொண்டு இன்னம் உங்களோடே வழக்காடுவோம்; உங்கள் பிள்ளைகளின் பிள்ளைகளோடும் வழக்காடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ ஏனெனில், நீங்கள் கித்தீமின் தீவுகளைக் கடந்துபோய்ப் பார்த்து, கேதாருக்கு அனுப்பி நன்றாய்க்கவனித்துக்கொண்டு, இப்படிக்கொத்த காரியம் உண்டோவென்றும்,

௰௧ ஒரு சாதியானது தேவர்களல்லாதவைகளாகிய தங்கள் தேவர்களை மாற்றினது உண்டோவென்றும் பாருங்கள்; நம்முடைய சனமோ தன் மகிமையை உதவாததாக மாற்றிவிட்டது.

௰௨ *வானங்களே, இதினாலே பிரமித்துக் கொந்தளித்து, மிகவும் திடுக்கிடுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *எசா. ௧. ௨.

௰௩ ஏனெனில், நம்முடைய சனம் இரண்டு பொல்லாப்புகளைச் செய்தது; *சீவனுள்ள தண்ணீரின் ஊற்றாகிய நம்மை விட்டார்கள்; தண்ணீரைக் காவாத வெடிப்புள்ள சலத்தொட்டிகளாகிய பள்ளங்களைத் தங்களுக்கு வெட்டத்தானே. *சங். ௩௬. ௰.

௰௪ ¶ இஸ்ரவேல் அடிமையோ? அவன் வீட்டுப்பிள்ளையோ? ஏன் கொள்ளையானான்?

௰௫ சிங்கக்குட்டிகள் அவன்மேல் கர்ச்சித்து, தங்கள் சத்தத்தைக் காட்டி, அவன் தேசத்தைப் பாழாக்கிவிட்டன; அவனுடைய பட்டணங்கள் குடியிராமலே சுட்டு எரிக்கப்பட்டன.

௰௬ நோப், தகபானேஸ் என்ற பட்டணங்களின் புத்திரரும், உன் உச்சந்தலையை மேய்ந்துகொண்டார்கள்.

௰௭ உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை வழியிலே நடக்கப்பண்ணும் நேரத்திலே நீ அவரைவிட்டுப் போகிறதினாலே அல்லவோ இதை உனக்கு உண்டுபண்ணுகிறாய்?

௰௮ ¶ இப்போதும் சீகோரின் தண்ணீரைக் குடிக்க எகிப்துக்குப் பயணம்போகிறது உனக்கு என்ன பிரயோசனம்? ஐப்பிராத்து நதியின் தண்ணீரைக் குடிக்க அசூரியாவுக்குப் பயணம்போகிறதும் உனக்கு என்ன பிரயோசனம்.

௰௯ *உன் பொல்லாப்பு உன்னைத் தண்டித்து, உன் மாறுபாடுகள் உன்னைக் குற்றம்பிடிக்கின்றன; நீ உன் பராபரனாகிய கர்த்தரை விடுகிறதும், நமக்குப் பயப்படுதல் உன்னிடத்தில் இல்லாமல் இருக்கிறதும், எத்தனை பொல்லாப்பும் கசப்புமானது என்கிறதை அறிந்துபார் என்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

*எரே. ௪. ௰௮. எசா. ௩. ௯.

௨௰ ¶ ஏனெனில், பூருவகாலந்துவக்கி நாம் உன் நுகத்தடியை உடைத்து, உன் கட்டுகளை அறுத்தோமே; நான் அடிமைப் படுவதில்லையென்று நீயும் சொன்னாயே; ஆகிலும், மேட்டிமையான எல்லா மேடையின்மேலும், பச்சையான எல்லா மரத்தின் கீழும் நீ வேசியாய்த் திரிகிறாய்.

௨௧ நாம் உன்னை *நற்குல திராட்சச்செடியாகவும், முழு உண்மையான விதையாகவும் நாட்டினோமே; நீ நமக்கு வேறுத் திராட்சச்செடியின் ஆகாத கொடிகளாய் மாறிப்போனது எப்படி? *சங். ௪௪. ௩: ௮௰. ௯. ஏசா. ௫. ௧, ௨.

௨௨ நீ உன்னை வெண்காரத்தினாலே கழுவி உனக்காகச் சவுக்காரத்தை நிரம்பக் கூட்டினாலும், உன் அக்கிரமத்தின் கறைகள் நமக்குமுன்பாக இருக்குமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௩ ¶ நான் அழுக்கானதில்லை; நான் பாகால்களைப் பின்தொடர்ந்ததில்லை என்று எப்படிச் சொல்லுகிறாய்? பள்ளத்தாக்கிலே நீ நடக்கிற மார்க்கத்தைப்பார்; நீ செய்ததை அறிந்துகொள்; தன் வழிகளைத் தாறுமாறாக்குகிற வேகமானபெண்ணொட்டகம் நீ.

௨௪ வனாந்தரத்துக்குப் பழகினதும், தன் இச்சையின் ஆவலிலே காற்றை உள்ளே கொள்ளுகிறதுமான காட்டுக்கழுதை நீ; அதின் ஓட்டத்தை நிறுத்தித் திருப்புபவன் யாவன்? அதைத் தேடுகிறவர்களெல்லாரும் தேடி விடாய்த்துப்போவதில்லை; அதின் மாசத்தில் அலைவகள் அதைக் கண்டுபிடிக்கும்.

௨௫ உன் காலை வெறுங்கால் ஆகாதபடிக்கும், உன் தொண்டையைத் தவனம்அடையாதபடிக்கும், அடக்கிக்கொள்ளென்றால், நீ: அது விருதா; நான் அப்படிச் செய்கிறதில்லை; ஏனெனில், அந்நியரைச் சிநேகிக்கிறேன்; அவர்களைப் பின்தொடருவேன் என்கிறாய்.

௨௬ திருடன் கண்டுபிடிக்கப்படுகிறபோது, எப்படி வெட்கப்படுகிறானோ, அப்படி இஸ்ரவேல் வீட்டார் வெட்கப்படுவார்கள்; மரத்துக்கு நீ என் தகப்பனென்றும், கல்லுக்கு நீ என்னைப் பெற்றாயென்றும் சொல்லுகிற அவர்களும், அவர்கள் இராசாக்களும், அவர்கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்களும், அவர்கள் தீர்க்கதரிசிகளுந்தானே.

௨௭ ஏனெனில், முகத்தையல்ல, *பிடரியை அவர்கள் நமக்குக் காட்டி, தங்கள் தீங்குகாலத்திலோ: எழும்பி எங்களை இரட்சியும் என்கிறார்கள். *ஏசே. ௨௩. ௩௫.

௨௮ *நீ உனக்கு உண்டுபண்ணின தேவர்களோவென்றால் எங்கே? உன் தீங்குகாலத்தில் உன்னை இரட்சிக்குமோவென்று அவைகள் எழும்பட்டும்; ஏனெனில், †யூதாவே. உன் பட்டணங்களின் இலக்கமும் உன் தேவர்களின் இலக்கமும் சரி.

*நியா. ௰. ௰௪. †எரே. ௰௧. ௰௩.

௨௯ நம்மோடே நீங்கள் வழக்காடுவானேன்; நீங்கள் அனைவரும் நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௰ நாம் உங்கள் பிள்ளைகளை *அடித்தது விருதா; தண்டனையை ஏற்றுக்கொள்ளாதே போனார்கள்; அழிக்கிற சிங்கத்தைப்போலே உங்கள் பட்டயம் உங்கள் தீர்க்கதரிசிகளைப் பட்சிக்கிறது.

*எரே. ௫. ௩. ஏசா. ௧. ௰௫.

௩௧ ¶ சந்ததியே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தையைச் சிந்தித்துப்பாருங்கள்; நாம் இஸ்ரவேலுக்கு வனாந்தரமும், காரிருளான பூமியுமாக இருந்தோமோ? பின்னை ஏன் நம்முடைய சனம்: நாங்கள் ஆளுகிறோமென்றும், இனி உம்மண்டைக்கு நாங்கள் வருவதில்லையென்றும் சொல்லுகிறார்கள்?

௩௨ ஒரு கன்னியாஸ்திரி தன் ஆபரணத்தையும், ஒரு மணவாட்டி தன் சரிகைகளையும் மறப்பாளோ? நமது சனமோவென்றால் எண்ணிமுடியாத நாள்களாய் நம்மை மறந்திருக்கிறார்கள்.

௩௩ ¶ சிநேகத்தைத் தேடும்படிக்கு *நீ உன் மார்க்கத்தை நயமாக்குகிறதென்ன? இப்படியாய் நீ பொல்லாத ஸ்திரீகளுக்கும் உன் வழிகளைக் கற்றுக்கொடுத்தாய்.
*௨ இரா. ௰௭. ௯.

௩௪ உன் வஸ்திரத்து ஓரங்களிலும், குற்றமில்லாத ஏழை ஆத்துமாக்களின் இரத்தம் கண்டுபிடிக்கப்பட்டது; அதைத் தோண்டித் தேடுகிறதினால் அல்ல, அது எல்லாவற்றின்மேலும் வெளியாயிருக்கிறதினாலே அதைக் கண்டுபிடித்தோம்.

௩௫ ஆகிலும்: குற்றமில்லாதிருக்கிறேன் என்றும், அவருடைய கோபம் என்னைவிட்டுத் திரும்பிற்று என்றும் சொல்லுகிறாய்; இதோ, நான் பாவஞ்செய்ததில்லையென்று நீ சொல்லுகிறதின்நிமித்தம் நாம் உன்னோடே நியாயத்துக்குட்பிரவேசிப்போம்.

௩௬ ¶ நீ உன் வழியை மாற்றிக்கொள்ளும்படிக்கு இத்தனையாய் விலகிப்போகிறது என்ன? நீ அசூரியாவினால் வெட்கிப்போனதுபோலே *எகிப்தினாலும் வெட்கிப்போவாய். *ஏசா. ௩௧. ௧.

௩௭ இதிலுமிருந்து நீ உன் கைகள் உன் தலையின்மேல் வைக்கப்பட்டவைகளாய்ப் புறப்படுவாய்; ஏனெனில், உன் நம்பிக்கைகளைக் கர்த்தர் வெறுத்திருக்கிறார்; அவைகளால் உனக்கு வாய்க்கப்போகிறதில்லை.

## ௩. அதிகாரம்.

அவர் சொல்லுகிறதாவது: இதோ, *ஒரு புருஷன் தன் பெண்சாதியைத் தள்ளிவிட்டு, இவள் அவனிடத்திலிருந்து புறப்பட்டு, அந்நியபுருஷனுக்குப் பெண்சாதியானால், அவன் அவளிடத்திலே இனித் திரும்பப் போவானோ? அந்தத் தேசம் மிகவும் தீட்டுப்படுமல்லவோ? நீயோவென்றால் அநேகம் சிநேகிதரோடே வேசித்தனம் பண்ணினாய்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பவாவென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*௫ மோ. ௨௪. ௨-௪.

௨ நீ மேடுகளின்மேல் உன் கண்களை ஏறெடுத்து, நீ எவ்விடத்திலே புணர்ச்சியாகாதே போனாயென்று பார்? வனாந்தரத்திலே அரபியன் செய்கிறதுபோலே நீ வழியோரங்களில் அவர்களுக்காக உட்கார்ந்து, உன் வேசித்தனங்களாலும், உன் பொல்லாப்பினாலும் தேசத்தைத் தீட்டுப்படுத்தினாய்.

௩ ஆனதுகொண்டு மழைகள் வருஷிக்காமலும், பின்மாரியில்லாமலும் போயின; உனக்கோவெனில், சோரஸ்திரீயின் நெற்றியிருக்கிறது; நாணமாட்டோம் என்கிறாய்.

௪ நீ இப்போது முதலாய் நம்மைநோக்கி: என் பிதாவே, தேவரீர் என் இளவயதின் அதிபதியென்று கூப்பிட்டு.

௫ சதாகாலமாகக் கோபத்தை வைப்பாரோ? அதை என்றென்றைக்கும் காப்பாரோ என்கிறாய் அல்லவோ? இதோ, இப்படி நீ சொல்லியும் பொல்லாப்புகளைச் செய்து, மிஞ்சிப்போகிறாய் என்கிறார்.

௬ ¶ யோசியா இராசாவின் நாள்களிலே கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: மாறுபாடான இஸ்ரவேல் என்பவள் செய்ததைக் கண்டாயோ? அவள் *உயரமான சகல பருவதத்தின்மேலும், பச்சையான சகல மரத்தின்கீழும்போய், அங்கே வேசித்தனம்பண்ணினாள். *எரே. ௨. ௨௰.

௭ அவள் இப்படியெல்லாம் செய்ததற்குப்பிற்பாடு, நம்மண்டைக்குத் திரும்பென்று நாம் சொன்னோம்; ஆனால் திரும்பாதே போனாள்; இதை யூதா என்ற அவளுடைய சகோதரியாகிய துரோகி பார்த்தாள்.

௮ ஆனால் *மாறுபாடான இஸ்ரவேலென்பவள் விபசாரம்பண்ணின எல்லாவகைகளின்நிமித்தமும் நாம் அவளை அனுப்பிவிட்டு, அவளுடைய தள்ளுதலின் சீட்டை அவளுக்குக் கொடுத்தபோதும், அவளுடைய சகோதரியாகிய யூதா என்ற துரோகி பயப்படாமல், இவளும் போய் வேசித்தனம்பண்ணினாள் என்று கண்டோம்.
*௨ இரா. ௰௭. ௰௮,௰௯.

௯ சம்பவித்தது ஏதெனில், அவளுடைய வேசித்தனத்தின் பிரசித்தத்தினாலே தேசம் தீட்டுப்பட்டுப்போயிற்று; ஏனெனில் கல்லோடும் மரத்தோடும் விபசாரம்பண்ணிக் கொண்டிருந்தாள்.

௰ ஆனால் இவைகளையெல்லாம் கண்டும், யூதாவென்ற அவளுடைய சகோதரியாகிய துரோகி, பொய்யாய் அல்லாமல் முழுஇருதயத்தாலே நம்மண்டைக்குத் திரும்பினதில்லை என்று கர்த்தர் சொன்னார்.

௰௧ ¶ பின்னையும் கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: யூதா என்ற துரோகியைப் பார்க்கிலும், மாறுபாடான இஸ்ரவேலென்பவள் தன் ஆத்துமாவை நீதியாக்கினாள்.

௰௨ நீ போய் வடதிசையை நோக்கிக் கூற வேண்டிய வார்த்தைகளாவன: மாறுபாடான இஸ்ரவேலே, *திரும்பு என்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது நாம் உங்கள் மேல் நம்முடைய கோபத்தை இறங்கப் பண்ணுவதில்லை; ஏனெனில், †நாம் கிருபை உள்ளவரென்று கர்த்தர் சொல்லுகிறார்; என்றைக்கும் கோபம் வையோம்.

*எசே. ௰௮. ௩௰-௩௨. †சங். ௱௩. ௯.

௰௩ நீயோவெனில், உன் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணி, பச்சையான சகல மரத்தின்கீழும் உன் வழிகளை அந்நியர்பிறகாலே சிதறப்பண்ணினாய் என்ற உன்னுடைய அக்கிரமத்தையும், நம்முடைய சத்தத்தைக் கேளாதேபோனீர்கள் என்கிறதையும் அறிந்துகொள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௪ *மாறுபாடான பிள்ளைகளே, திரும்புங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், நாம் உங்கள் பர்த்தாவாயிருக்கிறோம்; நாம் உங்களை ஊரில் ஒருவனையும், வம்சத்தில் இரண்டுபேரையும் எடுத்து, உங்களைச் சீயோனுக்கு அழைத்துக்கொண்டு வந்து, *ஓசே. ௨. ௰௯, ௨௰.

௰௫ உங்களுக்கு நம்முடைய இருதயத்துக்கு ஏற்ற *மேய்ப்பரைக் கொடுப்போம்; அவர்கள் உங்களை அறிவும், புத்தியுமாய் மேய்ப்பார்கள்.

*எரே. ௨௩. ௪. எபே. ௪. ௰௧.

௰௬ ¶ நீங்கள் தேசத்திலே பெருகிப் பலுகுகிற அந்நாள்களிலே சம்பவிப்பது ஏதென்றால், அவர்கள் இனிக் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியென்று சொல்வதில்லை; அது அவர்கள் மனதில் ஏறுவதும் இல்லை; அவர்கள் அதை நினைப்பதும் இல்லை; சிந்திப்பதும் இல்லை; அது இனிச் செப்பனிடப்படுவதும் இல்லை என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௭ அக்காலத்திலே *எருசலேமைக் கர்த்தருடைய இராசாசனமென்பார்கள்; சகல சாதியாரும் எருசலேமில் விளங்கிய கர்த்தருடைய நாமத்தின்நிமித்தம் அதினிடமாகச் சேர்வார்கள்; அவர்கள் இனித் தங்கள் பொல்லாத இருதயத்தின் கடினத்தைப் பின்பற்றி நடப்பதில்லை, *ஏசா. ௨. ௨, ௩. மீகா. ௪. ௧, ௨.

௰௮ ¶ அந்நாள்களிலே யூதாவீட்டார் இஸ்ரவேல் வீட்டாரிடத்திலே போய், அவர்கள் ஏகமாய் வடதேசத்திலிருந்து புறப்பட்டு, நாம் தங்கள் பிதாக்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த தேசத்திற்கு வருவார்கள்.

௰௯ நாம் உன்னைப் பிள்ளைகளுக்குள்ளே வைத்து, இச்சிக்கப்படத்தக்க தேசத்தையும், சாதிகளுடைய சேனைகளின் அலங்காரமான சுதந்தரத்தையும் உனக்குக் கொடுப்பது எப்படியென்று சொன்னோம்; ஆனால் நீ நம்மை, என் பிதாவே என்று அழைப்பாய்; நீ நம்மைவிட்டு விலகுவதில்லை என்று திரும்பவும் சொன்னோம்.

௨௰ ஒரு பெண்சாதி தன் புருஷனுக்குத் துரோகி ஆகிறதுபோலே, இஸ்ரவேல் வீட்டார்களாகிய நீங்கள் நமக்குத் துரோகிகள் ஆனது மெய்யாமே என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௰௧ ¶ ஆனால் தங்கள் வழியைத் தாங்கள் மாறுபாடாக்கி, தங்கள் பராபரனாகிய கர்த்

தனை மறந்து, அதினிமித்தம் இஸ்ரவேல் புத்திரர் அழுதுகொண்டு விண்ணப்பஞ் செய்யும் சத்தம் உயர் நிலங்களிலே கேட்கப்படும்.

௨௨ மாறுபாடான பிள்ளைகளே, திரும்புங்கள்; உங்கள் மாறுபாடுகளைக் குணமாக்குவோம் என்று சொல்லென்றார்; இதோ, உம்மண்டைக்கு வருகிறோம்; ஏனெனில் தேவரீரே எங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௨௩ மேடுகளையும், திரளான பருவதங்களையும் நம்புகிறது விருதாவாயிருக்கிறது மெய்யாமே; இஸ்ரவேலின் இரட்சிப்பு எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குள் இருக்கிறது மெய்யாமே.

௨௪ ஏனெனில், இலச்சையானது எங்கள் சிறுவயதுதுவக்கி எங்கள் பிதாக்களுடைய பிரயாசத்தையும், அவர்கள் ஆடுகளையும், மாடுகளையும், அவர்கள் குமாரரையும், குமாரத்திகளையும் பட்சித்துவிட்டது.

௨௫ எங்கள் இலச்சையிலே கிடக்கிறோம்; எங்கள் இகழ்ச்சி எங்களை மூடியிருக்கிறது; ஏனெனில், நாங்களும், எங்கள் பிதாக்களும் எங்கள் சிறுவயதுதுவக்கி இந்நாள் வரைக்கும் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம்; எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சொல்லைக் கேளாமலும்போனோம்.

## ௪. அதிகாரம்.

இஸ்ரவேலே, நீ திரும்ப மனதானால் நம்மண்டைக்குத் திரும்பென்று கர்த்தர் சொல்லுகிறார்; நீ உன் அருவருப்புகளை நமது முகத்தைவிட்டு அகற்றினால், நீ இனி அலைந்து திரிவதில்லை.

௨ *கர்த்தருடைய ஜீவன்மேலே உண்மையும், நியாயமும், நீதியுமாய்ச் சத்தியம்பண்ணுவாய்; புறச்சாதிகளும் அவருக்குள் †தங்களை ஆசீர்வதித்துக்கொண்டு, அவருக்குள் மேன்மைபாராட்டுவார்கள். *ஏசா. ௬௫. ௧௬, ௨௪. †௫ மோ. ௨௨. ௰௮.

௩ ¶ ஆனால் யூதாமனுஷரோடும், எருசலேமியரோடும் கர்த்தர் சொல்லுகிறதாவது; *நீங்கள் முள்ளுகளுக்குள்ளே விதையாமல், பயிர்நிலத்தை உங்களுக்குப் புதிதாய்ப் பண்படுத்துங்கள். *ஓசே. ௰. ௰௨, ௰௩. மத். ௰௩. ௭. ௭பி. ௯. ௮.

௪ யூதா மனுஷரே, எருசலேமின் குடிகளே, உங்கள் கிரியைகளுடைய பொல்லாப்பின் நிமித்தம் நம்முடைய உக்கிரம் அக்கினியைப்போலே புறப்பட்டு, அவிக்கிறவன் இல்லாமல் எரியாதபடிக்கு *நீங்கள் கர்த்தருக்கு உங்களைச் சுன்னத்துப்பண்ணி, உங்கள் இருதயத்தின் நுனித்தோல்களை நீக்கிப்போடுங்கள். *௫ மோ. ௰. ௰௬.

௫ ¶ தேசத்தில் எக்காளம் ஊதுங்கள் என்று சொல்லி, யூதாவில் அறிவித்து, எருசலேமிலே கேட்கப்பண்ணுங்கள்; நாம் அரணான பட்டணங்களுக்கு உட்படும்படிக்குச் சேருங்களென்று சொல்லி, நீண்டசத்தமாய்க் கூப்பிடுங்கள்.

௬ சீயோன் திசையாய்க் கொடியேற்றுங்கள்; கூடுங்கள், நிற்காதிருங்கள்; ஏனெனில், நாம் *வடக்கேயிருந்து பொல்லாப்பையும், மகா நொறுக்குதலையும் வரப்பண்ணுகிறோம். *எரே. ௧. ௰௪.

௭ உன் தேசத்தைப் பாழாக்கிவிடும்படிக்குச் சிங்கம் தன் புதரிலிருந்து எழும்பி, சாதிகளின் சங்காரன் தன் தானத்திலிருந்து பயணப்பட்டு வருகிறான்; உன் பட்டணங்கள் குடியிராதபடியாய் அழிக்கப்படுமென்கிறார்.

௮ இதினிமித்தம் இரட்டுகளைக் கட்டிக்கொள்ளுங்கள்; புலம்பி அலறுங்கள்; ஏனெனில், கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் நம்மைவிட்டுத் திரும்பாது.

௯ அந்நாளிலே சம்பவிப்பது ஏதென்றால், இராசாவின் இருதயமும், பிரபுக்களின் இருதயமும் மடிந்து, ஆசாரியர்கள் திடுக்கிட்டு, தீர்க்கதரிசிகள் திகைப்பார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ ¶ ஆ கர்த்தராகிய ஆண்டவரே, உங்களுக்குச் சமாதானமிருக்கும் என்று சொன்னதினால் மெய்யாகவே இந்தச் சனத்துக்கும், எருசலேமுக்கும் மிகுதியான மோசத்தை வரப்பண்ணினீர்; பட்டையம் ஆத்துமாமட்டும் எட்டுகிறதே என்றேன்.

௰௧ ¶ வனாந்தரத்திலுள்ள உயர்நிலங்களில் இருந்து, ஒரு உஷ்ணக்காற்று நமது சனமாகிய குமாரத்திக்கு நேராகும் வழியில் அடிக்குமென்று அக்காலத்திலே இந்தச் சனத்தோடும், எருசலேமோடும் சொல்லப்படும்; ஆனால் தூற்றவல்ல, சுத்திகரிக்கவுமல்ல,

௰௨ இவைகளைப்பார்க்கிலும் உரமானகாற்று நம்முடைய காரியமாய் வரும்; இப்போது நாமும் அவர்களோடே நியாயங்களைப் பேசுவோம்.

௰௩ இதோ, மேகங்களைப்போல எழும்பி வருகிறான்; அவனுடைய இரதங்கள் பெருங்காற்றைப்போலிருக்கின்றன; அவன் குதிரைகள் கழுகுகளிலும் வேகமானவைகள்; நமக்கு ஐயோ! ஏனெனில், பாழ்க்கடிக்கப்படுகிறோம்.

௰௪ எருசலேமே, நீ இரட்சிக்கப்படும்படிக்கு *உன் இருதயத்தைப் பொல்லாப்பறக் கழுவு; எந்தமட்டும் அக்கிரம நினைவுகள் உன் உள்ளத்திலே தங்கும்.

*ஏசா. க. ௰௬.

௰௫ ஏனெனில் ஒரு சத்தம் தாணிலிருந்து வந்து, செய்தியை அறிவிக்கிறதும், எப்பிராயீமின் பருவதத்திலிருந்து வந்து, தீங்கைக்கேட்கப்பண்ணுகிறதுமாயிருக்கிறது.

௰௬ சாதிகளுக்கு அதைப் பிரஸ்தாபம் பண்ணுங்கள்; இதோ, காவல்க்காரர் தூரதேசத்திலிருந்து வந்து, யூதாவுடைய பட்டணங்களுக்கு விரோதமாய்த் தங்கள் சத்தத்தைக் காட்டுவார்களென்று எருசலேமுக்குக் கூறுங்கள்.

௰௭ அதற்கு விரோதமாய் அவர்கள் வயல்வெளிகளின் காவல்க்காரரைப்போலே சுற்றிலுமிருப்பார்கள்; ஏனென்றால் அது நமக்கு விரோதமாய் எழும்பிற்றென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ *உன் மார்க்கமும், உன் கிரியைகளும் இவைகளை உனக்கு உண்டுபண்ணின; இது இத்தனை கசப்பாயிருந்து, உன் இருதயமட்டும் எட்டுகிறது உன்னுடைய பொல்லாப்புத்தானே. *எரே. ௨. ௰௯.

௰௯ ¶ என் குடல்கள், என் குடல்களே எனக்கு நோகிறது; என் இருதயத்தின் ஆணவம் அற்றது; என் இருதயம் என்னில் கதறுகிறது; அமர்ந்திருக்கமாட்டேன்; ஏனெனில், என் ஆத்துமா எக்காளத்தின் சத்தத்தையும், யுத்தத்தின் ஆர்ப்பரிப்பையும் கேட்டது.

௨௰ நொறுக்குதலின்மேல் நொறுக்குதல் கூறப்படுகிறது; ஏனெனில், தேசமெல்லாம் பாழாகும்; அசுப்பிலே என் கூடாரங்களும் ஒரு நிமிஷத்தில் என் திரைகளும் பாழ்க்கடிக்கப்படும்.

௨௧ எந்தமட்டும் நான் கொடியைக் கண்டு, எக்காளத்தின் சத்தத்தைக் கேட்பேன்.

௨௨ ¶ என் சனமோவென்றால், *மதியற்றிருக்கிறது, என்னை அவர்கள் அறியார்கள்; அவர்கள் பயித்தியமுள்ள பிள்ளைகள், அவர்கள் உணர்வுள்ளவர்கள் அல்ல; †பொல்லாப்புக்கு அவர்கள் ஞானமுள்ளவர்கள், நன்மைசெய்கிறதற்கோ அறிவற்றிருக்கிறார்கள். *௫ மோ. ௩௨. ௨௮. †உரோ. ௰௬. ௰௯.

௨௩ ¶ தேசத்தைப் பார்த்தேன்; இதோ, அது உருவம்அற்றதும் வெறுமையும் ஆயிற்று; வானங்களைப் பார்த்தேன்; அவைகளின் வெளிச்சம் அவைகளுக்கு இல்லை.

௨௪ பருவதங்களைப் பார்த்தேன்; இதோ, அவைகள் அதிர்ந்து, எல்லா மேடுகளும் அசைந்தன.

௨௫ அப்புறம் நான் பார்க்கும்போது, இதோ மனுஷனில்லை; *ஆகாசத்துப் பறவைகளும் எல்லாம் பறந்துபோயின.

*எரே. ௯. ௰.

உசு அப்புறம் நான் பார்க்கும்போது, இதோ, கர்த்தராலும், அவருடைய கோபத்தின் உக்கிரத்தாலும் பயிர்நிலம் வனாந்தரமும், அதின் பட்டணங்களெல்லாம் இடிபட்டவைகளுமாயிருந்தன.

உஎ ¶ ஏனெனில், தேசமெல்லாம் பாழாம்; ஆகிலும் *சர்வசங்காரம் செய்யோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*எரே. ரு. ௰, ௰அ: ஙo. ௰க: சகூ. உஅ.

உஅ இதின்நிமித்தம் தேசம் புலம்பி, உயர இருக்கிற வானங்கள் கறுத்துப்போம்; ஏனென்றால், அதைச் சொன்னோம், அதை நிருணயம் பண்ணினோம்; நாம் மனஸ்தாபப்படுவதும் இல்லை; நாம் அதைவிட்டுத் திரும்பிக்கொள்வதும் இல்லை.

உகூ இராவுத்தரும், அம்பு எய்கிறவர்களும் காட்டும் சத்தத்தினாலே சகல ஊராரும் ஓடி, அடர்த்தியான வனங்களுக்கு உட்பட்டு, கல்மலைகளிலும் ஏறுவார்கள்; எல்லா ஊர்களும், ஒரு மனுஷனும் அவைகளிலே குடியிராதபடியாய் விடப்பட்டிருக்கும்.

ஙo இப்போதும் பாழான நீ என்னசெய்வாய்? நீ இரத்தாம்பரம் உடுத்தாலும், பொன்னாபரணங்களால் உன்னைச் சிங்காரித்தாலும், உன் கண்களில் மையிட்டுக்கொண்டிருந்தாலும், வீணாய் உன்னை அழகாக்குவாய்; சொகுசுக்காரர் உன்னை அசட்டைபண்ணி, உன் பிராணனை வாங்கத்தேடுவார்கள்.

ஙக ¶ ஏனெனில், *கர்ப்பவேதனைப்படுகிறவளின் சத்தமாகவும், முதல்விசை பெறுகிறவளின் வியாகுலமாகவும், சீயோன் குமாரத்தியின் சத்தத்தைக் கேட்கிறேன்; அவள் பெருமூச்சுவிட்டு, தன் கைகளை விரித்து, ஆ எனக்கு ஐயோ! ஏனெனில், கொன்றுபோடுகிறவர்களினாலே என் ஆத்துமா விடாய்த்திருக்கிறதென்கிறாள்.
*எரே. சு. உச: ௰ங. உக.

## ரு. அதிகாரம்.

நியாயஞ்செய்கிற மனுஷனைக் கண்டுபிடிப்பீர்களோவென்றும், விசுவாசத்தைத் தேடுகிறவன் உண்டோவென்றும், எருசலேமின் தெருக்களிலே திரிந்து பார்த்து, விசாரித்துக்கொண்டு, அதின் வீதிகளிலே தேடுங்கள்; அப்போது அதற்கு மன்னிப்பேன்.

உ அவர்கள், கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோம் என்றாலும், பொய் ஆணை இடுகிறார்களே.

ங கர்த்தாவே, உம்முடைய கண்கள் விசுவாசத்தை அல்லவோ நோக்குகின்றன; அவர்களை அடிக்கிறீர்; ஆனால் அவர்களுக்கு நோகாது; அவர்களை நிர்மூலம் ஆக்குகிறீர்; ஆனால் புத்தியை ஏற்றுக்கொள்ளமாட்டோம் என்கிறார்கள்; *தங்கள் முகங்களைக் கல்மலையிலும் கெட்டியாக்கி, திரும்பமாட்டோம் என்கிறார்கள். *ஏசா. சஅ. ச: உ. ச.

ச நானோவெனில்: இவர்கள் ஈனரானமே; இவர்கள் புத்தியீனர்; ஏனெனில், கர்த்தருடைய வழியையும், தங்கள் பராபரனுடைய நியாயத்தையும் அறியாதிருக்கிறார்கள் என்றும்,

ரு நான் பெரியவர்கள் அண்டையிலே போய், அவர்களோடே பேசுவேன்; ஏனெனில், அவர்கள் கர்த்தருடைய வழியையும், தங்கள் பராபரனுடைய நியாயத்தையும் அறிவார்கள் என்றும் சொன்னேன்; ஆனால் அவர்கள் ஏகமாய் *நுகத்தடியை ஒடித்து, கட்டுகளை அறுத்துவிட்டார்கள்.
*எரே. உ. உ௰.

சு ¶ ஆனபடியால் *காட்டிலிருந்துவரும் சிங்கம் அவர்களைக் கொன்று, வனாந்தரங்களுடைய ஓநாய்கள் அவர்களைப் பாழாக்கி, சிவிங்கி அவர்கள் பட்டணங்களின்மேலே காவல்பண்ணிக்கொண்டிருக்கும்; அவைகளிலிருந்து புறப்படுகிறவன் எல்லாம் பீறப்படுவான்; ஏனெனில், அவர்கள் மீறு

தல்கள் பெருகி, அவர்கள் மாறுபாடுகள் பலத்துப்போயின. *எரே. ௪. ௭.

௭ இவைகளை நாம் உனக்கு மன்னிப்பது எப்படி? உன் பிள்ளைகள் நம்மைவிட்டார்கள்; அவர்கள் தெய்வம் அல்லாதவைகள் மேலே ஆணையிடுகிருர்கள்; நாம் திருத்தியாக்கின அவர்கள் விபசாரம்பண்ணி, வேசி வீட்டிலே கூட்டங்கூடுகிருர்கள்.

௮ அவர்கள் கொழுத்த குதிரைகளைப்போலக் காலமே எழும்பி, அவனவன் தனக்கு அடுத்தவனுடைய பெண்சாதியின் பின்னாலே கனைக்கிருன்.

௯ *இவைகளை விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய ஆத்துமா நீதியைச்சரிக்கட்டாதிருக்குமோ என்று கர்த்தர் சொல்லுகிருர்.

*உ௯. வச: ௯. ௯.

௰ ¶ அதின் மதில்கள்மேலேறி, அழித்துப்போடுங்கள்; *ஆனால் சர்வசங்காரம் செய்யாதிருங்கள்; அதின் கொத்தளங்களை வாங்கிவிடுங்கள்; ஏனெனில், அவர்கள் கர்த்தருடையவர்களல்ல. *எரே. ௪. உ௭.

௰௧ ஏனெனில், இஸ்ரவேல் வீட்டாரும், யூதா வீட்டாரும் நமக்கு விரோதமாய் மிகுதியும் துரோகம்பண்ணினர்களென்று கர்த்தர் சொல்லுகிருர்.

௰உ அவர் அப்படிக்கொத்தவர் அல்லவென்றும், பொல்லாப்பு நம்முடையமேல் வராது; நாம் பட்டையத்தையாகிலும், பஞ்சத்தையாகிலும் காண்பதில்லையென்றும்,

௰௩ திர்க்கதரிசிகள் காற்ருய்ப்போவார்கள்; வசனமானது அவர்களில் இல்லை; அவர்களுக்கே அப்படி ஆகக்கடவதென்றும், அவர்கள் சொல்லிக் கர்த்தரை மறுதலித்தார்கள்.

௰௪ ¶ ஆகையாலே சேனைகளின் பராபரனுகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் இந்த வார்த்தையைச் சொன்னபடியினாலே, இதோ, நாம் *உன் வாயில்உள்ள நம்முடைய வார்த்தைகளை அக்கினியும், இந்தச் சனத்தை விறகும் ஆக்குவோம்; அது இவர்களைப் பட்சிக்கும். *எரே. ௧. ௯.

௰௫ இஸ்ரவேல் வீட்டாரே, இதோ, தூரத்திலிருந்துநாம்உங்கள்மேல் *ஒருசாதியைக் கொண்டுவருவோமென்று கர்த்தர் சொல்லுகிருர்; அது வலுவான சாதி, அது பூர்வத்துச்சாதி, அது நீ அறியாத பாஷையுள்ள சாதி, அது பேசுகிறது இன்னதென்று கேட்டு உணராதிருப்பாய். *எரே.௧.௰௫: ௯.உஉ.

௰௬ அதின் அம்பருத்தூணிகள் திறந்த பிரேதக்குழிகளைப்போலே இருக்கும்; அவர்கள் அனைவரும் பராக்கிரமசாலிகள்.

௰௭ *அவர்கள் உன் குமாரரும், உன் குமாரத்திகளும் சாப்பிடவேண்டிய உன் விளைச்சலையும், உன் அப்பத்தையும் சாப்பிட்டு, உன் ஆடுகளையும், உன் மாடுகளையும் பட்சித்து, உன் திராட்சப்பலனையும், உன் அத்திமரப்பலனையும்சாப்பிட்டு, நீ நம்பின உன்னுடைய அரணான பட்டணங்களைப் பட்டையத்தாலே வெறுமையாக்குவார்கள்.

*௫ மோ. உ௮. ௩௧, ௩உ.

௰௮ ஆகிலும் நாம் அந்நாள்களிலும் *உங்களைச் சர்வசங்காரம் செய்யாதிருப்போம் என்று கர்த்தர் சொல்லுகிருர். *எரே. ௪.உ௭.

௰௯ ¶ *எங்கள் பராபரனுகிய கர்த்தர் எங்களுக்கு இவைகளை எல்லாம் எதற்குப்பதிலாகச் செய்தார் என்று நீங்கள் கேட்பதுண்டானல், அப்போது நீங்கள் நம்மைவிட்டு, உங்களுடைய தேசத்திலே வேற்றுத் தேவர்களைச் சேவித்ததுபோலே, உங்களுடையதல்லாத தேசத்திலே அந்நியர்களைச் சேவிப்பீர்களென்று நீ அவர்களோடே சொல்வாயாக. *எரே. ௰௬. ௰.

உ௰ ¶ நீங்கள் யாக்கோபின் வீட்டிலே அறிவித்து, யூதாவிலே சொல்லிக் கூறவேண்டியது ஏதெனில்,

உ௧ *கண்கள் இருந்தாலும் காணாததும், காதுகள் இருந்தாலும் கேளாததுமாகிய இருதயமற்ற பயித்தியசனமே, கேளுங்கள். *ஏசா. ௯. ௯, ௰.

உஉ *நமக்குப் பயப்படாதிருப்பீர்களோ வென்று கர்த்தர் சொல்லுகிறார்; †சமுத்திரத் துக்குக் கடவாத நித்திய பிரமாணமாக மணலை எல்லையாய் வைத்திருக்கிறவராகிய நமக்குமுன்பாக அதிராதிருப்பீர்களோ? அதின் அலைகள் மோதி அடித்தாலும் மேற்கொள்ளாது; அலைகள் இரைந்தாலும் அதைக் கடவாது. *எரே. ய. எ. †யோபு. ௩அ. ய, யக. சங். ௬௬. எ: ௱ச. ௯.

உ௩ இந்தச் சனமோவென்றால், முரட்டாட்டமும், கலகமுமான இருதயமுள்ளது; முரட்டாட்டம்பண்ணிப் போய்விடுகிறார்கள்.

உச அதின்அதின் காலத்திலே *எங்களுக்கு மழையையும், முன்மாரியையும், பின்மாரியையும்கொடுத்து,அறுப்புக்குத் திட்டமான வாரங்களை எங்களுக்குத் தற்காக்கிற எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்திருப்போம் என்று அவர்கள் தங்கள் இருதயத்திலே சொல்லுகிறதில்லை.
*டு மோ. யக. யச. அப். யச. யஎ.

உரு *உங்கள் அக்கிரமங்கள் இவைகளை விலக்கி, உங்கள் பாவங்கள் உங்களுக்கு நன்மையை வரவொட்டாதிருக்கின்றன.
*ஏசா. ருகூ. உ.

உ௬ ஏனெனில், குருவிபிடிக்கிறவர்கள் பதுங்குகிறதுபோலப் பதுங்கி,மனுஷரைப் பிடிக்கக் கேடுள்ள கண்ணிகளை வைக்கிற துன்மார்க்கர் நமது சனத்தில் அகப்படுகிறார்கள்.

உஎ கூண்டு குருவிகளால் நிறைந்திருக்கிறவண்ணமாக, அவர்கள் வீடுகள் கபடங்களால் நிறைந்திருக்கின்றன; ஆனபடியினாலே, பெருகி ஐசுவரியவான்களாகிறார்கள்.

உஅ *கொழுத்து, சளுக்குப்பண்ணுகிறார்கள்; பொல்லாதவனுடைய செயல்களைக் கண்டிக்காதேபோகிறார்கள்; †நீதியையும், திக்கற்றவனுடைய நீதியையுமே விசாரியாமல், தாங்கள்மாத்திரம் வாழுகிறார்கள்; எளியவர்களின் நியாயத்தைத் தீரார்கள்.
*டு மோ. ௩உ. யரு. †ஏசா. க. உ௩. சகரி. எ. ய.

உகூ *இவைகளை விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடையஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்குமோ? என்று கர்த்தர் சொல்லுகிறார்.
*௯. வச: ௯. ௯.

௩ய ¶ திகைத்துத் திடுக்கிடப்படத்தக்க காரியம் தேசத்திலே நடபடியாயிருக்கிறது.

௩க தீர்க்கதரிசிகள் *பொய்த்தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்கள்; ஆசாரியர்கள் இவர்கள் கைகளால் ஆளுகிறார்கள்; இப்படியிருக்கிறது நமது சனத்துக்குப் பிரியமுமாயிருக்கிறது; ஆனால் அதற்குப்பிற்பாடு கடைசியில் என்னசெய்வீர்கள்?
*எரே. உ௩. உ௫, உகூ. ஏசா. ய௩. ௯.

## ௬. அதிகாரம்.

பென்யமீன் புத்திரரே, நீங்கள் எருசலேமின் நடுவிலிருந்து கூடியோடி, தெக்கோவாவில் எக்காளம் ஊதி, பேத்தக்கெரேமின்மேல் உயர்ந்த அடையாளத்தை நிறுத்துங்கள்; ஏனெனில், ஒரு தீங்கும், பெரிய நொறுக்குதலும் *வடக்கேயிருந்து நோக்குகிறதாயிருக்கிறது. *எரே. க. ய௩, யச.

உ உருவமும் செல்வமுமான சீயோன் குமாரத்தியைப் பாழ்க்கடிப்போம்.

௩ அவளிடத்துக்கு மேய்ப்பர் தங்கள் மந்தைகளோடே வருவார்கள்; அவர்கள் அவளுக்கு விரோதமாகச் *சுற்றிலும் கூடாரங்களைப்போட்டு, தன்தன் தலத்தில் அவனவன் மேய்த்து, *எரே. ச. எ.

ச அவளுக்கு விரோதமாய் யுத்தத்தை ஆயத்தம்பண்ணுங்களென்றும், மத்தியானத்திலேதானே நாம் போயேறும்படிக்கு எழுந்திருங்கள்; நமக்கு ஐயோ! ஏனெனில், பொழுது சாய்ந்து, அந்தி நிழல்கள் நீண்டுபோகின்றனவே.

ரு எழுந்திருங்கள், நாம் இராக்காலத்திலா

லும் போயேறி, அவளுடைய அரமனைகளை அழிப்போமாகவென்றும் சொல்லுவார்கள்.

௬ ¶ ஏனெனில், சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: மரங்களை வெட்டி, எருசலேமுக்கு விரோதமாய்க் கொத்தளம் போடுங்கள்; இதுவே விசாரிக்கப்படவேண்டிய பட்டணம்; *அதின் உட்புறமெல்லாம் கொடுமை. *எரே. ௫. ௧.

௭ ஊற்றானது, தன் தண்ணீரைச் சுரக்கப்பண்ணுமாப்போலே, அது தன் பொல்லாப்பைச் சுரக்கப்பண்ணுகிறது; நம்முடைய முகத்துக்குமுன்பாக நித்தம் அதிலே கொடுமையும், அழிம்பும், நோயும், அடியும் கேட்கப்படுகின்றன.

௮ ¶ எருசலேமே, நம்முடைய ஆத்துமா உன்னைவிட்டுப் பிரியாதபடிக்கும், நாம் உன்னைப் பாழும், குடியற்ற தேசமும் ஆக்காதபடிக்கும் புத்திகேள்.

௯ ¶ திராட்சக்குலைகளை அறுக்கிறவனைப்போலே உன் கையைத் திரும்பக் கூடைகளின் மேலே போடென்று சொல்லி, அவர்கள் இஸ்ரவேலில் மீதியாயிருந்த கனியைத் திராட்சச்செடியின் கனியைப்போலே நன்றாய்ப் பொறுக்கிக்கொண்டு போவார்களென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰ கேட்பாருண்டாக யாரோடே நான் பேசிச் சாட்சிபகருவேன்? இதோ, *அவர்களுடைய செவி சுன்னத்தில்லாதது; அவர்கள் கவனிக்கமாட்டார்கள்; இதோ, கர்த்தருடைய வசனம் அவர்களுக்கு நிந்தையாயிருக்கிறது; அதின்மேல் அவர்களுக்கு விருப்பமில்லை. *எரே. ௫. ௨௧.

௰௧ ¶ ஆகையாலே கர்த்தருடைய உக்கிரத்தால் நிறைந்திருக்கிறேன்; அதை அடக்கிக்கொண்டு இளைத்தேன்; வீதிகளிலுள்ள பிள்ளைகள்மேலும், ஆளான மனுஷருடைய கூட்டத்தின்மேலும் ஏகமாய் ஊற்றிவிடுவேன்; ஏனெனில், புருஷரும், பெண்சாதிகளும், கிழவரும், முதிர்ந்தவயதுள்ளவர்களுங்கூடப் பிடிபடுவார்கள்.

௰௨ *அவர்களுடைய வீடுகளும், அவர்களுடைய காணி பூமிகளும், பெண்சாதிகளும், ஏகமாய் வேறே மனுஷருக்காம்; ஏனெனில், நம்முடைய கையை இந்தத் தேசத்தின் குடிகளுக்கு விரோதமாக நீட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*௫ மோ. ௨௮. ௩௰.

௰௩ ¶ ஏனெனில், அவர்களிலே சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டும், அவரவர் *பொருளாசைக்காரராய் இருக்கிறார்கள்; இதுவுமல்லாமல் தீர்க்கதரிசிகள்துவக்கி ஆசாரியர்கள்மட்டும் அவரவர்பொய்க்காரராயிருந்து, *எரே. ௮. ௰: ௰௧. ௰௨. ஏசா. ௫௬. ௰௧.

௰௪ *சமாதானமில்லாதிருந்தும்: சமாதானம் சமாதானமென்று சொல்லி, நமது சனத்தின் நொறுங்குதலைத் தேவிக்கையாய்க் குணமாக்குகிறார்கள். *எசே. ௰௩. ௰.

௰௫ தாங்கள் அருவருப்பானதைச் செய்ததினிமித்தம் வெட்குகிறார்களோ? பரிச்சேதம் வெட்கார்கள்; நாணவும் அறியார்கள்; ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள்; நாம் அவர்களை விசாரிக்கும் காலத்திலே இடறுண்டுபோவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௬ ¶ வழிகளிலே நின்று, பூருவபாதைகளைக் கேட்டு விசாரித்து, நல்லவழி ஏதென்று பார்த்து, அதிலே நடவுங்கள்; *அப்போது உங்கள் ஆத்துமாவுக்குச் சாங்கோபாங்கம் கிடைக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால், †நாங்கள் அதிலே நடப்பதில்லையென்கிறார்கள். *மத். ௰௧. ௨௯. †எரே. ௪௪. ௰௬. மத். ௨௩. ௩௭.

௰௭ நாம் உங்கள்மேலே காவல்க்காரரையும் வைத்து, எக்காள சத்தத்தைக் கவனியுங்களென்றோம்; ஆனால் நாங்கள் கவனிப்பதில்லையென்கிறார்கள்.

௰௮ ¶ ஆகையாலே சாதிகளே, கேளுங்கள்; சபையே, அவர்களுக்குள் நடக்கிறதை அறிந்துகொள்.

௰௯ *பூமியே, கேள்; இந்தச் சனத்தின்மேலே நாம் அவர்கள் நினைவுகளின் கனியாகிய தீங்கை வரப்பண்ணுவோம்; ஏனெனில், அவர்கள் நம்முடைய வார்த்தைகளையும், நம்முடைய நியாயப்பிரமாணத்தையும் கவனியாமல் அதை வெறுத்துவிடுகிறார்கள்.
*உபா. ௩௨. ௧. ஏசா. ௧. ௨.

௨௰ *சேபாவிலிருந்து வருகிற தூபவர்க்கமும், தூரதேசத்தினுடைய சுகந்தப்பட்டையும் நமக்கு என்னத்துக்கு? உங்கள் சர்வாங்கதகனங்கள் நமக்கு விருப்பமல்ல; உங்கள் பலிகள் நமக்கு இன்பமாயிராது.
*ஏசா. ௧. ௰௪. ஆமோ. ௫. ௨௨. மீகா. ௬. ௬.

௨௧ ஆகையால் இதோ, நாம் இந்தச் சனத்துக்கு இடறுகளைவைப்போம்; அவைகளில் பிதாக்களும், பிள்ளைகளும், குடியானவனும், அவனுக்கடுத்தவனும், ஏகமாய் இடறுண்டு அழிவார்களென்கிறதாய்க் கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨ *இதோ, வடதேசத்திலிருந்து ஒரு சனசதளம் வந்து, பூமியின் பக்கங்களிலிருந்து ஒரு பெரியசாதி எழும்பும்.
*எரே. ௫. ௰௫: ௫௰. ௪௧—௪௩.

௨௩ அவர்கள் வில்லுகளையும், ஈட்டிகளையும் பிடித்துவருவார்கள்; அவர்கள் இரங்காமல் கரூரராயிருக்கிறார்கள்; அவர்கள் சத்தம் சமுத்திர இரைச்சலுக்குச் சமானமாயிருக்கும்; சீயோன் குமாரத்தியே, அவர்கள் உனக்கு விரோதமாக யுத்தத்துக்கு ஆயத்தப்பட்ட ஆள்களாய், குதிரைகளின்மேலேறிவருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௪ ¶ அவர்கள் வருகிற செய்தியைக் கேட்கிறோம்; நம்முடைய கைகள் தளரும்; இடுக்கணும், *பிள்ளைப்பெறுகிறவளைப்போலே வாதையும் நம்மைப் பிடிக்கும்.
*எரே. ௪. ௩௧: ௨௨. ௨௩.

௨௫ வயல்வெளியிலே புறப்படாதிருங்கள்; வழியிலும் நடவாதிருங்கள்; ஏனெனில், சத்துருவின் பட்டையமும், பயங்கரமுமுண்டு.

௨௬ என் சனமாகிய குமாரத்தியே, *நீ இரட்டைக் கட்டிக்கொண்டு, சாம்பலிலே புரண்டு, ஒன்றான குமாரனுக்காகத் துக்கிக்கிறதுபோலே மகா கசப்பாய்ப் புலம்பு; ஏனெனில் பாழ்க்கடிக்கிறவன் அசுப்பிலே நம்மேலே வருவான். *எரே. ௪. ௮.

௨௭ ¶ நீ நம்முடைய சனத்தின் வழியை அறிந்துகொள்ளவும், சோதித்துப்பார்க்கவும் நாம் உன்னை அவர்களுக்குள்ளே வேவுபார்க்கிற துருக்கமாகவும், அரணாகவும் வைத்தோம்.

௨௮ அவர்களெல்லாரும் முரட்டாட்டமான ஆங்காரிகளும், தூற்றித்திரிகிறவர்களும், வெண்கலமும், இரும்புமாயிருக்கிறார்கள்; அவர்களெல்லாரும் கேடானவர்கள்.

௨௯ துருத்தி வெந்தது; ஈயம் நெருப்பினால் அழிந்துபோயிற்று; புடமிடுகிற பிரயாசம் விருதா; பொல்லாப்புகள் அற்றுப்போனதில்லை.

௩௰ அவர்கள் தள்ளுபடியான வெள்ளியென்னப்படுவார்களாக; ஏனெனில், *கர்த்தர் அவர்களைத் தள்ளிவிட்டார்.
*எரே. ௭. ௰௫.

## ௭. அதிகாரம்.

கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான வசனமாவது:

௨ ¶ நீ கர்த்தருடைய வீட்டின் வாசலிலே நின்று, அங்கே கூறிச் சொல்லவேண்டிய வசனமாவது: கர்த்தரைப் பணிந்துகொள்ள இந்த வாசல்களுக்குள்ளே பிரவேசிக்கிற யூதசனமாகிய நீங்களெல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௩ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: *உங்கள் வழிகளையும் உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்துங்கள்; அப்போது உங்களை இந்தத் தலத்திலே குடியிருக்கப்பண்ணுவோம். *எரே. ௨௬. ௰௩. ஏசா. ௧. ௰௬.

௪ இது கர்த்தரின் தேவாலயம், இது கர்த்தரின் தேவாலயம், இது கர்த்தரின் தேவாலயம் என்று சொல்லி, பொய்வார்த்தைகளை நம்பிக்கொள்ளாதிருங்கள்.

௫ ¶ நீங்கள் உங்கள் வழிகளையும் உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்தவே சீர்ப்படுத்தி, நீங்கள் மனுஷனுக்கும் அவனுக்கடுத்தவனுக்கும் நியாயம் தீர்க்கவே தீர்த்து,

௬ *பரதேசியையும், திக்கற்றவனையும், விதவையையும் ஒடுக்காமலும், குற்றமில்லாத இரத்தத்தை இந்தத் தலத்திலே சிந்திப்போடாமலும், உங்களுக்கே தீங்காக †அந்நிய தேவர்களைப் பின்தொடராமலும் இருந்தீர்களேயாகில், *௨ மோ. ௨௨. ௨௨, ௨௩: ௯. ௩. ௩ மோ. ௰௯. ௩௩. †எரே. ௨௫. ௬. ௫ மோ. ௮. ௰௯, ௨௰: ௰௧. ௨௮.

௭ அப்போது நாம் உங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தேசமாகிய இந்தத் தலத்திலே உங்களை எப்போதும் என்றைக்கும் குடியிருக்கப்பண்ணுவோம்.

௮ ¶ இதோ, ஒன்றுக்கும் உதவாத பொய்வார்த்தைகளை நீங்கள் நம்புகிறவர்கள்.

௯ நீங்கள் திருடி, கொலைசெய்து, விபசாரம்பண்ணி, பொய்யாணையிட்டு, பாகாலுக்குத் தூபங்காட்டி, அறியாத வேற்றுத்தேவர்களைப் பின்தொடர்ந்து,

௰ பிற்பாடு வந்து, நம்முடைய நாமம் தரிக்கப்பட்ட இந்த வீட்டிலே நமக்குமுன்பாக நின்று: இந்த எல்லா அருவருப்புகளையும் செய்வதற்காக விடுதலைபாரோமென்று சொல்வீர்களோ?

௰௧ *நம்முடைய நாமம் தரிக்கப்பட்ட இந்த வீடு உங்கள் பார்வைக்குக் †கள்ளர் கெபியாயிற்றோ? இதோ, நாமும் அப்படியென்று கண்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௫௬. ௭. †மத். ௨௧. ௰௩. மாற். ௰௧. ௭. லூக். ௰௯. ௪௬.

௰௨ *ஆனால், நாம் முந்தி நம்முடைய நாமத்தை வாசமாயிருக்கப்பண்ணின சீலோவிலுள்ள நமது தலத்துக்கு நீங்கள் போய், †நாம் அதற்கு இஸ்ரவேல் சனத்தினுடைய பொல்லாப்பின்நிமித்தமாகச் செய்ததைப் பாருங்கள். *யோசு. ௰௮. ௧. †௧ சாமு. ௪. ௩, ௰௯. சங். ௭௮. ௬௰-௬௪.

௰௩ ¶ *இப்போதும் நீங்கள் இந்தக்கிரியைகளை எல்லாம் செய்து, நாம் உங்களுடனே ஏற்கெனவே சொல்லிவந்திருந்தும், நீங்கள் கேளாமலும், நாம் உங்களைக் கூப்பிட்டும், நீங்கள் உத்தரவுகொடாமலும் போனபடியினாலே, *வாக். ௧. ௨௪. ழி.

௰௪ நாம் நம்முடைய நாமம் தரிக்கப்பட்டதும், நீங்கள் நம்பிக்கைகொண்டிருக்கிறதுமான வீட்டுக்கும், உங்களுக்கும், உங்கள் பிதாக்களுக்கும் நாம் கொடுத்த தலத்துக்கும், *சீலோவுக்குச் செய்ததுபோலே செய்து, *எரே. ௨௬. ௬.

௰௫ நாம் உங்களுடைய எல்லாச் சகோதரராகிய எப்பிராயீம் வித்து அனைத்தையும் தள்ளிப்போட்டதுபோலே, உங்களை நமது முகத்தைவிட்டுத் தள்ளிப்போடுவோமென்று கர்த்தர் உரைக்கிறார் என்று சொல்.

௰௬ ¶ நீயோவென்றால், *இந்தச் சனத்துக்காக விண்ணப்பம்செய்யாமலும், அவர்களுக்காகக் கூப்பிடுதலையும், கெஞ்சுதலையும் எடுக்காமலும், நம்மை வேண்டிக்கொள்ளாமலும் இருப்பாயாக; ஏனெனில், நாம் உன்னைக் கேளோம். *எரே. ௰௧. ௰௪: ௰௪. ௰௧.

௰௭ யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் அவர்கள் செய்கிறதை நீ காணுகிறாயோ?

௰௮ நம்மை மனமடிவாக்கும்படியாக அவர்கள் *வான இராசஸ்திரிக்குப் பணிகாரங்களைச் சுடவும், அந்நிய தேவர்களுக்குப் பானபலிகளை ஊற்றுதலையும் ஊற்றவும், பிள்ளைகள் விறகுகளைப் பொறுக்கி, பிதாக்கள் நெருப்பைக் கொளுத்தி, ஸ்திரிகள் மாவைப் பிசைகிறார்கள். *எரே. ௪௪. ௰௯.

௰௯ அவர்கள் நம்மை மனமடிவாக்குகிறார்களோ? தங்கள் முகங்களின் வெட்கத்துக்கு அவர்கள் தங்களையே அல்லவோ மனம

டிவாக்குகிறவர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௰ ¶ ஆனதுகொண்டு, இதோ, *நம்முடைய கோபமும், நம்முடைய உக்கிரமும், இந்தத் தலத்தின்மேல் ஊற்றப்படும்; மனுஷர்மேலும், மிருகங்கள்மேலும், வெளியின் மரங்கள்மேலும், பூமியின் கனிகள்மேலுந் தானே; அது அவிக்கப்படாதபடியாய் எரியுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். *எரே. ௪. ௪: ௨௧. ௰௨.

௨௧ ¶ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: உங்கள் தகனபலிகளை உங்கள் மற்றப்பலிகளோடுங்கூட்டி, இறைச்சியைச் சாப்பிடுங்கள்.

௨௨ ஏனெனில், நாம் உங்கள் பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து அழைக்கும் நாளிலே, நாம் தகனத்தையும் பலியையுங்குறித்து அவர்களோடே சொன்னதும் அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை.

௨௩ நம்முடைய சத்தத்தைக் கேளுங்கள்; அப்போது, நாம் உங்களுக்குப் பராபரனாயிருப்போம்; *நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள்; நாம் உங்களுக்குக் கற்பிக்கும் எல்லா வழியிலும், நீங்கள் உங்களுக்கு நன்றாயிருக்கும்படிக்கு நடவுங்களென்கிற விசேஷத்தையே அவர்களுக்குச் சொல்லிக் கற்பித்தோம். *எரே. ௰௧. ௩, ௪.

௨௪ *ஆனால் அவர்கள் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும்போய், தங்கள் பொல்லாத இருதயத்தினுடைய யோசனைகளிலும் கடினத்திலும் நடந்து, முன்னிட்டல்ல பின்னிட்டுப்போனார்கள்.
*எரே. ௰௧. ௮.

௨௫ உங்கள் பிதாக்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாள்துவக்கி, இந்நாள்மட்டும் நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரை எல்லாம் தினம் உங்களண்டைக்கு ஏற்கெனவே அனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

௨௬ ஆனால், நம்முடைய சொல்லைக் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும்போய், தங்கள் பிடரியைக் கெட்டியாக்கி, *தங்கள் பிதாக்களைப்பார்க்கிலும் பொல்லாப்புச் செய்தார்கள்.
*எரே. ௰௬. ௰௨.

௨௭ ¶ நீ இந்த வார்த்தைகளை எல்லாம் அவர்களுக்குச் சொன்னாலும் அவர்கள் உன்னைக் கேட்பதில்லை; நீ அவர்களைநோக்கிக் கூப்பிட்டாலும், அவர்கள் உனக்கு மறுவுத்தரவு கொடுப்பதில்லை.

௨௮ ஆகையாலே தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேளாமலும், புத்தியை ஏற்றுக்கொள்ளாமலுமிருக்கிற சாதி இதுதானே என்றும், விசுவாசம் அழிந்து, அவர்கள் வாயில் வேர் அற்றுப்போனதென்றும் அவர்களுக்குச் சொல்லுவாயாக.

௨௯ ¶ நீ உன் தலைமயிரைச் சிரைத்து, எறிந்துபோட்டு, உயர்தலங்களிலே புலம்பிக்கொண்டிரு; ஏனெனில், கர்த்தர் தமது சினத்துக்கு ஏதுவான சந்ததியை வெறுத்து நெகிழ்ந்தார்.

௩௰ ஏனென்றால் யூதா புத்திரர் நமது பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; நம்முடைய நாமம் தரித்திருக்கிற வீட்டைத் தீட்டுப்படுத்தத் தங்கள் அருவருப்புகளை அதிலே வைத்தார்கள்.

௩௧ *தங்கள் குமாரரையும், தங்கள் குமாரத்திகளையும் அக்கினியாலே சுட்டெரிப்பதற்காக, அவர்கள் இன்னோமினுடைய குமாரரின் பள்ளத்தாக்கிலுள்ள தோப்பேத்தின் மேடைகளைக் கட்டினார்கள்; அதை நாம் கற்பித்ததுமில்லை; அது நம்முடைய மனதிலே தோன்றினதுமில்லை.
*௩ மோ. ௰௮. ௨௧.

௩௨ ஆனதுகொண்டு, இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது அது அப்புறம் தோப்பேத்தென்றும், இன்னோமுடைய குமாரனின் பள்ளத்

தாக்கென்றும் சொல்லப்படாமல், கொலையின் பள்ளத்தாக்கென்று சொல்லப்படும்; இடமில்லாமையால் தோப்பேத்திலே சவங்களை அடக்கம்பண்ணுவார்கள்.

௩௩ *இந்தச் சனத்தின் பிணங்கள் ஆகாயத்தின் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் ஆகாரமாயிருக்கும்; அவைகளை வெருட்டுவாரும் இல்லாதிருப்பார்கள்.

*எரே. ௯. ௨௨: ௰௯. ௭.

௩௪ நாம் யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் களிப்பின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்தையும், மணவாளனின் சத்தத்தையும், மணவாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணுவோம்; ஏனெனில் தேசம் பாழாம்.

## ௮. அதிகாரம்.

அக்காலத்திலே யூதாவினுடைய இராசாக்களின் எலும்புகளையும், அவர்களுடைய பிரபுக்களின் எலும்புகளையும், ஆசாரியர்களின் எலும்புகளையும், தீர்க்கதரிசிகளின் எலும்புகளையும், எருசலேமுடைய குடிகளின் எலும்புகளையும், அவர்களுடைய பிரேதக்குழிகளைவிட்டு எடுத்து,

௨ அவர்கள் சிநேகித்ததும், சேவித்ததும், பின்தொடர்ந்ததும், நாடினதும், பணிந்துகொண்டதுமாயிருந்த சூரியனுக்கும், சந்திரனுக்கும், வானத்தினுடைய எல்லாச் சேனைக்குமுன்பாக அவைகளைப் பரப்பிவைப்பார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; அவைகள் வாரி அடக்கம்பண்ணப்படாமல் பூமியின்மேல் எருவாகும்.

௩ இந்தப்பொல்லாத வம்சத்தில் மீதியாய் வைக்கப்பட்ட குறைப்பேர் அனைவருக்கும், மீந்திருந்த தங்களை நாம் துரத்தவிட்ட எல்லா இடங்களிலும், சீவனைப்பார்க்கிலும் சாவே விருப்பமாயிருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௪ ¶ நீ அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறது ஏதெனில், விழுந்தவர்கள் எழுந்திருக்கிறதில்லையோ? வழிதப்பிப்போனவர்கள் திரும்புகிறதில்லையோ?

௫ ஆனால் எருசலேமியராகிய இந்தச் சனம் என்றைக்கும் வழிதப்பிப்போகிறதேது? கபடத்தைப் பிடித்திருக்கிறார்கள்; திரும்பமாட்டோம் என்கிறார்கள்.

௬ நிசமானதைப் பேசார்களென்கிறதைக் கவனித்துக் கேட்டோம்; என்னசெய்தேனென்று தன் பொல்லாப்பின்நிமித்தம் மனஸ்தாபப்படுகிறவன் ஒருவனுமில்லை; யுத்தத்துக்குள் பாய்கிற குதிரையைப்போலே அவரவர் தங்கள் ஓட்டமாய்த் திரும்புகிறார்கள்.

௭ ஆகாயத்திலுள்ள செங்கால் நாரைமுதலாய்த் தன் வேளையை அறியும்; காட்டுப்புறாவும், நமுடும், தகைவிலான் குருவியும் தாங்கள் வரத்தக்க காலத்தைக் கவனிக்கும்; நமது சனமோ கர்த்தரின் நியாயத்தை அறியார்கள்.

௮ ¶ நாங்கள் ஞானிகளென்றும், கர்த்தருடைய வேதம் எங்களோடிருக்கிறதென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி? மெய்யாகவே இதோ, வேதபாரகரின் கள்ள எழுத்தாணி அதை அவத்தமாக்குகிறது.

௯ ஞானிகள் வெட்கி, கலங்கிப் பிடிபடுவார்கள்; இதோ, கர்த்தருடைய சொல்லை வெறுத்துப்போட்டார்கள்; அவர்களுக்கு ஞானமேது?

௰ ஆகையினாலே அவர்களுடைய பெண்சாதிகளை அந்நியருக்கும், அவர்களுடைய வயல்களை அவைகளைக் கட்டிக்கொள்பவர்களுக்கும் கொடுப்போம்; ஏனெனில், *அவர்களிலே சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டும் அவரவர் பொருளாசைக்காரராய் இருக்கிறார்கள்; தீர்க்கதரிசிகள்துவக்கி ஆசாரியர்கள்மட்டும் அவரவர் பொய்யராயிருந்து. *எரே. ௯. ௰௩-௰௫.

௰௧ சமாதானமில்லாதிருந்தும், சமாதானம் சமாதானமென்று சொல்லி, நமது சன

மாகிய குமாரத்தியின் நொறுங்குதலைத் தேவிக்கையாய்க் குணமாக்குகிறார்கள்.

௰௨ தாங்கள் அருவருப்பானதைச் செய்ததினிமித்தம் வெட்குகிறார்களோ? பரிச்சேதம் வெட்கார்கள்; நாணவும் அறியார்கள்; ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள்; நாம் அவர்களை விசாரிக்கும் காலத்திலே இடறுண்டுபோவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௩ அவர்களை வாரவே வாருவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; திராட்சச்செடியிலே குலைகள் இராது; அத்திமரத்திலே பழங்கள் இராது; இலையும் உதிரும்; நாம் அவர்களுக்குக் கொடுத்தது அவர்களைவிட்டுத் தாண்டிப்போமென்று சொல்.

௰௪ ¶ என்னத்தைப்பற்றி நாம் தரித்திருப்போம்? கூடிக்கொள்ளுங்கள்; *நாம் அரணான பட்டணங்களுக்குள்ப் பிரவேசித்து, அங்கே சங்காரமாவோம்; ஏனெனில், நாம் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தபடியினாலே, நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மைச் சங்காரம்பண்ணி, †நமக்குப் பிச்சுத்தண்ணீரைக் குடிக்கக் கொடுக்கிறார். *எரே.௪.௫. †எரே.௯.௰௫: ௨௩.௰௫.

௰௫ சமாதானத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் நலமில்லை; ஆரோக்கியகாலத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் இதோ கெடி.

௰௬ ¶ *தாணிலிருந்து அவர்களுடைய குதிரைகளின் சீறுதல் கேட்கப்படுகிறது; அவர்களுடைய வலுபுரவிகள் கனைக்கிற சத்தத்தினாலே தேசமெல்லாம் அதிர்கிறது; அவர்கள் வந்து தேசத்தையும், அதின் நிறைவையும், பட்டணத்தையும், அதின் குடிகளையும் பட்சிப்பார்கள். *எரே. ௪. ௰௫.

௰௭ மெய்யாய், இதோ, தடைகட்டப்படாத சர்ப்பங்களையும், கட்டுவிரியன்களையும் உங்களுக்குள் அனுப்புகிறோம்; அவைகள் உங்களைக் கடிக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ ¶ நான் சஞ்சலத்தில் முசிப்பாறப் பார்த்தும், என்னிலே என் இருதயம் பலட்சயமாயிருக்கிறது.

௰௯ இதோ, சீயோனிலே கர்த்தர் இருப்பதில்லையோ? அதில் இராசா உண்டாயிருப்பதில்லையோ? என்று, நமது சனமாகிய குமாரத்தி தூரதேசத்திலிருந்து கூப்பிடும் சத்தமுண்டாம்; ஆனால், அவர்கள் தங்கள் சுரூபங்களினாலும் அன்னியரின் மாயைகளினாலும் நமக்குக் கோபமுண்டாக்கினதென்னவென்கிறார்.

௨௰ அறுப்புக்காலம் சென்றது; கோடைகாலமும் முடிந்தது; நாம் இரட்சிக்கப்பட்டதுமில்லை.

௨௧ என் சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலினால் நொறுங்குண்டேன்; கரிகறுத்திருக்கிறேன்; திகைப்பு என்னைப் பிடித்தது.

௨௨ *கிலேயாத்திலே பிசின்தயிலமில்லையோ? இரணவயித்தியனும் அங்கே இல்லையோ? பின்னை ஏன் என் சனமாகிய குமாரத்தியின் குணமாகுதல் நடந்தேறாமலே போயிற்று. *எரே. ௪௬. ௰௧. ௧ மோ. ௩௭. ௨௫.

## ௯. அதிகாரம்.

ஆ, குமாரத்தியாகிய என்னுடைய சனத்திலே கொலையுண்டவர்கள்நிமித்தம் நாம் இரவும் பகலும் அழும்படியாக *என் தலை தண்ணீரும், என் கண்கள் கண்ணீரூற்றுமானால் தாவிலை. *எரே. ௰௩. ௰௭: ௰௪. ௰௭. ஏசா. ௨௨. ௪.

௨ ¶ ஆ, வனாந்தரத்தில் எனக்கு வழிப்பயணக்காரரின் தாபரமிருந்தால் தாவிலை; அப்போது நான் என் சனத்தைவிட்டு, அவர்களிடத்தில் இராதபடிக்குப் போய்விடுவேன்; ஏனெனில், அவர்களெல்லாரும் விபசாரரும் துரோகிகளின் கூட்டமுமாயிருக்கிறார்கள்.

௩ *தங்களுக்கு வில்லாயிருக்கிற தங்கள் நாக்கைப் பொய்களை எய்ய நாணேற்றுகிறார்கள்; அவர்கள் இந்தத் தேசத்திலே பெலத்துக்கொள்வது சத்தியத்துக்காக அல்ல;

ஏனெனில், †பொல்லாப்பிலிருந்து பொல்லாப்புக்கு நடந்தேறுகிறார்கள்; நம்மையோ வென்றால், அறியார்களென்று கர்த்தர்சொல்லுகிறார். *சங். ௫௨. ௪. †எரே. ௯. ௭.

௪ *நீங்கள் அவனவன் தன்தன் சிநேகிதனுக்கு எச்சரிக்கையாயிருங்கள்; எந்தச் சகோதரனையும் நம்பாதிருங்கள்; ஏனெனில், எந்தச் சகோதரனும் கவிழ்க்கவே கவிழ்க்கிறான்; எந்தச் சிநேகிதனும் தூற்றித் திரிகிறான். *மீகா. ௧. ௭: ௫. ௯.

௫ அவர்கள் மெய்யைப்பேசாமல் ஒவ்வொருவரும் தமக்கடுத்தவனை ஏய்க்கிறார்கள்; பொய்யைப்பேசத் தங்கள் நாவைப் படிப்பிக்கிறார்கள்; அக்கிரமஞ்செய்ய உழைக்கிறார்கள்.

௬ கபடத்தின் நடுவிலே குடியிருக்கிறாய்; கபடத்தினிமித்தம் நம்மை அறியமாட்டோமென்கிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௭ ¶ ஆகையால் சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் அவர்களை ஒடுக்கி, அவர்களைப் புடமிடுவோம்; ஏனெனில், நமது சனமாகிய குமாரத்தியை வேறெந்தப்பிரகாரமாக நடத்துவோம்?

௮ அவர்கள் நாவு கூர்மையாக்கப்பட்ட அம்பாயிருந்து, கபடம் பேசுகிறது; *தனக்கடுத்தவனோடே அவனவன் தன் வாயினாலே சமாதானமாய்ப் பேசுகிறான்; ஆனால் தன் உள்ளத்திலே அவனுக்குப் பதிவிடை வைக்கிறான். *சங். ௨௮. ௩: ௫௫. ௨௨: ௯௨. ௫.

௯ *இவைகளினிமித்தம் அவர்களை விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்குமோ என்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௫. ௯-௨௯.

௰ ¶ மலைகளின்மேல் அழுகையையும், துக்கங்கொண்டாடுதலையும், வனாந்தரத் தாபரங்களின்மேல் புலம்பலையும் எடுப்பேன்; ஏனெனில், ஒருவனும் அவைகளைக் கடந்துபோகாதவண்ணமாய் அவைகள் பாழ்க்கடிக்கப்பட்டுக் கிடக்கின்றன; *ஆடுமாடுகளின் சத்தம் கேட்கப்படுகிறதுமில்லை; ஆகாசத்தின் பறவைமுதற்கொண்டு மிருகங்கள்மட்டும் யாவும் தெறித்துப்போயின. *எரே. ௰௨. ௪.

௰௧ *நாம் எருசலேமை மண்மேடுகளும் வலுசர்ப்பங்களின் தாபரமுமாக்கி, யூதாவின் பட்டணங்களைக் குடியில்லாதபடியாய்ப் பாழ்த்துப்போகப்பண்ணுவோம். *மீகா. ௩. ௰௨. சங். ௭௯. ௧.

௰௨ ¶ *இதை உணரத்தக்க ஞானமுள்ள மனுஷன் யாவன்? தேசம் அழிந்து, ஒருவனும் கடவாதபடியாய்ப் பாழ்க்கடிக்கப்படுகிற முகாந்தரமென்னவென்று கர்த்தருடைய வாய் தன்னுடனே சொல்லுகிறதைக் கேட்டு அறிவிக்கத்தக்கவன் யாவன்? *௫ மோ. ௩௨. ௨௯.

௰௩ கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் அவரவருக்குமுன்பாகக் கட்டளையிட்ட நம்முடைய நியாயப்பிரமாணத்தை அவர்கள் விட்டு, நம்முடைய சொல்லைக் கேளாமலும், அதின்படியே நடவாமலும்,

௰௪ *தங்களுடைய இருதயத்தின் கடினத்தையும், தங்கள் பிதாக்கள் தங்களுக்குக் கற்றுக்கொடுத்தபடி பாகால்களையும் பின்தொடர்ந்தபடியினாலே, *எரே. ௭. ௨௪-௨௭.

௰௫ இதோ, *நாம் இந்தச் சனத்துக்கு எட்டியைப் புசிக்கவும், பிச்சுத்தண்ணீரைக் குடிக்கவும் கொடுத்து, *எரே. ௨௩. ௰௫.

௰௬ அவர்களும், அவர்கள் பிதாக்களும் அறியாத புறச்சாதிகளுக்குள்ளே அவர்களைச் சிதறவடித்து, பட்டயத்தை அவர்களுக்குப் பின்னாக அவர்களை நிர்மூலமாக்குமட்டும் அனுப்புவோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௭ ¶ நீங்கள் சிந்தனையாகி, புலம்பல்காரிகளை வரவழைத்து, அதற்காக ஞானமுள்ள ஸ்திரிகளை அழைத்தனுப்புங்களென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ அவர்கள் சீக்கிரமாய் வந்து, நம்முடைய கண்கள் கண்ணீராய்ச் சொரியத்தக்கவிதமாகவும், நம்முடைய இமைகள் தண்ணீராய் ஓடத்தக்கவிதமாகவும், நம்மேல் புலம்பும்படிக்குத்தானே.

௰௯ ஏனென்றால், எத்தனையாய்ப் பாழ்க்கடிக்கப்பட்டோமென்றும், நாங்கள் தேசத்தை விட்டுப்போகிறதினாலும், எங்கள் வாசஸ்தலங்களைக் கவிழ்த்தார்களென்கிறதினாலும் மிகவும் வெட்கப்பட்டோமென்றும், சீயோனிலிருந்து உண்டாகிற புலம்பலின் சத்தம் கேட்கப்படும்.

௨௰ ஆனதுகொண்டு ஸ்திரீகளே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்; உங்கள் செவி அவருடைய வாயின் வசனத்தை ஏற்றுக்கொள்ளட்டும்; நீங்கள் உங்கள் குமாரத்திகளுக்குத் துக்கங்கொண்டாடுதலையும், அவளவள் தன் தோழிக்குப் புலம்பலையும் கற்றுக்கொடுங்கள்.

௨௧ ஏனெனில், வீதியிலிருக்கிற குழந்தைகளையும், தெருக்களிலிருக்கிற இளைஞரையும் சங்காரம்பண்ணச் சாவு நம்முடைய பலகணிகளிலேறி, நம்முடைய அரமனைகளிலே பிரவேசிக்கும்.

௨௨ *மனுஷரின் சவங்கள் வயல்வெளியின்மேல் எருவைப்போலவும், அறுக்கிறவனுக்குப் பின்னாலே ஒருவனும் வாரிக்கொள்ளாதிருக்கிற அரியைப்போலவும் கிடக்குமென்று கர்த்தர் உரைத்தாரென்று சொல். *எரே. ௭. ௩௩.

௨௩ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: ஞானி தன் ஞானத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவேண்டாம்; பராக்கிரமன் தன் பராக்கிரமத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவும்வேண்டாம்; ஐசுவரியவான் தன் ஐசுவரியத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவும் வேண்டாம்.

௨௪ *மேன்மைபாராட்டுபவன் நாம் பூமியிலே கிருபையையும், நியாயத்தையும், நீதியையும் செய்கிற கர்த்தரென்று நம்மை உணர்ந்து அறிந்திருக்கிறதையேதொட்டு மேன்மைபாராட்டக்கடவான்; ஏனெனில், இவைகளின்மேலே பிரியமாயிருக்கிறேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*க கொரி. க. ௩௧. உ கொரி. ௰. ௰௭.

௨௫ ¶ இதோ, நாள்கள் வரும்; அப்போது சுன்னத்தில்லாதவர்களோடுங்கூடச் சுன்னத்துள்ள யாவரையும்,

௨௬ எகிப்தையும், யூதாவையும், ஏதோமையும், அம்மோன் புத்திரரையும், மோவாபையும், கடைசி மூலைகளிலுள்ள வனாந்தரக்குடிகளான யாவரையும் விசாரிப்போம்; ஏனெனில், புறச்சாதியார் அனைவரும் சுன்னத்தில்லாதவர்கள்; ஆனால், இஸ்ரவேல் வீட்டார் அனைவரும் *இருதய சுன்னத்தில்லாதவர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*௩ மோ. ௨௬. ௪௧. அப். ௭. ௫௧. உரோ. ௨. ௨௮, ௨௯.

## ௰. அதிகாரம்.

இஸ்ரவேல்வீட்டாரே, கர்த்தர் உங்களுடனே சொல்லுகிற வசனத்தைக் கேளுங்கள்.

௨ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: புறச்சாதிகளுடைய மார்க்கத்தைக் கற்றுக்கொள்ளாதிருங்கள்; வானத்தின் அடையாளங்களாலே புறச்சாதிகள் கலங்குகிறார்களே என்று சொல்லி, நீங்கள் அவைகளாலே கலங்காதிருங்கள்.

௩ ஏனெனில் சனசதளங்களின் பிரமாணங்கள் மாயையாயிருக்கின்றன; அதேனென்றால், *காட்டில் ஒரு மரத்தை வெட்டுகிறார்கள்; அதிலே தச்சன் கைகளிலிருக்கிற வாச்சியால் வேலைசெய்யப்படும்.
*ஏசா. ௪௪. ௰௪–௨௰.

௪ வெள்ளியினாலும் பொன்னினாலும் அதை நேர்த்தியாக்கி, அது ஆடாதபடிக்கு அதை ஆணிகளாலும் சுத்தியல்களாலும் உரமாக்குகிறார்கள்.

௫ அவைகள் பனைமரத்தைப்போலக் கெட்

டியாயிருக்கின்றன; *அவைகள் பேசமாட்டாதவைகள்; அவைகள் நடக்கமாட்டாததினாலே சுமக்கப்படவேண்டும்; அவைகளுக்குப் பயப்படாதிருங்கள்; ஏனெனில், தீமைசெய்யமாட்டாதவைகள்; நன்மைசெய்வதும் அவைகளில் இல்லையென்கிறார். *சங். ௱௰௫. ௫, ௭.

௬ ¶ கர்த்தாவே, *உமக்கு ஒப்பானவன் இல்லையே; தேவரீரே பெரியவர்; உமது நாமமே வல்லமையில் பெரியது.
*சங். ௮௬. ௮, ௰.

௭ சாதிகளின் கர்த்தாவே, *உமக்குப் பயப்படாதிருப்பவன் யாவன்? தேவரீருக்குத்தான் பயப்படவேண்டியது; அதேனென்றால், சாதிகளுடைய எல்லா ஞானிகளிலும், அவர்களுடைய எல்லா இராச்சியத்திலும் உமக்கு ஒப்பானவன் இல்லை.
*சங். ௩௩. ௮. வெளி. ௰௫. ௪.

௮ அவர்கள் ஏகமாய் *மிருககுணமும் பயித்தியமுமாயிருக்கிறார்கள்; அந்த மரம் மகா மாயையான போதகந்தானே.
*உரோ. ௧. ௨௨, ௨௩.

௯ தகடாக்கப்பட்ட வெள்ளி தர்சீசிலும், பொன் ஊப்பார்சீயிலுமிருந்து கொண்டுவரப்பட்டு, தொழிலாளியினாலும், தட்டான் கைகளினாலும் செப்பனிடப்படுகின்றன; இளநீலமும், இரத்தாம்பரமும் அவைகளின் உடுப்பு; அவையெல்லாம் ஞானிகளின் செய்கையாயிருக்கின்றன.

௰ கர்த்தரோவெனில் மெய்யான தெய்வம்; அவர் சீவனுள்ள பராபரனும் நித்திய இராசாவுந்தானே; அவருடைய கடுமையினாலே பூமி அதிரும்; அவருடைய சினத்தைச் சாதிகள் சகிக்கமாட்டார்கள்.

௰௧ ¶ வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தேவர்கள், பூமியிலும் இந்த வானத்தின்கீழும் இராதபடிக்கு அழிவார்கள் என்றதாய் அவர்களுக்குச் சொல்லுவீர்களாக.

௰௨ அவரே பூமியைத் தம்முடைய பெலத்தினால் உண்டாக்கி, பூச்சக்கரத்தைத் தம்முடைய ஞானத்தினாலே படைத்து, வானத்தைத் தம்முடைய உணர்வினாலே *விரித்தார். *யோபு. ௯. ௮. சங். ௱௪. ௨. ஏசா. ௪௰. ௨௨.

௰௩ *அவர் சத்தமிடுகையில் திரளான தண்ணீர் வானத்தில் உண்டாகிறது; அவர் பூமியின் கடையிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி, மழையுடனே மின்னல்களை உண்டாக்கி, காற்றைத் தமது பண்டகசாலைகளிலிருந்து ஏவிவிடுகிறார். *சங். ௱௩௫. ௭. யோபு. ௩௮. ௨௫-௨௮.

௰௪ *மனுஷர் அனைவரும் அறிவில்லாமல் மிருககுணமானார்கள்; தட்டார் அனைவரும் சுரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள்; ஏனெனில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவைகளில் ஆவியில்லை. *எரே. ௫. ௰௭: ௰௮. ௰௯.

௰௫ அவைகள் மாயையும், மகா எத்துக்களான கிரியையுமாய் இருக்கின்றன; அவைகள் விசாரிக்கப்படும் நாளிலே அழியும்.

௰௬ யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போலே அல்ல; ஏனெனில், அவர் சருவத்தையும் உருவாக்கினவர்; இஸ்ரவேல் அவருடைய சுதந்தரமான கோத்திரம்; சேனைகளையுடைய கர்த்தர் என்பது அவருடைய நாமம்.

௰௭ ¶ அரணானதில் குடியிருக்கிறவளே, தேசத்திலிருந்து உன் வியாபாரத்தைச் சேர்த்துக்கொள்.

௰௮ ஏனெனில், இதோ, நாம் இந்தவிசை தேசத்தின் குடிகளைக் கவண் எறிந்து, அவர்கள் கண்டு உணரும்படிக்கு அவர்களுக்கு நெருக்கமுண்டாக்குவோம் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௯ ¶ என் நொறுங்குதலின்நிமித்தம் எனக்கு ஐயோ! என் காயம் கேவலமாயிருக்கிறது; *ஆனால் இது நான் சுமக்கவேண்டிய என்னுடைய நோயென்று நான் சொல்லுவேன். *சங். ௭௭. ௰௧.

௨௰ என்னுடைய கூடாரம் பாழ்க்கடிக்கப்பட்டு, என் கயிறுகளெல்லாம் அறுப்புண்டன; என் பிள்ளைகள் புறப்பட்டுப்போனார்கள்; அவர்களில் ஒருவனுமில்லை; இனி என் கூடாரத்தை விரித்து, என் திரைகளைத் தூக்கிக்கட்டுவாரில்லை.

௨௧ ஏனென்றால், மேய்ப்பர் மிருககுணமாகி, கர்த்தரைத் தேடாதேபோனார்கள்; ஆகையால், அவர்கள் காரியம் வாய்க்காமல், அவர்கள் மந்தையெல்லாம் சிதறவடிக்கப்பட்டன.

௨௨ இதோ, யூதாவின் பட்டணங்களைப் பாழும் வலுசர்ப்பங்களின் தாவுமாக்கிப்போடும் செய்தியின் சத்தமும், *வடதேசத்திலிருந்து பெரிய கொந்தளிப்பும் வருகின்றன. *எரே. ௧. ௰௪; ௪. ௬.

௨௩ ¶ கர்த்தாவே, *மனுஷனுடைய வழி அவனாலே ஆகிறதல்லவென்றும், தன் நடைகளை நடத்துவது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும் அறிவேன். *வாக். ௨௰. ௨௪. பிர. ௮. ௰௬.

௨௪ கர்த்தாவே, *என்னைத் தண்டியும்; ஆனால் என்னை மாயையாக்காதபடிக்கு †உம்முடைய கோபத்தினாலே அல்ல, ‡நியாயமட்டாய்த் தண்டியும். *சங். ௬. ௨. †எரே. ௩௮. ௨. ‡எரே. ௪௬. ௨௮.

௨௫ *உம்மை அறியாத சாதிகளின்மேலும், உமது நாமத்தைத் தொழுதுகொள்ளாத வம்சங்களின்மேலும், உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும்; ஏனெனில், அவர்கள் யாக்கோபைப் பட்சித்து, அவனை விழுங்கி, அவனை நிர்மூலமாக்கி, அவன் வாசஸ்தலத்தைப் பாழ்க்கடித்தார்கள். *சங். ௭௬. ௬.

## ௰௧ அதிகாரம்.

கர்த்தராலே எரேமியாவுக்கு உண்டான வசனம்; அவர் சொன்னதாவது:

௨ ¶ நீங்கள் கேட்டு யூதாவின் மனுஷருக்கும் எருசலேமின் குடிகளுக்கும் சொல்லிக்காட்டவேண்டிய உடம்படிக்கையின் வார்த்தைகளாவன:

௩ *நமது சத்தத்தைக் கேட்டு, நாம் உங்களுக்குக் கற்பிக்கிற எல்லாக் காரியங்களிலும் அதின்படிசெய்யுங்கள்; அப்போது நீங்கள் நமக்குச் சனமாய் இருப்பீர்கள், நாம் உங்களுக்குப் பராபரனாய் இருப்போம் என்று சொல்லி, *எரே. ௭. ௨௩.

௪ நாம் உங்கள் பிதாக்களை இரும்புக் குகையாகிய எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே அவர்களுக்குக் கற்பித்த இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளைக் கேளாத மனுஷன் *சபிக்கப்பட்டவனென்று, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறாரென்று அவர்களுக்குச் சொல். *௫ மோ. ௨௭. ௨௬.

௫ இன்றைத்தினம் இருக்கிறபடி, பாலும் தேனும் ஓடுகிற தேசத்தை உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று நாம் அவர்களுக்கு இட்ட ஆணையை நாம் திடப்படுத்தும்படியாகத்தானே என்றார்; அதற்கு நான் பிரதியுத்தாரமாக, ஆம் கர்த்தாவே என்றேன்.

௬ ¶ அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீ யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் இந்த வார்த்தைகளை எல்லாம் கூறிச்சொல்லவேண்டியது ஏதெனில், இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளை நீங்கள் கேட்டு, அவைகளின்படியே செய்யுங்கள்.

௭ ஏனென்றால், நாம் உங்கள் பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து ஏறப்பண்ணின நாளிலும், இந்நாள்மட்டாகவும் நாம் அவர்களுக்குத் திடச்சாட்சியாய் நம்முடைய சத்தத்தைக் கேளுங்களென்று ஏற்கெனவே சாட்சி விளங்கத்தக்கவிதமாய்ச் சொல்லி வந்தோம்.

௮ ஆனால் அவர்கள் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும் போய், அவரவர் தங்கள் பொல்லாத இருதயத்தினுடைய கடினத்தின்படி நடந்தார்கள்; ஆனது கொண்டு நாம் அவர்களுக்குச் செய்யக்

கற்பித்ததும், அவர்கள் செய்யாமல்போன துமான இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளை எல்லாம் அவர்கள்மேல் வரப்பண்ணுவோம் என்று சொல்லென்றார்.

௯ ¶ பின்னையும் கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: யூதாவின் மனுஷருக்குள்ளும் எருசலேமின் குடிகளுக்குள்ளும் ஒரு ஒப்பந்தம் காணப்படுகிறது.

௰ அவர்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேட்கமாட்டோமென்றவர்களும், அந்நிய தேவர்களைச் சேவிக்கப் பின்சென்றவர்களுமாகிய தங்களுடைய முந்தின பிதாக்களின் அக்கிரமங்களுக்குத் திரும்பினார்கள்; நாம் தங்கள் பிதாக்களோடே பண்ணின உடம்படிக்கையை இஸ்ரவேல் வீட்டாரும் யூதாவின் வீட்டாரும் முறித்துப்போட்டார்கள்.

௰௧ ¶ ஆகையினாலே கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, அவர்கள் நீங்கிப்போகமாட்டாத தீங்கை அவர்கள்மேல் வரப்பண்ணுவோம்; *அப்போது நம்மைநோக்கிக் கூப்பிடுவார்கள்; ஆனால் அவர்களைக் கேளாதிருப்போம். *வாக். ௧.௨,அ. ஏசா.௧.௰௫.

௰௨ அப்போது யூதாவுடைய பட்டணங்களின் மனுஷரும், எருசலேமின் குடிகளும் போய்த் தாங்கள் தூபங்காட்டியிருந்த தேவர்களைநோக்கிக் கூப்பிட்டும், *அவைகள் அவர்களை அவர்கள் தீங்குகாலத்தில் இரட்சிப்பதே இல்லை. *எரே. ௨.௨அ. ௫ மோ. ௩௨. ௩௭, ௩அ.

௰௩ ஏனெனில், யூதாவே, உன் பட்டணங்களின் இலக்கமும் *உன் தேவர்களின் இலக்கமும் சரி; எருசலேமுடைய வீதிகளின் இலக்கமும், நீங்கள் பாகாலுக்குத் தூபங்காட்டுவதற்காக இலச்சைக்கு ஸ்தாபித்த பீடங்களின் இலக்கமும் சரி. *ஓசே. ௰. ௧: ௰௨. ௰௨.

௰௪ ஆனதுகொண்டு *நீ இந்தச் சனத்துக்காக விண்ணப்பம்பண்ணாமலும், அவர்களுக்காகக் கூப்பிடுதலும் கெஞ்சுதலும் செய்யாமலும் இருப்பாயாக; ஏனெனில், அவர்கள் தங்கள் தீங்கின்நிமித்தமாய் நம்மைநோக்கிக் கூப்பிடும் காலத்திலே நாம் அவர்களைக் கேளாதிருப்போம். *எரே. எ. ௰௬: ௰௪. ௰௧.

௰௫ ¶ வல்லவர்களால் மகா தீவினை செய்யப்படுகையில், நம்முடைய நேசருக்கு நமது வீட்டில் என்ன இருக்கிறது? பரிசுத்த மாம்சத்தை உன்னைவிட்டுத் தாண்டப்பண்ணுவார்கள்; உன் பொல்லாப்பு நடக்கும்போது நீ களிகூருகிறாயே.

௰௬ அலங்காரக் கனி உண்டாயிருக்கிற நேர்த்தியும் பச்சையுமான ஒலிவமரமென்கிறபேரைக் கர்த்தர் உனக்கிட்டார்; ஆனால் மகா அமளியின் சத்தமாய் அதைச் சுற்றிலும் நெருப்பைக்கொளுத்துகிறாய், அதின் கொம்புகள் முறிக்கப்படும்.

௰௭ ஏனென்றால், பாகாலுக்குத் தூபங்காட்டுகிறதினாலே நமக்குக் கோபமுண்டாக்க இஸ்ரவேல் வீட்டாரும், யூதாவின் வீட்டாரும் தங்களுக்குக் கேடாகச்செய்த பொல்லாப்பின்நிமித்தம் உன்மேலே தீங்கைவரப்பண்ணுவோமென்று உன்னை நாட்டின சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ ¶ அதைக் கர்த்தர் எனக்கு அறிவித்ததினாலே அறிந்தேன்; அவர்களுடைய செய்கைகளை அப்போது எனக்குத் தெரியக்காட்டினீர்.

௰௯ என்னவெனில், நான் அடிக்கப்படுவதற்குக் கொண்டுபோகப்படும் சாதுள்ள ஆட்டைப்போல இருக்கிறவன்; மரத்தை அதின் கனிகளோடுங்கூட அழிக்கக்கடவோமென்றும், அவன் சீவனுள்ளோருடைய தேசத்திலிராமலும், அவன் பேர் இனி நினைக்கப்படாமலும்போக, அவனைச் சங்கரிக்கக்கடவோமென்றும், எனக்கு விரோதமாய் யோசனைகளை யோசித்தார்கள் என்கிறதை அறியாதிருந்தேன்.

௨௰ ஆனால் சேனைகளின் கர்த்தாவே, *உள் ளிந்திரியங்களையும் இருதயத்தையும் சோ

தித்தறிகிற நீதியுள்ள நியாயாதிபதியே, நீர் அவர்களுக்குநீதியைச் சரிக்கட்டுகிறதைப் பார்ப்பேனாக; ஏனெனில் என் வழக்கை உமக்கு வெளிப்படுத்திவிட்டேன் என்றேன். *சங். ௭. ௰.

௨௧ ¶ ஆனதுகொண்டு நீ எங்கள் கையினாலே சாகாதபடிக்குக் கர்த்தருடைய நாமத்தினாலே தீர்க்கதரிசனம் சொல்லாதிருவென்று சொல்லி, உன் பிராணனை வாங்கத் தேடுகிற ஆனதோத்தின் மனுஷரைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது:

௨௨ இதோ, இதனிமித்தமாய் உங்களை விசாரிப்போம்; இளவயதுள்ள மனுஷர் பட்டயத்தாலே சாவார்கள்; அவர்கள் குமாரரும் அவர்கள் குமாரத்திகளும் பஞ்சத்தாலே சாவார்கள்.

௨௩ அவர்களில் மீதியாய் இருப்பவர்களில்லை; ஏனெனில், நாம் ஆனதோத்தின் மனுஷரை விசாரிக்கும் வருஷத்திலே அவர்கள்மேலே தீங்கை வரப்பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

கர்த்தாவே, உம்மோடே நான் வழக்காடப்போனால் தேவரீர் நீதியுள்ளவராமே; ஆகிலும் நியாயங்களைக்குறித்து உம்மோடே நான் பேசிக்கொள்ளட்டும்; *ஆகாதவர்களின் வழி வாய்த்து, துரோகஞ்செய்துவருகிற அனைவரும் சுகிக்கிறதென்ன?

*யோபு. ௨௧. ௭, ௰௫. சங். ௭௩. ௩, ௰௨.

௨ அவர்களை நாட்டினீர்; வேரும்பற்றித் தேறிப்போனார்கள்; கனியும் கொடுக்கிறார்கள்; அவர்கள் வாயிலே நீர் சமீபமும், அவர்கள் உள்ளிந்திரியங்களுக்கோ நீர் தூரமுமானவர்.

௩ ஆனால் கர்த்தாவே, தேவரீர் என்னை அறிந்திருக்கிறீர்; என்னைக் காண்கிறீர்; என் இருதயம் உமக்குமுன்பாக எப்படிக்கொத்ததென்று சோதித்து அறிகிறீர்; அவர்களை அடிக்கப்படும்ஆடுகளைப்போலே பிடுங்கிப்போட்டு, கொலைநாளுக்கு நியமியும்.

௪ எந்தமட்டும் தேசம் புலம்பி, எல்லா வெளியின் புல்லும் வாடி, அதின் குடிகளுடைய பொல்லாப்பின் நிமித்தம் மிருகங்களும் பறவைகளும் அழியவேண்டும்; ஏனெனில், எங்கள் கடைசி முடிவை அவன் காண்பதில்லையென்கிறார்கள்.

௫ நீ காலாள்களோடே ஓடுகையில் உன்னை இளைக்கப்பண்ணினார்களானால், குதிரைகளோடே எப்படிக் கலந்து ஓடுவாய்? சமாதானம் இருக்கிற தேசத்திலே நீ அடைக்கலம் தேடினால், யோர்தான் எழும்புகிற மேட்டிமையில் என்னமாயிருப்பாய்?

௬ ஏனெனில், உன் சகோதரரும், உன் தகப்பன் வீட்டாரும் முதலாய் உனக்குத் துரோகம்பண்ணி, அவர்களுங்கூட உனக்குப் பின்னாக மிகவும் கூப்பிடுகிறார்கள்; அவர்கள் உன்னோடே நல்ல விசேஷங்களாய்ப் பேசும்போது அவர்களை நம்பாயாக.

௭ நமது வீட்டை விட்டுவிடுகிறோம்; நம்முடைய சுதந்தரத்தை நெகிழுகிறோம்; நம்முடைய ஆத்துமா நேசித்ததை அதினுடைய சத்துருவின் கையிலே கொடுக்கிறோம்.

௮ நமது சுதந்தரம் நமக்குக் காட்டின் சிங்கத்துக்குச் சரியானது; அது நமக்கு விரோதமாய்த் தன் சத்தத்தைக் காட்டுகிறது; ஆனபடியினால் அதைப் பகைத்திருக்கிறோம்.

௯ நமது சுதந்தரம் நமக்குப் பலவருணமான உராஞ்சுகிற பட்சி; ஆகையால், உராஞ்சுகிற பட்சிகள் அதைச் சுற்றிலும் வருவதாக; வெளியினுடைய சகல ஜீவன்களே, அதைப் பட்சிக்கக் கூடிவாருங்கள்.

௰ *அநேக மேய்ப்பர்கள் நமது திராட்சத்தோட்டத்தை அழித்து, நமது வீதத்தை மிதித்து, நம்முடைய விருப்பமான வீதத்தைப் பாழான வனாந்தரமாக்கினார்கள்.

*எரே. ௬. ௩.

௰௧ அதைப் பாழாக்கிவிட்டார்கள்; பாழாய்க்கிடக்கிற அது நம்மைநோக்கித் துக்

கிக்கிறது; தேசமெல்லாம் பாழாம்; ஏனெனில், ஒருவனும் இதை மனதிலே வைக்கிறதில்லை.

௰௨ வனாந்தரத்திலுள்ள எல்லா உயர்நிலங்களின்மேலும் பாழ்க்கடிக்கிறவர்கள் வருகிறார்கள்; ஏனெனில், கர்த்தருடைய பட்டையம் ஒரு தேசமுனைதுவக்கி மறுதேசமுனைமட்டும் பட்சித்துக்கொண்டிருக்கும்; ஒரு மாம்சத்துக்கும் சமாதானமில்லை.

௰௩ *கோதுமையை விதைத்தார்கள்; முள்ளுக்களை அறுப்பார்கள்; ஒன்றுக்கும் உதவாமல் உழன்று அறுக்கிறார்கள்; ஆகையாலே கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்தினால் உங்களுக்கு வரும் வரத்துக்காக வெட்கப்படுங்கள். *ஓசே. அ. எ.

௰௪ ¶ இதோ, நாம் நமது சனமாகிய இஸ்ரவேலுக்குக் காணியாட்சியாகக் கொடுத்த நம்முடைய சுதந்தரத்தைத் தொடுகிற நம்முடைய பொல்லாத அயலார் அனைவரையும் தங்கள் தேசத்தில் இராதபடிக்குப் பிடுங்கிப்போடுவோமென்று, கர்த்தர் அவர்களைக்குறித்துச் சொல்லுகிறார்; யூதா வீட்டாரையும் அவர்கள் நடுவில் இராதபடிக்குப் பிடுங்கிப்போடுவோம்.

௰௫ அவர்களை நாம் பிடுங்கிப்போட்டபிற்பாடு சம்பவிப்பது ஏதென்றால், நாம் திரும்ப அவர்கள்மேல் இரங்கி, அவர்களைத் தங்கள் தங்கள் சுதந்தரத்துக்கும் தங்கள் தங்கள் தேசத்துக்கும்திரும்பப்பண்ணுவோம்.

௰௬ அப்புறம் சம்பவிப்பதாவது: அவர்கள் நம்முடைய சனத்துக்குப் பாகாலின்மேலே ஆணையிடக் கற்றுக்கொடுத்ததுபோலே, கர்த்தருடைய சீவனைக்கொண்டு என்று, *நம்முடைய நாமத்தின்மேலே ஆணையிடும்படியாக நம்முடைய சனத்தின் வழிகளை நன்றாய்க் கற்றுக்கொண்டால், அவர்கள் நம்முடைய சனத்தின் நடுவிலே ஊன்றக்கட்டப்படுவார்கள். *எரே. ச. உ. ௫ மோ. கூ. ௰௩.

௰௭ கேளார்களேயாகில், நாம் அப்படிக்கொத்த சாதியைப் பிடுங்கவே பிடுங்கிப்போட்டு அழிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீ போய், உனக்கு ஒரு சணலின் கச்சையைக் கொண்டு, அதை உன் அரையிலே கட்டிக்கொள்; ஆனால் அதைத் தண்ணீரிலே படவொட்டாதேயென்றார்.

௨ அப்போது நான் கர்த்தருடைய வார்த்தையின்படியே கச்சையைக் கொண்டு, அதை என் அரையிலே கட்டிக்கொண்டேன்.

௩ இரண்டாம்விசை கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௪ நீ கொண்டதும் உன் அரையிலிருக்கிறதுமான கச்சையை நீ எடுத்துக்கொண்டு, எழுந்து, ஐப்பிராத்து நதிமட்டும் போய், அதை அங்கே ஒரு கல்மலை வெடிப்பிலே ஒளித்துவை என்றார்.

௫ அப்போது நான் போய், கர்த்தர் எனக்குக் கற்பித்தபடியே அதை ஐப்பிராத்து நதியின் ஓரத்தில் ஒளித்துவைத்தேன்.

௬ அப்புறம் சம்பவித்ததேதெனில், அநேகநாள் சென்றபிற்பாடு கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீ எழுந்து ஐப்பிராத்துக் கரைக்குப்போய், நீ அங்கே ஒளித்துவைக்க நாம் உனக்குக் கற்பித்த கச்சையை அவ்விடத்தில் எடுத்துக்கொள் என்றார்.

௭ அப்போது நான் ஐப்பிராத்துக் கரைக்குப்போய், நான் கச்சையை ஒளித்துவைத்தஇடத்திலே தோண்டி, அதை எடுத்துக்கொண்டேன்; ஆனால் இதோ, அந்தக் கச்சை கெட்டு, ஒன்றுக்கும் ஆகாதேபோயிற்று.

௮ அப்போது கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௯ ¶ இப்படியே யூதாவுடைய பெருமையையும், எருசலேமுடைய மிகுபெருமை

யையும் கெட்டுப்போகப்பண்ணுவோமெ
ன்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ நம்முடைய வார்த்தைகளைக் கேட்க
மாட்டோம் என்கிறதும், *தங்கள் இருத
யத்தின் கடினத்தில் நடக்கிறதும், வேற்றுத்
தேவர்களைச் சேவிக்கவும் பணிந்துகொள்ள
வும் பின்தொடருகிறதுமான இந்தப் பொல்
லாத சனம், ஒன்றுக்குமாகாதேபோன இந்
தக் கச்சையைப்போலாகும்.

*எரே. ௰௬. ௰௨.

௰௧ ஏனென்றால், கச்சை மனுஷனுடைய
அரைக்குச் சேர்க்கையாய் இருக்கிறது
போலே நாம் இஸ்ரவேல் வீடு அனைத்தை
யும் யூதாவின் வீடு அனைத்தையும், நமக்குச்
சனமாகவும், கீர்த்தியாகவும், துதியாகவும்,
சிங்காரமாகவும் நமக்குச் சேர்க்கையாக்
கிக்கொண்டோம்; ஆனால் அவர்கள் கே
ளாதேபோனார்களென்று கர்த்தர் சொல்லு
கிறார்.

௰௨ ¶ சகல சாடிகளும் மதுவினாலே நிரப்
பப்படுமென்று, இஸ்ரவேலின் பராபரனாகி
ய கர்த்தர் உரைக்கிறார் என்கிற வார்த்தை
யை அவர்களுடனே சொல்; அதற்கு அவர்
கள்: சகல சாடிகளும் மதுவினாலே நிரப்
பப்படுவதை அறியவே அறியோமோவென்
று உன்னுடனே சொல்லுவார்கள்.

௰௩ அப்போது நீ அவர்களுக்குச் சொல்
லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறது
ஏதெனில், இதோ, இந்தத் தேசத்தின் குடி
களெல்லாரையும், தாவீதினுடைய ஆசனத்
தின்மேல் உட்காந்திருக்கிற இராசாக்களை
யும், ஆசாரியர்களையும், தீர்க்கதரிசிகளையும்.
எருசலேமின் குடிகள் எல்லாரையும் நாம்
வெறியினாலே நிரப்பி,

௰௪ அவர்களைச் சகோதரனோடே சகோதர
னையும், பிதாக்கள் பிள்ளைகளை ஏகமாகவும்
மொறுங்கடிப்போமென்று கர்த்தர் சொல்லு
கிறார்; நாம் அவர்களை அழிக்காதபடிக்கு
மன்னிப்பதுமில்லை, தப்பவிடுவதுமில்லை,
இரங்குவதுமில்லையென்று சொல்லென்றார்.

௰௫ ¶ நீங்கள் கேட்டு, செவிகொடுங்கள்;
மேட்டிமையாய் இராதிருங்கள்; ஏனென்
றால் கர்த்தர் இதைச் சொன்னார்.

௰௬ அவர் அந்தகாரத்தை வரப்பண்ணாத
தற்குமுன்னும், இருளுள்ள மலைகளில் உங்
கள் கால்கள் இடறுகிறதற்குமுன்னும், உங்
கள் பராபரனாகிய கர்த்தருக்கு மகிமை
யைச் செலுத்துங்கள்; மற்றப்படிக்கு *வெ
ளிச்சத்துக்குக் காத்திருப்பீர்கள்; ஆனால்
அவர் அதை மரண நிழலாக்கி அந்தகாரப்
படுத்திவிடுவார். *ஏசா. ௫௯. ௯.

௰௭ நீங்கள் இதைக் கேளாமல் போனீர்க
ளேயாகில், என் ஆத்துமா ஒளிப்பிடங்க
ளில் உங்கள் பெருமையின் நிமித்தம் அழு
துகொண்டு, கர்த்தருடைய மந்தை சிறைப்
பட்டுப்போனதென்று *என் கண் மிகவும்
கண்ணீர்விட்டுக் கண்ணீராய் ஓடும்.

*எரே. ௮ ௨௧: ௰௪. ௰௭.

௰௮ ¶ தாழ உட்காருங்கள்; ஏனெனில்,
*உங்கள் தலைகளின் சிங்காரமாகிய உங்
கள் மகிமையின் கிரீடம் விழுந்ததென்று
இராசாவுக்கும், இராசாத்திக்கும் சொல்.

*புல. ௫. ௰௬.

௰௯ தெற்குத்திசைப் பட்டணங்கள் அ
டைக்கப்பட்டன, அவைகளைத் திறப்பார்
இல்லை; யூதா அனைத்தும் குடிவிலக்கப்
பட்டுப்போம்; அது சமூலமாய் எடுபட்
டுப்போம்.

௨௰ உங்கள் கண்களை ஏறெடுத்து, வடக்
கேயிருந்து வருகிறவர்களைப் பாருங்கள்;
உனக்குக் கொடுக்கப்பட்டிருந்த மந்தை
யும், உன் மகிமையான ஆட்டுக்கிடையும்
எங்கே?

௨௧ அவர் உன்னை விசாரிக்கும்போது
என்ன சொல்லுவாய்? அவர்கள் உன்மேல்
அதிக்கரும் தலைவருமாயிருக்க, நீ அவர்க
ளைப் பழக்குவித்தாயே; *பிள்ளைப்பெறுகிற
வளைப்போலே உன்னை வேதனைகள் பிடிப்
பதில்லையோ? *எரே. ௬. ௨௪: ௨௨. ௨௩.

௨௨ இவைகள் என்மேல் நேரிட்டது

ஏதென்று நீ உன் இருதயத்திலே சொன்னாயேயாகில், உன்னுடைய திரளான அக்கிரமத்தின் நிமித்தமே உன் வஸ்திரத்து ஓரங்கள் விலக்கப்பட்டு, உன் குதிகால்கள் பலவந்தம் செய்யப்படுகின்றன.

உங ¶ *எத்தியோப்பியன் தன் தோலையும், சிவிங்கி தன் புள்ளிகளையும் மாற்றிவிடக்கூடுமோ? கூடுமானால், பொல்லாப்புக்குப் பழகின நீங்களும் நன்மைசெய்யக்கூடும்.
*சங். ருக. உ௰.

உச ஆனதுகொண்டு *வனாந்தரக்காற்றால் அடிபட்டுப் பறக்கிற துரும்பைப்போலே அவர்களைச் சிதற அடிப்போம்.
*சங். க. ச.

உரு நீ நம்மை மறந்து, பொய்யை நம்பின படியினாலே, இது உன்னுடைய விதமும், நம்மால் உனக்கு அளக்கப்படும் உன்னுடைய பங்குமாய் இருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

உசு நாமும் உன் வஸ்திரத்து ஓரங்களை உன் முகத்தின்மேல் விழத்தக்கவிதமாய் எடுத்துப்போடுவோம்.

உஎ அப்போது உன் விபசாரங்களும், உன் கனைக்குதல்களும், வெளியிலே மேடுகளின்மேல் நீ பண்ணின வேசித்தனத்தின் தோஷமுமென்கிற உன்னுடைய அபிமானம் காணப்படும்; உன் அருவருப்புகளை நாம் கண்டோம்; எருசலேமே, உனக்கு ஐயோ! நீ சுத்திகரித்துக்கொள்வதில்லையோ? இது இன்னம் எத்தனை காலத்துக்குப் பிற்பாடு ஆகுமென்கிறார்?

## ௰௪. அதிகாரம்.

வற்பகாலத்தைக்குறித்து எரேமியாவுக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.

உ ¶ யூதா துக்கித்து, அதின் வாசல்கள் பெலன் அற்றுக்கிடக்கின்றன; தரைமட்டும் குனிந்து, கரிகறுத்துத் திரிகிறார்கள்; எருசலேமின் கூக்குரல் எழும்புகிறது.

ங அவர்களில் பிரபலமானவர்கள் தங்கள் சிறியவர்களைத் தண்ணீருக்கு அனுப்புகிறார்கள்; இவர்கள் பள்ளங்களுக்கு வந்து, தண்ணீரைக் காணாமல் தங்கள் வெறும்பாத்திரங்களோடே திரும்பிவருகிறார்கள்; வெட்கி நாணி, தங்கள் தலையை மூடிக்கொள்ளுகிறார்கள்.

ச ஏனெனில், தேசத்தின்மேல் மழை இல்லாததினாலே தரை வெடித்திருக்கிறது; பயிர்செய்கிறவர்கள் வெட்கி, தங்கள் தலையை மூடிக்கொள்ளுகிறார்கள்.

ரு ஏனென்றால், வெளியின் பெண்மானும் குட்டிபோட்டு, புல் முளைக்காததினாலே அவைகளை விட்டுப்போகும்.

சு காட்டுக்கழுதைகள் உயர்ந்த திடல்களில் நின்று, பூதங்களைப்போலே காற்றை உட்கொள்ளுகின்றன; புல் இல்லாததினாலே அவைகளுடைய கண்கள் பூத்துப்போகின்றனவென்றார்.

எ கர்த்தாவே, *எங்கள் அக்கிரமங்கள் எங்களுக்கு விரோதமாக உத்தரவுசொன்னாலும், உம்முடைய நாமத்தினிமித்தம் கிருபைசெய்யும்; ஏனெனில் எங்கள் மாறுபாடுகள் திரளாயிருக்கின்றன; உமக்கு விரோதமாய்ப் பாவம்செய்தோம்.
*எரே. உ. ௰௯.

அ இஸ்ரவேலின் நம்பிக்கையே, இக்கட்டின் காலத்தில் அதின் இரட்சகரே, நீர் தேசத்தில் பரதேசியைப்போலவும், இராத்தங்க இறங்குகிற வழிப்போக்கனைப்போலவும் இருப்பானேன்?

௯ நீர் விடாய்த்துப்போன புருஷனைப்போலவும் இரட்சிக்கமாட்டாத பராக்கிரமனைப்போலவும் இருப்பானேன்? கர்த்தாவே, தேவரீர் எங்கள் நடுவிலிருக்கிறவராமே; *உம்முடைய நாமம் எங்களுக்குத் தரிக்கப்பட்டிருக்கிறதே; எங்களை விட்டுப்போகாதிரும். *எரே. ௰௫. ௰௬.

௰ ¶ அவர்கள் தங்கள் கால்களை அடக்கிக்கொள்ளாமல், அலைய விரும்புகிறார்களென்று கர்த்தர் இந்தச் சனத்தைக்குறித்துச்

௰௨ சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: ஒரு மனுஷனும் ஒரு மிருகமுமில்லாமல் அவாந்தரவெளியாய்க் கிடக்கிற இவ்விடத்திலும் இதற்கடுத்த பட்டணங்களிலும், இன்னம் ஆட்டுமந்தையை மேய்த்து, மடக்குகிற மேய்ப்பரின் தாபரங்கள் உண்டாயிருக்கும்.

௰௩ மலைச்சீமையான பட்டணங்களிலும், பள்ளத்தாக்குச் சீமையான பட்டணங்களிலும், தெற்குத்திசைப் பட்டணங்களிலும், பென்யமீன் தேசத்திலும், எருசலேமின் சுற்றுப்புறங்களிலும், யூதாவின் பட்டணங்களிலும், இன்னம் ஆட்டுமந்தைகள் எண்ணிக்கொள்ளுகிறவனுடைய கைகளைக் கடந்துவருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௪ ¶ இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது நாம் இஸ்ரவேலின் வீட்டுக்கும் யூதாவின் வீட்டுக்கும் சொன்ன நல்வார்த்தையை நிருவாகம்பண்ணுவோம்.

௰௫ அந்நாள்களிலும், அக்காலத்திலும் *தாவீதுக்கு நீதியின் முளையை முளைக்கப்பண்ணுவோம்; அவர் பூமியிலே நியாயத்தையும் நீதியையும் நடப்பிப்பார்.

*எரே. ௨௩. ௫, ௬. ஏசா. ௪. ௨: ௩௨. ௧, ௨. ஓசே. ௬. ௰௧. யோவா. ௩. ௬.

௰௬ அந்நாள்களில் யூதா இரட்சிக்கப்பட்டு, எருசலேம் சுகமாய்த் தங்கும்; அவர் எங்கள் நீதியாயிருக்கிற கர்த்தரென்று அழைக்கப்படுவார்.

௰௭ ஏனென்றால் *இஸ்ரவேல் வீட்டினுடைய இராசாசனத்தின்மேல் உளுக்காரத்தக்க புருஷன் தாவீதுக்கு இல்லாமல்போவதில்லை. *௨ சாமு. ௭. ௰௬.

௰௮ தகனபலியைச் செலுத்தி, காணிக்கையின் புகையைக் காட்டி, நாள்தோறும் பலியிடும் புருஷன் நமக்கு முன்பாக ஆசாரியர்களுக்கும் இலேவியருக்கும் இல்லாமல்போவதுமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

௰௯ ¶ பின்னையும், எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி, அவர் உரைத்ததாவது:

௨௰ கர்த்தர் சொல்லுகிறதேதெனில், குறித்தநேரங்களில் பகற்காலமும் இராக்காலமும் உண்டாகாதபடிக்கு, நீங்கள் பகற்காலத்தைக்குறித்து நாம் பண்ணின திட்டத்தையும், இராக்காலத்தைக்குறித்து நாம் பண்ணின திட்டத்தையும் அவத்தமாக்கினால்,

௨௧ அப்போது நம்முடைய தாசனாகிய தாவீதோடே நாம் பண்ணின உடம்படிக்கையும், அவன் ஆசனத்தில் அரசாளும் குமாரன் அவனுக்கில்லாதேபோகும்படியாக அவத்தமாகும்; நம்முடைய ஊழியக்காரராகிய இலேவியரோடும் ஆசாரியர்களோடும் நாம் பண்ணின உடம்படிக்கையும் அப்போது அவத்தமாம்.

௨௨ வானங்களின் சேனை எண்ணப்படாததும் கடற்கரை மணல் அளக்கப்படாததுமாயிருக்கிறதுபோலே, நாம் நம்முடைய தாசனாகிய தாவீதின் வித்தையும் நமக்கூழியஞ்செய்கிற இலேவியரையும் வர்த்திக்கப்பண்ணுவோமென்றார்.

௨௩ ¶ பின்னையும் எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி, அவர் சொன்னதாவது:

௨௪ கர்த்தர் தெரிந்துகொண்ட இரண்டு வம்சங்களையும் வெறுத்துப்போட்டாரென்று இந்தச் சனம் சொல்லி, தங்களுக்குமுன்பாக நமது சனம் இனி ஒரு சாதியல்லவென்கிறதாய் அதைத் தூஷணிக்கிறார்களென்கிறதை நீ கண்டதில்லையோ?

௨௫ வானங்களுக்கும் பூமிக்குமிருக்கிற திட்டங்களை நாம் வைக்காதபடிக்குப் பகற்காலத்தையும் இராக்காலத்தையுங்குறித்து நாம் பண்ணின உடம்படிக்கை அற்றுப்போனால்,

௨௬ அப்போது நாம் யாக்கோபின் வித்தையும் நம்முடைய தாசனாகிய தாவீதின்

வித்தையும், ஆபிரகாம் இசாக்கு யாக்கோபென்றவர்களின் வித்தை ஆளத்தக்கவர்களை அதில் எடுக்காதபடிக்கு வெறுத்துப் போடுவோம்; ஏனென்றால், *அவர்களுடைய சிறையிருப்பை நாம் திருப்பி, அவர்களுக்கு இரங்குவோம் என்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

*எரே. ௩௨. ௪௪. எசே. ௩௯. ௨௫.

## ௩௪. அதிகாரம்.

பாபேலின் *இராசாவாகிய நேபுகாத்நேச்சாரும், அவனுடைய எல்லாச் சேனையும், அவனுடைய கையின் ஆளுகைக்குக் கீழான பூமியினுடைய சகல இராச்சியங்களும், சகல சனசதளங்களும் எருசலேமுக்கும் சகல பட்டணங்களுக்கும் விரோதமாக யுத்தம்பண்ணுகையில் எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டான வசனம்.

*௨ இரா. ௨௫. ௧, ௨.

௨ ¶ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது: நீ போய், யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவுடனே பேசி, அவனுக்குச் சொல்லவேண்டியதேதெனில், கர்த்தர் உரைக்கிறதாவது: இதோ, நாம் இந்தப் பட்டணத்தைப் பாபேலுடைய இராசாவின் கையில ஒப்புக்கொடுக்கிறோம்; அவன் அதை அக்கினியால் சுட்டெரிப்பான்.

௩ நீ அவன் கைக்குத் தப்பிப்போகாமல், பிடிபடவே பிடிபட்டு, அவன் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவாய்; *உன் கண்கள் பாபேலுடைய இராசாவின் கண்களைப் பார்க்கும்; அவன் வாய் உன் வாயோடே பேசும்; நீ பாபேலுக்கும் போவாய்.

*எரே. ௩௨. ௪.

௪ ¶ ஆகிலும் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்; உன்னைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீ பட்டையத்தாலே சாவதில்லை.

௫ *சமாதானத்திலே சாவாய்; உனக்குமுன்னிருந்த முந்தின இராசாக்களாகிய உன் பிதாக்களின் நிமித்தமாக சுகந்தவர்க்கங்களைக் கொளுத்தினதுபோலே உன் நிமித்தமும் கொளுத்தி, ஐயோ! ஆண்டவனே, என்று உனக்காகப் புலம்புவார்கள்; ஏனெனில், இது நாம் சொன்ன வார்த்தையென்று கர்த்தர் உரைத்தாரென்று சொல்லென்றார்.

*௨ நாளா. ௰௬. ௰௪.

௬ ¶ இந்த வார்த்தைகளையெல்லாம் தீர்க்கதரிசியாகிய எரேமியா எருசலேமிலே யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவோடே சொன்னான்.

௭ அப்போது பாபேலுடைய இராசாவின் சேனை எருசலேமுக்கு விரோதமாகவும், யூதாவினுடைய எல்லாப் பட்டணங்களிலும் மீந்த பட்டணங்களாகிய லாகீசுக்கு விரோதமாகவும், அசெக்காவுக்கு விரோதமாகவும் யுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்; ஏனென்றால், அரணிப்பான பட்டணங்களாகிய இவைகளே யூதாவின் பட்டணங்களில் மீந்திருந்தவைகள்.

௮ ¶ ஒருவனும் யூதசாதியாகிய தன் சகோதரங்களை அடிமைக்கொள்ளாதபடிக்கு, *அவனவன் எபிரேயனாகிய தன் வேலைக்காரனையும், எபிரேய சாதியாகிய தன் வேலைக்காரியையும் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்று அவர்களுக்கு விடுதலையைக் கூற, *௨ மோ. ௨௧. ௨. ௩ மோ. ௨௫. ௩௯—௪௩. ௫ மோ. ௰௫. ௰௨.

௯ இராசாவாகிய சிதேக்கியா எருசலேமில் இருக்கிற எல்லாச் சனத்தோடும் உடம்படிக்கை பண்ணின பிற்பாடு, எரேமியாவுக்குக் கர்த்தராலே வார்த்தை உண்டாயிற்று.

௰ ஏனென்றால், அவனவன் தன் வேலைக்காரனையும் தன் வேலைக்காரியையும் இனி அடிமைக்கொள்ளாதபடிக்கு, தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்று உடம்படிக்கைக்கு உட்பட்ட எல்லாப்

பிரபுக்களும் எல்லாச் சனமும் செவிகொடுத்தார்கள்; செவிகொடுத்து, அவர்களை அனுப்பிவிட்டார்கள்.

௰௧ ஆனால் அதற்குப்பிறகு அவர்கள் மாறுட்டம் பண்ணி, தாங்கள் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிட்ட வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் திரும்ப அழைத்துவந்து, அவர்களை வேலைக்காரரும் வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டார்கள்.

௰௨ ¶ ஆனதுகொண்டு, கர்த்தராலே எரேமியாவுக்கு வார்த்தையுண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௩ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், *ஏழு வருஷங்களின் முடிவிலே நீங்கள், அவனவன் தனக்கு விற்கப்பட்ட எபிரேயசாதியாகிய தன் சகோதரனை அனுப்பிவிடுவீர்களாகவென்றும், அவன் உனக்கு ஆறு வருஷம் அடிமையானபிற்பாடு அவனை உன்னிடத்தில் வைக்காமல் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடு என்றும், *௨ மோ. ௨௧. ௨. ௫ மோ. ௰௫. ௰௨.

௰௪ நாம் உங்கள் பிதாக்களைச் சிறைச்சாலையாகிய எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே அவர்களோடே உடம்படிக்கை பண்ணினோம்; ஆனால், உங்கள் பிதாக்கள் நம்முடைய சொல்லைக் கேளாமலும் தங்கள் செவியைச் சாய்க்காமலும் போனார்கள்.

௰௫ நீங்களோவெனில், இந்நாளிலே மனந்திரும்பி, அவனவன் தனக்கடுத்தவனுக்கு விடுதலையைக் கூறினதிலே நம்முடைய பார்வைக்குச் செம்மையாயிருக்கிறதைச் செய்து, நமது நாமம் தரிப்பிக்கப்பட்ட வீட்டிலே இதற்காக நம்முடைய முகத்துக்குமுன்பாக உடம்படிக்கையைப் பண்ணியிருந்தீர்கள்.

௰௬ ஆனால் நீங்கள் மாறுட்டம்பண்ணி, நமது நாமத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, நீங்கள் அவனவன் விடுதலையாகவும் தன்னிச்சைக்காரராகவும் அனுப்பிவிட்ட தன் வேலைக்காரனையும் தன்வேலைக்காரியையும் திரும்ப அழைத்துவந்து, அவர்களை உங்களுக்கு வேலைக்காரரும் வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டீர்கள்.

௰௭ ¶ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் அவனவன் தன் சகோதரனுக்கும் அவனவன் தனக்கடுத்தவனுக்கும் விடுதலையைக் கூற, நம்முடைய சொல்லைக் கேளாமல் போனீர்களே; இதோ, நாம் உங்களைப் பட்டயத்துக்கும், பெருவாரிக் காய்ச்சலுக்கும், பஞ்சத்துக்கும், விடுகிற விடுதலையை உங்களுக்குக் கூறுகிறோம்; பூமியின் இராச்சியங்களிலெல்லாம் அலைகிறதற்கும் உங்களை ஒப்புக்கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ நமக்குமுன்பாகப் பண்ணின உடம்படிக்கையின் வார்த்தைகளை நிருவாகம்பண்ணாமல், நம்முடைய உடம்படிக்கையை மீறின மனுஷரை நாம், தாங்களிரண்டாக அறுத்து, *துண்டுகளின் நடுவாகக் கடந்துபோன கன்றுக்குட்டியைப்போல் ஆக்குவோம். *௧ மோ. ௰. ௰, ௰௭.

௰௯ கன்றுக்குட்டியினுடைய துண்டுகளின் நடுவே கடந்துபோன யூதாவின் பிரபுக்களையும், எருசலேமின் பிரபுக்களையும், பிரதானிகளையும், ஆசாரியர்களையும், தேசத்தின் சகல சனங்களையுந்தானே.

௨௰ நாம் அவர்களை அவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும், ஒப்புக்கொடுப்போம்; *அவர்களுடைய பிரேதம் ஆகாசத்தின் பறவைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் இரையாம். *எரே. ௭. ௩௩: ௯. ௨௨.

௨௧ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவையும் அவனுடைய பிரபுக்களையும் அவர்கள் சத்துருக்கள் கையிலும், அவர்கள் பிரா

ளை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும், *உங்களைவிட்டுப் போய்த்துபோன பாபேலின் இராசாவினுடைய சேனையின் கையிலும் ஒப்புக்கொடுப்போம். *எரே.௩௭.௫.

௨௨ இதோ, நாம் கட்டளைகொடுத்து, அவர்களை *இந்தப் பட்டணத்துக்குத் திரும்பப்பண்ணுவோம்; அவர்கள் அதற்கு விரோதமாக யுத்தம்பண்ணி, அதைப் பிடித்து, அதை அக்கினியால் சுட்டெரிப்பார்கள்; யூதாவின் பட்டணங்களையோ, ஒருவரும் அவைகளில் குடியிராதபடியாகப் பாழ்த்துப்போகப்பண்ணுவோம் என்று கர்த்தர் உரைக்கிறார் என்று சொல்லென்றார். *எரே. ௩௭. ௮.

## ௩௫. அதிகாரம்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற யூதாவினுடைய இராசாவின் நாள்களில் எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டான வார்த்தையாவது:

௨ நீ இரேகாபியருடைய வீட்டுக்குப் போய், அவர்களோடே பேசி, அவர்களைக் கர்த்தருடைய வீட்டின் அறைகளில் ஒன்றிலே அழைத்துப்போய், அவர்களுக்குத் திராட்சப்பழஇரசம் குடிக்கக்கொடு என்றார்.

௩ ¶ அப்போது நான் கபத்சீனியாவின் குமாரனாகிய எரேமியாவுக்கு மகனான யாசனியாவையும், அவனுடைய சகோதரரையும், அவனுடைய எல்லாக் குமாரரையும், இரேகாபியருடைய வீட்டாரனைவரையும் அழைத்து,

௪ கர்த்தருடைய வீட்டிலே பிரபுக்களுடைய அறையின் அருகேயும், வாசலைக்காக்கிற சல்லூமின் குமாரனாகிய மாசேயாவினுடைய அறையின்மேலுள்ள இக்தலியாவின் குமாரனாகிய ஆனானென்ற பராபரனுடைய மனுஷ புத்திரரின் அறையிலே அவர்களைக் கூட்டிக்கொண்டுபோய்,

௫ திராட்சப்பழ இரசத்தினால் நிறையப்பட்ட சாடிகளையும் பாத்திரங்களையும் இரேகாபியருடைய வீட்டுப் புத்திரரின் முன்னே வைத்து, அவர்களுடனே: திராட்சப்பழஇரசம் குடியுங்களென்றேன்.

௬ ¶ ஆனால், அவர்கள் சொன்னதாவது: நாங்கள் திராட்சப்பழஇரசம் குடிக்கிறதில்லை; ஏனென்றால், நீங்கள் பரதேசிகளாய்த் தங்குகிற சீமையில் நீடிப்பாயிருக்கும்படிக்கு,

எ நீங்களும் உங்கள் பிள்ளைகளும் என்றென்றைக்கும் திராட்சப்பழஇரசம் குடியாமலும், வீட்டைக்கட்டாமலும், விதையை விதைக்காமலும், திராட்சத்தோட்டத்தை நாட்டாமலும் கையாளாமலும், உங்களுடைய எல்லா நாள்களிலும் கூடாரங்களிலே குடியிருப்பீர்களாகவேண்டுமென்று, இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன் யோனதாப்பு எங்களுக்குக் கற்பித்தார்.

௮ அப்படியே எங்களுடைய எல்லா நாள்களிலும் நாங்களும் எங்கள் பெண்சாதிகளும் எங்கள் குமாரரும் எங்கள் குமாரத்திகளும் திராட்சப்பழஇரசம் குடியாமலும்,

௯ நாங்கள் குடியிருக்க வீடுகளைக் கட்டாதபடிக்கு, இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன் யோனதாப்பின் சத்தத்துக்குக் கீழ்ப்படிந்திருக்கிறோம்; எங்களுக்குத் திராட்சத்தோட்டமும் வயலும் விதைப்பாடுமில்லை.

௰ நாங்கள் கூடாரங்களில் குடியிருந்து, எங்கள் தகப்பனாகிய யோனதாப்பு எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம் கீழ்ப்படிந்து செய்துவந்தோம்.

௰௧ ஆனால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தேசத்திலே வந்தேறுகையில், நாம் கல்தேயருடைய இராணுவத்துக்கும் சூரியருடைய இராணுவத்துக்கும் தப்ப எருசலேமுக்குப் போவோம் வாருங்கள் என்று சொன்னோம்; அப்படியே எருசலேமிலே தரித்திருக்கிறோமென்றார்கள்.

௰௨ ¶ அப்போது கர்த்தருடைய வார்த்

ளை எரேமியாவுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௩ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நீ போய், யூதாவின் மனுஷருக்கும் எருசலேமின் குடிகளுக்கும் சொல்லவேண்டியதாவது: நீங்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் புத்தியை ஏற்றுக்கொள்வதில்லையோவென்று கர்த்தர் கேட்கிறார்.

௰௪ திராட்சப்பழஇரசம் குடியாதபடிக்கு, இரேகாபின் குமாரனாகிய யோனதாப்புத் தன் பிள்ளைகளுக்குக் கற்பித்த வார்த்தைகள் நிருவாகம்பண்ணப்பட்டு வருகின்றன; அவர்கள் இந்நாள்மட்டுக்கும் அதைக் குடியாமல், தங்கள் தகப்பனுடைய கற்பனைக்குக் கீழ்ப்படிகிறார்கள்; ஆனால், *நாம் உங்களுக்கு ஏற்கெனவே சொல்லிக்கொண்டேயிருந்தும், நமக்குக் கீழ்ப்படியாதே போனீர்கள். *எரே. ௨௫. ௩: ௩௨. ௩௩.

௰௫ *நீங்கள் அவனவன் தன் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பி, உங்கள் கிரியைகளைச் சீர்ப்படுத்தி, அந்நியதேவர்களைச் சேவிக்கும்படிக்குப் பின்தொடராதிருங்கள்; அப்போது நாம் உங்களுக்கும் உங்கள் பிதாக்களுக்கும் கொடுத்த தேசத்திலே குடியிருப்பீர்களென்று சொல்லி, தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரையெல்லாம் நாம் உங்களண்டைக்கு ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும், †நீங்கள் உங்கள் செவியைச் சாய்க்காமலும் நமக்குக் கீழ்ப்படியாமலும் போனீர்கள்.
*எரே. ௰௮. ௰௧. †எரே. ௭. ௨௬.

௰௬ இப்போதும், இரேகாபின் குமாரனாகிய யோனதாப்பின் பிள்ளைகள் தங்கள் தகப்பன் தங்களுக்குக் கற்பித்த கற்பனையை நிருவாகம்பண்ணிவந்தபடியினாலும், இந்தச் சனம் நமக்குக் கீழ்ப்படியாமல் போனபடியினாலும்,

௰௭ இஸ்ரவேலின் பராபரனும் சேனைகளையுடைய பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, *நாம் அவர்களுடனே சொல்லியும் அவர்கள் கேளாமலும், நாம் அவர்களைநோக்கிக் கூப்பிட்டும் அவர்கள் மறு உத்தரவு கொடாமலும் போனபடியினாலே யூதாவின்மேலும் எருசலேமின் குடிகள் எல்லாரின்மேலும் நாம் அவர்களுக்கு விரோதமாகச் சொன்ன எல்லாத் தீங்கையும் வரப்பண்ணுவோம் என்று சொல்லென்றார். *எரே. ௭. ௰௩, ௰௪. ஏசா. ௬௫. ௰௨: ௬௬. ௪.

௰௮ ¶ இரேகாபியருடைய வீட்டாருக்கோவென்றால், எரேமியா சொன்னதாவது: இஸ்ரவேலின்பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நீங்கள் உங்கள் தகப்பனாகிய யோனதாப்பின் கற்பனைக்குக் கீழ்ப்படிந்து, அவனுடைய கற்பனைகளையெல்லாம் கைக்கொண்டு, அவன் உங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம் செய்துவந்தபடியினாலே,

௰௯ சகல நாள்களிலும் *நமக்குமுன்பாக நிற்கத்தக்க புருஷன் இரேகாபின் குமாரனாகிய யோனதாபுக்கு இல்லாமல் போவதில்லையென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார் என்றான். *எரே. ௩௩. ௰௭.

## ௩௰௬. அதிகாரம்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற யூதாவுடைய இராசாவின் *நாலாம் வருஷத்தில் சம்பவித்ததேதென்றால், கர்த்தராலே எரேமியாவுக்குண்டான வார்த்தையாவது: *எரே. ௨௫. ௧.

௨ ¶ நீ உனக்கு ஒரு புஸ்தகச்சுருளை வாங்கி, நாம் யோசியாவின் நாள்களிலே உன்னுடனே பேசின நாள்முதற்கொண்டு இந்நாள்மட்டும் இஸ்ரவேலைக்குறித்தும், யூதாவைக்குறித்தும், சகல சாதிகளைக்குறித்தும் உன்னோடே சொன்ன எல்லா வார்த்தைகளையும் அதிலே எழுது.

௩ *ஒருவேளை யூதாவின் வீட்டார், அவரவர் தங்கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பும்படியாகவும், நாம் தங்கள் அக்கிரமத்தையும் தங்கள் பாவத்தையும் மன்னிக்கும்படியாகவும், தங்களுக்கு நாம் செய்ய நினைத்திருக்கிற தீங்கையெல்லாம் கேட்பார்களென்றார். *எரே. ௨௬. ௩.

௪ ¶ அப்போது எரேமியா நேரியாவின் குமாரனாகிய *பாருக்கை அழைத்தான்; இந்தப் பாருக்கு என்கிறவன் கர்த்தர் எரேமியாவுடனே சொல்லிவந்த எல்லா வார்த்தைகளையும் அவன் வாய் சொல்ல ஒரு புஸ்தகச்சுருளில் எழுதினான். *எரே. ௩௨. ௧௨.

௫ பிற்பாடு எரேமியா பாருக்குக்குக் கற்பித்துச் சொன்னதாவது: நான் அடைக்கப்பட்டவன்; நான் கர்த்தருடைய வீட்டுக்குள் பிரவேசிக்கக்கூடாது.

௬ நீ உள்ளே பிரவேசித்து, என் வாய் சொல்ல நீ எழுதின சுருளிலே கர்த்தருடைய வீட்டில் உபவாசநாளிலே கர்த்தருடைய வார்த்தையைச் சனங்கள் கேட்க வாசி; தங்கள் பட்டணங்களிலிருந்து வருகிற எல்லா யூதா கோத்திரத்தாரும் கேட்க அவைகளை வாசிப்பாயாக.

௭ ஒருவேளை கர்த்தருடைய முகத்துக்கு முன்பாக அவர்கள் பணிந்து, விண்ணப்பம்பண்ணி, அவரவர் தங்கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்புவார்கள்; ஏனெனில் கர்த்தர் இந்தச் சனத்துக்கு விரோதமாகச் சொன்ன கோபமும் உக்கிரமும் பெரியதென்றான்.

௮ ¶ அப்படியே நேரியாவின் குமாரனாகிய பாருக்கு அந்தப் புஸ்தகத்தில், கர்த்தருடைய வீட்டில் கர்த்தருடைய வார்த்தைகளை வாசிக்கும்படிக்கு எரேமியா தீர்க்கதரிசி தனக்குக் கற்பித்தபடியெல்லாம் செய்தான்.

௯ யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற யூதாவினுடைய இராசாவின் ஐந்தாம் வருஷத்து ஒன்பதாம்மாதத்திலே சம்பவித்ததேதெனில், எருசலேமிலிருக்கிற எல்லாச் சனத்துக்கும், யூதாவுடைய பட்டணங்களிலிருந்து எருசலேமுக்கு வருகிற எல்லாச் சனத்துக்கும், கர்த்தருக்கு முன்பாக ஒரு உபவாசத்தைக் கூறினார்கள்.

௧௦ அப்பொழுது பாருக்கு கர்த்தருடைய வீட்டின் மேல்முற்றத்தில், கர்த்தருடைய வீட்டுப் புதுவாசலின் நடைக்கருகான சாப்பானுடைய குமாரனாகிய கேமரியாவென்ற சம்பிரதியின் அறையிலே, அந்தப் புஸ்தகத்தில் எரேமியாவின் வார்த்தைகளை எல்லாச் சனமும் கேட்க வாசித்தான்.

௧௧ ¶ சாப்பானுடைய குமாரனாகிய கேமரியாவின் மகன் மிகாயா கர்த்தருடைய வார்த்தைகளையெல்லாம் அந்தப் புஸ்தகத்தில் வாசிக்கக் கேட்கும்போது,

௧௨ அவன் இராசாவின் வீட்டுக்குச் சம்பிரதியின் அறையில் இறங்கிப்போனான்; இதோ, அங்கே எல்லாப் பிரபுக்களும் உட்கார்ந்திருந்தார்கள்; சம்பிரதியாகிய எலிசாமாவும், சேமாயாவின் குமாரனாகிய தெலாயாவும், அக்போரின் குமாரனாகிய எல்நாத்தானும், சாப்பானின் குமாரனாகிய கேமரியாவும், அனனியாவின் குமாரனாகிய சிதேக்கியாவும், மற்ற எல்லாப் பிரபுக்களுந்தானே.

௧௩ பாருக்கு சனத்தின் செவிகளில்படப் புஸ்தகத்திலே வாசிக்கையில், தான் கேட்ட எல்லா வார்த்தைகளையும் மிகாயா அவர்களுக்கு அறிவித்தான்.

௧௪ ¶ அப்போது எல்லாப் பிரபுக்களும் கூஷியின் குமாரனாகிய சேலேமியாவின் மகனை நேத்தானியாவினுடைய குமாரனாயிருக்கிற எகூதியைப் பாருக்கண்டைக்கனுப்பி, சனம் கேட்க நீ வாசித்துக்கொண்டிருந்த சுருளை உன் கையில் எடுத்துக்கொண்டுவாவென்று சொல்லச்சொன்னார்கள்; ஆகையால், நேரியாவின் குமாரனாகிய பாருக்கு சுருளைத் தன் கையிலெடுத்துக்

கொண்டு, அவர்களண்டைக்கு வந்தான்.
௰௫ அவர்கள் அவனுடனே, நீ உளுக்கார்ந்துகொண்டு, நாங்கள் கேட்க வாசியென்றார்கள்; அவர்கள் கேட்க வாசித்தான்.
௰௬ அப்போது சம்பவித்ததேதென்றால், அவர்கள் எல்லா வார்த்தைகளையும் கேட்கையில் ஒருவனொருவர் பயமுற்றவர்களாய்ப் பார்த்து, பாருக்குடனே: இந்த எல்லா வார்த்தைகளையும் இராசாவுக்கு அறிவிக்கவே அறிவிப்போம் என்றார்கள்.
௰௭ நீ அவர் வாய்சொல்ல, இந்த வார்த்தைகளையெல்லாம் எந்தப்பிரகாரமாய் எழுதினாயென்கிறதை எங்களுக்கு அறிவி என்று பாருக்கைக் கேட்டார்கள்.
௰௮ பாருக்கு அவர்களுடனே: தமது வாயினாலே இந்த எல்லா வார்த்தைகளையும் உரைத்து, என்னுடனே சொன்னார்; நான் மையினாலே புஸ்தகத்திலெழுதினேன் என்றான்.
௰௯ அப்போது பிரபுக்கள் பாருக்குடனே, நீ போய், ஒளித்துக்கொள்; நீயும் எரேமியாவுந்தானே; நீங்கள் எங்கே இருக்கிறீர்களென்று ஒருவரும் அறியாதிருப்பதாக என்று சொல்லி,
௨௰ ¶ சுருளைச் சம்பிரதியாகிய எலிசாமாவின் அறையிலே வைத்து, இராசாவண்டைக்கு அரமனையிலே போய், இராசாவின் செவிகளுக்கு இந்த வார்த்தைகளை எல்லாம் அறிவித்தார்கள்.
௨௧ அப்போது இராசா அந்தச் சுருளை எடுத்துக்கொண்டுவர எகூதியை அனுப்பினான்; எகூதி அதைச் சம்பிரதியாகிய எலிசாமாவின் அறையிலிருந்து எடுத்துக்கொண்டுவந்து, இராசா கேட்கவும், இராசாவண்டையில் நின்ற எல்லாப் பிரபுக்களும் கேட்கவும் வாசித்தான்.
௨௨ ஒன்பதாம் மாதமாகிய அப்போது இராசா, குளிர்காலத்துக்கு இருக்கும் வீட்டில் உளுக்கார்ந்திருந்தான்; அவனுக்குமுன்பாகக் கணப்பு எரிகிறதாயிருந்தது.
௨௩ சம்பவித்ததேதென்றால், எகூதி மூன்று நாலு பத்திகளை வாசித்தபிற்பாடு அவன் ஒரு கணக்கன் கத்தியினால் அதை அறுத்து, சுருளனைத்தும் கணப்பிலுள்ள அக்கினியினாலே வெந்து தீருமளவும், கணப்பிலிருந்த அக்கினியில் எறிந்துபோட்டான்.
௨௪ இராசாவானாலும், அந்த வார்த்தைகளையெல்லாம் கேட்ட அவனுடைய சகல ஊழியக்காரரானாலும் பயப்பட்டதுமில்லை; தங்கள் வஸ்திரங்களைக் கிழித்ததுமில்லை.
௨௫ எல்நாத்தானும், தேலாயாவும், கேமரியாவுமோவெனில், அந்தச் சுருளைச் சுட்டெரிக்காதபடிக்கு இராசாவுக்கு விண்ணப்பம்பண்ணினார்கள்; ஆகிலும், அவர்களுக்குக் கேள்விகொடாமல்,
௨௬ பாருக்கு என்ற கணக்கனையும் எரேமியா தீர்க்கதரிசியையும் பிடிக்கும்படிக்கு, இராசாவும், மேலேகின் குமாரனாகிய எராமேயேலுக்கும், அஸ்ரியேலின் குமாரனாகிய செராயாவுக்கும், அப்தேயேலின்குமாரனாகிய சேலேமியாவுக்கும் கட்டளைகொடுத்தான்; ஆனால் கர்த்தர் அவர்களை மறைத்தார்.
௨௭ ¶ இராசா அந்தச் சுருளையும், அதிலே பாருக்கு எரேமியாவின் வாய் சொல்ல, எழுதியிருந்த வார்த்தைகளையும் சுட்டெரித்தபிற்பாடு, எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது:
௨௮ நீ திரும்ப வேறொரு சுருளை உனக்கு வாங்கி, யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் சுட்டெரித்த முதலாம் சுருளிலிருந்த முந்தின வார்த்தைகளையெல்லாம் அதிலே எழுது.
௨௯ யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமுக்கோ நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறதேதெனில், பாபேலின் இராசா வரவே வருவானென்கிறதையும், அவன் இந்தத் தேசத்தை அழித்து அதிலிருந்து மனுஷரையும் மிருகங்களையும் ஒழியப்பண்ணுவான் என்கிறதையும் நீ அதில் எழுதின

தேதென்று சொல்லி, அந்தச் சுருளை நீ சுட்டெரித்தாய்.

௩௰ ¶ ஆகையால் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறதாவது: தாவீதுடைய இராசாசனத்தின்மேல் உட்காருபவன் அவனுக்கில்லை; *அவனுடைய பிரேதமோவெனில், பகலின் உஷ்ணத்துக்கும் இராவின் குளிருக்கும் ஏதுவாக எறிந்துவிடப்பட்டுக் கிடக்கும்.
*எரே. ௨௨. ௰௯.

௩௧ நாம் அவனிடத்திலும், அவனுடைய வித்தினிடத்திலும், அவனுடைய பிரபுக்களிடத்திலும் அவர்கள் அக்கிரமத்தை விசாரித்து, அவன்மேலும், எருசலேமுடைய குடிகளின்மேலும், யூதாவுடைய மனுஷர்மேலும், நாம் அவர்களுக்குச் சொன்னதும் அவர்கள் கேளாதேபோனதுமான *தீங்கனைத்தையும் வரப்பண்ணுவோம் என்று உரைத்தாரென்று சொல்லென்றார்.
*எரே. ௩௫. ௰௭.

௩௨ ¶ அப்போது எரேமியா வேறொரு சுருளை வாங்கி, அதை நேரியாவின் குமாரனாகிய பாருக்கு என்ற கணக்கனுக்குக் கொடுத்தான்; இவன் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அக்கினியால்சுட்டெரித்த புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம், அதிலே எரேமியாவின் வாய்சொல்ல எழுதினான்; இன்னம் அவைகளுக்கொத்த அநேகம் வார்த்தைகளும் அவைகளோடே சேர்க்கப்பட்டன.

## ௩௭. அதிகாரம்.

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் யோயாக்கீமுடைய குமாரனாகிய கோனியாவின் பட்டத்தில் யூதாதேசத்தில் இராசாவாக வைத்த யோசியாவின் குமாரனாகிய சிதேக்கியா அரசாண்டான்.

௨ ஆனால் கர்த்தர் எரேமியா தீர்க்கதரிசியைக்கொண்டு சொன்ன வார்த்தைகளை அவனாகிலும், அவனுடைய ஊழியக்காரராகிலும், தேசத்தின் சனமாகிலும் கேட்டதில்லை.

௩ ¶ *சிதேக்கியா இராசாவோவெனில், செலேமியாவின் குமாரனாகிய யூகாலையும், மாசேயாவின் குமாரனாகிய செப்பனியா என்ற ஆசாரியனையும் எரேமியா தீர்க்கதரிசியண்டைக்கனுப்பி: நீ நம்முடைய பராபரனாகிய கர்த்தரை நோக்கி, எங்களுக்காக விண்ணப்பம்பண்ணுமே என்று சொல்லச் சொன்னான். *எரே. ௪௨. ௨௰, ௩.

௪ அப்போது எரேமியா சனத்தின் நடுவே வரத்தும் போக்குமாயிருந்தான்; அவனை அவர்கள் காவல்வீட்டில் இன்னம் போட்டதில்லை.

௫ பார்வோனின் சேனையோவென்றால், எகிப்திலிருந்து புறப்பட்டது; எருசலேமை முற்றிக்கைபோட்ட கல்தேயர் அவர்களுடைய செய்தியைக் கேட்டு, எருசலேமை விட்டு எழும்பிப்போனார்கள்.

௬ ¶ அப்போது எரேமியா தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி, அவர் சொன்னதாவது:

௭ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நம்மைக் கேட்கும்படிக்கு உங்களை நம்மண்டைக்கனுப்பின யூதாவின் இராசாவுக்கு நீங்கள் சொல்ல வேண்டியதாவது: இதோ, உங்களுக்கு ஒத்தாசையாகப் புறப்பட்ட பார்வோனின் சேனை தன் தேசமாகிய எகிப்துக்குத் திரும்பிப்போகும்.

௮ கல்தேயரோவென்றால், திரும்பிவந்து இந்தப் பட்டணத்துக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி, அதைப்பிடித்து, அதை அக்கினியால் சுட்டெரிப்பார்கள்.

௯ கல்தேயர் நம்மைவிட்டுப் போகவே போவார்களென்று சொல்லி, உங்கள் ஆத்துமாக்களை மோசம்போக்காதிருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனென்றால், அவர்கள் போவதில்லை.

௰ உங்களோடே யுத்தம்பண்ணுகிற கல்

தேயருடைய சேனையையெல்லாம் நீங்கள் வெட்டி, குத்துக்காயம்பட்ட மனுஷர்மாத்திரம் அவர்களில் மீதியாயிருந்தாலும், இவர்களில் அவரவர் தங்கள் கூடாரங்களில் எழும்பி, இந்தப் பட்டணத்தை அக்கினியால் சுட்டெரிப்பார்களென்று சொல்லுங்கள் என்றார்.

௰௧ ¶ பார்வோனின் சேனை வருகிறதென்று, கல்தேயருடைய சேனை எருசலேமைவிட்டு எழும்பிப்போனபோது,

௰௨ எரேமியா அவ்விடத்தைவிட்டு, சனத்தின் நடுவிலே சாடையாய் விலகி, பென்யமீன் தேசத்துக்குப் போக மனதாய் எருசலேமிலிருந்து புறப்படப் போனான்.

௰௩ அவன் பென்யமீன் வாசலில் வந்தபோதோவெனில், காவல் சேர்வையின் அதிபதியாகிய எரியாவென்ற நாமமுள்ள ஒருவன் அங்கே இருந்தான்; அவன் அனனியாவின் குமாரனாகிய சேலேமியாவின் மகன்: அவன், நீ கல்தேயர் வசமாகப்போகிறவன் என்று சொல்லி, எரேமியா தீர்க்கதரிசியைப் பிடித்தான்.

௰௪ அப்போது எரேமியா: இது பொய், நான் கல்தேயர்வசமாகப் போகிறவனல்லவென்றான்; ஆனால் எரியா இவனுடைய சொல்லைக்கேளாமல், எரேமியாவைப் பிடித்து, அவனைப் பிரபுக்களண்டைக்குக் கொண்டுபோனான்.

௰௫ அப்போது பிரபுக்கள் எரேமியாவின் பேரில் கடுங்கோபம் அடைந்து, *அவனை அடித்து, அவனைச் சம்பிரதியாகிய யோனத்தானுடைய வீட்டில் காவல்வைத்தார்கள்; ஏனெனில் அதை அவர்கள் காவல்வீடாக்கினார்கள். *௨௰. வ௪.

௰௬ ¶ அப்படியே எரேமியா கெபியாயிருக்கிற வீட்டிலும் நிலவறைகளிலும் பிரவேசித்தான்; அங்கே எரேமியா அநேக நாள் இருந்தான்.

௰௭ பிறகு சிதேக்கியா இராசா அவனை அழைத்தனுப்பி: கர்த்தராலே ஒரு வார்த்தை உண்டோவென்று இராசா அவனைத் தன் வீட்டிலே இரகசியமாய்க் கேட்டான்: அதற்கு எரேமியா: உண்டு; பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவீரென்று சொன்னான்.

௰௮ பின்னையும் எரேமியா, சிதேக்கியா இராசாவுடனே சொன்னதாவது: நீங்கள் என்னைக் காவல்வீட்டிலே அடைத்ததற்கு, நான் உமக்கும் உம்முடைய ஊழியக்காரருக்கும் இந்தச் சனத்துக்கும் விரோதமாக என்ன பாவஞ்செய்தேன்?

௰௯ பாபேலின் இராசா உங்களுக்கும் இந்தத் தேசத்துக்கும் விரோதமாக வருவதில்லையென்று உங்களுக்குத் தீர்க்கதரிசனம் சொன்ன உங்களுடைய தீர்க்கதரிசிகள் எங்கே?

௨௰ இப்போதும் இராசாவாகிய என் ஆண்டவனே, கேளுமே; நான் சம்பிரதியாகிய யோனத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு, அங்கே என்னைத் திரும்ப அனுப்பாதிரும் என்கிற என்னுடைய விண்ணப்பத்துக்கு உமக்குமுன்பாக இடமுண்டாகக்கடவதென்றான்.

௨௧ அப்போது எரேமியாவைக் *காவற்சாலையின் முற்றத்திலே காக்கவும், பட்டணத்திலே அப்பமெல்லாம் சரிப்போகிற நாள்மட்டும் தினம் அப்பஞ்சுடுகிறவர்களின் வீதியிலே ஒரு அப்பத்தை அவனுக்கு வாங்கிக்கொடுக்கவும் கட்டளையிட்டான்; அப்படியே எரேமியா காவற்சாலையின் முற்றத்திலிருந்தான். *எரே. ௩௨. ௨.

## ௩௰௮. அதிகாரம்.

ஆனால், *இந்தப் பட்டணத்திலே தரித்திருக்கிறவன், பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் சாவான்; கல்தேயரண்டைக்குப் புறப்பட்டுப்போகிறவனோ உயிரோடிருப்பான்; அவனுடைய பிராணன் அவனுக்குக் கிடைத்த கொள்ளையுடைமையைப்போலிருக்கும்;

அவன் பிழைப்பானென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்றும், *எரே. ௨௧. ௯.

௨ ¶ இந்தப் பட்டணம் பாபேலின் இராசாவினுடைய இராணுவத்தின் கையில்கொடுக்கவே கொடுக்கப்படும்; அவன் அதைப் பிடிப்பானென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்றும்,

௩ எரேமியா எல்லாச் சனத்தோடும் சொல்லிக்கொண்டிருக்கும் வார்த்தைகளை மாத்தானின் குமாரனாகிய செப்பத்தியாவும், பஸ்கூரின் குமாரனாகிய கேதலியாவும், சேலேமியாவின் குமாரனாகிய யூகாலும், மல்கியாவின் குமாரனாகிய பஸ்கூரும் கேட்டார்கள்.

௪ அப்போது பிரபுக்கள் இராசாவோடே சொன்னதாவது: இந்த மனுஷன் கொல்லப்படட்டுமே; அதேனென்றால், இந்தப் பட்டணத்தில் மீதியாயிருக்கிற யுத்தமனுஷரின் கைகளையும் இவன் இப்படிக்கொத்த வார்த்தைகளை அவர்களுடனே சொல்லுகிறதினாலே தளர்ந்துபோகப்பண்ணுகிறான்; ஏனெனில், இந்த மனுஷன் இந்தச் சனத்தின் சுகவாழ்வுக்கானதையல்ல, அதின் பொல்லாப்புக்கானதையே தேடுகிறானென்றார்கள்.

௫ அப்போது சிதேக்கியா இராசா: இதோ, அவன் உங்கள் கைகளில் இருக்கிறான்; ஏனெனில் உங்களுக்கு விரோதமாய் இராசா ஒன்றும் செய்யமாட்டாரென்றான்.

௬ அப்போது அவர்கள் எரேமியாவைப் பிடித்து, அவனைக் காவற்சாலையின் முற்றத்திலிருந்த அம்மேலேகின் குமாரனாகிய மல்கியாவினுடைய துரவிலே போட்டார்கள்; அங்கே எரேமியாவைக் கயிறுகளின் எத்தனமாய் இறக்கிவிட்டார்கள்; ஆனால் துரவிலே *தண்ணீர் இராமல் உளையாயிருந்தது; அந்த உளையிலே எரேமியா அமிழ்ந்தினான். *எரே. ௩௭. ௰௬. ௧ மோ. ௩௭. ௨௪.

௭ ¶ ஆனால் அவர்கள் எரேமியாவைத் துரவிலே போட்டதை இராசாவின் வீட்டில் இருந்த *எத்தியோப்பியனாகிய எபெத்மேலேக்கென்ற ஒரு பிரதானி கேட்டான்; இராசாவோவென்றால், பென்யமீன் வாசலிலே உட்கார்ந்திருந்தான். *எரே. ௩௯. ௰௬.

௮ அப்போது எபெத்மேலேக்கு இராசாவின் வீட்டிலிருந்து புறப்பட்டு இராசாவுடனே பேசிச் சொன்னதாவது:

௯ இராசாவாகிய என் ஆண்டவனே, இந்தப் புருஷர் எரேமியா தீர்க்கதரிசியைத் துரவிலே போட்டு, நடப்பித்தவிதமெல்லாம் பொல்லாத செயலாயிருக்கிறது; அவன் இருந்த இடத்திலேதானே பஞ்சத்தினால் சாவானே; ஏனெனில், இனிப் பட்டணத்திலே அப்பமில்லையென்றான்.

௰ அப்போது இராசா எபெத்மேலேக்கென்ற எத்தியோப்பியனுக்கு: நீ இவ்விடத்திலே முப்பதுமனுஷரை உன்னுடனே கூட்டிக்கொண்டுபோய், எரேமியா தீர்க்கதரிசி சாகாததற்குமுன்னே அவனைத் துரவிலிருந்து தூக்கிவிடு என்று கற்பித்தான்.

௰௧ அப்போது எபெத்மேலேக்கு அந்த மனுஷரைத் தன்னுடனே கூட்டிக்கொண்டு, இராசாவின் வீட்டில் பொக்கிஷசாலையின்கீழிருந்த ஸ்தலத்திலே போய், பீய்ந்த பழம்புடவைகளையும் தேய்ந்த பழம்புடவைகளையும் அங்கே எடுத்துக்கொண்டுபோய், அவைகளைக் கயிறுகளில் எரேமியாவண்டைக்குத் துரவில் இறக்கிவிட்டு,

௰௨ எபெத்மேலேக்கென்ற எத்தியோப்பியன் எரேமியாவுடனே: பீய்ந்ததும் தேய்ந்ததுமான இந்தப் பழம்புடவைகளை உம்முடைய அக்குள்களில் கயிறுகளுக்குள்ப்புறமாகப் போட்டுக்கொள்ளுமேயென்றான்; எரேமியா அந்தப்பிரகாரமாகச் செய்தான்.

௰௩ அப்போது எரேமியாவைக் கயிறுகளாலே தூக்கி, அவனைத் துரவிலிருந்து எடுத்துவிட்டார்கள்; அப்படியே எரேமியா காவற்சாலையின் முற்றத்தில் இருந்தான்.

௰௪ ¶ பிறகு சிதேக்கியா இராசா, எரே

மியா தீர்க்கதரிசியைக் கர்த்தருடைய வீட்டில் இருக்கும் மூன்றும் நடையிலே தன்னண்டைக்கு வரவழைப்பித்தான்; அங்கே இராசா, எரேமியாவுடனே: நான் உன்னை ஒரு காரியத்தைக் கேட்கிறேன்; நீ எனக்கு ஒன்றும் மறைக்கவேண்டாமென்றான்.

௰௫ ¶ அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனே: நான் அதை உமக்கு அறிவித்தால் என்னைக் கொல்லவே கொல்லுவீரல்லவோ? நான் உமக்கு ஒரு ஆலோசனையைச் சொன்னாலும், என் சொல்லைக் கேளாதிருப்பீரென்றான்.

௰௬ ¶ அப்பொழுது சிதேக்கியா இராசா: நான் உன்னைக் கொல்லாமலும், நான் உன் பிராணனை வாங்கத்தேடுகிற *இந்த மனுஷர் கையில் உன்னை ஒப்புக்கொடாமலும் இருப்பேன் என்கிறதை, நமக்கு இந்த ஆத்துமாவை உண்டுபண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்று எரேமியாவுக்கு இரகசியமாய் ஆணையிட்டான். *எரே. ௪. ௫.

௰௭ ¶ அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனே சொன்னதாவது: நீர் பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டைக்குப் புறப்படவே புறப்பட்டால், உம்முடைய ஆத்துமா உயிரோடிருக்கும்; இந்தப் பட்டணம் அக்கினியால் சுட்டெரிக்கப்படுவதுமில்லை; நீரும் உம்முடைய வீட்டாரும் உயிரோடும் இருப்பீர்கள்.

௰௮ நீர் பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டைக்குப் புறப்படாதிருந்தீரேயாகில், அப்பொழுது *இந்தப் பட்டணம் கல்தேயர் கையில் கொடுக்கப்படும்; அவர்கள் அதை அக்கினியாலே சுட்டெரிப்பார்கள்; நீர் அவர்களுக்குத் தப்பிப்போவதுமில்லை என்கிறதை இஸ்ரவேலின் பராபரனும் சேனைகளுடைய பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறார் என்றான். *எரே. ௩௪. ௨௩.

௰௯ ¶ அப்பொழுது சிதேக்கியா இராசா எரேமியாவுடனே: கல்தேயர் என்னைத் தங்கள் வசமாய் வந்துவிட்ட யூதரின் கையிலே, என்னைப் பரியாசம்பண்ண ஒப்புக்கொடுப்பார்களோவென்று நான் ஐயப்பட்டிருக்கிறேன் என்றான்.

௨௰ ¶ எரேமியா சொன்னதாவது: உம்மை ஒப்புக்கொடார்கள்; நான் உம்மோடே பேசுகிற *கர்த்தருடைய சத்தத்துக்குக் கேள்விகொடுமே; அப்பொழுது உமக்கு நன்றாயிருக்கும்; அப்பொழுது உம்முடைய ஆத்துமா உயிரோடிருக்கும். *௨ நாளா. ௩௧. ௰௨.

௨௧ நான் புறப்படுகிறதில்லை என்றீரேயாகில், கர்த்தர் எனக்குத் தெரியப்படுத்தின வார்த்தையாவது:

௨௨ இதோ, யூதாவுடைய இராசாவின் வீட்டிலே மீதியான எல்லா ஸ்திரிகளும் வெளியே பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டையில் கொண்டுபோகப்படுவார்கள்; இதோ, அவர்கள்தானே உமக்கு இராசியான மனுஷர்; உம்மைப் பயிற்றுவித்து, உம்மை மேற்கொண்டார்கள் என்றும், உம்முடைய கால்கள் உளையிலே அமிழ்ந்தின பிற்பாடு அவர்கள் பின்வாங்கிப்போனார்கள் என்றும் சொல்லுவார்கள்.

௨௩ உம்முடைய எல்லா ஸ்திரிகளையும், உம்முடைய பிள்ளைகளையும் வெளியே கல்தேயரண்டையில் கொண்டுபோவார்கள்; நீரும் அவர்கள் கைக்குத் தப்பிப்போகாமல் *பாபேலுடைய இராசாவின் கையிலே பிடிக்கப்பட்டு, இந்தப் பட்டணம் அக்கினியால் சுட்டெரிக்கப்படக் காரணராய் இருப்பீர் என்பதுதான் என்றான். *எரே. ௩௨. ௪.

௨௪ ¶ அப்பொழுது சிதேக்கியா எரேமியாவுடனே சொன்னதாவது: இந்த வார்த்தைகளை ஒருவரும் அறியாதிருக்கக்கடவது; அப்பொழுது நீ சாகப்போகிறதில்லை.

௨௫ நான் உன்னோடே பேசினேன் என்று பிரபுக்கள் கேட்டு, உன்னண்டைக்கு வந்து: நீ இராசாவோடே பேசிக்கொண்டதை எங்களுக்கு அறிவி; எங்களுக்கு ஒன்றும்

மறைக்காதிரு; அப்போது உன்னைக் கொல்லாதிருப்போம்; இராசா உன்னோடே என்ன பேசினார் என்று உன்னைக் கேட்டார்களேயாகில்,

௨௬ *நான் யோனத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு, இராசா என்னை அங்கே திரும்ப அனுப்பவேண்டாம் என்று, அவர் முகத்துக்குமுன்பாக விண்ணப்பம்பண்ணினேன் என்று சொல்வாயாக என்றான்.
*எரே. ௩௭. ௨௰.

௨௭ ¶ பிறகு எல்லாப் பிரபுக்களும், எரேமியாவண்டைக்கு வந்து, அவனைக் கேட்டார்கள்; அப்போது அவன், இராசா கற்பித்த இந்த எல்லா வார்த்தைகளுக்குந்தக்கதாய் அவர்களுக்கு அறிவித்தான்; ஆனதுகொண்டு, காரியம் கேள்விப்படாதேபோனபடியினாலே அவனைவிட்டுச் சும்மா இருந்தார்கள்.

௨௮ அப்படியே எரேமியா, எருசலேம் பிடிபடுகிற நாள்மட்டாக *காவற்சாலையின் முற்றத்தில் இருந்தான்; எருசலேம் பிடிபட்டுப்போனபோதும் அங்கேதான் இருந்தான். *எரே. ௩௭. ௨௧.

## ௩௯. அதிகாரம்.

யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட *ஒன்பதாம்வருஷம் பத்தாம்மாதத்திலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரும், அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து, அதை முற்றிக்கைபோட்டார்கள்.
*எரே. ௫௨. ௪. ௨ இரா. ௨௫. ௧. ௨ நாளா. ௩௬. ௰௭.

௨ சிதேக்கியா அரசாண்ட பதினோராம்வருஷம் நாலாம்மாதம், ஒன்பதாந்தேதியிலே பட்டணத்து மதில் திறப்பாயிற்று.

௩ அப்போது பாபேலுடைய இராசாவின் எல்லாப் பிரபுக்களாகிய நேர்கல்சரேத்சேர், சன்கார்நேபு, சர்சேகிம், ரப்சாரீஸ், நேர்கல்சரேத்சேர், ராப்மாக்கு என்றவர்களும், பாபேலின் இராசாவினுடைய மற்ற எல்லாப் பிரபுக்களும் உட்பிரவேசித்து, நடுமையவாசலிலே தரிகொண்டார்கள்.

௪ ¶ அப்போது சம்பவித்ததேதென்றால், யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவும் சகல யுத்தமனுஷரும் அவர்களைக் கண்டபோது, *ஓடி, இராத்திரிகாலத்தில் இராசாவுடைய தோட்டத்துவழியே, இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலால் பட்டணத்திலிருந்து புறப்பட்டுப்போனார்கள்; அவன் வயல்வெளியின் வழியே போய்விட்டான். *எசே. ௰௨. ௰௨.

௫ ஆனால், கல்தேயருடைய இராணுவம் அவர்களைப் பின்தொடர்ந்து, எரிகோவின் வயல்வெளிகளில் சிதேக்கியாவைக் கிட்டி, அவனைப் பிடித்து, அவனைக் காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்கு, பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரண்டையிலே போயேறப்பண்ணினார்கள்; இவன் அவன்மேல் சமரும் ஆக்கினைகளை அங்கே சொன்னான்.

௬ பிறகு பாபேலின் இராசா ரிப்லாவிலே, சிதேக்கியாவின் பிள்ளைகளை அவன் கண்களுக்குமுன்பாக வெட்டுவித்தான்; யூதாவில் மேன்குலத்தார் அனைவரையும் பாபேலின் இராசா வெட்டி,

௭ *சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோக அவனுக்கு இரண்டு வெண்கல விலங்குகளைப் போடுவித்தான். *எசே. ௰௨. ௰௩.

௮ இராசாவின் வீட்டையும் சனத்தின் வீடுகளையும் கல்தேயர் அக்கினியால் சுட்டெரித்து, எருசலேமின் மதில்களை இடித்துப் போட்டார்கள்.

௯ ¶ பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், தன் வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும், மீதியான மற்றச் சனத்தையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசராதான் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோனான்.

௰ ஒன்றுமில்லாத நீசமான சனத்திலோவென்றால், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் சிலரை யூதேயாதேசத்திலே வைத்து, அவர்களுக்கு அந்நாளிலே திராட்சத்தோட்டங்களையும் வயல்களையும் கொடுத்தான்.

௰௧ ¶ ஆனால் எரேமியாவைக்குறித்து, பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானுக்கு:

௰௨ நீ அவனை அழைத்து, உன் கண்களை அவன்மேல் வைத்து *அவனுக்கு ஒரு பொல்லாப்பையும் செய்யாமல், அவன் உன்னோடே சொல்லும்படியெல்லாம் அவனை நடத்தென்று கற்பித்திருந்தான்.

*சங். ௱௫. ௰௫.

௰௩ அப்படியே தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானும், நேபூசஸ்பான், ரப்சாரிஸ், நேர்கல்சரேத்சேர், ராப்மாச்கு என்றவர்களும், பாபேலுடைய இராசாவின் எல்லாப் பிரபுக்களும்,

௰௪ எரேமியாவைக் காவல்ச்சாலையின் முற்றத்திலிருந்து வரவழைப்பித்து, அவனை வெளியே வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகும்படிக்கு அவனைச் சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவுக்கு ஒப்புவித்தார்கள்; அப்படியே அவன் சனத்துக்குள்ளே தங்கியிருந்தான்.

௰௫ ¶ இதுவுமல்லாமல், எரேமியா இன்னம் காவல்ச்சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருக்கையில் அவனுக்கு உண்டான கர்த்தருடைய வசனமாவது:

௰௬ நீ போய், *எத்தியோப்பியனாகிய எபெத்மேலேகுக்குச் சொல்லவேண்டியதேதெனில், இதோ, நம்முடைய வார்த்தைகளை இந்தப் பட்டணத்தின்மேல் நன்மையாக அல்ல, தீமையாகவே வரப்பண்ணுவோம்; அவைகள் அந்நாளிலே உன் கண்களுக்குமுன்பாக நிறைவேறும் என்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௩௮. ௭.

௰௭ ஆனால் அந்நாளிலே உன்னைத் தப்புவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்; நீ பயப்படுகிற மனுஷரின் கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை.

௰௮ உன்னை விடுவிக்கவே விடுவிப்போம்; நீ பட்டையத்துக்கு எதுவாவதில்லை; நீ நம்மை நம்பினபடியினாலே உன் பிராணன் உனக்குக் கிடைத்த கொள்ளையுடைமையைப்போல இருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்பதுதானே.

## ௪௰. அதிகாரம்.

தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் எரேமியாவை அழைப்பித்து, அவனை இராமாவிலிருந்து விடுதலையாய் அனுப்பினபிற்பாடு இவனுக்குக் கர்த்தரால் உண்டான வசனம்; ஏனெனில், பாபேலுக்குக் கொண்டுபோகப்பட எருசலேமிலும் யூதாவிலும் சிறைகளாய்ப் பிடித்துவைக்கப்பட்ட அனைவரின் நடுவிலே இவனும் சங்கிலிகளால் கட்டுண்டிருந்தான்.

௨ ¶ ஆனால் தலையாரிகளின் அதிபதி எரேமியாவை அழைப்பித்து, அவனுடனே சொன்னதாவது: உன் பராபரனாகிய கர்த்தர் இந்த ஸ்தலத்துக்கு இந்தத் தீங்குவருமென்று சொல்லியிருந்தார்.

௩ தாம் சொன்னபடியும் கர்த்தர் வரப்பண்ணியிருக்கிறார்; ஏனெனில், *நீங்கள் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து, அவருடைய சத்தத்துக்குச் செவிகொடாதே போனீர்கள்; ஆகையால் உங்களுக்கு இந்தக் காரியம் வந்தது. *எரே. ௫௰. ௭.

௪ இப்போதும், இதோ, உன் கைகளில் கட்டியிருந்த சங்கிலிகளை இன்று வாங்கிவிட்டேன்; என்னோடேகூடப் பாபேலுக்கு வர உனக்கு நன்றாய்க் கண்டால் வா, என் கண்களை உன்மேல் வைப்பேன்; என்னோடேகூடப் பாபேலுக்கு வர உனக்கு வித

னமாய்க் கண்டதேயாகில், இருக்கட்டும்; இதோ, தேசமெல்லாம் உனக்குமுன்பாக இருக்கிறது; எவ்விடத்துக்குப் போக உனக்கு நன்றும் செவ்வையுமாய்க் காண்கிறதோ அவ்விடத்துக்குப் போ.

௫ அவ்விடம் இன்னம் சீர்திருந்தாதிருந்ததாகில், நீ பாபேலின் இராசா யூதாவுடைய பட்டணங்களின்மேல் அதிகாரியாகவைத்த *சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கேதலியாவண்டைக்குத் திருப்பிக்கொண்டு, அவனோடே சனத்தின் நடுவிலே தங்கியிரு; அல்லவென்று, எவ்விடத்துக்குப் போக உனக்குச் செம்மையாய்க் காண்கிறதோ, அவ்விடத்துக்குப் போவென்று சொல்லி, தலையாரிகளின் அதிபதி அவனுக்கு வழிச்செலவையும் காணிக்கையையும் கொடுத்து, அவனை அனுப்பிவிட்டான். *எரே. ௩௯. ௰௪.

௬ ¶ அப்படியே எரேமியா மிஸ்பாவுக்கு அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவண்டையிலே வந்து, அவனோடே தேசத்தில் மீதியான சனத்தின் நடுவில் தங்கியிருந்தான்.

௭ ¶ பாபேலின் இராசா அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவைத் தேசத்தின் மேல் அதிகாரியாக்கினான் என்றும், புருஷரையும் ஸ்திரிகளையும் குழந்தைகளையும் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகப்பட்டிராத நீசமான தேசத்தாரையும் அவனுடைய விசாரிப்புக்கு ஒப்புவித்தான் என்றும், வெளியிலிருக்கிற இராணுவச் சேர்வைக்காரர் அனைவரும் அவர்களுடைய மனுஷரும் கேட்டபோதோவெனில்,

௮ அவர்கள் மிஸ்பாவுக்கு கேதலியாவண்டையிலே வந்தார்கள்; யாரெனில், நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும், கரேயாவின் குமாரராகிய யோகனானும் யோனத்தானும், தன்கூமேத்தின் குமாரனாகிய சேராயாவும், நேத்தோபாத்தியனாகிய எப்பாயின் குமாரரும், மாகாத்தியனான ஒருவன் குமாரனாகிய இசனீயாவும், அவர்களும் அவர்கள் மனுஷருந்தானே.

௯ ¶ *அப்போது சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகன் கேதலியா அவர்களுக்கும் அவர்கள் மனுஷருக்கும் ஆணையிட்டுச் சொன்னதாவது: நீங்கள் கல்தேயரைச் சேவிக்கப் பயப்படவேண்டாம்; நீங்கள் தேசத்திலிருந்து, பாபேலின் இராசாவைச் சேவியுங்கள்; அப்போது உங்களுக்கு நன்றாயிருக்கும்.
*௨ இரா. ௨௫. ௨௪.

௰ நானோவெனில் இதோ, நம்மண்டையிலே வருகிற கல்தேயருக்குமுன்பாக முன்னிலையாய் நிற்க மிஸ்பாவிலே குடியிருக்கிறேன்; நீங்களோவென்றால் போய், திராட்சப்பழ இரசத்தையும் அறுப்பையும் எண்ணெயையும் சேர்த்து, உங்கள் பாண்டங்களில் வைத்து, உங்கள் வசமாக்கிக்கொள்ளுகிற ஊர்களில் குடியிருங்களென்றான்.

௰௧ ¶ மோவாபிலும் அம்மோன் புத்திரரிடத்திலும் ஏதோமிலும் சகல தேசங்களிலும் இருக்கிற யூதரும், பாபேலின் இராசா யூதேயாவில் சிலர் மீதியாயிருக்கக் கட்டளையிட்டானென்றும், சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கேதலியாவை அவர்கள்மேலே அதிகாரியாக்கினானென்றும் கேட்டபோது,

௰௨ எல்லா யூதரும் தாங்கள் துரத்துண்ட எல்லா இடங்களிலுமிருந்து, யூதேயா தேசத்தில் கேதலியாவண்டையிலே மிஸ்பாவுக்கு வந்து, திராட்சப்பழ இரசத்தையும் அறுப்பையும் வெகு திரளாய்ச் சேர்த்து வைத்தார்கள்.

௰௩ ¶ அப்போது கரேயாவின் குமாரனாகிய யோகனானும் வெளியிலே இருந்த சகல இராணுவச்சேர்வைக்காரரும் மிஸ்பாவுக்குக் கேதலியாவண்டையிலே வந்து,

௰௪ அவனுடனே: உம்முடைய சீவனைக் கொன்றுபோடும்படிக்கு, அம்மோன் புத்திரரின் இராசாவாகிய பாலிஸ், நேத்தானியா

வின் குமாரனாகிய இஸ்மவேலை அனுப்பினா னென்கிறதை நீர் அறியவே அறியவில்லை யோவென்றார்கள்; ஆனால் அகிக்காமின் குமாரனாகிய கேதலியா அவர்கள் வார்த்தையை நம்பினதில்லை.

௰௫ பின்னையும் கரேயாவின் குமாரனாகிய யோகனான் மிஸ்பாவிலே கேதலியாவோடே இரகசியமாய்ச் சொன்னதாவது: நான் போய், ஒருவரும் அறியாமல் நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலை வெட்டிப் போடட்டுமே; உம்மண்டையில் சேர்ந்த யூதரெல்லாரும் சிதறுண்டுபோகவும் யூதாவில் மீந்தவர்கள் அழியவும் அவன் உம்முடைய சீவனைக் கொன்றுபோடுவானேன் என்றான்.

௰௬ ஆனால் அகிக்காமின் குமாரனாகிய கேதலியா கரேயாவின் குமாரனாகிய யோகனானுடனே, நீ இந்தக் காரியத்தைச் செய்யாயாக; ஏனெனில், இஸ்மவேலின்மேலே நீ பொய்சொல்லுகிறாயென்றான்.

## ௪௧. அதிகாரம்.

ஆனால் ஏழாம்மாதத்தில் சம்பவித்ததேதென்றால், இராசவித்திலே பிறந்தவனும் எலிசாமாவின் குமாரனாகிய நேத்தானியாவின் மகனுமான *இஸ்மவேலும், அவனுடனேகூட இராசாவின் பிரபுக்களான பத்து மனுஷரும் மிஸ்பாவுக்கு அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவண்டையிலே வந்து, அங்கே மிஸ்பாவிலே ஏகமாய் அப்பஞ் சாப்பிட்டார்கள். *எரே. ௪௰. ௮.

௨ அப்போது நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும் அவனோடிருந்த பத்து மனுஷரும் எழும்பி, பாபேலின் இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக வைத்த சாப்பானின் குமாரனாகிய அகிக்காமின் மகனான கேதலியாவைப் பட்டயத்தாலே வெட்டினார்கள்.

௩ மிஸ்பாவிலே கேதலியாவினிடத்திலே இருந்த எல்லா யூதரையும், அங்கே காணப்பட்ட யுத்தமனுஷராகிய கல்தேயரையும் இஸ்மவேல் வெட்டிப்போட்டான்.

௪ ¶ அவன் கேதலியாவைக் கொன்றபிற்பாடு இரண்டாம்நாளிலே அதை ஒருவரும் இன்னம் அறியாதிருக்கையில் சம்பவித்ததாவது:

௫ தாடியைச் சிரைத்து, வஸ்திரங்களைக் கிழித்து, தங்களைக் கீறிக்கொண்டிருந்த எண்பது மனுஷர் சீகேமிலும் சீலோவிலும் சமாரியாவிலுமிருந்து, தங்கள் கைகளில் காணிக்கைகளையும், தூபவர்க்கத்தையும், கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டுபோகும்படிக்குச் சுமந்துவந்தார்கள்.

௬ அப்போது நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து புறப்பட்டு, அவர்களுக்கு எதிராக அழுதுகொண்டே நடந்து, அவர்களைச் சந்திக்கிறபோது அவர்களுடனே: அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவண்டைக்கு வாருங்கள் என்றான்.

௭ ஆனால் அவர்கள் பட்டணத்தின் நடுமையமட்டும் வந்தபோது சம்பவித்ததேதென்றால், நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும், அவனோடிருந்த மனுஷரும் அவர்களை வெட்டி ஒரு பள்ளத்துக்குள்ளே தள்ளிப்போட்டார்கள்.

௮ ஆனால் அவர்களில் பத்துப்பேர் இருந்தார்கள்; அவர்கள் இஸ்மவேலுடனே: எங்களைக் கொலைசெய்யாதிரும்; ஏனெனில், கோதுமையும் வால்கோதுமையும் எண்ணெயும் தேனுமுள்ள புதையல்கள் எங்களுக்கு நிலத்தின்கீழ் இருக்கின்றனவென்றார்கள்; அப்போது அவர்களை அவர்கள் சகோதரரோடுங்கூடக் கொலைசெய்யாமல் விட்டுவைத்தான்.

௯ ¶ இஸ்மவேல் கேதலியாவின்நிமித்தமாக வெட்டின மனுஷருடைய பிரேதங்களை எல்லாம் தள்ளிப்போட்ட பள்ளமோவெனில், ஆசாவென்ற இராசா இஸ்ரவேலின் இராசாவாகிய பாசாவுக்கு எதிராக

உண்டுபண்ணின பள்ளந்தானே; அதை நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டுண்டவர்களாலே நிரப்பினான்.

௰ ¶ பிறகு இஸ்மவேல் மிஸ்பாவில் இருக்கிற மீதியான சனத்தை எல்லாம் சிறைப்படுத்திக்கொண்டுபோனான்; இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவின் விசாரிப்புக்கு ஒப்புவித்துப்போன மிஸ்பாவிலுள்ள மீதியான சனம் அனைத்தையும் நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் சிறைப்படுத்திக்கொண்டுபோய், அம்மோன் புத்திரரண்டைக்குத் தாண்டிப்போகப் புறப்பட்டான்.

௰௧ ¶ நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் செய்த பொல்லாப்பை எல்லாம் கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்காரரும் கேட்டபோதோவெனில்,

௰௨ அவர்கள் எல்லாப் புருஷரையும் கூட்டிக்கொண்டு, நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்பண்ணப்போய், அவனைக் கிபேயோனிலிருக்கும் பெருங்குளத்துத் தண்ணீரண்டையிலே கண்டார்கள்.

௰௩ அப்போது சம்பவித்ததேதென்றால், இஸ்மவேலண்டையில் இருந்த சனமெல்லாம் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்காரரையும் காண்கையில் சந்தோஷப்பட்டு,

௰௪ இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து சிறைப்பிடித்துக்கொண்டுபோன சனமெல்லாம் பின்னிட்டுத் திரும்பி, கரேயாவின் குமாரனாகிய யோகனானண்டையிலேவந்துவிட்டார்கள்.

௰௫ நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோவென்றால், எட்டுப்பேரோடுங்கூட யோகனானின் கைக்குத் தப்பி, அம்மோன் புத்திரரண்டைக்குப் புறப்பட்டுப் போனான்.

௰௬ ¶ ஆனால் கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்காரரும், அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவை வெட்டிப்போட்ட நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் கொண்டுபோனதும், தாங்கள் கிபேயோனிலே விடுதலையாக்கித் திரும்பப்பண்ணினதுமான மீதியான சகல சனமுமாகிய சேவகரான மனுஷரையும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும், அரமனைப் பிரதானிகளையும் சேர்த்துக்கொண்டு,

௰௭ பாபேலின் இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக்கின அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவை நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டிப்போட்டதின் நிமித்தமாக, கல்தேயருக்குப் பயப்படுகிறபடியினாலே,

௰௮ *போய், தாங்கள் எகிப்துக்குப் புறப்பட்டுப்போகும்படிக்கு, பெத்லெகேமுக்கு அருகான கிம்காமின் பேட்டையில் இறங்கித் தங்கினார்கள். *௨ இரா. ௨௫. ௨௬.

## ௪௨. அதிகாரம்.

அப்போது எல்லா இராணுவச்சேர்வைக்காரரும், கரேயாவின் குமாரனாகிய யோகனானும், ஒசாயாவின் குமாரனாகிய இசனியாவும், சிறியோர்முதற்கொண்டு பெரியோர்மட்டும் உண்டான எல்லாச்சனமும் சேர்ந்துவந்து,

௨ தீர்க்கதரிசியாகிய எரேமியாவுடனே சொன்னதாவது: உம்முடைய பராபரனாகிய கர்த்தர் நாங்கள் நடக்கவேண்டிய வழியையும், செய்யவேண்டிய காரியத்தையும், எங்களுக்குத் தெரியப்பண்ணும்படிக்கு, நீர் எங்கள் விண்ணப்பத்துக்கு இடங்கொடுத்து, மீதியாயிருக்கிற இந்தச் சகல சனமாகிய எங்களுக்காக உம்முடைய பராபரனாகிய கர்த்தரைநோக்கிச்செபம்பண்ணும்.

௩ ஏனெனில், உம்முடைய கண்கள் எங்களைக் காண்கிறபடியே திரளான சனங்களில் கொஞ்சப்பேராய் மீந்திருக்கிறோம் என்றார்கள்.

௪ ¶ அப்போது எரேமியா தீர்க்கதரிசி அவர்களுடனே: நீங்கள் சொன்னதைக் கேட்டேன்; இதோ, உங்கள் வார்த்தையின்படியே உங்கள் பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணுவேன்; கர்த்தர் உங்களுக்கு மறு உத்தாரமாகச் சொல்லும் எல்லாவார்த்தையையும் நான் உங்களுக்கு ஒன்றையும் மறைக்காமல் அறிவிப்பேனென்றான்.

௫ ¶ அப்போது அவர்கள் எரேமியாவுடனே சொன்னதாவது: உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உம்மைக்கொண்டு எங்களுக்குச் சொல்லி அனுப்பும் எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யாவிட்டால், கர்த்தர் நமக்குள் சத்தியமும் உண்மையுமான சாட்சியாய் இருக்கக்கடவர்.

௬ அது நன்மையானாலும் தீமையானாலும் சரி; எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கு நாங்கள் கீழ்ப்படிவதினால் எங்களுக்கு நன்றாயிருக்கும்படிக்கு நாங்கள் உம்மை அனுப்புகிற எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்போமென்றார்கள்.

௭ ¶ பத்துநாள் சென்றபோது, கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்குண்டாயிற்று.

௮ அப்போது அவன் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்காரரையும், சிறியோர் முதற்கொண்டு பெரியோர் மட்டும் உண்டான சனம் அனைத்தையும் அழைத்து,

௯ அவர்களுடனே சொன்னதாவது: உங்களுக்காக விண்ணப்பஞ்செய்யும்படிக்கு நீங்கள் என்னை அனுப்பின இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதென்றால்,

௰ ¶ நீங்கள் இந்தத் தேசத்திலேதரிக்கவே தரித்திருந்தால், *நாம் உங்களை நிர்மூலமாக்காமல் கட்டுவித்து, உங்களைப் பிடுங்காமல் நாட்டுவோம்; ஏனெனில், நாம் உங்களுக்குச் செய்திருக்கிற தீங்குக்கு மனஸ்தாபப்பட்டோம். *எரே. உ௪. ௬.

௰௧ *நீங்கள் பயப்படுகிற பாபேலின் இராசாவுக்குப் பயப்படவேண்டாம்; அவனுக்குப் பயப்படாதிருப்பீர்களாக என்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், உங்களை இரட்சிக்கும்படிக்கும், உங்களை அவன் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் நாம் உங்களுடனே இருந்து, *எரே. ௪௧. ௰௪.

௰௨ அவன் உங்களுக்கு இரங்குகிறதற்கும், உங்களை உங்கள் தேசத்துக்குத் திரும்பி வரப்பண்ணுகிறதற்குமாக உங்களுக்கு இரக்கம் செய்வோம்.

௰௩ நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமல், இந்தத் தேசத்திலே நாங்கள் இருக்கிறதில்லையென்றும்,

௰௪ நாங்கள் யுத்தத்தைக் காணாததும், எக்காளத்தின் சத்தத்தைக் கேளாததும், அப்பத்தாழ்ச்சியினால் பட்டினியாய் இராததுமான எகிப்துதேசத்துக்கே போய், அங்கே தரித்திருப்போமென்றும் சொன்னீர்களேயாகில்,

௰௫ இப்போதும் யூதாவில் மீதியானவர்களே, அதைத்தொட்டு உண்டான கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் எகிப்துக்குப் போக உங்கள் முகங்களைத் திருப்பவே திருப்பி, அங்கே தங்கப்போனீர்களானால்,

௰௬ சம்பவிப்பதேதெனில், நீங்கள் பயப்படுகிற பட்டயம் அங்கே எகிப்துதேசத்திலே உங்களைப் பிடிக்கும்; நீங்கள் பயப்ப

டுகிற பஞ்சம் அங்கே எகிப்திலே உங்களைப் பின்பற்றிக்கொண்டிருக்கும்; அங்கே சாவீர்கள்.

௰எ எகிப்திலே தங்கவேண்டுமென்று அவ்விடத்துக்குத் தங்கள் முகங்களைத் திருப்பின எல்லா மனுஷருக்கும் என்ன சம்பவிக்குமெனில், பட்டையத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் சாவார்கள்; நாம் அவர்கள்மேல் வரப்பண்ணும் தீங்கினாலே அவர்களில் மீதியாவாரும் தப்புவாருமில்லை.

௰அ ஏனெனில், இஸ்ரவேலின்பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நம்முடைய கோபமும் நம்முடைய உக்கிரமும் எருசலேமுடைய குடிகளின்மேல் எப்படி ஊற்றப்பட்டதோ, அப்படி நம்முடைய உக்கிரம் நீங்கள் எகிப்துக்குப் போகும்போது, உங்கள்மேல் ஊற்றப்படும்; *நீங்கள் சாபமாகவும்பாழாகவும் பழிப்பாகவும் நிந்தையாகவும் இருந்து, இவ்விடத்தை இனிக் காணாதிருப்பீர்கள் என்கிறார். *எரே.உச.கூ: உகூ.௰அ,௰கூ.

௰கூ யூதாவில் மீதியானவர்களே, எகிப்துக்குப் போகாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் உங்களைக்குறித்துச் சொன்னாரென்பதை இந்நாளில் உங்களுக்குச் சாட்சியாக அறிவித்தேன் என்பதை அறியவே அறிவீர்களாக.

உ௰ ஏனெனில், உங்கள் ஆத்துமாக்களுக்கு விரோதமாய் உங்களை மோசம்போக்கினீர்கள்; அதேதென்றால், நீர் எங்கள் பராபரனாகிய கர்த்தரை எங்களுக்காக விண்ணப்பம்பண்ணி, எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்லும்படியெல்லாம் எங்களுக்கு அறிவியும்; அதின்படியே செய்வோமென்று நீங்கள் சொல்லி, என்னை உங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்கு அனுப்பினீர்கள்.

உக நான் இந்நாளில் அதை உங்களுக்கு அறிவித்தேனே; ஆனால் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கும் அவர் என்னைக் கொண்டு உங்களுக்குச் சொல்லி அனுப்பின எல்லாவற்றுக்கும் செவிகொடாதே போனீர்கள்.

உஉ இப்போதும் தங்கி இருப்பதற்கு நீங்கள் போகவிரும்புகிற தலத்திலேதான் பட்டையத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் சாவீர்களென்று அறியவே அறிவீர்களாக என்றான்.

## சஉ. அதிகாரம்.

எரேமியா எல்லாச் சனத்துக்கும் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் தன்னைக் கொண்டு அவர்களுக்குச் சொல்லியனுப்பின எல்லா வார்த்தைகளையும் சொன்னானே; அவர்களுடைய பராபரனாகிய கர்த்தருடைய இந்த எல்லா வார்த்தைகளையும் அவன் அவர்களுக்குச் சொல்லிமுடித்தபோது சம்பவித்ததேதென்றால்,

உ ஓசாயாவின் குமாரனாகிய அசரியாவும், கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அகந்தையான எல்லா மனுஷரும் எரேமியாவுடனே சொன்னதாவது: நீ பொய்சொல்லுகிறாய்; எகிப்துக்கு அங்கே தங்கும்படிக்குப் போகாதிருங்களென்று சொல்ல, எங்கள் பராபரனாகிய கர்த்தர் உன்னை எங்களண்டைக்கு அனுப்பினதில்லை.

௩ கல்தேயர் எங்களைக் கொன்றுபோடவும், எங்களைப் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகவும், எங்களை அவர்கள் கையில் ஒப்புக்கொடுக்கும்படிக்கு, நேரியாவின் குமாரனாகிய பாரூக்குத்தானே உன்னை எங்களுக்கு விரோதமாகப் பயிற்றுவிக்கிறான் என்றார்கள்.

௪ அப்படியே யூதாவின் தேசத்திலே தரிக்கவேண்டும் என்ற கர்த்தருடைய சத்தத்துக்குக் கரேயாவின் குமாரனாகிய யோகனானும், சகல இராணுவச் சேர்வைக்காரரும், சகல சனமும் செவிகொடாதேபோனார்கள்.

௫ யூதேயாதேசத்திலே தங்கியிருப்பதற்

கு, தாங்கள் துரத்துண்டிருந்த சகல சாதிகளிடத்திலுமிருந்து திரும்பிவந்த மீதியான யூதரெல்லாரையும், புருஷரையும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும், இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான், சாப்பானின் குமாரனுகிய அகிக்காமின் மகனுன கேதலியாவண்டையில் வைத்துப்போன சகல ஆத்துமாக்களையும், தீர்க்கதரிசியாகிய எரேமியாவையும், நேரியாவின் குமாரனுகிய பாருக்கையும்,

௬ கரேயாவின் குமாரனுன யோகனனும் சகல இராணுவச் சேர்வைக்காரரும் கூட்டிக்கொண்டு,

௭ கர்த்தருடைய சத்தத்துக்குச் செவி கொடாதபடியினுலே, எகிப்துதேசத்துக்குப் போய், தக்பானேஸ்மட்டும் வந்து சேர்ந்தார்கள்.

௮ ¶ தக்பானேசிலே கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௯ நீ உன் கையிலே பெரிய கல்லுகளை எடுத்துக்கொண்டு, யூதாமனுஷர் பார்க்கையில் அவைகளைத் தக்பானேசில் இருக்கிற பார்வோனுடைய வீட்டின் ஒலிமுகவாசலில் உண்டான சூளையின் களிமண்ணிலே புதைத்துவைத்து,

௰ அவர்களுடனே சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதெதெனில், இதோ, *நம்முடைய வேலைக்காரனுகிய நேபுகாத்நேச்சாரென்றபாபேலின் இராசாவை நாம் அழைத்தனுப்பி, நாம் புதைப்பித்த இந்தக் கல்லுகளின்மேல் அவனுடைய ஆசனத்தைத வைப்போம்; அவன் தன் இராசகூடாரத்தை அவைகளின்மேலே விரிப்பான். *எரே. ௨௫. ௯: ௨௭. ௬.

௰௧ அவன் வந்து, எகிப்துதேசத்தை அழிப்பான்; *சாவுக்கு ஏதுவானவன் சாவுக்கும், சிறையிருப்புக்கு ஏதுவானவன் சிறையிருப்புக்கும், பட்டயத்துக்கு ஏதுவானவன் பட்டயத்துக்கும் உள்ளாவான்.
*எரே. ௧௫. ௨.

௰௨ *எகிப்தினுடைய தேவர்களின் வீடுகளில் அக்கினியைக் கொளுத்துவோம்; அவன் அவைகளைச் சுட்டெரித்து, அவைகளைச் சிறைபிடித்துப்போய், ஒரு மேய்ப்பன் தன் கம்பளியைப் போர்த்துக்கொள்ளுமாப்போலே எகிப்துதேசத்தைப் போர்த்துக்கொண்டு, அவ்விடத்திலிருந்து சுகமாய்ப் புறப்பட்டுப்போவான்.
*எரே. ௪௬. ௨௫, ௨௬.

௰௩ அவன் எகிப்துதேசத்தில் இருக்கிற பெத்சேமேசின் சிலைகளை உடைத்து, எகிப்தினுடைய தேவர்களின் வீடுகளை அக்கினியால் சுட்டுப்போடுவானென்கிறுர் என்று சொல்லென்றுர்.

## ௪௪. அதிகாரம்.

எகிப்துதேசத்தில் குடியேறி, மிக்தோலிலும், தக்பானேசிலும், நோப்பிலும், பத்ரோஸ் சீமையிலும் வாசமான எல்லா யூதரையுங்குறித்து, எரேமியாவுக்கு உண்டான வசனம்.

௨ ¶ இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் எருசலேமின்மேலும், யூதாவுடைய எல்லாப் பட்டணங்களின்மேலும், வரப்பண்ணின தீங்கை எல்லாம் நீங்கள் கண்டீர்கள்.

௩ இதோ, அவர்களும் நீங்களும் உங்கள் பிதாக்களும் அறியாத தேவர்களுக்கு அவர்கள் தூபங்காட்டவும், ஆராதனை செய்யவும் போய், நமக்குக்கோபம் உண்டாக்கும்படிக்குச் செய்த அவர்களுடைய பொல்லாப்பின்நிமித்தம் அவைகள் இந்நாளில் பாழாய்க் கிடக்கின்றன; அவைகளில் குடியில்லை.

௪ நாம் பகைக்கிற இந்த அருவருப்பான காரியத்தைச் செய்யாதிருங்களென்று, நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழி

யக்காரரைக்கொண்டு உங்களுக்கு ஏற்கெனவே சொல்லி அனுப்பிக்கொண்டே இருந்தோம்.

௫ ஆனால் அவர்கள் அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டாதபடிக்கு, தங்கள் பொல்லாப்பைவிட்டுத் திரும்புவதற்குக் *கேளாமலும், தங்கள் செவிகளைச் சாய்க்காமலும் போனார்கள். *எரே.எ.உ௫.உ௬.

௬ ஆகையால் நம்முடைய உக்கிரமும் நம்முடைய கோபமும் ஊற்றப்பட்டு, யூதேயாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் *பற்றி எரிந்தது; அவைகள் இந்நாளில் இருக்கிறபடி வனாந்தரமும் பாழுமாய்ப்போயின. *எரே. எ. உ௰.

௭ ¶ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய பராபரனான கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் யூதாவில் ஒருவரையும், உங்களுக்கு மீதியாகக் காக்காமல், உங்களில் புருஷரையும் ஸ்திரியையும் பிள்ளையையும் பாலகனையும் முதலற்றுப்போகப்பண்ணும்படிக்கு, உங்கள் கைகளின் கிரியைகளாலே நமக்குக் கோபம் உண்டாக்குகிற பெரிய பொல்லாப்பை உங்கள் ஆத்துமாக்களுக்கு விரோதமாகச் செய்து,

௮ உங்களைத்தானே வேரற்றுப்போகப்பண்ணுவதற்காகவும், பூமியினுடைய சகல சாதிகளுக்குள்ளும் சாபமும் நிந்தையும் ஆவதற்காகவும், நீங்கள் தங்கியிருக்க வந்த எகிப்துதேசத்திலே அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டுவானேன்?

௯ யூதாதேசத்திலும் எருசலேமின் வீதிகளிலும் உங்கள் பிதாக்கள் செய்த பொல்லாப்புகளையும், யூதாவின் இராசாக்கள் செய்த பொல்லாப்புகளையும், அவர்களுடைய பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும், நீங்கள் செய்த பொல்லாப்புகளையும், உங்கள் பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும் மறந்துபோனீர்களோ?

௰ அவர்கள் இந்நாள்மட்டுக்கும் மனம் நொறுங்குண்டதுமில்லை, பயப்படுகிறதுமில்லை; நாம் உங்கள் முன்னேயும் உங்கள் பிதாக்களின்முன்னேயும் வைத்த நமது வேதத்தின்படியேயும் நம்முடைய கட்டளைகளின்படியேயும் நடக்கிறதுமில்லை.

௰௧ ¶ ஆகையால், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் *உங்களுக்குத் தீங்காகவும், யூதாவனைத்தையும் சங்கரிக்கத்தக்கதாகவும் நமது முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திருப்பி,
*ஆமோ. ௯. ௪.

௰௨ எகிப்துதேசத்திலே தங்கும்படிக்கு வரத் தங்கள் முகங்களைத் திருப்பின மீதியான யூதரை வாரிக்கொள்ளுவோம்; அவர்கள் அனைவரும் எகிப்துதேசத்திலே நிர்மூலமாவார்கள்; அவர்கள் சிறியவன்துவக்கிப் பெரியவன்மட்டும், *பட்டயத்துக்கு இரையாகி, பஞ்சத்தாலும் நிர்மூலமாவார்கள்; அவர்கள் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் செத்து, சாபமும் பாழும் பழிப்பும் நிந்தையுமாவார்கள்.
*எரே. ௪௨. ௰௭, ௰௮.

௰௩ நாம் எருசலேமை விசாரித்தபடி எகிப்துதேசத்தில் குடியிருக்கிறவர்களையும், பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் விசாரிப்போம்.

௰௪ எகிப்துதேசத்திலே தங்கவும், மறுபடியும் தங்கள் ஆத்துமா வாஞ்சித்திருக்கிற யூதாதேசத்திலேதானே குடியேறுவதற்கு அங்கே திரும்பிப்போகவும் வேண்டுமென்று இங்கே வந்த மீதியான யூதரிலே தப்புவாரும் மீதியாயிருப்பாருமில்லை; தப்பிப்போபவர்களாகிய மற்றவர்களையேயொழிய அவர்களில் ஒருவரும் அங்கே திரும்புவதில்லையென்றாரென்று சொன்னான்.

௰௫ ¶ அப்போது தங்கள் பெண்சாதிகள் வேறே தேவர்களுக்குத் தூபங்காட்டுகிறதை அறிந்திருந்த எல்லாப் புருஷரும், பெ

ரிய கூட்டமாய் நின்றிருந்த எல்லா ஸ்திரிகளும், எகிப்துதேசத்தில் பத்ரோசிலே குடியிருந்த சகல சனமும் எரேமியாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௰௬ ¶ நீ கர்த்தருடைய நாமத்தில் எங்களுக்குச் சொன்ன வார்த்தையின்படியே *நாங்கள் உனக்குச் செவிகொடாமல்,

*எரே. ௰௮. ௰௨.

௰௭ எங்கள் வாயிலிருந்து புறப்பட்ட எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யவே செய்து, *வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்காட்டி அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றுவோம்; நாங்களும், எங்கள் பிதாக்களும், எங்கள் இராசாக்களும், எங்கள் பிரபுக்களும், யூதாபட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் செய்ததுபோலேதானே; அப்போது நாங்கள் அப்பத்தாலே திருத்தியாகி, வாழ்ந்து, ஒரு பொல்லாப்பையும் காணாதிருந்தோம்.

*எரே. ௭. ௰௮.

௰௮ நாங்கள் வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்காட்டாமலும், அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றாமலும் போனது முதற்கொண்டோவெனில், எல்லாம் எங்களுக்குக் குறைபட்டது; பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் நிர்மூலமானோம்.

௰௯ அல்லவென்று, நாங்கள் வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்காட்டி, அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றுகிறபோது, நாங்கள் அவளை நமஸ்கரிக்கவும், அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றவும், எங்கள் புருஷரையல்லாமல், *அவளுக்கு அச்சுப்பணியாரங்களைச் சுடுகிறோமோ என்றார்கள்.

*எரே. ௭. ௰௮.

௨௰ ¶ அப்போது எரேமியா எல்லாச் சனத்துக்கும், புருஷருக்கும், ஸ்திரிகளுக்கும், தனக்கு இப்படிக்கொத்த மறுமொழியைக் கொடுத்த சகல சனத்துக்கும் சொன்னதாவது:

௨௧ ¶ யூதாவின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளிலும், நீங்களும் உங்கள் பிதாக்களும், உங்கள் இராசாக்களும், உங்கள் பிரபுக்களும், தேசத்தின் சனமும் தூபங்காட்டின தூபங்களை அல்லவோ கர்த்தர் நினைத்துத் தம்முடைய மனதிலே வைத்துக்கொண்டார்.

௨௨ உங்கள் கிரியைகளின் பொல்லாப்பையும், நீங்கள் செய்த அருவருப்புகளையும், கர்த்தர் அப்புறம் பொறுத்திருக்கக்கூடாதபடியினாலே அல்லவோ, உங்கள் தேசம் இந்நாளில் இருக்கிறபடி குடியற்ற அந்தரவெளியும் பாழும் சாபமும் ஆயிற்று.

௨௩ நீங்கள் தூபங்காட்டி, கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்து, கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமலும் அவருடைய வேதத்துக்கும், அவருடைய கட்டளைகளுக்கும், அவருடைய சாட்சிகளுக்கும், இணங்கி நடவாமலும் போனபடியினாலேதானே இந்தத் தீங்கு இந்நாளில் இருக்கிறபடி உங்களுக்கு நேரிட்டதென்றான்.

௨௪ ¶ பின்னையும் எரேமியா எல்லாச் சனத்துக்கும், எல்லா ஸ்திரிகளுக்கும் சொன்னதாவது: எகிப்துதேசத்தில் இருக்கிற யூதராகிய நீங்கள் எல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௨௫ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்காட்டவும், அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றவும், நாங்கள் நேர்ந்துகொண்ட பொருத்தனைகளைச் செலுத்தவே செலுத்துவோமென்று, நீங்களும் உங்கள் பெண்சாதிகளும், உங்கள் வாயினாலுஞ்சொல்லி, உங்கள் கைகளினாலும் நிறைவேற்றினீர்கள்; நீங்கள் உங்கள் பொருத்தனைகளைத் திடப்படுத்தவே திடப்படுத்தி, செலுத்தவே செலுத்தினீர்கள்.

௨௬ ஆகையால், எகிப்துதேசத்தில் குடியிருக்கிற யூதராகிய நீங்கள் எல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்;

இதோ, கர்த்தராகிய ஆண்டவருடைய சீவ
னாணை, எகிப்துதேசமெங்கும் ஒரு யூதமனு
ஷன் வாயினாலும் இனி நம்முடைய நாமம்
அழைக்கப்படுவதில்லையென்று நாம் நமது
பெரிய நாமத்தைக்கொண்டு ஆணையிடுகி
றோமென்கிறதைக் கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭ இதோ, *நாம் அவர்கள்மேலே நன்
மைக்கல்ல தீமைக்கே சாக்கிரதையாயிருப்
போம்; எகிப்துதேசத்திலிருக்கிற யூதமனு
ஷர் எல்லாரும் ஒழிந்துதீருமளவும் பட்
டையத்தாலும் பஞ்சத்தாலும் சங்காரமா
வார்கள். *எரே. ௩௧. ௨௮.

௨௮ ஆனால் பட்டையத்துக்குத் தப்புப
வர்கள் எகிப்துதேசத்திலிருந்து யூததேசத்
துக்குக் கொஞ்சம்பேராய்த் திரும்புவார்
கள்; அப்படியே எகிப்துதேசத்திலே தங்
கியிருக்கவந்த மீதியான யூதர் அனைவரும்
யாருடைய வார்த்தை மெய்ப்படும், தங்க
ளுடையதோ நம்முடையதோவென்று அறி
வார்கள்.

௨௯ ¶ கர்த்தர் சொல்லுகிறதேதெனில்,
நாம் இவ்விடத்தில் உங்களுக்கு விரோத
மாய் விசாரிக்கிறவராயிருப்பதற்கும், நம்
முடைய வார்த்தைகளை உங்கள்மேல் நிலைம
யாக மெய்ப்படுமென்று நீங்கள் அறிவதற்
கும் உங்களுக்கு அடையாளமாவது:

௩௰ இதோ, நாம் யூதாவின் இராசாவாகிய
சிதேக்கியாவை அவனுடைய சத்துருவும்,
அவன் பிராணனை வாங்கத்தேடினவனுமா
கிய நேபுகாத்நேச்சாரென்ற பாபேலுடைய
இராசாவின் கையில் ஒப்புக்கொடுத்தது
போலே, நாம் பார்வோன் ஒப்பிராவென்ற
எகிப்துவின் இராசாவையும் அவனுடைய
சத்துருக்களின் கையிலும் அவன் பிராண
னை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும்
ஒப்புக்கொடுப்போமென்பதுதானே என்று
கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம்
என்ற யூதாவுடைய இராசாவின் நாலாம்
வருஷத்திலே நேரியாவின் குமாரனாகிய
பாருக் இந்த வசனங்களை *எரேமியாவின்
வாய்சொல்ல ஒரு புஸ்தகத்தில் எழுதுகை
யில், எரேமியா தீர்க்கதரிசி அவனுடனே
சொன்ன வார்த்தை: *எரே. ௩௬. ௪.

௨ பாருக்கே, உன்னைக்குறித்து இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதா
வது:

௩ நீ, ஆ எனக்கு ஐயோ! ஏனெனில், கர்த்
தர் என்னுடைய நோவைச் சஞ்சலத்தால்
வர்த்திக்கப்பண்ணினாரென்றும் *என் தவி
ப்பினால் இளைத்தேன், முசிப்பாறுதலைக்கா
ணாதேபோனேனென்றும் சொல்லுகிறாய்.
*சங். ௬. ௭.

௪ ¶ கர்த்தர் உரைக்கிறதேதெனில், இ
தோ, நாம் கட்டினதை நாம் இடிக்கிறோம்;
நாம் நாட்டினதை நாம் பிடுங்குகிறோம்:
இந்த முழுதேசத்தையும் கூடத்தானே.

௫ நீயோவெனில் உனக்குப் பெரிய காரி
யங்களைத் தேடுகிறாயோ? தேடாயாக; ஏ
னெனில், இதோ, எல்லா மாமிசத்தின்மே
லும் தீங்கை வரப்பண்ணுகிறோமென்று
கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால் நீ போகும்
சகல தலங்களிலும் *உன்னுடைய ஆத்து
மாவை உனக்குக் கிடைக்கும் கொள்ளை
உடைமையைப்போலே தருகிறோமென்கி
றதை அவனுடனே சொல்லென்றாரென்று
சொன்னான். *எரே. ௩௯. ௰௮.

## ௪௬. அதிகாரம்.

புறச்சாதிகளுக்கு விரோதமாய் எரேமியா
தீர்க்கதரிசிக்கு உண்டான கர்த்தருடைய
வசனம்.

௨ *எகிப்துக்குச் சொல்வது: ஐப்பிராத்து
நதியண்டையில் கர்கெமிசிலே இருந்ததும்
பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்
சார், யோசியாவின் குமாரனாகிய யோயாக்
கீமென்ற யூதாவுடைய இராசாவின் நாலாம்
வருஷத்திலே முறியடித்ததுமான பார்

வோன் நேகோவென்னப்பட்ட எகிப்துவி னுடைய இராசாவின் இராணுவத்தின்பேரி லே அவர் சொன்னதாவது:

*ஏசா. ௰௯. ௧. மு. ஏசே. ௨௯. ௨. மு.

௩ ¶ கேடயங்களையும் பரிசைகளையும் ஆய த்தம்பண்ணி, யுத்தத்துக்குச் சேருங்கள்.

௪ குதிரைக்காரரே, குதிரைகளின்மேல் சே ணங்களை வைத்தேறித் தலைச்சோடுகளைப் போட்டுக்கொண்டவர்களாய் உங்களை நிறு த்துங்கள்; இட்டிகளைத் துலக்கி, கவசங்க ளைத் தரித்துக்கொள்ளுங்கள்.

௫ ¶ அவர்கள் கலங்கி, பின்வாங்குகிறார் களென்று நாம் காண்கிறதெப்படி? அவர் களுடைய பராக்கிரமசாலிகள் நருக்குண்டு திரும்பிப்பாராமல் ஓடவே ஓடுகிறார்கள்; சுற்றிலும் பயங்கரமுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬ வேகமானவன் ஓடிப்போகானாக; பராக் கிரமசாலி தப்பிப்போகானாக; வடக்கே ஐப்பிராத் நதியண்டையிலே இடறிவிழு வார்கள்.

௭ ¶ நீரோட்டத்தைப்போலேயும் தண் ணீர்கள் மோதியடிக்கிற ஆறுகளைப்போலே யும் எழும்பிவருகிறவன் யாவன்?

௮ எகிப்தியன் நீரோட்டத்தைப்போலே யும் தண்ணீர்கள் மோதியடிக்கிற ஆறுக ளைப்போலேயும் எழும்பிவந்து, நான் போ யேறி, தேசத்தை மூடி, பட்டணத்தையும் அதில் குடியிருக்கிறவர்களையும் அழிப்பே னென்றான்.

௯ குதிரைகளே, போயேறுங்கள்; இரதங் களே, கடகடென்றோடுங்கள்; பராக்கிரம சாலிகளும், கேடகம்பிடிக்கிற எத்தியோப் பியரும், பூத்தியரும், வில்லைப் பிடித்து நா ணேற்றுகிற லீதியரும் புறப்படக்கடவர் கள்.

௰ ஆனால் இது சேனைகளுடைய கர்த்தரா கிய ஆண்டவரின் நாளும், அவர் தம்மு டைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட் டுகிற நாளுமாயிருக்கிறது; ஆகையால் பட் டையம் பட்சித்து அவர்களுடைய இரத் தத்தால் திருத்தியாகி வெறித்திருக்கும்; ஏ னெனில், வடதேசத்தில் ஐப்பிராத்து நதிய ண்டையிலே சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவருக்குப் பலியிடுதலுண்டு.

௰௧ ¶ எகிப்துக் குமாரத்தியாகிய கன்னி யாஸ்திரியே, *கீலேயாத்துக்குப் போயே றி, பிசின்தயிலம் வாங்கு; விருதாவாகத் தி ரள் அவிழ்தங்களைக் கூட்டுகிறாய்; உனக்கு ஆரோக்கியமுண்டாகாது. *எரே. ௮. ௨௨.

௰௨ சாதிகள் உன் இலச்சையைக் கேட்கி றார்கள்; உன் கூக்குரலால் தேசம் நிறைந் தது; ஏனெனில், பராக்கிரமசாலியின்மேல் பராக்கிரமசாலி இடறி, இருவரும் ஏகமாய் விழுந்தார்களென்றார்.

௰௩ ¶ எகிப்துதேசத்தை அழிக்கப் பாபே லின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் வரு வானென்பதைக் குறித்து; எரேமியா தீர்க் கதரிசியுடனே கர்த்தர் சொன்ன வசனமா வது:

௰௪ ¶ உன்னை நிறுத்தி ஆயத்தப்படு; ஏ னெனில், பட்டையம் உன்னைச் சுற்றிலும் உண்டானதைப் பட்சித்துப்போட்டதென் று சொல்லி, எகிப்திலே அறிவித்து, மிக் தோலில் கேட்கப்பண்ணி, நோப்பிலும் தக்பானேசிலும் கேட்கப்பண்ணுங்கள்.

௰௫ ¶ உன்னில் வல்லவர்கள் அடித்துக் கொண்டு போகப்படுகிறதெப்படி? நிலை நிற்கமாட்டார்கள்; ஏனெனில், கர்த்தர் அவர்களைத் தள்ளினார்.

௰௬ அநேகரை இடறப்பண்ணுகிறார்; அவ னவனும் தனக்கடுத்தவன்மேல் விழுந்து: எழுந்திரு; கெடுக்கிற பட்டையத்துக்குத் தப்ப நமது சனத்தண்டைக்கும் நாம் பிறந்த தேசத்துக்கும் திரும்பிப்போவோ மென்கிறார்கள்.

௰௭ எகிப்துவின் இராசாவாகிய பார் வோன் பாழ்க்கடிக்கப்பட்டான்; அவன் திட்டமான காலத்தைத் தப்பவிட்டானெ ன்று அங்கே கூப்பிடுகிறார்கள்.

௰௮ பருவதங்களில் தாபோரும், சமுத்திரத்தில் கர்மேலும் இருக்கிறஉயரமாய் வருவானென்று *சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இராசா தம்முடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறார். *சங். ௨௪. ௰.

௰௯ எகிப்துதேசத்துக் குடியாகிய குமாரத்தியே, சிறையிருப்புக்குப் போகும் பயணமுட்டிகளை உனக்கு உண்டாக்கு; ஏனெனில், நோப், பாழாகும்; அது குடியில்லாமல் சுட்டுப்போடப்பட்டுக் கிடக்கும்.

௨௰ ¶ எகிப்து மகா நேர்த்தியான கன்றுக்குட்டியாயிருக்கிறது, அடிக்கிறவன் வடக்கேயிருந்து வருகிறான்.

௨௧ அதின் நடுவில் இருக்கிற அதினுடைய கூலிப்படைகள் கொழுத்த கன்றுகுட்டிகள்போலிருக்கிறார்கள்; ஆகையால் இவர்களும் நிற்காமல், திரும்பிக்கொண்டு ஏகமாய் ஓடிப்போவார்கள்; ஏனெனில், *அவர்கள் விசாரிக்கப்படுகிற அவர்களுடைய ஆபத்துநாள் அவர்கள்மேல் வந்தது. *எரே. ௫௰. ௩௧.

௨௨ அதினுடைய சத்தம் பாம்பின் சத்தமடைவாய்ப் புறப்படும்; ஏனெனில், இராணுவபலத்தோடே நடந்து மரங்களை வெட்டுகிறவர்களைப்போலக் கோடாலிகளோடு அதின்மேல் வருவார்கள்.

௨௩ எண்ணப்படாத மரங்களாயிருந்தாலும் அதின் காட்டை வெட்டுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், வெட்டுக்கிளிகளைப்பார்க்க அதிகமாய் இருக்கிறார்கள்: அவர்களுக்கு இலக்கமில்லை.

௨௪ எகிப்துக் குமாரத்தி வெட்கப்பட்டிருக்கிறாள்; வடக்குத்திசைச் சனத்தின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுகிறாள்.

௨௫ ¶ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் நோப்பட்டணத்திலுள்ள திரள் சனசதளத்தையும், பார்வோனையும், எகிப்துவையும், *அதின் தேவர்களையும், அதின் இராசாக்களையும், பார்வோனையும், அவனை நம்பியிருக்கிறவர்களையும் விசாரித்து, *எரே. ௪௩. ௰௨. ஏசா. ௰௯. ௧.

௨௬ அவர்களை அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலும், அவனுடைய வேலைக்காரரின் கையிலும், ஒப்புக்கொடுப்போம்; அதற்குப் பிற்பாடோவெனில், அது பூருவகாலங்களில் இருந்ததுபோலக் குடியேற்றப்பட்டுப் போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭ ¶ ஆனால் *நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாக; இஸ்ரவேலே, நீ கலங்காயாக; ஏனெனில், இதோ, நாம் உன்னைத் தூரத்திலும், உன் வித்தை அவர்கள் சிறையிருப்பின் தேசத்திலுமிருந்து விடுவித்து, இரட்சிப்போம்; அப்போது யாக்கோபு திரும்பிவந்து அமைச்சலோடும் சாங்கோபாங்கத்தோடும் இருப்பான்; அவனைத் தத்தளிக்கப்பண்ணுவாரில்லை. *எரே. ௩௰. ௰.

௨௮ நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாகவென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், நாம் உன்னுடனே இருக்கிறோம்; நாம் உன்னைத் துரத்திவிட்ட எல்லாச் சாதிகளையும் நிருமூலமாக்குவோம்; உன்னையோ நாம் நிருமூலமாக்காமல், உன்னை *நியாயமட்டாய்த் தண்டிப்போம்; ஆனால் உன்னை நாம் குற்றமில்லாமல் நீங்கலாகவே விடுவதில்லையென்றார். *எரே. ௰. ௨௪.

## ௪௭. அதிகாரம்.

பார்வோன் காத்சாவை அழிக்காததற்கு முன்னே, *பெலிஸ்தியருக்கு விரோதமாகத் தீர்க்கதரிசியாகிய எரேமியாவுக்குண்டான கர்த்தருடைய வசனம். *ஏசா. ௰௪. ௨௯. ஹு. ஏசே. ௨௫. ௰௫. ஹு. செப். ௨. ௪, ௫. சகரி. ௯. ௫, ௬.

௨ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, வடக்கேயிருந்து தண்ணீர்கள் எழும்பி,

வெள்ளநதியாகி, தேசத்தின்மேலும், அதினுடைய நிறைவின்மேலும், பட்டணத்தின்மேலும், அதில் குடியிருக்கிறவர்களின்மேலும் புரண்டு ஓடும்; அப்போது மனுஷர் கூப்பிட்டு, தேசத்தின் குடிகளெல்லாரும் அலறுவார்கள்.

௩ அவர்களுடைய வலுவான குதிரைகளின் குளம்புகள் இரைகிற சத்தத்தையும், அவர்களுடைய இரதங்களின் கடகடப்பையும், அவர்களுடைய உருளைகளின் இரைச்சலையுந்தொட்டுத் தகப்பன்மார் தங்கள் கைகளின் அயருகையினாலே பிள்ளைகளைநோக்கிப் பாராதிருப்பார்கள்.

௪ பெலிஸ்தியரையெல்லாம் பாழ்க்கடிக்கவும், தீருவுக்கும் சீதோனுக்கும் மீதியான சகாயரையெல்லாம் சங்காரம்பண்ணவும் வருகிறநாளிலேதானே; ஏனென்றால், *கபதோரென்ற கரைதுறையான தேசத்தாரில் மீதியாகிய பெலிஸ்தியரையும் கர்த்தர் பாழ்க்கடிப்பார். *ஆமோ. ௯. ௭.

௫ காத்சாவுக்கு மொட்டையிடுதல் வருகிறது; அவர்களுடைய பள்ளத்தாக்கிலே மீதியாகிய அஸ்கலோன் சங்காரமாகிறது; எந்தமட்டும் உன்னைக் கீறிக்கொள்ளுகிறுயென்றார்.

௬ ¶ ஆ கர்த்தரின் பட்டயமே, எந்தமட்டும் அமராதிருப்பாய்? உன் உறையில் திரும்பு, ஓய்ந்து அமர்ந்திரு.

௭ ¶ எப்படி அமர்ந்திருப்பாய்? அஸ்கலோனுக்கு விரோதமாகவும் குடாக்கடலுக்கு விரோதமாகவும் கர்த்தர் அதற்குக் கட்டளைகொடுத்து, அவ்விடத்துக்கென்று அதைக் குறித்தாரே.

## சஅ. அதிகாரம்.

மோவாபுக்குச் செல்வது: *இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நேபோவுக்கு ஐயோ! ஏனெனில், அது பாழ்க்கடிக்கப்பட்டது; கீரியத்தாயீம் வெட்கப்பட்டு, பிடிக்கப்பட்டுப்போயிற்று; மிஸ்காப்வெட்கப்பட்டு, கலங்கிப்போயிற்று. *ஏசா. ௰௫. ௧. ழி.

௨ எஸ்போனைத்தொட்டு மோவாபுக்கு இருந்த பெத்தரிக்கம் இனி இல்லை; அது சாதியாயிராதபடிக்கு அதை நிர்மூலமாக்குவோம் வாருங்களென்று அதற்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்திருக்கிறார்கள்; மத்மேனே, நீயும் சங்காரமாவாய்; பட்டையம் உன்னைத் தொடரும்.

௩ பாழ்க்கடிப்பினாலும் பெரிய நொறுக்குதலினாலும் உண்டாகிற கூப்பிடுதலின் சத்தம் ஒரோனாயிமிலிருந்துகேட்கப்படும்.

௪ மோவாப் நொறுங்குண்டது; அதில் சிறியவர்கள் கூப்பிடுதலைக் கேட்கப்பண்ணினார்கள்.

௫ ஏனெனில், லூகித்துக்கு ஏறுகிற வழியிலே அழுகையின்மேல் அழுகை எழும்பும்; ஒரோனாயிமுக்கு இறங்கிப்போகிற வழியிலே சத்துருக்கள் நொறுக்குதல்செய்கிறதினால் உண்டாகிய கூப்பிடுதலைக் கேட்கிறார்கள்.

௬ ¶ உங்கள் பிராணனைத் தப்புவிக்க ஓடிப்போங்கள்; ஆனால் *வனாந்தரத்தில் இளப்பமானசெடியைப்போலிருப்பீர்கள். *எரே. ௰௭. ௬.

௭ ஏனெனில், நீ உன் கிரியைகளையும் உன் பொக்கிஷங்களையும் நம்புகிறபடியினாலே நீயும் பிடிக்கப்படுவாய்; அப்போது *காமோஸ் சிறையாக்கப்பட்டுப்போகும்; அதின் ஆசாரியரும் பிரபுக்களுங்கூடப் போவார்கள். *௧ இரா. ௰௧. ௭.

௮ பாழ்க்கடிக்கிறவன் எல்லாப்பட்டணங்களின்மேலும் வருவான்; ஒரு பட்டணமும் தப்பிப்போவதில்லை; பள்ளத்தாக்குகளும் கெட்டுப்போகும்; சமனான பூமியும் அழிக்கப்படும் என்று கர்த்தர் சொன்னார்.

௯ மோவாபுக்குச் செட்டைகளைக் கொடுங்கள்; ஏனெனில், அது பறந்துபோகும்; அதின் பட்டணங்களோ குடிகள் இல்லாத

படியாய்ப் பாழாகும்.

௰ கர்த்தருடைய கிரியையை வஞ்சனையாய்ச் செய்கிறவன் சபிக்கப்பட்டவன்; இரத்தத்தைச் சிந்தாதபடிக்குத் தன் பட்டயத்தை அடக்கிக்கொள்ளுகிறவன் சபிக்கப்பட்டவன்.

௰௧ ¶ மோவாபு தன் சிறுவயதுதுவக்கிச் சாங்கோபாங்கத்தோடிருந்து, தன் வண்டல்களின்மேல் அசையாமல் நின்று, ஒரு பாத்திரத்திலிருந்து வேறொரு பாத்திரத்தில் இறக்கிக்கொள்ளப்படாமலும் சிறையிருப்பில் போகாமலும் இருந்தது; ஆனதுகொண்டு அதின் உருசி அதில் நிலைத்தது; அதின் வாசனை வேறுபட்டுப்போனதில்லை.

௰௨ ஆகையால், இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது இறக்குகிறவர்களை அதற்கு அனுப்புவோம்; அவர்கள் அதை இறக்கி, அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி, அதின் சாடிகளை உடைப்பார்கள்.

௰௩ அப்போது இஸ்ரவேலின் வீட்டார் தங்கள் நம்பிக்கையான *பேத்தேலாலே வெட்கப்பட்டதுபோலே, மோவாப் காமோசாலே வெட்கப்படும். *௧ இரா. ௰௨. ௨௯, ௩௰.

௰௪ ¶ நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும் நாங்கள் யுத்தத்துக்கான பலத்தமனுஷரென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி?

௰௫ மோவாப் தன் பட்டணங்களுக்கு வறிப்போகுமளவில் பாழ்க்கடிக்கப்படும்; தெரிந்துகொள்ளப்பட்ட அதினுடைய வாலிபர் கொலைக்களத்துக்கு இறங்குகிறார்கள் என்கிறதைச் சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார்.

௰௬ மோவாபின் ஆபத்துவரச் சமீபமாயிருக்கிறது; அதின் தீங்கு மிகவும் தீவிரித்துக்கொள்ளுகிறது.

௰௭ அதின் சுற்றுப்புறத்தாரும் அதின்பேரை அறிந்தவர்களுமாகிய நீங்கள் எல்லாரும் அதற்காக அங்கலாய்த்துக்கொள்ளுங்கள்; பெலனான மிலாறும் அலங்காரமான தடியும் எப்படி உடைந்ததென்று சொல்லுங்கள்.

௰௮ திபோனின் குடியாகிய குமாரத்தியே, நீ மகிமையை விட்டிறங்கி, தவனத்தோடே உட்காரு; ஏனெனில் மோவாபைப் பாழ்க்கடிக்கிறவன் உனக்கு விரோதமாய் வந்தேறி, உன் அரண்களை அழித்துப்போடுவான்.

௰௯ ஆரோவேரில் குடியிருக்கிறவளே, நீ வழியிலே நின்று, கண்ணோக்கிக்கொண்டிரு; நடந்ததென்னவென்று ஓடிவருகிறவனையும் தப்பிவந்தவளையும் கேள்.

௨௰ ¶ மோவாப் முறியடிக்கப்பட்டபடியினாலே வெட்கப்பட்டது; அலறிக் கூப்பிடுங்கள்; மோவாபு பாழ்க்கடிக்கப்பட்டதென்று *அர்னோனில் அறிவியுங்கள். *௪ மோ. ௨௧. ௰௩.

௨௧ சமனான பூமியாகிய ஓலோனின்மேலும், யாத்சாவின்மேலும், மேப்காத்தின்மேலும்,

௨௨ திபோனின்மேலும், நேபோவின்மேலும், பெத்திப்லாத்தாயிமின்மேலும்,

௨௩ கீரியத்தாயிமின்மேலும், பேத்காமூலின்மேலும், பெத்மெயோனின்மேலும்,

௨௪ கேரியோத்தின்மேலும், பாத்சராவின்மேலும், மோவாப் தேசத்திலே தூரத்திலும் சமீபத்திலும் இருக்கிற எல்லாப்பட்டணங்களின்மேலும் நியாயத்தீர்ப்பு வரும்.

௨௫ மோவாபின் கொம்பு வெட்டுண்டது; அவன் புயம் உடைக்கப்பட்டதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬ ¶ அவனை வெறியாக்குங்கள்; ஏனெனில், கர்த்தருக்கு விரோதமாய்ப் பெருமையானான்; அப்படியே மோவாபு தான் வாந்திபண்ணுகையில் தன்னை அடித்துக்கொண்டு, தானும் பரியாசமாவான்.

௨௭ ஏனெனில், இஸ்ரவேல் உனக்குப் பரியாசமாயிருந்ததல்லவோ? அவன் திருடருக்குள் கண்டுபிடிக்கப்பட்டானோ?

அவனைக்குறித்துப் பேசுகிறபோதெல்லாம், தலையைத் துலுக்குகிறாயே.

௨௮ மோவாபுடைய தேசத்தின் குடிகளே, நீங்கள் பட்டணங்களை விட்டுப்போய், கல்மலையில் தங்கி, குகையுடைய வாயின் ஓரங்களில் கூடுகட்டுகிற புறாவுக்கு ஒப்பாகுங்கள்.

௨௯ ¶ மெத்தப் பெருமையாயிருக்கிற மோவாபின் பெருமையையும், அதின் மேட்டிமையையும், அதின் அகந்தையையும், அதின் பெத்தரிக்கத்தையும், அதினுடைய இருதயத்தின் உயர்தலையும் கேட்டோம்.

௩௰ அதின் மூர்க்கத்தை நாம் அறிவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால் அப்படியாகாது; அதின் வீம்பு அதை அப்படி நடப்பிப்பதில்லை என்கிறார்.

௩௧ ¶ ஆகையால் மோவாபின் நிமித்தம் நான் அலறி, மோவாபுடைய தேசம் அனைத்தின்நிமித்தமும் கூக்குரலிடுவேன், கீராரேசுடைய மனுஷரின்நிமித்தம் பெருமூச்சு விடப்படும்.

௩௨ சிப்மாவூரின் திராட்சப்பயிரே, யாசேரின்மேல் அழப்பட்டதுபோல உன்மேல் அழுவேன்; உன் கொடிகள் கடலைக்கடந்து போயின; அவைகள் யாசேருடைய கடல்மட்டும் வந்துசேர்ந்தன; பாழ்க்கடிக்கிறவன் உன் விளைச்சலின்மேலும் உன் திராட்சப்பழ அறுப்பின்மேலும் விழுந்தான்.

௩௩ *சந்தோஷமும் களிப்பும் பயிர்வெளியிலும் மோவாபு தேசத்திலுமிருந்து வாங்கிப்போயிற்று; ஆலைகளில் திராட்சப்பழஇரசத்தின் பொழிதலை ஓயப்பண்ணினேன்; ஆலையை மிதிக்கிற கொக்கரிப்பு இல்லை; கொக்கரிப்பு இனி கொக்கரிப்பு அல்ல.

*ஏசா. ௰௬. ௰.

௩௪ எஸ்போனைத்துவக்கி எலெயாலேமட்டாகவும் யாகாஸ்மட்டாகவும் உண்டாகும் கூப்பிடுதலைத்தொட்டு அவர்கள் மூன்று வயதுக் கிடாரியைப்போலே, சோவாராத் துவக்கி ஒரோனாயீம்மட்டாகவும் தங்கள் சத்தத்தைக் காட்டுவார்கள்; ஏனெனில், நிம்ரீமின் நீர்ப்பாய்ச்சல்களும் பாழ்த்துப்போய்க் கிடக்கும்.

௩௫ ¶ மோவாபு தேசத்திலே மேடைகளில் பலியிடுகிறவனையும் தன் தேவர்களுக்குத் தூபங்காட்டுகிறவனையும் ஓயப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௬ ஆகையால் மோவாபின்நிமித்தம் *என் இருதயம் நாகசுரங்களைப்போல துயரமாய்த் தொனிக்கும்; கீராரேசின் மனுஷரின்நிமித்தமும் என் இருதயம் நாகசுரங்களைப்போலே துயரமாய்த் தொனிக்கும்; அவர்கள் மீதியாக வைத்துவைத்தது அழிந்துபோகிறபடியினாலேதானே.

*ஏசா. ௰௬. ௰௧.

௩௭ ஏனெனில், தலைகள் எல்லாம் மொட்டையிட்டும் தாடிகள் எல்லாம் கத்திரித்தும் இருக்கும்; கைகளில் எல்லாம் கீறுதல்களும் அரைகளில் இரட்டுடுப்பும் உண்டு.

௩௮ மோவாபுடைய சகல வீடுகளின்மேலும் அதினுடைய தெருக்களிலேயும் ஏகப்புலம்பல் உண்டாம்; ஏனெனில், விருப்பமில்லாத பாண்டத்தைப்போலே மோவாபை உடைத்துப்போட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௯ எத்தனையாய் முறிந்துபோயிற்றென்று அலறுகிறார்கள்; மோவாபு எத்தனையாய் முதுகைக்காட்டி வெட்கப்படும்? இப்படி மோவாபு தன் சுற்றுப்புறத்தார் அனைவருக்கும் பரியாசமும் திகைப்புமாயிருக்கும்.

௪௰ ¶ ஏனெனில், இதோ, *கழுகைப்போலே பறந்துவந்து, மோவாபின்மேல் தன் செட்டைகளை விரிப்பான். *எரே. ௪௯. ௨௨.

௪௧ பட்டணங்கள் வாங்கப்படும்; கோட்டைகள் பிடிக்கப்படும்; அந்நாளிலே மோவாபுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம் வாதைப்படுகிற ஸ்திரியின் இருதயத்தைப்போல இருக்கும்.

௪௨ மோவாபு சனமாயிராதபடிக்கு அழிக்

கப்படும்; ஏனெனில், கர்த்தருக்கு விரோதமாகப் பெருமையாய்ப்போயிற்று.

௪௩ மோவாபுடைய தேசத்தின் குடியே, *திகிலும், படுகுழியும், கண்ணியும் உன்மேல் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௨௪. ௰௭, ௰௮.

௪௪ திகிலை விலக ஓடுகிறவன் படுகுழியிலே விழுவான்; படுகுழியிலிருந்து ஏறுகிறவனோ கண்ணியிலே பிடிபடுவான்; ஏனெனில், அவர்கள் விசாரிக்கப்படும் வருஷத்தை அதின்மேலே, அதாவது, மோவாபின்மேலேதானே வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪௫ வல்லமைக்குத் தப்ப ஓடிப்போகிறவர்கள் எஸ்போனின் நிழலில் தரித்துக்கொள்ளுகிறார்கள்; ஆனால் *நெருப்பு எஸ்போனிலும், அக்கினிச்சுவாலை சீகோனுடைய ஊரின் நடுவிலுமிருந்து புறப்பட்டு, மோவாபுதேசத்தின் மூலைகளையும், அமளிக்காரரின் உயர்ந்த தலையையும் பட்சிக்கும். *௪ மோ. ௨௧. ௨௮, ௨௯.

௪௬ ¶ மோவாபே, உனக்கு ஐயோ! காமோஸ் விக்கிரகத்தின் சனம் அழியும்; ஏனெனில், உன் குமாரரும் சிறைபிடிக்கப்பட்டு, உன் குமாரத்திகளும் சிறைபிடிக்கப்பட்டுப் போகிறார்கள்.

௪௭ ஆனால் *கடைசிநாட்களில் மோவாபின் சிறையிருப்பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; மோவாபின்மேல் வரும் நியாயத்தீர்ப்பின் செய்தி இந்தமட்டும் சரி. *எரே. ௪௯. ௩௯.

## ௪௯. அதிகாரம்.

அம்மோன் புத்திரருக்குச் செல்வது; *கர்த்தர் சொல்லுகிறதாவது: இஸ்ரவேலுக்குப் பிள்ளைகள் இல்லையோ? அவனுக்குச் சுதந்தரவாளி இல்லையோ? மல்காம் காத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு, அதின் சனம் இவன் பட்டணங்களில் குடியிருப்பானேன்? *எசே. ௨௫. ௧-௭.

௨ ஆகையால், இதோ, நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது அம்மோன் புத்திரரின் பட்டணமாகிய ரபாவிலே யுத்தத்தின் ஆர்ப்பரிப்பைக் கேட்கப்பண்ணுவோம்; அது பாழான மண்மேடாகும்; அதற்கடுத்த ஊர்களும் அக்கினியால் சுட்டெரிக்கப்படும்; ஆனால் இஸ்ரவேல் தன் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டவர்களின் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ எஸ்போனே, அலறு; ஏனென்றால் ஆயி பாழ்க்கடிக்கப்பட்டது; ரபாவின் குமாரத்திகளே, கூப்பிடுங்கள்; இரட்டை உடுத்திக்கொண்டு, புலம்பி, வேலிகளில் சுற்றித்திரியுங்கள்; ஏனெனில், மல்காம் *சிறையிருப்பிலே போகிறது; அதின் ஆசாரியர்களும் அதின் பிரபுக்களுங்கூடத்தானே. *எரே. ௪௮. ௭.

௪ ¶ எனக்கு விரோதமாய் வருபவன் யாவனென்று சொல்லி, உன் பொக்கிஷங்களை நம்பின மாறுபாடான குமாரத்தியே, நீ பள்ளத்தாக்குகளைப்பற்றிப் பெருமைபாராட்டுவானேன்? உன்னுடைய பள்ளத்தாக்கு கரைந்துபோகிறது.

௫ இதோ, உன் சுற்றுப்புறத்தாராலே எல்லாம் உன்மேல் திகிலை வரப்பண்ணுவோம் என்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; நீங்கள் அவரவர் தம்தம் முன் இருக்கும் வழியே ஓடத் துரத்தப்படுவீர்கள்; வலசைவருகிறவர்களைச் சேர்ப்பாருமில்லை.

௬ *அதற்குப்பிற்பாடோவென்றால் அம்மோன் புத்திரருடைய சிறையிருப்பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௪௮. ௪௭.

௭ ¶ *ஏதோமுக்குச் செல்வது; சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: தேமானிலே இனி ஞானமில்லையோ? ஆலோசனை உணர்வுள்ளவர்களைவிட்டு அழிந்ததோ? அவர்களுடைய ஞானம் கெட்டுப்

போயிற்றோ? *ஏசே. ௨௫. ௰௨–௰௪: ௩௫. ௧. மு. ஒப. ௧. வச. மு.

௮ தேதானின் குடிகளே, ஓடுங்கள்; முதுகைக் காட்டுங்கள்; தங்குகிறதற்காக ஆழங்களில் பதுங்குங்கள்; ஏனெனில், ஏசாவின் ஆபத்தையும் அவனை விசாரிக்குங்காலத்தையும் அவன்மேலே வரப்பண்ணுவோம்.

௯ திராட்சப்பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்திலே வந்தார்களாகில், பின்னறுப்பைக் கொஞ்சம் வையார்களோ? இராத்திரியில் திருடர் வந்தார்களாகில், தங்களுக்குப் போதுமென்றமட்டாக அல்லவோ கேடு செய்வார்கள்.

௰ ¶ நாமோவெனில் ஏசாவைத் திறப்பாக்கி, அவன் ஒளித்துக்கொள்ளக்கூடாதபடிக்கு அவனுடைய மறைவுகளை வெளியாக்கிப்போடுவோம்; அவனுடைய வித்தாயிருக்கிறவர்களும் அவனுடைய சகோதரரும் அவனுடைய அயலாரும் பாழ்க்கடிக்கப்படுவார்கள்; அவன் இனி இல்லை.

௰௧ திக்கற்றிருக்கப்போகிற உன் பிள்ளைகளைத் தளரவிடு, நாம் அவைகளை உயிரோடே காப்பாற்றுவோம்; உன் விதவைகள் நம்மையே நம்புவார்களாக.

௰௨ ¶ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, *பாத்திரத்தில் குடிக்கவேண்டுமென்ற நியாயத்தீர்ப்புக்கு உள்ளாயிராதவர்கள் அதில் குடிக்கவே குடித்தார்கள்; நீ குற்றமற்று நீங்கலாயிருப்பவனோ? நீ நீங்கலாயிராமல் அதில் குடிக்கவே குடிப்பாய். *எரே. ௨௫. ௨௯. ௧ பே. ௪. ௰௭.

௰௩ ஏனெனில், *பொத்ரா பாழும் நிந்தையும் அவாந்தரமும் பழிப்புமாக இருக்குமென்றும், அதின் பட்டணங்கள் எல்லாம் நித்தியவனாந்தரங்களாயிருக்குமென்றும் நம்மைக்கொண்டு ஆணையிட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௩௪. ௯: ௬௩. ௧. ஏசே. ௩௫. ௯.

௰௪ ¶ *நீங்கள் கூடிக்கொண்டு, அதற்கு விரோதமாக வந்து, யுத்தம்பண்ணுகிறதற்கு எழும்புங்களென்று சொல்ல, சாதிகளண்டைக்குத் தாறுபத்தியம் அனுப்பப்படுகிற செய்தியைக் கர்த்தரிடத்திலே கேள்விப்பட்டேன். *ஒப. ௧. வச.

௰௫ ஏனெனில், இதோ, உன்னைச் சாதிகளுக்குள்ளே சிறியதும், மனுஷருக்குள்ளே அசட்டைபண்ணப்பட்டதுமாக்குகிறோம் என்கிறார்.

௰௬ கல்மலை வெடிப்புகளில் வாசம்பண்ணி, மேடுகளின் உயரத்தைப் பிடித்திருக்கிற உன்னை உன்னுடைய பயங்கரநிலையும் உன் இருதயத்தின் அகந்தையும் மோசம்போக்கிற்று; *நீ கழுகைப்போலே உயரத்தில் உன் கூட்டைக் கட்டினாலும் அங்கேயிருந்து உன்னை விழப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஒப. ௪. வச.

௰௭ ¶ அப்படியே ஏதோம் கெடியாக இருக்கும்; *அதைக் கடந்துபோகிறவன் எல்லாம் அதினுடைய எல்லா வாதைகளின் நிமித்தமும் பிரமித்து இசல் போடுவான். *எரே. ௫௰. ௰௩.

௰௮ *சோதோமும் கொமோராவும் அவைகளின் அயலூர்களும் கவிழ்க்கப்பட்டதற்குச் சமானமாயிருக்கும் என்று கர்த்தர் சொல்லுகிறார்; அங்கே ஒருவனும் குடியிருப்பதில்லை, அதில் ஒரு மனுஷன் தங்குவதுமில்லை. *எரே. ௫௰. ௪௰. ௧ மோ. ௰௯. ௨௫.

௰௯ *இதோ, புரண்டு ஓடுகிற யோர்தானிடத்திலிருந்து சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான்; ஏனென்றால் அவனை அங்கேயிருந்து அசுப்பிலே ஓடிவரப்பண்ணுவோம்; நாம் அதற்கு விரோதமாகக் கட்டளையிட்டு அனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவன் யாவன்? ஏனெனில், நமக்குச் சமானமானவன் யாவன்? நமக்குத் திட்டஞ்சொல்லுபவன் யாவன்? நமக்குமுன்பாக நிலைநிற்கப்போகிற மேய்ப்பன் யாவன்?

*எரே. ௫௰. ௪௪–௪௬.

௨௰ ¶ ஆகையால் கர்த்தர் ஏதோமுக்கு விரோதமாக யோசித்த ஆலோசனையையும், அவர் தேமானின் குடிகளுக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையும் கேளுங்கள்; மெய்யாகவே மந்தையில் சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள்; மெய்யாகவே அவர்கள் இருக்கிற அவர்களுடைய தாபரங்களைப் பாழாக்குவார்.

௨௧ அவைகளுடைய விழுதலின் சத்தத்தினாலே பூமி அதிரும்; கூப்பிடுதலின் சத்தம் நாணற்கடல்மட்டும் கேட்கப்படும்.

௨௨ இதோ, ஒரு கழுகைப்போல எழும்பி, பறந்துவந்து, தன் செட்டைகளைப் பொஸ்றாவின்மேல் விரிப்பான்; அந்நாளிலே ஏதோமுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம் *வாதைப்படுகிற ஸ்திரீயின் இருதயத்தைப்போல இருக்குமென்கிறார்.

*எரே. ௪௮. ௪௧.

௨௩ ¶ *தமஸ்குவுக்குச் செல்வது; காமாத்தும் அர்ப்பாத்தும் வெட்கப்படுகின்றன; பொல்லாத செய்தியை அவர்கள் கேட்டபடியினாலே கரைந்துபோகிறார்கள்; சமுத்திரத்தோரமாய் விசாரமுண்டு; அது அமர்ந்திருக்கக்கூடாது. *ஏசா. ௰௭. ௧. ஆமோ. ௧. ௩-௫.

௨௪ தமஸ்கு தளரும்; ஓடிப்போகும்படிக்கு முதுகைக்காட்டும்; திகில் அதைப்பிடித்தது; பிள்ளைப்பெறுகிறவளைப்போல இடுக்கமும் வேதனைகளும் அதைப் பிடித்தன.

௨௫ என்னுடைய சந்தோஷமான ஊராகிய அந்தப் புகழ்ச்சியுள்ள பட்டணம் தப்பவிடப்படாதேபோனதெப்படி?

௨௬ ¶ ஆனதுகொண்டு அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுந்து, யுத்தமனுஷர் எல்லாரும் அந்நாளிலே சங்காரமாவார்களென்றுசேனைகளுடையகர்த்தர்சொல்லுகிறார்.

௨௭ ¶ தமஸ்குவின் மதில்களில் அக்கினியைக் கொளுத்துவோம்; அது பெனாதாத்தின் அரமனைகளைப் பட்சிக்கும் என்கிறார்.

௨௮ ¶ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் முறியடித்த கேதாருக்கும் காத்சோருடைய இராச்சியங்களுக்கும் செல்வது; கர்த்தர் சொல்லுகிறதாவது: எழும்பி, கேதாருக்கு விரோதமாகப்போயேறி, கிழக்குத்திசைப் புத்திரரைப் பாழ்க்கடியுங்கள்.

௨௯ அவர்களுடைய கூடாரங்களையும் அவர்கள் மந்தைகளையும் வாங்கி, அவர்கள் திரைகளையும் அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுகளையும் அவர்களுடைய ஒட்டகங்களையும் தங்களுக்கென்று கொண்டுபோய், பயஞ்சூழ்ந்திருக்குமென்று சொல்லி, அவர்கள்மேலே ஆர்ப்பரிப்பார்கள்.

௩௰ காத்சோரின் குடிகளே, ஓடி, மிகவும் அலையுங்கள்; தங்கும்படிக்கு ஆழங்களில் பதுங்குங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் உங்களுக்கு விரோதமாக ஆலோசனையை யோசித்து, உங்களுக்கு விரோதமாக நினைவுகளை நினைத்திருக்கிறான்.

௩௧ ¶ அஞ்சாமல் சாங்கோபாங்கத்தோடே குடியிருக்கிற சாதிக்கு விரோதமாக எழும்பிப் போயேறுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; அதற்கு வாசல்களுமில்லை; தாழ்ப்பாள்களுமில்லை; அவாந்தரமாய்த் தங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

௩௨ அவர்களுடைய ஒட்டகங்கள் கொள்ளையும், அவர்களுடைய ஆடுமாடுகளின் ஏராளம் சூறையுமாய்ப்போகும்; நாம் அவர்களைச் சகல காற்றுத்திசைகளுமான கடையாந்தர மூலைகளில் இருக்கிறவர்களண்டைக்குச் சிதற அடித்துவிட்டு, அதினுடைய சகல புறங்களிலுமிருந்து அவர்களுடைய ஆபத்தை வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௩ காத்சோர் வலுவான சர்ப்பங்களின் தாபரமாகி, என்றென்றைக்கும் பாழாய்க் கிடக்கும்; ஒருவனும் அங்கே குடியிருப்பதில்லை, ஒரு மனுஷபுத்திரனும் அதிலே தங்குவதில்லையென்கிறார்.

௩௪ ¶ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவினுடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே, ஏலாமுக்கு விரோதமாக எரேமியாவென்ற தீர்க்கதரிசிக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.

௩௫ ¶ சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் ஏலாமுடைய வில்லென்கிற அவர்களுடைய பிரதான வல்லமையை முறித்துப்போட்டு,

௩௬ வானத்தின் நாலுதிசைகளிலுமிருந்து நாலு காற்றுகளை ஏலாமின்மேல் வரப்பண்ணி, அவர்களை இந்த எல்லாக் காற்றுத்திசைகளிலும் சிதறஅடிப்போம்; ஏலாமுடைய தேசத்திலிருந்து துரத்துண்டவர்கள் வராதிருக்கும் சாதியில்லை.

௩௭ நாம் ஏலாமியரை அவர்கள் சத்துருக்களுக்கு முன்பாகவும் அவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களுக்கு முன்பாகவும் கலங்கப்பண்ணி, நமது கோபத்தின் உக்கிரமாகிய தீங்கை அவர்கள்மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் அவர்களை நிர்மூலமாக்குமட்டும் பட்டயத்தை அவர்களுக்குப் பின்னாக அனுப்பி,

௩௮ நம்முடைய ஆசனத்தை ஏலாமிலே வைத்து, அங்கேயிருந்து இராசாவையும் பிரபுக்களையும் அழித்துப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௯ ஆனால் *கடைசிநாள்களிலே நாம் ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவதுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார்.

*எரே. ௪௮. ௪௭.

## ௫௰. அதிகாரம்.

கர்த்தர் தீர்க்கதரிசியாகிய எரேமியாவைக்கொண்டு *பாபேலுக்கும் கல்தேயர் தேசத்துக்கும் விரோதமாக உரைத்த வசனமாவது: *எரே. ௨௫. ௧. மு. ஏசா. ௰௩. ௧. மு: ௰௪. ௧. மு.

௨ பாபேல் பிடிபட்டது; பேல் வெட்கப்பட்டது; மெரோதாக் கலங்கிப்போயிற்று; அவர்களுடைய விக்கிரகங்கள் வெட்கப்பட்டன; அவர்களுடைய நரகலான தேவர்கள் கலங்கிப்போனார்களென்று சாதிகளுக்குள்ளே அறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள்; அதை மறைக்காமல் கொடியேற்றிக் கேட்கப்பண்ணுங்கள்.

௩ ஏனென்றால், அதற்கு விரோதமாய் வடக்கேயிருந்து ஒரு சாதி போயேறுகிறது; இது அதின் தேசத்தைப் பாழாக்கிப்போடும்; அதிலே குடியிருப்பாரில்லை; மனுஷரோடே மிருகங்களும் ஓடிப்போய்விடும்.

௪ ¶ அந்நாள்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேல் புத்திரர் வருவார்கள்; அவர்களும் யூதாப்புத்திரரும் ஏகமாய் *அழுது, நடந்துவந்து, தங்கள் பராபரனாகிய கர்த்தரைத் தேடுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௩௧. ௯.

௫ மறக்கப்படாத நித்திய உடம்படிக்கையாய்க் கர்த்தரைச் சேர்ந்துகொள்ளுவோம், வாருங்களென்று இவ்விடத்துக்கு முகங்களைத் திருப்பினவர்களாக இருந்து, சீயோனுக்குப்போகிறவழி ஏதென்று விசாரித்துக் கேட்பார்கள்.

௬ ¶ நமது சனம் காணாமற்போன ஆடுகளானவர்கள்; அவர்களுடைய மேய்ப்பர் அவர்களைச் சிதறப்பண்ணி, பருவதங்களில் அலையத் திருப்பிவிட்டார்கள்; ஒருபருவதத்திலிருந்து மற்ற மேட்டின்மேற் போனார்கள்; தங்கள் தொழுவத்தை மறந்துவிட்டார்கள்.

௭ அவர்களைக் கண்டுபிடித்தவர்கள் எல்லாரும் அவர்களைப் பட்சித்து, அவர்களுடைய சத்துருக்கள்: எங்கள்மேல் குற்றமில்லை; ஏனெனில், அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே கர்த்தருக்கு விரோதமாய், தங்கள் பிதாக்கள் நம்பின கர்த்தருக்கு விரோதமாய்த்தானே பாவம்செய்தார்களென்றார்கள்.

௮ ¶ *பாபேலின் நடுவிலிருந்தோடி, கல்தேயர் தேசத்தைவிட்டுப் புறப்பட்டு, மர

தையின் முன்நடக்கும் கடாக்களைப்போல இருங்கள். *எரே. ௫௧. ௯, ௪௫.

௯ ஏனெனில், இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாக வடதேசத்தில் இருக்கும் பெரிய சாதிகளின் கூட்டத்தை எழுப்பி, அதைப் போயேறப்பண்ணுவோம்; அவர்கள் அதற்கு விரோதமாய் ஆயத்தம்பண்ணுவார்கள்; அங்கேயிருந்து வருகிறவர்களால் அது பிடிக்கப்படும்; அவர்களுடைய அம்புகள் உணர்வுள்ள பராக்கிரமசாலியின் அம்புகளைப்போல இருக்கின்றன; அவைகள் பழுதாய்த் திரும்புவதில்லை.

௰ கல்தேயர் கொள்ளையாம், அதைக் கொள்ளையிடுகிறவர்கள் எல்லாரும் பரிபூரணமடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ அதேனென்றால் நமது சுதந்தரத்தைக் கொள்ளையிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்தீர்களே, புல்மேய்ந்து கொழுத்திருக்கும் கன்றுக்குட்டியைப்போலப் பூரித்து, வலுவான புரவிகளைப்போலக் கனைப்பீர்களே.

௰௨ உங்கள் தாய் மிகவும் வெட்கி, உங்களைப் பெற்றவள் நாணமடைகிறாள்; இதோ, அவள் சாதிகளுக்குள்ளே கடைசியானவளும் வனாந்தரமும் வறட்சியும் அந்தரவெளியுமாவாள்.

௰௩ கர்த்தரின் கடுமையினாலே அது *குடியற்றதும் முழுதும் பாழுமாயிருக்கும்; பாபேலைக் கடந்துபோகிறவன் எல்லாம் அதினுடைய எல்லா வாதைகளினிமித்தமும் பிரமித்து, இசல்போடுவான்.
*எரே. ௪௯. ௰௭.

௰௪ ¶ வில்லை நாணேற்றுகிற நீங்கள் எல்லாரும் பாபேலுக்கு விரோதமாகச் சுற்றிலும் பவுஞ்சிட்டு, அதில் எய்யுங்கள்; அதின்மேல் அம்புகளை எய்யுங்கள்; அம்புச்செலவைக் குறைக்காதேயுங்கள்; ஏனெனில், கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தது.

௰௫ அதற்கு விரோதமாகச் சுற்றிலும் ஆர்ப்பரியுங்கள்; அது தன்னைக் கையளித்தது; அதின் அஸ்திபாரங்கள் விழுந்தன, அதின் மதில்கள் இடிக்கப்பட்டன; ஏனெனில், இது கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுதலாயிருக்கிறது; அதற்கு நீதியைச் சரிக்கட்டுங்கள்; *அது செய்ததுபோலே நீங்கள் அதற்குச் செய்யுங்கள். *வெளி. ௰௮. ௬.

௰௬ விதைவிதைக்கிறவனையும் அறுப்புக்காலத்தில் அரிவாளைப் பிடிக்கிறவனையும் பாபேலில் இராதபடிக்குச் சங்காரம்பண்ணுங்கள்; அழிக்கிற பட்டையத்துக்குத் தப்ப *அவரவர் தங்கள் சனத்தண்டைக்குத் திரும்பிக்கொண்டு, அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள்.
*எரே. ௪௯. ௰௯.

௰௭ ¶ இஸ்ரவேல் சிங்கங்கள் துரத்திச் சிதறுண்ட ஆடு; முதல் அசூரியாவின் இராசா அதைப் பட்சித்தான்; இப்போது கடைசியிலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் அதின் எலும்புகளை முறித்தான்.

௰௮ ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் அசூரியாவின் இராசாவை விசாரித்ததுபோலே பாபேலின் இராசாவையும் அவன் தேசத்தையும் விசாரித்து,

௰௯ இஸ்ரவேலை அதின் வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப்பண்ணுவோம்; அப்போது அது கர்மேலிலும் பாசானிலும் மேயும்; எப்பிராயீமின் மலைகளிலும் கிலேயாத்திலும் அதின் ஆத்துமா திருத்தி அடையும்.

௨௰ அந்நாள்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேலின் அக்கிரமம் தேடப்பட்டால் அது இல்லாதிருக்கும்; யூதாவின் பாவங்கள் தேடப்பட்டால் அவைகள் கிடையாதிருக்கும்; ஏனென்றால் நாம் மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௧ ¶ கலகங்களுள்ள தேசத்துக்கு விரோதமாகவும் விசாரிக்கப்படும் குடிகளுக்கு விரோதமாகவும் போயேறு; நீ அவர்களைத் துரத்துகையில் யாவையும் பாழ்க்கடித்துச் சங்காரம்பண்ணி, நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாம் செய்யென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨ தேசத்திலே யுத்தத்தின் சத்தமும் மகா நொறுக்குதலும் உண்டு.

௨௩ *பூமி அனைத்தின் சம்மட்டி எத்தனையாய் முறித்து உடைக்கப்பட்டது! பாபேல், சாதிகளுக்குள்ளே எத்தனையாய்ப் பாழாயிற்று! *எரே. ௫௧. ௨௰.

௨௪ பாபேலே, உனக்குக் கண்ணியை வைத்தோம், நீ அதை அறியாமல் அதிலே சிக்குண்டும் போனாய்; நீ அகப்பட்டும் பிடிபட்டும் போனாய், ஏனென்றால் கர்த்தரோடே யுத்தங்கலந்தாய்.

௨௫ ¶ கர்த்தர் தம்முடைய ஆயுதசாலையைத் திறந்து, தம்முடைய சினத்தின் பணிமுட்டுகளை எடுத்துவந்தார்; ஏனெனில், இது கல்தேயர் தேசத்திலே சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் செய்கிற கிரியை.

௨௬ கடையாந்தரத்திலிருந்து அதற்கு விரோதமாக வந்து, அதின் களஞ்சியங்களைத் திறந்து, அதைப் போர்களைப்போலே பரப்பி, அடித்து, அதில் ஒன்றும் மீதியாகாதபடிக்கு அதைச் சங்காரம்பண்ணுங்கள்.

௨௭ அதின் காளையெருதுகளை எல்லாம் பட்டையத்தால் வெட்டுங்கள்; அவைகள் அடிக்கப்பட இறங்கிப்போகக்கடவன; அவர்களுக்கு ஐயோ! ஏனெனில், அவர்கள் விசாரிக்கப்படும் அவர்களுடைய நாள் வந்தது.

௨௮ நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டினதையும், அவர் தமது தேவாலயத்துக்காக நீதியைச் சரிக்கட்டினதையும், சீயோனிலே அறிவிக்கும்படிக்கு, பாபேல் தேசத்திலிருந்து ஓடித் தப்பிவந்தவர்களின் சத்தம் கேட்கப்படும்.

௨௯ ¶ எய்கிற எல்லா வில்லுக்காரருமாகிய நீங்கள் பாபேலுக்கு விரோதமாகச் சத்தங்கேட்கப்பண்ணுங்கள்; ஒருவரும் தப்பிப்போகாதபடிக்கு அதற்கு விரோதமாகச் சுற்றிலும் பாளயம் இறங்குங்கள்; அதின் கிரியைக்குத்தக்க பலனை அதற்குச் சரிக்கட்டுங்கள்; *அது செய்ததின்படியெல்லாம் அதற்குச் செய்யுங்கள்; ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாக இடும்புசெய்தது; இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோதமாகத்தானே. *சங். ௱௩௭. ௮.

௩௰ ஆகையால் அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுவார்கள்; அதின் யுத்தமனுஷர் எல்லாரும் அந்நாளிலே சங்காரமாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧ ¶ இதோ, இடும்புள்ளவனே, நாம் உனக்கு விரோதமாக வருகிறோமென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; ஏனெனில், உன்னை விசாரிக்கும் காலமாகிய உன்னுடைய நாள் வந்தது.

௩௨ இடும்புள்ளவன் இடறிவிழுவான்; அவனை எடுத்து நிறுத்துவாரில்லை; நாம் அவன் பட்டணங்களில் அக்கினியைக் கொளுத்துவோம், அது அவன் சுற்றுப்புறத்தாரை எல்லாம் பட்சிக்கும்.

௩௩ ¶ சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இஸ்ரவேல் புத்திரரும் யூதா புத்திரரும் ஏகமாய் ஒடுங்குண்டார்கள்; அவர்களைச் சிறையாக்கின யாவரும் அவர்களை விடமாட்டோமென்று கெட்டியாய்ப் பிடித்தார்கள்.

௩௪ அவர்களுடைய மீட்பரோவெனில் வல்லமையுள்ளவர்; சேனைகளுடைய கர்த்தர் என்பது அவருடைய நாமம்; தேசத்தை இளைப்பாறப்பண்ணுவதற்கும் பாபேலின் குடிகளைத் தத்தளிக்கப்பண்ணுவதற்குமாக அவர்களுடைய வழக்கை அவர் வழக்காடவே வழக்காடுவார்.

௩௫ ¶ பட்டையம் கல்தேயரின்மேலும், பாபேலுடைய குடிகளின்மேலும், அதினு

டைய பிரபுக்களின்மேலும், அதினுடைய ஞானிகளின்மேலும் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௬ பட்டயம் கட்டுக்கதைக்காரர்மேலும் வரும்; அவர்கள் பயித்தியக்காரர் ஆவார்கள்; பட்டயம் அதினுடைய பராக்கிரமசாலிகள்மேல் வரும், அவர்கள் கலங்குவார்கள்.

௩௭ பட்டயம் அதினுடைய குதிரைகளின்மேலும், அதினுடைய இரதங்களின்மேலும், அதின் நடுவிலே இருக்கிற பலவித சனக்கலப்பு அனைத்தின்மேலும் வரும்; அவர்கள் பெண்சாதிகளாவார்கள்; பட்டயம் அதினுடைய பொக்கிஷங்களின்மேல் வரும், அவைகள் கொள்ளையாகும்.

௩௮ வறட்சி அதினுடைய தண்ணீர்களின்மேல் வரும், அவைகள் வறண்டுபோம்; ஏனெனில், அது சுரூபங்களின் தேசம்; அருக்களிப்பானவைகளின்மேலே பெருமை பாராட்டுகிறார்கள்.

௩௯ ஆகையால் *வனாந்தர சிவன்களும் நரிகளும் அதிலே குடியிருக்கும்; கோட்டான்கள் அதிலே தங்கும்; இனி என்றென்றைக்கும் அது குடியேற்றப்படுவதில்லை; தலைமுறைதலைமுறையாக ஒருவரும் அதில் தாபரிப்பதுமில்லை. *ஏசா. ௰௩. ௨௧, ௨௨. வெளி. ௰௮. ௨.

௪௰ *பராபரன் சோதோமையும் கொமோராவையும் அதின் அயலூர்களையும் கீழதுமேலதாக்கிப்போட்டதுபோலே இருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஒருவரும் அதில் குடியிருப்பதில்லை; ஒரு மனுப்புத்திரனும் அதில் தங்குவதுமில்லை. *எரே. ௪௯. ௰௮.

௪௧ ¶ இதோ, *வடக்கேயிருந்து சனசதளமும் பெரிய சாதியும் வரும்; பூமியின் பக்கங்களிலிருந்து பலத்த இராசாக்கள் எழும்புவார்கள். *௯. ௨௪.

௪௨ அவர்கள் வில்லுகளையும் இட்டிகளையும் பிடித்துவருவார்கள்; அவர்கள் இரங்காமல் கொரூரராயிருப்பார்கள்; அவர்கள் சத்தம் சமுத்திரத்தைப்போல இரையும்; பாபேல் குமாரத்தியே, அவர்கள் உனக்கு விரோதமாக யுத்தத்துக்கு ஆயத்தப்பட்ட ஆண்களாய்க் குதிரைகளின்மேல் ஏறிவருவார்கள்.

௪௩ அவர்கள் வருகிற செய்தியைப் பாபேலின் இராசா கேட்கையில் அவன் கைகள் தளரும்; இடுக்கமும் பிள்ளைப்பெறுகிறவளைப்போல வாதையும் அவனைப் பிடிக்கும்.

௪௪ *இதோ, புரண்டு ஓடுகிற யோர்தானிலிருந்து சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான்; ஏனென்றால் அவனை அங்கேயிருந்து அசப்பிலே ஓடிவரப்பண்ணுவோம்; நாம் அதற்கு விரோதமாகக் கட்டளையிட்டு, அனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவன் யாவன்? ஏனெனில், நமக்குச் சமானமானவன் யாவன்? நமக்குத் திட்டஞ்சொல்பவன் யாவன்? நமக்குமுன்பாக நிற்கப்போகிற மேய்ப்பன் யாவன்?
*எரே. ௪௯. ௰௯—௨௧.

௪௫ ¶ ஆகையால் கர்த்தர் பாபேலுக்கு விரோதமாக யோசித்த ஆலோசனையையும், அவர் கல்தேயர் தேசத்துக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையும் கேளுங்கள்; மெய்யாகவே மந்தையில் சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள்; மெய்யாகவே அவர்கள்மேல் இருக்கிற தாபரங்களைப் பாழாக்குவார்.

௪௬ பாபேல் பிடிபட்டதின் சத்தத்தினால் பூமி அதிரும், அதின் கூப்பிடுதல் சாதிகளுக்குள்ளே கேட்கப்படும்.

## ௫௧. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாகவும் நமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களின் நடுமையத்தில் குடியிருக்கிறவர்களுக்கு விரோதமாகவும் கேடுள்ள காற்றை எழும்பப்பண்ணி,

௨ தூற்றுவாரைப் பாபேலுக்கு அனுப்புவோம்; அவர்கள் அதைத் தூற்றி, வெறுமையாக்கிப்போடுவார்கள்; ஏனெனில், தீங்கின்நாளிலே அதற்கு விரோதமாய்ச் சூழ்ந்துகொண்டிருப்பார்கள்.

௩ நாணேற்றுகிறவனுக்கு விரோதமாகவும், தன் சீராவில் மனமேட்டிமையானவனுக்கு விரோதமாகவும், வில்லுக்காரன் தன் வில்லை நாணேற்றக்கடவான்; அதின் வாலிபரைத் தப்பவிடாமல் அதின் சேனையை எல்லாம் சங்காரம்பண்ணுங்கள்.

௪ கல்தேயரின் தேசத்தில் கொலைசெய்யப்பட்டவர்களுமாய் அதின் வீதிகளில் குத்திப்போடப்பட்டவர்களுமாய் விழுவார்கள்.

௫ ¶ ஏனெனில், இஸ்ரவேலும் யூதாவும் தங்கள் தேசம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குமுன்பாகக் குற்றங்களால் நிறைந்தபடியினால், உட்பட்ட *விதவையிருப்பிலே சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனாலே வைக்கப்படுவதில்லை.
*ஏசா. ௫௪. ௪.

௬ ¶ *நீங்கள் பாபேலின் அக்கிரமத்தில் சங்காரமாகாதபடிக்கு அதின் நடுவிலிருந்து ஓடி, அவரவர் தங்கள் ஆத்துமாவைத் தப்புவியுங்கள்; ஏனெனில், இது † கர்த்தர் அதற்கு நீதியைச் சரிக்கட்டுகிற காலமாயிருக்கிறது; அவர் அதற்குப் பதில் செலுத்துவார். *எரே. ௫௰. ௮. வெளி. ௰௮. ௪.
†ஏசா. ௩௪. ௮.

௭ கர்த்தருடைய கையில் பாபேல், பூமி அனைத்தையும் வெறிக்கப்பண்ணின பொற்பாத்திரமாயிருந்தது; அதின் மதுபானத்தில் சாதிகள் குடித்தார்கள்; ஆகையால் சாதிகள் மதிகெட்டுப்போனார்கள்.

௮ *அசப்பிலே பாபேல் விழுந்து தகர்ந்தது; அதற்காக அலறுங்கள்; அதின் நோவை ஆற்றப் பிசின்தயிலத்தை வாங்குவார்கள்; ஒருவேளை குணமாம். *வெளி. ௰௮. ௨.

௯ ¶ பாபேல் குணமாகும்படிக்குப்பார்த்தோம், அது குணமானதில்லை; அதை விட்டுவிடுங்கள், நாம் அவரவர் நம்முடைய தேசங்களுக்குப் போகக்கடவோம்; ஏனெனில், *அதின் ஆக்கினை வானமட்டும் எட்டி, ஆகாசமண்டலங்கள் பரியந்தம் ஏறிப்போயிற்று. *வெளி. ௰௮. ௫.

௰ கர்த்தர் *நம்முடைய நீதியை வெளிப்படுத்தினார்; நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் செயலைச் சீயோனில் விவரிப்போம், வாருங்கள். *சங். ௩௭. ௯.

௰௧ ¶ அம்புகளைத் துலக்குங்கள்; கேடகங்களை நன்றாய்ச் செப்பனிடுங்கள்; கர்த்தர் மேதியாவுடைய இராசாக்களின் ஆவியை எழுப்பினார்; ஏனெனில், அவருடைய நினைவு பாபேலுக்கு விரோதமாய் அதை அழிப்பதற்கு இருக்கிறது; அதேதென்றால் *இது கர்த்தர் சரிக்கட்டுகிற நீதி; இது தமது தேவாலயத்துக்காக அவர் சரிக்கட்டுகிற நீதிதானே. *எரே. ௫௰. ௨௮.

௰௨ பாபேலுடைய மதில்களின்மேல் கொடியேற்றுங்கள், காவலைப் பலப்படுத்துங்கள், சாமங்காக்கிறவர்களை நிறுத்துங்கள், பதிவிருப்பாரை வையுங்கள்; ஆனால் கர்த்தர் எப்படி நினைத்தாரோ அப்படியே தாம் பாபேலின் குடிகளுக்கு விரோதமாகச் சொன்னதைச் செய்வார்.

௰௩ *திரளான தண்ணீர்களின்மேல் வாசம்பண்ணுகிறவளே, பொக்கிஷங்கள் பெருத்தவளே, உன் முடிவும் உன் பொருளாசைக்கு ஒழிவும் வந்தன. *வெளி. ௰௭. ௧.

௰௪ மெய்யாகவே, பச்சைக்கிளிகளைத்தனை மனுஷரால் உன்னை நிரம்பப்பண்ணுவோம்; அவர்கள் உன்மேலே ஆர்ப்பரிப்பாகப் பாடுவார்களென்று சேனைகளின் கர்த்தர் தம்முடைய சீவனைக்கொண்டு ஆணையிட்டார்.

௰௫ ¶ *பூமியைத் தமது பலத்தினால் உண்டாக்கி, பூச்சக்கரத்தைத் தமது ஞானத்தால் படைத்து, வானத்தைத் தமது உணர்வினால் விரித்தவர்தாமே. *எரே. ௰. ௰௨

௰௬ *அவர் சத்தமிடுகையில் திரளான தண்ணீர் வானத்தில் உண்டாகிறது; அவர் பூமியின் துலைவுகளிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி, மழையுடனே மின்னல்களை உண்டாக்கி, காற்றைத் தமது பண்டகசாலையிலிருந்து ஏவிவிடுகிறார். *எரே. ௰. ௰௩.

௰௭ *மனுஷர் அனைவரும் அறிவில்லாமல் மிருகக்குணமானார்கள்; தட்டார் அனைவரும் சுருபங்களாலே வெட்கிப்போகிறார்கள்; ஏனெனில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவைகளில் ஆவி இல்லை.
*எரே. ௰. ௰௪, ௰௫.

௰௮ அவைகள் மாயையும் மகா எத்துக்களுமான கிரியையுமாயிருக்கின்றன; அவைகள் விசாரிக்கப்படும் நாளிலே அழியும்.

௰௯ *யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போல அல்ல; ஏனெனில், அவர் சர்வத்தையும் உண்டாக்கினவர்; அவன் அவருடைய சுதந்தரமான கோத்திரம்; சேனைகளுடைய கர்த்தர் என்பது அவருடைய நாமம். *எரே. ௰. ௰௬.

௨௰ ¶ நீ நமக்குச் *சம்மட்டியும் யுத்த ஆயுதமுமானவன்; நாம் உன்னைக்கொண்டு சாதிகளை நொறுக்கி, உன்னைக்கொண்டு இராச்சியங்களை அழித்துப்போட்டு,
*எரே. ௫௰. ௨௩.

௨௧ உன்னைக்கொண்டு குதிரையையும் அதின்மேல் ஏறியிருக்கிறவனையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு இரதத்தையும் அதின்மேல் ஏறியிருக்கிறவனையும் நொறுக்கி,

௨௨ உன்னைக்கொண்டு புருஷனையும் ஸ்திரீயையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு கிழவனையும் இளைஞனையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு வாலிபனையும் கன்னியாஸ்திரீயையும் நொறுக்கி,

௨௩ உன்னைக்கொண்டு மேய்ப்பனையும் அவனுடைய மந்தையையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு உழுகிறவனையும் அவனுடைய ஏர்க்குண்டையையும் தலைவனையும் அதிகாரியையும் நொறுக்கிப்போடுகிறோம்.

௨௪ ஆனால் பாபேலுக்கும் கல்தேயர் தேசத்தினுடைய சகல குடிகளுக்கும், நாம் அவர்கள் உங்கள் கண்களுக்கு முன்பாகச் *சீயோனில் பண்ணின அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பையும் சரிக்குச் சரிக்கட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௫௰. ௨௯.

௨௫ ¶ இதோ, பூமியை எல்லாம் கெடுக்கிற கேடான பருவதமே, நாம் உனக்கு விரோதமாக வந்து நமதுகையை உனக்கு விரோதமாக நீட்டி, உன்னைக் கல்மலைகளிலிருந்து உருட்டி, உன்னை வெந்த பருவதமாக்கிப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬ கோடிக்கல்லையாகிலும் அஸ்திபாரக்கலைப்போடுகிற கல்லையாகிலும் உன்னில் எடுக்கார்கள்; ஏனெனில், என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கிற தலமாவாயென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭ ¶ தேசத்திலே கொடியேற்றுங்கள்; சாதிகளுக்குள் எக்காளம் ஊதுங்கள்; சாதிகளை அதற்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள், ஆராராத், மின்னி, அஸ்கேனாஸ் என்ற இராச்சியங்களை அதற்கு விரோதமாக வரக்கூப்பிடுங்கள்; தளகர்த்தனை அதற்கு விரோதமாகப் பட்டங்கட்டுங்கள்; இறகடிக்கும் வண்டுக்குச் சாயலாகக் குதிரைகளைப் போயேறப்பண்ணுங்கள்.

௨௮ மேதியா தேசத்தின் இராசாக்களும் அதின் தலைவரும் அதினுடைய சகல அதிகாரிகளும் அவரவருடைய இராச்சியபாரத்துக்குக் கீழான சகல தேசத்தாருமாகிய சாதிகளை அதற்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள்.

௨௯ அப்போது தேசம் அதிர்ந்து வாதைப்படும்; ஏனெனில், பாபேலின் தேசத்தைக் குடியில்லாதபடியாகப் பாழாக்கும்படிக்குப் பாபேலுக்கு விரோதமாய்க் கர்த்தர் நினைத்தவைகள் நிலைக்கும்.

௩௰ ¶ பாபேலின் பராக்கிரமசாலிகள் யுத்

தம்பண்ணி, ஓய்ந்து, கோட்டைகளில் தரித்திருக்கிறார்கள்; அவர்கள் பராக்கிரமம் அழிந்து, பெண்டுகளானார்கள்; அதின் வாசல்தலங்களைக் கொளுத்திப்போட்டார்கள்; அதின்தாபரங்கள்உடைக்கப்பட்டன.

௩௧ கடையாந்தர முனைதுவக்கி அவனுடைய பட்டணம் பிடிபட்டதென்றும், துறைவழிகள் அகப்பட்டுப்போய், நாணல்கள் அக்கினியால் சுட்டெரிக்கப்பட்டன என்றும், யுத்தமனுஷர் கலங்கியிருக்கிறார்கள் என்றும் பாபேலின் இராசாவுக்கு அறிவிக்க,

௩௨ ஓட்டக்காரனுக்கு எதிராக ஓட்டக்காரனும், அறிவிக்கிறவனுக்கு எதிராக அறிவிக்கிறவனும் ஓடுகிறான்.

௩௩ ¶ ஏனெனில், பாபேல் குமாரத்தி மிதிக்கப்படும் களத்துக்கு ஒப்பானது; அதை மிதித்து அடிக்கும் காலமாயிருக்கிறது; இன்னம் கொஞ்சநாளிலே அறுப்புக் காலம் அதற்கு வருமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௩௪ ¶ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்னைப் பட்சித்தான், என்னைக் கலங்கடித்தான், என்னை வெறும் பாத்திரமாக வைத்துப்போனான்; முதலையைப்போல என்னை விழுங்கி, என் செல்விக்கைகளால் தன் வயிற்றை நிரப்பினான், என்னைத் துரத்தினான்.

௩௫ எனக்கும் என் மாம்சத்துக்கும்செய்த கொடுமையின் பழி பாபேலின்மேல் வரக்கடவதென்று சீயோனில் வாசமானவளும், என் இரத்தப்பழி கல்தேயர் தேசத்துக் குடிகளின் மேல்வரக்கடவதென்று எருசலேமும் சொல்லுகிறது.

௩௬ ¶ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் உன் வழக்கை வழக்காடி, உன் பழிக்குப் பழிவாங்கி, *அதின் கடலை வறளவும் அதின் ஊற்றைச் சுவறவும்பண்ணுவோம். *எரே. ௫௰. ௩௮.

௩௭ அப்போது பாபேல் *குடியில்லா மண்மேடுகளும், வலுவான சர்ப்பங்களின் தாபரமும், பாழும், இசல்போடப்படுதலுமாய்ப் போகும். *எரே. ௫௰. ௰௩.

௩௮ ஏகமாய்ச் சிங்கங்களைப்போலக் கர்ச்சித்து, சிங்கக்குட்டிகளைப்போலச் சத்தமிடுவார்கள்.

௩௯ அவர்களுடைய கொதிப்பிலே நாம் அவர்கள் குடிக்கும் பானத்தை அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்து, அவர்கள் துள்ளத்தக்கதாக அவர்களை வெறியாக்குவோம்; அதினால் அவர்கள் என்றென்றைக்கும் விழிக்காத நித்திரையை அடைவார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪௰ அவர்களை ஆட்டுக்குட்டிகளைப்போலவும், ஆட்டுக்கடாக்களையும் வெள்ளாட்டுக் கடாக்களையும் போலவும் அடிக்கப்பட இறங்கிப்போகப்பண்ணுவோம்.

௪௧ ¶ *சேசாக்கு பிடியுண்டு, பூமி அனைத்தின் புகழ்ச்சி வாங்கப்பட்டதெப்படி? பாபேல் சாதிகளுக்குள்ளே திகைப்பானதெப்படி? *எரே. ௨௫. ௨௬.

௪௨ சமுத்திரம் பாபேலின்மேல் புரண்டு வந்தது; அதினுடைய அலைகளின் திரட்சியினால் அது மூடப்பட்டது.

௪௩ அதின் பட்டணங்கள் பாழுமாய், வறட்சியும் வனாந்தரமுமான பூமியுமாய், ஒரு மனுஷனும் குடியிராததும் ஒரு மனுப்புத்திரனும் கடவாததுமான பூமியுமாய்ப் போயிற்று.

௪௪ நாம் பாபேலில் இருக்கிற பேலின் மேல் விசாரிப்பாகி, அது விழுங்கினதை அதின் வாயிலிருந்து வெளியாகப்பண்ணுவோம்; சாதிகள் இனி அதினண்டைக்கு ஓடிவரார்கள், பாபேலின் மதிலும் விழும்.

௪௫ ¶ நமது சனமே, *அதின் நடுவிலிருந்து புறப்படுங்கள்; கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்துக்குத் தப்ப, அவனவன் தன் ஆத்துமாவை இரட்சித்துக்கொள்ளக் கடவன். *எரே. ௫௰. ௮. வெளி. ௰௮. ௪.

௪௬ உங்கள் இருதயம் துவளாமலும், தேசத்தில் கேட்கப்படும் செய்தியினால் நீங்கள் பயப்படாமலும் இருக்கவந்தானே; ஏனெனில், ஒருவருஷத்திலே செய்தி கேட்கப்பட்டு, அதற்குப்பிறகு ஒருவருஷத்திலே செய்தி கேட்கப்படும்; தேசத்திலே கொடுமை உண்டாகும், ஆளுகிறவன்மேல் ஆளுகிறவன் வருவான்.

௪௭ ¶ ஆகையால், இதோ, நாம் பாபேலுடைய சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள்வரும்; அப்போது அதின் தேசம் எல்லாம் வெட்கப்படும்; அதில் கொலையுண்கிற யாவரும் அதின் நடுவில் விழுந்துகிடப்பார்கள்.

௪௮ *வானங்களும் பூமியும் அவைகளிலுள்ள யாவும் பாபேலின்மேல் கெம்பீரிக்கும்; ஏனெனில், பாழ்க்கடிக்கிறவர்கள் அதற்கு வடக்கேயிருந்து வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *வெளி.௰௮.௨௰.

௪௯ பாபேல் இஸ்ரவேலில் கொலையுண்டவர்களை விழப்பண்ணினதுபோலே, பாபேலிலேயும் தேசமெங்கும் கொலையுண்கிறவர்கள் விழுவார்கள்.

௫௰ ¶ பட்டையத்துக்குத் தப்பினவர்களே, தங்கித்தரியாமல் நடந்துவாருங்கள்; தூரத்திலே கர்த்தரை நினையுங்கள்; எருசலேம் உங்கள் நினைவிலே ஏறக்கடவது.

௫௧ நிந்தையைக் கேட்டதினாலே வெட்கப்பட்டோம்; கர்த்தருடைய வீட்டுப் பரிசுத்தஸ்தலங்களின்மேல் அந்நியர் வந்ததினாலே நாணம் நம்முடைய முகங்களை மூடிற்று.

௫௨ ¶ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் அதின் சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும்; அப்போது அதின் தேசமெங்கும் கொலையுண்கிறவர்கள் கத்துவார்கள்.

௫௩ பாபேல் *வானபரியந்தம் ஏறினாலும் அது தன் பலத்தின் உயர்த்திலை அரணிப்பாக்கினாலும் நம்மாலே அதற்குப் பாழ்க்கடிக்கிறவர்கள் வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௪௯. ௰௬.

௫௪ பாபேலிலிருந்து கூப்பிடுதலின் சத்தமும் கல்தேயர் தேசத்திலிருந்து மகா நொருக்குதலும் கேட்கப்படும்.

௫௫ ஏனெனில், கர்த்தர் பாபேலைப் பாழ்க்கடித்து, அதிலுள்ள பெரிய சத்தத்தை ஒழியப்பண்ணுவார்; அதேனென்றால் அவர்களுடைய அலைகள் திரளான தண்ணீர்களைப்போல இரையும்; அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்கும்.

௫௬ ஏனெனில், அதின்மேல், பாபேலின் மேலேதானே பாழ்க்கடிக்கிறவன் வருகிறான்; அதின் பராக்கிரமசாலிகள் பிடிபடுவார்கள்; அவர்களுடைய வில்லுகள் முறிந்துபோகும்; அதேனென்றால் சரிக்கட்டுதல்களின் பராபரனாகிய கர்த்தர் பதில் அளிக்கவே அளிப்பார்.

௫௭ அதின் பிரபுக்களையும் அதின் ஞானிகளையும் அதின் தலைவரையும் அதின் அதிகாரிகளையும் அதின் பராக்கிரமசாலிகளையும் வெறியாக்குவோம்; அப்போது அவர்கள் என்றென்றைக்கும் விழிக்காத தூக்கமாய்த் தூங்கி விழுவார்களென்று *சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார். *சங். ௨௪. ௰.

௫௮ ¶ பாபேலின் விஸ்தாரமான மதில்கள் தரையாக்கவே தரையாக்கப்பட்டு, அதினுடைய உயரமான வாசல்கள் அக்கினியால் சுட்டெரிக்கப்படும்; அப்படியே சனங்கள் பிரயாசப்பட்டது விருதாவும் சனசதளங்கள் உழன்றுறுத்தது அக்கினிக்கு இரையும் ஆமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௫௯ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா இராச்சியபாரம்பண்ணும் நாலாம் வருஷத்திலே பாபேலுக்குப் போகையில் அவனோடே கூடப்போகிற மசெயாவின் மகனாகிய நேரியாவின் குமாரனான செராயாவுக்கு

எரேமியா தீர்க்கதரிசி கற்பித்த வார்த்தை; சேராயாவோவெனில் அமர்ந்த குணமான பிரபுவாயிருந்தான்.

சுய பாபேலின் மேல் வரும் எல்லாத் தீங்கையும், பாபேலுக்கு விரோதமாக எழுதப்பட்ட இந்த எல்லா வசனங்களையும் எரேமியா ஒரு புஸ்தகத்தில் எழுதினான்.

சுக பிறகு எரேமியா சேராயாவுடனே சொன்னதாவது: நீ பாபேலுக்கு வந்தபிற்பாடு நீ இதைப் பார்த்து, இந்த எல்லா வசனங்களையும் வாசித்துச் சொல்லவேண்டியதாவது:

சுஉ கர்த்தாவே, இந்த ஸ்தலத்திலே மனுஷனும் மிருகமும் முதலாய்த் தங்கித்தரிக்காதபடிக்கும், அது என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கும்படிக்கும் அதை அழித்துப்போடுவோமென்று தேவரீர் அதைக்குறித்து உரைத்தீர் என்கிறதை நீ சொல்லி,

சுரு நீ இந்தப் புஸ்தகத்தை வாசித்துத் தீர்ந்தபோது, அதிலே ஒரு கல்லைக் கட்டி, அதை ஐப்பிராத்தின் நடுவில் எறிந்துவிட்டு,

சுச *இப்படியே பாபேல் அமிழ்ந்துபோகும், நாம் அதின்மேல் வரப்பண்ணும் தீங்கினாலே எழுந்திருக்கமாட்டாமல் இளைத்து விழுவார்களென்றார் என்று சொல்லுவாயாகவென்றான்; எரேமியாவின் வசனங்கள் இந்தமட்டுந்தானே. *வெளி. ிஅ. உக.

## ருஉ. அதிகாரம்.

சிதேக்கியா இராசாவாகிறபோது *இருபத்தொரு வயதாயிருந்தான்; அவன் பதினொருவருஷம் எருசலேமில் இராச்சியபாரம்பண்ணினான்; அவனுடைய தாயின் பேர் அமுத்தாள்; இவள் லீப்னா ஊரானாகிய எரேமியாவின் குமாரத்தி. *எரே. ருஎ. க. உ இரா. உச. ிஅ. உ நாளா. ருசு. ி, ிக.

உ யோயாக்கீம் செய்த எல்லாவற்றிற்கும் சரியாய் அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

ரு ஏனென்றால் எருசலேமையும் யூதாவையும் கர்த்தர் தம்முடைய சமுகத்தை விட்டுத் தள்ளித்தீருமளவும், அவைகளில் அவருடைய கோபத்தினாலே சம்பவித்ததேதெனில், சிதேக்கியா பாபேலின் இராசாவைவிட்டு *மருளவிழுந்தான். *உ இரா. உச. உ0.

ச ¶ ஆகையால் *அவன் இராச்சியபாரம் பண்ணும் ஒன்பதாம் வருஷத்துப் பத்தாம் மாதம் பத்தாந்தேதியிலே சம்பவித்ததேதென்றால், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரும், அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து, அதற்கெதிராகப் பாளையம் இறங்கி, சுற்றிலும் அதற்கு எதிராகக் கொத்தளங்களைக் கட்டினார்கள். *எரே. ருசு. க. மி. உ இரா. உரு. க. மி.

ரு அப்படியே பட்டணம் சிதேக்கியா இராசாவின் பதினோராம் வருஷமட்டும் முற்றிக்கை போடப்படலாயிற்று.

சு நாலாம்மாதம் ஒன்பதாந் தேதியிலே பஞ்சம் பட்டணத்திலேமிஞ்சி, தேசத்தின் சனத்துக்குஆகாரமில்லாதேபோனபோது,

எ பட்டணத்தின் மதில் திறப்பாயிற்று; அப்போது யுத்தமனுஷர் எல்லாரும் ஓடி, கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கையில் இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்தின் வழியே இரண்டு மதில்களுக்கும் நடுவான வாசலால் பட்டணத்திலிருந்து புறப்பட்டு, வயல்வெளியின் வழியே போய்விட்டார்கள்.

அ ஆனால் கல்தேயருடைய இராணுவம் இராசாவைப் பின்தொடர்ந்து, எரிகோவின் வயல்வெளிகளில் சிதேக்கியாவைக் கிட்டினார்கள்; அப்போது அவன் இராணுவம் எல்லாம் அவனைவிட்டுச் சிதறிப்போயிருந்தார்கள்.

கூ அவர்கள் இராசாவைப் பிடித்து, அவனைக் காமாத் தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்குப் *பாபேலின் இராசாவாகிய நேபுகாத்

நேச்சாரண்டையிலே போயேறப்பண்ணி
னார்கள்; இவன் அவன்பேரிலே சமரும்
ஆக்கினிகளைச் சொன்னான்.
*௫ மோ. உஅ. ௩௬.

௰ பிறகு பாபேலின் இராசா சிதேக்கியா
வின் பிள்ளைகளை அவன் கண்களுக்கு முன்
பாக வெட்டி, யூதாவின் பிரபுக்களையும்
எல்லாம் ரிப்லாவிலே வெட்டி,

௰௧ சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்
கி, அவனுக்கு இரண்டு விலங்குகளைப்போ
டுவித்தான்; பிற்பாடு பாபேலின் இராசா
அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோய்,
அவன் மரணமடையும் நாள்மட்டும் அவ
னைக் காவல்வீட்டில் இருக்கப்பண்ணி
னான்.

௰௨ ¶ ஐந்தாம் மாதம் பத்தாந்தேதியிலே,
பாபேலின் இராசாவுக்குமுன்பாக நிற்கிற
வனாகிய தலையாரிகளின் அதிபதியான நே
புசாரதான் எருசலேமுக்கு வந்தான்; அது
நேபுகாத்நேச்சாரென்ற இராசா பாபேலை
அரசாளுகிற பத்தொன்பதாம் வருஷமாயி
ருந்தது.

௰௩ அவன் கர்த்தருடைய வீட்டையும் இ
ராசாவின் வீட்டையும் எருசலேமிலுள்ள
எல்லா வீடுகளையும் ஒவ்வொரு பெரியவ
னுடைய வீட்டையும் அக்கினியினால் சுட்
டெரித்துப்போட்டான்.

௰௪ தலையாரிகளின் அதிபதியோடிருந்த
கல்தேயரின் இராணுவம் எல்லாம் எருச
லேமைச் சுற்றிலும் இருந்த மதில்கள் அ
னைத்தையும் இடித்துப்போட்டார்கள்.

௰௫ ¶ சனத்தில் ஈனமானவர்களில் சில
ரையும், பட்டணத்தில் மீதியான குறைச்
சனத்தையும், பாபேலுடைய இராசாவின்
வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும், கு
றைச் சனசதனத்தையும் தலையாரிகளின்
அதிபதியாகிய நேபுசாரதான் சிறைகளாகக்
கொண்டுபோனான்.

௰௬ ஆனால் ஈனமான தேசத்தாரில் சில
ரைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபு
சாரதான் திராட்சத்தோட்டக்காரராகவும்
பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.

௰௭ *கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்
கலத் தூண்களையும், கர்த்தருடைய வீட்டி
லிருந்த ஆதாரங்களையும், வெண்கலக் கடல்
தொட்டியையும் கல்தேயர் உடைத்துப்
போட்டு, அவைகளின் வெண்கலத்தை
எல்லாம் பாபேலுக்கு எடுத்துக்கொண்டு
போனார்கள். *எரே. உ௭. ௰௯. மு.

௰௮ செப்புச் சட்டிகளையும், சாம்பல்
எடுக்கும் கரண்டிகளையும், வெட்டுக் கத்தி
களையும், கலங்களையும் கலயங்களையும், ஆ
ராதனை செய்யப்பட்ட சகல வெண்கல
முட்டுகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௰௯ சுத்த பொன்னும் சுத்த வெள்ளியுமா
ன கிண்ணிகளையும், தூபகலசங்களையும்,
கலங்களையும், சட்டிகளையும், விளக்குத்
தண்டுகளையும், கலயங்களையும், கரகங்க
ளையும் தலையாரிகளின் அதிபதி எடுத்துக்
கொண்டான்.

உ௰ *சாலோமோன் இராசா கர்த்தரு
டைய வீட்டுக்காகச் செய்வித்துவைத்த
இரண்டு தூண்களும் ஒரு கடல்தொட்டி
யும் ஆதாரங்களின் கீழ்நின்ற பன்னிரண்டு
வெண்கல மாடுகளும் இருந்தனவே, இந்
தச் சகலமுட்டுகளுடைய வெண்கலத்துக்
கும் நிறையில்லை. *௧ இரா. எ. ௰௫.
உ நாளா. ௩. ௰௫. மு.

உ௧ ¶ அந்தத் தூண்களோவெனில், ஒவ்
வொரு தூண் பதினெட்டு முழ உயரத்தி
யாயிருந்தது; பன்னிரண்டு முழநூல் அ
தைச் சுற்றும்; நாலு விரற்கிடை அதின்
கனம்; உள்ளே குழாயாயிருந்தது.

உஉ அதின் மீதில் வெண்கலக் குமிழ் உ
ண்டாயிருந்தது; ஒரு குமிழின் உயரத்தி
ஐந்துமுழமானது, குமிழிலே சுற்றிலும் பின்
னலும் மாதளம் பழங்களுமாயிருந்தது;
எல்லாம் வெண்கலந்தான்; அதற்குச் சரி
யாய் மற்றத் தூணுக்கும் மாதளம்பழங்க
ளும் உண்டாயிருந்தன.

௨௩ தொண்ணூற்றாறு மாதளம் பழங்கள் காற்றுத் திசைகளுக்கு எதிராக இருந்தன; சூமிழில் சுற்றிலும் இருந்த மாதளம் பழங்கள் நூறு.

௨௪ ¶ தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனாகிய செராயாவையும், இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியாவையும், வாசற்படியின் மூன்று காவற்காரரையும் பிடித்தான்.

௨௫ பட்டணத்திலோவென்றால் அவன் யுத்த மனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானி ஒருவனையும், இராசாவின் மந்திரிகளில் பட்டணத்தில் அகப்பட்ட எழுபேரையும், தேசத்தின் சனத்தைச் சேவகம் எழுதுகிற தலையான சம்பிரதியையும், தேசத்துச் சனத்திலே பட்டணத்தின் நடுவில் அகப்பட்ட அறுபதுபேரையும் பிடித்தான்.

௨௬ அவர்களைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் பிடித்து, அவர்களை ரிப்லாவுக்கு பாபேலுடைய இராசாவண்டையிலே கொண்டுபோய் விட்டான்.

௨௭ அப்போது பாபேலின் இராசா காமாத்தென்ற தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவிலே அவர்களை வெட்டிக் கொன்றுபோட்டான்; யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து சிறைகளாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.

௨௮ ¶ நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப் போன சனம் எத்தனையென்றால், ஏழாம் வருஷத்திலே மூவாயிரத்திருபத்துமூன்று யூதரும்,

௨௯ நேபுகாத்நேச்சாருடைய பதினெட்டாம் வருஷத்தில் எருசலேமிலிருந்து எண்ணூற்று முப்பத்திரண்டு ஆத்துமாக்களும் கொண்டுபோகப்பட்டார்கள்.

௩௰ நேபுகாத்நேச்சாருடைய இருபத்து மூன்றாம் வருஷத்தில் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் யூதரில் எழுநூற்று நாற்பத்தைந்து ஆத்துமாக்களைச் சிறைபிடித்துப்போனான்; ஆக நாலாயிரத்தறுநூறு ஆத்துமாக்கள்.

௩௧ ¶ *யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனுடைய சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷத்துப் பன்னிரண்டாம் மாதம் இருபத்தைந்தாந் தேதியிலே சம்பவித்ததேதென்றால், ஏவில்மேரோதாக் என்ற பாபேலின் இராசா, தான் இராசாவான வருஷத்திலே, யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனின் தலையை உயர்த்தி, அவனைக் காவல் வீட்டிலிருந்து புறப்படப்பண்ணி,

*௨ இரா. ௨௫. ௨௭. மு.

௩௨ அவனோடே அன்பாய்ப் பேசி, அவனுடைய ஆசனத்தைத் தன்னோடே பாபேலில் இருந்த இராசாக்களுடைய ஆசனங்களுக்கு மேலாக வைத்து,

௩௩ அவனுக்குக் காவல்வீட்டில் இருந்த வஸ்திரங்களை மாற்றினான்; அவன் உயிரோடிருந்த சகல நாளும் அவனுக்குமுன்பாக நித்தம் அப்பஞ்சாப்பிட்டான்.

௩௪ அவனுடைய செலவுக்கோவெனில், அவன் உயிரோடிருந்த நாளெல்லாம் அவனுடைய மரணநாள்பரியந்தமும் அவனுக்குப் பாபேலினுடைய இராசாவினாலே அனுதினக் கட்டளையான திட்டம் எப்போதும் அனுதினமும் கொடுக்கப்பட்டது.

# எரேமியாவின் புலம்பல்.

## க. அதிகாரம்.

சனம் பெருத்திருந்த பட்டணமானவள் எத்தனை தனிமையாக உளுக்காந்திருக்கிறாள்! விதவைக்கு ஒப்பானாள்! சாதிகளில் பெரியவளும் சிமைகளில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவளானாள்!

உ இராக்காலத்திலே அழவே அழுகிறாள், அவளுடைய கண்ணீர் அவள் கன்னங்களில் ஓடும்; அவளுடைய எல்லா நேசரிலும் அவளைத் தேற்றரவுபண்ணுவார் ஒருவரும் அவளுக்கில்லை; அவளுடைய சிநேகிதர் எல்லாரும் அவளுக்குத் துரோகிகளாகி, அவளுக்குச் சத்துருக்களாய்ப் போனார்கள்.

ங உபத்திரவப்படவும் அடிமைவேலையை வெகுதரம் செய்யவும் யூத்சனம் எடுபட்டுப்போயிற்று; அவள் புறச்சாதிகளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்பாறுதலை அடையாள்; அவளைத் துன்பப்படுத்துகிற யாவரும் அவளை நெருக்க ஸ்தலங்களின் இடுக்கிலே தொடர்ந்துபிடித்தார்கள்.

ச பண்டிகைக்கு வருவார் இல்லாததினால், சீயோனின் வழிகள் புலம்புகிறவைகளாயிருக்கின்றன; அதின் வாசல்கள் எல்லாம் பாழாய்க் கிடக்கின்றன; அதின் ஆசாரியர் தவிக்கிறார்கள்; அதின் கன்னியாஸ்திரிகள் சஞ்சலப்படுகிறார்கள், அதற்குக் கசப்பே உண்டாயிருக்கிறது.

ரு அதின் சத்துருக்கள் தலையானார்கள், அதின் பகைஞர் சுகித்திருக்கிறார்கள்; ஏனெனில், அதினுடைய திரளான பாதகங்களின் நிமித்தம் கர்த்தர் அதைச் சஞ்சலப்படுத்தினார்; அதின் பிள்ளைகள் சத்துருவுக்குமுன்பாகச் சிறையிருப்புக்குப் போனார்கள்.

சு சீயோன் குமாரத்தியின் மகத்துவம் எல்லாம் அதை விட்டுப்போயிற்று; அதின் பிரபுக்கள் மேய்ச்சலைக் காணாத மான்களுக்கு ஒப்பாகி, தொடருகிறவனுக்குமுன்பாகச் சத்துவமில்லாமல் நடந்துபோனார்கள்.

எ தனக்குச் சிறுமையும் தவிப்பும் உண்டாகிய நாட்களிலே எருசலேம் பூருவநாட்கள்முதற்கொண்டு தனக்கு உண்டாயிருந்த இச்சிக்கப்படத்தக்க நன்மைகளை எல்லாம் நினைக்கிறது; அதற்கு ஒத்தாசைசெய்வார் இல்லாமல் அதினுடைய சனம் சத்துருவின்கையிலே விழுகையில் சத்துருக்கள் அதைப்பார்த்து, அதினுடைய ஓய்வுநாட்களின்பேரிலே நகைத்தார்கள்.

அ எருசலேம் என்பவள் பாவம்செய்யவே செய்தாள்; ஆனபடியினாலே தூரஸ்திரீயைப்போலானாள்; அவளைக் கனம்பண்ணினவர்கள் எல்லாரும் அவளை அசட்டைபண்ணுகிறார்கள்; ஏனென்றால் அவளுடைய அபிமானத்தைக் கண்டார்கள்; அவளும் பெருமூச்சவிட்டுப் பின்னிட்டுத் திரும்பினாள்.

கூ அவளுடைய அசுத்தம் அவள் வஸ்திரஓரங்களில் இருந்தது; *தனக்கு வரப்போகிற முடிவை நினையாதிருந்தாள்; ஆகையால் அதிசயமாய்த் தாழ்ந்துபோனாள்; தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை; கர்த்தாவே, என் சிறுமையைப் பாரும்; ஏனெனில், பகைஞன் பெருமை அடைந்தான்.

*ரு மோ. ஙஉ. உகூ.

௰ அவளுடைய இச்சிக்கப்படத்தக்க நன்மைகளின்மேல் சத்துரு தன் கையை நீட்டினான், அதேனெனில் உம்முடைய சபையிலே வரவொண்ணாதென்று தேவரீர் கற்பித்த புறச்சாதியார் உமது பரிசுத்தஸ்தலத்துக்குள் பிரவேசித்ததைக் கண்டாள்.

௰௧ அவளுடைய சனமெல்லாம் அப்பந்தேடித்தவிக்கிறார்கள்; தங்கள் பசியை ஆற்றும்படிக்குத் தாங்கள் இச்சிக்கப்படத்தக்க நன்மைகளை ஆகாரத்துக்கென்று கொடுத்துவிட்டார்கள்; கர்த்தாவே, நோக்கிப்பாரும்; ஏனெனில் எண்ணமற்றவளானேன்.

௰௨ வழியில் கடந்துபோகிற எல்லாச் சனங்களே, இது உங்களைச் சேராதோ? கர்த்தர் தமது கோபத்தினுடைய உக்கிரத்தின் நாளிலே என்னைச்சஞ்சலப்படுத்தினதினால் எனக்கு உண்டுபண்ணப்பட்ட என்னுடைய நோவுக்குச் சரியான நோவு உண்டோவென்று நோக்கிப்பாருங்கள்.

௰௩ உயரத்திலிருந்து என் எலும்புகளில் அக்கினியை அனுப்பிவிட்டார்; அது அவைகளைப் பிடித்தது; என் கால்களுக்குவலையை வீசினார்; என்னைப் பின்னிட்டுவிழப்பண்ணினார்; என்னைப் பாழ்க்கடித்தார்; நித்தம் நான் பலட்சயமானவள்.

௰௪ என் பாதகங்களின் நுகத்தடி அவருடைய கையால் கட்டியிருக்கிறது; அவைகள் பிணைக்கப்பட்டு என் கழுத்தின்மேல் ஏறின; என் பெலனை விழப்பண்ணினார்; ஆண்டவர் என்னை நான் எழுந்திருக்கக்கூடாதபடிக்கு ஒடுக்குகிறவர்களின் கையில் ஒப்புக்கொடுத்தார்.

௰௫ என்னிலுள்ள பலசாலிகளாகிய என்னுடையவர்களை எல்லாம் ஆண்டவர் மிதித்துப்போட்டார்; என் வாலிபரை நொறுக்கும்படிக்கு என்மேல் ஒரு கூட்டத்தை வரவழைத்தார்; யூதா குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியை ஆண்டவர் ஆலையாக மிதித்தார்.

௰௬ * இவைகளினிமித்தமாக நான் அழுகிறேன்; என் கண், என்னுடைய கண்ணே நீராகச் சொரிகிறது; ஏனெனில், என் ஆத்துமத்தை முசிப்பாற்றும் தேற்றரவாளர் என்னைவிட்டுத் தூரமானார்; பகைஞன் மேற்கொண்டதினால் என் பிள்ளைகள் பாழ்க்கடிக்கப்பட்டார்கள். *எரே.௰௩.௰௭:௰௪.௰௭.

௰௭ சீயோனென்பவள் தன் கைகளை விரிக்கிறாள்; தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை; கர்த்தர் யாக்கோபின் சுற்றுப்புறத்தாரை அவனுக்குச் சத்துருக்களாகக் கட்டளையிட்டார்; எருசலேமென்பவள் அவர்களுக்குள்ளே தூரஸ்திரிக்கு ஒப்பானாள்.

௰௮ கர்த்தர் நீதிபரர்; அவருடைய வாக்குக்கு விரோதமாய் நான் எழும்பினேன்; ஆனபடியினாலே சனங்களே, நீங்கள் எல்லாரும் இதைக்கேட்டு என் வேதனையைப் பாருங்களே; என் கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும் சிறையிருப்பிலே போனார்கள்.

௰௯ என்னைச் சிநேகித்தவர்களைக் கூப்பிட்டேன்; *அவர்களோ என்னை மோசம்போக்கினார்கள்; என் ஆசாரியர்களும் என் மூப்பரும் தங்கள் பசியை ஆற்றத் தங்களுக்கு அப்பந்தேடுகையில் பட்டணத்தில் மூச்சொடுங்கி, மாண்டார்கள். *எரே. ௩௰. ௰௪.

௨௰ கர்த்தாவே, பாரும், ஏனெனில் நெருக்கப்படுகிறேன்; *என் குடல்கள் பொங்குகின்றன; நான் மிகவும் மருளவிழுந்தபடியினாலே என் இருதயம் எனக்குள் துவண்டது; † வெளியிலே பட்டயம் என்னைப் பிள்ளையற்றவளாக்கிற்று; வீட்டுக்குள்ளே மரணச்சாயலாயிருக்கிறது.

*சங். ௨௫. ௰௭. †௫ மோ. ௩௨. ௨௫.

௨௧ நான் தவிக்கிறதை அவர்கள் கேட்டாலும் தேற்றரவுபண்ணுபவன் எனக்கில்லை; என் பகைஞர் எல்லாரும் என் தீங்கைக் கேட்டு, தேவரீர் அதைச் செய்தபடியினாலே சந்தோஷமாயிருக்கிறார்கள்; நீர் கூறின நாளை வரப்பண்ணுவீர்; அப்போது என்னைப்போல இருப்பார்கள்.

௨௨ அவர்களுடைய பொல்லாப்பெல்லாம் உமது முகத்துக்குமுன்பாக வரக்கடவது; என்னுடைய எல்லாப் பாதகங்களினிமித்தமும் நீர் எனக்குச் செய்ததுபோலே அவர்களுக்குச் செய்யும்; ஏனென்றால் என் பெருமூச்சுகள் திரளானவைகள்; என் இருதயம் பலட்சயமாயிருக்கிறது.

## ௨. அதிகாரம்.

சீயோன் குமாரத்தியை ஆண்டவர் தம்முடைய கோபத்தில் எத்தனை மந்தாரத்தாலே மூடினார்? தம்முடைய கோபத்தின்நாளிலே அவர் *தமது பாதபடியை நினைக்காமல் இஸ்ரவேலின் மகிமையை வானத்திலிருந்து தரையிலே விழத்தள்ளினார். *சங். ௱௩௨.௭.

௨ ஆண்டவர் தப்பவிடாமல் யாக்கோபின் வாசஸ்தலங்களை எல்லாம் விழுங்கினார்; அவர் யூதா குமாரத்தியின் அரண்களை எல்லாம் தம்முடைய சினத்திலே இடித்து, தரையோடே தரையாக்கிப்போட்டார்; இராச்சியத்தையும் அதின் பிரபுக்களையும் பரிசுத்தமறபபண்ணினார்.

௩ தம்முடைய கோபத்தின் உக்கிரத்திலே இஸ்ரவேலின் கொம்பை எல்லாம் வெட்டிப்போட்டார்; அவர் பகைஞனுக்குமுன்பாகத் தம்முடைய வலதுகையைப் பின்னாகத் திருப்பி, சற்றிலும் இருக்கிறதைப் பட்சிக்கிற அக்கினிச்சுவாலையைப்போலே யாக்கோபுக்கு விரோதமாகப் பற்றி எரிந்தார்.

௪ பகைஞனைப்போலத் *தம்முடைய வில்லை நாணேற்றினார்; சத்துருவைப்போலத் தம்முடைய வலதுகையை நீட்டிநின்று, பார்வைக்கு விருப்பமானதை எல்லாம் கொன்றுபோட்டார்; சீயோன் குமாரத்தியின் கூடாரத்திலே தம்முடைய உக்கிரத்தை அக்கினியைப்போலே ஊற்றிவிட்டார். *சங். ௭. ௰௩.

௫ ஆண்டவர் பகைஞனுக்கு ஒப்பானார்; இஸ்ரவேலை விழுங்கினார்; அதின் அரமனைகளை எல்லாம் விழுங்கினார்; அதின் அரண்களை அழித்து, யூதா குமாரத்திக்குத் திரளான துக்கிப்பையும் சலிப்பையும் உண்டாக்கினார்.

௬ தோட்டத்தின் வேலியைப்போல இருந்த தம்முடைய வேலியைப் பலவந்தமாய்ப் பிடுங்கிப்போட்டார்; சபைகூடுகிற தம்முடைய ஸ்தலங்களை அழித்தார்; கர்த்தர் சீயோனிலே பண்டிகையையும் ஓய்வுநாளையும் மறக்கப்பண்ணி, தமது கோபத்தின் தாங்கலில் இராசாவையும் ஆசாரியனையும் புறக்கணித்துவிட்டார்.

௭ ஆண்டவர் தமது பலிபீடத்தை ஒழித்துவிட்டார்; தமது பரிசுத்தஸ்தலத்தை அருவருத்தார்; அதினுடைய அரமனைகளின் மதில்களைப் பகைஞனின் கையில் பத்திரப்படுத்திவிட்டார்; பண்டிகைநாளுக்கு ஒப்பாகக் கர்த்தரின் வீட்டிலே சத்தமிட்டார்கள்.

௮ கர்த்தர் சீயோன் குமாரத்தியின் அலங்கத்தை நிர்மூலமாக்க நினைத்தார்; நூலைப் போட்டார்; அழிக்காதபடிக்குத் தம்முடைய கையை அவர் முடக்கிக்கொண்டதில்லை; அரணிப்பையும் அலங்கத்தையும் புலம்பலாக்கினார்; அவைகள் ஏகமாய்ப் பெலனற்றுக் கிடக்கின்றன.

௯ அதின் வாசல்கள் தரையில் அமிழ்ந்திக் கிடக்கின்றன; அதின் தாழ்ப்பாள்களைக் கெடுத்து உடைத்துப்போட்டார்; அதின் இராசாவும் அதின் பிரபுக்களும் புறச்சாதியாருக்குள் இருக்கிறார்கள்; வேதமில்லை; அதின் தீர்க்கதரிசிகளுக்குக் கர்த்தரால் தரிசனம் கிடைக்கிறதுமில்லை.

௰ சீயோன் குமாரத்தியின் மூப்பர் தரையில் உளுக்காந்து மௌனமாய் இருக்கிறார்கள்; தங்கள் தலைகளின்மேல் புழுதியைப் போட்டுக்கொள்ளுகிறார்கள்; இரட்டுஉடுத்தியிருக்கிறார்கள்; எருசலேமின் கன்னியாஸ்திரிகள் தங்கள் தலைகளைத் தரையை நோக்கி இறக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

௰௧ என் சனமாகிய குமாரத்தியினுடைய நொறுங்குதலின்நிமித்தம் என் கண்கள் கண்ணீரை உதிர்க்கிறதினால் பூத்துப்போயிற்று; என் குடல்கள் பொங்குகின்றன; என் ஈரல் தரையில் சரிகிறது; ஏனெனில் குழந்தைகளும் பாலகரும் பட்டணத்தின் வீதிகளில் தொய்ந்துகிடக்கிறார்கள்.

௰௨ அவைகள் குத்துண்டவர்களைப்போலப் பட்டணத்தின் வீதிகளில் தொய்யும்போதும், தங்கள் ஆத்துமாவைத் தங்கள் தாய்களின் மடியில் ஊற்றும்போதும் தங்கள் தாய்களுடனே: கோதுமையும் திராட்சப்பழஇரசமும் எங்கே என்கிறார்கள்?

௰௩ எருசலேம் குமாரத்தியே, என்னத்தை உனக்குச் சாட்சியாகச் சொல்லுவேன்? என்னத்துக்கு உன்னை ஒப்பிடுவேன்? சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியே, நான் உன்னைத் தேற்றும்படிக்கு என்னத்துக்கு உன்னைச் சரியிடுவேன்? உன் நொறுங்குதல் சமுத்திரத்தைப்போல விஸ்தாரமாயிருக்கிறதே, உன்னைக் குணமாக்குபவன் யாவன்?

௰௪ உன் தீர்க்கதரிசிகள் அபத்தமும் மதியில்லாமையுமான தரிசனத்தை உனக்குத் தரிசிப்பித்தார்கள்; அவர்கள் உன் சிறையிருப்பை விலக்கும்படிக்கு உன் அக்கிரமத்தைத் திறந்துவைக்காமல், அபத்தகாரியங்களையும் நீ துரத்தப்படுகிறதற்கானவைகளையும் உனக்குத் தரிசிப்பித்தார்கள்.

௰௫ வழிபோகிற யாவரும் உன்பேரில் கைகொட்டிக்கொள்ளுகிறார்கள்; எருசலேம் குமாரத்தியின்பேரில் இசற்போட்டு, தங்கள் தலைகளைத் துலுக்கி, பூரணவடிவும் எல்லாப் பூமியின் மகிழ்ச்சியுமானதென்னப்பட்ட பட்டணம் இதுவோ என்கிறார்கள்.

௰௬ உன் பகைஞர் உன்பேரில் தங்கள் வாயைத் திறக்கிறார்கள்; இசற்போட்டுப் பற்கடிக்கிறார்கள்: அதை விழுங்கினோம், நாம் காத்திருந்த நாள் இதுவே, இப்போது நமக்குக் கிடைத்தது, அதைக் கண்டோமென்கிறார்கள்.

௰௭ *கர்த்தர் தாம் நினைத்ததைச் செய்தார்; தாம் பூர்வநாட்கள்முதற்கொண்டு கட்டளைபண்ணின தமது வார்த்தையை நிறைவேற்றிப்போட்டார்; அவர் தப்பவிடாமல் நிர்மூலமாக்கி உன்னால் பகைஞனுக்குச் சந்தோஷம் உண்டுபண்ணினார்; உன் சத்துருக்களின் கொம்பை உயர்த்தினார். *௫ மோ. ௨௮. ௰௫. ஹ.

௰௮ அவர்கள் இருதயம் ஆண்டவரை நோக்கிக் கூப்பிடுகிறது; சீயோன் குமாரத்தியின் மதிலே இரவும் பகலும் *நதியத்தனை கண்ணீரை விடு; உனக்கு ஓய்வைக் கொடாயாக; உன் கண்களின் கறுப்புவிழி சும்மா இராதாக. *எரே. ௰௪. ௰௭.

௰௯ எழுந்திரு; முதற்சாம இராத்திரியிலே கூப்பிடு; ஆண்டவரின் முகத்துக்குமுன்பாக உன் இருதயத்தைத் தண்ணீரைப்போல ஊற்று; எல்லாத் தெருக்களின் முனையிலும் பசியினால் தொய்கிற உன் குழந்தைகளின் பிராணனுக்காக உன் கைகளை அவரண்டைக்கு ஏறெடு.

௨௰ கர்த்தாவே, யாருக்கு இந்தப்பிரகாரமாகச் செய்தீரென்று *நோக்கிப்பாரும்; ஸ்திரிகள் †கைக்குழந்தைகளாகிய தங்களுடைய கர்ப்பத்தின் கனியைத் தின்னவேண்டுமோ? ஆண்டவருடைய பரிசுத்தஸ்தலத்தில் ஆசாரியரும் தீர்க்கதரிசியும் கொலைசெய்யப்படவேண்டுமோ?

*புலம். ௧. ௨௰: ௪. ௰. †௫ மோ. ௨௮. ௫௬.

௨௧ தெருக்களில் இளைஞனும் முதிர்ந்த வயதுள்ளவனும் தரையிலே கிடக்கிறார்கள்; என் கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும் பட்டயத்தால் விழுந்தார்கள்; உமது கோபத்தின்நாளிலே கொன்று, தப்பவிடாமல் வெட்டிப்போட்டீர்.

௨௨ பண்டிகைநாளுக்கு ஒப்பாகச் சுற்றிலுமிருந்து என் திகில்களை வரவழைத்தீர்; கர்த்தருடைய கோபத்தின் நாளிலே தப்பி

னவனும் மீதியானவனுமில்லை; நான் கைகளில் ஏந்திக்கொண்டு வளர்த்தவர்களை என் பகைஞன் நாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

ஆண்டவருடைய சினத்தின் மிலாறினால் உண்டான சிறுமையைக் கண்ட புருஷன் நான்.

௨ அவர் என்னை வெளிச்சத்துக்குள் அல்ல, இருளுக்குள்ளே அழைத்து நடத்திவந்தார்.

௩ அவர் எனக்கு விரோதமாகவே நித்தம் தமது கையை நேரிடத் திருப்பினார்.

௪ என் சதையையும் என் தோலையும் முத்தலாக்கினார்; என் எலும்புகளை உடைத்தார்.

௫ அவர் எனக்கு விரோதமாகக் கொத்தளங்கட்டி, பிச்சினாலும் வருத்தத்தினாலும் என்னை வளைந்துகொண்டார்.

௬ *நித்தியகாலம் செத்துக்கிடக்கிறவர்களைப்போல என்னை இருளான இடங்களில் இருக்கப்பண்ணினார். *சங். ௱௪௩. ௩.

௭ நான் புறப்படக்கூடாதபடியாய் என்னைச் சூழ வேலி அடைத்தார்; என் விலங்குகளைப் பாரமாக்கினார்.

௮ நான் சத்தமிட்டுக் கூப்பிட்டாலும், என் செபத்துக்கு வழியை அடைத்துப் போட்டார்.

௯ வெட்டின கல்ச்சுவராலே என் வழிகளை அடைத்துப்போட்டார், என் பாதைகளை மாறுபாடாக்கினார்.

௰ எனக்கு அவர் பதிவிருக்கிற கரடியும், மறைவிடங்களில் தங்குகிற சிங்கமுமாயிருக்கிறார்.

௰௧ என் வழிகளை விலக்கி, என்னைத் துண்டித்துப்போட்டார்; என்னைப் பாழாக்கிவிட்டார்.

௰௨ தமது வில்லை நாணேற்றி, என்னை அம்புக்கு இலக்காக வைத்தார்.

௰௩ தம்முடைய அம்பறாத்தூணியின் அம்புகளை என் உள்ளிந்திரியங்களில் படப்பண்ணினார்.

௰௪ நான் என் சனமனைத்தின் பரியாசமும், நித்தம் அவர்கள் கின்னரப்பாடலுமாயிருந்தேன்.

௰௫ கசப்புகளால் என்னைத் திருப்தியாக்கி, எட்டியினால் என்னை நிரப்பினார்.

௰௬ அவர் பருக்கைக் கல்லுகளால் என் பல்லுகளை நொறுக்கி, என்னைச் சாம்பலில் புரளப்பண்ணினார்.

௰௭ என் ஆத்துமாவைச் சமாதானத்துக்குத் தூரமாக்கினார்; நன்மையை மறந்தேன்.

௰௮ ஆகையால் என் பெலனும் நான் கர்த்தருக்குக் காத்திருந்த நம்பிக்கையும் அழிந்தன என்றேன்.

௰௯ என் சிறுமையையும் என் தவிப்பையும் எட்டியையும் பிச்சையும் நினைத்துக் கொள்ளும்.

௨௰ என் ஆத்துமா எனக்குள் முறிந்துபோகிறதென்கிறதை நினைக்கவே நினைப்பீர்.

௨௰௧ இதை என் மனதிலே வைப்பேன்; இதுநிமித்தமாகக் காத்திருப்பேன்.

௨௰௨ *நாங்கள் நிர்மூலமாய் அழியாதிருக்கிறது கர்த்தருடைய கிருபைகள்; ஏனெனில், அவருடைய இரக்கங்கள் முடிவடைந்ததில்லை. *நெகே. ௯. ௩௧. ஏசா. ௧. ௯.

௨௰௩ *அவைகள் காலைமாறு புதியவைகள்; அவருடைய உண்மை பெருத்திருக்கிறது. *சங். ௩௰. ௯.

௨௰௪ *கர்த்தர் என் பங்காயிருக்கிறாரென்று என் ஆத்துமா சொல்லும்; ஆகையால் அவருக்குக் காத்திருப்பேன். *சங். ௭௩. ௨௬.

௨௰௫ *தமக்குக் காத்திருக்கிறவர்களுக்கும் தம்மைத்தேடுகிற ஆத்துமாவுக்கும் கர்த்தர் நல்லவர். *சங். ௪௰. ௨.

௨௰௬ கர்த்தருடைய இரட்சிப்புக்குக் காத்தும் அமர்ந்தும் இருக்கிறது நல்லது.

௨௰௭ தன் சிறுவயதிலே நுகத்தடியைச் சுமக்கிறது புருஷனுக்கு நல்லது.

௨௰௮ அவர் அதைத் தன்மேல் வைத்தா

றென்று அவன் தனித்து உளுக்காந்து மௌனமாயிருப்பானாக.

௨௯ நம்பிக்கை உண்டாயிருக்கிறதாக்குமென்று தன் வாயைத் தூளில் நுழுந்துவானாக.

௩௰ தன்னை அடிக்கிறவனுக்குத் தன் கன்னத்தை ஒப்புக்கொடுத்து, நிந்தையால் திருத்தியாவானாக.

௩௧ ஏனென்றால் ஆண்டவர் என்றென்றைக்கும் ஒழித்துவிடாமல்,

௩௨ *தாம் சஞ்சலப்படுத்தின பிற்பாடு தம்முடைய மிகுந்த கிருபையின்படி இரங்குகிறார். *ஏசா. ௫௪. ௮.

௩௩ ஏனெனில், அவர் மனப்பூருவமாய் மனுபுத்திரரைச் சிறுமையாக்கி, சஞ்சலப்படுத்துகிறதில்லை.

௩௪ ஒருவன் பூமியிலுள்ள கட்டுண்டவர்களை எல்லாம் தன் கால்களின்கீழ் நசுக்குகிறதையும்,

௩௫ உன்னதமானவரின் முகத்துக்கு முன்பாக மனுஷருடைய நியாயத்தைப் புரட்டுகிறதையும்,

௩௬ மனுஷனை அவனுடைய வழக்கிலே மாறுபாடாக்குகிறதையும் ஆண்டவர் காணாதிருப்பாரோ?

௩௭ *ஆண்டவர் கட்டளையிடாதகாரியம் சம்பவிக்கும் என்று சொல்பவன் யாவன்? *௨ சாமு. ௰௬. ௰.

௩௮ *தீமையும் நன்மையும் உன்னதமானவருடைய வாயிலிருந்து புறப்படாதோ? *ஏசா. ௪௫. ௭. ஆமோ. ௩. ௬.

௩௯ நரசீவனான மனுஷன் முறையிடுவானேன்? அவனவன் தன் பாவத்தின்பேரில் முறையிடுவானாக.

௪௰ நாம் நம்முடைய வழிகளைச் சோதித்து ஆராய்ந்து, கர்த்தரிடமட்டும் சேரத் திரும்பக்கடவோம்.

௪௧ நாம் நம்முடைய இருதயத்தைக் கைகளோடுங்கூடப் பரமண்டலங்களில் இருக்கிற பராபரனண்டைக்கு ஏறெடுத்து,

௪௨ நாங்கள் துரோகஞ்செய்து, கலகம் பண்ணினோம்; ஆகையால் தேவரீர் மன்னிக்காதிருந்தீர்.

௪௩ தேவரீர் கோபத்தால் மூடிக்கொண்டு, எங்களைத் தப்பவிடாமல் பின்தொடர்ந்து கொன்றீர்.

௪௪ செபம் உட்பிரவேசிக்கக் கூடாதபடிக்கு உம்மை மேகத்தால் மூடிக்கொண்டீர்.

௪௫ சனசதளங்களின் நடுவிலே எங்களைக் குப்பையும் தள்ளுபடியுமாக்கினீர்.

௪௬ எங்கள் பகைஞர் எல்லாரும் எங்கள்மேல் தங்கள் வாயைத் திறந்தார்கள்.

௪௭ திகிலும் படுகுழியும் பாழ்க்கடிப்பும் நொறுக்குதலும் எங்களுக்கு உண்டாயின என்று விண்ணப்பம் செய்யக்கடவோம்.

௪௮ என் சனமாகிய குமாரத்தியின்நிமித்தம் *நீர்க்கால்கள் என் கண்களிலிருந்து பாய்கின்றன. *புலம். ௧. ௰௬: ௨. ௰௮.

௪௯ கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து நோக்கிப்பார்க்குமட்டுக்கும்,

௫௰ என் கண் அமரிக்கையற ஓய்வில்லாமல் சொரிகிறது.

௫௧ என் பட்டணத்தினுடைய எல்லாக் குமாரத்திகளின்நிமித்தமும், என்னுடைய கண் என் ஆத்துமாவுக்கு நோவுண்டாக்குகிறது.

௫௨ முகாந்தரம் இல்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் என்னை ஒரு பட்சியைப்போல வேட்டையாடவே வேட்டையாடினார்கள்.

௫௩ என் பிராணனைப் பள்ளத்திலே சங்கரித்து, என்மீதில் கல்லுகளைப் போட்டார்கள்.

௫௪ தண்ணீர் என் தலையின்மேல் புரண்டது; நாசமானேனென்றேன்.

௫௫ மகா ஆழமான பள்ளத்திலிருந்து கர்த்தாவே, உம்முடைய நாமத்தைப்பற்றிக் கூப்பிட்டேன்,

௫௬ என் சத்தத்தைக் கேட்டீர்; என் பெ

ரூமச்சுக்கும் என் கூப்பிடுதலுக்கும் உமது செவியை மறைக்காதேயும்.

௫௭ நான் உம்மைநோக்கிக் கூப்பிட்டநாளிலே தேவரீர் சேர்ந்து, பயப்படாதே என்றீர்.

௫௮ ஆண்டவரே, என் ஆத்துமாவின் வழக்கை வழக்காடினீர்; என் பிராணனை மீட்டீர்.

௫௯ கர்த்தாவே, நான் பட்ட அநியாயத்தைக் கண்டீர், என் நியாயத்தைத் தீரும்.

௬௰ அவர்களுடைய குரோதந்தீர்த்துக் கொள்ளுதல் எல்லாவற்றையும், அவர்கள் எனக்கு விரோதமாக நினைத்த எல்லாவற்றையும் கண்டீர்.

௬௧ கர்த்தாவே, அவர்களுடைய நிந்திக்குதலையும், அவர்கள் எனக்கு விரோதமாய் நினைத்த எல்லாவற்றையும்,

௬௨ எனக்கு விரோதமாய் எழும்பினவர்களின் பேச்சுகளையும், அவர்கள் நித்தம் எனக்கு விரோதமாய் யோசிக்கும் வினைகளையும் கேட்டீர்.

௬௩ அவர்களுடைய உளுக்காருதலையும் அவர்களுடைய எழுந்திருக்குதலையும்நோக்கிப்பாரும்; நான் அவர்களுடைய கின்னரப்பாடலாயிருக்கிறேன்.

௬௪ கர்த்தாவே, அவர்கள் கைகளின் செய்கைக்குத்தக்க பதில்பலனை அவர்களுக்கு அளிப்பீர்.

௬௫ அவர்களுக்கு இருதயத்தின் மூனைக் கேட்டைக் கொடுப்பீர், உம்முடைய சாபம் அவர்கள்மேல் இருக்கும்.

௬௬ கோபமாய் அவர்களைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கர்த்தருடைய வானங்களின் கீழ் இராதபடிக்கு அழித்துவிடுவீர்.

## ௪. அதிகாரம்.

எத்தனையாய்ப் பொன் மங்கி, நல்ல தங்கம் மாறி, பரிசுத்தஸ்தலத்தின் கல்லுகள் சகல வீதிகளின் முகனையிலும் கொட்டுண்டுபோயின.

௨ எத்தனையாய் அபரஞ்சிக்கு ஒப்பிடப்பட்ட விலையேறப்பெற்ற சீயோன் குமாரர் குயவனுடைய கைகளின் வேலையான மண்பாண்டங்களுக்குச் சரியாக எண்ணப்படுகிறார்கள்.

௩ திமிங்கிலங்கள்முதலாய்க் கொங்கைகளை நீட்டி, தங்கள் குட்டிகளுக்கு முலை கொடுக்கின்றன; என் சனமாகிய குமாரத்தியோ வனாந்தர சிவனைத் தீக்குருவியைப் போலக் குரூரமாயிருக்கவேண்டும்.

௪ பாலகனுடைய நாவு தாகத்தால் அதின் மேல்வாயோடே ஒட்டிக்கொண்டிருக்கிறது; குழந்தைகள் அப்பங்கேட்கின்றன; அவைகளுக்குக் கொடுப்பாரில்லை.

௫ உருசிவர்க்கங்களைச் சாப்பிட்டவர்கள் வீதிகளில் பாழ்த்துக்கிடக்கிறார்கள்; இரத்தாம்பர உடுப்பில் வளர்க்கப்பட்டவர்கள் குப்பைமேடுகளை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.

௬ *கைகளின் பிரயாசம் இல்லாமல் ஒரு கணப்பொழுதில் ஆகுமாப்போலே கீழது மேலதாக்கப்பட்ட சோதோமின் பாவத்தைப்பார்க்கிலும் என் சனமாகிய குமாரத்தியின் அக்கிரமம் பெரிதானது.

*௧ மோ. ௰௯. ௨௪, ௨௫.

௭ அவர்களுடைய நசரேயர் உறைந்த மழையைப்பார்க்கச் சுத்தமும், மகா துப்பரவும், முத்துகளைப்பார்க்கச் சுத்தாங்கமும், நீலக்கல் இழைத்த மேனியுமாயிருந்தார்கள்.

௮ அவர்களுடைய உருவம் கறுப்பினும் இருண்டுபோயிற்று; வீதிகளில் அறியப்படமாட்டார்கள்; அவர்கள் தோல் அவர்கள் எலும்புகளோடு ஒட்டிக்கொண்டு, காய்ந்த மரத்துக்கு ஒப்பாயிற்று.

௯ பட்டயத்தால் கொலையுண்டவர்கள், பசியினால் கொலையுண்டவர்களைப்பார்க்க, பாக்கியவான்களாயிருக்கிறார்கள்; ஏனெனில், இவர்கள் வயல்களுடைய வரத்தில்லாமையால் குத்துண்டு, கலைந்துபோகிறார்கள்.

௰ *இரக்கமுள்ள ஸ்திரிகளின் கைகள் தங்கள் பிள்ளைகளைச் சமைத்தன; என் சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலில் அவைகள் அவர்களுக்கு ஆகாரமாயின. *புலம். ௨. ௨௰.

௰௧ கர்த்தர் தம்முடைய சினத்தை நிறைவேற்றி, தம்முடைய கோபத்தின் உக்கிரத்தை ஊற்றிப்போட்டு, சீயோனில் அக்கினியைக் கொளுத்தினார்; அது அதின் அஸ்திபாரங்களைப் பட்சித்துப்போட்டது.

௰௨ சத்துருவும் பகைஞனும் எருசலேமின் வாசல்களுக்குள் பிரவேசிப்பான் என்கிறதைப் பூமியின் இராசாக்களும் பூச்சக்கரத்தினுடைய சகல குடிகளும் நம்பாதே போனார்கள்.

௰௩ அதின் நடுவில் நீதிமான்களின் இரத்தத்தைச் சிந்திப்போட்ட அதினுடைய தீர்க்கதரிசிகளின் பாவங்களினாலும் அதினுடைய ஆசாரியர்களின் அக்கிரமங்களினாலும் அப்படி வந்தது.

௰௪ குருடர் வீதிகளில் அலைந்து, அந்த இரத்தத்தால் கறைப்பட்டு, ஒத்திப்போகக்கூடாததினால் இவர்கள் வஸ்திரங்களைத் தொட்டார்கள்.

௰௫ விலகுங்கள், தீட்டு உண்டாயிருக்கிறது; தொடாமல் விலகுங்கள், விலகுங்கள் என்று அவர்களை நோக்கிக் கூப்பிட்டார்கள்; மெய்யாய்ப் பறந்தும் அலைந்தும் போனார்கள்; இனித் தங்கித்தரிக்கமாட்டார்களென்று புறச்சாதிகளுக்குள்ளேதான் சொல்லப்பட்டது.

௰௬ கர்த்தருடைய முகம் அவர்களைப் பிரித்துவிட்டது; அவர்களை இனி நோக்கார்; ஆசாரியர்களுடைய முகத்தைப் பாராமலும் முதிர்ந்தவயதுள்ளவர்களுக்கு இரங்காமலும் போனார்கள்.

௰௭ இன்னம் நாங்கள் எங்கள் அபத்தமான சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள் கண்கள் பூத்துப்போயின; இரட்சிக்கமாட்டாத சாதிக்கு எதிர்பார்க்கவே எதிர்பார்த்தோம்.

௰௮ நாங்கள் எங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதபடிக்கு எங்கள் நடைகளை வேட்டையாடினார்கள்; எங்கள் முடிவு சேர்ந்தது; எங்கள் நாட்கள் நிறைவேறிப்போயின; ஏனெனில், எங்கள் முடிவு வந்தது.

௰௯ எங்களைப் பின்தொடர்ந்தவர்கள் ஆகாசத்துக் கழுகுகளைப்பார்க்கிலும் வேகமாயிருந்தார்கள்; பருவதங்களின்மேல் எங்களைக் கடிதாய்த் தொடர்ந்தார்கள்; வனாந்தரத்தில் எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.

௨௰ எங்கள் நாசியின் மூச்சாகிய கர்த்தர் அபிஷேகம் பண்ணுவித்தவனுடைய நிழலிலே சாதிகளுக்குள்ளே பிழைப்போம் என்றோமே; *அவன் இவர்கள் படுகுழிகளில் பிடிபட்டான். *எரே. ௫௨. ௯.

௨௰௧ ஊத்ஸ தேசத்தில் குடியிருக்கிற *ஏதோம் குமாரத்தியே, சந்தோஷித்து மகிழ்; பாத்திரம் உன்னண்டைக்கும் தாண்டிவரும்; அப்போது வெறித்துத் திறந்துகிடப்பாய். *எரே. ௪௯. ௰௨. சங். ௱௩௭. ௭.

௨௰௨ சீயோன் குமாரத்தியே, *உன் அக்கிரமம் தீர்ந்தது; உன்னை அப்புறம் சிறைபோகப்பண்ணார்; ஏதோம் குமாரத்தியே, உன் அக்கிரமத்தை விசாரிப்பார், உன் பாவங்களைத் திறந்துவைப்பார். *ஏசா. ௪௰. ௧, ௨.

## ௫. அதிகாரம்.

கர்த்தாவே, எங்களுக்கு என்ன வந்ததென்று நினைத்துக்கொள்ளும்; எங்கள் நிந்தையை நோக்கிப்பாரும்.

௨ ¶ எங்கள் சுதந்தரம் அன்னியர்வசமாகவும் எங்கள் வீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும் புரண்டுபோயின.

௩ திக்கற்றவர்களானோம்; தகப்பன் இல்லை; எங்கள் தாய்கள் விதவைகளைப்போல இருக்கிறார்கள்.

௪ எங்கள் தண்ணீரைப் பணத்துக்கு வாங்கிக் குடிக்கிறோம்; எங்கள் விறகு விலைக்கிரயமாய் வருகிறது.

௫ எங்கள் கழுத்துக்குப் பாரமாக ஒட்டப்படுகிறோம், நாங்கள் உழைத்து, இளைத்தாலும் எங்களுக்கு இளைப்பாறுதல் இல்லை.

௬ அப்பத்தால் திருத்தியாகும்படிக்கு எகிப்தியருக்கும் அசூரியருக்கும் எங்கள் கையைக் கொடுத்தோம்.

௭ எங்கள் பிதாக்கள் பாவஞ்செய்தார்கள்; அவர்கள் இல்லை; *நாங்கள் அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம்.
*எரே. ௭. ௨௬.

௮ அடிமைகள் எங்களை ஆளுகிறார்கள்; எங்களை அவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.

௯ வனாந்தரத்தில் இருக்கிற பட்டையத்தைத்தொட்டு எங்கள் அப்பத்லதப்பிராணயோக்கியத்தோடே கொண்டுவருகிறோம்.

௰ பசியின் கடினத்தினால் எங்கள் தோல் அடுப்பங்கலாயைப்போலக் கறுத்துப்போயிற்று.

௰௧ சீயோனில் இருந்த ஸ்திரிகளையும் யூதா பட்டணங்களில் இருந்த கன்னியாஸ்திரிகளையும் அவமானப்படுத்தினார்கள்.

௰௨ பிரபுக்கள் அவர்கள் கையினால் தூக்கிப்போடப்பட்டார்கள்; *முதிர்ந்தவயதுள்ளவர்களின் முகங்கள் எண்ணப்படவில்லை. *௫ மோ. ௨௮. ௪௯, ௫௰.

௰௩ வாலிபரை எந்திரம் அரைக்கக் கொண்டுபோகிறார்கள்; இளைஞர் விறகு சுமந்து இடறுண்கிறார்கள்.

௰௪ முதிர்ந்த வயதுள்ளவர்கள் வாசல்களில் உளுக்காருகிறதும், வாலிபர் கின்னரங்களை வாசிக்கிறதும் ஒய்ந்துபோயிற்று.

௰௫ எங்கள் இருதயத்தின் சந்தோஷம் ஒழிந்துபோயிற்று; எங்கள் களிகூருதல் துக்கமாய் மாறிற்று.

௰௬ *எங்கள் தலையின் கிரீடம் விழுந்தது; ஆ நாங்கள் பாவஞ்செய்ததினால் எங்களுக்கு ஐயோ! *எரே. ௰௩. ௰௮.

௰௭ ¶ அதினாலே எங்கள் இருதயம் பலட்சயமாயிற்று; அதினாலே எங்கள் கண்கள் இருண்டுபோயின.

௰௮ பாழாய்க் கிடக்கிற சீயோன் பருவதத்தின்மேல் நரிகள் ஓடித்திரிகின்றன.

௰௯ ¶ கர்த்தாவே, தேவரீர் என்றென்றைக்கும் இருக்கிறீர்; *உம்முடைய ஆசனம் தலைமுறை தலைமுறையாக நிலைநிற்கும்.
*சங். ௱௪௫. ௰௩.

௨௰ *தேவரீர் என்றைக்கும் எங்களை மறந்து, நெடுங்காலமாக எங்களைக் கைவிட்டிருப்பானேன்? *சங். ௰௩. ௨.

௨௧ கர்த்தாவே, *எங்களை உம்மண்டைக்குத் திருப்பிக்கொள்ளும், அப்போது திரும்புகிறோம்; பூருவகாலத்துக்குச் சமானமாக எங்கள் நாட்களைப் புதியவைகளாக்கும்.
*எரே. ௩௧. ௰௮.

௨௨ ஏனெனில், எங்களை வெறுக்கவே வெறுப்பீரோ? மிகுதியாகவும் எங்கள்பேரிலே கடுமையாயிருப்பீரோ?

# ஏசேக்கியேலின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

முப்பதாம் வருஷத்து நாலாம்மாதம் ஐந்தாந்தேதியிலே நான் *கேபார் நதி அண்டையிலே சிறையிருப்பானவர்களின் நடுவில் இருக்கும்போது சம்பவித்ததேதென்றால், வானங்கள் திறவுண்டு, நான் பராபரனுடைய தரிசனைகளைக் கண்டேன்.
*சங். ௱௩௭. ௧.

௨ அப்போது *யோயாக்கீனென்ற இராச

வுடைய சிறையிருப்பின் ஐந்தாம் வருஷம். *௨ இரா. ௨௪. ௰௫.

௩ அந்த ஐந்தாந்தேதியிலே, கல்தேயர் தேசத்திலுள்ள கேபார்நதியண்டையில் இருந்த பூசியென்ற ஆசாரியனின் குமாரனாகிய எசேக்கியேலுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகவே உண்டாகி, அங்கே கர்த்தருடைய கை அவன்மேல் வந்தது.

௪ ¶ இதோ, வடக்கேயிருந்து புசல்காற்றும் பெரிய மேகமும் அத்தோடே கலந்த அக்கினியும் வந்தன என்று கண்டேன்; அதைச் சுற்றிலும் பிரகாசமும் அதின் நடுவில் அக்கினிக்குள்ளிருந்து விளங்கியசொகுசாவின் உருவமும் உண்டாயிருந்தது.

௫ அதின் நடுவிலிருந்து புறப்படுகிற நாலு சீவன்களின் உரு காணப்பட்டது; அவைகளின் உருவம் எப்படியெனில், அவைகள் மனுஷசாயலாயிருந்தன.

௬ *அவைகளில் ஒவ்வொன்றுக்கு நந்நான்கு முகங்களும், ஒவ்வொன்றுக்கு நந்நான்கு செட்டைகளும் இருந்தன. *ஏசே. ௰. ௰௪.

௭ அவைகளுடைய கால்கள் செம்மையான கால்களானவைகள்; அவைகளுடைய உள்ளங்கால்களோ கன்றுக்குட்டியின் உள்ளங்கால்களுக்கு ஒப்பாயிருந்தன; துலக்கப்பட்ட வெண்கலத்தின் வருணமாய் மின்னிக்கொண்டிருந்தன.

௮ அவைகளுடைய செட்டைகளின்கீழ் அவைகளின் நாலுபக்கங்களிலும் *மனுஷகைகள் இருந்தன; நாலுக்கும் அதினதின் முகங்களும் அதினதின் செட்டைகளும் உண்டாயிருந்தன. *ஏசே. ௰. ௮.

௯ அவைகள் ஒவ்வொன்று தன்தன் செட்டைகளை மற்றதின் செட்டைகளோடே சேர்த்தது; அவைகள் நடக்கையில் திரும்பிக்கொள்ளாமல் ஒவ்வொன்று தன்தன் முகத்துக்கு எதிரான திக்குக்கு நெடுக நடந்தது.

௰ *அவைகளுடைய முகங்களின் சாயலேதெனில், அவைகளுக்கு மனுஷ முகங்களும், அவைகள் நாலுக்கும் வலதுபுறத்திலே †சிங்கமுகங்களும், அவைகள் நாலுக்கும் இடதுபுறத்திலே எருது முகங்களும், அவைகள் நாலுக்கும் கழுகு முகங்களும் இருந்தன. *ஏசே. ௰. ௰௪. வெளி. ௪. ௭ †௧ இரா. ௭. ௨௯.

௰௧ அவைகளுடைய முகங்களும் அவைகளுடைய செட்டைகளும் உயரப் பிரிந்திருந்தன; ஒன்றோடொன்று சேர்ந்த இரண்டிரண்டு செட்டைகள் ஒவ்வொன்றுக்கு இருந்தன; இரண்டிரண்டுசெட்டைகளோ அவைகளுடைய சரீரங்களை மூடின.

௰௨ ஒவ்வொன்று தன்தன் முகத்துக்கு எதிரான திக்குக்கு நெடுக நடந்தது; ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்துக்கும் அவைகள் போயின; போகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௩ சீவன்களுடைய சாயல் என்னவாயிருந்ததெனில், அவைகள் எரிகிற அக்கினியினுடைய தணலின் உருவமும் தீவர்த்திகளின் உருவமுமானவைகள்; இந்த அக்கினி சீவன்களுக்குள்ளே நடமாடிக்கொண்டு பிரகாசமாயிருந்தது; அக்கினியிலிருந்து மின்னல் புறப்பட்டது.

௰௪ சீவன்கள் மின்னலின் உருவமாக ஓடித்திரிந்தன.

௰௫ ¶ நான் இந்தச் சீவன்களைப் பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ, பூமியில் சீவன்களண்டையிலே ஒரு உருளை தனக்கிருக்கும் நாலு முகங்களின்படி நின்றது.

௰௬ *உருளைகளின் உருவும் அவைகளின் வேலையும் தர்சீஸ் இரத்தினத்தின் வருணமாயின; அவைகள் நாலுக்கும் ஒரேவித சாயல் உண்டாயிருந்தது; அவைகளின் உருவும் அவைகளின் வேலையும் உருளையின் நடுவில் உருளை இருக்குமாப்போலே காணப்பட்டன. *ஏசே.௰.௯,௰.௧இரா.௭.௩௰.

௰௭ அவைகள் ஓடுகையில் தங்கள் நாலு பக்கங்களிலும் ஓடும், ஓடுகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௮ அவைகளின் சக்கரங்களோவென்றால் பயங்கரமான உயர்த்தியாயிருந்தன; நாலினுடைய சக்கரங்களும் சுற்றிலும் *கண்களால் நிறைந்திருந்தன. *எசே. ௰. ௰௨.

௰௯ ¶ சீவன்கள் நடக்கையில் உருளைகள் அவைகளருகே ஓடின; சீவன்கள் பூமியிலிருந்து எழும்புகையில் உருளைகளும் எழும்பின.

௨௰ ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்துக்கும் அவைகள் போயின; அவ்விடத்துக்கு அவைகளின் ஆவியும் போகவேண்டுமென்றிருந்தது; உருளைகளும் அவைகளருகில் எழும்பின; ஏனென்றால் சீவனுடைய ஆவி உருளைகளில் இருந்தது.

௨௧ அவைகள் போகையில் இவைகள் போயின; அவைகள் நிற்கையில் இவைகள் நின்றன; அவைகள் பூமியிலிருந்து எழும்புகையில், உருளைகள் அவைகளருகே எழும்பின; ஏனெனில் சீவனுடைய ஆவி உருளைகளில் இருந்தது.

௨௨ ¶ சீவனுடைய தலைகளின்மேலோவென்றால், பயங்கரமான பளிங்கின் துலக்கமாய் ஒரு மண்டலம் இருந்தது; அவைகள் உயர அவைகளுடைய தலைகளின்மேல் விரித்திருந்தது.

௨௩ மண்டலத்தின்கீழ் அவைகளுடைய செட்டைகள் ஒன்றுக்கொன்று எதிராக செம்மையாய் விரிந்திருந்தன; தங்கள்தங்கள் சரீரங்களை மூடிக்கொள்ளுகிற இரண்டிரண்டு செட்டைகள் இந்தண்டையும் அந்தண்டையும் இருக்கிற ஒவ்வொன்றுக்கும் இருந்தன.

௨௪ அவைகள் நடக்கையில் நான் அவைகளுடைய செட்டைகளின் இரைச்சலைத் திரளான தண்ணீர்களின் இரைச்சலாகவும், சருவத்துக்கும் வல்லவருடைய சத்தமாகவும் கேட்டேன்; ஒரு இராணுவத்தின் இரைச்சலுக்கு ஒத்த அரவத்தின் சத்தமாயிருந்தது; அவைகள் நிற்கையில் தங்கள் செட்டைகளைத் தளரவிட்டன.

௨௫ அவைகள் நின்று தங்கள் செட்டைகளைத் தளரவிட்டிருக்கையில் அவைகளுடைய தலைகளுக்கு மேலான மண்டலத்தின்மீதிலிருந்து சத்தம் பிறந்தது.

௨௬ ¶ அவைகளுடைய தலைகளுக்கு மேலான மண்டலத்தின்மீதில் நீலக்கல்லின் உருவுக்கு ஒத்த இராசாசனத்தினுடைய சாயலும், உயர இராசாசனத்தினுடைய சாயலின்மேலே மனுஷனுக்கு ஒத்த சரூபமும் இருந்தது.

௨௭ அவருடைய இடுப்பின் உருவந்துவக்கி மேலெல்லாம் உட்புறம் சுற்றிலும் அக்கினிக்காந்தியான சொகுசாவின் நிறமாகக் கண்டேன்; அவருடைய இடுப்பின் உருவந்துவக்கிக் கீழெல்லாம் அக்கினி உருவமாகவும், அதைச் சுற்றிலும் பிரகாசமாகவும் கண்டேன்.

௨௮ மழைநாளில் மேகத்தில் வானவில் எப்படிக் காணப்படுகிறதோ, அப்படிச் சுற்றிலுமுண்டான அந்தப் பிரகாசம் காணப்பட்டது; இதுவே கர்த்தருடைய மகிமையின் சாயலின் தரிசனையாயிருந்தது;* அதை நான் பார்த்தபோது நான் முகங்குப்புற விழுந்து, பேசுகிற ஒருவருடைய சத்தத்தைக் கேட்டேன். *தானி. ௰. ௯.

## ௨. அதிகாரம்.

அவர் என்னுடனே: மனுபுத்திரனே, *உன் பாதங்களின்மேல் நில்; உன்னுடனே பேசுவோம் என்றார். *தானி. ௰. ௰௧.

௨ இப்படி அவர் என்னுடனே சொல்லுகிறபோது, *ஆவி எனக்குள் வந்து, என்னை என் பாதங்களின்மேல் நிறுத்திற்று; அப்போது என்னுடனே பேசுகிறவரின் வசனத்தைக் கேட்டேன். *எசே. ௩. ௨௪.

௩ அவர் என்னுடனே சொன்னதாவது: மனுபுத்திரனே, நமக்கு விரோதமாய் எழும்பின கலகக்காரசாதியாகிய இஸ்ரவேல் புத்திரரண்டைக்கு நாம் உன்னை அனுப்புகிறோம்; அவர்களும் அவர்கள் பிதாக்களும்

இந்நாள்வரைக்குமே நமக்கு விரோதமாய்த் துரோகஞ்செய்தார்கள்.

௪ *அவர்கள் கடினமுகமும் முரட்டாட்ட இருதயமுமுள்ள புத்திரர்; அவர்களண்டைக்கு நாம் உன்னை அனுப்புகிறோம்; கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைக்கிறாரென்று அவர்களோடே சொல்வாயாக.
*ஏசா. ௪௮. ௪. எரே. ௫. ௩.

௫ கலகவீட்டாராகிய அவர்கள் கேட்டாலும் கேளாவிட்டாலும் *தங்களுக்குள்ளே ஒரு தீர்க்கதரிசி இருக்கிறதை அவர்கள் அறியவேண்டும். *ஏசே. ௩. ௰௭.

௬ ¶ மனுபுத்திரனே, *நீ அவர்களுக்குப் பயப்படாயாக; அவர்கள் வார்த்தைகளுக்கும் பயப்படாயாக; முரட்டாட்டக்காரரும் முள்ளுகளும் உன்னிடத்தில் இருந்தாலும், நீ தேள்களிடத்தில் தங்கியிருந்தாலும், நீ அவர்கள் வார்த்தைகளுக்குப் பயப்படாமலும் †அவர்கள் முகத்துக்குக் கலங்காமலுமிருப்பாயாக; ஏனெனில் அவர்கள் கலகவீட்டார். *எரே. ௧. ௮.
†௧ பே. ௩. ௰௪.

௭ கலகக்காரராகிய அவர்கள் கேட்டாலும் கேளாவிட்டாலும் நீ நம்முடைய வார்த்தைகளை அவர்களோடே சொல்வாயாக.

௮ ¶ மனுபுத்திரனே, நீயோவென்றால் கலகவீட்டாரைப்போலக் கலகக் குணமாயிராமல், நாம் உன்னோடே சொல்லுகிறதைக் கேள்; உன் வாயைத் திறந்து, *நாம் உனக்குக் கொடுக்கிறதைப் புசியென்றார்.
*வெளி. ௰. ௯.

௯ அப்போது இதோ, என்னண்டைக்கு நீட்டப்பட்ட கையைக் கண்டேன்; இதோ, அதிலே புஸ்தகச்சுருள்.

௰ அவர் அதை எனக்குமுன்பாக விரித்தார்; அது முற்புறமும் பிற்புறமும் எழுதப்பட்டதாயிருந்தது; அதிலே புலம்பல்களும் தவிப்பும் ஐயோ என்பதும் எழுதியிருந்தது.

## ௩. அதிகாரம்.

பிற்பாடு அவர் என்னுடனே, மனுபுத்திரனே, *நீ காண்கிறதைப் புசி; இந்தச் சுருளை நீ புசித்து, போய், இஸ்ரவேல் வீட்டாரோடே பேசு என்றார். *வெளி. ௰. ௯.

௨ அப்படியே என் வாயைத் திறந்தேன்; அப்போது அவர் அந்தச் சுருளை எனக்குப் புசிக்கக் கொடுத்து,

௩ என்னுடனே, மனுபுத்திரனே, நாம் உனக்குக் கொடுக்கிற இந்தச் சுருளை நீ உன் வயிற்றிலே உட்கொண்டு, அதினால் உன் குடல்களை நிரப்புவாயாகவென்றார்; அப்போது அதைப் புசித்தேன்; *அது என் வாயிலே தேனைப்போலத் தித்திப்பாயிருந்தது. *வெளி. ௰. ௰.

௪ பிறகு அவர் என்னுடனே சொன்னதாவது: மனுபுத்திரனே, நீ போய், இஸ்ரவேல் வீட்டாரிடத்திலே சேர்ந்து, நம்முடைய வார்த்தைகளைக்கொண்டு அவர்களோடே பேசு.

௫ ஏனெனில் அடக்கமான உதடும் அறிய அரிதான பாஷையுமுள்ள சனத்தண்டைக்கல்ல, இஸ்ரவேல் வீட்டாரண்டைக்கே நீ அனுப்பப்படுகிறாய்.

௬ அடக்கமான உதடும், தாங்கள் சொல்லும் வார்த்தைகளை நீ உணரமாட்டாத அரிதான பாஷையுமுள்ள அநேக சனசதளங்களண்டைக்கு நீ அனுப்பப்படுகிறதுமில்லையே; நாம் அவர்களண்டைக்கு உன்னை அனுப்பினாலும், அவர்கள் உனக்குக் கேள்விகொடாதிருப்பார்களோ?

௭ இஸ்ரவேல் வீட்டாரோவெனில் உனக்குக் கேள்விகொடுக்கமாட்டோமென்பார்கள்; ஏனெனில் நமக்குத்தானே கேள்விகொடுக்கமாட்டோமென்கிறார்கள்; அதேனென்றால் இஸ்ரவேல் வீட்டார் அனைவரும் *முரட்டாட்ட நெற்றியும் கடின இருதயமும் உள்ளவர்கள். *ஏசே. ௨. ௪.

௮ இதோ, *உன் முகத்தை அவர்கள்

முகத்துக்கெதிராகக் கெட்டியும், உன் நெற்றியை அவர்கள் நெற்றிக்கெதிராகக் கெட்டியுமாக்குகிறோம். *எரே. க. ௰அ.

௯ உன் நெற்றியை வச்சிரத்தைப்போலவும் கல்மலையைப்பார்க்கிலும் கெட்டியுமாக்கினோம்; அவர்கள் கலகமுள்ள வீட்டாரென்று நீ அவர்களுக்குப் பயப்படாமலும் அவர்கள் முகங்களுக்குக் கலங்காமலும் இருப்பாயாகவென்றார்.

௰ ¶ பின்னையும் அவர் என்னோடே சொன்னதாவது: மனுபுத்திரனே, நாம் உன்னுடனே சொல்லும் நம்முடைய வார்த்தைகளை எல்லாம் நீ உன் இருதயத்துக்குள் ஏற்றுக்கொண்டு, உன் செவிகளாலே கேட்டு,

௰க நீ போய், சிறையிருப்பான உன் சனத்தின் புத்திரரிடத்திலே சேர்ந்து, *அவர்கள் கேட்டாலும் கேளாவிட்டாலும் அவர்களுடனே பேசி, கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைக்கிறாரென்று அவர்களோடே சொல்வாயாகவென்றார்.
*ஏசே. உ. ரு—எ.

௰உ ¶ *அப்போது ஆவி, என்னை எடுத்துக்கொண்டது; தன் தானத்திலிருந்து விளங்கிய கர்த்தருடைய மகிமை ஸ்தோத்திரிக்கப்படக்கடவதென்று எனக்குப் பின்னாகக் கூப்பிட்ட மகா அதிர்த்தலின் சத்தத்தையும், *ஏசே. அ. ௩.

௰௩ ஒன்றோடொன்று சேருகிற சீவன்களுடைய செட்டைகளின் இரைச்சலையும் அதற்கெதிரே ஓடிய உருளைகளின் இரைச்சலையும் மகா அதிர்த்தலின் சத்தத்தையும் கேட்டேன்.

௰௪ ஆவி என்னை எடுத்துக்கொண்டது; நான் என் ஆவியின் உக்கிரத்தினாலே கசப்போடே போனேன்; ஆனால் கர்த்தருடைய கை என்மேல் பெலனாக இருந்தது.

௰௫ கேபார் நதியண்டையிலே தெல்அவீபிலே தாபரிக்கிற சிறையிருப்பானவர்களண்டைக்கு நான் வந்து, அவர்கள் தாபரிக்கிற ஸ்தலத்திலே தாபரித்து, ஏழுநாள் அவர்கள் நடுவிலே பிரமித்தவனாய்த் தங்கினேன்.

௰௬ ¶ ஏழுநாளின் முடிவிலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௭ மனுபுத்திரனே, *உன்னை இஸ்ரவேல் வீட்டாருக்குக் காவற்காரனாக வைத்தோம்; நீ நம்முடைய வாயினாலே வார்த்தையைக் கேட்டு, நம்முடைய நாமத்திலே அவர்களை எச்சரிப்பாயாக. *ஏசே. ௩௩. எ—௯.

௰௮ சாகவே சாவாயென்று நாம் ஆகாதவனுக்குச் சொல்லுகையில் நீ அவனை எச்சரிக்காமலும், நீ ஆகாதவனைத் தன் ஆகாதவழியில் இராதபடிக்கு எச்சரிக்கத்தக்கதாகவும் அவனை உயிரோடே காக்கத்தக்கதாகவும் அதை அவனுக்குச் சொல்லாமலும் இருந்தால், அந்த ஆகாதவன் தன் அக்கிரமத்திலே சாவான்; ஆனால் அவன் இரத்தப்பழியை உன் கையிலே கேட்போம்.

௰௯ நீ ஆகாதவனை எச்சரித்தும், அவன் தன் ஆகாமியத்தையும் தன் ஆகாதவழியையும்விட்டுத் திரும்பாதேபோனானேயாகில், அவன் தன் அக்கிரமத்திலே சாவான்; நீயோவெனில் உன் ஆத்துமாவைத் தப்பப்பண்ணினாய்.

உ௰ ¶ அப்படியே, *நீதிமான் தன் நீதியைவிட்டுத் திரும்பி, நீதிகேடுசெய்யும்போதும், நாம் அவன்முன் இடறை வைக்கும்போதும், அவன் சாவான்; நீ அவனை எச்சரிக்காதபடியினாலே தன் பாவத்திலே சாவான்; அவன் செய்த நீதிகள் நினைக்கப்படுவதில்லை; அவனுடைய இரத்தப்பழியையோ உன் கையிலே கேட்போம்.
*ஏசே. ௰அ. உ௪, ௩௩: ௰உ. ௰௩.

உக நீயோவென்றால், நீதிமான் பாவஞ்செய்யாதபடிக்கு நீதிமானை எச்சரித்தபிறகு அவன் பாவஞ்செய்யாவிட்டால், அவன் பிழைக்கவே பிழைப்பான்; ஏனெனில் எச்சரிக்கப்பட்டுப்போனான், நீயும்

உன் ஆத்துமாவைத் தப்பப்பண்ணினா யென்றார்.

௨௨ அவ்விடத்திலே *கர்த்தருடைய கை என்மேலே வந்து, அவர் என்னுடனே: நீ எழுந்திருந்து பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்போ, அங்கே உன்னுடனே பேசுவோமென்றார். *எசே. ௧. ௩.

௨௩ அப்படியே எழுந்திருந்து, பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்போனேன்; இதோ, *நான் கேபார்நதியண்டையிலே கண்ட மகிமைக்குச் சரியாக அங்கே கர்த்தருடைய மகிமை நின்றது; அப்போது நான் முகங்குப்புற விழுந்தேன். *எசே. ௧. ௩. ழ.

௨௪ ஆனால் *ஆவி எனக்குள்வந்து, என்னை என் பாதங்களின்மேல் நிறுத்தினது; அப்போது அவர் என்னுடனே பேசி, எனக்குச் சொன்னதாவது: நீ போய், உன் வீட்டுக்குள்ளே உன்னை அடைத்துக்கொண்டிரு. *எசே. ௨. ௨.

௨௫ ஏனெனில், இதோ, மனுபுத்திரனே, உன்மேல் கயிறுகளைப் போட்டு, அவைகளால் உன்னைக் கட்டப்போகிறார்கள்; ஆகையால் நீ அவர்களுக்குள் புறப்படாயாக.

௨௬ நாம் உன் நாவை உன் மேல்வாயோடே ஒட்டிக்கொள்ளப்பண்ணுவோம்; நீ அவர்களுக்குக் கடிந்துகொள்ளுகிற மனுஷனாயிராமல் ஊமையாயிருப்பாய்; ஏனென்றால் அவர்கள் கலகவீட்டார்.

௨௭ நாம் உன்னோடே சொல்லும்போதோவெனில், உன் வாயைத் திறப்போம்; அப்போது கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைத்தாரென்று அவர்களோடே சொல்வாயாக; *கேட்கிறவன் கேட்பான், கேளாதவன் கேளாதிருப்பான்; ஏனென்றால் அவர்கள் கலகவீட்டார். *எசே. ௨. ௫, ௭.

## ௪. அதிகாரம்.

இப்போதும் மனுபுத்திரனே, நீ ஒரு செங்கல்லை எடுத்துக்கொண்டு, அதை உன்முன்னே வைத்து, அதின்மேல் எருசலேமென்ற பட்டணத்தைப் பதித்து,

௨ *அதற்கு விரோதமாக முற்றிக்கைபோட்டு, அதற்கு விரோதமாகக் கொத்தளங்களைக் கட்டி, அதற்கு விரோதமாக அணைபோட்டு, அதற்கு விரோதமாக இராணுவங்களை நிறுத்தி, சுற்றிலும் அதற்கு விரோதமாக மதிலை முட்டும் எத்தனங்களை வை. *௨ இரா. ௨௫. ௧.

௩ நீயோவென்றால், இருப்புச் சட்டியை வாங்கிக்கொண்டு, இதை உனக்கும் பட்டணத்துக்கும் நடுவாக இருப்புச் சுவராக்கி, அது முற்றிக்கையாய்க் கிடக்கும்படிக்கு உன் முகத்தை அதற்கு நேராகத் திருப்பி, அதை முற்றிக்கைபோட்டுக்கொண்டிரு; அது இஸ்ரவேல் வீட்டுக்கு அடையாளம்.

௪ ¶ நீயோவெனில் உன் இடதுபக்கமாய் ஒருக்களித்து, இஸ்ரவேல் வீட்டாரின் அக்கிரமத்தை அதின்பேரிலே சுமத்திக்கொள்; நீ அந்தப்பக்கமாய் ஒருக்களித்திருக்கும் நாட்களின் இலக்கத்துக்குத்தக்கதாக அவர்களுடைய அக்கிரமத்தைச் சுமப்பாயாக.

௫ ஏனெனில் அவர்களுடைய அக்கிரமத்தின் வருஷங்களை நாட்களாக எண்ணும் கணக்காய் உனக்குக் கட்டளையிட்டோம்; முந்நூற்றுத்தொண்ணூறு நாட்களாக நீ இஸ்ரவேல் வீட்டாரின் அக்கிரமத்தைச் சுமக்கவேண்டும்.

௬ நீ இவைகளை நிறைவேற்றினபிற்பாடு, மறுபடியும் உன் வலதுபக்கமாய் ஒருக்களித்து, யூதா வீட்டாரின் அக்கிரமத்தை நாற்பதுநாளாகச் சுமக்கவேண்டும்; ஒவ்வொரு வருஷத்துக்கு ஒவ்வொரு நாளை உனக்குக் கட்டளையிட்டோம்.

௭ ¶ நீ எருசலேமின் முற்றிக்கைக்கு நேராகத் திருப்பிக்கொண்ட முகமாகவும், திறந்த புயமாகவும் இருந்து, அதற்கு விரோ

தமாகத் தீர்க்கதரிசனம் சொல்வாயாக.

அ இதோ, நீ முற்றிக்கைபோடுதலின் நாள்களை நிறைவேற்றுமட்டாக ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கத்தில் புரளக்கூடாதபடிக்கு உன்பேரிலே கயிறுகளைப் போடுவோம்.

கூ ¶ இப்போதும், நீ கோதுமையையும் வாற்கோதுமையையும் பெரும்பயற்றையும் சிறுபயற்றையும் சாமையையும் கம்பையும் வாங்கி, அவைகளை ஒரு பாண்டத்திலே போட்டு, அவைகளால் உனக்கு அப்பஞ்சுடுவாயாக; நீ ஒருக்களித்துப் படுக்கும் நாள்களுடைய இலக்கத்தின்படியே முந்நூற்றுத்தொண்ணூறுநாள் அதில் சாப்பிடுவாயாக.

ய நீ சாப்பிடும் போசனப்படி, நாள் ஒன்றுக்கு இருபதுசேக்கல் நிறையாயிருப்பது, அப்படி நாளுக்குநாள் சாப்பிடுவாயாக.

யக தண்ணீரையும் அளவாய் இனிலே ஆறிலொருபங்கைக் குடிப்பாயாக; அப்படி நாளுக்குநாள் குடிக்கக்கடவாய்.

யஉ அதை வாற்கோதுமையினுடைய அடையின் சாயலாக்கிச் சாப்பிடுவாயாக; அது மனுஷனிலிருந்து கழிந்தகஷ்டத்தின் வறட்டிகளால் அவர்கள் கண்களுக்குமுன்பாகச் சுடப்படுவதாக.

யங ¶ அதற்கு ஒத்தபடியே இஸ்ரவேல் புத்திரர், நாம் தங்களைத் துரத்துகிற புறச்சாதிகளுக்குள்ளே தங்கள் அப்பத்தைத் தீட்டுள்ளதாகச் சாப்பிடுவார்களென்று கர்த்தர் சொன்னார்.

யச அப்போது நான்: ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, என் ஆத்துமா தீட்டுப்பட்டதில்லை; தானாய்ச் செத்ததையாகிலும் பீறுண்டதையாகிலும் நான் என் சிறுவயதுதுவக்கி இதுவரைக்கும் சாப்பிட்டதில்லை; அருவருப்பான இறைச்சி என் வாய்க்குட்பட்டதுமில்லை என்றேன்.

யரு ¶ அப்போது அவர் என்னுடனே: பார், மனுஷகஷ்டத்தின் வறட்டிகளுக்குப் பதிலாக உனக்கு மாட்டுச்சாணி வறட்டிகளைக் கட்டளையிடுகிறோம்; அவைகளின்மேல் உன் அப்பத்தைச் சுடுவாயாகவென்றார்.

யசு ¶ பிற்பாடு அவர் உரைத்ததாவது: மனுபுத்திரனே, இதோ, அப்பமும் தண்ணீரும் அவர்களுக்குக் குறையவும் அவனவன் திடுக்கிடவும் அவர்கள் தங்கள் அக்கிரமத்திலே வாடிப்போகவும்,

யஎ நாம் எருசலேமிலே *அப்பத்தின் ஆதரவுகோலை உடைக்கிறோம்; அவர்கள் அப்பத்தை நிறையின்படியேயும் விசாரத்தோடேயும் சாப்பிட்டு, தண்ணீரை அளவின்படியேயும் திடுக்கிடுதலோடேயும் குடிப்பார்கள்.

*ஏசே. ரு. யசு: யச. யங. ங மோ. உசு. உசு.

## ரு. அதிகாரம்.

பின்னையும் மனுபுத்திரனே, சவரகன் கத்தியாகிய கருக்கான கத்தியை வாங்கிக்கொள்; அதை வாங்கி, அதினால் உன் தலையையும் உன் தாடியையும் சிரைத்துக்கொண்டு, பிறகு நிறுக்கும் தராசை வாங்கி, மயிரைப் பங்கிடக்கடவாய்.

உ மூன்றத்தொருபங்கை முற்றிக்கைபோடும் நாள்கள் முடிகிறபோது நீ பட்டணத்தின் நடுவிலே அக்கினியால் சுட்டெரித்து, மூன்றத்தொருபங்கை வாங்கி, அதைச் சுற்றிலும் கத்தியாலே தட்டி, மூன்றத்தொருபங்கைக் காற்றில் தூற்றக்கடவாய்; அவைகளின்பிறகாலே நாம் பட்டயத்தை உருவுவோம்.

ங இவைகளில் கொஞ்சத்தை மாத்திரம் எடுத்து, அவைகளை உன் வஸ்திரத்தொங்கல்களில் முடிந்துவைப்பாயாக.

ச இன்னம் இவைகளில் சிலவற்றை எடுத்து, அவைகளைத் தீயின்நடுவில் எறிந்து, அவைகளை அக்கினியால் சுட்டெரிப்பாயாக; இதிலிருந்து இஸ்ரவேல் வீட்டார் அனைவருக்கும் விரோதமாக அக்கினி புறப்படும்.

ரு ¶ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இது புறச்சாதிகளின் நடுவிலே நாம் வைத்ததும், சுற்றிலும் தேசங்கள் இருக்கிறதுமான எருசலேம்.

௬ அது புறச்சாதிகளைப்பார்க்கிலும் நம்முடைய நியாயங்களையும், தன்னைச் சுற்றிலும் இருக்கிற தேசங்களைப்பார்க்கிலும் நம்முடைய கட்டளைகளையும் ஆகாமியமாக மாற்றிப்போட்டது; ஏனெனில் நம்முடைய நியாயங்களை வெறுத்து, நம்முடைய கட்டளைகளில் நடவாதே போனார்கள்.

௭ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: *உங்களைச் சுற்றிலும் இருக்கிற புறச்சாதிகளைப்பார்க்கிலும் அதிகரிக்கிறவர்களாகிய நீங்கள் நம்முடைய கட்டளைகளிலே நடவாமலும், நம்முடைய நியாயங்களைச் செய்யாமலும், உங்களைச் சுற்றிலும் இருக்கிற புறச்சாதிகளுடைய நீதிநியாயங்களின்படி முதலாய்ச் செய்யாமலும் போனபடியினாலே,

*ஏசே. ௰௧. ௰௨.

௮ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, நாம், நாமே உனக்கு விரோதமாக வந்து, புறச்சாதிகளுடைய கண்களுக்குமுன்பாக உன் நடுவிலே நியாயங்களைச் செய்து,

௯ நாம் செய்யாதிருக்கிறதும் இனிச் செய்யாதிருப்பதுமான விதமாய் உனக்கு உன்னுடைய எல்லா அருவருப்புகளின் நிமித்தமுமாய்ச் செய்வோம்.

௰ ஆனதுகொண்டு *உன் நடுவிலே பிதாக்கள் பிள்ளைகளைத் தின்பார்கள்; பிள்ளைகள் பிதாக்களைத் தின்பார்கள்; நாம் உன்னில் நியாயங்களைச் செய்து, உன்னில் மீதியாயிருப்பவர்களை எல்லாம் சகல காற்றுத்திசைகளிலும் சிதறிப்போகப்பண்ணுவோம்.

*ரு மோ. உ௮. ரு௩. எரே. ௰௯. ௯.

௰௧ ¶ ஆனதுகொண்டு, சீ என்னப்படத்தக்கதும் அருவருக்கப்படத்தக்கதுமான உன் கிரியைகளாலே நீ நமது பரிசுத்த ஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினபடியினாலே *நமது கண் உன்னைத் தப்பவிடாமல், நாமும் உன்னை வாங்கிப்போடுவோம்; நாமும் மன்னியோமென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.

*ஏசே. எ. ச: அ. ௰௮.

௰௨ உன்னிலே மூன்றத்தொருபங்கு பெருவாரிக்காய்ச்சலால் சாவார்கள்; பஞ்சத்தாலும் உன் நடுவிலே மடிந்துபோவார்கள்; மூன்றத்தொருபங்கு உன்னைச் சுற்றிலும் இருக்கிற பட்டையத்தால் வெட்டுண்டு விழுவார்கள்; மூன்றத்தொருபங்கை நாம் சகல காற்றுத்திசைகளிலும் சிதறிப்போகப் பண்ணி, அவர்கள் பிறகாலே பட்டையத்தை உருவுவோம்.

௰௩ இப்படி நம்முடைய கோபம் நிறைவேறும்; இப்படி நாம் நம்முடைய உக்கிரத்தை அவர்கள்பேரிலே தங்கப்பண்ணுகிறதினாலே *நம்மை ஆற்றிக்கொள்ளுவோம்; நாம் நம்முடைய உக்கிரத்தை அவர்களில் நிறைவேற்றுகையில், அப்போது கர்த்தராகிய நாம் நம்முடைய வைராக்கியத்திலே இதைப் பேசினோமென்று அறிவார்கள். *ஏசே. ௰௬. ௪௨.

௰௪ ¶ கடந்துபோகிற யாவருடைய கண்களுக்கு முன்பாகவும் நாம் உன்னை உன் சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குள்ளே பாழும் நிந்தையுமாக்கிப் போடுவோம்.

௰௫ நாம் கோபத்தாலும் உக்கிரத்தாலும் உக்கிரமான தண்டனைகளினாலும், உன்னில் நியாயங்களைச் செய்யும்போது *அந்த நிந்தையும் தூர்க்கீர்த்தியும் உன் சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குப் புத்தியாகவும் பிரமிப்பாகவும் இருக்கும்; கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம்.

*ரு மோ. உ௮. ௩௭: உ௯. உ௪.

௰௬ உங்களை அழிப்பதற்கு நாம் அனுப்பும் அழிப்புக்கான பஞ்சத்தின் பொல்லாத அம்புகளை நாம் அவர்களுக்குள்ளே எய்

யும்போது, *நாம் பஞ்சத்தை உங்கள்மேல் அதிகரிக்கப்பண்ணி, உங்கள் அப்பத்தின் ஆதரவுகோலை உடைப்போம். *எசே. ௪. ௰௬. ௩ மோ. ௨௬. ௨௬. ஏசா. ௩. ௧.

௰௭ பஞ்சத்தையும், *உன்னைப் பிள்ளைகள் இல்லாமல் போகப்பண்ணும் துஷ்டமிருகங்களையும் உங்களுக்கு விரோதமாக அனுப்புவோம்; பெருவாரிக்காய்ச்சலும் இரத்தத்தைச் சிந்துதலும் உன்னில் சுற்றித் திரியும்; பட்டயத்தை நாம் உன்மேல் வரப்பண்ணுவோம்; கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோமென்றார்.
*௩ மோ. ௨௬. ௨௨.

## ௬. அதிகாரம்.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி அவர் சொன்னதாவது:

௨ மனுபுத்திரனே, *நீ இஸ்ரவேலின் பருவதங்களுக்கு நேராக உன் முகத்தைத் திருப்பி, அவைகளுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்துச் சொல்லவேண்டியதேதெனில், *எசே. ௩௬. ௧.

௩ இஸ்ரவேலின் பருவதங்களே, கர்த்தராகிய ஆண்டவரின் வார்த்தையைக் கேளுங்கள்; பருவதங்களோடும் குன்றுகளோடும் ஓடைகளோடும் பள்ளத்தாக்குகளோடும் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, உங்கள்மேல் நாம், நாமே பட்டயத்தை வரப்பண்ணி, உங்கள் மேடைகளை அழித்துப்போடுவோம்.

௪ உங்கள் பலிபீடங்கள் பாழ்க்கடிக்கப்பட்டு, உங்கள் சிலைகள் தகர்க்கப்படும்; உங்களில் கொலையுண்கிறவர்களை உங்கள் நரகலான தேவர்களின் முகத்துக்குமுன்பாக விழப்பண்ணுவோம்.

௫ நாம் இஸ்ரவேல் புத்திரருடைய பிரேதங்களை அவர்களுடைய நரகலான தேவர்களின்முன்னே கிடக்கப்பண்ணி, உங்கள் எலும்புகளை உங்கள் பலிபீடங்களைச் சுற்றிலும் சிதறப்பண்ணுவோம்.

௬ உங்கள் பலிபீடங்கள் நிர்மூலமும் பாழுமாகும்படிக்கும், உங்கள் நரகலான தேவர்கள் தகர்க்கப்பட்டு, ஓய்ந்து, உங்கள் சிலைகள் வெட்டுண்டு, உங்கள் கிரியைகள் கொலைந்துபோகும்படிக்கும், உங்களுடைய எல்லா வாசஸ்தலங்களிலுமுள்ள பட்டணங்கள் நிர்மூலமும் உங்கள் மேடைகள் பாழுமாம்.

௭ கொலையுண்கிறவர்கள் உங்கள் நடுவில் விழுவார்கள்; அப்படியே *நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்கள்.
*எசே. ௭. ௨௭.

௮ ¶ நீங்கள் தேசங்களில் சிதற அடிக்கப்படும்போதோவெனில் புறச்சாதிகளுக்குள்ளே பட்டயத்துக்குத் தப்புவாரை உங்களுக்கு மீதியாக வைப்போம்.

௯ நம்மைவிட்டு அகன்ற விபசார இருதயத்தைத் தொட்டும், தங்கள் நரகலான தேவர்களைப் பின்பற்றின தங்கள் விபசாரக் கண்களைத் தொட்டும் மனமடிவானோமென்று உங்களில் தப்பிப்போன அவர்கள் தாங்கள் சிறைப்பட்டிருக்கும் புறச்சாதிகளுக்குள்ளே நம்மை நினைத்து, தங்களுடைய எல்லா அருவருப்புகளினாலும் தாங்கள் செய்த பொல்லாப்புகளின் நிமித்தம் தங்களைத்தானே அரோசித்து,

௰ இந்தத் தீங்குகளை எல்லாம் தங்களுக்குச் செய்வோமென்று கர்த்தராகிய நாம் விருதாவாய்ச் சொன்னதில்லையென்று அறிந்துகொள்ளுவார்களென்றார்.

௰௧ ¶ கர்த்தராகிய ஆண்டவர் சொன்னதாவது: நீ உன் கையில் அடித்து, உன் காலால் தட்டி, இஸ்ரவேல் வீட்டாருடைய எல்லாப் பொல்லாத அருவருப்புகளின் நிமித்தமும் ஐயோ! என்று சொல்; ஏனென்றால், *பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் விழுவார்கள்.
*எசே. ๕. ௰௭.

௰௨ தூரமாயிருக்கிறவன் பெருவாரிக்காய்ச்சலாலே சாவான்; சமீபமாயிருக்கிறவன்

கசிவன்களும் ஆகாயத்துப்பறவைகளும் தொய்ந்துபோகும்; கடலின் மச்சங்களும் வாரிக்கொள்ளப்படும்.

௪ ஆகிலும் ஒருவனும் நியாயத்தைக் காண்பிக்கவும் ஒருவனும் அவர்களைக் கடிந்துகொள்ளவும் கூடாது; ஏனெனில் உன் சனம் ஆசாரியனோடே வழக்காடுகிறவர்களைப்போல இருக்கிறார்கள்.

௫ ஆகையால் பகலிலே இடறிவிழுவாய்; இரவிலே உன்னோடேகூடத் தீர்க்கதரிசியும் இடறிவிழுவான்; உன் தாயை நாம் சங்காரம்பண்ணுவோம்.

௬ ¶ நமது சனம் அறிவில்லாமையினாலே சங்காரமாகிறது; ஏனெனில் நீ அறிவை வெறுத்தாய்; ஆகையால் நீ நம்முடைய ஆசாரியனாயிராதபடிக்கு உன்னை நாமும் வெறுப்போம்; நீ உன் பராபரனுடைய வேதத்தை மறந்தாய்; ஆகையால் உன் பிள்ளைகளை நாமும் மறப்போம்.

௭ எத்தனைக்குப் பெருகினார்களோ, அத்தனைக்கு நமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்கிறார்கள்; அவர்களுடைய கனத்தைக் கனவீனமாக மாறப்பண்ணுவோம்.

௮ நமது சனம் பாவம்போக்கப் பலியிடுகிறதை அவர்கள் தின்று, இவர்களுடைய அக்கிரமத்தின்பேரில் பசிதாகமாயிருக்கிறார்கள்.

௯ ஆனதுகொண்டு *சனமும் ஆசாரியனும்சரி; நாம் அவர்களை விசாரித்து, அவர்கள் வழிகளையும் அவர்கள் கிரியைகளையும் அவர்கள்மேல் திரும்பப்பண்ணுவோம்.

*ஏசா. ௨௪. ௨.

௰ *அவர்கள் தின்று, திருத்தியாகாதிருப்பார்கள்; வேசித்தனம்பண்ணி, பலுகாதிருப்பார்கள்; ஏனெனில் கர்த்தரை நோக்கிக்கொள்ளுதலை விட்டுவிட்டார்கள்.

*லே. ௨௬. ௨௬.

௰௧ ¶ வேசித்தனமும் திராட்சப்பழஇரசமும் மதுபானமும் இருதயத்தை மயக்கும்.

௰௨ நமது சனம் தன் மரத்தினிடத்தில் ஆலோசனை கேட்கிறது; தன் கட்டைதனக்குச்செய்தியை அறிவிக்குமென்றிருக்கிறது; ஏனெனில் வேசித்தன ஆவி அவர்களை வழிதப்பித் திரியப்பண்ணிற்று; அவர்கள் தங்கள் பராபரனுக்குக் கீழ்ப்படிராமல் வேசித்தனம்பண்ணுகிறார்கள்.

௰௩ அவர்கள் பர்வதங்களின் சிகரங்களில் பலியிட்டு, மேடுகளிலே கர்வாலியுமரங்களின்கீழும் புன்னைமரங்களின்கீழும் அரசமரங்களின்கீழும், அவைகளின் நிழல் நல்லதென்று தூபங்காட்டுகிறார்கள்; ஆனது கொண்டு உங்கள் குமாரத்திகள் வேசித்தனமும், உங்கள் மருமகன்மார் விபசாரமும் பண்ணுகிறார்கள்.

௰௪ நாம் உங்கள் குமாரத்திகளை இவர்கள் வேசித்தனம் பண்ணுகிறதின்நிமித்தமும், உங்கள் மருமகன்மார்களை அவர்கள் விபசாரம்பண்ணுகிறதின்நிமித்தமும், விசாரியாதிருப்போமோ? ஏனென்றால் வேசிகளோடேகூட அவர்கள் விலகிப்போய், பரஸ்திரிகளோடேகூடப் பலியிடுகிறார்கள்; உணர்வில்லாத சனம் அதினால் சிக்கிக்கொண்டு விழும்.

௰௫ ¶ இஸ்ரவேலாகிய நீ சோரம்போனால், யூதாவாகிலும் அந்தத் தோஷத்துக்குள்ளாகாதிருப்பதாக; கில்காலுக்கு வராமலும், பெத்தாவேனிலேபோயேறி,கர்த்தருடைய சீவனாணை என்று சொல்லாமலும் இருப்பீர்களாக.

௰௬ ஏனெனில் இஸ்ரவேல் சனம் கொடுமையான கிடாரியைப்போலே அடங்காதிருக்கிறது; இப்போது கர்த்தர் அவர்களை விஸ்தாரமான வெளியிலே ஆட்டுக்குட்டியைப்போலே மேய்ந்து அலையப்பண்ணுவார்.

௰௭ எப்பிராயீம் சனம் விக்கிரகங்களோடு இணையாய்ப்போயிற்று; அதைப்போகவிடு.

௰௮ அவர்களுடைய மதுபான வெறிதெளிந்தும், சோரம்போகவே போகிறார்கள்;

அவர்களுடைய கேடகங்களானவர்கள் தாருங்களென்று இலச்சையான மொழிவைச் சிநேகிக்கிறார்கள்.

௰௯ காற்று அவர்களை அவர்கள் செட்டைகளில் இறுகப்பிடிக்கும்; அப்போது தங்கள் பலிகளால் வெட்கப்படுவார்கள்.

## ரு. அதிகாரம்.

ஆசாரியர்களே, இதைக் கேளுங்கள்; இஸ்ரவேல்வீட்டாரே, கவனியுங்கள்; இராசாவின் வீட்டாரே, செவிகொடுங்கள்; ஏனெனில் இந்த நியாயவிசாரிப்பு உங்களுக்குச் செல்லும்; அதேதென்றால் மிஸ்பாவுக்குக் கண்ணியும் தாபோரின்மேல் விரிக்கிற வலையுமானீர்கள்.

௨ தப்பான பலிகளை அடிக்கிறதிலே ஆழமாய் இறங்கியிருக்கிறார்கள்; அவர்கள் எல்லாரையும் நாம் தண்டிக்கிறவராயிருப்போம்.

௩ எப்பிராயீமை நாம் அறிவோம், இஸ்ரவேல் நமக்கு மறைவானதல்ல; எப்பிராயீமே, இப்போது சோரம்போனாயே; இஸ்ரவேல் தீட்டுப்பட்டதே.

௪ தங்கள் கிரியைகளைத் தங்கள் பராபரனண்டைக்குத் திருப்புவதற்கு நேராகத் திருத்தார்கள்; ஏனெனில் *வேசித்தன ஆவி அவர்கள் உள்ளத்தில் இருக்கிறது; கர்த்தனை அறியார்கள். *ஓசே. ௪. ௰௨.

௫ ¶ இஸ்ரவேலின் அகந்தை அவர்கள் முகத்துக்குமுன்பாகச் சாட்சியிடுகிறது; ஆகையால் இஸ்ரவேலும், எப்பிராயீமும் தங்கள் அக்கிரமத்தினால் இடறுண்டு விழுவார்கள்; அவர்களோடேகூட யூதாவும் இடறுண்டு விழும்.

௬ அப்போது அவர்கள் கர்த்தரைத் தேடும்படிக்குத் தங்கள் ஆடுகளோடும் தங்கள் மாடுகளோடும் வந்தும் *கண்டுபிடியார்கள்; அவர்களைவிட்டுவிலகினார்.

*வாக். ௧. ௨௮.

௭ கர்த்தருக்கு விரோதமாகத் துரோகம் பண்ணினார்கள்; அதேனெனில் அன்னிய பிள்ளைகளைப் பெற்றார்கள்; இப்போது மாதப்பிறப்பு அவர்களையும் அவர்கள் பங்கு பகிர்ச்சிகளையுங்கூடப் பட்சிக்கும்.

௮ ¶ கிபேயாவிலே எக்காளத்தையும் ராமாவிலே பூரிகையையும் ஊதுங்கள்; பென்யமீன் கோத்திரத்தாரே, உங்களுக்குப் பிற்புறமாகிய பெத்தாவேனிலே கதறுங்கள்.

௯ தண்டிப்பின் நாளிலே எப்பிராயீம் பாழாகும்; நிச்சயமாய் வரப்போகிறதை இஸ்ரவேலின் கோத்திரங்களுக்குள்ளே அறிவிக்கிறோம்.

௰ யூதாவின் பிரபுக்கள் *எல்லைகளை ஒதுக்குகிறவர்களுக்கு ஒப்பானார்கள்; அவர்கள்மேல் நம்முடைய சினத்தைத் தண்ணீரைப்போல ஊற்றிப்போடுவோம்.

*உ மோ. ௰௯. ௰௪: ௨௭. ௰௭.

௰௧ ¶ எப்பிராயீம் ஒடுக்குண்டு, நியாயமாய் நொறுக்கப்பட்டுப்போகிறான்; ஏனெனில் ஆகாத கற்பனையை மனதாரப் பின்பற்றிப்போனான்.

௰௨ நாம் எப்பிராயீமுக்குப் பொட்டரிப்பாகவும், யூதாவின் வீட்டுக்குச் சொத்தைபிடிப்பாகவும் இருப்போம்.

௰௩ எப்பிராயீம் தன் வியாதியையும், யூதா தன் காயத்தையும் கண்டபோது, எப்பிராயீம் அசூரண்டைக்குப் போய், யாரேப் இராசாவண்டைக்கு ஆள் அனுப்பினான்; அவனோவென்றால் உங்களைக் குணமாக்கவும் உங்களில் இருக்கிற காயத்தை ஆரோக்கியம்பண்ணவும் கூடாது.

௰௪ ஏனெனில் நாம் எப்பிராயீமுக்குச் சிங்கமாகவும், யூதாவின் வீட்டாருக்கு இளஞ்சிங்கமாகவும் இருப்போம்; நாம்நாமே பீறிவிட்டுப் போய்விடுவோம்; தப்புவிப்பார் இல்லாமல் எடுத்துக்கொண்டுபோவோம்.

௰௫ அவர்கள் தங்கள் குற்றங்களை அறிந்து நமது முகத்தைத் தேடுமட்டுக்கும் நாம்

போய், நம்முடைய தானத்துக்குத் திரும்புவோம்; *தங்களுக்கு இக்கட்டான காலத்திலே நம்மைக் கருத்தாய்த் தேடுவார்கள். *ஏசா. ௨௬. ௰௬.

## ௬. அதிகாரம்.

கர்த்தரண்டைக்குத் திரும்புவோம் வாருங்கள்; ஏனெனில் *அவர் நம்மைப் பீறிப்போட்டார்; அவர் நம்மைக் குணமுமாக்குவார்; அடித்தார்; நம்முடைய காயங்களைக் கட்டுகிறவருமாய் இருப்பார். *ஓசே. ௫. ௰௪.

௨ இரண்டு நாளுக்குப்பிற்பாடு *நம்மை உயிர்ப்பிப்பார்; மூன்றாம்நாளிலே நம்மை எழுப்புவார்; அப்போது அவருக்குமுன்பாகப் பிழைப்போம். *௫ மோ. ௩௨. ௩௯. ஏசே. ௩௭. ௩.

௩ அப்போது நாம் அறிவடைந்து கர்த்தரை அறியத் தொடர்ந்துபோவோம்; விடியற்கால வெளுப்பைப்போலே அவர் வெளிப்பிரவேசிக்குதல் ஆயத்தப்பட்டிருக்கும்; மழையைப்போலே நிலத்தின்மேல் இறங்கின பின்மாரியைப்போலேதானே நம்மண்டைக்கு வருவார்.

௪ ¶ எப்பிராயீமே, உனக்கு என்னசெய்வோம்? யூதாவே, உனக்கு என்னசெய்வோம்? உங்கள் சன்மார்க்கம் விடியற்காலத்தின் மேகத்தைப்போலேயும், காலமே கண்டு போய்விடுகிற பனியைப்போலேயும் இருக்கிறது.

௫ ஆகையால் தீர்க்கதரிசிகளைக்கொண்டு வெட்டுகிறோம்; நமது வாயின் வார்த்தைகளைக்கொண்டு அவர்களைக் கொன்றுபோடுகிறோம்; அதின்பிறகு உன் நியாயங்கள் வெளிச்சத்தைப்போல உதிக்கும்.

௬ ¶ ஏனெனில் *பலியை அல்ல, இரக்கத்தையும் தகனபலிகளைப்பார்க்கப் பராபரனின் அறிவையும் விரும்புகிறோம். *௧ சாமு. ௰௫. ௨௨. மத். ௯. ௰௩; ௰௨. ௭.

௭ அவர்களோவென்றால் ஆதாமைப்போல உடம்படிக்கையை மீறி, அங்கே நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணினார்கள்.

௮ கிலேயாத் அக்கிரமம் செய்பவர்களின் பட்டணம்; அது இரத்தக் காலடிகளால் மிதிக்கப்பட்டிருக்கிறது.

௯ பதிகாரரின் கூட்டங்கள் ஒருவனுக்குக் காத்திருக்குமாப்போலே, சிகேமுக்குப்போகிற வழியிலே கொலைகளைச் செய்கிற ஆசாரியரின் கூட்டம் இருக்கிறது; தோஷமான காரியங்களையே செய்கிறார்கள்.

௰ திடுக்கிடப்படத்தக்க காரியத்தை இஸ்ரவேல் வீட்டாரிலே கண்டோம்; அங்கே எப்பிராயீமின் வேசித்தனம் உண்டு; இஸ்ரவேல் தீட்டுப்பட்டுப்போயிற்று.

௰௧ ¶ ஆகிலும் நாம் நமது சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யூதா உனக்கு அறுப்புக்காலத்துக்குக் காரணமாயிருக்கும்.

## ௭. அதிகாரம்.

நாம் இஸ்ரவேலைக் குணமாக்க இருக்கையில், எப்பிராயீமின் அக்கிரமமும் சமாரியாவின் பொல்லாப்புகளும் வெளிப்படுகின்றன; ஏனென்றால் வஞ்சனைசெய்கிறார்கள்; உள்ளே திருடன் வருகிறான்; வெளியே பதிகாரரின் கூட்டம் கொள்ளையிடுகிறது.

௨ தங்கள் பொல்லாப்பை எல்லாம் நினைத்திருக்கிறோமென்று அவர்கள் தங்கள் இருதயத்தில் சிந்திக்கிறதில்லை; இப்போதும் அவர்களுடைய கிரியைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டு, நமது முகத்துக்கு எதிரே இருக்கின்றன.

௩ இராசாவைத் தங்கள் பொல்லாப்பினாலும் பிரபுக்களைத் தங்கள் பொய்களினாலும் சந்தோஷப்படுத்துகிறார்கள்.

௪ அவர்கள் எல்லாரும் விபசாரக்கள்ளர்; அப்பஞ்சுடுகிறவனால் எரியிடப்படுகிற அடுப்பைப்போல இருக்கிறார்கள்; மாவைப்

பிசைந்தது முதற்கொண்டு அது உப்பிப் போகுமட்டுக்கும், அனலை எழுப்பாமல் ஓய்ந்திருக்கிறான்.

௫ நம்முடைய இராசாவின் நாளென்று சொல்லி, பிரபுக்கள் அவனைத் திராட்சப்பழஇரசத் துருத்திகளால் நோஞ்சலாக்குகிறார்கள்; சரசக்காரரோடேகூட அவன் தன் கையை நீட்டுகிறான்.

௬ அவர்கள் பதிவிருக்கும் தறுவாயிலோவென்றால், தங்கள் இருதயத்தை அடுப்பைப்போல வைக்கிறார்கள்; அவர்களில் அடுப்புமூட்டுகிறவன் இராமுழுதும் தூங்குகிறான்; காலமேயோவென்றால் அது சுவாலையிடுகிற அக்கினியாய் எரிகிறது.

௭ அவர்கள்எல்லாரும்அடுப்பைப்போல அனலாகி, தங்கள் நியாயாதிபதிகளைப் பட்சிக்கிறார்கள்;அவர்களுடைய இராசாக்கள் எல்லாரும் விழுகிறார்கள்; அவர்களில் நம்மைநோக்கிக் கூப்பிடுகிறவன் இல்லை.

௮ ¶ எப்பிராயீம் சனசதளங்களோடே கலந்தான்; எப்பிராயீம் திருப்பப்படாதே போன அப்பம்.

௯ அன்னியர் அவனுடைய பலத்தைத் தின்கிறார்கள்; அவனோ அதை அறியான்; நரையும் அவனில் தெளித்திருக்கிறது; அவனோ அதை அறியான்.

௰ இஸ்ரவேலின் அகந்தை அவர்கள் முகத்துக்கு முன்பாகச் சாட்சியிட்டாலும், அவர்கள் தங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பாமலும், இதிலெல்லாம் அவரைத் தேடாமலும் போகிறார்கள்.

௰௧ எப்பிராயீம் பேதையான புறாவைப் போல இருக்கிறான்; புத்தியில்லை; எகிப்தியனைக் கூப்பிடுகிறார்கள்; அசூரியனண்டைக்கும் போகிறார்கள்.

௰௨ அவர்கள் போனால், *நமது வலையை அவர்கள்மேல் வீசுவோம்; அவர்களை ஆகாசத்துப்பறவைகளைப்போலே கீழே விழப் பண்ணுவோம்; அவர்களுடைய சபையில் கேட்கப்பட்டதின்படியே அவர்களைத்தண்டிப்போம். *௨ இரா. ௰௭. ௪, ௫.

௰௩ ¶ அவர்கள் நம்மைவிட்டு அலைந்து திரிகிறபடியினாலே அவர்களுக்கு ஐயோ! அவர்களுக்குக் கேடுவரும்; ஏனெனில் நமக்கு விரோதமாக இரண்டகம்பண்ணினார்கள்; நாம் அவர்களை மீட்டிருந்தும், அவர்கள் நமக்கு விரோதமாகப் பொய்களைப் பேசுகிறார்கள்.

௰௪ அவர்கள் தங்கள் படுக்கைகளில் அலறுகிறபோது, தங்கள் இருதயத்திலே நம்மைநோக்கிக் கூப்பிடுகிறதில்லை; அவர்கள் தானியத்துக்காகவும் திராட்சப்பழ இரசத்துக்காகவுங்கூடி, நம்மை வெறுத்து விலகிப்போகிறார்கள்.

௰௫ நாம் தண்டித்தோம்; அவர்களுடைய புயங்களைத் திரும்பப் பலக்கவும் பண்ணினோம்; ஆகிலும் நமக்கு விரோதமாகப் பொல்லாப்பு நினைக்கிறார்கள்.

௰௬ திரும்புகிறார்கள்; ஆனால் உன்னதமானவரண்டைக்கு அல்ல, *கள்ள வில்லுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்; அவர்களுடைய பிரபுக்கள் தங்கள் நாவினுடைய சினத்தின் நிமித்தம் பட்டயத்தால் விழுவார்கள்; இது எகிப்து தேசத்தைத்தொட்டு அவர்களுக்கு வரும் நிந்தை.

*சங். ௭௮. ௫௭.

## ௮. அதிகாரம்.

உன் *வாயிலே எக்காளத்தை வைத்துக்கொள்; யூதா வீட்டார் நம்முடைய உடம்படிக்கையை மீறி, நம்முடைய நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாகத் துரோகம் பண்ணினபடியினாலே,அவர்கள்மேல் கழுகைப்போலப் பாய்ந்துவருகிறான்.

*ஏசா. ௫௮. ௧.

௨ எங்கள்பராபரனே,உம்மை அறிந்திருக்கிறோம்என்றுஇஸ்ரவேலர்கூப்பிடுவார்கள்.

௩ ஆனால் இஸ்ரவேலர் நன்மையை ஒழித்துவிட்டார்கள்; சத்துரு அவர்களைத் தொடருவான்.

௪ அவர்கள் இராசாக்களை வைத்துக்கொண்டார்கள்; ஆனால் நம்மாலே அல்ல, பிரபுக்களை வைத்துக்கொண்டார்கள்; ஆனால் நாம் அறியோம்; அவர்கள் வேரறுப்புண்டு போகும்படிக்குத் தங்கள் வெள்ளியினாலும் தங்கள் பொன்னினாலும் தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்வித்தார்கள்.

௫ ¶ சமாரியாவே, உன் கன்றுக்குட்டி உன்னை ஒழித்துவிடுகிறது; நம்முடைய கோபம் அவர்கள்மேல் மூண்டது; எத்தனைநாள் சுத்தாங்கம் அடையமாட்டாதிருப்பார்கள்?

௬ ஏனெனில் அதுதானும் இஸ்ரவேலருடைய செய்கை; தட்டான் அதைச் செய்தான்; அது தேவன் அல்லவே, ஏனென்றால் சமாரியாவின் கன்றுக்குட்டி துணிக்கைகளாய்ப் போகும்.

௭ ஏனெனில் காற்றை விதைத்து, பெருங்காற்றை அறுக்கிறார்கள்; விளைச்சல் அவர்களுக்கு இல்லை; முளையானது மாவைக் கொடுக்கிறதற்கு வராது; அல்லவென்று வந்தாலும் அன்னியர் அதைவிழுங்குவார்கள்.

௮ இஸ்ரவேல் விழுங்கப்படுகிறது; இனிப் புறச்சாதிகளுக்குள்ளே *விரும்பப்படாத பாத்திரத்தைப்போல இருப்பார்கள்.
*சங். ௩௧. ௰௩.

௯ ஏனெனில் அவர்கள் தனித்துத் திரிகிற காட்டுக்கழுதையைப்போல *அசூரியரண்டைக்குப் போய் ஏறினார்கள்; எப்பிராயீமர் சிநேகிதரைக் கூலிபொருந்திக்கொண்டார்கள். *ஓசே. ௫. ௰௩.

௰ ஆனால் அவர்கள் புறச்சாதியாரைக் கூலிபொருந்திக்கொண்டாலும், இப்போது நாம் இவர்களைக் கூட்டுவோம்; பிரபுக்களின் இராசா சுமத்தும் சுமையினாலே அவர்கள் குறுகிப்போகத் துவக்குவார்கள்.

௰௧ ¶ ஏனெனில் எப்பிராயீமர் பாவஞ்செய்வதற்கான பலிபீடங்களைப் பெருகப்பண்ணினார்கள்; பலிபீடங்கள் அவர்களுக்குப் பாவஞ்செய்வதற்கு ஆயிற்று.

௰௨ நம்முடைய வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்தோம்; அவைகள் அன்னியகாரியமாக எண்ணப்பட்டன.

௰௩ நமக்குச் செலுத்தும் பலிகளின் மாம்சத்தை அவர்கள் பலியிட்டுப் புசிக்கிறார்கள்; கர்த்தர் அவர்கள்மேல் பிரியமாய் இரார்; இவர் அவர்களுடைய அக்கிரமத்தை நினைத்து, அவர்கள் பாவத்தை விசாரிக்கும்போதோவெனில், அவர்கள் எகிப்துக்குத் திரும்பிக்கொள்ளுகிறார்கள்.

௰௪ ஏனெனில் இஸ்ரவேல் தன்னை உண்டாக்கினவரை மறந்து அரண்மனைகளைக் கட்டுகிறது; யூதா அரணான பட்டணங்களைப் பெருகப்பண்ணுகிறது; ஆனால் அதின் பட்டணங்களில் *அக்கினியை அனுப்புவோம்; அது அவைகளின் அரண்மனைகளைப் பட்சிக்கும். *எரே. ௰௭. ௨௭. ஆமோ. ௨. ௫.

## ௯. அதிகாரம்.

இஸ்ரவேலே மகிழ்ச்சியாயிராதே; சனசதளங்களைப்போலக் களிகூராதே; ஏனென்றால் *உன் பராபரனைவிட்டுச் சோரம்போனாய்; தானியப் போரடிக்கிற சகல களங்களிலும் பணையத்தைச் சிநேகிக்கிறாய்.
*சங். ௭௩. ௨௭.

௨ போர்க்களமும் ஆலையும் அவர்களைப் பிழைப்பூட்டுவதில்லை; திராட்சப்பழரசம் அவர்களுக்குப் பிசகிப்போகும்.

௩ அவர்கள் கர்த்தருடைய தேசத்தில் குடியிருப்பதில்லை; எப்பிராயீமர் திரும்ப எகிப்துக்குப் போவார்கள்; அசூரியாவிலும் தீட்டுள்ளதைப் புசிப்பார்கள்.

௪ அவர்கள் கர்த்தருக்குத் திராட்சப்பழ இரசத்தை ஊற்றுவதுமில்லை; அவருக்கு அங்கிகரிப்பாயிருப்பதுமில்லை; அவர்களுடைய பலிகள் அவர்களுக்குப் புலம்புகிறவர்களின் அப்பத்தைப்போல இருக்கும்; அதில் புசிக்கிற யாவரும் தீட்டுப்படுவார்

கள்; ஏனெனில் அவர்களுடைய அப்பம் அவர்கள் ஆத்துமத்துக்காகக் கர்த்தருடைய வீட்டில் வருகிறதில்லை.

௫ ¶ ஆசரிப்பின நாளிலும், கர்த்தருடைய பண்டிகையின் நாளிலும் என்னசெய்வீர்கள்?

௬ ஏனெனில் இதோ, பாழ்க்கடிப்பினால் போய்விடுவார்கள்; எகிப்து அவர்களைச் சேர்த்துக்கொள்ளும்; மோப்பட்டணம் அவர்களை அடக்கம்பண்ணும்; அவர்களுடைய வெள்ளி இருந்த இச்சிக்கப்படத்தக்க இடங்களைக் காஞ்சொறிகள் சுதந்தரித்துக்கொள்ளும்; அவர்களுடைய தாபரங்களில் முள்ச்செடிகள் முளைக்கும்.

௭ விசாரிப்பின் நாள்கள் வரும்; நீதிசரிக்கட்டும் நாள்கள் வரும் என்பதை இஸ்ரவேலர் அறிந்துகொள்ளுவார்கள்; உன்னுடைய மிகுதியான அக்கிரமத்திலேயும் மிகுதியான பகையிலேயும் தீர்க்கதரிசிகள் பயித்தியக்காரரும், ஆவியின் மனுஷர் பிரமைகொண்டவர்களுமாயிருக்கிறார்கள்.

௮ எப்பிராயீமின் காவல்காரர் என் பராபரனோடு எதிர்த்துநிற்கிறார்கள்; தீர்க்கதரிசி தன் வழிகளில் எல்லாம் குருவிபிடிக்கிறவனின் கண்ணியாகவும், தன் பராபரனின் வீட்டிலே பகையாளியாகவும் இருக்கிறான்.

௯ *கிபேயாவின் நாட்களில் நடந்ததுபோலே, கேட்டிலே அமிழ்ந்திப்போகிறார்கள்; அவர்களுடைய அக்கிரமத்தை நினைப்பார்; அவர்களுடைய பாவங்களை விசாரிப்பார்.
*நியா. ௰௯. ௰௪. மு: ௨௰. ௧. மு.

௰ ¶ வனாந்தரத்தில் திராட்சக்குலைகளைப்போல இஸ்ரவேலைக் கண்டுபிடித்தோம்; அத்திமரத்தில் முந்தினவிசை முளைத்த முதற்கனியைப்போல உங்கள் பிதாக்களைக் கண்டோம்; ஆனால் அவர்கள் *பேயோர்மலைப் பாகால் அண்டைக்குப்போய் இலச்சைக்கென்று பிரிந்து, தாங்கள் சிநேகித்தவைகளுக்கு ஒத்த அருவருப்புகளானார்கள். *௪ மோ. ௨௫. ௩-௫.

௰௧ பிறப்பும் உண்டாயிருப்பும் கர்ப்பந்தரிப்பும் இல்லாமல் எப்பிராயீமருடைய மகிமை பறவையைப்போலே பறந்துபோய்விடும்.

௰௨ அவர்கள் தங்கள் பிள்ளைகளை வளர்த்தாலும், அவர்களுக்கு மனுஷர் இராதபடிக்கு அவர்களைப் பிள்ளைகள் அற்றவர்களாக்குவோம்; ஆனால் நாம் அவர்களை விட்டுப்போகையில் அவர்களுக்கும் ஐயோ!

௰௩ நாம் எப்பிராயீமைத் தீருவின் திசைமட்டும் இருக்கிறபடி பார்க்கிறபோது, அது நல்ல தாபரமான தலத்திலே நாட்டப்பட்டிருக்கிறது; ஆனால் எப்பிராயீமர் தங்கள் குமாரரை வெளியே கொலைசெய்கிறவன் அண்டைக்குக் கொண்டுபோய் விடுவார்கள்.

௰௪ ¶ கர்த்தாவே, நீர் அவர்களுக்குக் கொடுப்பதைக் கொடும்; அவர்களுக்கு விழுந்துபோகிற கருப்பத்தையும் பாலற்ற முலைகளையும் கொடும்.

௰௫ கில்காலிலே அவர்களுடைய பொல்லாப்பெல்லாம் நடக்கும்; அங்கேதான் நடக்கிற அவர்கள் கிரியைகளுடைய பொல்லாப்பின்நிமித்தம் அவர்களைப் பகைத்திருக்கிறோம்; அவர்களை நமது முகத்தைவிட்டுத் துரத்துவோம்; இனி அவர்களைச் சிநேகியோம்; அவர்களுடைய பிரபுக்கள் எல்லாரும் ஆங்காரிகள்.

௰௬ எப்பிராயீம் வெட்டுண்டது; அதின் வேர் உலர்ந்துபோயிற்று; கனிகொடாதே போவார்கள்; அவர்கள் பிள்ளைகளைப் பெற்றாலும், அவர்களுடைய கர்ப்பத்தின் விருப்பமான கனிகளைக் கொன்றுபோடுவோம்.

௰௭ என் பராபரன் அவர்களை வெறுத்துப்போடுவார்; ஏனென்றால் அவருக்குச் செவிகொடாதேபோனார்கள்; சாதிகளுக்குள்ளே அலைகிறவர்களாயிருப்பார்கள்.

## ௰. அதிகாரம்.

இஸ்ரவேல் பிரயோசனம் இல்லாத திராட்-

சச்செடியானது; கனி அதற்கு ஒத்திருக்கிறது; தன் கனியின் திரளுக்குச்சரியாகப் பலிபீடங்களைத் திரளாக்கிறது; தங்கள் தேசத்தின் நேர்த்திக்குச்சரியாகச் சிலைகளை நேர்த்தியாக்கினார்கள்.

௨ அவர்கள் இருதயம் அவர்களுக்கு இச்சகம்பேசுகிறது; இப்போதும் குற்றஞ்சுமத்தப்படுவார்கள்; இவர் அவர்கள் பலிபீடங்களை மூளியாக்கி. அவர்கள் சிலைகளைப் பாழ்க்கடிப்பார்.

௩ ஏனென்றால் நாம் கர்த்தருக்குப் பயப்படாதேபோனபடியினாலே நமக்கு இராசா இல்லை; இராசா இருந்தாலும்நமக்காக என்னசெய்வானென்று இனிச் சொல்லுவார்கள்.

௪ ¶ பொய்யாணையிடுகிற வார்த்தைகளைச் சொல்லி,உடம்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்; ஆகையால் வயல்வெளியின் படைச்சால்களில் நஞ்சுக்கொத்த நியாயத்தீர்ப்பு முளைக்கும்.

௫ சமாரியாவின் குடிகள் பெத்தாவேனிலுள்ள கன்றுக்குட்டியின்நிமித்தம் திகில் அடைவார்கள்; ஏனென்றால் அதற்காகக் களிகூர்ந்த அதின் சனமும், அதின் பூசாரிகளும் அதினுடைய மகிமை அதைவிட்டு நீங்கிப் போயிற்றென்று அதற்காகத் துக்கங்கொண்டாடுவார்கள்.

௬ அதுவும் அசூரியாவிலே யாரேப் இராசாவுக்குக் காணிக்கையாகக் கொண்டுபோகப்படும்; இலச்சை எப்பிராயீமைப் பிடிக்கும்; இஸ்ரவேல் தன் ஆலோசனையினாலே வெட்கப்படும்.

௭ தண்ணீரின்மேல் இருக்கிற நுரையைப் போலே சமாரியாவின் இராசா அதம்பண்ணப்படுவான்.

௮ இஸ்ரவேலுடைய பாவமாகிய ஆபேனின் மேடைகள் அழிக்கப்படும்; முட்செடிகளும் முட்பூண்டுகளும் அவர்கள் பலிபீடங்களின்மேல் முளைக்கும்; *பருவதங்களைப்பார்த்து எங்களை மூடுங்களென்றும் குன்றுகளைப்பார்த்து எங்கள்மேல் விழுங்களென்றும் சொல்லுவார்கள்.
*லூக். ௨௰. ௩௰. வெளி. ௬. ௰௬.

௯ ¶ இஸ்ரவேலே, *கிபேயாவின் நாள்கள் துவக்கிப் பாவஞ்செய்துவந்தாய்; கிபேயாவிலே அக்கிரமக்காரர்மேல் வந்த யுத்தம் தங்களைக் கிட்டுவதில்லையென்று அந்த நிலையிலே நிற்கிறார்கள். *நியா. ௨௰. ௰௨-௰௪.

௰ சனசதளங்கள் அவர்களுக்கு விரோதமாகக்கூடி, தங்கள் இரண்டு படைச்சால்களில்போக அவர்களைப் பிணைக்கும்போது நமக்குச் சித்தமாகும் வேளையிலே அவர்களைத் தண்டிப்போம்.

௰௧ எப்பிராயீம் போரடிக்கப் பழகினதும் விரும்புகிறதுமான கன்றுக்குட்டி; ஆனால் நாம் அதின் அந்தமான கழுத்தின்மேல் நுகத்தடியை வைப்போம்; எப்பிராயீமை ஏர்பூட்டி ஓட்டுவோம்; யூதா உழுவான், யாக்கோப் அதற்குப் பரம்படிப்பான்.

௰௨ ¶ உங்களுக்கு *நீதிக்கென்று விதைவிதையுங்கள்; தயவுக்கொத்ததாய் அறுப்பு அறுங்கள்; பயிர்நிலத்தை உங்களுக்குப் புதிதாய்ப் பண்படுத்துங்கள்; ஏனென்றால் கர்த்தர் வந்து உங்களுக்கு †நீதியை வருஷிக்கப்பண்ணுமட்டும், ‡அவரைத்தேடக் காலமாயிருக்கிறது. *கலா. ௬. ௭, ௮. †ஏசா. ௪௫. ௮. ‡ஏசா. ௫௫. ௬.

௰௩ ஆகாத்தியத்தை உழுதீர்கள்; அநியாயத்தை அறுத்தீர்கள்; பொய்யின் கனிகளைப்புசித்தீர்கள்; ஏனென்றால் உன் வழியையும் உன் பராக்கிரமசாலிகளின் திரளையும் நம்பினாய்.

௰௪ ஆகையால் உன் சனசதளங்களில் அமளி எழும்பும்; பிள்ளைகளின்மேல் தாய் சதைத்துப்போடப்பட்ட யுத்தநாளிலே சல்மான், பெத்தார்பேலை அழித்ததுபோலே, உன்னுடைய எல்லா அரண்களும் அழித்துப்போடப்படும்.

௰௫ பேத்தேல் உங்கள் பொல்லாப்புடைய தோஷத்தினாலே இப்படிக்கொத்ததை

உங்களுக்கு உண்டுபண்ணும்; அதிகாலமே இஸ்ரவேலின் இராசா சங்கரிக்கப்படவே சங்கரிக்கப்படுவான்.

## ௰௧. அதிகாரம்.

இஸ்ரவேல் இளைஞனாயிருக்கிறபோது அவனை நாம் சிநேகித்தோம்; *எகிப்திலிருந்து நம்முடைய குமாரனை வரவழைத்தோம்.

*மத். ௨. ௰௫.

௨ அவர்கள் தங்களை அழைக்கிறவர்களின் முகத்தை விலகிப்போய்விட்டார்கள்; பாகால்களுக்குப் பலியிட்டு, சுரூபங்களுக்குத் தூபங்காட்டினார்கள்.

௩ நாம் எப்பிராயீமனை அவர்கள் கைகளைப் பிடித்து, மெதுவாக நடத்தினோம்; ஆனால் நாம் தங்களைக் குணமாக்குகிறவரென்று அறியாதேபோனார்கள்.

௪ மனுஷரைக் கட்டி இழுக்கிற அன்பின் கயிறுகளாலே நாம் அவர்களை இழுத்து, அவர்கள் கன்னங்களின்மேல் இருந்த நுகத்தடியை எடுத்துப்போடுகிறவனைப்போலே அவர்களுக்கு இருந்து, அவர்களண்டைக்குச் சாய்ந்து ஆகாரங்கொடுத்தோம்.

௫ ¶ அவன் எகிப்துதேசத்துக்குத் திரும்பிப்போவதில்லை; அசூர்தான் அவனுடைய இராசா; ஏனெனில் மனந்திரும்பமாட்டோமென்கிறார்கள்.

௬ ஆகையால் அவர்களுடைய ஆலோசனைகளினிமித்தமாகப் பட்டயம் அவர்கள் பட்டணங்களுக்குள்ப்பாய்ந்து, அவர்கள் தாழ்ப்பாள்களை நிருமூலம்பண்ணி, அவர்களைப் பட்சிக்கும்.

௭ நமது சனம் நம்மைவிட்டு விலகுகிற மாறுபாட்டைப் பற்றிக்கொண்டேயிருக்கிறது; அதை உன்னதமானவரண்டைக்கு வரவழைத்தாலும் ஒருவனும் எழும்பான்.

௮ ¶ எப்பிராயீமே, நாம் உன்னை என்ன செய்யவேண்டும்? இஸ்ரவேலே, உன்னை நாம் ஒப்புக்கொடுக்கவேண்டுமோ? நாம் உன்னை *அத்மாவைப்போலாக்கி, உன்னைச் செபோயீமைப்போல வைப்பதெப்படி? †நம்முடைய இருதயம் நமக்குள் திரும்பிக்கொள்ளுகிறது; நம்முடைய பரதாபங்கள் ஏகமாய்ப் பொங்குகிறது.

*௫ மோ. ௨௯. ௨௩. †எரே. ௩௧. ௨௰.

௯ நமது கோபத்தினுடைய உக்கிரத்தின்படியே செய்யாதிருப்போம்; எப்பிராயீமை அழிக்கத் திரும்பிக்கொள்ளாதிருப்போம்; ஏனென்றால் நாம் மனுஷனாயிராமல் பராபரனாயிருக்கிறோம்; நாம் உன் நடுவில் பரிசுத்தமுள்ளவர்; ஆகையால் அப்படிப் பட்டணத்துக்கு விரோதமாக வரோம்.

௰ கர்த்தரைப் பின்செல்லுவார்கள்; அவர் சிங்கத்தைப்போலே கெர்ச்சிப்பார்; அவர் கெர்ச்சிக்கும்போது மேற்கத்தியார் நடுங்கி வருவார்கள்.

௰௧ எகிப்திலிருந்துகுருவிகளைப்போலவும், அசூரின் தேசத்திலிருந்து புறாக்களைப்போலவும் நடுங்கிவருவார்கள்; அப்போது அவர்களை அவர்கள் வீடுகளில் குடியிருக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

எப்பிராயீமர் பொய்யாகவும், இஸ்ரவேல் வீட்டார் கபடாகவும் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்; யூதாவோவெனில் இன்னம் பராபரனோடே ஆண்டு, பரிசுத்தவான்களோடே உண்மையாயிருக்கிறது.

௨ எப்பிராயீம் காற்றை மேய்ந்து, கொண்டல்க்காற்றைப் பின்தொடருகிறது; நாள்தோறும் பொய்யையும் கேட்டையும் வர்த்திக்கப்பண்ணி, அசூரோடே உடம்படிக்கைபண்ணுகிறார்கள்; எகிப்துவுக்கும் எண்ணெய் கொண்டுபோகப்படுகிறது.

௩ யூதாவோடும் கர்த்தருக்கு வழக்கு இருக்கிறது; அவர் யாக்கோபின் வம்சத்தை அதின் வழிகளுக்குத்தக்கதாக விசாரிக்கப்போகிறார்; அதின் கிரியைகளுக்குத்தக்கதாக அதற்கு நீதியைச் சரிக்கட்டுவார்.

௪ ¶ அவனோவென்றால் * தாயின் கர்ப்பத்திலே தன் சகோதரன் குதிகாலைப் பிடித்ததுமல்லாமல், † தன் மன இடுக்கத்திலே பராபரனோடே பிரபுவாய்ப் போராடினான். * ௧ மோ. ௨௫. ௨௬. † ௧ மோ. ௩௨. ௨௪, ௨௫.

௫ அவன் தூதனானவனோடே பிரபுவாய்ப் போராடி மேற்கொண்டான்; அழுது இவரை நோக்கிக் கெஞ்சினான்; பேத்தேலிலே இவர் அவனைக் கண்டு சந்தித்து, அவ்விடத்திலும் நம்மோடே பேசினார்.

௬ கர்த்தராகிய அவர் சேனைகளுடைய பராபரன்; * கர்த்தர் என்பது அவருடைய நாமசங்கீர்த்தனம். * ௨ மோ. ௰௫. ௩.

௭ இப்போதும் உன் பராபரனண்டைக்குத் திரும்பு; தயவையும் நியாயத்தையும் கைக்கொண்டு, நித்தம் உன் பராபரனை நம்பிக்கொண்டிரு.

௮ ¶ கானானியனாயிருக்கிறான், கள்ளத்தராசு அவன் கையில் இருக்கிறது; இடுக்கண்செய்ய விரும்புகிறான்.

௯ ஆனால் மெய்தான், ஐசுவரியம் அடைந்தேன்; எனக்கு ஆஸ்தி அகப்பட்டது; ஆனால் நான் பிரயாசமாய்த் தேடினதில் எல்லாம் பாவமாகிய அக்கிரமம் என்னில் கண்டுபிடிக்கப்படுவதில்லையென்று எப்பிராயீம் சொல்லுகிறது.

௰ நாமோவென்றால் உன்னை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துவந்ததுமுதற்கொண்டு உன் பராபரனாகிய கர்த்தர் சபைக்கூட்டமான நாள்களுக்கு ஒப்பாக இன்னம் உன்னைக் கூடாரங்களில் தாபரிக்கப்பண்ணுவோம்.

௰௧ அப்படியே தீர்க்கதரிசிகளோடே சொன்னோமே; நாம் அநேகம் தரிசனங்களைக் கட்டளையிட்டு, தீர்க்கதரிசிகளைக்கொண்டு அதை உவமைகளால் காண்பித்தோமே.

௰௨ கிலேயாத் அக்கிரம ஸ்தலமோ? ஆம், அபத்தரானார்கள்; கில்காலிலே மாடுகளைப் பலியிடுகிறார்கள்; அவர்களுடைய பீடங்கள் வயல்களின் தலைகளில் இருக்கிற கற்குவியல்கள் அத்தனையுமாயிருக்கின்றன.

௰௩ ¶ யாக்கோபென்பவன் * சீரியா நாட்டுக்கு ஓடிப்போய், இஸ்ரவேல் † ஒரு பெண்ணுக்காகப் பணிவிடைசெய்து, ஒரு பெண்ணுக்காக ஆடுமேய்த்தான். * ௧ மோ. ௨௮. ௫. † ௧ மோ. ௨௯. ௨௰.

௰௪ பிற்காலத்திலோவென்றால் கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியைக்கொண்டு இஸ்ரவேலை எகிப்திலிருந்து ஏறிவரப்பண்ணினார்; தீர்க்கதரிசியைக்கொண்டு காக்கப்பட்டார்கள்.

௰௫ எப்பிராயீமோவென்றால் அவனைமிகவும் மனமடிவாக்கினதினாலே அவருக்குக் கோபமுண்டாக்கிற்று; ஆகையால் அதன் ஆண்டவர் அதின் இரத்தப்பழிகளை அதின்மேல் நிறுத்தி, அது செய்த நிந்தையை அதின்மேல் திருப்புவார்.

## ௰௩ அதிகாரம்.

எப்பிராயீம் கோத்திரம் திடுக்கிடப்படத்தக்கவிதமாய்ப் பேசினபோது, அதின்மேல் இஸ்ரவேலிலே நேரஞ்சுமந்தது; அது பாகாலாலும் குற்றம் சம்பாதித்துக்கொண்டபோது அது மடிந்தது.

௨ இப்போதும் அவர்கள் பாவஞ்செய்கிறதிலே தொடர்ந்துபோய், தங்கள் வெள்ளியினால் வார்ப்பித்த சுரூபங்களையும் தங்கள் புத்திக்கேற்ற விக்கிரகங்களையும் தங்களுக்கு உண்டுபண்ணினார்கள்; இவைகள் எல்லாம் தட்டாருடைய செய்கை; மனுஷரைப் பலியிடுகிறவர்கள் கன்றுக்குட்டிகளை முத்திசெய்யலாமென்று அவைகளைக் குறித்துச் சொல்லுகிறார்கள்.

௩ ஆகையால் அவர்கள் விடியற்காலத்து மப்பைப்போலேயும், காலமே இருந்து எடுபட்டுப்போகிற பனியைப்போலேயும், பெருங்காற்று * களத்திலிருந்து பறக்கடிக்கிற பதரைப்போலேயும், புகைச்சாலகத்தில் ஏறிப்போகிற புகையைப்போலேயும் இருப்பார்கள். * சங். ௧. ௪.

௪ நாமோவெனில் உன்னை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துவந்ததுமுதற்கொண்டு *உன் பராபரனாகிய கர்த்தர்; ஆகையால் நீ நம்மைத்தவிர வேறே தேவனை அறியவொண்ணாதே; நம்மைத்தவிர இரட்சகர் இல்லையே. *௨ மோ. ௨௰. ௨.

௫ ¶ *நாம் உன்னை மகா வறட்சியான தேசமாகிய வனாந்தரத்திலே அறிந்துகொண்டோம். *௫ மோ. ௩௨. ௰.

௬ *தங்களுக்கு இருந்த மேய்ச்சலினாலே திருத்தியானார்கள்; திருத்தியானபிற்பாடு அவர்கள் இருதயம் மேட்டிமையாயிற்று; ஆனதுகொண்டு நம்மை மறந்தார்கள். *௫ மோ. ௩௨. ௰௫, ௰௬.

௭ ஆகையால் அவர்களுக்குச் *சிங்கத்தைப்போல இருப்போம்; சிவிங்கியைப்போல வழியருகே பதிவிருப்போம். *ஓசே. ௫. ௰௪.

௮ குட்டிகளைப் பறிகொடுத்த கரடியைப்போல நாம் அவர்களைச் சந்தித்து, அவர்கள் நெஞ்சாங்குலையைக் கிழித்து, அவர்களை அங்கே ஒரு சிங்கத்தைப்போலப் பட்சித்துப்போடுவோம்; வெளியின் மிருகங்கள் அவர்களைப் பீறிப்போடும்.

௯ ¶ இஸ்ரவேலே, நீ உன் சகாயமாகிய நமக்கு விரோதமானது உன்னுடைய கேடு.

௰ *எனக்கு இராசாவையும் பிரபுக்களையும் கட்டளையிடும் என்றாயே; இப்போதும் உன்னுடைய எல்லாப் பட்டணங்களிலும் உன்னைக் காப்பாற்றும்படிக்கு உன் இராசா எங்கே? உன் நியாயாதிபதிகள் எங்கே? *௧ சாமு. ௮. ௫, ௬.

௰௧ நமது கோபத்திலே உனக்கு இராசாவைக் கொடுத்தோம்; நமது சினத்திலே அவனை எடுத்தோம்.

௰௨ ¶ எப்பிராயீமின் அக்கிரமம் கட்டி, அதின் பாவம் வைத்துவைக்கப்பட்டிருக்கிறது.

௰௩ பிள்ளைபெறுகிறவர்களின் அம்பாயங்கள் அதற்கு வரும்; இவன் ஞானமில்லாத பிள்ளை; ஏனெனில் பேறுகாலமட்டும் அவன் நிற்கவில்லை.

௰௪ அவர்களை நரகத்தின் அதிகாரத்துக்கு நீங்கலாக்கி மீட்போம்; அவர்களை *மரணத்துக்கு நீங்கலாக்கி விடுவிப்போம்; †மரணமே, உன் பெருவாரிக்காய்ச்சல்கள் எங்கே? நரகமே, உன் சங்கரிப்பு எங்கே? மனஸ்தாபம் நம்முடைய கண்களுக்கு மறைவானதாயிருக்கும். *எபி. ௨. ௰௪, ௰௫. †௧ கொரி. ௰௫. ௫௫.

௰௫ ¶ இவன் சகோதரருக்குள்ளே தடுக்கனைபடியினாலே, கர்த்தருடைய காற்றாகிய கொண்டல்காற்று வனாந்தரத்திலிருந்து எழும்பி வரும்; அதனால் அவனுடைய ஊற்று வற்றி, அவனுடைய துரவு சுவறிப்போகும்; அது இச்சிக்கப்படத்தக்க சகல தட்டுமுட்டுகளுடைய பொக்கிஷத்தையும் வாரிக்கொண்டுபோகும்.

## ௰௪. அதிகாரம்.

சமாரியா குற்றஞ் சுமந்ததாயிருக்கிறது; ஏனென்றால் தன் பராபரனுக்கு விரோதமாகக் கலகம்பண்ணிற்று; பட்டயத்தால் விழுவார்கள்; அவர்களுடைய குழந்தைகள் சதைத்துப்போடப்படும்; அவர்களுடைய கர்ப்பவதிகள் பிளக்கப்பட்டுப்போவார்கள்.

௨ இஸ்ரவேலே, *உன் பராபரனாகிய கர்த்தரண்டைக்கே திரும்பு; ஏனென்றால் உன் அக்கிரமத்தினாலே விழுந்தாய். *ஓசே. ௰௨. ௭.

௩ இந்த வார்த்தைகளை உங்கள் மனதிலே வைத்துக்கொண்டு கர்த்தரண்டைக்குத் திரும்புங்கள்; தேவரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கியருளி, *நன்மையை எடுத்துத்தாரும்; அப்போது †எங்கள் உதடுகளின் காளையெருதுகளைச் செலுத்துவோமென்றும், *ஓசே. ௩. ௫. †எபி. ௰௩. ௰௫.

௪ அசூர் எங்களை இரட்சிப்பதில்லை; நாங்கள் குதிரைகளின்மேல் ஏறுமதும், எங்கள் கைகளின் கிரியையோடே எங்கள் தேவ

னே என்று இனிச் சொல்லாமலும் இருப்போம்; ஏனெனில் திக்கற்றவன் உம்மாலே இரக்கம்பெறுகிறுனென்றும் அவருடனே சொல்லுங்கள்.

ரு ¶ அவர்கள் மாறுபாட்டைக் குணமாக்குவோம்: அவர்களை மனப்பூருவமாய்ச் சிநேகிப்போம்; ஏனென்றால் நம்முடைய கோபம் அவர்களைவிட்டுத் திரும்பிற்று.

சு இஸ்ரவேலுக்குப் பனியைப்போல இருப்போம்; அது லீலியபுஷ்பத்தைப்போலப் பூத்து, லீபனேனைப்போலத் தன் வேர்களை ஓடவிடும்.

எ அதின் கிளைகள் ஓங்கிப்போகும்; அதின் அலங்காரம் ஒலீவமரத்தினுடையதைப்போலவும், அதற்கு இருக்கும் வாசனை லீபனேனுடையதைப்போலவும் இருக்கும்.

அ அதின் நிழலில் குடியிருப்பார் திரும்பி வருவார்கள்; தானிய விளைச்சலைப்போலப் பிழைத்து, திராட்சச்செடிகளைப்போலச் செழிப்பார்கள்; அதின் கீர்த்தி லீபனேனுடைய திராட்சப்பழஇரசத்தின் கீர்த்தியைப்போல இருக்கும்,

கூ இனி எனக்கும் விக்கிரகங்களுக்கும் என்ன? நான் அவருக்குக் கேள்விகொடுத்து அவரை நோக்கியிருப்பேன்; நான் பச்சையான பாய்மரவிருட்சத்தைப்போல இருப்பேன்; என்னில் உம்முடைய கனி கண்டு பிடிக்கப்படுமென்று எப்பிராயீம் சொல்லும்.

ய ¶ இவைகளை உணர ஞானமுள்ளவனும், இவைகளைக் கிரகிக்கப் புத்தியுள்ளவனும் யாவன்? ஏனெனில் *கர்த்தருடைய வழிகள் செம்மையானவைகள்; நீதிமான்கள் அவைகளில் நடக்கிறார்கள்; †பாதகரோவென்றால் அவைகளில் விழுகிறார்கள்.

*சங். உ௫. ய. † க பே. உ. எ, அ.

---

# யோவேலின் தீர்க்கதரிசனம்.

---

## க. அதிகாரம்.

பேத்துவேலின் குமாரனாகிய யோவேலுக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.

உ ¶ பச்சைப்புழு பின்வைத்ததை வெட்டுக்கிளி தின்னுகிறது; வெட்டுக்கிளி பின்வைத்ததைப் பச்சைக்கிளி தின்னுகிறது; பச்சைக்கிளி பின்வைத்ததை முசுக்கட்டைப் பூச்சி தின்னுகிறது.

ங முதிர்வயதுள்ளவர்களே, இதைக் கேளுங்கள்; தேசத்தின் சகல குடிகளே, செவிகொடுங்கள்; உங்கள் நாள்களிலாவது உங்கள் பிதாக்களின் நாள்களிலாவது இப்படிக்கொத்தது சம்பவித்தது உண்டோ?

ச இதின் செய்தியை உங்கள் பிள்ளைகளுக்குவிவரியுங்கள்; இதை உங்கள் பிள்ளைகள் தங்கள் பிள்ளைகளுக்கும், அவர்களுடைய பிள்ளைகள் வேறே தலைமுறைக்கும் விவரிக்கக்கடவார்கள்.

ரு ¶ வெறியரே, விழித்து அழுங்கள்; திராட்சப்பழஇரசம் குடிக்கிற சகல சனங்களே, திராட்சக்காரசத்தின்நிமித்தம் அலறுங்கள்; ஏனெனில் அது உங்கள் வாயை விலக அறுப்புண்டுபோகும்.

சு அதேனென்றால் எண்ணிமுடியாத பலத்தசாதி என் தேசத்தில் வந்தேறுகிறது; அதின் பல்லுகள் சிங்கத்தின் பல்லுகள்; துஷ்ட சிங்கத்தின் கடைவாய்ப்பல்லுகள் அதற்கு இருக்கிறது.

௭ அது என் திராட்சச்செடியைப் பாழும், என் அத்திமரத்தைச் சொத்தையுமாக்கிப்போட்டு, உரிக்கவே உரித்துவிடுகிறது; இவைகளின் கொம்புகள் வெண்மையாகிறது.

௮ ¶ தன் வாலவயதின் புருஷனுக்காக இரட்டை உடுத்தியிருக்கிற பெண்ணைப்போல அலறு.

௯ காணிக்கையும் ஊற்றுதலும் கர்த்தருடைய வீட்டைவிட்டு அற்றுப்போகும்; கர்த்தரின் ஊழியக்காரராகிய ஆசாரியர்கள் துக்கிப்பார்கள்.

௰ வயல்வெளி பாழாகிறது; பூமி துக்கங்கொண்டாடும்; ஏனென்றால் விளைச்சல் அழிக்கப்படுகிறது; திராட்சக்கந்தாயம் வெட்கமடைகிறது; எண்ணெய் மாண்டுபோகும்.

௰௧ ¶ பயிர்க்குடிகளே, கோதுமையும் வாற்கோதுமையும் இல்லாததினாலே வெட்கிநில்லுங்கள்; திராட்சத்தோட்டக்காரரே, அலறுங்கள்; ஏனென்றால் வயல்வெளியின் அறுப்பு அழிகிறது.

௰௨ திராட்சச்செடி வதங்கி, அத்திமரம் சாரமற்றுப்போகும்; மாதளஞ்செடி, பேரீச்சு, கொளஞ்சிமுதலான வெளியின் விருட்சங்கள் எல்லாம் வாடிப்போவதினால் சந்தோஷம் மனுபுத்திரரைவிட்டு வாடிப்போகும்.

௰௩ ¶ ஆசாரியர்களே, இரட்டு உடுத்துப் புலம்புங்கள்; பலிபீடத்தின் பணிவிடைக்காரரே, அலறுங்கள்; என் பராபரனுடைய பணிவிடைக்காரரே, நீங்கள் உள்ப்பிரவேசித்து, இரட்டு உடுத்தவர்களாய் இராத்தங்குங்கள்; ஏனென்றால் கர்த்தருடைய வீட்டில் காணிக்லகயையும் ஊற்றுதலையும் செலுத்துதல் தவிர்க்கப்பட்டது.

௰௪ *உபவாசம்பண்ணும் பரிசுத்தநாளைக் குறித்து அதின் ஆசரிப்பைக் கூறுங்கள்; மூப்பரையும் தேசத்தின் எல்லாக் குடிகளையும் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிலே கூட்டிக் கர்த்தரைநோக்கிக் கூப்பிடுங்கள். *யோவே. ௨. ௫.

௰௫ ¶ அந்த நாளின்நிமித்தம் ஐயோ! ஏனெனில் *கர்த்தருடைய நாள் சமீபமாயிருந்து சர்வத்துக்கும் வல்லவராலே பாழ்க்கடிப்பாக வரும். *யோவே. ௨. ௧, ௨. ஏசா. ௰௩. ௬.

௰௬ ஆகாரம் நம்முடைய கண்களையும், சந்தோஷமும் களிகூருதலும் நம்முடைய பராபரனின் வீட்டையும்விட்டு அறுப்புண்டுபோகவில்லையோ?

௰௭ விதைகள் தங்கள் மண்கட்டிகளின் கீழே செத்துப்போகும்; விளைச்சல் தீஞ்சுபோகிறதினாலே பண்டகசாலைகள் பாழாகிக் களஞ்சியங்கள் இடிந்துபோகும்.

௰௮ *மிருகங்கள் எத்தனையாய்த் தவிக்கும்; மாட்டுமந்தைகள் தங்களுக்கு மேய்ச்சல் இல்லாததினால் கலங்கும்; ஆட்டுமந்தைகளும் பாழாகும். *எரே. ௰௪. ௫, ௬.

௰௯ கர்த்தாவே, உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; ஏனெனில் அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்களைப் பட்சித்து, சுவாலைவெளியின் விருட்சங்களை எல்லாம் எரித்துப்போடும்.

௨௰ *வெளியின் மிருகங்களும் உம்மைநோக்கிக் கதறும்; ஏனெனில் தண்ணீர் நதிகள் எல்லாம் வற்றிப்போகும்; அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்களைப் பட்சித்துப்போடும். *சங். ௪௨. ௨: ௪. ௨௭.

## ௨. அதிகாரம்.

சீயோனிலே எக்காளம் ஊதி, நம்முடைய பரிசுத்தபர்வதத்திலே சத்தமாய்க் கூப்பிடுங்கள், தேசத்தின் குடிகள் எல்லாம் தத்தளிக்கக்கடவார்கள்; ஏனெனில் *கர்த்தருடைய நாள் வருகிறது; அது சமீபமாயிருக்கிறது. *யோவே. ௧. ௰௫.

௨ அது இருளும் அந்தகாரமுமான நாள்; அது மப்பும் மந்தாரமுமான நாள்; விடியற்கால வெளுப்பு பர்வதங்களின்மேல்

பரவுகிற தீவிரமாக ஏராளமான பலத்தசாதிவந்து பரவும்; அப்படிக்கொத்தது உலகத்தோற்றமுதற்கொண்டு உண்டானதுமில்லை; அதின்பிறகு இனித் தலைமுறைதலைமுறையாக வரும் வருஷங்கள்மட்டும் உண்டாவதுமில்லை.

௩ அக்கினி அதின் முன்னாகப் பட்சிக்கும்; சுவாலை அதின் பின்னாக எரிக்கும்; அது வருமுன் தேசம் ஏதேனென்ற தோட்டத்தைப்போல இருந்தது; அது போனபின் அது பாழான வனாந்தரத்தைப்போல இருக்கும்; ஏதாகிலும் அதற்குத் தப்பிப்போவதில்லை.

௪ ¶ அவைகளின் உருவு குதிரைகளின் உருவுக்கொத்தது; அவைகள் இராவுத்தரைப்போலே ஓடுகிறது.

௫ அவைகள் ஓடுகிற இரதங்களின் இரைச்சலாகவும், செத்தைகளை எரிக்கிற அக்கினிச்சுவாலையின் இரைச்சலாகவும், யுத்தத்துக்கு ஆயத்தபட்ட பலத்த சனத்தின் இரைச்சலாகவும் பர்வதங்களுடைய சிகரங்களின்மேல் குதிக்கிறது.

௬ அவைகளுக்குமுன்பாகச் சனசதளங்கள் நடுங்கும்; எல்லா முகங்களின் உருவும் சுருங்கும்.

௭ அவைகள் பலசாலிகளைப்போலே ஓடும்; அவைகள் யுத்தமனுஷரைப்போலே மதிலேறும்; அவைகள் வரிசைகள் பிசகாமல் ஒவ்வொன்று தன்தன் வழியிலே போகும்.

௮ ஒன்றை ஒன்று நெருக்காது; ஒவ்வொன்று தன்தன் பாதையிலே போகும்; அவைகள் ஆயுதங்களுக்குள்ப் புகுந்தும் காயம் படாதேபோகும்.

௯ அவைகள் பட்டணத்தில் சுற்றி ஏகும்; மதிலில் ஓடும்; வீடுகளில் ஏறும்; திருடனைப்போலப் பலகணிகளால் உள்ப்பிரவேசிக்கும்.

௰ அவைகளுக்குமுன்பாகப் பூமி நடுங்கும்; வானங்கள் அசையும்; சூரியனும் சந்திரனும் இருண்டுபோகும்; நட்சத்திரங்கள் தங்கள் ஒளியை மறைத்துக்கொள்ளும்.

௰௧ கர்த்தர் தமது இராணுவத்தின்முன்பாகத் தம்முடைய சத்தத்தைக் காட்டுவார்; ஏனெனில் அவருடைய சேனை மகா திரளும், அவருடைய வார்த்தையின்படி செய்கிறதற்கு வல்லமையுமானது; ஆகையினால் கர்த்தருடைய நாள் பெரியதும் மகா பயங்கரமுமாயிருக்கும்; அதைத் தாளுபவன் யாவன்?

௰௨ ¶ இப்போதும் உங்கள் முழுமனதிலே உபவாசத்தோடும் அழுகையோடும் புலம்பலோடும் *நம்மண்டைக்கு திரும்புங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
*எசே. ௩௩. ௰௧.

௰௩ *நீங்கள் உங்கள் வஸ்திரங்களை அல்ல உங்கள் இருதயங்களைக் கிழித்து, உங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்புங்கள்; ஏனெனில் அவர் இரக்கமும் மனவுருக்கமும், நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவரும் தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவருமாயிருக்கிறார். *௨மோ. ௩௪. ௬.

௰௪ ஒருவேளை அவர் திரும்பிக்கொண்டு மனஸ்தாபப்பட்டு, அந்த உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குக் *காணிக்கையையும் வார்த்தலையும் செலுத்துகிறதற்கான ஆசீர்வாதத்தை மீதியாகப் பின்வைத்துப்போவாராக்கும். *யோவே. ௧. ௯.

௰௫ ¶சீயோனிலே எக்காளம் ஊதுங்கள்; உபவாசம்பண்ணும் பரிசுத்தநாளைக்குறித்து அதின் ஆசரிப்பைக் கூறுங்கள்.

௰௬ சனத்தைக் கூட்டுங்கள்; சபையைப் பரிசுத்தம்பண்ணுங்கள்; முதிர்ந்த வயதுள்ளவர்களைச் சேருங்கள்; பிள்ளைகளையும் முலையுண்கிறவர்களையும் கூட்டுங்கள்; மணவாளன் தன் அறையையும் மணவாட்டி தன் மறைவையும்விட்டுப் புறப்படுவார்களாக.

௰௭ கர்த்தரின் பணிவிடைக்காரராகிய ஆசாரியர்கள் மண்டபத்துக்கும் பலிபீடத்

துக்கும் நடுவே அழுதுகொண்டு, கர்த்தாவே, தேவரீர் உமது சனத்தைத் தப்பவிட்டுப் புறச்சாதிகள் அவர்களைப் பழமொழியாக்கும் நிந்தைக்கு உமது சுதந்தரத்தை ஒப்புக்கொடாதிரும்; உங்கள் பராபரன் எங்கே என்று புறச்சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவானேன் என்பார்களாக.

௰௮ ¶ அப்போது கர்த்தர் தமது தேசத்துக்காக வைராக்கியமாயிருந்து, தம்முடைய சனத்தைத் தப்பவிடுவார்.

௰௯ கர்த்தர் மறுமொழி கொடுத்துத் தமது சனத்துக்குச் சொல்வதாவது: இதோ, நாம் உங்களை இனிப் புறச்சாதிகளுக்குள்ளே நிந்தையாக வைக்காமல், உங்களுக்குத் தானியத்தையும் திராட்சக்கந்தாயத்தையும் எண்ணெயையும், நீங்கள் அதினால் திருத்தியாகும்படிக்குக் கொடுத்து,

௨௰ வடதிசைச் சேனையை உங்களுக்குத் தூரமாக விலக்கி, அதின் முன்தண்டு கீழ்க்கடலுக்கும் அதின் பின்தண்டு கடைசிக்கடலுக்கும் நேராகும்படிக்கு அதை வறட்சியும் பாழுமான தேசத்துக்குத் துரத்திவிடுவோம்; அங்கே அதின் நாற்றம் எழும்பி அதின் துர்க்கந்தம் வீசும்; ஏனெனில் பெரிய காரியங்களைச் செய்தது.

௨௧ தேசமே பயப்படாதே; களிகூர்ந்து சந்தோஷப்படு; ஏனெனில் கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்வார்.

௨௨ வெளியின் மிருகங்களே, பயப்படாதேயுங்கள்; ஏனெனில் வனாந்தரத்தின் மேய்ச்சல்கள் முளைக்கும்; விருட்சங்கள் தங்கள் காய்களைக் காய்க்கும்; அத்திமரமும் திராட்சச்செடியும் தங்கள் சாரத்தைக் கொடுக்கும்.

௨௩ சீயோனின் குமாரரே, *உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குள் களிகூர்ந்து சந்தோஷப்படுங்கள்; ஏனெனில் அவர் உங்களுக்கு நீதிக்கான போதகனைக் கொடுத்து, உங்களுக்கு †முன்மாரியையும் பின்மாரியையும் ஏற்கெனவே வருஷிக்கப்பண்ணுவார். *பிலி. ௪. ௪. †௩ மோ. ௨௬. ௪.

௨௪ களங்கள் தானியத்தினால் நிரம்பும்; ஆலைகளில் திராட்சப்பழஇரசமும் எண்ணெயும் வழிந்தோடும்.

௨௫ நாம் உங்களுக்குள் அனுப்பின நம்முடைய பெரிய இராணுவமாகிய வெட்டுக்கிளிகளும், பச்சைக்கிளிகளும், முசுக்கட்டைப் பூச்சிகளும், பச்சைப்புழுக்களும் பலனைத்தின்ற வருஷங்களுக்காக உங்களுக்குப் பதிலை அளிப்போம்.

௨௬ நீங்கள் சம்பூரணமாகச் சாப்பிட்டு, திருத்தி அடைந்து, உங்களை அதிசயமாய் நடத்திவந்த *உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தைத் துதிப்பீர்கள்; நமது சனம் என்றென்றைக்கும் வெட்கப்பட்டுப் போவதில்லை. *௫ மோ. ௮. ௰.

௨௭ நாம் இஸ்ரவேலின் நடுவில் இருக்கிறவரென்றும், நாமே உங்கள் பராபரனாகிய கர்த்தர், வேறொருவர் இல்லையென்றும் அறிந்துகொள்ளுவீர்கள்; நமது சனம் என்றென்றைக்கும் வெட்கப்பட்டுப்போவதில்லை.

## ௩. அதிகாரம்.

இதற்குப் பிற்பாடு 'சம்பவிப்பதேதெனில், *நாம் சகல மாம்சத்தின்மேலும் நம்முடைய ஆவியை ஊற்றுவோம்; அப்போது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்; உங்கள் மூப்பரானவர்கள் சொப்பனங்களையும், உங்கள் இளைஞர் தரிசனங்களையும் காண்பார்கள். *ஏசா. ௪௪. ௩. சகரி. ௰௨. ௰. அப். ௨. ௧: ௨௧. ௮, ௰௪–௰௭: ௰. ௪௪. தீத். ௩. ௫–௭.

௨ வேலைக்காரரின்மேலும் வேலைக்காரிகளின்மேலும், அந்நாள்களில் நம்முடைய ஆவியை ஊற்றுவோம்.

௩ வானத்திலும் பூமியிலும் அதிசயங்களைக் கட்டளையிடுவோம்; இரத்தமும் அக்கினியும் புகையெழும்புதல்களும் உண்டாகும்.

௪ கர்த்தருடைய பெரியதும் பயங்கரமுமான நாள் வருமுன்னே சூரியன் இருளும் சந்திரன் இரத்தமுமாய் மாறுபடும்.

௫ ¶ சம்பவிப்பதேதெனில் *கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்பவன் எல்லாம் விடுவிக்கப்படுவான்; ஏனென்றால் கர்த்தர் சொன்னபடி சீயோன் பருவதத்திலும் எருசலேமிலும் கர்த்தர் வரவழைக்கப்போகிற மற்றவர்களிடத்திலும் விடுவிக்குதல் உண்டாயிருக்கும்.

*அப். ௨. ௨௧. ௨ரோ. ௰. ௰௩.

௬ ஏனெனில், இதோ, யூதாவும் எருசலேமும் இருக்கிற சிறையிருப்பை நாம் திருப்பும் அந்நாள்களிலும் அக்காலத்திலும்,

௭ நாம் எல்லாப் புறச்சாதியாரையும் கூட்டி, அவர்களை யோசபாத்தென்ற பள்ளத்தாக்கில் இறங்கிப்போகப்பண்ணி, அவர்கள் நமது சனத்தையும் இஸ்ரவேலென்ற நம்முடைய சுதந்தரத்தையும் புறச்சாதிகளுக்குள்ளே சிதறவடித்து நம்முடைய தேசத்தைப் பங்கிட்டுக்கொண்டதின் நிமித்தமும்,

௮ அவர்கள் நமது சனத்தின்பேரில் சீட்டுகளைப்போட்டு, ஆண்பிள்ளைகளை வேசிப் பணையமாகக் கொடுத்து, பெண்பிள்ளைகளை மதுபானத்துக்கென்று விற்று, லொட்டி குடித்ததின்நிமித்தமும், அங்கே அவர்களோடே நியாயத்துக்குள்ப் பிரவேசிப்போம்.

௯ திறுவே, சீதோனே, பெலிஸ்தேயாவின் சகல எல்லைகளே, உங்களுக்கும் நமக்கும் என்ன? இப்படி நமக்குச் சரிக்கட்டுகிறீர்களோ? இப்படி நமக்குச் சரிக்கட்டினீர்களாகில், நாம் சீக்கிரமும் தீவிரமுமாய் நீங்கள் சரிக்கட்டுகிறதை உங்கள் தலையின்மேல் திருப்பிவிடுவோம்.

௰ நீங்கள் நம்முடைய வெள்ளியையும் நம்முடைய பொன்னையும் எடுத்து, நம்முடைய நல்ல கனிக்கிரமானவைகளை உங்கள் கோவில்களிலே கொண்டுபோய்,

௰௧ யூதாவின் குமாரரையும் எருசலேமின் குமாரரையும் அவர்களுடைய எல்லைகளுக்கு அவர்களைத் தூரமாக்கும்படிக்கு, கிரேக்கரின் புத்திரருக்கு விற்றுப்போட்டீர்கள்.

௰௨ இதோ, நீங்கள் அவர்களை விற்றுப்போட்ட அவ்விடத்திலிருந்து நாம் அவர்களை எழும்பிவரப்பண்ணி, நீங்கள் சரிக்கட்டினதை உங்கள் தலையின்மேல்த் திருப்பிவிட்டு,

௰௩ உங்கள் குமாரரையும் உங்கள் குமாரத்திகளையும் யூதா புத்திரரின் கையிலே விற்போம்; இவர்கள் அவர்களைத் தூரதேசத்தாராகிய சேபாசாதியாருக்கு விற்றுப்போடுவார்கள்; ஏனெனில், கர்த்தர் இதைச் சொன்னார்.

௰௪ ¶ *இதைப் புறச்சாதிகளுக்குள்ளே கூறுங்கள்; யுத்தத்தை ஆயத்தம்பண்ணுங்கள்; பராக்கிரமசாலிகளை எழுப்புங்கள்; யுத்தமனுஷர் எல்லாரும் சேர்ந்துவந்து ஏறுவார்களாக. *ஏசே. ௩௮. ௭.

௰௫ உங்கள் மண்வெட்டிகளைப் பட்டயங்களாகவும் உங்கள் அரிவாள்களை ஈட்டிகளாகவும் அடியுங்கள்; பலஇனன்தான் பராக்கிரமசாலி என்பானாக.

௰௬ சகல சாதிகளே, நீங்கள் ஒருமித்துக் கொண்டு, சுற்றிலுமிருந்து வந்துகூடுங்கள்; கர்த்தாவே, அங்கே *உம்முடைய பராக்கிரமசாலிகளை இறங்கப்பண்ணும்.

*சங். ௱௩. ௨௰.

௰௭ சாதிகள் எழும்பி யோசபாத்தென்ற பள்ளத்தாக்குக்கு ஏறிவருவார்கள்; ஏனெனில் அங்கே நாம் சுற்றிலுமிருந்து வந்த சாதிகளை நியாயந்தீர்ப்பதற்காக உளுக்காருவோம்.

௰௮ ¶ *அரிவாளை அனுப்புங்கள்; ஏனென்றால் அறுப்பு விளைந்துவந்தது. வந்திறங்குங்கள்: ஏனென்றால் ஆலை நிரம்பியிருக்கிறது; ஆலையின் இடங்கள் வழிந்தோடும்; அதேனெனில் அவர்களுடைய பொல்லாப்பு மிகுதியானது. *வெளி. ௰௪. ௰௫.

௰௪ போரடிக்கும் பள்ளத்தாக்கிலே ஏராளமான சதனங்கள் உண்டாயிருக்கும்; ஏனெனில் போரடிக்கும் பள்ளத்தாக்கிலே கர்த்தர் நியாயஞ்செய்யும் நாள் சமீபமாயிருக்கிறது.

௰௫ *சூரியனும் சந்திரனும் இருண்டுபோகும்; நட்சத்திரங்கள் தங்கள் ஒளியை மறைத்துக்கொள்ளும். *லூக். ௨௧. ௨௫.

௰௬ ¶ *கர்த்தர் சீயோனிலிருந்து கர்ச்சித்து, எருசலேமிலிருந்து தமது சத்தத்தைக் காட்டுவார்; அதினால் வானங்களும் பூமியும் அதிரும்; ஆனால் கர்த்தர் தமது சனத்துக்கு அடைக்கலமும் இஸ்ரவேல் புத்திரருக்கு அரணான கோட்டையுமாயிருப்பார். *ஓசே. ௰௧. ௰. ஆமோ. ௧. ௨.

௰௭ நமது பரிசுத்த பருவதமாகிய சீயோனிலே வாசமாயிருக்கிற நாம் *உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அப்போது அறிவீர்கள்; அப்போது எருசலேம் பரிசுத்தமாயிருக்கும்; அன்னியர் இனி அதைக் கடந்துபோவதில்லை. *ஏசே. ௫௪. ௫௰.

௰௮ ¶ அக்காலத்தில் சம்பவிப்பதேதென்றால், *பருவதங்கள் திராட்சப்பழ இரசமாய் வடியும்; மேடுகள் பாலாய் ஓடும்; யூதாவின் ஓடைகளெல்லாம் தண்ணீராய் ஓடும், †ஒரு ஊற்று கர்த்தருடைய வீட்டிலிருந்து புறப்பட்டுச் சித்தீமென்றபள்ளத்தாக்கை நீர்ப்பாய்ச்சலாக்கும். *ஆமோ. ௯. ௰௩. ஏசே. ௪௭. ௧. †சகரி. ௰௪. ௮. வெளி. ௨௨. ௧.

௰௯ ¶ யூதாபுத்திரரின் தேசத்திலே குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தி அவர்களுக்குச் செய்த கொடுமையினிமித்தம் எகிப்து பாழுமாய், ஏதோம் பாழான வனாந்தரமுமாய்ப் போகும்.

௨௰ ஆனால் யூதா நித்தியகாலமும், எருசலேம் தலைமுறை தலைமுறையாகவும் குடியேற்றப்பட்டிருக்கும்.

௨௧ நாம் தண்டியாமல் விட்டிருந்த *அவர்களுடைய இரத்தப்பழியைத் தண்டியாமல் விடோம்; †கர்த்தர் சீயோனிலே வாசமாயிருக்கிறவர். *ரோமோ. ௫௨. ௪௫. வெளி. ௯. ௰: ௰௯. ௨. †சங். ௯. ௰௨: ௭௪. ௨.

# ஆமோசின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

தெக்கோவா ஊர் மேய்ப்பருக்குள் இருந்த ஆமோஸ், யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாள்களிலும், இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசுடைய குமாரனான எரோபெயாமின்நாள்களிலும், *பூமி அதிர்ச்சி உண்டாக இரண்டுவருஷமிருக்கிறபோது, இஸ்ரவேலின்மேல் கண்டு சொன்ன வர்த்தமானங்கள். *சகரி. ௰௪. ௫.

௨ ¶ *கர்த்தர் சீயோனிலிருந்து கர்ச்சித்து, எருசலேமிலிருந்து தம்முடைய சத்தத்தைக் காட்டுவார்; அதினால் மேய்ப்பரின் தாபரங்கள் துக்கமடையும்; கர்மேலின் கொடுமுடியும் காய்ந்துபோகும். *யோவே. ௩. ௧௬.

௩ ¶ *கர்த்தர் சொல்லுகிறதாவது: தமஸ்குவினுடைய மூன்று நாலு பாதகங்களினிமித்தமும் அவர்கள் கிலேயாத்தை †இருப்புவண்டில்களால் போரடித்ததினிமித்தமும், நாம் அதின் ஆக்கினையைத்திருப்பாமல், *ஏசா. ௧௭. ௧. †௨ இரா. ௰௩. ௭.

௪ ஆசவேலின் வீட்டிலே அக்கினியைப் போடுவோம்; அது பெனாதாதின் அரண்

மனைகளைப் பட்சிக்கும்.

ரு நாம் தமஸ்குவின் தாழ்ப்பாளை உடைத்து, குடிகளை ஆவேனென்ற பள்ளத்தாக்கிலும், செங்கோல் ஆளுகிறவனை பெத்ஏதேனிலும் வைக்காமல் சங்காரம்பண்ணுவோம்; அப்போது சூரியாவின் சனம் கீருக்குச் சிறையிருப்பாய்ப் போகுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

சு ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: காத்சாவினுடைய மூன்று நாலு பாதகங்களினிமித்தமும் அவர்கள் சிறையிருப்பானவர்களை ஏதோமியர் கையில் பத்திரப்படுத்திவிடும்படிக்கு முழுதும்சிறையாக்கினதினிமித்தமும்நாம்அதின்ஆக்கினையைத்திருப்பாமல்,

எ காத்சாவின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம்; அது அதினுடைய அரண்மனைகளைப் பட்சிக்கும்.

அ நாம் குடிகளை அஸ்தோத்திலும் செங்கோல் ஆளுகிறவனை அஸ்கலோனிலும் வைக்காமல் சங்காரம்பண்ணி, பெலிஸ்தியரில் மீதியானவர்கள் அழியும்படிக்கு நமது கையை எக்ரோனுக்கு விரோதமாகத் திருப்புவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

கூ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: தீருவினுடைய மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் சகோதரரின் உடம்படிக்கையை நினையாமல் சிறையிருப்பானவர்களை முழுதும் ஏதோமியர் கையில் பத்திரப்படுத்திவிட்டதினிமித்தமும், நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

ய தீருவின் மதிலுக்குள் அக்கினியைப்போடுவோம்; அது அதின் அரண்மனைகளைப் பட்சிக்கும் என்கிறார்.

யக ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: ஏதோமினுடைய மூன்றுநாலுபாதகங்களினிமித்தமும், அவன் தன் சகோதரனைப் பட்டையத்தோடே தொடர்ந்து, தன் மனதை இரக்கமற்றதாக்கி, தன் கோபத்தினாலே என்றைக்கும் அவனைப் பீறிப்போட்டுத் தன் மூர்க்கத்தை நித்தியகாலமாக வைத்திருக்கிறதினிமித்தமும், நாம் அவன் ஆக்கினையைத் திருப்பாமல்,

யஉ *தேமானிலே அக்கினியைப் போடுவோம்; அது போத்ஸ்ராவின் அரண்மனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

* எசே. உரு. யஉ—யச.

யங ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: அம்மோன் புத்திரரின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் தங்கள் எல்லைகளை விஸ்தாரமாக்கும்படிக்குக் கீலேயாத் தேசத்தின் கெர்ப்பஸ்திரிகளைப் பிளந்துபோட்டதினிமித்தமும், நாம் அவர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,

யச ரப்பாவின் மதிலுக்குள் அக்கினியைக் கொளுத்துவோம்; அது யுத்தநாளின் முழக்கமாகவும், பெருங்காற்றின் புசலாகவும் அதின் அரண்மனைகளைப் பட்சிக்கும்.

யரு அவர்களுடைய இராசா சிறையிருப்பிலே போவான்; அவனும்அவனுடைய பிரபுக்களுங்கூடத்தானே என்று கர்த்தர் சொல்லுகிறார்.

## உ. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: *மோவாபின் மூன்றுநாலுபாதகங்களினிமித்தமும், அவன் ஏதோமுடைய இராசாவின் எலும்புகளை நீறாகச் சுட்டுப்போட்டதினிமித்தமும், நாம் அவன் ஆக்கினையைத் திருப்பாமல், * எரே. சஅ. க. ஜ. செப். உ. அ-கூ.

உ மோவாப் தேசத்தில் அக்கினியைப் போடுவோம்; அது கெரியோத்தின் அரண்மனைகளைப் பட்சிக்கும்; மோவாபியர் அமளிக்குள்ளும் ஆர்ப்பரிப்புக்குள்ளும் எக்காளசத்தத்துக்குள்ளும் சாவார்கள்.

ங நாம் நியாயாதிபதியை அவர்கள் நடுவில் இராதபடிக்குச் சங்காரம்பண்ணி, அவனோடேகூட அவர்களுடைய பிரபுக்களையெல்லாம் கொன்றுபோடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: யூதாவின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் கர்த்தருடைய வேதத்தை வெறுத்து, அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், தங்கள் பிதாக்கள் பின்பற்றின தங்கள் பொய்களின் மோசத்துக்கு உள்ளானதினிமித்தமும் நாம் அவர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,

௫ யூதாவிலே அக்கினியைப் போடுவோம்; அது எருசலேமின் அரண்மனைகளைப் பட்சிக்கும்.

௬ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: இஸ்ரவேலின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் நீதிமானைப் பணத்துக்கும், *எளியவனை ஒருசோடு பாதரட்சைக்கும் விற்றுப்போட்டதினிமித்தமும், அவர்களுடைய ஆக்கினையைத் திருப்பாதிருப்போம். *ஆமோ. ௮. ௬.

௭ அவர்கள் தரித்திரரின் தலைக்கு மோசமாகப் பூமியின் மண்ணைக் கவ்வி, சிறுமையானவர்களின் வழியைப் புரட்டுகிறார்கள்; நம்முடைய பரிசுத்த நாமத்தைக் கொலைச்சலாக்கும்படிக்கு மகனும் தகப்பனும் ஒரு பெண்ணிடத்தில் பிரவேசிக்கிறார்கள்.

௮ அவர்கள் சகல பீடங்களருகே அடைமானமாய் வாங்கின வஸ்திரங்களின்மேல் படுத்துக்கொண்டு, தெண்டம்பிடிக்கப்பட்டவர்களுடைய மதுபானத்தைத் தங்கள் தேவர்களின்வீட்டிலே குடிக்கிறார்கள்.

௯ ¶ நாமோவெனில் கேதுருக்களின் உயர்த்திக்கு ஒத்த உயர்த்தியும், கர்வாலிமரங்களைப்போலே உரப்புமாயிருந்த அவனுடைய கனியையும். *எமோரியனை அவர்களுக்குமுன்பாக அழித்து உயர இருந்த அவனுடைய கனியையும் தாழ இருந்த அவனுடைய வேர்களையும் அழித்துப்போட்டு,

* உபா. ௨௧. ௨௩. ௱

௰ நீங்கள் எமோரியனுடைய தேசத்தைக் கட்டிக்கொள்ளும்படிக்கு உங்களை நாம் எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணி, உங்களை நாற்பதுவருஷமாக வனாந்தரத்திலே வழிநடத்தி,

௰௧ உங்கள் குமாரரில் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், உங்கள் வாலிபரில் சிலரை *நசரேயராகவும் எழும்பப்பண்ணினோம்; இஸ்ரவேல்புத்திரரே, இப்படி இல்லையோ என்று கர்த்தர் கேட்கிறார்.

*எண். ௬. ௨. ௱.

௰௨ நீங்களோவென்றால் நசரேயருக்குத் திராட்சப்பழஇரசம் குடிக்கக்கொடுத்து, தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் தீர்க்கதரிசனம் சொல்லவேண்டாமென்று கற்பித்தீர்கள்.

௰௩ ¶ இதோ, கோதுமைக்கட்டுகள் நிறைபாரமாக ஏற்றப்பட்ட வண்டில் இருந்துகிறதுபோலே, நாம் உங்களை நீங்கள் இருக்கிற ஸ்தலத்தில் இருத்துவோம்.

௰௪ அப்போது வேகமானவனுக்கு ஓட இடமில்லை; திடனானவன் தன் பலனைப் பலக்கப்பண்ணுவதுமில்லை; பராக்கிரமன் தன் பிராணனைத் தப்புவிப்பதுமில்லை.

௰௫ வில்லைப்பிடிக்கிறவன் நிற்பதுமில்லை; வேகமானவன் தன் கால்களால் தப்பிப்போவதுமில்லை; குதிரையின்மேல் இருக்கிறவன் தன் பிராணனைத் தப்புவிப்பதுமில்லை.

௰௬ பலசாலிகளுக்குள்ளே தன் நெஞ்சைத் திடப்படுத்துகிறவன், அந்நாளிலே நிருவாணமாய் ஓடிப்போவானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩ அதிகாரம்.

இஸ்ரவேல் புத்திரரே, உங்களுக்கு விரோதமாகவும், தாம் எகிப்துதேசத்திலிருந்து ஏறப்பண்ணின எல்லா வம்சத்துக்கு விரோதமாகவும், கர்த்தர் சொன்ன இந்த வசனத்தைக் கேளுங்கள்.

௨ ¶ *பூமியினுடைய எல்லா வம்சங்களுக்குள்ளும் உங்களைமாத்திரம் அறிந்துகொண்டோம்; ஆகையால் உங்களுடைய

எல்லா அக்கிரமங்களின்நிமித்தமும் உங்களை விசாரிப்போம். *௫ மோ. ௰௪. உ.

௩ ¶ இரண்டுபேர் ஒருமனப்பட்டிருந்தாலொழிய ஒருமிக்க நடந்துபோவார்களோ?

௪ தனக்கு இரை அகப்படாமல் காட்டிலே சிங்கம் கர்ச்சிக்குமோ? இரையெடுக்காமல் இளஞ்சிங்கம் தன் கெபியிலிருந்து தன் சத்தத்தைக் காட்டுமோ?

௫ தரையிலே குருவி தனக்காகச் சுருக்குப்போடப்படாதிருந்தால், கண்ணியில் சிக்கிக்கொள்ளுமோ? ஒன்றும் படாதிருக்கையில், கண்ணி தரையிலிருந்து எடுத்துக்கொள்ளப்படுமோ?

௬ சனம் அமளியாகாமல் ஊரில் எக்காளம் ஊதப்படுமோ? *கர்த்தருடைய செயல் இல்லாமல் ஊரில் ஒரு தீங்குண்டாகுமோ? *ஏசா. ௪௨. ௨௪; ௪௫. ௭. புல. ௩. ௩௭—௩௮.

௭ ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத் தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தைச் செய்யார்.

௮ *சிங்கம் கர்ச்சிக்கிறது; யாவன் பயப்படாதிருக்கலாம்? கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; யாவன் தீர்க்கதரிசனம் சொல்லாதிருக்கலாம்? *வெளி. ௰. ௩.

௯ ¶ நீங்கள் சமாரியாவின் பர்வதங்களில் வந்துகூடி, அதின் நடுவில் நடக்கிற பெரிய கலகங்களையும் அதற்குள் செய்யப்படுகிற இடுக்கங்களையும் பாருங்களென்று அஸ்தோத்திலே அரண்மனைகளின்மேலும், எகிப்துதேசத்திலே அரண்மனைகளின்மேலும் கூறுங்கள்.

௰ அவர்கள் நிதானஞ்செய்ய அறியாமல், தங்கள் அரண்மனைகளில் கொடுமையையும் பாழ்க்கடிப்பையும் குவித்துக்கொள்ளுகிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ ஆகையால் சத்துரு வந்து தேசத்தைச் சூழ்ந்துகொண்டு உன்னுடைய பெலனை உன்னிலிருந்து விழப்பண்ணுவான்; அப்போது உன் அரண்மனைகள் கொள்ளையிடப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௨ கர்த்தர் உரைக்கிறதாவது: ஒரு மேய்ப்பன் இரண்டு கால்களை அல்லது ஒரு காதின் துண்டைச் சிங்கத்தின் வாயிலிருந்து பிடுங்கித் தப்புவிக்குமாப்போலே, சமாரியாவின் குடிகளாகிய இஸ்ரவேல் புத்திரர் ஒருகட்டிலின் மூலையிலும் ஒரு படுக்கையின் பக்கத்திலும் ஒளித்திருக்கையால் தப்புவிக்கப்படுவார்கள்.

௰௩ ¶ நீங்கள் கேட்டு, யாக்கோபு வீட்டாருக்குள்ளே சாட்சியாக அறிவிக்கவேண்டியதாவது: சேனைகளின் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில்,

௰௪ நாம் இஸ்ரவேலுடைய பாதகங்களின்நிமித்தம் அவனை விசாரிக்குநாளிலே நாம் பேத்தேலின் பலிபீடங்களைப் பலிபீடத்தின் கொம்புகள் வெட்டுண்டு தரையிலே விழ விசாரித்து,

௰௫ மாரிகாலத்துக்கு இருக்கிற வீட்டையும் கோடைகாலத்துக்கு இருக்கிற வீட்டையும் அழிப்போம்; அப்போது தந்தவேலையுள்ள வீடுகள் அழியும்; விஸ்தாரமான வீடுகளுக்கும் முடிவு வருமென்பதுதான் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௪. அதிகாரம்.

தரித்திரரை ஒடுக்கி, எளியவர்களை நொறுக்கி, அவர்களுடைய எசமான்களோடே: நாங்கள் குடிக்கத்தக்கதாகக் கொண்டுவாருங்களென்று சொல்லுகிற சமாரியாவின் பர்வதத்திலுள்ள பாசானின் மாடுகளே, நீங்கள் கேட்கவேண்டிய வசனமாவது:

௨ ¶ இதோ, கர்த்தராகிய ஆண்டவர் உங்களைக் குறடுகளாலும், உங்கள் பின்சந்ததியை மீன்பிடிக்கிற துறடுகளாலும் இழுத்துப்போட நாள்கள் உங்கள்மேலே வருமென்று அவர் தம்முடைய பரிசுத்தத்தைக்

கொண்டு ஆணையிட்டார்.

௩ அப்போது நீங்கள் ஒவ்வொருவர் தனக்கு எதிரான திக்குக்கு நேராய்த் திறப்புகளால் புறப்பட்டு, அரண்மனைக்குக் கொண்டுபோகச் சுமந்ததை எறிந்துபோடுவீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪ ¶ பெத்தேலுக்குப் போய்த் துரோகம் பண்ணுங்கள்; கில்காலுக்கும் போய்த் துரோகத்தைப் பெருகப்பண்ணி, காலைமாறு உங்கள் பலிகளையும் மூன்றும்வருஷத்திலே உங்கள் தசமபாகங்களையும் செலுத்தி,

௫ புளித்தமாவுள்ள ஸ்தோத்திரப் பலியோடே தூபங்காட்டி, உற்சாகப்பலிகளைக் கூறிக் கேட்கப்பண்ணுங்கள்; ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரரே, இப்படியே விரும்புகிறீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௬ ¶ ஆகையால் நாம் உங்களுக்கு உங்கள் பட்டணங்களில் எல்லாம் பல்லுகளுக்கு ஓய்வையும், உங்கள் ஸ்தலங்களில் எல்லாம் அப்பக்குறைச்சலையும் கட்டளையிட்டிருக்கிறோம்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதே போனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௭ ¶ இதுவுமல்லாமல், அறுப்புக்காலம் வர இன்னம் மூன்றுமாதம் இருக்கும்பொழுதே நாம் மழையை உங்களைவிட்டு விலக்கி, ஒரு பட்டணத்தின்மேல் வருஷிக்கப்பண்ணி மற்றப் பட்டணத்தின்மேல் வருஷிக்கப்பண்ணாதிருந்தோம்; ஒரு வயலின் மேல் மழை பெய்தது; மழைபெய்யாத மற்ற வயல் காய்ந்துபோயிற்று.

௮ இரண்டுமூன்று பட்டணங்களின் மனுஷர் ஒரே பட்டணத்துக்குத் தண்ணீர் குடிக்கப்போய்அலைந்து தாகந்தீராதேபோனார்கள்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௯ ¶ கருக்காயினாலும் விஷப்பனியினாலும் உங்களைத் தண்டித்தோம்; உங்கள் சோலைகளிலும் திராட்சத்தோட்டங்களிலும் அத்திமரங்களிலும் ஒலிவமரங்களிலும் மிச்சமானதைப் பச்சைப் புழு அரித்துப் போட்டது; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ ¶ எகிப்திலே உண்டானதற்கு ஒத்த பெருவாரிக்காய்ச்சலை உங்களுக்குள் அனுப்பினோம்; உங்கள் குதிரைகள் பிடிபடத்தக்கதாய் உங்கள் வாலிபரைப் பட்டயத்தாலே கொன்றோம்; உங்கள் பாளயங்களின் நாற்றத்தை உங்கள் நாசிகளிலும் ஏறப்பண்ணினோம்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதே போனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ ¶ சோதோமையும் கொமோராவையும் பராபரன் கீழதுமேலதாக்கிப்போட்டதுபோல, உங்களில் சிலவற்றைக் கீழதுமேலதாக்கிப்போட்டோம்; நீங்கள் நெருப்புக்குத் தப்புவிக்கப்பட்ட கொள்ளியைப்போல இருந்தீர்கள்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௨ ¶ ஆகையால் இஸ்ரவேலே, இந்தப்பிரகாரமாக உனகுச் செய்வோம்; இஸ்ரவேலே, நாம் இப்படி உனக்குச் செய்யப்போகிறபடியினாலே, உன் பராபரனுக்கு எதிர்கொண்டுபோக ஆயத்தப்படு.

௰௩ ஏனெனில் இதோ, அவர் பர்வதங்களை உருவாக்கினவரும், காற்றைச் சிருஷ்டிக்கிறவரும், மனுஷருடைய நினைவு ஏதென்று அவனுக்கு வெளிப்படுத்துகிறவருமாயிருக்கிறார்; அவர் விடியற்காலத்தை அந்தகாரமாக்கிப் பூமியினுடைய உயரங்களின்மேல் மிதிக்கிறவர்; சேனைகளின்பராபரனாகியகர்த்தரென்பது அவருடைய நாமம்.

## ரு. அதிகாரம்.

இஸ்ரவேல் வீட்டாரே, நான் உங்கள்பேரில் புலம்பலாக எடுக்கும் இந்த வசனத்தைக் கேளுங்கள்.

௨ இஸ்ரவேல் என்ற கன்னியாஸ்திரீ திரும்ப எழுந்திருக்கமாட்டாமல் விழுந்தாள்; எடுப்பார் இல்லாமல் தன் தேசத்திலே கைவிடப்பட்டுக் கிடக்கிறாள்.

௩ ஏனெனில் பட்டணத்திலிருந்து புறப்பட்ட ஆயிரம்பேரில் நூறும், நூறுபேரில் பத்தும் இஸ்ரவேல் வீட்டாருக்கு விடப்படுவார்களென்று கர்த்தராகிய பராபரன் சொல்லுகிறார்.

௪ ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்லுகிறதாவது: நம்மைத் தேடுங்கள்; அப்போது பிழைப்பீர்கள்.

௫ ¶ பெத்தேலைத் தேடாதேயுங்கள்; கில்காலிலும் சேராதேயுங்கள்; பேர்செபாவுக்கும் நடந்துபோகாதேயுங்கள்; ஏனென்றால் கில்கால் சிறையிருப்பாகவும் பெத்தேல் பாழ்ந்தலமாகவும் போகும்.

௬ கர்த்தர் பெத்தேலில் இருக்கிற ஒருவரும் அவிக்கமாட்டாத அக்கினியாய் யோசேப்பின் வீட்டைக் கொளுத்திப்போட்டு, அதைப் பட்சிக்காதபடிக்கு *நீங்கள் அவரைத் தேடுங்கள்; அப்போது பிழைப்பீர்கள். *ஏசா. ௫௫. ௬.

௭ ¶ *நியாயத்தை எட்டியாக மாற்றி, நீதியைத் தரையிலே விழப்பண்ணுகிறவர்களே, அவரைத் தேடுங்கள். *ஏசா. ௫. ௨௰.

௮ *அவர் சத்தநட்சத்திர ராசியையும் கிரகங்களையும் உண்டாக்கினவர், அவர் மரணநிழலை விடியற்காலமாக மாற்றிப் பகலை இராத்திரியாக அந்தகாரப்படுத்துகிறவர்; அவர் சமுத்திரத்தின் தண்ணீர்களை வரச்சொல்லி அவைகளைப் பூமியினுடைய விசாலத்தின்மேல் ஊற்றுகிறவர்; கர்த்தர் என்பது அவருடைய நாமம். *யோபு. ௯. ௯, ௰: ௩௮. ௩௧.

௯ அரணான தலத்தின்மேல் பாழ்க்கடிப்பு வரத்தக்கதாக அவர் கொள்ளைகொடுத்தவனைப் பலத்தவனுக்கு விரோதமாக இலகுவடையப்பண்ணுகிறவர்.

௰ ¶ *ஒலிமுகவாசலிலே கடிந்துகொள்ளுகிறவனை அவர்கள் பகைத்து, உத்தமமாய்ப் பேசுகிறவனை அருவருக்கிறார்கள். *ஏசா. ௨௯. ௨௧.

௰௧ ஆனதுகொண்டு நீங்கள் தரித்திரனை மிதித்துப்போட்டு, அவன் கையிலே தானியச்சுமைகளை வாங்குகிறபடியினாலே, *நீங்கள் வெட்டுக்கல்லான வீடுகளைக் கட்டினீர்கள்; ஆனால் அவைகளில் நீங்கள் குடியிருப்பதில்லை; விருப்பமான திராட்சத்தோட்டங்களை நாட்டினீர்கள்; ஆனால் அவைகளின் பழஇரசத்தை நீங்கள் குடிப்பதில்லை. *௫ மோ. ௨௮. ௩௯. செப். ௧. ௰௩.

௰௨ ஏனெனில் உங்கள் மீறுதல்கள் மிகுதியும், உங்கள் பாவங்கள் பலமுமாயிருக்கிறதென்று அறிவேன்; நீதிமானை இறுகப்பிடித்துப் பரிதானம் வாங்கி, ஒலிமுகவாசலில் ஏழைகளின் நியாயத்தைப் புரட்டுகிறார்கள்.

௰௩ ¶ ஆகையால் புத்திமான் இக்காலத்திலே மௌனமாயிருக்கவேண்டும்; ஏனெனில் இது துர்க்காலம்.

௰௪ நீங்கள் பிழைக்கும்படிக்குத் தீமையை அல்ல, நன்மையைத் தேடுங்கள்; அப்போது நீங்கள் சொல்லுகிறதின்படியே சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் உங்களுடனே இருப்பார்.

௰௫ *நீங்கள் தின்மையைப் பகைத்து நன்மையைச் சிநேகித்து ஒலிமுகவாசலில் நியாயத்தை நிலைப்படுத்துங்கள்; ஒருவேளை சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் யோசேப்பிலே மீதியானவர்களுக்கு இரங்குவார். *சங். ௩௪. ௰௫.

௰௬ ¶ ஆனதுகொண்டு ஆண்டவரும் சேனைகளின் பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: எல்லாத் தெருக்களிலும் புலம்பல் உண்டாகி, எல்லா வீதிகளிலும் ஐயோ ஐயோ! என்பார்கள்; பயிர்வேலைக்காரரைத் துக்கிப்புக்கும், அலறஅறிந்தவர்களைப் புலம்பலுக்கும் வரவழைப்பார்கள்.

௰௭ எல்லாத் திராட்சத்தோட்டங்களிலும்

புலம்பல் உண்டாயிருக்கும்; ஏனெனில் உன் நடுவிலே கடந்துபோவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ ¶ கர்த்தருடைய நாளை விரும்புகிறவர்களுக்கு ஐயோ! கர்த்தருடைய நாள் உங்களுக்கு என் வேண்டும்? *அது வெளிச்சமாயிராமல் அந்தகாரமாயிருக்கும்.

*யோவே. ௨. ௰௧. செப். ௧. ௰௫.

௰௯ ஒருவன் சிங்கத்துக்குத் தப்பினபோது கரடி அவனைச் சந்திக்கிறதுபோலேயும், அல்லது வீட்டுக்குள்ளே வந்து தன் கையைச்சுவரின்மேல் போடுகிறபோது பாம்பு அவனைக்கடிக்கிறதுபோலேயும் இருக்கும்.

௨௰ கர்த்தருடைய நாள் வெளிச்சமாயிராமல், இருளும் பிரகாசமற்ற அந்தகாரமுமாய் இராதோ?

௨௧ ¶ உங்கள் பண்டிகைகளைப் பகைத்து வெறுக்கிறோம்; உங்கள் கூட்டங்களை முகரமாட்டோம்.

௨௨ *நீங்கள் நமக்குத் தகனபலிகளையும் உங்கள் காணிக்கைகளையும் படைத்தாலும் நமக்குப் பிரியமாயிராது; கொழுப்பான உங்கள் மிருகங்களின் ஸ்தோத்திரப்பலிகளை நோக்கமாட்டோம்.

*ஏசா. ௧. ௰௧—௰௫.

௨௩ உன் பாட்டுகளின் இரைச்சலை நம்மைவிட்டு விலக்கு; உன் தம்புருகளின் ஓசையை நாம் கேட்கமாட்டோம்.

௨௪ நியாயம் தண்ணீர்களைப்போலேயும், நீதி வலுநதியைப்போலேயும் புரண்டுவரக்கடவது.

௨௫ *இஸ்ரவேல் வீட்டாரே, நீங்கள் வனாந்தரத்தில் இருந்த நாற்பதுவருஷமாய்ப் பலிகளையும் காணிக்கைகளையும் நமக்குச் செலுத்திவந்தீர்களோ? *அப். ௭. ௪௨, ௪௩.

௨௬ நீங்கள் உங்களுக்கு உண்டாக்கின உங்கள் மோளோகுடைய சப்பரத்தையும், உங்கள் தேவர்களின் நட்சத்திர ராசியாகிய உங்கள் சுருபங்களின் பாடையையும் எடுத்துவந்தீர்களே.

௨௭ ஆகையால் உங்களைத் தமஸ்குவுக்கு அப்பாலே குடிவிலக்குவோம் என்கிறதைச் சேனைகளுடைய பராபரன் என்ற நாமமுள்ள கர்த்தர் சொல்லுகிறார்.

## ௬. அதிகாரம்.

சீயோனிலே நிர்விசாரமாயிருக்கிறவர்களும் சமாரியாவின் பர்வதத்தை நம்பிக்கொண்டிருக்கிறவர்களும், சாதிகளின் தலைமையென்னப்பட்டு, இஸ்ரவேல் வீட்டாரால் சந்திக்கப்படுகிறவர்களுமாகிய பேர்களுக்கு ஐயோ!

௨ நீங்கள், *கல்னேமட்டும் நடந்து அவ்விடத்திலிருந்து ஆமாத்தென்ற பெரிய பட்டணத்துக்குப் போய், பெலிஸ்தியருடைய காத்பட்டணத்துக்குப் போய் இறங்கி, அவைகள் இந்த இராச்சியங்களைப்பார்க்கிலும் நல்லவைகளோவென்றும், அவைகளின் எல்லைகள் உங்கள் எல்லைகளைப்பார்க்கிலும் விஸ்தாரமோவென்றும் பாருங்கள்.

*௧ மோ. ௰. ௰.

௩ ¶ தீங்குநாளைத் தூரமென்றெண்ணிக் கொடுமையின் ஆசனத்தைச் சேரப்பண்ணி,

௪ *தந்தவேலையான கட்டில்களில் படுத்துக்கொண்டு, தங்கள் மஞ்சங்களின்மேல் செல்வமாய்ச் சயனித்து, மந்தையில் இருக்கிற ஆட்டுக்குட்டியையும், மாட்டுக்கொட்டிலிலே கொழுத்துப்போன கன்றுக்குட்டிகளையும் தின்று, *ஆமோ. ௩. ௰௫.

௫ தம்புருவை வாசித்துப் பாடி, தாவீதைப்போலக் கீதவாத்தியங்களைத் தங்களுக்கு உண்டுபண்ணி,

௬ கலங்களில் மதுபானத்தைக்குடித்து, மேல்தரமான பரிமளதைலங்களைப் பூசிக்கொண்டு, யோசேப்புடைய நொறுங்குதலுக்குக் கவலைப்படாதேபோகிறார்கள்.

௭ ¶ ஆகையால் இனிச் சிறையிருப்புக்குப் போகிற முதல் தண்டிலே போவார்கள்; இப்படியே செல்வமாய்ச் சயனித்தவர்களின் விருந்துண்குதல் நின்றுபோகும்.

அ நாம் யாக்கோபுடைய முக்கியத்தை அருவருத்து, அவனுடைய அரண்மனைகளைப் பகைக்கிறேம்; நாம் பட்டணத்தையும் அதின் நிறைவையும் ஒப்புக்கொடுத்து விடுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் தம்முடைய ஜீவனைக்கொண்டு ஆணையிட்டாரென்பதைச் சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிருர்.

௯ சம்பவிப்பதேதென்ருல், ஒரு வீட்டிலே பத்துமனுஷர் மீதியாயிருந்தாலும் அவர்கள் சாவார்கள்.

௰ அவர்களுடைய உறவின்முறையானவது, இழவாளியாவது, எலும்புகளை வீட்டிலிருந்து வெளியே கொண்டுபோகும்படிக்கு அவைகளை எடுத்து, வீட்டின் பக்கங்களுக்குள் இருக்கிறவனை, உன் கிட்ட இன்னம் உண்டோவென்று கேட்பான்; அவன் இல்லையென்பான்; அப்போது இவன், நீ மௌனமாயிரு; ஏனெனில் கர்த்தருடைய நாமத்தைப் பிரஸ்தாபம்பண்ண இடமில்லையென்று சொல்லுவான்.

௰௧ ¶ அதேனெனில் இதோ, கர்த்தர் நிர்மாணிக்கிற கட்டளையென்னவென்ருல், பெரியவீட்டைத் திறப்புகள் உண்டாகவும் சிறியவீட்டை வெடிப்புகள் உண்டாகவும் அடிப்பார்.

௰௨ ¶ கன்மலையிலே குதிரைகள் ஓடுமோ? அங்கே ஒருவன் மாடுகளால் உழுவானே? *நியாயத்தைப் பிச்சாகவும் நீதியின் கனியை எட்டியாகவும் மாற்றினீர்கள்.

*ஆமோ. ரு. எ.

௰௩ நாங்கள் எங்கள் பலத்தினலே எங்களுக்குக் கொம்புகளைச் சவதரித்ததில்லையோ என்று சொல்லி, காரியமில்லாமல் மகிழுகிருர்கள்.

௰௪ ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாரே, இதோ, ஆமாத்துக்குள்ப் பிரவேசிக்கிற வழிதுவக்கிச் சமனுன நாட்டின் ஆறுமட்டாக உங்களை இறுகப்பிடிக்கும் சாதியை நாம் உங்களுக்கு விரோதமாக எழுப்புவோமென்று சேனைகளின் பராபரனாகிய ... சொல்லுகிருர்.

## எ. அதிகாரம்.

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததாவது: இதோ, இரண்டாம் கந்தாயத்துப் புல் ஒங்கத் துவக்குகையில் அவர் கிளிகளை உருவாக்கினுர்; இது இராசாவினுடைய புல்லறுப்புக்குப் பிற்பாடு இரண்டாம் கந்தாயத்துப்புல்லாயிருந்தது.

௨ அப்போது சம்பவித்ததேதெனில், அவைகள் தேசத்தின் புல்லைத்தின்று தீர்ந்த போது, நான், கர்த்தராகிய ஆண்டவரே, மன்னியுமேன், யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்படி? ஏனெனில் அவன் சிறுகிப்போனவன் என்றேன்.

௩ கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்... *அப்படி ஆவதில்லையென்ருர்.

*௧ மோ. ௰அ. ௨௬. ஞ.

௪ ¶ கர்த்தராகிய ஆண்டவர் என... காண்பித்ததாவது: இதோ, அக்கினி... நியாயம் விசாரிப்போமென்று கர்த்... ஆண்டவர் கூப்பிட்டார்; அது பெ... முத்தைப் பட்சிக்கவந்து, அதி... கைப் பட்சித்துத்தீர்ந்தது.

௫ அப்போது நான், *கர்த்தரா... டவரே, நிறுத்துமேன்; யாக்கோபு ... எழுந்திருப்பதெப்படி? ஏனெனில் ... சிறுகிப்போனவன் என்றேன்.

*௪ மோ. ௰௪. ௨.

௬ கர்த்தர் அதற்கு மனஸ்தாப... அப்படியும் ஆவதில்லையென்ருர்.

௭ ¶ அவர் எனக்குக் காண்பி... இதோ, தூக்குநூல்ப் பிரமா... டப்பட்ட ஒரு மதிலின்... அவர் கையில் தூக்குநூல்...

௮ கர்த்தர் என்னுடனே, ... என்ன காண்கிறுயென்ரு... யென்றேன்; அப்போது ஆ... னதாவது: இதோ, இ...

...ஜனத்தின் நடுவாகத் தூக்குநூலை விடுவோ...; இனி அவர்களை மன்னியோம்.

௯ ...ஈசாக்கின் மேடைகள் பாழும், இஸ்ர...வேலின் சத்தஸ்தலங்கள் அவாந்தரையு...மாக்கப்படும்; நாம் எரோபெயாம் வீட்டா...ருக்கு விரோதமாகப் பட்டையத்தோடே ...ழும்பிவருவோம் என்ருர்.

௰ ¶ ...ஆகில் பெத்தேலில் ஆசாரியனுன அ...மத்சியா இஸ்ரவேலின் இராசாவாகிய எ...ரோபெயாமுக்குச் சொல்லி அனுப்பின...தாவது: ஆமோஸ் இஸ்ரவேல் வீட்டாரின் ...நடுவிலே உமக்கு விரோதமாக ஒப்பந்தம் பண்ணுகிறன்; தேசம் அவன் வார்த்தைக...ளெல்லாம் தாங்கமாட்டாது.

௰௧ ஏனெனில் எரோபெயாம் பட்டைய...த்தாலே சாவானென்றும், இஸ்ரவேல் தன் ...தேசத்திலிருந்து சிறையிருப்பாகக் கொண்...டுபோகப்படுமென்றும் ஆமோஸ் சொல்லு...கிறனென்று சொல்லி அனுப்பி,

௰௨ ¶ பிற்பாடு ஆமோசோடே அமத்சியா ...சொன்னதாவது: தரிசனம் பார்க்கிறவனே, ...; நீ யூதாதேசத்துக்கு ஓடி அங்கே ...அப்பம் தின்று அங்கே தீர்க்கதரிசனம் ...சொல்லு.

௰௩ ...பெத்தேலிலே இனித் தீர்க்கதரிசனம் ...சொல்லாயாக; ஏனெனில் இது இராசா...வின் பரிசுத்தஸ்தலமும் இராச்சியத்தின் ...அரண்மனையுமானதென்றுன்.

௰௪ ¶ ஆமோஸ் அமத்சியாவுக்குப் பிரதி...யுத்தரமாகச் சொன்னதாவது: நான் தீர்க்...கதரிசியுமல்ல, நான் தீர்க்கதரிசியின் மக...னுமல்ல, நான் மந்தைமேய்க்கிறவனும், ...காட்டத்திப்பழங்களைப் பொறுக்குகிறவனு...மாயிருந்தேன்.

௰௫ ...ஆகில் மந்தையின் பிறகே போகிற ...என்னைக் கர்த்தர் அழைத்து, கர்த்தர் என்...னுடனே, நீ போய் நமது சனமாகிய இஸ்...ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் ...சொல்லென்ருர்.

௰௬ ...கர்த்தருடைய வார்த்...

சனத்தின் நடுவாகத் தூக்குநூலை விடுவோம்; இனி அவர்களை மன்னியோம்.

௯ ஈசாக்கின் மேடைகள் பாழும், இஸ்ரவேலின் சுத்தஸ்தலங்கள் அவாந்தரையுமாக்கப்படும்; நாம் எரோபெயாம் வீட்டாருக்கு விரோதமாகப் பட்டயத்தோடே எழும்பிவருவோம் என்றார்.

௰ ¶ ஆனால் பேத்தேலில் ஆசாரியனான அமத்சியா இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபெயாமுக்குச் சொல்லி அனுப்பினதாவது: ஆமோஸ் இஸ்ரவேல் வீட்டாரின் நடுவிலே உமக்கு விரோதமாக ஒப்பந்தம் பண்ணுகிறான்; தேசம் அவன் வார்த்தைகளை எல்லாம் தாங்கமாட்டாது.

௰௧ ஏனெனில் எரோபெயாம் பட்டையத்தினாலே சாவானென்றும், இஸ்ரவேல் தன் சீமையிலிருந்து சிறையிருப்பாகக் கொண்டுபோகப்படுமென்றும் ஆமோஸ் சொல்லுகிறானென்று சொல்லி அனுப்பி,

௰௨ ¶ பிற்பாடு ஆமோசோடே அமத்சியா சொன்னதாவது: தரிசனம் பார்க்கிறவனே, போ; நீ யூதாதேசத்துக்கு ஓடி அங்கே அப்பம் தின்று அங்கே தீர்க்கதரிசனம் சொல்லு.

௰௩ பேத்தேலிலே இனித் தீர்க்கதரிசனம் சொல்லாயாக; ஏனெனில் இது இராசாவின் பரிசுத்தஸ்தலமும் இராச்சியத்தின் அரண்மனையுமானதென்றான்.

௰௪ ¶ ஆமோஸ் அமத்சியாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: நான் தீர்க்கதரிசியுமல்ல, நான் தீர்க்கதரிசியின் மகனுமல்ல, நான் மந்தைமேய்க்கிறவனும், காட்டத்திப்பழங்களைப் பொறுக்குகிறவனுமாய் இருந்தேன்.

௰௫ ஆனால் மந்தையின் பிறகே போகிற என்னைக் கர்த்தர் அழைத்து, கர்த்தர் என்னுடனே, நீ போய் நமது சனமாகிய இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொல்லென்றார்.

௰௬ இப்போதும் கர்த்தருடைய வார்த்தையைக் கேள்; இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொல்லாமலும், ஈசாக்கின் வீட்டாருக்கு விரோதமாகச் *சொரியாமலும், இருப்பாயாகவென்று சொல்லுகிறாயே. *மீகா. ௨. ௬.

௰௭ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: உன் பெண்சாதி ஊரிலே வேசியாவாள்; உன் குமாரரும் உன் குமாரத்திகளும் பட்டயத்தால் விழுவார்கள், உன் வயல் அளவுநூலால் பங்கிட்டுக்கொள்ளப்படும்; நீயோவெனில் அசுத்தச் சீமையிலே செத்துப்போவாய்; இஸ்ரவேலும், தன் சீமையிலிருந்து சிறையிருப்பிலே கொண்டுபோகப்படுமென்று சொல்லுகிறார் என்றான்.

## ௮. அதிகாரம்.

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததாவது: இதோ, அறுத்த கனிகளுள்ள ஒரு கூடை இருந்தது.

௨ அவர், ஆமோசே, நீ என்ன காண்கிறாயென்றார்; அறுத்த கனிகளுள்ள ஒரு கூடையென்றேன்; அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் முடிவுவருகிறது; * இனி அவர்களை மன்னியோம்.
* ஆமோ. ௭. ௮.

௩ அந்நாளிலே தெய்வாலயப் பாட்டுகள் அலறுதலாகும்; எல்லா இடத்திலும் திரள் பிரேதங்கள் மௌனமாய் எறிந்துவிடப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௪ ¶ * தேசத்தில் சிறுமைப்பட்டவர்களை ஒழியப்பண்ண, எளியவர்களை விழுங்கி,
* ஆமோ. ௨. ௭.

௫ நாங்கள் மரக்காலைக் குறைத்து, சேக்கல் நிறையை அதிகமாக்கி, கபட்டுத்தராசினால் வஞ்சனைபண்ணி, தரித்திரரைப் பணத்துக்கும், *எளியவர்களை ஒரு பாதரட்சைச் சோட்டுக்கும் கொள்ளும்படிக்கும்,

தானியத்தின் பதரை விற்கும்படிக்கும்.
* ஆமோ. ௨. ௬.

௬ மாதப்பிறப்பு எங்கள் தவசம் விற்கத்தக்கதாகவும், ஓய்வுநாள் நாங்கள் தானியத்தின் பண்டகசாலைகளைத் திறக்கத்தக்கதாகவும் எப்போது கழிந்துபோமென்று சொல்லுகிறவர்களே, இதைக் கேளுங்கள்.

௭ அவர்கள் செய்கைகளை எல்லாம் நாம் என்றென்றைக்கும் மறப்பதில்லையென்று கர்த்தர் யாக்கோபுடைய மகிமையின்பேரிலே ஆணையிட்டார்.

௮ இதினிமித்தம் தேசம் அதிரவும், அதின் குடிகள் எல்லாம் துக்கிக்கவும், *எங்கும் நதிகளாய்ப் புரண்டோடவும், எகிப்தினுடைய ஆற்று வெள்ளத்தைப்போல அடித்து வெள்ளக்காடாகவும் வேண்டாமோ? * ஆமோ. ௯. ௫.

௯ அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், *நாம் மத்தியானத்திலே சூரியனை அஸ்தமிக்கப்பண்ணி, பட்டப்பகலிலே தேசத்தை அந்தகாரப்படுத்தி, * எரே. ௰௫. ௯.

௰ உங்கள் பண்டிகைகளைத் துக்கிப்பாகவும், உங்கள் பாட்டுகளை எல்லாம் புலம்பலாகவும் மாறப்பண்ணி, சகல அரைகளிலும் இரட்டையும், சகல தலைகளிலும் மொட்டையையும் வருவித்து, அவர்களுடைய துக்கிப்பை *ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்கிறதற்குச் சமானமாக்கி, அவர்களுடைய முடிவைக் கசப்பான நாளாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். *எரே. ௬. ௨௬.

௰௧ ¶இதோ, அப்பத்தின்பேரிலுள்ள பசியை அல்ல, தண்ணீரின்பேரிலுள்ள தாகத்தையும் அல்ல, *கர்த்தருடைய வசனங்களைக் கேட்கப் பசியுண்டாயிருக்கிற பஞ்சத்தை நாம் தேசத்திலே அனுப்பும் நாள்கள் வருமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். *௧ சாமு. ௩. ௧.

௰௨ அப்போது அவர்கள் கர்த்தருடைய வார்த்தையைத் தேட ஒரு சமுத்திரந்துவக்கி மற்றச் சமுத்திரமட்டுக்கும், வடக்குத்துவக்கிக் கிழக்குமட்டுக்கும் அலைந்து திரிந்தும் அதைக் கண்டுபிடியாதேபோவார்கள்.

௰௩ தாணில் இருக்கிற உன் தேவனின் சீவனைக்கொண்டென்றும், பெயர்செபாமார்க்கத்துத் தேவனின் சீவனைக்கொண்டென்றும் சொல்லி,

௰௪ சமாரியாவினுடைய தோஷத்தின்பேரிலே ஆணையிடுகிற சௌந்தரியமுள்ள கன்னிகைகளும் வாலிபரும் அக்காலத்திலே தாகத்தாலே சோர்ந்துபோய், இனி எழுந்திருக்காதபடியாக விழுவார்கள் என்றார்.

## ௯. அதிகாரம்.

ஆண்டவரைப் பலிபீடத்தின்மேல் நிற்கக்கண்டேன்; அவர் சொன்னதாவது: நீ வாசல்நிலைகள் அசையும்படிக்குச் சிகரத்தை அடித்து, அவைகளை அவர்கள் எல்லாருடைய தலையின்மேலும் விழ உடைத்துப்போடு; அவர்களுக்குப் பின்னாக மீந்தவர்களையோவென்றால் நாம் பட்டயத்தாலே கொன்றுபோடுவோம்; அவர்களில் ஓடுகிறவன் ஓடிப்போவதுமில்லை; அவர்களில் தப்புகிறவன் தப்பிப்போவதுமில்லை.

௨ *அவர்கள் பாதாளத்திலே தோண்டிப் பதுங்கிக்கொண்டாலும், நம்முடைய கை அவ்விடத்திலிருந்து அவர்களைப் பிடித்துக்கொண்டுவரும்; அவர்கள் ஆகாசபரியந்தம் ஏறினாலும், அவ்விடத்திலிருந்து அவர்களை இறங்கப்பண்ணுவோம். *சங். ௱௩௰௯. ௮.

௩ அவர்கள் கர்மேலின் கொடுமுடியிலே ஒளித்துக்கொண்டாலும், அங்கே அவர்களைத் தேடிப்பிடிப்போம்; அவர்கள் நம்முடைய கண்களுக்குச் சமுத்திரத்தின் ஆழத்திலே மறைத்துக்கொண்டாலும் அங்கே அவர்களைக் கடிக்கப் பாம்புகளுக்குக் கற்பிப்போம்.

௪ அவர்கள் தங்கள் சத்துருவுக்கு முன்பாகச் சிறையிருப்பிலே போனாலும், அங்

கே அவர்களைக் கொன்றுபோட நாம் பட்டையத்துக்குக் கற்பித்து, *நமது கண்களை அவர்கள்மேல் நன்மைக்கல்ல, தின்மைக்கென்றே வைப்போம். *எரே. ௪௪. ௰௧.

௫ ¶ சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் தேசத்தைத் தொடவே உருகிப்போகும்; அப்போது அதின் குடிகளெல்லாம் துக்கிப்பார்கள்; *எங்கும் நதியாய்ப் புரண்டோடி, எகிப்தினுடைய ஆற்றின் வெள்ளத்தைப்போல வெள்ளக்காடாகும். *ஆமோ. ௮. ௮.

௬ அவர் பரமண்டலத்தில் தமது ஆசனப்படிகளைக் கட்டி, பூமியின்மேல் இருக்கிற தமது கூட்டத்தை அஸ்திபாரப்படுத்தினவர்; *அவர் சமுத்திரத்தின் தண்ணீர்களை அழைத்து அவைகளைப் பூமியினுடைய விசாலத்தின்மேல் வாற்றுகிறவர்; கர்த்தரென்பது அவருடைய நாமம். *ஆமோ. ௫. ௮.

௭ ¶ இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் நமக்கு எத்தியோப்பியரின் புத்திரருக்குச் சரியானவர்களல்லவோ என்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் இஸ்ரவேலை எகிப்துதேசத்திலும், பெலிஸ்தியரை *கப்தோரிலும், சூரியரை கீரிலுமிருந்து ஏறிவரப்பண்ணினதில்லையோ? *எரே. ௪௭. ௪.

௮ இதோ, கர்த்தராகிய ஆண்டவரின் கண்கள் பாவ இராச்சியத்துக்கு விரோதமாக வைக்கப்பட்டிருக்கிறது; அதைப் பூமியின்மேல் இராதபடிக்கு அழித்துப்போடுவோம்; ஆகிலும் யாக்கோபின் வீட்டை நாம் முழுவதும் அழித்துப்போடுவதில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯ அதேனெனில் *இதோ, சல்லடையினாலே சலித்தரிக்கிறதுபோலே, இஸ்ரவேல் வீட்டாரை எல்லாச் சாதிகளுக்குள்ளும் சலித்தரிக்கும்படிக்கு நாம் கட்டளையிடுவோம்; ஆனால் ஒரு கோதுமைமணியும் தரையிலே விழுவதில்லை. *லூக். ௨௨. ௩௧.

௰ தீங்கு எங்களைப் பிடிப்பதுமில்லை; எங்களுக்கு நேரிடுவதுமில்லையென்று நமது சனத்தில் சொல்லுகிற பாவிகளெல்லாரும் பட்டையத்தினாலே சாவார்கள்.

௰௧ ¶ ஏதோமில் *மீதியானவர்களையும், நம்முடைய நாமம் விளங்கிய சகல சாதிகளையும் வசமாக்கிக்கொள்ளும்படிக்கு, *அப். ௰௫. ௰௬, ௰௭.

௰௨ அந்நாளிலே நாம் விழுந்ததாகிய தாவீதின் கூடாரத்தைத் திரும்ப எடுத்து, அவர்களுடைய திறப்புகளை அடைத்து, அதில் இடிந்துபோனதை எடுப்பித்து, பூர்வநாட்களில் இருந்ததுபோல அதைக் கட்டுவோமென்று இதைச் செய்கிற கர்த்தர் சொல்லுகிறார்.

௰௩ இதோ, உழுகிறவன் அறுக்கிறவனையும், திராட்சப்பழங்களை ஆலையாடுகிறவன் விதைக்கிறவனையும் சேருகிறதும், *திராட்சப்பழஇரசமாய்ப் பருவதங்கள் வடிகிறதும் மேடுகள் எல்லாம் கரைகிறதுமான நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார். *யோவே. ௩. ௨௩.

௰௪ அதேனெனில் *நமது சனமாகிய இஸ்ரவேலின் சிறையிருப்பைத் திருப்புவோம்; அவர்கள் பாழான பட்டணங்களைக் கட்டி அவைகளில் குடியிருந்து, †திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளுடைய பழங்களின் இரசத்தைக்குடித்து, தோட்டங்களை உண்டாக்கி, அவைகளின் கனிகளைப் புசிப்பார்கள். *௫ மோ. ௩௰. ௩. எரே. ௨௯. ௰௪. †ஏசா. ௬௫. ௨௧. ஏசே. ௨௮. ௨௬. சகரி. ௮. ௰௨.

௰௫ அவர்களை அவர்கள் சீமையிலே நாட்டுவோம்; அவர்கள் நாம் தங்களுக்குக் கொடுத்த தங்கள் சீமையிலிருந்து இனிப் பிடுங்கப்படுவதில்லையென்று உன் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.

# ஒபதியாவின் தீர்க்கதரிசனம்.

ஒபதியாவின் தரிசனம்: கர்த்தராகிய ஆண்டவர் ஏதோமைக்குறித்துச் சொன்னதென்னவென்றால், எழும்புங்கள்; அதற்கு விரோதமாக யுத்தம்பண்ண எழும்புவோம் வாருங்களென்று சொல்ல, *தானாபதி சாதிகளிடத்தில் அனுப்பப்படும் செய்தியைக் கர்த்தர் சொல்லக் கேட்டோம்.

*எரே. ௪௯. ௰௪.

௨ இதோ, உன்னைச் சாதிகளில் சிறுகப்பண்ணுகிறோம்; நீ மெத்தவும் அசட்டைபண்ணப்பட்டிருப்பாய்.

௩ ¶ கன்மலை வெடிப்புகளாகிய உன் உயர்ந்த நிலையிலே குடியிருந்து, என்னைத் தரையிலே விழத்தள்ளுபவன் யாரென்று உன் இருதயத்திலே சொல்லுகிறவனே, உன் இருதயத்தின் அகந்தை உன்னை மோசம்போக்குகிறது.

௪ *நீ கழுகைப்போல உயர்ந்துபோனாலும், நீ நட்சத்திரங்களுக்குள்ளே உன் கூட்டைக் கட்டினாலும், அவ்விடத்திலிருந்து உன்னை விழத்தள்ளுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௪௯. ௰௬.

௫ எத்தனையாய்ச் சங்காரமானாய்? திருடராகிலும் இராத்திரியிலே பாழ்க்கடிக்கிறவர்களாகிலும் உன்னிடத்திலே வந்தார்களாகில், தங்களுக்குப் போதுமென்றமட்டுமல்லோ திருடுவார்கள்? திராட்சப்பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்திலே வந்தார்களாகில், பின்னறுப்பைக் கொஞ்சம் வையார்களோ?

௬ ஏசாவினுடையவைகள் எத்தனையாய்த் திறப்பாக்கப்படும்? அவனுடைய அந்தரங்கப் பொக்கிஷங்கள் எத்தனையாய் ஆராய்ந்தெடுக்கப்படும்?

௭ உன்னோடே உடம்படிக்கையாயிருந்த எல்லா மனுஷரும் உன்னை எல்லைமட்டும் வழிவிட்டனுப்புவார்கள்; உன்னோடே சமாதானமாயிருந்த மனுஷர் உன்னை மோசம்போக்குவார்கள்; உன்னை மேற்கொள்ளுவார்கள்; உன் அப்பத்தைச் சாப்பிட்ட[illegible] நீ சேதப்படக் கீழே எத்தனம் வைப்பார்கள்; அவனுக்கு உணர்வில்லை.

௮ ¶ அந்நாளிலே அல்லோ *நான் ஏதோமிலே ஞானிகளையும், ஏசாவின் பர்வதத்திலே உணர்வையும் அழிப்பேனென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. ௪௯. ௭.

௯ தேமானே, ஏசாவின் பர்வதத்திலே மனுஷர் கொலையினால் சங்கரிக்கப்படும்படிக்கு உன் பராக்கிரமசாலிகள் கலங்குவார்கள்.

௰ ¶ *நீ உன் சகோதரனாகிய யாக்கோபுக்குச் செய்த கொடுமையின் நிமித்தம் வெட்கம் உன்னை மூடும்; நீ என்றைக்கும் சங்கரிக்கப்பட்டிருப்பாய்.

*ஏசே. ௨௫. ௰௨—௰௪. ஆமோ. ௧. ௰௧.

௰௧ நீ எதிரே நிற்கிற நாளிலும், அந்நியர் அவன் சேனையைச் சிறைபிடித்துப்போகிற நாளிலும், மறுதேசத்தார் அவன் வாசல்களுக்குள்ப் பிரவேசித்து எருசலேமின் பேரிலே சீட்டுப்போடுகையில், நீயும் அவர்களில் ஒருவனைப்போல இருந்தாய்.

௰௨ ¶ நீ, உன் சகோதரன் அன்னியபரதேசியான நாளாகிய அவனுடைய நாளைப் பிரியத்தோடே பாராமலும், யூதாபுத்திரருடைய அழிவின் நாளிலே அவர்கள் நிமித்தம் சந்தோஷப்படாமலும், அவர்கள் நெருக்-

கப்படுகிறநாளிலே உன் வாயை விஸ்தாரமாக்காமலும் இருக்கவேண்டியதாயிருந்தது.

௰௩ நீ நமது சனத்தின் ஆபத்துநாளிலே அவர்கள் வாசல்களுக்குள்ப் பிரவேசியாமலும், அதின் ஆபத்துநாளிலே அது அநுபவிக்கிற தீங்கை நீயும் கூடப் பிரியத்தோடே பாராமலும், அதின் ஆபத்துநாளிலே அதின் ஆஸ்தியில் கைபோடாமலும்,

௰௪ அதில் தப்பினவர்களைச் சங்கரிக்கும்படிக்கு வழிப்பிரிவுகளிலே நிற்காமலும், இக்கட்டுநாளிலே அதில் மீதியானவர்களைக் காட்டிக்கொடாமலும் இருக்கவேண்டியதாயிருந்தது.

௰௫ ¶ ஏனெனில் எல்லாச் சாதிகளுக்கும் விரோதமான கர்த்தருடைய நாள் சமீபமாயிருக்கிறது; *நீ செய்தபடியே உனக்குச் செய்யப்படும்; உன் செய்கையின் பலன் உன் தலையின்மேல் திரும்பும்.

*வெளி. ௰௮. ௬.

௰௬ அதேனெனில் நீங்கள் நமது பரிசுத்த பர்வதத்தின்மேல் குடித்தபடியே எல்லாச் சாதிகளும் எப்போதும் குடிப்பார்கள்; அவர்கள் குடித்து விழுங்கி, இல்லாதிருந்தவர்களைப்போல இருப்பார்கள்.

௰௭ ¶ ஆனால் சீயோன் பர்வதத்திலே தப்பியிருப்பார் உண்டு; அவர்கள் பரிசுத்தமாயிருப்பார்கள்; யாக்கோபின் வீட்டார் தங்களுடைய சுதந்தரங்களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௰௮ யாக்கோபின் வீட்டார் அக்கினியும், யோசேப்பின் வீட்டார் அக்கினிச் சுவாலையும், ஏசாவின் வீட்டாரோ வைக்கோல்த் துரும்புமாயிருப்பார்கள்; அவர்கள் இவர்களைக் கொளுத்தி, ஏசாவின் வீட்டில் மீதி இராதபடிக்கு இவர்களைப் பட்சிப்பார்கள்; ஏனெனில் கர்த்தர் இதைச் சொன்னார்.

௰௯ தெற்குச்சீமையார் ஏசாவின் பர்வதத்தையும், பள்ளத்தாக்குச் சீமையார் பெலிஸ்தியரின் தேசத்தையும் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; அவர்கள் எப்பிராயீமின் நாட்டையும், சமாரியாவின் நாட்டையும், பென்யமீன் மனுஷரோ கீலேயாத்தையும் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௨௰ சர்பாத்மட்டும் கானானியருக்குள்ளே சிறைபட்டுப்போன இஸ்ரவேல் புத்திரராகிய இந்தச் சேனையும், சேப்பாராத்தில் சிறைபட்டுப்போன எருசலேம் பட்டணத்தாரும் தெற்கத்திப்பட்டணங்களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௨௧ ஏசாவின் பர்வதத்தை நியாயந்தீர்ப்பதற்காக இரட்சகர்கள் சீயோன்பர்வதத்தில் வந்தேறுவார்கள்; *அப்போது இராச்சியம் கர்த்தருடையதாயிருக்கும்.

*சங். ௨. ௬, ௮. மீகா. ௪. ௭.

# யோனாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

ஆமித்தாயின் குமாரனாகிய *யோனாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது: *௨ இரா. ௰௪. ௨௫.

௨ நீ எழுந்திருந்து பெரியபட்டணமாகிய நினிவேக்குப்போய், அதற்கு விரோதமாகப் பிரசங்கி; ஏனென்றால் அவர்களுடைய பொல்லாப்பு நமக்குமுன்பாக ஏறிவந்தது என்றார்.

௩ அப்போது யோனா கர்த்தருடைய முகத்துக்கு விலகி, தர்சீசுக்கு ஓடிப்போக

கும்படிக்கு எழுந்திருந்து, *யோப்பேக்கு இறங்கிப்போய், தர்சீசுக்குப் போகிற கப்பலைக் கண்டுபிடித்து, தலைக்கூலி கொடுத்துத் தான் கர்த்தருடைய முகத்துக்கு விலக, அவர்களோடேகூடத் தர்சீசுக்குப் போகும்படிக்கு அதில் ஏறினான்.

*அப். ௯. ௩௯.

௪ ¶ *ஆனால் கர்த்தர் சமுத்திரத்தின்மேல் பெருங்காற்றை வரவிட்டார்; அதினால் கடலிலே, கப்பல் உடையுமென்று நினைக்கத்தக்கதான கனகொந்தளிப்பு உண்டாயிற்று. *மத். ௮. ௨௪. அப். ௨௭. ௰௪.

௫ அப்போது கப்பலாள்கள் பயந்து, அவரவர் தன்தன் தேவனைநோக்கிக் கூப்பிட்டு, கப்பலில் இருந்த தட்டுமுட்டுகளின் பாரம் அற்றுப்போகிறதினாலே அதை இலேசாக்கும்படிக்கு, அவைகளைச் சமுத்திரத்தில் எறிந்துவிட்டார்கள்; யோனாவோவென்றால், கப்பலின்கீழ்த்தட்டில் இறங்கிப் படுத்துக்கொண்டு, அசந்த நித்திரை பண்ணியிருந்தான்.

௬ ¶ அப்போது பெரிய மாலுமி அவனண்டைக்குச் சேர்ந்துவந்து அவனுடனே, நீ நித்திரைபண்ணிக் கிடக்கிறதேது? எழுந்திருந்து உன் தேவனை நோக்கிக் கூப்பிடு; நாம் கெட்டுப்போகாதபடிக்குச் சுவாமி ஒருவேளை நம்மைத் தயவாய் நினைப்பாராக்கும் என்றான்.

௭ அவர்கள் ஒருவரோடொருவர், யார்நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்குவருகிறதென்று நாம் அறியும்படிக்குச் சீட்டுகளைப் போடுவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டு, சீட்டுகளைப் போட்டார்கள்; அப்போது யோனாவின்பேருக்குச் சீட்டுவிழுந்தது.

௮ ¶ அப்போது அவர்கள் இவனோடே, யார்நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்கு வருகிறதென்று நீ எங்களுக்கு அறிவியேன்; உன் தொழிலென்ன? நீ எங்கேயிருந்து வருகிறாய்? உன்னுடைய தேசம் எது? நீ எந்தச்சனத்தான் என்று சொல்லிக்கேட்டார்கள்.

௯ அவர்களோடே இவன், நான் எபிரெயன்; சமுத்திரத்தையும் பூமியையும் உண்டாக்கின பரமண்டலங்களுடைய பராபரனாகிய கர்த்தருக்கு நான் பயபக்திய[...]வன் என்றான்.

௰ அப்போது அந்த மனுஷர் மிகவும் பயந்து அவனுடனே, நீ ஏன் இதைச் செய்தாய் என்றார்கள்; ஏனெனில் தான் கர்த்தருடைய முகத்துக்கு விலகி ஓடிப்போகிறவன் என்கிறதை அவன் தங்களுக்கு அறிவித்ததினாலே அந்த மனுஷர் அதை அறிந்தார்கள்.

௰௧ ¶ பின்னையும், சமுத்திரம் நமக்கு அமர்ந்துபோகும்படிக்கு உனக்கு நாங்கள் செய்யவேண்டியதென்ன என்று அவனைக் கேட்டார்கள்; ஏனென்றால் சமுத்திரம் கொந்தளித்துக்கொண்டே இருந்தது.

௰௨ அப்போது அவன் அவர்களோடே சொன்னதாவது: நீங்கள் என்னை எடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிடுங்கள்; அப்போது சமுத்திரம் உங்களுக்கு அமர்ந்து போகும்; ஏனெனில் என்நிமித்தம் இந்தப் பெரிய கொந்தளிப்பு உங்கள்மேல் வந்ததென்கிறதை நான் அறிவேன் என்றான்.

௰௩ ¶ அந்த மனுஷர் கரைக்குத் திரும்பும்படிக்குத் தண்டுவலித்தார்கள்; ஆனாலும் அவர்களுக்குக் கூடாதேபோயிற்று; ஏனெனில் சமுத்திரம் அவர்களுக்கு விரோதமாகக் கொந்தளித்துக்கொண்டேயிருந்தது.

௰௪ அப்போது அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டுச் சொன்னதாவது: ஆ கர்த்தாவே, தேவரீர் எங்களை இந்த மனுஷனுடைய சீவனின்நிமித்தம் கெட்டுப்போகவொட்டாமலும் குற்றமில்லாத இரத்தப்பழியை எங்கள்மேல் சுமத்தாமலும் இரும்; ஏனெனில் தேவரீர் கர்த்தர்; உமக்குச் சித்தமாயிருக்கிறபடியே தேவரீர் செய்கிறீரென்று சொல்லி,

௰௫ யோனாவை எடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிட்டார்கள்; அப்போது சமுத்திரம் தன் மும்முரத்தை விட்டு அமர்ந்தது.

௰௬ அப்போது அந்த மனுஷர் கர்த்தருக்கு மிகவும் பயப்பட்டு, கர்த்தருக்குப் பலியிட்டுப் பொருத்தனைகளைப் பண்ணினார்கள்.

## உ. அதிகாரம்.

ஆனால் யோனாவை விழுங்கப் பெரியமீனைக் கர்த்தர் கட்டளையிட்டார்; *அந்த மீனினுடைய வயிற்றிலே யோனா, மூன்று பகலும் மூன்று இராத்திரியும் இருந்தான்.

மத். ௰௨. ௪௰: ௰௬. ௪. லூக். ௰௧. ௨௯.

௨ ஆனால் மீனினுடைய வயிற்றிலிருந்து, யோனா தன் பராபரனாகிய கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணிச் சொன்னதாவது:

௩ ¶ *நான் நெருக்கப்படுகையில் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது எனக்கு உத்தரவு அருளிச்செய்தார்; பாதாளத்தின் வயிற்றிலிருந்து கூக்குரலிட்டேன்; அப்போது என் சத்தத்தைக் கேட்டீர்.

*சங். ௱௨௰. ௧: ௱௩௰. ௧.

௪ ஏனெனில் சமுத்திரங்களின் நடுமையமாகிய ஆழத்திலே என்னைத் தள்ளிவிட்டீர்; நீரோட்டம் என்னைச் சூழ்ந்துகொண்டது; உம்முடைய எல்லா வெள்ளங்களும் அலைகளும் என்மேல் புரண்டன.

௫ நான் உமது கண்களுக்கு எதிரே இராதபடிக்குத் தள்ளுண்டேன்; ஆகிலும் இன்னம் உம்முடைய பரிசுத்த தேவாலயத்தை நோக்குவேனென்றேன்.

௬ தண்ணீர்கள் என்னைப் பிராணபரியந்தம் சுற்றிப்பிடித்தன; ஆழம் என்னைச் சூழ்ந்தது; நாணல் என் தலையைச் சுற்றிக்கொண்டது.

௭ பர்வதங்களின் அடிவாரங்கள்பரியந்தமும் இறங்கினேன்; பூமியின் தாழ்ப்பாள்கள் என்றென்றைக்கும் என்னை அடைக்கிறதாயிருந்தது; ஆனால் என் பராபரனாகிய கர்த்தாவே, என் பிராணனை அழிவுக்குத் தப்புவித்து ஏறிவரப்பண்ணினீர்.

௮ ¶ என் ஆத்துமம் என்னில் தொய்ந்துபோகையில் கர்த்தரை நினைத்தேன்; அப்போது என் விண்ணப்பம் உமது பரிசுத்த தேவாலயத்திலே உம்மண்டைக்கு வந்து சேர்ந்தது.

௯ பொய்யான மாயையைக் கைக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்.

௰ *நானோவெனில் துதியின் சத்தத்தோடே உமக்குப் பலியிடுவேன்; நான் பண்ணின பொருத்தனையைச் செலுத்துவேன்; இரட்சிப்பு கர்த்தருடையது என்றான்.

*சங். ௫௰. ௰௪: ௱௰௬. ௰௭.

௰௧ ஆனால் கர்த்தர் மீனுக்குச் சொன்னார்; அப்போது அது யோனாவைக் கரையிலே கக்கிப்போட்டது.

## ௩. அதிகாரம்.

இரண்டாம்விசை கர்த்தருடைய வார்த்தை யோனாவுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௨ *நீ எழுந்திருந்து பெரிய பட்டணமாகிய நினிவேக்குப் போய், நாம் உனக்குச் சொல்லும் பிரசங்கத்தை அதற்கு விரோதமாகப் பிரசங்கி என்றார். *யோனா. ௧. ௨.

௩ அப்போது யோனா எழுந்திருந்து, கர்த்தருடைய வார்த்தையின்படியே நினிவேக்குப்போனான்; நினிவேயோவென்றால் மூன்றுநாள் பயணவிஸ்தாரமான மிகுதியும் பெரியபட்டணமாயிருந்தது.

௪ யோனா ஒருநாள்பயணம் பட்டணத்துக்குள் போகத்துவக்கி; இன்னம் நாற்பதுநாள் இருக்கிறது, அப்போது நினிவே புரட்டப்பட்டுப்போம் என்று பிரசங்கித்தான்.

௫ ¶ *அப்போது நினிவேயின் மனுஷர் பராபரன்பேரிலே விசுவாசித்து உபவாசத்தைக் கூறினார்கள்; பெரியோர்துவக்கிச் சிறியோர்மட்டும் இரட்டுகளை உடுத்துக்

கொண்டார்கள். *மத். ௰௨. ௪௧.

௬ இந்த வர்த்தமானம் நினிவேயின் இராசாவுக்குப்போய் எட்டினபோது, இவன் தன் இராசாசனத்தைவிட்டு எழுந்திருந்து தான் உடுத்தியிருந்த உடுப்பை விலக்கிப்போட்டு, இரட்டை உடுத்திக்கொண்டு, சாம்பலிலே உளுக்காந்தான்.

௭ இதுவுமல்லாமல் இராசா, தானும் தன்னுடைய பிரதானிகளும் நிருணயம்பண்ணின கட்டளையாக, நினிவேயிலே கூறச்சொன்னதாவது: மனுஷரும் மிருகங்களும் மாடுகளும் ஆடுகளும் ஒன்றும ருசிபாராதிருக்கவும், மேயாமலும் தண்ணீர்குடியாமலும் இருக்கவும்,

௮ மனுஷரும் மிருகங்களும் இரட்டினால் மூடிக்கொள்ளப்பட்டுப் பராபரனைநோக்கி வலுவாய்க் கூப்பிடவும், அவரவர் தங்கள் பொல்லாத வழியையும் தங்கள் கைகளிலுள்ள கொடுமையையும்விட்டுத் திரும்பவுங்கடவது.

௯ நாம் அழிந்துபோகாதபடிக்கு *ஒருவேளை பராபரன் மனஸ்தாபப்பட்டுத் தம்முடைய கோபத்தின் உக்கிரத்தைவிட்டுத் திரும்பிக்கொள்ளுவாராக்கும் யாருக்குத் தெரியுமென்பதைக் கூறச்சொன்னான்.
*யோவே. ௨. ௰௪. தானி. ௪. ௨௪.

௰ ¶ அவர்கள் தங்கள் பொல்லாத வழியைவிட்டுத்திரும்பினார்களென்று பராபரன் அவர்களுடைய கிரியைகளைப் பார்த்து, *தாம் அவர்களுக்குச் செய்வோமென்று சொல்லியிருந்த தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு, அதைச் செய்யாதிருந்தார்.
*எரே. ௰௮. ௭, ௮.

## ௪. அதிகாரம்.

ஆனால் யோனாவுக்கு இது மிகுதியும் ஆகாததாய்க் கண்டது; அவனுக்கு எரிச்சலுண்டாயிற்று.

௨ அவன் கர்த்தரைநோக்கி விண்ணப்பம் பண்ணிச் சொன்னதாவது: ஆ கர்த்தாவே நான் என் தேசத்தில் இன்னம் இருக்கையில் நான் சொன்னது இதுதானல்லவோ! ஆகையாலேதானே தர்சீசுக்கு ஓடிப்போக முந்திக்கொண்டேன்; ஏனெனில் தேவரீர் *இரக்கமும் மன உருக்கமும் நீடியசாந்தமும் மிகுந்த கிருபையுமுள்ளவரும், தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவருமான தேவனென்று அறிவேன். *௨ மோ. ௩௪. ௬.

௩ *இப்போதும் கர்த்தாவே, என் ஆத்துமத்தை என்னைவிட்டு எடுத்துக்கொள்ளும்; ஏனெனில் நான் உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் நான் சாகிறது நல்லதென்றான்.
*யோபு. ௬. ௯; ௰. ௧. எரே. ௨௰. ௰௪.

௪ அதற்குக் கர்த்தர்: நீ எரிச்சலாயிருக்கிறது நல்லதோ என்றார்.

௫ ¶ யோனாவோவென்றால் பட்டணத்திலிருந்து புறப்பட்டுப் பட்டணத்துக்குக் கிழக்கே உளுக்கார்ந்து, அங்கே தனக்கு ஒரு குடிலசையைப் போட்டு, பட்டணத்துக்குச் சம்பவிக்கப்போகிறதைத் தான் பார்க்குமட்டும் அதின்கீழ் நிழலிலே உளுக்காந்திருந்தான்.

௬ ஆனால் யோனாவுடைய தலையின்மேல் நிழலுண்டாயிருக்கவும், அவனை அவனுடைய மனமடிவுக்கு நீங்கலாக்கவும் பராபரனாகிய கர்த்தர் ஒரு ஆமணக்குச்செடியை முளைக்கக் கட்டளையிட்டு அதை அவன்மேல் ஓங்கிவளரப்பண்ணினார்; அந்த ஆமணக்கின்பேரிலே யோனா மிகுதியும் சந்தோஷப்பட்டான்.

௭ ஆனால் மறுநாள் கிழக்கு வெளுக்கிற நேரத்திலே பராபரன் ஒரு பூச்சியைக் கட்டளையிட்டார்; அது ஆமணக்குச் செடியைக் கடித்துப்போட்டது; அதினாலே அது காய்ந்துபோயிற்று.

௮ சூரியன் உதித்தபோது சம்பவித்ததென்றால், பராபரன் அமைச்சலுள்ள கீழ்க்காற்றைக் கட்டளையிட்டார்; அப்போது

வெய்யில் யோனாவுடைய தலையில் படுகிறதினால் அவன் தொய்ந்துபோய், *தன் சீவனுக்குச் சாவை விரும்பி, நான் உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் நான் சாகிறது தாவிலையென்றான். *ந. வச.

க அப்போது பராபரன் யோனாவுடனே, நீ ஆமணக்கின்நிமித்தம் *எரிச்சலாயிருக்கிறது நல்லதோ என்றார்; அதற்கு அவன், நான் மரணபரியந்தமும் எரிச்சலாயிருக்கிறது நல்லதென்றான். *ச. வச.

௰ ¶ அப்போது கர்த்தர் சொன்னதாவது: நீ பிரயாசப்படாததும் பயிராக்காததும் ஒரு இராத்திரியிலே முளைத்ததும் ஒரு இராத்திரியிலே அழிந்ததுமான ஆமணக்குக்குப் பரதபிக்கிறாயே.

௰க தங்கள் வலதுகைக்கும் தங்கள் இடதுகைக்கும் வித்தியாசம் அறியாத நூற்றிருபதினாயிரம்பேருக்கு அதிகமான மனுஷரும் அநேக மிருகசீவன்களும் இருக்கிற *பெரியபட்டணமாகிய நினிவேக்கு நாம் பரதபிக்காதிருப்போமோ என்றார்.
*யோனா. ந. ந.

---

# மீகாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

யோத்தாம், ஆகாஸ், எசேக்கியா என்ற யூதாவுடைய இராசாக்களுடைய நாள்களில், *மொரேசாவூரானாகிய மீகாவுக்கு உண்டானதும், அவன் சமாரியாவுக்கும் எருசலேமுக்கும் விரோதமாய்த் தரிசனமாகக் கண்டதுமான கர்த்தருடைய வார்த்தை. *எரே. உசு. ௰அ.

உ ¶ *சகல சனசதளங்களே, கேளுங்கள்; பூமியே, அதின் நிறைவே, கவனி; கர்த்தராகிய ஆண்டவர் உங்களுக்கு விரோதமாகச் சாட்சிவிளங்குவார்; ஆண்டவர் தம்முடைய பரிசுத்ததேவாலயத்திலிருந்து தானே. *உ மோ. ௩உ. க. ஏசா. க. உ.

ங ஏனெனில் இதோ, *கர்த்தர் தமது தானத்திலிருந்து புறப்பட்டு இறங்கிப் பூமியின் உயரங்களை மிதிப்பார். *ஏசா. உசு. உக.

ச அக்கினிக்குமுன்பாக மெழுகு உருகுகிறதுபோலேயும், மலைகளிலிருந்து பாயுந் தண்ணீர் தரையைக் கிழிக்கிறதுபோலேயும், *அவர்கீழே பர்வதங்கள் உருகி, பள்ளத்தாக்குகள் கிழிந்துபோகும். *சங். சுஎ. ௫.

ரு ¶ இது எல்லாம் யாக்கோபுடைய மீறுதலின் நிமித்தமும், இஸ்ரவேல் வீட்டாருடைய பாவங்களின்நிமித்தமும் சம்பவிக்கும்; யாக்கோபின் மீறுதலுக்குக் காரணமேது? சமாரியா அல்லவோ? யூதாவின் மேடைகளுக்குக் காரணமேது? எருசலேம் அல்லவோ?

சு ஆகையால் நாம் சமாரியாவை வெளியான மண்மேடும், திராட்ச நடவுக்கான நிலமுமாக்கி, அதின் கல்லுகளைப் பள்ளத்தாக்கிலே புரண்டுவிழப்பண்ணி, அதின் அஸ்திபாரங்களைத் திறந்துவைப்போம்.

எ அதின் சுரூபங்கள் எல்லாம் நருக்கப்படும்; அதின் பணையங்கள் எல்லாம் அக்கினியால் எரித்துப்போடப்படும்; அதின் விக்கிரகங்களை எல்லாம் பாழாக்குவோம்; ஏனெனில் வேசிப்பணையத்தினால் சேர்க்கப்பட்டது திரும்ப வேசிப்பணையமுமாய்ப்போகும்.

அ ¶ இதின்நிமித்தம் நான் புலம்பி, அலறுவேன்; பறிகொடுத்தவனாகவும் அம்மணமாகவும் நடப்பேன்; நான் வலுவான சர்ப்பங்களைப்போலப் புலம்பலையும், தீவுக்குரி

விகளைப்போலத் துக்கிப்பையும் கேட்கப் பண்ணுவேன்.

௯ ஏனெனில் அதின் காயம் ஆறாததாயிருக்கிறது; அதேனெனில் யூதாமட்டும் வந்தது; என் சனத்தின் வாசல்மட்டும் எருசலேம்மட்டுமே கிட்டிற்று.

௰ *அதைக் காத்பட்டணத்திலே அறிவியாதேயுங்கள், அழவே அழாதேயுங்கள்; உள்ளே புழுதியுள்ள தலத்திலே போய்ப் புழுதியிலே புரளு. *உ சாமு. க. உ௰.

௰க சாப்பீரில் குடியிருக்கிறவளே, வெட்கமான அம்மணமாய் அப்பாலே போ; சாயனானில் குடியிருக்கிறவள் வெளியே வருவதில்லை; அயலூரின் புலம்பல் அதில் உங்களுக்கு இருந்த அடைக்கல நிலைமையை எடுத்துப்போட்டது.

௰உ மாரோத்தில் குடியிருக்கிறவள் இழந்த நன்மையின் நிமித்தம் நோஞ்சலாயிருப்பாள்; ஏனெனில் எருசலேமின் வாசலுக்கு நேராகத் தீங்கு *கர்த்தரிடத்திலிருந்து இறங்குகிறது. *ஏசா.சடு.எ. ஆமோ.௩.௬.

௰௩ லாகீசில் குடியிருக்கிறவளே, வேகமான வாகனங்களை இரதத்திலே பூட்டு; நீதான் சீயோன் குமாரத்தியின் பாவத்துக்குக் காரணி; ஏனெனில் உன்னில் இஸ்ரவேலின் பாதகங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

௰ச ஆகையால் காத்பட்டணத்தின்கிட்ட உனக்கு இருக்கிறதைக் கொடுத்துவிடுவாய்; அக்சீபின் வீடுகள் இஸ்ரவேலின் இராசாக்களுக்கு அபத்தமாய்ப்போகும்.

௰ரு மரேசாவில் குடியிருக்கிறவளே, உனக்கு இன்னம் ஒரு சுதந்தரவாளியை வரப்பண்ணுவோம்; அவன் அதுல்லாமட்டும் இஸ்ரவேலின் மகிமையின் தானமட்டும் வருவான்.

௰௬ உனக்குக் கனிக்கிரமான உன் பிள்ளைகளின்நிமித்தம் *நீ மொட்டையாகச் சிரைத்துக்கொள்; கழுகைப்போல முழு மொட்டையாகத்தானே; ஏனெனில் உன் னைவிட்டுச் சிறையிருப்பிலேபோகிறார்கள். *ஏசா. உஉ. ௰உ.

## உ. அதிகாரம்.

அக்கிரமத்தை யோசித்து, தங்கள் படுக்கைகளின்மேல் பொல்லாப்புக்கு எத்தனம் பண்ணிக் காலமே வெளிச்சமாகிறபோது, அதைத் தங்கள் கையில் வல்லமை இருக்கிறபடியினாலே நடப்பித்து,

உ *வயல்களை இச்சித்துப் பறித்துக்கொண்டு, வீடுகளை இச்சித்து எடுத்துக்கொண்டு, புருஷனையும் அவன் வீட்டையும், மனுஷனையும் அவன் சுதந்தரத்தையும் ஒடுக்குகிறவர்களுக்கு ஐயோ! *ஏசா. ௫. ௮.

௩ ¶ *ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நீங்கள் உங்கள் கழுத்துகளை நீங்கலாக்கிவிடக்கூடாத தீங்கை நாம் இந்த வம்சத்தின்மேல் வரப்பண்ண நினைக்கிறோம்; அப்போது நீங்கள் மேட்டிமையாய் நடப்பதில்லை; ஏனென்றால் இது துர்க்காலம். *ஆமோ. ௫. ௰௩.

௪ அந்நாளில் உங்கள்பேரிலே ஒரு சொல் உண்டாகி, துக்கமான புலம்பலாய், பாழாகவே பாழானோமென்றும், என் சனத்தின் வீதத்தை மாற்றிப்போட்டாரென்றும், எப்படி அதை என்னைவிட்டு எடுத்துப்போட்டார்? எங்கள் வயல்களைப் பிடுங்கிப் பகிர்ந்துகொடுத்தாரென்றும் புலம்பப்படும்.

௫ மெய்யாகவே, கர்த்தரின் சபையில் சுதந்தரவீதங்களை அளந்துகொடுக்கிறவர்கள் உனக்கு இல்லாதிருப்பார்கள்.

௬ ¶ *தீர்க்கதரிசனம் சொரியாதிருப்பீர்களாக; சொரிந்தால் நிந்தை நீங்கிப்போகாதிருக்கிற இந்தப்பிரகாரமாகச் சொரிய வேண்டாம் என்கிறார்கள். *ஆமோ. எ. ௰௬.

எ ¶ யாக்கோப்வீட்டாரென்னப்பட்டவர்களே, கர்த்தரின் ஆவியானவர் குறுகியிருக்கிறாரோ? அவருடைய கிரியைகள் இவைகள்

தானே? செம்மையாய் நடக்கிறவனோடே நம்முடைய வார்த்தைகள் நயமாயிராதோ?

௮ நமது சனமோவென்றால் முதலே சத்துருவாக எழும்பிற்று; யுத்தத்திலிருந்து திரும்பிவந்து அஞ்சாமல் கடந்துபோகிறவர்களுடைய வஸ்திரத்தின் மேல் உடுப்பை உரிந்துகொண்டீர்கள்.

௯ நமது சனத்தின் ஸ்திரிகளை அவர்களுடைய சௌக்கியமான வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்கள்; அவர்களுடைய குழந்தைகளுக்கு இருந்த நம்முடைய அலங்காரத்தை என்றைக்கும் இல்லாதபடிக்குப் பறித்துக்கொண்டீர்கள்.

௰ எழுந்திருந்து போங்கள்; ஏனெனில் இது நீங்கள் இளைப்பாறிக்கொண்டிருக்கத் தக்க தேசம் அல்ல, அதேனென்றால் தீட்டுப்பட்டது கெட்டுப்போயிற்று; கேடு அகோரமுமாயிற்று.

௰௧ மனம்போகிற போக்காய்ப் போய், அபத்தமானதைப் புளுகுகிற ஒருவன், மதுபானத்தையும் லொட்டியையுங்குறித்து நான் உனக்குப் பிரசங்கிப்பேனென்றால், அவனே இந்தச் சனத்துக்கு ஏற்ற பிரசங்கியாயிருப்பான்.

௰௨ ¶ யாக்கோபின் சனமே, * உங்களை எல்லாம் கூட்டவே கூட்டுவோம்; இஸ்ரவேலில் மீதியானவர்களைச் சேர்க்கவே சேர்ப்போம்; போத்ஸராவின் ஆடுகளைப்போலே அவர்களை † ஏககூட்டமாக்குவோம்; தன் தொழுவத்துக்குள்ளே சேர்ந்த மந்தைக்குச்சமானமாய் மனுத்திரளினாலே இரைச்சல் உண்டாகும். * உரோ. ௰௧. ௨௬. † யோவா. ௰. ௰௬.

௰௩ தடைகளை நீக்கிப்போடுகிறவர் அவர்களுக்குமுன்பாக நடந்தேறுவார்; அவர்கள் தடைகளை நீக்கி, வாசலால் உள்ளும் புறம்புமாகப் பிரவேசிப்பார்கள்; * அவர்கள் இராசா அவர்களுக்குமுன்பாகவும், கர்த்தர் அவர்கள் முன்னணியிலும் நடந்துபோவார். * மீகா. ௪. ௭.

## ௩. அதிகாரம்.

நான் சொன்னதாவது: * யாக்கோபின் தலைவர்களே, இஸ்ரவேல் வீட்டாரின் அதிபதிகளே, நியாயம் ஏதென்றறிய உங்களுக்கு அல்லோ அடுக்கும்? * ஏசா. ௧. ௰. ஓசே. ௫. ௧.

௨ ஆனால் நன்மையைப் பகைத்துப் பொல்லாப்பைச் சிநேகித்து, அவர்கள்மேல் இருக்கிற அவர்களுடைய தோலையும் அவர்கள் எலும்புகளின்மேல் இருக்கிற அவர்களுடைய சதையையும் பிடுங்கி,

௩ என் சனத்தின் சதையைத் தின்று, அவர்கள்மேல் இருக்கிற அவர்களுடைய தோலை உரித்துக்கொண்டு, அவர்கள் எலும்புகளை முறித்து, பானையிலே போடும்வண்ணமாகவும் இறைச்சியைக் கொப்பரைக்குள்ளே போடும்வண்ணமாகவும் அவைகளைத் துண்டிக்கிறார்கள்.

௪ அப்போது கர்த்தரைநோக்கிக் கூப்பிடுவார்கள்; ஆனால் * அவர்கள் தங்கள் கிரியைகளில் பொல்லாதவர்களானபடியினாலே இவர் அவர்களுக்கு மறு உத்தரவு கொடாமல் தமது முகத்தை அக்காலத்திலே அவர்களுக்கு மறைப்பார். * ஏசா. ௫௯. ௨.

௫ ¶ நமது சனத்தை மோசம்போக்குகிற தீர்க்கதரிசிகளுக்கு விரோதமாகக் கர்த்தர் சொல்லுகிறதாவது: அவர்கள் தங்கள் பல்லுகளினால் கடிக்கிறவர்களாயிருந்து, * சமாதானமென்று கூப்பிட்டு, தங்கள் வாய்க்குக் கொடாதவனுக்கு விரோதமாக யுத்தத்தை ஆயத்தம்பண்ணுகிறார்கள். * ஏசா. ௰௩. ௰.

௬ ஆகையால் நீங்கள் தரிசனம்பார்க்கக் கூடாத இராத்திரியும், குறிசொல்லக்கூடாத அந்தகாரமும் உங்களுக்கு வரும்; தீர்க்கதரிசிகளின்மேல் சூரியன் அஸ்தமித்து, அவர்கள்மேல் பகல் காரிருளாய்ப் போகும்.

௭ தரிசனம் பார்க்கிறவர்கள் வெட்கிக் குறிசொல்லுகிறவர்கள் நாணிப்போய், உத்தரவு

கொடுப்பிக்கிற தேவன் இல்லாததினாலே அவர்கள் எல்லாரும் தங்கள் தாடியை மூடுவார்கள்.

அ நானோவென்றால், * யாக்கோபுக்கு அவன் மீறுதலையும் இஸ்ரவேலுக்கு அவன் பாவத்தையும் அறிவிக்கத் தக்கதாக, கர்த்தருடைய ஆவியோடேகூடிய பலத்தினாலும், நியாயத்தினாலும், பராக்கிரமத்தினாலும் நிரப்பப்பட்டிருக்கிறேன். * ஏசா. ருஅ. க.

கூ ¶ நியாயத்தை அருவருத்து, செம்மையானவைகளையெல்லாம் கோணலாக்கி,

௰ சீயோனை இரத்தப்பழிகளாலும், எருசலேமை அநியாயத்தினாலும் கட்டுவிக்கிற யாக்கோப் வீட்டாரின் தலைவர்களே, இஸ்ரவேல்வீட்டாரின் அதிபதிகளே, இதைக் கேளுங்களேன்.

௰க * அதின் தலைவர்கள் பரிதானத்துக்கு நியாயந்தீர்க்கிறார்கள்; அதின் ஆசாரியர்கள் கூலிக்கு உபதேசிக்கிறார்கள்; அதின் தீர்க்கதரிசிகள் பணத்துக்குக் குறிசொல்லுகிறார்கள்; ஆகிலும் அவர்கள் கர்த்தரைச் சார்ந்துகொண்டு, கர்த்தர் எங்கள் நடுவில் இல்லையோ, தீங்கு எங்கள்மேல் வராதென்கிறார்கள். * செப். ௩. ௩.

௰உ ஆகையால் * உங்கள்நிமித்தம் சீயோன் வயலாக உழப்பட்டு, எருசலேம் மண்மேடுகளும் வீட்டின் பர்வதம் காட்டு மேடுகளுமாய்ப்போகும். * எரே. கூ. ௰க: உகூ. ௰அ.

## ச. அதிகாரம்.

ஆனால் * கடைசிநாள்களில் சம்பவிப்பதேதெனில்; கர்த்தருடைய வீட்டின் பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியாய்த் திடப்பட்டு, மேடுகளிலும் அதுவே உயரும்; சனசதளங்கள் அதற்கு ஓடி, * ஏசா. உ. உ.

உ * திரளான சாதியார் நடந்துவந்து, கர்த்தரின் பர்வதத்துக்கும் யாக்கோபுடைய பராபரனின் வீட்டுக்கும், அவர் தமது வழிகளை நமக்குப் போதிக்கவும், நாம் அவர் பாதைகளில் நடக்கவும், நாம் போவோமாக வாருங்கள் என்பார்கள்; ஏனெனில் வேதம் சீயோனிலும், கர்த்தரின் வசனம் † எருசலேமிலுமிருந்து பரவிப்போகும்.
* ஏசா. கூ௰. ச, ரு. † லூக். உச. சஎ.

௩ * அவர் திரளான சனசதளங்களுக்குள் நியாயந்தீர்த்து, தூரபரியந்தம் பலத்த சாதிகளைக் கடிந்துகொள்ளுவார்; அப்போது தங்கள் பட்டயங்களை மண்வெட்டிகளாகவும் தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்; சாதிக்கு விரோதமாய்ச் சாதி பட்டயம் எடுப்பதில்லை; இனி யுத்தம் பழகுவதுமில்லை. * ஏசா. உ. ச.

ச * அவனவன் தன் திராட்சச்செடியின் கீழும் தன் அத்திமரத்தின்கீழும் தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல் உளுக்காருவான்; ஏனெனில் † சேனைகளுடைய கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று.
* க இரா. ச. உரு. † ஏசா. ருஅ. ௰ச.

ரு அதேதெனென்றால் சகல சனசதளங்களும் தங்கள் தங்கள் பராபரனுடைய நாமத்திலே நடப்பார்கள்; நாங்களும் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நடப்போம்.

சா ¶ கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அந்நாளிலே நாம் நொண்டியானவளைச் சேர்த்து, தள்ளுண்டவளையும் நாம் தீங்கு அனுபவிக்கப் பண்ணினவளையும் கூட்டிக்கொண்டு,

எ * நொண்டியானவளை மீதியான சனமாகவும், தூரமாய்த் தள்ளுண்டுபோனவளைப் பலத்த சாதியாகவும் வைப்போம்; அவர்கள்பேரிலே கர்த்தர் சீயோன்பர்வதத்திலே † இதுமுதலாய் என்றென்றைக்கும் இராசாவாயிருப்பார். * செப். ௩. ௰கூ. † லூக். க. ௩௩.

அ மந்தையின் துருக்கமே, சீயோன் குமாரத்தியின் மேடே, உன்னண்டைக்கு வரும்; * முந்தின ஆளுகையும் எருசலேம் குமா

ரத்தியின் இராசரிக்கமுமே வரும்.
* ஏசா. ௧. ௨௬.

௯ ¶ இப்போதும் நீ கதறுதலாய்க் கதறுவானேன்? இராசாவானவர் உனக்குள்ளே இல்லையோ? உன் ஆலோசனைக்காரர் அழிந்தாரோ? ஏனென்றால் பிள்ளைபெறுகிறவளுக்கு ஒத்த அம்பாயம் உன்னைப் பிடித்திருக்கிறதே.

௰ சீயோன் குமாரத்தியே, பிள்ளைபெறுகிறவளைப்போல அம்பாயப்பட்டுப் பிரயாசப்படு; ஏனெனில் இப்போது பட்டணத்திலிருந்து புறப்பட்டு, வெளிகளில் தங்கி, பாபேல்மட்டும் வந்துசேருவாய்; அங்கே விடுவிக்கப்படுவாய்; அங்கே கர்த்தர் உன்னை உன் சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கி மீட்பார்.

௰௧ ¶ இப்போதும் அவள் தீட்டுப்பட்டவளாகக்கடவளென்றும், சீயோனிலே எங்கள் கண் தனக்கு ஆசைபாயிருக்கிறதைக் காணுமென்றும் அநேகம் சாதியார் உனக்கு விரோதமாகக் கூடிக்கொள்ளுவார்கள்.

௰௨ ஆனால் *அவர்கள் கர்த்தருடைய நினைவுகளை அறியாமலும் அவருடைய யோசனையை உணராமலும் இருக்கிறார்கள்; அதேனெனில் அரிக்கட்டுகளைப்போல அவர்களைக் களத்திலே கூட்டுவார். *எரே.௨௧.௰௧.

௰௩ சீயோன் குமாரத்தியே, நீ எழுந்திருந்து போரடி; ஏனென்றால் நாம் உன் கொம்புகளை இரும்பும் உன் குளம்புகளை வெண்கலமுமாக்குவோம்; நீ அநேக சனசதளங்களை நொறுக்கிப்போடுவாய்; அவர்கள் தேடிச்சேர்த்ததைக் கர்த்தருக்கும் அவர்களுடைய ஆஸ்தியைப் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கும் நியமிப்போம்.

௰௪ தண்டு சேனையையுடைய பட்டணமே, இப்போது தண்டுதண்டாகக் கூடிக்கொள்; நமக்கு விரோதமாக முற்றிக்கை போடப்படும்; இஸ்ரவேலுடைய நியாயாதிபதியை மிலாற்றினாலே தாடையிலே அடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

ஆனால் *எப்பிராத்தா என்னப்பட்ட †பெத்லெகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தாலும், இஸ்ரவேலை ஆளப்போகிறவர் உன்னிலேயிருந்து புறப்படுவார்; அவருடைய புறப்படுதல்கள் ‡அநாதிநாள்களாகிய பூருவத்திலுடையவைகள். * ௧ மோ. ௩௫. ௰௯. † மத். ௨. ௬. லூக். ௨. ௧—௭. ‡ யோவா. ௧. ௰௪.

௨ ¶ ஆகையால் பெறப்போகிறவள் பெறுங்காலம்மட்டும் அவர்களை ஒப்புக்கொடுப்பார்; அப்போது அவருடைய சகோதரரில் மீதியானவர்கள் இஸ்ரவேல் புத்திரரோடேகூடத் திரும்புவார்கள்.

௩ அவர் நின்று கர்த்தருடைய பலத்தோடும் தம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தின் முக்கியத்தோடும் மேய்ப்பார்; ஆகையால் அவர்கள் தங்கித்தரிப்பார்கள்; ஏனெனில் இனிப் பூமியின் எல்லைகள்பரியந்தமும் மகிமைப்படுவார்.

௪ ¶ *இவரே சமாதானம்; அசூர் நம்முடைய தேசத்திலே வரும்போதும், நம்முடைய அரண்மனைகளை மிதிக்கும்போதும், ஏழு மேய்ப்பலாயும் மனுஷரில் எட்டு அதிபதிகளையும் அவனுக்கு விரோதமாக நிறுத்துவோம். * எபே. ௨. ௰௪.

௫ இவர்கள் அசூரின் தேசத்தையும் நிம்ரோத்தின் தேசத்தையும் அதினுடைய வாசல்களுக்கு உள்ப்புறமாகப் பட்டையத்தினாலே மேய்ந்துபோடுவார்கள்; அப்படியே அசூர் நம்முடைய தேசத்தில் வரும்போதும், நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போதும் அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார்.

௬ ¶ யாக்கோபிலே மீதியானவர்கள், அநேகம் சனசதளங்களின் நடுவிலே *கர்த்தராலே வந்த பனியைப்போலேயும், மனுஷனுக்குக் காத்திராமலும், மனுபுத்திரரை நம்பியிராமலும் இருக்கிற பூண்டுகள்மேல்

வந்த மழைகளைப்போலேயும் இருப்பார்கள். *சங். ௭௨. ௬.

௭ சாதிகளுக்குள் யாக்கோபிலே மீதியானவர்கள், அநேகம் சனசதளங்களின் நடுவிலே சிங்கம் காட்டு மிருகங்களுக்குள்ளே இருக்கிறதற்குச் சமானமாகவும், கடந்துபோய் மிதித்துத் தப்புவிப்பார் இல்லாமல் பீறிப்போடுகிற இளஞ்சிங்கம் ஆட்டுமந்தைக்குள்ளே இருக்கிறதற்குச் சமானமாகவும் இருப்பார்கள்.

௮ ¶ உன்னுடைய கை உன் விரோதக்காரரின்மேல் உயரும்; உன் சத்துருக்களெல்லாரும் சங்கரிக்கப்படுவார்கள்.

௯ ¶ கர்த்தர் சொல்லுகிறதாவது: அந்நாளிலே சம்பவிப்பதேதெனில், நாம் உன் குதிரைகளை உன் நடுவில் இராதபடிக்குச் சங்கரித்து, உன் இரதங்களை அழித்து,

௰ உன் தேசங்களின் பட்டணங்களைச் சங்கரித்து, உன் அரண்களையெல்லாம் நிர்மூலமாக்கி,

௰௧ சூனியங்களை உன் கையில் இராதபடிக்குச் சங்கரிப்போம்; நாள்பார்வைக்காரர் உனக்கு இல்லாதே போவார்கள்.

௰௨ *உன் சுரூபங்களையும் உன் சிலைகளையும் உன் நடுவில் இராதபடிக்குச் சங்கரிப்போம்; உன் கைகளின் கிரியையை இனிப் பணிந்துகொள்ளாய். *சகரி. ௰௩. ௨.

௰௩ நாம் உன் தோப்புகளை உன் நடுவில் இராதபடிக்குப் பிடுங்கி, உன் பட்டணங்களை அழித்து,

௰௪ கேள்விகொடாத புறச்சாதிகளிடத்திலே கோபத்தோடும் உக்கிரத்தோடும் நீதியைச் சரிக்கட்டுதலைச் செய்வோமென்றார்.

## ௬. அதிகாரம்.

கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள்; நீ எழுந்திருந்து, பர்வதங்களோடே வழக்குச்சொல்; மேடுகள் உன் சத்தத்தைக் கேட்கக்கடவது.

௨ ¶ பருவதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே, கர்த்தருடைய வழக்கைக் கேளுங்கள்; ஏனெனில் *கர்த்தருக்கு அவர் சனத்தோடே வழக்கு இருக்கிறது; இஸ்ரவேலோடே அவர் நியாயம் பேசுவார். *ஏசா. ௫. ௩, ௪.

௩ நமது சனமே, உனக்கு என்னசெய்தோம்? அல்லது எதினால் உன்னை விசனப்படுத்தினோம்? நமக்கு எதிரே உத்தரவு சொல்.

௪ நாம் உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணி, அடிமைத்தன வீட்டில் இருந்த உன்னை மீட்டுக்கொண்டு, மோசே ஆரோன் மீரியாம் என்றவர்களை உனக்கு முன்பாக அனுப்பினோம்.

௫ நமது சனமே, *மோவாபின் இராசாவாகிய பாலாக் பண்ணின யோசனை ஏதென்றும் பேயோரின் குமாரனான பிலேயாம் அவனுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதேதென்றும், சித்திம்துவக்கிக் கில்கால்மட்டும் நடந்ததேதென்றும், நீ கர்த்தருடைய நீதிகளை அறிந்துகொள்ளும்படிக்கு நினைத்துக்கொள்ளேன். *௪ மோ. ௨௨. ௫, ௬.

௬ ¶ எதினாலே நான் கர்த்தருக்கு முந்திக்கொண்டு உன்னதமான பராபரனுக்கு முன்பாகக் குனிவேன்? தகனபலிகளினாலும் ஒரு வயதுக் கன்றுக்குட்டிகளாலும் அவருக்கு முந்திக்கொள்வேனோ?

௭ ஆயிரங்களான ஆட்டுக்கடாக்களின் பேரிலும், எண்ணெய் ஓடுகிற பதினாயிரங்களான ஆறுகளின்பேரிலும், கர்த்தர் பிரியமாயிருப்பாரோ? என் துரோகத்தைப் போக்க என் முதற்பேற்றையும், என் ஆத்துமத்தையும் பாவத்தைப்போக்க என் கர்ப்பக்கனியையும் கொடுப்பேனோ?

௮ மனுஷனே, நன்மையேதென்று உனக்கு அறிவித்தார்; நியாயஞ்செய்து இரக்கத்தைச் சிநேகித்து, உன் பராபரனுக்கு மனத்தாழ்மையாய் நடப்பதை அல்லாமல் வேறே என்னத்தைக் கர்த்தர் உன்னில் தேடுகிறார்.

கூ ¶ கர்த்தருடைய சத்தம் பட்டணத்துக்கு எதிராகக் கூப்பிடுகிறது; ஏனெனில் உம்முடைய நாமம் உத்தமத்தை நோக்குகிறது; மிலாற்றின் செய்தியையும் அதை நிருணயம்பண்ணினவர் யாரென்கிறதையும் கேளுங்கள்.

ய ஆகாதவன்வீட்டிலே ஆகாமியப் பொக்கிஷங்களும் அருவருக்கப்படத்தக்க குறைந்த மரக்காலும் இன்னம் இருக்கிறதல்லவோ?

யக ஆகாத தராசும் கபட்டுப் படிக்கல்லுகளுள்ள பையும் இருக்கக்கொள்ளச் சுத்தமுண்டோ?

யஉ அதேனெனில் அவர்களில் ஐசுவரியமுள்ளவர்கள் கொடுமையால் நிறைந்திருக்கிறார்கள்; அவர்களுடைய குடியானவர்கள் பொய் பேசுகிறார்கள்; அவர்கள் வாயிலிருக்கிற அவர்களுடைய நாக்கு கபட்டு நாக்கு.

யங ¶ ஆகையால் நாமும் உன்னை அடிக்கிறதினாலும் உன் பாவங்களின்நிமித்தம் பாழாக்குகிறதினாலும் உன்னைப் பலட்சயமாக்குவோம்.

யச நீ புசித்தும் திருத்தியடையாதிருப்பாய்; அது உன் உள்ளத்திலே உன்னை ஒடுக்கும்; நீ பதனம்பண்ணியும் தப்புவிப்பதில்லை; நீ தப்புவிப்பதையோ பட்டையத்துக்கு ஒப்புக்கொடுப்போம்.

யரு *நீ விதைத்தும் அறுக்காதே போவாய்; நீ ஒலிவப்பழங்களையும் திராட்சப்பழங்களையும் ஆலையாடியும் எண்ணெய் பூசிக்கொள்வதுயில்லை; இரசம் குடிப்பதுயில்லை. *ரு மோ. உஅ. ஙஅ. ஆகா. க. சா.

யசா ¶ ஏனென்றால் நாம் உன்னைப் பாழாகவும் உன் குடிகளை இசல்போடப்படுத்தலாகவும் வைக்கத்தக்கதாக, *உம்ரீயினுடைய கட்டளைகளும் ஆகாப் வீட்டாருடைய எல்லாச் செய்கையும் கைக்கொள்ளப்பட்டுவருகிறது; அவர்களுடைய ஆலோசனைகளிலே நடக்கிறீர்கள்; ஆகையால் நமது சனத்தின் நிந்தையைச் சுமப்பீர்கள் *க இரா. யசா. உரு—ஙங.

## எ. அதிகாரம்.

எனக்கு ஐயோ! ஏனெனில் வசந்தகாலத்துக் கனிகள் சேர்க்கப்பட்டதற்கும் திராட்சப்பழங்கள் அறுக்கப்பட்டதற்கும் பிற்பாடு வருகிறவனைப்போல இருக்கிறேன்; புசிக்கிறதற்கு ஒரு திராட்சக்குலையும் என் ஆத்துமம் இச்சித்தமுதல் அறுப்பின் கனியும் இல்லை.

உ *தேசத்தில் சன்மார்க்கர் அற்றுப்போனார்கள்; மனுஷரில் செம்மையானவன் இல்லை; அவர்களெல்லாரும் இரத்தஞ்சிந்தப் பதிவிருக்கிறார்கள்; அவனவன் தன் சகோதரனை வலையிலே பிடிக்க வேட்டையாடுகிறான். *சங். யஉ. உ.

ங நன்றாய்ப் பொல்லாப்புச் செய்ய இரண்டு கைகளும் கூடும்; பிரபு, தாவென்று கேட்கிறான்; நியாயாதிபதி கைக்கூலிக்கு நியாயந்தீர்க்கிறான்; பெரியவன், தன் ஆத்துமத்தின் தீவினையைச் சொல்லுகிறான்; பிறகு அதைப் பிரித்துப்போடுகிறார்கள்.

ச அவர்களில் நல்லவன் முட்செடிக் கொத்தவனும், செம்மையானவன் நெரிஞ்சிலைப்பார்க்கக் கேடுள்ளவனுமாயிருக்கிறான்; உன் காவற்காரர் அறிவித்த உன்னுடைய விசாரிப்பின் நாள் வருகிறது; இனி அவர்களுடைய கலக்கம் வரும்.

ரு சிநேகிதனை விசுவாசியாதேயுங்கள்; வழிகாட்டியை நம்பாதேயுங்கள்; உன் மடியிலே படுத்துக்கொண்டிருக்கிறவளுக்கு முன்பாக உன் வாயைத் திறக்க எச்சரிக்கையாயிரு.

சா ஏனெனில் *மகன் தகப்பனை இனப்படுத்துகிறான்; மகள் தன் தாய்க்கு விரோதமாகவும், மருமகள் தன் மாமிக்கு விரோதமாகவும் எழும்புகிறார்கள்; மனுஷனுடைய சத்துருக்கள் அவன் வீட்டு மனுஷர் தானே. *மத். யஉக: ஙரு. ஙசா. லூக். யஉ. ருங.

எ ¶ *நானோவென்றால் கர்த்தரை நோக்கிக்கொண்டு என் இரட்சிப்பின் பராபரனுக்குக் காத்திருப்பேன்; என் பராபரன் என்னைக்கேட்பார். *சங். ௪௨. ௯.

அ ¶ என் பகைஞியே, என்நிமித்தம் சந்தோஷப்படாயாக; *நான் விழுந்திருந்தால் எழுந்திருப்பேன்; நான் இருளிலே உளுக்காந்தால், †கர்த்தர் எனக்கு வெளிச்சமாயிருப்பார். *வாக். ௨௪. ௰௬. †சங். ௨௭. ௧.

௯ கர்த்தர் என் வழக்கை வழக்காடி என் நியாயத்தை விசாரிக்குமட்டும் அவருடைய சினத்தைச் சுமப்பேன்; ஏனெனில் அவருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன்; என்னை வெளிச்சத்திலே புறப்படப்பண்ணுவார்; அவருடைய நீதியை மகிழ்ச்சியாய்ப் பார்ப்பேன்.

௰ உன் பராபரனாகிய கர்த்தர்எங்கேஎன்று என்னோடே சொல்லுகிற என் பகைஞி அதைப் பார்க்கும்போது வெட்கம் அவளை மூடும்; என் கண்கள் அவளில் நீதியைச் சரிக்கட்டுதலைக் காணும்; இனி வீதிகளின் சேற்றைப்போல மிதியுண்டுபோவாள்.

௰௧ ¶ உன் மதில்களை எடுப்பிக்கும் நாள் வருகிறது; அந்நாளிலே பிரமாணம் தூரத்துக்குப் பரவிப்போம்.

௰௨ ¶ அந்நாளிலே அசூரியாதுவக்கி எகிப்தின் பட்டணங்கள்மட்டுக்கும், எகிப்துதுவக்கி நதிமட்டுக்கும், ஒரு சமுத்திரம்துவக்கி மற்றச் சமுத்திரமட்டுக்கும், ஒரு பர்வதந்துவக்கி மற்றப் பர்வதமட்டுக்கும் இருக்கிற புறங்களிலிருந்து சனங்கள் உன்னண்டைக்கு வருவார்கள்.

௰௩ ஏனெனில் தன் குடிகளின்நிமித்தமும் அவர்கள் கிரியைகளுடைய கனிகளின்நிமித்தமும் தேசம் பாழாயிருந்தது.

௰௪ ¶ கர்மேலின் நடுவிலே தனித்து வனவாசமாயிருக்கிற உமது சுதந்தரமான மந்தையாகிய உம்முடைய சனத்தை உமது கோலினாலே மேயும்; பூர்வநாள்களைப்போலே அவர்கள் பாசானிலும் கீலேயாத்திலும் மேய்வார்களாக.

௰௫ ¶ நீ எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாள்களைப்போலே உன்னை அதிசயங்களைக் காணப்பண்ணுவோம்.

௰௬ புறச்சாதிகள் கண்டு தங்களுடைய எல்லாப் பராக்கிரமத்தையும் தொட்டு வெட்கப்படுவார்கள்; கையை வாயின்மேலே போட்டுக்கொள்ளுவார்கள்; அவர்கள் காதுகள் செவிடாய்ப்போகும்.

௰௭ பாம்பைப்போலே *மண்ணை நக்குவார்கள்; பூமியின் ஊர்வனவற்றைப்போலே தங்கள் அடைப்புகளிலிருந்து நடுநடுங்கிப் புறப்படுவார்கள்; திகிலோடே எங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குச் சேர்ந்து, உனக்குப் பயப்படுவார்கள். *சங். ௭௨. ௯.

௰௮ ¶ *அக்கிரமத்தை நீக்கிப்போட்டு, தமது சுதந்தரத்தில் மீதியானவர்களுக்கு மீறுதலை மன்னித்துவிடுகிற தேவரீரைப்போல ஒத்த தேவன் யார்? என்றென்றைக்கும் கோபத்தை வையார்; ஏனெனில் அவர் கிருபைசெய்ய விரும்புகிறார். *௨ மோ. ௩௪. ௬, ௭. சங். ௱௰௩. ௮-௰௩.

௰௯ திரும்ப எங்கள்பேரில் இரங்குவார்; எங்கள் அக்கிரமங்களை அடக்கி, எங்கள் பாவங்களை எல்லாம் சமுத்திரத்தின் ஆழங்களில் போட்டுவிடுவார்.

௨௰ தேவரீர் பூருவநாள்கள் முதற்கொண்டு *எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட சத்தியத்தை யாக்கோபுக்கும், கிருபையை ஆபிரகாமுக்கும் கட்டளையிடுவீர். *லூக். ௧. ௭௪, ௭௫.

# நாகூமின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

நினிவேயின் சுமை; எல்கோசானாகிய நாகூமின் தரிசனப் புஸ்தகம்.

உ ¶ கர்த்தர் *எரிச்சலுள்ளவரும் நீதியைச் சரிக்கட்டுகிறவருமான தேவன்; கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுகிறவரும் உக்கிரசாலியுமானவர்; கர்த்தர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறவர்; அவர் தம்முடைய பகைஞர்மேல் கோபம் வைக்கிறவர். *உ மோ. உ௰. ரு.

௩ கர்த்தர் நீடியசாந்தமுள்ளவரும் பலம் மிகுந்தவருமாயிருக்கிறார்; அவர்களை ஆக்கினையில்லாமல் நீங்கலாக விடார்; கர்த்தருடைய வழி பெருங்காற்றிலும் கொந்தளிப்பிலும் உள்ளது; மேகங்கள் அவருடைய பாதத்தூளாயிருக்கிறது.

௪ அவர் சமுத்திரத்தை அதட்டி, அதை வற்றிப்போகப்பண்ணிச் சகல ஆறுகளையும் வறட்சியாக்குகிறவர்; பாசானும் கர்மேலும் வதங்கி, லீபனோனின் செழிப்பு வாடிப்போகும்.

௫ அவரால் பர்வதங்கள் அதிர்ந்து மேடுகள் கரைந்துபோகும்; அவர் சன்னிதியால் பூமி எடுபடும்; பூச்சக்கரமும் அதில் குடியிருக்கிற அனைவரும்தானே.

௬ *அவர் சினத்துக்கு முன்பாக நிற்பவன் யாவன்? அவர் கோபத்தின் உக்கிரத்திலே தரிப்பவன் யாவன்? அவருடைய எரிச்சல் அக்கினியைப்போலப் பாய்கிறது; கன்மலைகள் அவராலே இடியும்.
*வெளி. ௬. ௰௭.

௭ ¶ கர்த்தர் நல்லவரும் இக்கட்டுநாளிலே அரணான கோட்டையுமாயிருந்து, தம்மை நம்புகிறவர்களை *அறிந்திருக்கிறார்.
*சங். க. ௬. உ தீமோ. உ. ௰௯.

௮ அதின் தானத்தைப் புரண்டுபோகிற பிரளயத்தினாலே சர்வசங்காரம் பண்ணுவார்; இருள் அவர் சத்துருக்களைப் பின்தொடரும்.

௯ நீங்கள் கர்த்தருக்கு விரோதமாகச் செய்ய நினைக்கிறதென்ன? அவர் சர்வசங்காரம்பண்ணுவார்; இடுக்கம் மறுபடியும் நிலைகொள்ளாது.

௰ ஏனெனில் அவர்கள் சன்னபின்னலாயிருக்கிற முள்ச்செடிகளுக்குத்தானே ஒப்பாயிருக்கையிலும், தங்கள் லொட்டிக்குடியின்படியே வெறித்திருக்கையிலும், முழுதும் காய்ந்துபோன செத்தையைப்போலே வெந்துபோவார்கள்.

௰௧ கர்த்தருக்கு விரோதமாகப் பொல்லாத நினைவாயிருக்கிற பேலியாளின் ஆலோசனைக்காரன் உன்னிலிருந்து புறப்பட்டான்.

௰௨ கர்த்தர் சொல்லுகிறதாவது: அவர்கள் நிறைவாகரரும் அநேகருமாயிருந்தாலும் ஒழிந்துபோகத்தக்கதாய் அறுப்புண்டுபோவார்கள்; உன்னை நாம் சிறுமைப்படுத்தினோம்; இனி உன்னைச் சிறுமைப்படுத்தாதிருப்போம்.

௰௩ இப்போதும் நாம் உன்மேல் இருக்கிற அவன் நுகத்தடியை உடைத்துப்போட்டு, உன் கட்டுகளை அறுப்போம்.

௰௪ ¶ ஆனால் உனக்கு விரோதமாகக் கர்த்தர் இட்ட கட்டளையாவது: இனி உன்பேருக்கு வித்து வைக்கப்படுவதில்லை; உன்

தேவர்களின் வீட்டில் இருக்கிற சுரூபத்தையும் வார்க்கப்பட்ட விக்கிரகத்தையும் நாம் நிர்மூலம்பண்ணுவோம்; நீ கனவீனனானபோது அதை உனக்குக் கல்லறையாக்குவோம்.

## உ. அதிகாரம்.

இதோ, *சமாதானத்தைக் கூறுகிற சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின்மேல் வருகிறது; யூதாவே, உன் பண்டிகைகளை ஆசரி; †உன் பொருத்தனைகளைச் செலுத்து; ஏனெனில் பேலியாள் இனி அப்புறம் உன்மேல் கடந்து வருவதில்லை; அவன் முழுதும் சங்கரிக்கப்பட்டான். *ஏசா. ௫௨. ௭. †சங். ௫௰. ௰௪.

௨ ¶ தெறிக்கடிக்கிறவன் உன் முகத்துக்கு முன்பாக ஏறிவருகிறான்; கொத்தளத்தைக் காரு; வழியை நோக்கிக்கொண்டிரு; அரைகளைக் கெட்டியாய்க் கட்டிக்கொள்; உன் பெலனை மிகவும் திடப்படுத்து.

௩ ஏனெனில் கர்த்தர் யாக்கோபின் முக்கியத்தைத் திரும்பிவரப்பண்ணுவார்; இஸ்ரவேலின் முக்கியத்தையும் அப்படித்தானே; அதேனென்றால் வெறுமையாக்குகிறவர்கள் அவர்களை வெறுமையாக்கி அவர்களுடைய திராட்சக்கொடிகளைக் கெடுத்துப்போட்டார்கள்.

௪ அவனுடைய பராக்கிரமசாலிகளின் கேடயங்கள் சிவப்பாயிருக்கும்; அவன் இராணுவ மனுஷர் இரத்தாம்பரம்தரித்துக்கொண்டிருக்கிறார்கள்; அவன் தன்னை ஆயத்தம்பண்ணும் நாளிலே இரதங்கள் மின்னிக்கொண்டிருக்கிற அரிவாள்களின் முஸ்தீதாயிருக்கும்; ஈட்டிகள் குலுங்கும்.

௫ இரதங்கள் வீதிகளில் கடகடவென்றோடி, தெருக்களில் திரியும்; அவைகள் தீவட்டிகளின் உருவாயிருந்து, மின்னல்களைப்போலே ஓடும்.

௬ ¶ தன்னுடைய பிரஸ்தாப மனுஷரை நினைவுகூருவான்; இவர்கள் தங்கள் நடைகளில் இடறி, அலங்கத்துக்குத் தீவிரித்து ஓடுவார்கள்; மறைவிடம் செப்பனிடப்படும்.

௭ ஆறுகளின் வாசல்கள் திறக்கப்படும்; அரமனை வெந்து கரையும்.

௮ அவள் சிறையிருப்பாய்க் கொண்டுபோகப்படத் தீர்மானமாயிற்று; அவளுடைய வேலைக்காரிகள் புறாக்களைப்போலச் சத்தமிட்டு, தங்கள் மார்பிலே அடித்துக்கொண்டு கூடப்போவார்கள்.

௯ நினிவே உண்டான நாள்துவக்கி, தண்ணீர்க்குளம்போலே இருந்தது; இப்போதோவெனில் அவர்கள் ஓடிப்போகிறார்கள்; நில்லுங்கள் நில்லுங்கள் என்றாலும், திரும்பிப்பார்க்கிறவன் இல்லை.

௰ ¶ வெள்ளியைக் கொள்ளையிடுங்கள்; பொன்னைக் கொள்ளையிடுங்கள்; ஏனென்றால் சம்பத்துக்கு முடிவில்லை; இச்சிக்கப்படத்தக்க சகல உடைமைகளின் வெகுத்துவம் இருக்கிறது.

௰௧ வெறுமையும் வெளியும் ஆகாசமயமும் ஆவாள்; இருதயம் உருகும்; முழங்கால்கள் தத்தளிக்கும்; எல்லா இடுப்புகளிலும் மகா வேதனை உண்டாயிருக்கும்; எல்லாருடைய முகங்களின் உருவும் சுருங்கும்.

௰௨ ¶ கிழச்சிங்கமாகிய சிங்கமும் சிங்கக்குட்டிகளும் பயப்படுத்துவாரில்லாமல் நடமாடித் தங்கின சிங்கத்தாபரமும் இளஞ்சிங்கங்களுக்கு இருந்த மேய்விடமும் எங்கே?

௰௩ சிங்கம் தன் குட்டிகளுக்குத் தேவையானதைப் பீறி, தன் பெண்சிங்கங்களுக்கு வேண்டியதைத் தொண்டையைப் பிடித்துக் கொன்றுபோட்டு, இரைகளினாலே தன் கெபிகளையும் பீறிப்போட்டவைகளினாலே தன் தாபரங்களையும் நிரப்பிற்று.

௰௪ ¶ இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து, இரதங்களைப் புகையெழும்ப எரித்துப்போடுவோம்; பட்டயம் உன்னு

டைய இளஞ்சிங்கங்களைப் பட்சிக்கும்; நீ இரைக்குப்பாய்கிற வேலையைத் தேசத்தில் அற்றுப்போகப்பண்ணுவோம்; உன் தானாபதிகளின் சத்தம் இனிக் கேட்கப்படுவதில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩. அதிகாரம்.

இரத்தப்பழிகளின் பட்டணத்திற்கு ஐயோ! அது முழுதும் பொய்யினாலும் பறிக்குதலினாலும் நிறைந்திருக்கிறது; பீறிப்போடுதல் வாங்காமல் நடக்கிறது.

௨ சவுக்குகளின் இரைச்சலும், உருளைகள் அதிருகிறதும், குதிரைகள் தரையைத் தட்டுகிறதும், இரதங்கள் கடகடவென்றோடுகிறதுமான இரைச்சலும்,

௩ இராவுத்தர் ஏறிவருகிற குதிரைகளும், துலங்கிய பட்டையங்களும், மின்னுகிற ஈட்டிகளும், வெட்டுண்டவர்களின் திரளும், பிரேதங்களின் ஏராளமும் உண்டாகும்; பிணங்களுக்குத் தொகையில்லை; அவர்களுடைய பிணங்களில் இடறுவார்கள்.

௪ ¶ *தன் வேசித்தனங்களினாலே சாதிகளையும், தன் சூனியங்களினாலே வம்சங்களையும் விற்கிற மகா சூனியக்காரியாயிருக்கிற உருபவதியான வேசியினுடைய திரளான வேசித்தனங்களின் நிமித்தமாகத்தானே.

*வெளி. ௰௭. ௧, ௨.

௫ இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து உன் வஸ்திரத்து ஓரங்களை உன் முகமட்டும் தூக்கியெடுத்து, சாதிகளுக்கு உன் நிருவாணத்தையும் இராச்சியங்களுக்கு உன் அபிமானத்தையும் தெரியப்பண்ணி,

௬ உன்மேல் சீயென்னப்படத்தக்கவைகளை எறிந்து, உன்னை இனப்படுத்தி, உன்னை வேடிக்கையாக்கிப்போடுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௭ அப்போது சம்பவிப்பதேதெனில், உன்னைக் காண்கிறவனெல்லாம் உன்னை விட்டோடிப்போய், நினிவே பாழ்க்கடிக்கப்பட்டதென்றும், அதற்காகத் துக்கங்கொண்டாடுபவன் யாவன், ஆறுதல் சொல்லுகிறவர்களை உனக்கு எங்கே தேடுவேனென்றும் சொல்லுவான்.

௮ ¶ நதிகளுக்குள்ளே குடியேறியிருந்த நோ,அம்மோனைப்பார்க்கிலும் நீ நல்லதோ? அதைச் சுற்றிலும் தண்ணீர் இருந்தது; சமுத்திரம் அதின் அரணிப்பும் சமுத்திரக்கால் அதின் மதிலுமாயிருந்தது.

௯ எத்தியோப்பியாவும் எகிப்தும் தொகையில்லாத சனங்களால் அதற்குப் பெலனாக இருந்தது; பூத்தும் லூபீமும் அதற்குச் சகாயமாயிருந்தது.

௰ அப்படிக்கொத்ததும் குடிவிலக்கப்பட்டுச் சிறையிருப்பிலே போயிற்று; அதின் குழந்தைகள் எல்லா வீதிகளின் முகனைகளிலும் சதைத்துப்போடப்பட்டது; அதில் கனமுள்ளவர்கள்பேரிலே சீட்டு போட்டார்கள்; அதில் பெரியவர்கள் சங்கிலிகளால் கட்டப்பட்டார்கள்.

௰௧ ¶ நீயும் மயக்கமாகி ஒளித்துக்கொள்ளுவாய்; நீயும் உன் சத்துருவுக்குத் தப்ப அரணான கோட்டையைத் தேடுவாய்.

௰௨ உன் அரண்களெல்லாம் முதல் கந்தாயத்துப் பழங்களுள்ள அத்திமரங்களைப் போலே இருக்கும்; அவைகள் குலுக்கப்பட்டால் தின்கிறவன் வாயிலே விழும்.

௰௩ இதோ, உன் நடுவில் இருக்கிற சனம் பெண்சாதிகள்; உன் தேசத்தின் வாசல்கள் உன் சத்துருவுக்குத் திறக்கவே திறவுண்டுபோகும்; அக்கினி உன் தாழ்ப்பாள்களைப் பட்சிக்கும்.

௰௪ ¶ உனக்கு முற்றிக்கைக்குத் தண்ணீர் மொண்டுவை; உன் அரண்களைப் பலப்படுத்து; சேற்றிலே போய்க் களிமண்ணை மிதி; சூளையைக் கெட்டிப்படுத்து.

௰௫ அங்கே அக்கினி உன்னைப் பட்சிக்கும்; பட்டையம் உன்னைச் சங்கரிக்கும்; அது பச்சைக்கிளிகளைப்போல உன்னைப் பட்சித்துப்போடும்; உன்னை நீ பச்சைக்கி

ளிகளத்தனையாக்கிக்கொள்; உன்னை வெட்டுக்கிளிகளத்தனையாக்கிக்கொள்.

௰௬ உன் வர்த்தகரை வானத்து நட்சத்திரங்களிலும் அதிகமாக்கினாய்; இந்தப் பச்சைக்கிளிகள் பரவிப் பறந்துபோகும்.

௰௭ உன் மகுடவர்த்தனர் வெட்டுக்கிளிகளுக்கும், உன் தளகர்த்தர் குளிர்நாளில் வேலிகளில் பாளயம் இறங்குகிற பெருங்கிளிகளுக்கும் சமானமாயிருக்கிறார்கள்; சூரியன் உதித்தபிற்பாடு அவைகள் போகிறது; பிறகு அவைகள் இருந்த அவைகளுடைய இடம் இன்னதென்று தெரியாது.

௰௮ அசூரியாவின் இராசாவே, உன்னுடைய மேய்ப்பர் உறங்குவார்கள்; உன்னுடைய பிரபலிய மனுஷர் படுத்திருப்பார்கள்; உன் சனம் பர்வதங்களின்மேல் சிதறிப்போகும்; அதைக் கூட்டிக்கொள்பவன் இல்லை.

௰௯ உன் நொறுங்குதலுக்கு ஆற்றுதல் இல்லை; உன் காயம் கேடாயிருக்கிறது; உன் செய்தியைக் கேட்கப்போகிற யாவரும் உன்பேரில் கைகொட்டுவார்கள்; ஏனெனில் யார்பேரிலே உன் பொல்லாப்பு எந்நேரமும் பாயாதேபோயிற்று?

# ஆபகூக்கின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

ஆபகூக்கென்ற தீர்க்கதரிசி தரிசனமாய்க் கண்ட சுமை.

௨ கர்த்தாவே, *எந்தமட்டும் நீர் கேளாமலிருக்க நான் கூப்பிட்டு, நீர் இரட்சிக்காமலிருக்க நான் கொடுமையினிமித்தம் உம்மைநோக்கிச் சத்தமிடுவேன்?

*சங். ௰௩, ௨, ௩.

௩ நீர் என்னை அக்கிரமத்தைக் காணப்பண்ணி, தீவினையைப் பார்த்துக்கொண்டிருப்பானேன்? பாழ்க்கடிப்பும் கொடுமையும் எனக்கு எதிரே நிற்கிறது; வழக்கையும்வாதையையும் எழுப்புகிறவர்களுண்டு.

௪ ஆகையால் நியாயப்பிரமாணம் பெலன் அற்றதாகி, நியாயம் என்றென்றைக்கும் நடந்தேறாமல்போகிறது; ஏனென்றால் ஆகாதவன் நீதிமானை வளைந்துகொள்ளுகிறான்; ஆனதுகொண்டு நியாயம் தாறுமாறாய்ப் புறப்படும்.

௫ ¶ நீங்கள் புறச்சாதிகளை நோக்கிப்பார்த்து, ஆச்சரியப்பட்டுப் பிரமித்துக்கொள்ளுங்கள்; ஏனெனில் விவரிக்கப்பட்டால் நீங்கள் விசுவாசியாதிருக்கும் ஒரு கிரியையை உங்கள் நாள்களில் நடப்பிப்போம்.

௬ அதேனென்றால் இதோ, நாம் கல்தேயரென்ற கடிசும் தீவிரமுமான சாதியை எழுப்புவோம்; அது தன்னுடையதல்லாத வாசஸ்தலங்களைக் கட்டிக்கொள்ளத் தேசத்தின் விசாலங்களில் நடந்துவரும்.

௭ அது கெடியும் பயங்கரமுமானது, அதின் நியாயமும் அதின் மேன்மையும் அதினாலேதானே புறப்படும்.

௮ அதின் குதிரைகள் சிவிங்கிகளைப்பார்க்க வேகமும், அஸ்தமானவேளையில் திரிகிற ஓநாய்களைப்பார்க்கச் சுறுக்குமாயிருக்கிறது; அதின் குதிரைக்காரர் பரவுவார்கள்; அதின் குதிரைக்காரர் தூரத்திலிருந்து வருவார்கள்; *இரைக்குத் தீவிரிக்கிற கழுகுகளைப்போலப் பறந்துவருவார்கள். *மத். ௨௪. ௨௮.

௯ அவர்கள் எல்லாரும் கொடுமைசெய்ய வருவார்கள்; கவ்வுகிற அவர்களுடைய முகங்கள் கிழக்கே நோக்குகிறது; அவர்கள் மணலத்தனை சனங்களைச் சிறைபிடித்

துச் சேர்ப்பார்கள்.

௰ அவன் இராசாக்களை ஆகடியம்பண்ணுவான், தலைவர்கள் அவனுக்கு நகைப்பாயிருப்பார்கள்; அவன் அரண்களை எல்லாம் நகைத்து மண்மேடுகளைப்போட்டு அவைகளைப் பிடிப்பான்.

௰௧ அப்போது அவனுடைய ஆவி மாறுகிறதினாலே அவன் மிஞ்சிப்போய் இந்தத் தன்னுடைய பெலன் தன் தேவனாலே உண்டானதென்று சொல்லிக் குற்றவாளியாவான்.

௰௨ ¶ தேவரீர் பூருவகாலந்துவக்கி என் பராபரனாகிய கர்த்தருமாயிருக்கிறதில்லையோ? *எங்களைச் சாக ஒட்டாதேயும்; கர்த்தாவே, நியாயத்தீர்ப்புக்காக அவனை வைத்தீர்; கன்மலையே, தண்டிப்புக்காக அவனை நிறுத்தினீர். *எரே. ௰. ௨௪.

௰௩ பொல்லாப்பைப் பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே, தீவினையை நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே; *தேவரீர் துரோகிகளை நோக்கிக்கொண்டிருக்கிறதேது? தன்னைப்பார்க்கிலும் நீதியுள்ளவனை ஆகாதவன் விழுங்குகையில் தேவரீர் மௌனமாயிருந்து, *யோபு. ௨௧. ௭. மு. எரே. ௰௨. ௧.

௰௪ ¶ மனுஷரைச் சமுத்திரத்து மச்சங்களுக்கும் ஆளுகிறவன் இல்லாத ஊர்வனவற்றிற்கும் சமானமாக்குகிறதேது? ,

௰௫ அவர்களை எல்லாம் தூண்டிலால் இழுத்துக்கொள்ளுகிறான்; அவர்களைத் தன் வலையினால் பிடித்து, தன் பறியிலே சேர்த்துக்கொள்ளுகிறான்; அதினாலே சந்தோஷப்பட்டுக் களிகூருகிறான்.

௰௬ ஆகையால் அவைகளாலே தன் பங்கு கொழுத்ததும் தன் போசனம் நிணத்ததுமாய்ப்போயிற்று என்று அவன் தன் வலைக்குப் பலியிட்டுத் தன் பறிக்குத் தூபங்காட்டுகிறான்.

௰௭ இதற்காக அவன் தன் வலையை இழுத்துக் கொட்டிக்கொண்டிருந்து, சாதிகளை எப்போதும் கொன்றுபோட இரங்காதவனாயிருக்கவேண்டுமோ?

## ௨. அதிகாரம்.

நான் என் காவலிலே தரித்து, அரணிப்பிலே நிலைகொண்டிருந்து, அவர் எனக்கு என்னசொல்லுவாரென்றும், என் அங்கலாய்ப்புக்கு நான் என்ன உத்தரவைக் கொண்டுபோவேனென்றும் பார்க்கிறதற்காக *கவனிப்பேன் என்றேன்.

*சங். ௱௨௧. ௧, ௨.

௨ ¶ அப்பொழுது கர்த்தர் எனக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது: நீ தரிசனத்தை எழுதி, அதைக் கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிக்குப் பலகைகளிலே தீர்க்கமாக வரை.

௩ அதேனெனில் குறித்தகாலத்துக்குத் தரிசனம் இன்னம் வைத்திருக்கிறது; முடிவிலே உத்தரவு விளங்கப்பண்ணுவார்; அவர் பொய்சொல்லார்; அவர் தாமதித்தால் *அவருக்குக் காத்திரு; ஏனெனில் †வரவே வருவார், அவர் பிந்தியிருப்பதில்லை.

*சங். ௨௭. ௰௪: ௪௨. ௫. †எபி. ௰. ௩௭.

௪ ¶ *இதோ, அசட்டையாயிருக்கிறானே, அவனுடைய ஆத்துமம் அவனுக்குள் செம்மையானதல்ல; ஏனெனில் தன் விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.

*உரோ. ௧. ௰௭. கலா. ௩. ௰௧. எபி. ௰. ௩௮.

௫ அந்த மதுபானனும் அமர்ந்திருக்கமாட்டாத அகந்தையுள்ள புருஷனுமோவென்றால், எத்தனை துரோகியாயிருந்தாலும் அவன் தன் ஆத்துமத்தைப் பாதாளத்தைப் போல விரிவாக்கித் திருத்தியாகாமல், மரணத்துக்குச் சமானமாய்ச் சகல சாதிகளையும் தன்வசமாகச் சேர்த்து, சகல சனசதளங்களையும் தன்னிடமாகக் கூட்டிக்கொண்டாலும்,

௬ இவர்கள் எல்லாரும் அவன்பேரிலே ஒரு பழமொழியையும் அவனுக்கு உரைக்கிற புதைபொருளான சொல்லையும் உண்

டாக்கி, தன்னுடையதல்லாததைப் பெருக்கிக்கொள்ளுகிறவனுக்கு ஐயோவென்றும், அது எந்தமட்டும் நிற்குமென்றும், அவன் தன்மேல் கெட்டியான சேற்றின் பாரத்தையே சுமத்திக்கொள்ளுகிறானென்றும் சொல்லார்களோ?

௭ உன்னைக் கடிப்பவர்கள் அசுப்பிலே எழும்புவதும் உன்னை அலைக்கழிப்பவர்கள் விழிப்பதுமில்லையோ? நீ அவர்களுக்குச் சூறையாகாயோ?

௮ நீ அநேகம் சாதிகளைக் கொள்ளையிட்டபடியினாலே சனசதளங்களில் மீதியான யாவரும் நீ சிந்தின மனுஷ இரத்தத்தின்நிமித்தமும் கொடுமையின்நிமித்தமும் உன்னைக் கொள்ளையிடுவார்கள்.

௯ ¶ தின்மையின் வல்லமைக்குத் தப்புவித்துக்கொள்ளத் தன் கூட்டை உயரத்திலே வைக்கும்படிக்கு, தன் வீட்டுக்குப் பொல்லாத ஆதாயத்தைத் தேடுகிறவனுக்கு ஐயோ!

௰ உன் வீட்டுக்கு வெட்கமுண்டாக ஆலோசனைபண்ணினாய்; அநேக சனசதளங்களை வெட்டிப்போட்டதினாலே உன் ஆத்துமத்துக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தாய்.

௰௧ ஏனெனில் கல்லு சுவரிலிருந்து கூப்பிடும்; உத்திரம் மச்சிலிருந்து கூவும்.

௰௨ ¶ *இரத்தப்பழிகளோடே பட்டணத்தைக் கட்டி, அநியாயத்தோடே நகரியைப் பலப்படுத்துகிறவனுக்கு ஐயோ!
*எரே. ௨௨. ௰௩.

௰௩ இதோ, சனங்கள் அக்கினிக்கு இரையாக உழைத்து, சனசதளங்கள் விருதாவாக இளைக்கிறது கர்த்தருடைய செயல் அல்லவோ?

௰௪ ஏனெனில் *தண்ணீர்கள் சமுத்திரத்தை மூடுமாப்போலே பூமி கர்த்தருடைய மகிமையின் அறிவினாலே நிரப்பப்பட்டுப்போகும். *ஏசா. ௰௧. ௯.

௰௫ ¶ தன் தோழருக்குக் குடிக்கக்கொடுத்துத் தன் துருத்தியை அவர்களண்டையிலே வைத்து, அவர்களுடைய நிருவாணங்களைப் பார்க்கும்படிக்கு அவர்களை வெறியுமாக்குகிறவனுக்கு ஐயோ!

௰௬ கனத்துக்குப்பதிலாகக் கனவீனத்தால் நிரூத்தியாவாய்; *நீயும் குடித்துச் சுன்னத்தில்லாதவன் என்று விளங்கு; கர்த்தருடைய வலதுகையில் இருக்கிற பாத்திரம் உன்னண்டைக்குத் திரும்பும்; இலச்சையான வாந்திபண்ணுதல் உன் மகிமையின் மேலே விழும். *சங். ௭௫. ௯. எரே. ௨௫. ௰௫, ௰௬.

௰௭ ஏனெனில் லீபனோனுக்குச் செய்த கொடுமை உன்னை மூடும்; சிந்தின மனுஷஇரத்தத்தின்நிமித்தமும் தேசத்துக்கும் பட்டணத்திற்கும் அதின் குடிகள் எல்லாருக்கும் செய்த கொடுமையின்நிமித்தமும் அந்த மிருகங்களை அவைகள் செய்த பாழ்க்கடிப்புத்தானே கலங்கப்பண்ணும்.

௰௮ ¶ சித்திரக்காரனுக்கு அவன் செப்பனிட்ட சுரூபமும், ஊமையான தேவர்களை உண்டுபண்ணித் தான் உருவாக்கின சுரூபத்தை நம்பினவனுக்கு அந்த வார்க்கப்பட்டதும் பொய்ப்போதகம்பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்னத்துக்கு உதவும்?

௰௯ ¶ மரத்தைப்பார்த்து விழியென்றும், ஊமையான கல்லைப்பார்த்து எழும்பென்றும் சொல்லுகிறவனுக்கு ஐயோ! அது போதிக்குமோ? *இதோ, அது பொன்னும் வெள்ளியுமான தகடு அடித்திருக்கிறது; அதின் உள்ளத்திலே ஒரு ஆவியும் இல்லையே.
*சங். ௱௩௫. ௰௫, ௰௭.

௨௰ கர்த்தரோவென்றால் *தமது பரிசுத்ததேவாலயத்தில் இருக்கிறார்; பூமி எல்லாம் அவருக்குமுன்பாக †மௌனமாயிருக்கக்கடவது. *சங். ௰௧. ௪. †சங். ௪௬. ௰௧.

## ௩. அதிகாரம்.

*ஆபகூக் தீர்க்கதரிசியினுடைய துயரகீதமாகிய செபம்.*

௨ ¶ கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் கேட்டேன்; எனக்குப் பயமாயிற்று; கர்த்தாவே, வருஷங்களின் நடுவிலே உம்முடைய கிரியையை உயிர்ப்பியும்; வருஷங்களின் நடுவிலே அதைத் தெரியப்பண்ணும்; சினத்திலே இரக்கத்தை நினைத்துக்கொள்வீராக.

௩ ¶ பராபரன் தேமானிலும் பரிசுத்தமுள்ளவர் *பராபரன் பர்வதத்திலுமிருந்து வருவார்; சேலா; அவருடைய மகிமை வானங்களை மூடிக்கொண்டது; †அவர் புகழ்ச்சியினாலே பூமி நிறைந்தது.
*௫ மோ. ௩௩. ௨. †௨ மோ. ௰௯. ௰௬.

௪ பிரகாசம் வெளிச்சமாயிருந்தது; அவர் கையிலிருந்து இருபுறமும் எழும்புகிற சோதிகள் அவருக்கு உண்டாகி, அங்கே அவருடைய பெலன் ஒளிந்திருந்தது.

௫ அவர் முகத்துக்குமுன்பாகப் பெருவாரிக்காய்ச்சல் நடந்தது; அவர் அடிகளுக்குமுன்பாக எரிபந்தமான நோக்காடு புறப்பட்டது.

௬ அவர் நின்று தேசத்தை அளந்தார்; அவர் பார்த்துப் புறச்சாதிகளைக் கரையப்பண்ணினார்; பூருவபர்வதங்கள் சிதறவடிக்கப்பட்டது, என்றும் இருந்த மேடுகள் தாழ்ந்தது; அவருடைய நடைகள் நித்திய நடைகளானது.

௭ கூஷானின் கூடாரங்களை அக்கிரமத்தின் கீழ் அகப்பட்டிருக்கக்கண்டேன்; மீதியான் தேசத்தின் திரைகள் அசைந்தது.

௮ கர்த்தர் நதிகளின்மேல் எரிச்சலாயிருந்தாரோ? தேவரீர் உம்முடைய குதிரைகளின் மேலும் இரட்சிப்புண்டாக்குகிற உம்முடைய இரதங்களின்மேலும் ஏறிவருகிற போது, உமது கோபம் *நதிகளுக்கும் உமது சினம் †சமுத்திரத்திற்கும் விரோதமாயிருந்ததோ? *௨ மோ. ௭. ௨௰. †௨ மோ. ௰௪. ௨௯. ழி.

௯ கோத்திரங்களுக்கு இடப்பட்ட ஆணைகளுடைய வார்த்தையின்படியே உம்முடைய வில் நாணேற்றப்பட்டதாக விழித்தது; சேலா; *ஆறுகள் உண்டாகப் பூமியைப் பிளந்தீர். *௨ மோ. ௰௭. ௬.

௰ பர்வதங்கள் உம்மைக் கண்டு நிலைகுலைந்தது; *தண்ணீர்களின் வெள்ளம் கடந்துபோயிற்று; ஆழம் தன் இரைச்சலைக் கேட்கப்பண்ணி, உயரம் தன் கைகளை எடுத்தது. *யோசு. ௩. ௰௩.

௰௧ *சந்திரசூரியன் தன் மண்டலத்தில் நின்றது; உமது அம்புகளின் வெளிச்சத்தோடும், உமது இட்டியினுடைய மின்னலின் பிரகாசத்தோடும் நடந்துவந்தார்கள். *யோசு. ௰. ௰௩.

௰௨ சினத்தோடே தேசத்தில் நடந்தேறினீர்; கோபத்தோடே புறச்சாதிகளைப் போரடித்தீர்.

௰௩ உமது சனத்தின் இரட்சிப்புக்காகவும் நீர் அபிஷேகம்பண்ணுவித்தவனோடே இரட்சிப்புக்காகவுமே புறப்பட்டீர்; கழுத்தளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி, ஆகாதவனுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்டினீர்; சேலா.

௰௪ அவனுடைய செங்கோல்களாலே இவனுடைய கிராமத்தாரின் தலையை உருவக்குத்தினீர்; என்னைச் சிதறவடிப்பதற்குக் கொந்தளிப்பாய் வந்தார்கள்; சிறுமையானவனை ஒளிப்பிடத்திலே பட்சிப்பது அவர்களுக்குக் களிகூருதலாயிருக்கும்.

௰௫ திரளான தண்ணீர்கள் குவியலாகிய சமுத்திரத்துக்குள் உமது குதிரைகளோடே ஏகிப்போனீர்.

௰௬ ¶ நான் கேட்கிற செய்தியினாலேயோ என் வயிறு அதிர்ந்தது; அந்தச் சத்தத்துக்கு என் உதடுகள் நடுங்கின; மக்கல் என் எலும்புகளில் உண்டாயிற்று; என் நிலையிலே அதிர்ந்தேன்; எங்களைப் பாழாக்கும் சனத்தண்டைக்குப்போயேறும் இக்கட்டு நாளிலே எப்படி இளைப்பாறுவேன்?

௰௭ ¶ ஏனெனில் அத்திமரம் துளிர்விடாமற்போனாலும், திராட்சச்செடிகளில்

பலன் உண்டாகாமற்போனாலும், ஒலிவ மரத்தில் செய்தவேலை பிசகிப்போனாலும், வயல்கள் ஆகாரங்கொடாதிருந்தாலும், தொழுவத்தில் ஆடுகள் முதலற்றுப்போனாலும், மாட்டுக்கொட்டிலிலே மாடும் இல்லாதேபோனாலும்,

௰௮ *நான் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பேன்; என் இரட்சிப்பின் பராபரனுக்குள் களிகூருவேன். *ஏசா. ௬௧. ௰. பிலி. ௪. ௪.

௰௯ ஆண்டவராகிய கர்த்தர் என்னுடைய பெலன்; அவர் என் கால்களை மான்கால்களைப்போலாக்கி, என் உயரமான தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார்; என் கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டது.

# செப்பனியாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

ஆமோனின் குமாரனாகிய யோசியா என்ற யூதாவினுடைய இராசாவின் நாள்களிலே, எசேக்கியாவினுடைய குமாரனாயிருக்கிற அமரியாவுக்குக் குமாரனான கெதலியா என்றவனுடைய மகனாகிய கூஷின் குமாரன் செப்பனியாவுக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.

௨ ¶ தேசத்தில் உண்டானதை எல்லாம் வாரவே வாரிக்கொள்ளுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ மனுஷரையும் மிருகஜீவன்களையும் வாரிக்கொள்ளுவோம்; நாம் ஆகாசத்துப் பறவைகளையும், சமுத்திரத்து மச்சங்களையும், ஆகாதவர்களோடேகூட *இடறல்களையும் வாரிக்கொண்டு, தேசத்தில் உண்டான மனுஷரைச் சங்காரம்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். *மத். ௰௩. ௪௧.

௪ நாம் யூதாவின்மேலும் எருசலேமுடைய எல்லாக்குடிகளின்மேலும் நமது கையை நீட்டி, பாகாலில் மீதியாயிருக்கிறதையும், பூசாரிகளின் பேரையும், அவர்களோடேகூட ஆசாரியர்களையும்,

௫ வீடுகளின்மேல் வானத்துச் சேனையைப் பணிகிறவர்களையும், கர்த்தர்பேரிலும் ஆணையிட்டுத் தங்கள் மோளோக்பேரிலும் ஆணையிட்டுப் பணிகிறவர்களையும்,

௬ கர்த்தரைவிட்டுப் பின்வாங்குகிறவர்களையும், கர்த்தரைத் தேடாமலும் அவருக்காகக் கேட்டு விசாரியாமலும்போகிறவர்களையும், இவ்விடத்தில் இராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.

௭ ¶ கர்த்தராகிய ஆண்டவருக்கு முன்பாக மௌனமாயிருங்கள்; ஏனெனில் கர்த்தருடைய நாள் கிட்டியிருக்கிறது; அதேனென்றால் கர்த்தர் ஒரு பலியடிக்குதலை ஆயத்தம்பண்ணி, தாம் அதற்கு அழைத்தவர்களைப் பரிசுத்தம்பண்ணினார்.

௮ ¶ கர்த்தருடைய பலியின்நாளில் சம்பவிப்பதேதென்றால், நாம் பிரபுக்களையும் இராசகுமாரரையும் மறுதேசத்து உடைதரிக்கிற யாவரையும் விசாரிப்போம்.

௯ வாசல்படியைத் தாண்டி, கொடுமையினாலும் கபட்டினாலும் தங்கள் எசமான்களின் வீட்டை நிரம்பப்பண்ணுகிற யாவரையும் அந்நாளில் விசாரிப்போம்.

௰ ¶ அந்நாளிலே மீன்வாசலிலிருந்து கூக்குரலின் சத்தமும், பட்டணத்தின் இரண்டாம் வகுப்பிலிருந்து அலறுதலும், மேடுகளிலிருந்து மகா நொறுங்குதலின் இரைச்சலும் உண்டாகுமென்று கர்த்தர்

சொல்லுகிறார்.

௰௧ கிடங்கு வீதியின் குடிகளே அலறுங்கள்; ஏனெனில் வர்த்தகச்சனமெல்லாம் சங்காரமாயிற்று; காசுக்காரர் எல்லாரும் வெட்டுண்டுபோனார்கள்.

௰௨ ¶ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், நாம் எருசலேமை விளக்குகளால் சோதித்து, தங்கள் வண்டிகளின்மேல் குழம்பியிருக்கிறவர்களும், கர்த்தர் நன்மைசெய்வதும் இல்லை தின்மைசெய்வதும் இல்லை என்று தங்கள் இருதயத்தில் சொல்லுகிறவர்களுமான மனுஷரை விசாரிப்போம்.

௰௩ அவர்களுடைய ஆஸ்தி சூறையும், அவர்களுடைய வீடுகள் கொள்ளையுமாகும்; அவர்கள் *வீடுகளைக் கட்டியும், அவைகளில் குடியிருப்பதும் இல்லை; அவர்கள் திராட்சத்தோட்டங்களை நாட்டியும், அவைகளின் பழஇரசத்தைக் குடிப்பதும் இல்லை. *ஆமோ. ௫. ௰௧.

௰௪ *கர்த்தருடைய பெரியநாள் கிட்டியிருக்கிறது; அது கிட்டிச்சேர்ந்து மிகவும் தீவிரிக்கிறது; கர்த்தருடைய நாளென்ற சத்தத்துக்குப் பராக்கிரமசாலிமுதலாய் அங்கே கசப்பாய்க் கதறுவான். *யோவே. ௧. ௰௫.

௰௫ *அந்நாள் சினத்தினுடைய நாள்; அது இக்கட்டும் இடுக்கமுமுள்ள நாள்; அது கொந்தளிப்பும் பாழ்க்கடிப்புமுள்ள நாள்; அது இருளும் அந்தகாரமுமான நாள்; அது மப்பும் மந்தாரமுமான நாள். *யோவே. ௨. ௰௧. ஆமோ. ௫. ௰௮.

௰௬ அது அரணிப்பான பட்டணங்களுக்கு விரோதமாகவும், உயரமான கொத்தளங்களுக்கு விரோதமாகவும் எக்காளம் ஊதுகிறதும் ஆர்ப்பரிக்கிறதுமான நாள்.

௰௭ நாம் மனுஷரைக் குருடரைப்போல நடக்கத்தக்கதாக இறுகப்பிடிப்போம்; ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தார்கள்; அவர்கள் இரத்தம் புழுதியைப்போலவும் அவர்கள் மாம்சம் எருவைப்போலவும் இறைந்துகிடக்கும்.

௰௮ கர்த்தருடைய சினத்தின்நாளிலே *அவர்கள் வெள்ளியும் அவர்கள் பொன்னும் அவர்களைத் தப்புவிக்கமாட்டாது; அவருடைய எரிச்சலின் அக்கினியினாலே தேசமெல்லாம் அழியும்; அதேனெனில் தேசத்தின் குடிகளை எல்லாம் அசுப்பாய்த் தானேநிருமூலம்பண்ணுவார். *எசா. ௭. ௰௬.

## ௨. அதிகாரம்.

வாஞ்சையில்லாத சாதியே, கட்டளையின்படியே முடிந்துதீர, நாள் தரும்பைப்போலப் பறந்துபோகிறதற்குமுன்னும், கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் உங்கள்மேல் இறங்காததற்குமுன்னும் கர்த்தருடைய கோபநாள் உங்கள்மேல் வராததற்குமுன்னும்,

௨ *நீங்கள் உங்களை உற்றாராய்ந்து சோதியுங்கள். *௨ கொரி. ௰௩. ௫.

௩ கர்த்தருடைய நியாயத்தை நடப்பிக்கிற தேசத்திலுள்ள எல்லாச் சிறுமையானவர்களே, அவரைத் தேடுங்கள்; நீதியைத் தேடுங்கள்; மனத்தாழ்மையைத் தேடுங்கள்; அப்போது ஒருவேளை கர்த்தருடைய கோபத்தின்நாளிலே மறைக்கப்படுவீர்கள்.

௪ ¶ ஏனெனில் காத்சா கைவிடப்பட்டுப்போகும்; அஸ்கலோன் பாழாகும்; அஸ்தோத்தாரைப் பட்டப்பகலிலே பறக்கடிப்பார்கள்; எக்ரோன் வேரோடே பிடுங்கப்படும்.

௫ சமுத்திரக் கரைக்குடிகளாகிய கிரேத்தியரின் சாதிக்கு ஐயோ! *பெலிஸ்தியரின் தேசத்தாராகிய கானான்சாதியே, கர்த்தருடைய வார்த்தை உங்களுக்கு விரோதமாயிருக்கிறது; உன்னில் குடியில்லாதபடிக்கு உன்னை அழிப்போம். *எரே. ௪௭. ௧. ழ.

௬ சமுத்திரக்கரைத்தேசம்மேய்ப்பர்வெட்டின கெபிதாபரங்களும் ஆட்டுத்தொழுவங்களும் ஆகிப்போகும்.

௭ அந்தத் தேசம் யூதாவீட்டாரில் மீதியானவர்களின் வசமாகும்; அவர்கள் அவ்விடங்களில் மந்தைமேய்ப்பார்கள்; அஸ்கலோனின் வீடுகளிலே சாயங்காலத்திலே படுத்துக்கொள்வார்கள்; ஏனெனில் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அவர்களை விசாரித்து, *அவர்கள் சிறையிருப்பைத் திருப்புவார். *எரே. ௨௯. ௰௪: ௩௰. ௩, ௰௮.

௮ ¶ மோவாபின் நிந்தனையையும், அம்மோன் புத்திரர் நமது சனத்தை நிந்தித்துத் தங்கள் எல்லைக்கு மிஞ்சிப் பெருமைபண்ணின தூஷணங்களையும் கேட்டோம்.

௯ ஆகையால் மோவாப் சோதோமைப்போலும் அம்மோன் புத்திரரின் தேசம் கொமோராவைப்போலுமாகிக் காஞ்சொறிகளுக்கு விடப்பட்ட நிலமும் உப்புப்பள்ளமும் சதாகாலமட்டும் பாழுமாயிருக்கும்; நமது சனத்தில் மீந்தவர்கள் அவர்களைக் கொள்ளையிட்டு, நமது சாதியில் மீதியானவர்கள் அவர்களைச் சுதந்தரிப்பார்கள் என்கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறார்.

௰ இது அவர்கள் மேட்டிமைக்கு இடாக அவர்களுக்கு வரும்; ஏனென்றால் அவர்கள் நிந்தித்துச் சேனைகளுடைய கர்த்தரின் சனத்துக்கு விரோதமாகப் பெருமைபண்ணினார்கள்.

௰௧ கர்த்தர் அவர்கள்மேல் கெடியுள்ளவராயிருப்பார்; ஏனெனில் பூமியின் தேவர்களை எல்லாம் இளைத்துப்போகப்பண்ணுவார்; அப்போது சாதிகளுடைய சகல தீவுகளின் மனுஷரும் அவரவர் தங்கள்தங்கள் தானத்திலிருந்து அவரைப் பணிந்துகொள்ளுவார்கள்.

௰௨ ¶ எத்தியோப்பியராகிய நீங்களும் நமது பட்டையத்தால் கொலையுண்பீர்கள்.

௰௩ ¶ தமது கையை வடக்குக்கு விரோதமாக நீட்டி, அசூரை அழித்து, நினிவேயைப் பாழும் வனாந்தரத்துக்கொத்த வறட்சியான தலமும் ஆக்கிப்போடுவார்.

௰௪ அதின் நடுவில் மந்தைகளும் *சாதிசாதியான சகல சீவன்களும் படுத்துக்கொள்ளும்; அதினுடைய சிகரங்களின்மேல் நாரையும் கோட்டானும் இராத்தங்கும்; பலகணிகளில் கூவுகிற சத்தம் பிறக்கும்; வாசல்படிகளில் பாழ்க்கடிப்பு இருக்கும்; ஏனெனில் கேதுருமரங்களின் மச்சைத் திறப்பாக்கிப்போடுவார்.

*ஏசா. ௰௩. ௨௧, ௨௨: ௩௪. ௰௧-௰௫.

௰௫ சுகமாய்க் குடியிருந்து, நானே, என்னைத்தவிர வேறொருத்தியும் இல்லை என்று தன் இருதயத்தில்சொன்ன களிகூருதலான பட்டணம் இதுதானே; எப்படி அது பாழும் மிருகசீவன்களின் தாபரமுமாய்ப் போயிற்று? அதைக் கடந்துபோகிறவன் எல்லாம் இசல்போட்டுத் தன்கையை ஆட்டுவான்.

## ௩. அதிகாரம்.

இடுக்கண்செய்கிறதையும் அழுக்குமான பட்டணத்துக்கு ஐயோ!

௨ அது சத்தத்துக்குக் கேள்விகொடுக்கவில்லை; அது கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள்ளவில்லை; அது கர்த்தரை நம்பவில்லை; அது தன் பராபரனண்டைக்குச் சேரவில்லை.

௩ அதற்குள்ளே இருக்கிற *அதின் பிரபுக்கள் கர்ச்சிக்கிற சிங்கங்கள்; அதின் நியாயாதிபதிகள் சாயங்காலத்தில் புறப்படுகிறதும் விடியற்காலமட்டும் ஒரு எலும்பை மீதியாக வைக்காததுமான ஓநாய்கள்.

*எசே. ௨௨. ௨௭. மீகா. ௩. ௰௧.

௪ அதின் தீர்க்கதரிசிகள் மேலெழுச்சியும் துரோகமுமுள்ள மனுஷர்; அதின் ஆசாரியர்கள் பரிசுத்தஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி, வேதத்துக்கு அநியாயஞ்செய்தார்கள்.

௫ ¶ அதற்குள் இருக்கிற கர்த்தர் நீதியுள்

ளவர்; அவர் அநியாயஞ்செய்கிறதில்லை; அவர் குறைவில்லாமல் காலைமாறு தம்முடைய நியாயத்தை வெளிச்சத்தில் வைக்கிறார்; ஆகிலும் அநியாயக்காரன் வெட்கமறியான்.

௬ சாதிகளைச் சங்கரித்தோம்; அவர்கள் துரோகங்கள் பாழாயின; அவர்களுடைய வீதிகளை ஒருவரும் கடந்துபோகாதபடிக்குப் பாழ்க்கடித்தோம்; அவர்களுடைய பட்டணங்கள் மனுஷர் இல்லாதபடிக்கும் குடியில்லாதபடிக்கும் அவாந்தரையாயின.

௭ உன் வாசஸ்தலம் நிர்மூலமாகாதபடிக்கு நீ நமக்குப் பயந்து, கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள்ளுவாயே என்றோம்; ஆனால் நாம் அதை எப்படி விசாரித்தாலும், அவர்கள் *தங்கள் கிரியைகளைக் கேடாக்கத் தீவிரித்தார்கள். *எரே. ௪. ௨௨.

௮ ¶ ஆகையால் நாம் கொள்ளையாட எழும்பும் நாள்மட்டும் நமக்குக் காத்திருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனென்றால் நமது கோபத்தினுடைய முழு உக்கிரமான நம்முடைய சினத்தை அவர்கள்மேல் ஊற்றும்படிக்குச் சாதிகளைச் சேர்க்கவும் இராச்சியங்களைக் கூட்டவும் நம்மில் தீர்ந்த நியாயமாயிருக்கிறது; அதேனென்றால் தேசமெல்லாம் நம்முடைய எரிச்சலின் அக்கினியினால் அழியும்.

௯ ¶ அப்போது சனசதளங்களெல்லாம் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு, ஏக கருத்தாய் அவருக்கு ஆராதனை செய்யும்படிக்கு, நாம் அவர்கள் உதடுகளைச் சுத்தமுள்ளவைகளாக மாறப்பண்ணுவோம்.

௰ *சிதறுண்டிருந்த நம்மை விண்ணப்பம் பண்ணப்போகிற நமது சபையார் எத்தியோப்பியாவின் நதிகளுக்கு அக்கரையிலிருந்து நம்முடைய காணிக்கையை நமக்குக் கொண்டுவருவார்கள்.
*மல்கி. ௧. ௰௧.

௰௧ நீ நமக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணிச் செய்திருந்த உன்னுடைய எல்லாக் கிரியைகளினிமித்தமும் அந்நாளிலே வெட்கப்படாதிருப்பாய்; ஏனெனில் நீ நமது பரிசுத்த பர்வதத்தினிமித்தம் இனி மேட்டிமையாயிராதபடிக்கு, நாம் உன் பெருமையைத்தொட்டுக் களிகூர்ந்தவர்களை அப்போது உன் நடுவிலிருந்து விலக்கி,

௰௨ உன் நடுவில் *சிறுமையும் எளிமையுமான சனத்தை மீதியாக வைப்போம்; அவர்கள் கர்த்தருடைய நாமத்தின்பேரில் நம்பிக்கையாயிருப்பார்கள்.
*லூக். ௰௨. ௩௨.

௰௩ இஸ்ரவேலில் மீதியானவர்கள் அநியாயஞ்செய்வதில்லை; அவர்கள் பொய்பேசுவதும் இல்லை; *கபடநாவு அவர்கள் வாயில் கண்டுபிடிக்கப்படுவதுமில்லை; அவர்கள் பயப்படுத்துவாரில்லாமல் மேய்ந்து படுத்துக்கொள்ளுவார்கள். *வெளி. ௰௪. ௫.

௰௪ ¶ *சீயோன் குமாரத்தியே கெம்பீரி; இஸ்ரவேலரே ஆர்ப்பரியுங்கள்; எருசலேம் குமாரத்தியே, நீ முழு இருதயத்தாலும் மகிழ்ந்து களிகூரு. *சகரி. ௯. ௯.

௰௫ கர்த்தர் உன் ஆக்கினைகளை அகற்றி, உன் சத்துருக்களை விலக்கினார்; இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தர் *உன் நடுவிலே இருக்கிறார்; இனி நிர்ப்பாக்கியத்தைக் காணாதிருப்பாய். *மத். ௨௮. ௨௰.

௰௬ ¶ அந்நாளிலே எருசலேமைப் பார்த்து, பயப்படாதே என்றும் சீயோனைப்பார்த்து, உன் கைகளைத் தளரவொட்டாதே என்றும் சொல்லப்படும்.

௰௭ உன் பராபரனாகிய கர்த்தர் உன் நடுவில் இருக்கிறார்; *அவர் வல்லமையுள்ளவராய் இரட்சிப்பார்; அவர் உன்பேரில் சந்தோஷமாய் மகிழ்ந்து, தம்முடைய சிநேகத்தினிமித்தம் கூப்பிடாதிருப்பார்; அவர் உன்பேரில் கெம்பீரமாய்க் களிகூருவார்.
*௧ கொரி. ௰௫. ௫௭.

௰௮ உன் சபையின் மனுஷராயிருந்து

பண்டிகை ஆசரிப்பில்லாமையால் உண்டான நிந்தை அதின்மேல் பாரமானதினாலே சஞ்சலப்பட்டவர்களைக் கூட்டிக்கொள்ளுவோம்.

௰௯ இதோ, அக்காலத்திலே உன்னைச் சிறுமைப்படுத்தினயாவருக்கும் வேறே பிரகாரமாகச் செய்து கொண்டியானவனை இரட்சித்து, தள்ளுண்டவனைச் சேர்த்துக்கொண்டு அவர்கள் வெட்கம் அநுபவித்த சகல தேசங்களிலும் அவர்களைப் புகழ்ச்சியும் கீர்த்தியுமாக வைப்போம்.

உ௰ *அக்காலத்திலே உங்களைக் கூட்டிக்கொண்டு வருவோம்; அக்காலத்திலே உங்களைச் சேர்த்துக்கொள்ளுவோம்; அதேனென்றால் நீங்கள் கண்ணாரக்காண நாம் உங்கள் சிறையிருப்பைத் திருப்பும்போது, நாம் உங்களைக் கீர்த்தியும் புகழ்ச்சியுமாக வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். *எரே. உ௯. ௰ச.

---

# ஆகாயின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

இராசாவாகிய தரியூ அரசாண்ட இரண்டாம்வருஷம் ஆறும்மாதம் முதலாம்தேதியிலே, கர்த்தருடைய வார்த்தை *ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு செயல்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவின் தலைவனுக்கும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவா என்ற பிரதான ஆசாரியனுக்கும் உண்டாகி, அவர் சொன்னதாவது: *எஸ்று. ரு. க, உ.

உ இந்தச்சனம், கர்த்தருடைய வீட்டைக் கட்டும் சமயமான காலம் இன்னம் வந்ததில்லை என்கிறார்கள் என்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௩ ஆனால் ஆகாய் தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது:

ச ¶ இந்த வீடு பாழாய்க் கிடக்கையில், நீங்கள் மச்சுப்பாவப்பட்ட உங்கள் வீடுகளில் குடியிருக்கும் காலம் உங்களுக்கு வந்திருக்கிறதோ?

ரு ¶ இப்போதும் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், உங்கள் வழிகளின்மேல் உங்கள் மனதை வையுங்கள்.

௬ *நீங்கள் திரளாய் விதைத்தும் கொஞ்சமாய் அறுத்துக்கொண்டுவருகிறீர்கள்; நீங்கள் புசித்தும் திருப்தியாகாமலும், குடித்தும் பரிபூரணமடையாமலும் போகிறீர்கள்; உடுப்புடுத்தும் உடுத்தவனுக்குக் குளிர்விடுவதில்லை; கூலியைச் சம்பாதிக்கிறவன் பொத்தலான முடிப்பிலே வைக்கிறவனாய்ச் சம்பாதிக்கிறான். *உ மோ. உ௮. ௩௮

௭ ¶ உங்கள் வழிகளின்மேல் உங்கள் மனதை வையுங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௮ நீங்கள் பர்வதத்தின்மேல் ஏறிப்போய், மரங்களை வெட்டிவந்து, வீட்டைக் கட்டுங்கள்; அப்போது அதின்பேரில் நாம் இதயமாயிருந்து அதினால் கனம் அடைவோம் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯ அநேகமாய் வருமென்று நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தும், இதோ கொஞ்சமாய்ப்போகிறது; நீங்கள் அறுத்து வீட்டுக்குக்கொண்டுவந்தும், நாம் அதை ஊதிப்போடுகிறோம்; எதுநிமித்தமென்றால் நீங்கள் அவரவர் தன்தன் வீட்டுக்கென்று திரிக்கக்கொள்ள, நம்முடைய வீடு பாழாய்க்

கிடக்கிறதின்நிமித்தமாகத்தான் என்று சே
னைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
௰ ஆனதுகொண்டு *உங்கள்மேல் இருக்
கிற வானம் பனியைக் கொடாமலும் பூமி
பலனைக் கொடாமலும் போயிற்று.
* ௫ மோ. ௨௮. ௨௰.
௰௧ ஏனெனில் நாம் நாட்டின்மேலும், பர்
வதங்களின்மேலும், தானியத்தின்மேலும்,
திராட்சக்கந்தாயத்தின்மேலும், எண்ணெ
யின்மேலும், பூமி முளைப்பிக்கிறதெல்லா
வற்றின்மேலும், மனுஷரின்மேலும், மிரு
கங்களின்மேலும், கைகளின் பாடனைத்தின்
மேலும் *வறட்சியை வரவழைத்தோம்
என்றார். * ஆமோ. ௪. ௯.
௰௨ அப்போது செயல்த்தியேலின் குமார
னாகிய செருபாபேலும், யோத்சதாக்கின்
குமாரனாகிய யோசுவா என்ற பிரதான ஆசா
ரியனும் சனத்தில் மீதியான அனைவரும்
தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்
தத்துக்கும், தங்கள் பராபரனாகிய கர்த்தர்
அனுப்பின ஆகாய் தீர்க்கதரிசியினுடைய
வார்த்தைகளுக்கும் கேள்விகொடுத்தார்க
ள்; சனம்கர்த்தருக்குமுன்பாகப்பயந்தது.
௰௩ ¶ அப்போது *கர்த்தருடைய தூதனா
கிய ஆகாய், கர்த்தர் தூதனுப்பின வார்த்
தையாகச் சனத்துக்கு நாம் உங்களோடே
இருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்
என்றான். * மல்கி. ௨. ௭.
௰௪ கர்த்தர் செயல்த்தியேலின் குமாரனா
கிய செருபாபேலென்ற யூதாவினுடைய
தலைவனின் ஆவியையும், யோத்சதாக்கின்
குமாரனாகிய யோசுவா என்ற பிரதான ஆசா
ரியனின் ஆவியையும், சனத்தில் மீதியான
எல்லாருடைய ஆவியையும் எழுப்பினார்;
அவர்கள் வந்து, தங்கள் பராபரனாகிய சே
னைகளுடைய கர்த்தரின் வீட்டிலே வேலை
செய்தார்கள்.
௰௫ தரியூ இராசாவின் இரண்டாம்வரு
ஷம் ஆறும்மாதம் இருபத்துநாலாந் தேதி
யிலேதானே.

## ௨. அதிகாரம்.

ஏழாம்மாதம் இருபத்தோராந்தேதியிலே
ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு,
கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்று;
அவர் சொன்னதாவது:
௨ நீ செயல்த்தியேலின் குமாரனாகிய செ
ருபாபேலென்ற யூதாவின் தலைவனோடும்,
யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவா
வென்ற பிரதான ஆசாரியனோடும், சனத்
தில் மீதியானவர்களோடும் சொல்லவேண்
டியதேதெனில்,
௩ ¶ தன் முந்தின மகிமையோடிருந்த
இந்த வீட்டைக் கண்டவர்களில் உங்களுக்
குள்ளே மீதியாயிருக்கிறவன் யாவன்? இப்
போது இது எப்படியிருக்கிறதென்று காண்
கிறீர்கள்; *அதற்கு இது ஒன்றுமில்லையென்
று உங்கள் கண்களுக்குக் காணுகிறதல்ல
வோ? *எஸ்ற. ௩. ௰௨.
௪ இப்போதும் செருபாபேலே, திடனா
யிரு என்று கர்த்தர் சொல்லுகிறார்; யோத்
சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற
பிரதான ஆசாரியனே, திடனாயிரு; தேசத்
தின் எல்லாச் சனமே, திடனாயிருந்து வே
லையை நடத்துங்கள் என்று கர்த்தர் சொல்
லுகிறார்; ஏனெனில் நாம் உங்களுடனே
இருக்கிறோமென்று சேனைகளுடைய கர்த்
தர் சொல்லுகிறார்.
௫ நீங்கள் எகிப்திலிருந்து புறப்படுகிற
போது நாம் உங்களோடே உடம்படிக்கை
பண்ணின *வார்த்தையோடும் கூடத்தா
னே; நம்முடைய ஆவியும் உங்கள் நடுவில்
நிலைகொண்டிருப்பார்; பயப்படாதேயுங்
கள். *௨ மோ. ௰௪. ௰. யோவா. ௧. ௧.
௬ ¶ ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறதாவது: *இன்னம் ஒருதரம்
கொஞ்சப்பொழுதிலேதானே நாம் வானத்
தையும் பூமியையும், சமுத்திரத்தையும்
வெட்டாந்தரையையும் அசையப்பண்ணி,
*எபி. ௰௨. ௨௬, ௨௭.

௭ *சகல சாதிகளாலும் இச்சிக்கப்பட்டவரண்டைக்கு வரச் சகல சாதிகளையும் அசையப்பண்ணி, இந்த வீட்டை மகிமையாலே நிறையப்பண்ணுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

*ஏசா. ௨. ௨, ௩: ௪௯. ௯. எரே. ௩. ௰௭. மல்கி. ௩. ௧. லூக். ௨. ௰.

௮ வெள்ளியும் நம்முடையது, பொன்னும் நம்முடையது என்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௯ இந்தப் பிந்தின வீட்டின் மகிமை முந்தினதினுடையதைப்பார்க்கப் *பெரியதாயிருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்; இவ்விடத்திலே †சமாதானம் கட்டளையிடுவோம் என்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார். *மல்கி. ௩. ௧. சகரி. ௯. ௰. †யோவா. ௰௪. ௨௭.

௰ ¶ தரியூவின் இரண்டாம்வருஷம் ஒன்பதாம்மாதம் இருபத்துநாலாந்தேதியிலே, ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்று; அவர் சொன்னதாவது:

௰௧ ஒருவன் தன் வஸ்திரத்தின் தொங்கலிலே பரிசுத்தமாம்சத்தைச் சுமந்து தன் தொங்கலோடே அப்பத்தையாகிலும், ஒரு பதார்த்தத்தையாகிலும், திராட்சப்பழ இரசத்தையாகிலும், எண்ணெயையாகிலும், எந்தவகைப் போசனத்தையாகிலும் தொட்டால் இது பரிசுத்தமாகுமோ என்று நீ ஆசாரியர்களை வேதநியாயத்தைக் கேளென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.

௰௨ ஆசாரியர்கள் பிரதியுத்தரமாக, பரிசுத்தமாகாதென்றார்கள்.

௰௩ பிணத்தால் தீட்டுப்பட்டவன் இவைகளில் எதையாகிலும் தொட்டால், இது தீட்டுப்படுமோ என்று ஆகாய் பின்னையும் கேட்டான்; ஆசாரியர்கள் பிரதியுத்தரமாகத் *தீட்டுப்படும் என்றார்கள்.



*௩ மோ. ௫. ௨: ௰௧. ௨௪. ௪ மோ. ௰௯. ௰௧. ௨௨.

௰௪ அப்போது ஆகாய் உத்தரவுகொடுத்துச்சொன்னதாவது: இப்படியே இந்தச் சனமும் இப்படியே இந்தச்சாதியும் நமக்கு முன்பாக இருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்; இப்படியே அவர்களுடைய கைகளின் கிரியையெல்லாம் இருக்கிறது; அவர்கள் அங்கே கொண்டுவந்து படைக்கிறது *தீட்டுப்பட்டிருக்கிறது. *தீத். ௧. ௰௫.

௰௫ இப்போதும் கர்த்தருடைய தேவாலயத்தில் கல்லின்மேல் கல் ஏறாததாயிருந்த இந்நாளுக்கு முந்தினகாலத்திலே நடந்ததை உங்கள் மனதிலே சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௰௬ இவைகள் ஆகாததற்குமுன்னே, *ஒருவன் இருபதுமரக்காலாகப்பார்த்த அம்பாரத்தண்டையிலே வந்தபோது பத்து இருந்தது; ஒருவன் ஆலையின் தொட்டியில் ஐம்பது குடம் மொள்ள ஆலையண்டையிலே வந்தபோது இருபது இருந்தது.

*ஆகா. ௧. ௯.

௰௭ *சருக்காயினாலும் விஷப்பனியினாலும் கல்மழையினாலும் உங்களை உங்கள் கைகளின் வேலையின் எல்லாம் அடித்தோம், ஆனால் மனதை நம்மண்டைக்குத் திருப்பாதே போனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார். *ஆகா. ௧. ௰௧. ஆமோ. ௪. ௯.

௰௮ ¶ இப்போதும் இந்நாளுக்கு முந்தின காலத்தில் நடந்ததை உங்கள் மனதிலே சிந்தியுங்கள்; ஒன்பதாம்மாதம் இருபத்துநாலாந்தேதியாகிய இந்நாளுக்கும் கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம் போடப்பட்ட அந்நாளுக்கும் சென்ற காலத்தில் நடந்ததையே உங்கள் மனதிலே சிந்தியுங்கள்.

௰௯ களஞ்சியத்தில் இன்னம் விதைத்தானியம் உண்டோ? திராட்சச்செடியும் அத்திமரமும் மாதளஞ்செடியும் ஒலிவமரமுங்கூடக் கனிகொடுக்க இல்லையே; இந்நாள்முதற்கொண்டோ உங்களை ஆசீர்வதிப்பே

மென்று சொல்லுகிறார் என்றான்.

உம ¶ இருபத்துநாலாந்தேதியாகிய அந்நாளிலே கர்த்தருடைய வார்த்தை இரண்டாம்விசை ஆகாயிக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

உக நீ யூதாவின் தலைவனாகிய செருபாபேலோடே சொல்லவேண்டியதேதெனில், *நாம் வானத்தையும் பூமியையும் அசையப்பண்ணி, *சு. வச.

உஉ இராச்சியங்களின் இராசாசனத்தைக் கவிழ்த்து, சாதிகளுடைய இராச்சியங்களின் பலத்தை அழித்து, இரதத்தையும் அதில் ஏறியிருக்கிறவர்களையும் கவிழ்த்துப்போடுவோம்; குதிரைகளோடேகூட அவைகளில் ஏறியிருக்கிறவர்களும் அவனவன் தன் சகோதரன் பட்டயத்தாலே விழுவார்கள்.

உஙு சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற நம்முடைய ஊழியக்காரனே, உன்னை நாம் அந்நாளிலே சேர்த்துக்கொண்டு உன்னை முத்திரையாக வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனென்றால் உன்னைத் தெரிந்துகொண்டோமென்று சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறார் என்கிறதைச் சொல்லென்றார்.

# சகரியாவின் திர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

தரியூ அரசாண்ட இரண்டாம்வருஷம் எட்டாம் மாதத்திலே இத்தோவின் மகனான பெரேகியாவினுடைய குமாரனாகிய சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது:

உ ¶ கர்த்தர் உங்கள் பிதாக்களின்மேல் கடுங்கோபமாயிருந்தார்.

ஙு ஆகையால் நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது: சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதென்றால், *நம்மண்டைக்குத் திரும்புங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது உங்களண்டைக்குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

*யாக். ச. அ.

ச உங்கள் பொல்லாத வழிகளையும் உங்கள் பொல்லாத கிரியைகளையும் விட்டுத் திரும்புங்கள் என்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று முந்தின திர்க்கதரிசிகள் உங்கள் பிதாக்களைப்பார்த்துக் கூப்பிட்டாலும், கேளாமலும் நம்மைக் கவனியாமலும்போன அவர்களைப்போல இராதேயுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

ரு ¶ உங்கள் பிதாக்கள் எங்கே? திர்க்கதரிசிகளோவென்றால் என்றென்றைக்கும் உயிரோடிருப்பார்களோ?

சு இராவிட்டாலும், திர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரருக்கு நாம் கட்டளையிட்ட நமது வார்த்தைகளும் நமது திர்மானங்களும் உங்கள் பிதாக்களைப் பிடித்ததில்லையோ? எங்கள் வழிகளின்படியேயும் எங்கள் கிரியைகளின்படியேயும் சேனைகளுடைய கர்த்தர் எங்களுக்கு எப்படிச்செய்ய நிருணயித்திருந்தாரோ, அப்படியே எங்களுக்குச் செய்தாரென்று அவர்கள் திரும்பவந்து சொன்னதில்லையோ என்று சொல்லென்றார்.

எ ¶ தரியூ அரசாண்ட இரண்டாம்வருஷம், சேபாத்மாதமாகிய பதினோராம்மா

தம் இருபத்துநாலாந்தேதியிலே, கர்த்தருடைய வார்த்தை இத்தோவின் மகனான பெரேகியாவினுடைய குமாரன் சகரியாவென்ற தீர்க்கதரிசிக்கு உண்டாயிற்று; அவன் சொன்னதாவது:

அ இதோ, இன்று இராத்திரி சிவப்புக்குதிரையின்மேல் ஏறியிருக்கிற ஒரு புருஷனைக் கண்டேன்; அவர் பள்ளத்தாக்கில் இருக்கிற மிருதுச் செடிகளுக்குள்ளே தரித்துநின்றார்; அவர் பிறகாலே சிவப்பும் மங்கினநிறமும் வெண்மையுமான குதிரைகள் இருந்தன.

௯ என் ஆண்டவரே, இவர்கள் யாரென்று கேட்டேன்; அப்போது என்னோடே பேசுகிற தூதனானவர், இவர்கள் யாரென்று நாம் உனக்குக் காண்பிப்போமென்று சொன்னார்.

௰ அப்போது மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்துநிற்கிற அந்தப் புருஷன் பிரதியுத்தரமாக, இவர்கள் தேசத்தைச் சுற்றித்திரியக் கர்த்தர் அனுப்பினவர்கள் என்றார்.

௰௧ பிற்பாடு இவர்கள் மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்துநின்ற கர்த்தருடைய தூதனாயிருக்கிறவருக்கு மறுமொழியாக, நாங்கள் தேசத்தைச் சுற்றித்திரிந்தோம்; இதோ, தேசமெல்லாம் தணிவும் அமரிக்கையுமாய் இருக்கிறதென்றார்கள்.

௰௨ ¶ அப்போது கர்த்தருடைய தூதனானவர் மறுமொழி உரைத்துச் சொன்னதாவது: சேனைகளுடைய கர்த்தாவே, நீர் இந்த எழுபதுவருஷமாய்ச் சினம்வைத்த எருசலேமின்பேரிலும் யூதாவினுடைய பட்டணங்களின்பேரிலும் எந்தமட்டும் இரங்காதிருப்பீர்?

௰௩ அப்போது கர்த்தர் என்னோடே பேசின தூதருக்கு நல்ல வார்த்தைகளையும் ஆறுதலான வார்த்தைகளையும் பிரதியுத்தரமாகச் சொன்னார்.

௰௪ ¶ அப்போது என்னோடே பேசின தூதர் என்னோடே சொன்னது: நீ கூறவேண்டியதாவது: சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதென்றால், *நாம், எருசலேமுக்காகவும் சீயோனுக்காகவும் மகா வைராக்கியம் அடைந்தோம். * சகரி. அ. உ.

௰௫ சுகித்திருக்கிற சாதிகளுக்கு விரோதமாக நாம் மகா கடுமையுள்ள கோபமாயிருக்கிறோம்; ஏனெனில் நாம் கொஞ்சக் கடுமை அடைந்தபோது இவர்கள் கேட்டுக்கு உதவியாயிருந்தார்கள்.

௰௬ ஆகையால் *மன உருக்கத்தோடே எருசலேமண்டைக்குத் திரும்பினோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; நம்முடைய வீடு அதிலே கட்டப்படும்; எருசலேமின் அளவுநூல் பிடிக்கப்படுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று கூறென்றார். *சகரி. அ. ௬.

௰௭ இன்னம் நம்முடைய பட்டணங்கள் நன்மையினாலே பரம்பிப்போகும்; இன்னம் கர்த்தர் சீயோனைத் தேற்றரவுபண்ணுவார்; இன்னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவார் என்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று பின்னையும் கூறென்றார்.

௰௮ ¶ நான் என் கண்களை ஏறெடுக்கும்போது இதோ, நாலு கொம்புகளைக் கண்டேன்.

௰௯ இவைகள் என்னவென்று என்னோடே பேசின தூதனைக் கேட்டேன்; அப்போது அவர் என்னுடனே, இவைகள் யூதாவையும் இஸ்ரவேலையும் எருசலேமையும் சிதறவடித்த கொம்புகளென்றார்.

௨௰ பிற்பாடு கர்த்தர் எனக்கு நாலு கருமான்களைக் காண்பித்தார்.

௨௧ இவர்கள் என்னசெய்கிறதற்கு வருகிறார்களென்று கேட்டேன்; அப்போது அவர் சொன்னதாவது: ஒருவனும் தன் தலையை ஏறெடுக்கக்கூடாதபடியாய் அந்தக் கொம்புகள் யூதாவைச் சிதறவடித்ததே அவைகளுக்குப் பயமுறுத்துகிறதற்கும், யூதாவின் தேசத்தைப் பாழ்க்கடிக்கக் கொம்

பெடுத்த சாதிகளுடைய கொம்புகளை விழத்தள்ளுகிறதற்கும் இவர்கள் வந்தார்கள் என்றார்.

## ௨. அதிகாரம்.

நான் என் கண்களை ஏறெடுத்தபோது இதோ, ஒரு புருஷனைக் கண்டேன்; அவர் கையிலே அளவுநூல் இருந்தது.

௨ நீர் எவ்விடத்துக்குப் போகிறீரென்று கேட்டேன்; அவர் என்னுடனே, எருசலேமின் அகலம் எத்தனையென்றும் அதின் நீளம் எத்தனையென்றும் தெரிய அதை அளக்கிறதற்குப் போகிறேன் என்றார்.

௩ அப்போது இதோ, என்னோடே பேசின தூதனானவர் புறப்பட்டுப்போனார்; வேறொரு தூதன் அவருக்கு எதிராகப் புறப்பட்டு வந்தார்.

௪ இவனோடே அவர் சொன்னதாவது: *நீ ஓடி, இந்த வாலிபனோடே சொல்லவேண்டியதேதெனில், எருசலேம் தன் நடுவிலே கூடும் மனுஷரின் திரளினாலும் மிருகஜீவன்களின்திரளினாலும் வெளிப்பாளயங்களாய்க் குடியேறும்.

௫ *நாம் அதற்குச் சுற்றிலும் அக்கினி மதிலாயிருந்து, அதின் நடுவில் மகிமையுண்டாக இருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * சகரி. ௯. ௮.

௬ ¶ *ஓய், நீங்கள் எழும்பி வடதேசத்திலிருந்து ஓடிவாருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், கொஞ்சங்குறைய ஆகாசத்து நாலுகாற்றுத்திசைகளிலும் உங்களை நாம் சிதறப்பண்ணினோமே.

௭ *ஓய் பாபேல் குமாரத்தியண்டையிலே குடியிருக்கிற சீயோனே, தப்பித்துக்கொள். * ஏசா. ௪௮. ௨௰.

௮ ஏனெனில் பிற்பாடு மகிமையுண்டாகுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்; உங்களைக் கொள்ளையிட்ட சாதிகளண்டைக்கு நம்மை அனுப்பினார்; ஏனென்றால் *உங்களைத் தொடுகிறவன் அவருடைய கண்விழியைத் தொடுகிறான்.
* சங். ௰௭. ௮.

௯ அதேனெனில் இதோ, நாம் நமது கையை அவர்களுக்கு விரோதமாக ஆட்டுகிறோம்; அதினால் அவர்கள் தங்களைச் சேவித்தவர்களுக்குக் கொள்ளையாவார்கள்; அப்போது சேனைகளின் கர்த்தர் நம்மை அனுப்பினாரென்று அறிவீர்கள்.

௰ ¶ சீயோன் குமாரத்தியே, கெம்பீரித்துச் சந்தோஷமாயிரு; ஏனெனில் இதோ, நாம் வந்து உன் நடுவில் வாசம்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ அந்நாளிலே *அநேகம் சாதிகள் கர்த்தனைச் சேர்ந்து நமக்குச் சனமாவார்கள்; நாம் உன் நடுவிலே வாசமாயிருப்போம்; சேனைகளின் கர்த்தர் நம்மை உன்னண்டைக்கு அனுப்பினாரென்று அப்போது அறிவாய். * ௧ மோ. ௪௯. ௰.

௰௨ கர்த்தர் பரிசுத்ததேசத்திலே யூதாவைத் தமது பங்காகச் சுதந்தரித்து *இன்னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவார். *சகரி. ௧. ௰௭.

௰௩ எல்லா மாம்சமே, கர்த்தருக்கு முன்பாக மௌனமாயிரு; ஏனெனில் தமது பரிசுத்த வாசஸ்தலத்திலிருந்து விழிக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩. அதிகாரம்.

அவர் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவை எனக்குக் காண்பித்தார்; அவன் கர்த்தருடைய தூதனுக்குமுன்பாக நின்றான்; சாத்தான் அவனுக்கு விரோதிக்கும்படி அவன் வலதுபக்கத்திலே நின்றது.

௨ ¶ அப்போது கர்த்தர் சாத்தானோடே சொன்னதாவது: *கர்த்தர் உன்னை உதம்புவாராக; சாத்தானே எருசலேமைத் தெரிந்துகொண்டகர்த்தர் உன்னை உதம்புவாராக; இவன் அக்கினிக்குத் தப்புவிக்கப்பட்ட கொள்ளி அல்லாவோ என்றார்.
*யூதா. ௯. ௨௪.

௩ யோசுவாவோவெனில் அழுக்கு வஸ்திரங்களைத் தரித்தவனாய்த் தூதனுக்குமுன்பாக நின்றிருந்தான்.

௪ அவர் மறுமொழிகொடுத்து, இவன்மேல் இருக்கிற அழுக்குவஸ்திரங்களைக் களைந்துபோடுங்களென்று தமக்குமுன்பாக நிற்கிறவர்களோடே சொல்லி, இவனோடே சொன்னதாவது: பார், நாம் உன் அக்கிரமத்தை உன்னிலிருந்து நீங்கிப்போகப்பண்ணி, *உனக்குப் புதுவஸ்திரங்களைத் தரிப்பித்தோம் என்றார். *ஏசா. ௬௧. ௰.

௫ அவன் சிரசின்மேல் சுத்தமான குல்லாவை வைப்பார்களாக என்றேன்; அப்போது சுத்தமான குல்லாவை அவன் சிரசின்மேல் வைத்து, அவனுக்கு வஸ்திரங்களைத் தரிப்பித்தார்கள்; கர்த்தருடைய தூதனானவர் அங்கே நின்றார்.

௬ கர்த்தருடைய தூதனானவர் யோசுவாவுக்குச் சாட்சியாக அறிவித்துச் சொன்னதாவது:

௭ சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நீ நமது வழிகளில் நடந்து நமது காவலைக் காத்தால், நீ நம்முடைய வீட்டின் நியாயங்களையும் விசாரிப்பாய்; நம்முடைய முற்றங்களையும் காவல்காப்பாய்; *இங்கே நிற்கிறவர்களுக்குள்ளே நடமாடுதலை நாம் உனக்குக் கட்டளையிடுவோம்.
* சங். ௯௧. ௰௧.

௮ இப்போதும், பிரதான ஆசாரியனாகிய யோசுவாவே, நீ கேள்; உனக்குமுன்பாக உளுக்கார்ந்திருக்கிற உன் தோழருங்கூடக் கேட்கக்கடவார்கள்; ஏனெனில் இவர்கள் அற்புத மனுஷர்; என்னவென்றால் இதோ, *கிளையென்னப்பட்டவராகிய நம்முடைய ஊழியக்காரனை நாம் வரப்பண்ணுகிறோம். *ஏசா. ௪. ௨: ௰. க.

௯ அதேதென்றால், இதோ, நாம் யோசுவாவுக்குமுன்பாக வைத்த *கல்; அந்த ஒரே கல்லின்மேல் †ஏழுகண்களும் வைக்கப்பட்டிருக்கின்றன; இதோ, நாம் அதின் சித்திரவேலையைத் தீர்த்து, இந்தத் தேசத்தின் அக்கிரமத்தை ‡ஒரேநாளிலே நீக்கிப்போடுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். *ஏசா. ௨௮. ௰௬. மத். ௨௧. ௪௨. †சகரி. ௪. ௰. ‡எபி. ௯. ௰௨.

௰ அந்நாளிலே நீங்கள் ஒருவரை ஒருவர் *திராட்சச்செடியின்கீழும் அத்திமரத்தின்கீழும் வரவழைப்பீர்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.
*மீகா. ௪. ௪.

## ௪. அதிகாரம்.

என்னோடே பேசின தூதர் திரும்பிவந்து நித்திரைபண்ணுகிற ஒருவன் எழுப்பப்படுகிறதுபோலே என்னை எழுப்பி,

௨ என்னுடனே, நீ காண்கிறதென்ன என்றார்; நான் சொன்னதாவது: இதோ, முழுதும் பொன்னான குத்துவிளக்கைக் காண்கிறேன்; அதின் சிகரத்தின்மேல் அதின் கிண்ணியும், அதின்மேல் அதின் ஏழு தீபங்களும், அதினுடைய சிகரத்தின்மேல் இருக்கிற தீபங்களுக்குப் போகிற ஏவ்வேழு குழாய்களும் இருக்கின்றன.

௩ அதற்கு மேலாக இரண்டு ஒலிவமரங்கள் ஒன்று கிண்ணிக்கு வலதுபுறமாகவும் ஒன்று அதற்கு இடதுபுறமாகவும் இருக்கிறதென்றேன்.

௪ ¶ நான் என்னோடே பேசின தூதரோடே பேசிக்கொண்டு, ஆண்டவரே, இதேதென்று கேட்டேன்.

௫ அப்போது என்னோடே பேசின தூதர் மறுமொழியாக என்னோடே, இதேதென்று உனக்குத் தெரியாதோ என்றார்; ஆண்டவரே எனக்குத் தெரியாதென்றேன்.

௬ அப்போது அவர் எனக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது: செருபாபேலுக்குச் சொல்லப்படுகிற கர்த்தருடைய வார்த்தை ஏதென்றால், பலத்தினாலும் அல்ல, வல்லமையினாலும் அல்ல, நம்முடைய ஆவியினாலே ஆகுமென்று சேனைகளுடைய

கர்த்தர் சொல்லுகிறார்.

௭ செருபாபேலுக்கு முன்பாக நிற்கிற பெரிய பர்வதமே, நீ எம்மாத்திரம்? நீ ஒத்த தரையாவாய்; பிரதானமான கல்லை அவன் பிறப்பிப்பான்; அதற்குக் கிருபையுண்டாக, கிருபையுண்டாக என்று ஆர்ப்பரிப்பார்கள் என்றார்.

௮ ¶ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௯ செருபாபேலின் கைகள் இந்த வீட்டுக்கு அஸ்திபாரம் போட்டது; அவன் கைகள் அதை முடித்துத் தீர்க்கிறதுமாயிருக்கும்; அப்படியே சேனைகளுடைய கர்த்தர் நம்மை உங்களண்டைக்கு அனுப்பினாரென்று அறிவாய்.

௰ ஏனெனில் கொஞ்சமான துவக்கங்களின் நாளை யார் அசட்டைபண்ணலாம்? பூமியெங்கும் சுற்றிப்பார்க்கிறவைகளாகிய கர்த்தருடைய இந்த *ஏழு கண்களும் செருபாபேலின் கையில் இருக்கிற வெள்ளீயத் தூக்கைச் சந்தோஷமாய்ப் பார்க்கிறதென்றார். *சகரி. ௩. ௯. வெளி ௫. ௬.

௰௧ ¶ நான் அப்புறம் பேசிக்கொண்டு, தூண்டாவிளக்குக்கு வலதுபுறமாகவும் அதற்கு இடதுபுறமாகவும் இருக்கிற இந்த இரண்டு ஒலிவமரங்கள் ஏதென்று அவரைக் கேட்டேன்.

௰௨ மறுபடியும் நான் அவரைக் கேட்டுச் சொன்னதாவது: பொன்னான இரண்டு குழாய்களண்டையிலே தொங்கி, பொன்னிறமான எண்ணெயைத் தங்களிலிருந்து இறங்கப்பண்ணுகிறவைகளாகிய ஒலிவமரங்களின் இரண்டு குலைகள் ஏதென்று கேட்டேன்.

௰௩ அவர் என்னோடே, இவைகள் ஏதென்று உனக்குத் தெரியாதோ என்றார்; ஆண்டவரே, எனக்குத் தெரியாதென்றேன்.

௰௪ அப்போது அவர் சொன்னதாவது: இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவரண்டையிலே நிற்கிற *இரண்டு எண்ணெயாள்கள் என்றார். *வெளி. ௰௧. ௩, ௪.

## ௫. அதிகாரம்.

௧ நான் திரும்பி என் கண்களை ஏறெடுக்கையில் இதோ, பறக்கிற ஒரு புஸ்தகச்சுருளைக் கண்டேன்.

௨ என்னுடனே, நீ காண்கிறதென்ன என்றார்; பறக்கிற ஒரு புஸ்தகச்சுருளை நான் காண்கிறேன்; அதின் நீளம் இருபதுமுழமும் அதின் அகலம் பத்துமுழமுமானதென்றேன்.

௩ அப்போது அவர் என்னோடே சொன்னதாவது: இது தேசத்தின்மீதெங்கும் புறப்பட்டுப்போகிற சாபம்; ஏனெனில் எந்தத் திருடனும் அதில் ஒருபுறத்திலிருக்கிறதின்படியே குற்றம் சுமக்காதேபோகிறான்; ஆணையிடுகிற எவனும் அதில் மறுபுறத்தில் இருக்கிறதின்படியே குற்றம் சுமக்காதேபோகிறான்.

௪ அது திருடன் வீட்டிலும் நமது நாமத்தைக்கொண்டு பொய்யாணையிடுகிறவன் வீட்டிலும் வந்து, அவன் வீட்டின் நடுவிலே தங்கி, அதை அதின் மரங்களோடும் அதின் கல்லுகளோடுங்கூட நிர்மூலமாக்குகிறதற்காக அதைப் புறப்பட்டுப்போகப்பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.

௫ ¶ பிறகு என்னோடே பேசின தூதர் புறப்பட்டு என்னோடே சொன்னதாவது: நீ உன் கண்களை ஏறெடுத்து, புறப்படுகிறதாகிய அது என்னவென்று பார் என்றார்.

௬ அது என்னவென்று கேட்டேன்; அப்போது அவர் அது புறப்படுகிறதாகிய ஒரு மரக்கால் என்றார்; அப்புறம் அவர் சொன்னதாவது: பூமியெங்கும் அதுதான் அவர்களுடைய கண்ணோக்கம் என்றார்.

௭ இதோ, ஒரு தாலந்து நிறையான ஈயமூடி தூக்கிவரப்பட்டது; மரக்காலின் நடுவிலேயென்றால் உளுக்காந்த ஒரு ஸ்திரீ

இருந்தாள்.

௮ அப்போது அவர், இவள் *அக்கிரமமானவளென்று சொல்லி, அவளை மரக்காலுக்குள்ளே தள்ளி ஈயக்கட்டியை அதின் வாயிலே போட்டார். *௨ தெச. ௨. ௭. வெளி. ௰௭. ௫.

௯ நான் என் கண்களை ஏறெடுக்கிறபோது இதோ, புறப்படுகிற இரண்டு ஸ்திரிகளைக் கண்டேன்; அவர்கள் செட்டைகளில் காற்றிருந்தது; அதேனெனில் அவர்களுக்குச் செங்கால்நாரையின் செட்டைகளுக்கொத்த செட்டைகள் இருந்தன; இவர்கள் மரக்காலைப் பூமிக்கும் வானத்துக்கும் நடுவாய்த் தூக்கிப்போனார்கள்.

௰ நான் என்னோடே பேசின தூதனை இவர்கள் மரக்காலை எங்கே கொண்டுபோகிறார்களென்று கேட்டேன்.

௰௧ அப்போது அவர் என்னோடே சொன்னதாவது: *சினேயார் தேசத்திலே அதற்கு ஒரு வீட்டைக் கட்டும்படிக்கு அதைக் கொண்டுபோகிறார்கள்; அங்கே அது நிலைநிறுத்தப்பட்டு, தன் நிலையிலே வைக்கப்படும் என்றார். *௧ மோ. ௰௧. ௨.

## ௬. அதிகாரம்.

நான் திரும்பி என் கண்களை ஏறெடுக்கையில், இதோ, இரண்டு பர்வதங்களின்நடுவாகப் புறப்படுகிற நாலு இரதங்களைக் கண்டேன்; அந்தப் பர்வதங்கள் வெண்கலப்பர்வதங்களாயிருந்தன.

௨ முதலாம் இரதத்தில் சிவப்புக்குதிரைகளும், இரண்டாம் இரதத்தில் கறுப்புக்குதிரைகளும்,

௩ மூன்றாம் இரதத்தில் வெள்ளைக்குதிரைகளும், நாலாம் இரதத்தில் புள்ளிபுள்ளியான செங்குதிரைகளும் பூட்டியிருந்தன.

௪ நான் என்னோடே பேசின தூதனை என் ஆண்டவரே, இவைகள் என்னவென்று கேட்டேன்,

௫ ¶ அப்போது அந்தத் தூதர் எனக்குப் பிரதியுத்தரமாக, *இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்குமுன்பாக நின்று புறப்படுகிற வானத்தினுடைய நாலு காற்றுகள் என்றார். *சங். ௱௪. ௪.

௬ ஒன்றிலே பூட்டப்பட்டிருந்த கறுப்புக்குதிரைகள் வடதேசத்துக்குப் புறப்பட்டுப்போயின; வெண்மையானவைகள் அவைகளின் பிறகாலே புறப்பட்டுப்போயின; புள்ளிபுள்ளியானவைகள் தென்தேசத்துக்குப் புறப்பட்டுப்போயின.

௭ சிவப்புக்குதிரைகளோவென்றால் பூமியில் சுற்றித்திரியப் பார்க்கும்படிக்குப் புறப்பட்டன; போய்ப் பூமியில் சுற்றித்திரியுங்களென்றார்; அப்படியே பூமியில் சுற்றித்திரிந்தன.

௮ ¶ அவர் என்னைக் கூப்பிட்டு, பார், வடதேசத்துக்குப் புறப்பட்டுப்போனவைகள், நம்முடைய கோபத்தை வடதேசத்திலே இறங்கப்பண்ணிற்றென்று என்னோடே சொன்னார்.

௯ ¶ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௰ சிறையிருப்பின் மனுஷராகிய எல்தாயும், தொபியாவும், எதாயாவும் பாபேலிலிருந்து வந்திருக்கும் அந்நாளிலே நீ போய் செப்பனியாவின் குமாரனாகிய யோசியாவின் வீட்டுக்குள் பிரவேசித்து,

௰௧ அங்கே அவர்கள் கையிலே வெள்ளியையும் பொன்னையும் வாங்கி, கிரீடங்களைச் செப்பனிட்டு, யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனின் சிரசிலே வைத்து,

௰௨ அவனோடே சொல்லவேண்டியதாவது: சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ ஒரு புருஷன், அவருடைய நாமம் *கிளையென்னப்படுகிறது; அவர் தம்முடைய தாழ்விடத்திலிருந்து முளைத்தெழும்பிக் †கர்த்தருடைய தேவாலயத்தைக் கட்டுவார். *சகரி. ௩. ௮. ஏசா. ௰௧. ௧. †மத். ௰௬. ௰௮. ௨ கொரி. ௬. ௰௬.

௰௩ அவர்தான் கர்த்தருடைய தேவாலயத்தைக் கட்டுவார்; அவர் மகத்துவம் தரித்துக்கொண்டு, *தம்முடைய இராசாசனத்தின்மேல் உளுக்கார்ந்து ஆண்டு, தம்முடைய இராசாசனத்தின்மேல் ஆசாரியராயிருப்பார்; இவருக்குள்ளும் சமாதானத்தின் ஆலோசனை இருக்கும். *சங். ௱௰. ௧-௪.

௰௪ ¶ இந்தக் கிரீடங்களோவென்றால், கர்த்தருடைய தேவாலயத்திலே, எலேமுக்கும், தொபியாவுக்கும், எதாயாவுக்கும், செப்பனியாவின் குமாரனாகிய எனுக்கும் நினைப்பூட்டுதலுக்கென்று இருப்பதாக.

௰௫ தூரத்தார் வந்து கர்த்தருடைய தேவாலயத்திலே கூடக்கட்டுவார்கள்; அப்போது சேனைகளின் கர்த்தர் என்னை உங்களண்டைக்கு அனுப்பினாரென்று அறிவீர்கள்; நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே கேட்டீர்களானால் இப்படியாகுமென்று சொல்லென்றார்.

## ௭. அதிகாரம்.

தரியு இராசா அரசாண்ட நாலாம் வருஷம், கிஸ்லே என்னப்பட்ட ஒன்பதாம் மாதம், நாலாந்தேதியிலே, சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்று.

௨ ஏனெனில் கர்த்தருடைய சமுகத்தில் விண்ணப்பம்பண்ணவும்,

௩ நாங்கள் இத்தனை வருஷம்வரையிலே செய்ததுபோலே ஐந்தாம்மாதத்திலே அழுது தவம்பண்ணவேண்டுமோவென்று சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலிருந்த ஆசாரியர்களையும் தீர்க்கதரிசிகளையும் கேட்கவும், சரேத்சேரும் ரேகேம்மேலேகும் அவனுடைய மனுஷரும் பராபரனுடைய வீட்டுக்கு அனுப்பப்பட்டார்கள்.

௪ ¶ அப்போது சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௫ நீ தேசத்தின் எல்லாச் சனத்தோடும் ஆசாரியர்களோடும் சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் இந்த எழுபதுவருஷமாக *ஐந்தாம்மாதத்திலும் ஏழாம்மாதத்திலும் †உபவாசம்பண்ணிப் புலம்பினபோது நீங்கள் நமக்கு, நமக்குத்தானே உபவாசம்பண்ணினீர்களோ? *சகரி. ௮. ௰௯. †ஏசா. ௫௮. ௩.

௬ நீங்கள் புசிக்கிறபோதும் குடிக்கிறபோதும் நீங்களாய்ப் புசிக்கிறீர்கள்; நீங்களாய்க் குடிக்கிறீர்களல்லவோ?

௭ எருசலேமும் அதைச்சுற்றிலும் அதினுடைய பட்டணங்களும் குடியேறியிருந்து சுகமாய் வாழ்கிறதும் தெற்குச்சீமையும் பள்ளத்தாக்குச்சீமையும் குடியேறியிருக்கிறதுமான முற்காலத்தில் இருந்த தீர்க்கதரிசிகளைக்கொண்டு கர்த்தர் பிரசங்கிப்பித்த வார்த்தைகள் இவைகள்தான் அல்லவோ என்று சொல்லென்றார்.

௮ ¶ கர்த்தருடைய வார்த்தை சகரியாவுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௯ சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், *நீங்கள் உண்மையாய் நியாயந்தீர்த்து, அவனவன் தன் சகோதரனுக்குத் தயவும் இரக்கமும் செய்து, *சகரி. ௮. ௰௬.

௰ *விதவையையும் திக்கற்றவனையும் பரதேசியையும் சிறுமையானவனையும் ஒடுக்காமலும், ஒருவனும் தன் சகோதரனுக்கு விரோதமாய் உங்கள் இருதயத்தில் பொல்லாப்பை நினையாமலும் இருங்கள் என்றார். *௨ மோ. ௨௨. ௨௧-௨௪. ௩ மோ. ௰௯. ௩௩. ௫ மோ. ௨௪. ௰௭.

௰௧ ¶ அவர்களோவெனில் கவனிக்க மனதில்லாமல், அடங்காத தோளைக்காட்டி, கேளாதபடிக்குத் தங்கள் செவிகளை அடைத்துப்படுத்தி,

௰௨ *வேதத்தையும் சேனைகளுடைய கர்த்தர் முந்தின தீர்க்கதரிசிகளைக்கொண்டு அனுப்பின தம்முடைய ஆவியோடேகூடிய வார்த்தைகளையும் கேளாதபடிக்கு வயிரமாக்கினார்கள்; ஆகையால் மகா கடுங்கோபம் சேனைகளுடைய கர்த்தரிடத்திலி

